


**-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-**




**மார்கழி-17 -தி.பி.2052 சனவரி-1- பொ.ஆ.2022**

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்




**தமிழ்வளர்த்த தகைமையாளர் பொறியியலறிஞர்**

**கெ.பக்தவத்சலனார்**

(12.12.1939- 30.6.2020)


உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகம் வெளியிடும்
இலவச இணையத்திங்களிருமுறை
பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்
இணையாசிரியர்: முனைவர் தமிழியலன்

தமிழ்ப்பொறியாளர் கெ.பக்தவத்சலம்,

(12.12.1939- 30.6.2020).

கெருகம்பாக்கம் தேவராசருக்கும் திருமதி. கமலம்மாவுக்கும் கடைக்குட்டியாகப் பிறந்த இவர், தொண்டாற்றியது வேறுதுறை; தொழிலாற்றியது வேறு துறை. தமிழ்த்தொண்டே தம் மூச்சாக வாழ்ந்தவர். ஒய்எம்சிஏ.பட்டிமன்றம் என்னும் அமைப்பினில் செவ்வாய்தோறும் செந்தமிழ் வளர்த்தவர். சொல்லின்செல்வர் ரா.பி.சேதுப்பிள்ளை தொடங்கிய பட்டிமன்றத்தின் ஆற்றல்மிகு செயலாளராக 55 ஆண்டுகளுக்கும் மேலாகச் செயலாற்றி, அவையோர் பயன்கொள்ளும்வகையில் தமிழறிஞர்பெருமக்களை வரவழைத்துத் தமிழ் விருந்தளித்த நல்லோர்.

பட்டிமன்றத் தலைவர், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் முன்னைத் துணைவேந்தர் ஔவை.நடராசன் அவர்கள் கூற்றின்படி, "வேதநாயக விழைவாளர்;
பழச்சுவை போல் பழகுதற்கு ஏற்ற பண்பாளர்."

நீதிபதி வேதநாயகர் வாழ்க்கை வரலாறு, அறம்வளர்த்த ஆன்றோர்கள், புகழாளர்கள் எனும் நூல்களையும் ஏராளமான கட்டுரைகளையும் எழுதிக்குவித்தவர்.

இவர் கட்டுரைகள் ஆண்டுமலர்களிலும் பல்வேறு இதழ்களிலும் இடம்பெற்றுள்ளன.

35 ஆண்டுகளாகச் சென்னை மாநகராட்சி, சென்னைக் குடிநீர் ஆகிய அரசு நிறுவனங்களில் பொறியாளராக- செயற்பொறியாளராக- பகுதிப்பொறியாளராகச் சிறக்கப் பணியாற்றியவர். எங்கும் தமிழ் வளர்த்தவர். “மாமழை போற்றுதும் “என்னும் தொடரைச் சென்னைக் குடிநீர் வாரியத்துக்குக் குறிக்கோள் மொழியாகப் பரிந்துரைசெய்தவர். அங்கும் தமிழ் வளர்த்தவர். அதனால் அவருக்குத் தினமணி நாளிதழ், *தமிழ்ப்பொறியளர்* என்னும் பட்டத்தைத் தந்து சிறப்பித்தது. எண்ணற்ற விருதுகள் பெற்ற இவருக்குத் “திருக்குறள்நெறித் தோன்றல் “என்னும் பட்டத்தைத் தமிழக அரசு வழங்கிச் சிறப்பித்துள்ளது.

மேலும் தமிழ் மேம்பாட்டுக்கான பலப்பல திட்டங்களைத் தம் மனத்தே கொண்டிருந்தார். தனக்குப் பிறகும் தொடர்ந்து தமிழ்த்தொண்டு புரிவதற்குத் தம் மகன் தாமரைக்கண்ணனை மாநிலக்கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியராக்கி மகிழ்ந்து, தோன்றாத் துணையாக வழிகாட்டி வருகிறார். அவர்தம் கட்டுரைத்தொகுப்புகள் விரைவில் தமிழ்கூறு நல்லுலகம் பயன்கொள்ளும் வகையில் வெளியிடப்பெறவிருக்கின்றன.

## திருவள்ளுவர் சீர் பரவுவோம்!



- கெ. பக்தவத்சலம் எம்.ஏ,

(செயலாளர், ஒய். எம். சி. ஏ. பட்டிமன்றம்)

பெரிய புராணத்தை அருளிச் செய்த சேக்கிழார் பெருமானைத் "தொண்டர் சீர் பரவுவார்" என்று சிறப்பித்துப் பாராட்டுகிறோம். இந்நாளில் திருக்குறள் தொண்டாற்றும் அறிஞர் பெருமக்களைத் 'திருவள்ளுவர் சீர்பரவுவார்' என்று அழைத்து மகிழ்கிறோம்.

சீர் : சீர் என்னும் மங்கலச் சொல், அழகு, அளவு, பெருமை, புகழ் எனப் பல பொருள்களுக்குரிய ஓரசைச்சொல்லாகும். 'சீர்' என்ற சொல், பல்வேறு பொருட்களை விளக்கும் வகையில், 13 குறட்பாக்களில் இடம் பெற்றுள்ளது.

**புகழ்** :

"புகழையும் மானத்தையும் காக்க விரும்புவோர், தாம் புகழோடு வாழும் காலத்திலும், இழிவுதரத்தக்க செயல்களை ஒரு நாளும் செய்யமாட்டார்கள்" என்பதனை 'மானம்' என்ற அதிகாரத்தில் திருவள்ளுவர் தெளிவுபடுத்துகிறார்.

"சீரினும் சீரல்ல செய்யாரே, சீரோடு பேராண்மை வேண்டு பவர்." (962)

**பெருமை**:

"கல்வி, செல்வம் போன்ற பெருஞ்சிறப்புகள் இழிந்த குணமுடையவர்களைச் சேர்ந்துவிட்டால், அவை இழிந்தவர்களிடம் முறைகேடான செயல்களையே தோற்றுவிக்கும் என்றுரைக்கும் 'பெருமை என்னும் அதிகாரத்தின் பிறிதொரு குறள்!

இறப்பே புரிந்த தொழிற் (று) ஆம், சிறப்புதான்

சீர்அல் லவர்கண் படின்" (977)

சீரழிவு என்ற சொல், இன்றும் வழக்கத்தில் உள்ளது. சீரழிக்கும் என்பதற்குப் புகழைப் போக்கும் என்று கூறும் ஒரு குறள். சூதாட்டத்தின் தீதினை, சூது அதிகாரத்தில்,

"சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின் வறுமை தருவ (து) ஒன்(று) இல்"

(934) என்று அழுத்தம் திருத்தமாகக் கூறுகிறது திருக்குறள்.

**சிறப்பு:**

சிறப்பு மிக்க பெரியோர்களைச் “சீரார் என்று குறிப்பிடுகின்றார் திருவள்ளுவர்,

“சீரார் பொதுவாகச் சீறார்; கோபம்கொள்ளார். சீற்றம் கொண்டால் பெரும் பணபலமும், பக்கபலமும் மிக்கவர்களும் அதனைத் தாங்கமாட்டது ஒழிந்துவிடுவர். அதனால் 'பெரியாரைப் பிழையாமை' நன்று என்கிறது இக்குறள்.

“இறந்தமைந்த சார்புடையர் ஆயினும் உய்யார் சிறந்தமைந்த சீரார் செறின்" (900)

**ஆண்மை :**

இடனறிதல்” என்னும் அதிகாரத்துள் ஒரு குறள்: “சிறை நலனும் சீரும் இலர் எனினும் மாந்தர் உறைநிலத் தோடு ஒட்டல் அரிது" (499)

“ஆண்மை உடையவர்கள் தக்க வாய்ப்பின்மையால் பெருமை குன்றிச் சிறுமையுற்றிருப்பதைக் கருத்தில் கொள்ளாமல் அவர்களுடைய இருப்பிடத்திற்கே சென்று தாக்கினால், அவர்கள் தாம் வாழும் இடத்தை விட்டுப் போகத் துணிவின்றி, உயிரையும் விடத் துணிந்து விடுவார்கள். ஆகவே, அத்தகைய வீரமுடையோரின் முன் பெரும்படையும் உடையும்” என்பது பொருள்.

மன்னர்களின் படைவீரத்தையும் கொடை வீரத்தையும் கூறுவது “மெய்ச்சீர்த்தி” இச்சொல்லே, கல்வெட்டுகளில் காணப்படும் மெய்க் கீர்த்தியாகப் பின்னாளில் உருமாற்றம் பெற்றுள்ளதாக அறிஞர் கூறுவர். மேன்மை: அடக்கமுடைமையே அறிவுடைமை என்பதை ஒருவன் அறிந்துகொண்டு நடக்கத் தலைப்பட்டால் அவனது அடக்கம் நல்லவர்களால் பாராட்டப்பெற்று, அவனுக்கு மேன்மையைக் கொடுக்கும் என்பது திருக்குறள். செறிவு)அறிந்து சீர்மை பயக்கும், அறிவறிந்து ஆற்றின் அடங்கப் பெறின். ” (123)

**ஒழுக்கம்:**

பயனிலவாகிய சொற்களை, நீரின் தன்மை (நீர்மை) என்னும் தண்ணனியாம் இனிய தன்மையுடையார் சொல்லுவராயின் அவரது மேன்மையும் அதனால் வரும்.நன்மதிப்பும் உடனே நீங்கும் என்றுரைக்கும் பிறிதொரு குறள்,

“சீர்மை சிறப்பொடு நீங்கும்; பயனின நீர்மை யுடையார் சொவின்" (195) இங்கு சீர்மை, ஒழுக்கம் என்றும் பொருள்படும்.

**அளவு:**

தராசின் முன்முனைபோல, ஒரு பக்கமும் சாயாமல் நடுவு நிலைமையோடு நீதி வழங்குவதே சான்றோர்க்கு அழகாகும். "சமன்செய்து சீர் தூக்கும் கோல்போல் அமைந்தொருபாள் கோடாமை சான்றோர்க்(கு) அணி' (119) “அளந்துபார்க்கும்” என்ற பொருளில் சீர்' என்ற சொல் எடுத்தாளப் பட்டுள்ளது.

“உறுவது சீர்தூக்கும் நட்பும், பெறுவது
கொள்வாரும், கள்வரும் நேர்!"(813)

“நட்பின் அளவைப் பாராது, அந்த நட்பினால் தமக்கு வரும் பயன் எவ்வளவு என்று மட்டுமே அளந்து பார்க்கும் தீய நண்பர்கள், கள்வரை ஒத்தவர்கள்” என்று தீ நட்பின் இயல்பைக் கடுமையாகச் சாடுகிறது திருக்குறள்.

**திருவள்ளுவர் சீர் பரவுவார்:**

திருக்குறளை ஈடுபாட்டுடன் கற்றும் கற்பித்தும் திருக்கு றள் நுட்பங்களை நாடறியச் செய்துவரும், நங்கநல்லூர் “திருவள்ளுவர் இலக்கிய மன்றம்”, வெள்ளிவிழாக் காண்பது, திருக்குறள்

ஆர்வலர்களின் உள்ளங்களில் தேன்பிலிற்றும் செய்தியாகும். இந்த இனிய தருணத்தில், “திருவள்ளுவர் சீர்பரவுவாராகத்” திகழும், அதன் ஆட்சிக் குழுவினரைப் பாராட்டி மகிழ்வது நமது கடமையாகும். திருவள்ளுவரின் சீர் பரவுவதுடன், திருக்குறளின் ஒவ்வொரு சீரையும் தொழுது படித்து, திருக்குறள் மெய்ப்பொருள் காணும் தொண்டைத் தொடர்வோமாக!

(வெளியீடு:சென்னை வாணுவம்பேட்டைத் திருவள்ளுவர் இலக்கியமன்றம், வெள்ளிவிழாமலர் 29/7/2001)

**உதவி: பேராசிரியர். தாமரைக்கண்ணன் பக்தவத்சலம் (கட்டுரையாளரின் புதல்வர்)**

# வள்ளுவர் வகுத்த “திரு“



பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தம் எம்.ஏ.எம்.லிட்.

செல்வத்தை விரும்பாதவர் யாருமிலர். 'முற்றத் துறந்த முனிவர் ' என்று தம்மைக் கூறிக் கொள்பவரும் கூட இந்த இருபதாம் நூற்றாண்டில் 'செல்வச் சிறப்புடையராகவே வாழ விரும்புகின்றனர். இந்த நாளில் செல்வமே அனைத்திற்கும் அடிப்படையாக அமைகின்றது. செல்வம் என்பது பல பொருள்களில் பழங்காலத்தில் - வள்ளுவர் திருக்குறளில் - வழங்கிவந்தாலும், இன்று அது பொருட்செல்வத்தையே குறிக்கின்றது. ' பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லை' என்று வள்ளுவர் கூறினும் இன்றைய மக்கள் அப்பொருளை அன்றி உலகில் வேறோன்றுமே இல்லை என்னும் அளவிற்குத் தம் வாழ்வை அமைத்துக்கொள்ளுகின்றனர். 'கடவுளா? பண்பா? அறமா? பொருளா?' என்ற வினாவிற்குப் 'பொருளே!' என்று ஏகாரமிட்டுக் கூறும் அளவிற்கு மனித சமுதாயம் முன்னேறி விட்டது. எனவே அப்பொருளை எவ்வாற்றானும் பெறுதற்கு அவாவுடையதாகி, எதையும் செய்யத் தொடங்கிவிட்டது அச்சமுதாயம் , வள்ளுவர் திருமகளைச் செல்வத் தலைவியாகக் கூறுகின்றார். * திருமகள் ' செல்வமாகவே குறிக்கப்பெறும் இடங்கள் பல , மிகப் பழங்கால இலக்கியத்தில் இத்தொடர் அவ்வாறு குறிக்கப் பெறாவிடினும் பிற்காலத்தில் இது பெருவழக்காக அமைந்துவிட்டது. வள்ளுவர் 'திரு' என்ற சொல்லை நான்கு பொருள்களில் நன்கு பயன்படுத்துகின்றார். 'திரு' என்ற சொல்லை, செல்வம், நன்மை, அழகு, திருமகள் என்று கொள்ளும் நால்வகைப் பொருள்களில் வள்ளுவர் எடுத்தாளுகின்றார்.

"அழுக்காறு என ஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழிஉய்த்துவிடும்"(108) என்ற குறளில் 'திரு' என்ற சொல்லைச் 'செல்வம்' என்ற பொருளிலேயே பெய்துள்ளார். இன்னும் வேறு நான்கு குறட்பாக்களிலும் இதே பொருளில் வள்ளுவர் இச்சொல்லை வகுத்துக் காட்டுகின்றார். இவற்றுளெல்லாம் திருவள்ளுவர் செல்வம் சேரும் இயற்கை நிலையையும் பயனையும் அது தங்கும் முறையையும் நீங்கும் நிலையையும் விளக்கிக் காட்டுகின்றார்.உலகத்தியற்கையே ‘செல்வம் உடையவராதல், அஃதின்மையராதல்' என்ற பாகுபாட்டில் அமைவது என்பதை விளக்கி; எத்துணை சமதர்மச் சமுதாயம் அமைக்கும் சூழ்நிலை பெறினும், அதிலும் 'இருவேறு' நிலை இருக்கத்தான் முடியும் என்ற உண்மையை விளக்கிக் காட்டுகின்றனர். இந்த உண்மையை

இருபதாம் நூற்றாண்டின் இடையில் உலகிலுள்ள பல்வேறு வாழ்வமைப்புக்களிலும் நன்கு விளங்கக்காண்கின்றோம்.

பொருட்செல்வம் நல்லவரிடம் சேர்ந்தால் உண்டாகும் பயனையும் அல்லவரிடம் சேர்ந்தால் ஆகும் அல்லையும் மற்றொரு குறளால் வள்ளுவர் விளக்கத் தவறவில்லை. நல்லவரிடம் சேரின் அது 'ஊருணி நீர் நிறைந்தற்று' என்றும் வேறிடத்தில் விளக்கமும் தருகின்றார். எனினும் இத்தகைய செல்வம் - பொருட்செல்வம் - உலகுக்கு வேண்டிய செல்வம், அழுக்காறு காரணமாகவும் இனத்தாற்றி எண்ணாத வேந்தன் சீற்றம் காரணமாகவும் உடையாரைவிட்டு விரைவில் நீங்கும் என்பதையும் வள்ளுவர் தெளிவாகக் காட்டிவிடுகிறார். எனவே செல்வத்தின் இயல்பினையும் அது சேரும் நிலையினையும் வள்ளுவர் என்றும் வாழ நினைக்கும் சமுதாயத்துக்கு விளக்கியுள்ளார். இந்த நல்ல விளக்கத்தை அறியாத காரணத்தினாலேயே உலகம் எங்கோ பொருட் செல்வத்தின் பின்னேயேஉருண்டோடிக்கொண்டிருக்கிறது.

இச் செல்வத்துக்கு - பொருள் செல்வத்துக்கு உரியவள் “திருமகள்' என்பதையும் வள்ளுவர் 'திரு' என்ற சொல்லாலேயே மூன்று இடங்களில் குறிக்கின்றார். இம் மூன்றிலும் அவர் அச் செல்வி தங்குமிடத்தையும் விட்டு விலகும் இடத்தையும் விளக்கிக் காட்ட தவறவில்லை,

"அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்

திறனறிந்து ஆங்கே திரு" (179)

என்று 'அறத்தை அறிந்து பிறர் பொருளை விரும்பாத அறிவுடையவரைத் திருமகள் தானே தகுதி அறிந்து அப்போதே சேரும்' (பரி) நிலையினை தெளிவாக்கி விடுகிறார்.

காளிங்கர் இத் 'திரு' விற்கும் 'செல்வம்' என்றே பொருள் கொள்ளுகின்றார். எப்படியாயினும் அறவாழ்வு வாழாதவருக்குத் திருமகள் நோக்கு இல்லை என்பது தெளிவு தானே! வேறு இரு குறட்பாக்களில் 'திரு' தங்கப் பெறாதவரை வள்ளுவர் காட்டுகின்றார். 'இரு மனப் பெண்டிரையும் கள்ளையும் கவற்றினையும் ' தனக்குத் துணையாகக் கொள்பவனையும் நட்பிடை வேறுபாடு நினைப்பவனையும் திரு (தங்காது) நீங்குவாள் எனக் காட்டுகின்றார். எனவே செல்வம் நல்லவரிடம் தங்கும் என்பதும் அல்லவரை விட்டு அகலும் என்பதும் வள்ளுவருடைய அசைக்க முடியாத நம்பிக்கை.

இந்த நூற்றாண்டில் சிலர் இந்த நம்பிக்கையில் நம்பிக்கை வைக்க மறுக்கின்றனர். அதற்கென அவர்கள் காட்டும் காரணங்களும் உள. உலகில் கொடுமையே வாழ்வின் குறிக்கோளாக உள்ளவர் - அழுக்காறுடையவர் - அறனி லார் - செல்வம் பெற்றுச் சிறக்க வாழ்வதையும் அல்லாத நல்லவர் அல்லலுற்றுச் சாய்வதையும் காட்டி தம் நம்பிக்கை தளர்வதை விளக்குவர். நன்கு அறிந்தவருக்கும் கூட , அக் காட்சி தடுமாற்றத்தை விளைக்கின்றது என்பது உண்மையே எனினும் நின்று நிலைத்து நெடிது நினைப்பின் வள்ளுவர் தம் நம்பிக்கையே வலியுறுத்தப் பெறும்.

“நன்றறி வாரிற் கயவர் திருவுடையர் நெஞ்சத் தவல மிலர்" (1072)

என்ற குறளில் வள்ளுவர் கயவரைத் 'திருவுடையார்' எனவே குறிக்கின்றார். ஆம்! அதற்கென அவர் காரணமும் காட்டுகின்றார். “தமக்கு உறுதியாவன அறிவாரின் அவை அறியாத கீழ் மக்கள் நன்மை உடையவர் - அவர் போல் அவை காரணமாகத் தம் நெஞ்சத்தின் கண் கவலை இலராகலான்" என்று இக்குறளுக்குப் பரிமேலழகர் உரை கூறி , 'திரு' என்பதற்கு நன்மை எனப் பொருள் காண்கின்றார். அந்த நன்மைக்கு அக் கயவர்

நெஞ்ச நிலையே காரணமாக அமைகின்றது என்பதையும் அவர் உணர்த்துகின்றார். இந்த அவன் நெஞ்சின் அல்வலைப் பின் வந்த பெரியவர்கள் ப லவாறு பாடியுள்ளனர். அத்தகைய கயவர் வாழ்வு - பொருட்செல்வம் சிறந்ததாக உலகில் காணப்பெறினும் அவர் தமது உறுதி அறியாதவராக , மறுமை நலமும் இம்மைச் செல்வங்கள் பிறவும் இல்லாதவராக, வறிதே கழிவதையும் நம் கண் முன்பே காண்கின்றோமல் லமோ?

திருவள்ளுவர் திரு ' என்ற சொல்லை 'அழகு' என்ற பொரு ளிலும் எடுத்தாண்டுள்ளார்.

"கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்
நல்லவர்நாணுப்பிற“(1011)

என்றும்

"கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழும்
திருநுதற் கில்லை யிடம்.“(1123)

என்றும் அழகு என்ற பொருளில் இரு இடங்களில் எடுத்தாளுகின்றார். இரண்டிடங்களிலும் நல்ல பெண்களே அத்தொடர்களால் குறிக்கப் பெறுகின்றனர். திரு அழகாகின்றது. இவ்வாறு வள்ளுவர் பொருட்செல்வத்தை - நன்மையை அழகினை இலக்குமியை திரு என்ற சொல்லால் சில குறட்பாக்களில் விளக்கிக் காட்டுகின்றார். இவை அனைத்திலும் வள்ளுவர் அத் திருவாகிய அழகும் நன்மையும் சேர்ந்த நல்ல அறத்தாறு. ஓம்பும் செல்வ நிலையையே நமக்கும் நினைவூட்டுகின்றார்.இந்த உண்மையை உணர்ந்து, இதில் நம்பிக்கை கொள்வோமாயின் இருபதாம் நூற்றாண்டின் புறவாழ்வைக் கண்டு நாம் புழுங்கத் தேவையிருக்காது. அழுக்காறுடையார் செல்வத்தில் புரள்பவராகத் தோற்றமளிப்பினும் அவர் நெஞ்சத் தவலமுளராகி அழிவது திண்ணம் அத்தகையோரைச் செய்யவள் தவ்வைக்குக் காட்டிவிடும் என்பதும் உறுதி. இந்த உண்மையை - நல்லவர் வாழ்ந்து, அல்லவர் அவல முறும் நிலையை வள்ளுவர் பலவிடங்களில் தொட்டும் சுட்டியும் இட்டும் எடுத்துக்காட்டியுள்ளார்.

‘திரு ‘வின் பெயரால் இதைச் சற்று விளக்கமாகவே தெளிய வைத்துள்ளார். வள்ளுவர் வகுத்த திரு வின் செயல் இது - செம்மை இது- நன்மை இது-அழகு இது.
இதை உணர்வார் உயர்வார். அல்லார் அல்லாரே!

**[நன்றி:முதலாவது உலகத் தமிழ் மறை ஆராய்ச்சி மாநாடு 2005- சிறப்பு மலர் ]**

## திருவள்ளுவர் – தமிழகத்தின் முதல் புரட்சியாளர்




- செந்தமிழரிமா சி. இலக்குவனார் (1909 - 1973)

உலக மக்கள் உயர்ந்த நெறியில் வாழ்ந்து இன்பம் பெறுவதற்கான வழி வகைகளை வகுத்துக் கூறியவர் திருவள்ளுவர். அவர் தோன்றி இரண்டாயிரம் ஆண்டுகள் ஆகிவிட்டன. அவருடைய ஈராயிரம் ஆண்டு நிறைவு விழா இன்று தமிழகமெங்கும் கொண்டாடப்பட்டு வருகின்றது. தமிழ் மக்கள் அவரை என்றும் போற்றிப் புகழக் கடமைப் பட்டுள்ளனர். வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் பெற்றுள்ளோம் அன்றோ!
கி.மு. ஏழாம் நூற்றாண்டில் தோன்றிய தொல்காப்பியர் , பிற மொழித் தாக்குதலால் தமிழ் அழிந்து போவதைத் தடுத்து நிறுத்தினார் தம்முடைய தொல்காப்பியத்தால். திருவள்ளுவர் , அயல் மக்கள் செல்வாக்கால் தமிழ்ப் பண்பாடு அழிந்து போவதைத் தடுத்து நிறுத்தினார். தமிழ் மக்களின் பழைய பண்பாட்டில் காணப்பட்ட நல் வாழ்வுக்குப் பொருந்தாதவை களையும் களைந்தெறிய அறிவுரை கூறியுள்ளார்.

புரட்சி என்பது மக்கள் வாழ்வில் காணப்படும் பொருந்தாத மூட நம்பிக்கைக் கொள்கைகளை எதிர்த்துப் போர் முழக்கம் செய்து மாற்றி அமைக்க முயலுவதே ஆகும். பழைமையைப் புரட்டிவிட்டு - அகற்றிவிட்டு - புதுமையைப் புகுத்துவதுதான் புரட்சி. புரட்சி என்றால் பூசலும் , போரும், கொள்ளையும், கொலையும் தோன்றுமென்று கருதலாம். மேல்நாடுகளில் அவ்வாறுதான் புரட்சிகள் நடந்துள்ளன. திருவள்ளுவர் செய்துள்ளது எண்ணப் புரட்சியாகும். எண்ணமே செயலின் அடிப்படையாகும். அதனால் செயலின் தாய் எண்ணம் என்பர் மேனாட்டார். ஆனால் எண்ணம் திண்ணியதாக உருவானால் செயல் தானே தோன்றிவிடும். எண்ணம் தோன்றுமிடம் மனம். அம்மனம் தூய்மையாக இருக்க வேண்டுமென்று வள்ளுவர் கூறுவதே ஒரு புரட்சியாகும். மனம் தூய்மையாக இருத்தலே அறம் என்கின்றார். மனம் தூய்மையற்று என்ன நற்செயல்கள் செய்தாலும் அவை பயன்படா. வெறும் ஆர்ப்பரவ வேட்கைக்கு உரியனவாகிவிடும்.
“மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்; ஆகுலநீர பிற" என்பதை நோக்குமின்.
எவ்வகையினும் சாதியாலோ , சமயத்தாலோ, நிறத்தாலோ, பொருளாலோ வேறுபாடு அற்று வாழ்ந்த தமிழ் மக்களிடையே சாதி வேறுபாடுகள் புகத்தொடங்கின. அச்சாதி வேறுபாடுகள் இன்றும் அகன்றுவிடவில்லை. மக்களை அலைக்கழித்து வருகின்றன. வள்ளுவர் அன்றே “பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்றார்.

தமிழ் நாட்டில் இரக்கத்திற் சிறந்து அருள் உளம் கொண்டு மக்களுக்கும் பிற உயிர்களுக்கும் தொண்டாற்றுகின்றவர்களை 'அந்தணர்' என்று அழைத்து வந்தனர். அவர்களே மக்களின் தலைவர்களாகவும் மதிக்கப்பட்டனர். ஆகவே ஐயர் - தலைவர் என்று சிறப்பித்துக் கூறப்பட்டனர்.

வெளிநாட்டிலிருந்து வந்த சிலர் தம்மைப் பிறப்பால் உயர்ந்தவராகக் கூறிக்கொண்டு 'அந்தணர்' என்றும், 'ஐயர்' என்றும் அழைத்துக்கொண்டனர். ஆனால் செயலில் வன்கண்மை பூண்டு தம் கூட்டத்தினர் அல்லாதவரை ஒடுக்கியும் இழித்தும் விலங்கினும் கீழாக நடத்தி வந்தனர். அதனால் வள்ளுவர் "அந்தணர் யார் " என்று விளக்கம் கொடுத்து , போலி அந்தணர்களைப் புறக்கணிக்க வழிகோலினார். "அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான்" என்று முழக்கம் விடுத்துள்ளமை காண்க.

பிறப்பால் உயர்வு தாழ்வு பேசுதல் பேதமை. ஒழுக்கத்தால் உயர்ந்தோரே நல்ல குடியில் பிறந்தோர் ஆவார். ஒழுக்கக் கேடர்களே இழிந்த பிறப்பினர் ஆவார்கள். ஆதலின் “ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம் இழிந்த பிறப்பாய் விடும்" என்று இடித்துரைத்தார். ஒழுக்கத்தால் உயர்வு படுத்தும் நெறி வெற்றி பெற்றிருக்குமேல் , இன்று நாட்டில் பூசல்கள் தோன்றுமா ? ஒழுக்கம் உடையாரை ஒதுக்கிப் புறக்கணிப்பதனால் அன்றோ இன்று எங்கு நோக்கினும் பூசற்களமாகக் காணப்படுகின்றது. மக்களாட்சி வெற்றி பெற வேண்டுமென்றால் ஒழுக்கமுடையோர் உயர்ந்தோராகக் கருதப்பட்டு உயர்வாகப் போற்றப்படுதல் வேண்டும். மக்களில் கல்விப்பேறு அடைதற்குரியவர் சிலரே என்றார். சில நாடுகளில் படிப்பவர் வேறு ; உழைப்பவர் வேறு என்றும் வகைப்படுத்தினர். "உயர்ந்தோரே படித்தல் வேண்டும். உழைப்பவர் படித்தல் வேண்டாம் ' என்றும் விதியாக்கினர். ஆனால் வள்ளுவர் கூறியது என்ன ? கல்வி அனைவர்க்கும் பொது ; கண்கள் அனைவர்க்கும் இயல்பாக உரியன ; அதுபோல கல்வியும் எல்லார்க்கும் உரியதாகும். கண்களோடு பிறத்தல் போலக் கல்வியோடு வளர்தல் வேண்டும். கண்ணில்லாது வாழ முடியாதது போல் கல்வியில்லாதும் வாழ முடியாது. கல்வி பெறாதிருத்தல் பெருங்குற்றம். பெற முடியாது தடுத்தல் அதனினும் பெருங்குற்றம். கல்வியைப் பறிப்பது கண்ணைப் பறிப்பது போலாகும் என்று கல்வி , கல்லாமை என்னும் இயல்களில் தெளிவுறக் கூறியுள்ளார். "எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும் கண்ணென்ப வாழுமுயிர்க்கு" என்று கூறுவதில் ஒரு " புரட்சியையும் செய்துள்ளார். கல்வி என்றால் வெறும் காப்பியங்களை மட்டுமோ, இலக்கண நூல்களை மட்டுமோ கற்றல் அன்று. அறிவியலை (எண்)யும் கலை (எழுத்து) களையும் ஒருவர் கற்றால்தான் முழுமைக் கல்வியாகும் என்கின்றார். இரு பகுதிகளையும் கற்பவர்தாம் மக்களாக வாழ்வர். பிறர் மாக்களாகிவிடுவர் என முன்னறிவிப்புக் கொடுத்துள்ளார். இன்று கல்லூரிகளில் வள்ளுவர் கருத்துக் கேற்ப கலையும் (Arts) அறிவியலும் (Science) சேர்த்துக் கற்பிக்கத் திட்டம் வகுத்திருப்பினும் செம்மையான முறையில் செயல்படவில்லை.

ஒருவனுடைய ஏற்றத்தாழ்வு அவன் போன பிறவியில் செய்துள்ள புண்ணிய பாவங்களுக்கேற்பவே உண்டாகும். சிலர் பல்லக்கில் (அக்காலத்தில் மகிழ் உந்து இல்லை) ஏறிச் செல்லுகின்றனர் என்றால் அவர்கள் போன பிறவியில் புண்ணியம் செய்தவர்கள் ஆவார்கள் ; அதனைச் சுமந்து செல்பவர்கள் போன பிறவியில் பாவம் செய்தவர்கள் ஆவார்கள் என்று கூறி வந்தனர். இக்கூற்று மிகமிகக் கொடியது ; உண்மைக்கு மாறுபட்டது. இன்று காண்கின்றோம் , அறஞ்சாரா நெறியில் அளவு கடந்து பொருளீட்டியவர் அழகார்ந்த வியன் உந்தில் ஆர்ப்பரவுடன் செல்கின்றார். அறநெறி கோடாது வாழ்கின்றவர் அடக்கமாக நடக்கின்றார். வியன் உந்தில் வீறு தோன்றச் செல்லுகின்றவர் புண்ணியம் செய்தவர் என்றும் , கால்நோவ நடந்து செல்லுகின்றவர் கடும் பாவம் செய்தவர் என்றும் கழறுதல் பொருத்து மா? பொருந்தாது அ ன்றோ? ஆகவே திருவள்ளுவர் " அறத்தாறு இது வென வேண்டா, சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தானிடை '

எனர் சினந்து உரைத்தார். இதன் பொருள் எறியிருப்பவரையும் அத னைச் சுமந்து செல்பவரையும் காட்டி இதுதான் அறவழியென்று கூறற்க எனபதாகும் .பிற்காலத்தார் அவ்வுண்மைப் பொருளை மறைத்து வேறு வகையாகக் கூறிவிட்டனர். ஏன் எனில் உண்மைப் பொரு ளை அறிந்த மாந்தர் பல்லக்கில் செல்லுபவரை வாளாவிட்டு விட மாட்டார் என்று அஞ்சியே ஆகும் ,உண்மைப் பொருளுணரின் பல்லக்கில் செல்லுபவரைக் கீழே இறக்கிப் பல்லக்கைச் சுக்கு நூறாக உடைத்துத் தள்ளிவிடுவரன்றோ!

கொடுத்தல் நன்றுதான். ஆனால் ஆளறிந்து கொடுக்க வேண்டும். சிலருக்குக் கொடுத்தால்தான் வீடு பேறு கிட்டும். வேறு சிலருக்குக் கொடுத்தால் நரகம்தான் கிட்டும் என்றனர் , கொடுத்தலால் வீடு அடைதல் போன்றே பெறுதலாலும் வீடு அடையலாம் என்ற கொள்கை பரப்பப்பட்டு வந்தது. ஆனால் பழந்தமிழர் கொள்கையோ இதனின்றும் வேறுபட்டது . "ஈயென இரத்தல் இழிந்தது ; ஈயேன் என்றல் அதனினும் இழந்ததாகும் ; கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தது ; கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்ததாகும் " இவ்வாறு கூறி ஒழுகி வந்தனர் பழந்தமிழர் , திருவள்ளுவர் இத்தமிழ்க் கொள்கையில் ஊறி முதிர்ந்தவர். ஆகவே அவர் கூறினார் “நல்லாறு எனினும் கொளல் தீது; மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று". பிறரிடம் ஒன்றைப் பெறுவது சிறந்த வாழ்வு நெறியாகும் (யாசகம் புருட இலட்சணம்) என்று சிலர் கூறினாலும் பிறரிடம் ஒன்றைக் கொள்ளுதல் கொடுங் குற்றமே. கொடுப்பதனால் வீடு கிட்டாது எனத் தெரிந்தாலும் கொடுத்தலே நல்ல செயலாகும்.
"வீடு (மோட்சம்) கிட்டாது என்றாலும் கொடு; வீடு கிடைக்குமென்றாலும் வாங்காதே" என்பது எத்தகைய புரட்சிக் கொள்கையாகும் என்பதை எண்ணுமின்!

"வேள்விகளைச் செய்து ஆற்றலைப் பெறலாம் ; அடைதற்கரியனவற்றை அடையலாம்" என்ற கூற்றில் மயங்கி வேள்வியை அறியாத் தமிழ்நாட்டில் வேள்வி செய்தலைப் பெருங்கடனாகச் செய்தனர் சிலர். தமிழரசர்களில் சிலர் எளிதில் எதையும் பெறலாம் என்று எண்ணி வேள்விகளைச் செய்வதற்கு ஊக்கமும் ஆக்கமும் அளித்தனர். பல வேள்விகளைச் செய்த அரசர்க்கு “பல்வேள்வி செய்தோன் " என்ற பட்டமும் கொடுக்கப்பட்டது. “பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி" என்பதே சான்றாகும்.

அவ்வேள்விகளில் ஆடு மாடு குதிரைகளைக் கொன்றனர். மக்கள் நலன் அடைய மாக்களைக் கொல்லுதல் அறமாகுமா ? பேரருளாளர் வள்ளுவர் தம் எதிர்ப்புக் குரலை எழுப்பினார். அரச சீற்றத்திற்கு ஆளாவோமே என்று அஞ்சினர் இலர். "அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர்செகுத்து உண்ணாமை நன்று” என ஓங்கி முழங்கினார். வேள்விகளைச் செய்யாதே ; வீணில் உயிரைக் கொல்லாதே என்பது வியத்தகு புரட்சி அன்றோ ? வேந்தரை எதிர்ப்பது அக்காலத்தில் சாகும் தண்டனைக்கு ஆட்படுத்துமே! மாந்தர்களில் பலர் மனத்தின்கண் மாசுகொண்டு புறத்தில் மாண்புடையார் போன்று நடித்துப் பொய்க்கோலம் பூண்டு வாழ்ந்து வருகின்றனர். வள்ளுவர்காலத்திலும் வாழ்ந்தனர். இவர்கள் பொது மக்களை ஏமாற்றித் தம் வலைக்குள் சிக்கவைத்துத் தாம் எண்ணியபடி ஆட்டி வைத்தனர். அவர்களால் பூசனையும் பொருளும் பூவையரும் பெற்றனர். அணிந்திருந்த வேடத்திற்கும் துணிந்திடும் செயலுக்கும் பொருத்தமின்றி ஒழுகி வந்தனர். வஞ்ச மனத்தினராய்க் கரவொழுக்கம் பூண்டு வாழ்வதைக் கண்டு அவர்களின்

ஐம்பூதங்களும்கூட அகத்தே நகா நிற்கும். அக்காலத்தில் துறவிகட்கு மக்களிடையே நல்ல செல்வாக்கு இருந்தது. துறவிகள் கடவுளைவிட உயர்ந்தவராகக் கருதப்பட்டனர். உண்மைத் துறவிகள் மக்களுக்காக உயிர் வாழ்ந்ததனால் அத்தகைய மதிப்பை அவர்கள் பெறமுடிந்தது. எங்கு மதிப்பும் மாண்பும் கிட்டுகின்றனவோ அங்குக் கயவர்கள் புகுவர் அன்றோ ? ப பிதிரர் என்பார் இறந்து போன முன்னோர் அல்லர் என்பது ரிமேலழகர் கருத்து. ஆனால் இன்று பெற்றோர் இறந்து போனால் அவரை நினைத்து அவர்தாம் பிதிரர் என்று கருதி அவர்தம் மக்கள் அவர் இறந்த நாளில் புரோகிதரை அழைத்துப் பொன்னும் பொருளும் கொடுக்கின்றனர். இதனை, "திதி, திவசம், சிரார்த்தம்' , "' என்றெல்லாம் அழைப்பர். மக்கள் தம் தந்தைக்குச் செய்யும் கடன் இதுதான் என்று இன்றும் பலர் கருதுகின்றனர். ஆனால் வள்ளுவரோ இதனை ஏற்றுக் கொண்டார் இலர். வெளிப்படையாகவே மறுத்துள்ளார். “மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன் தந்தை என்னோற்றான் கொல் என்னும் சொல்" என்று முழங்கினார். மகன் தந்தைக்குச் செய்யும் கடனாவது எல்லா வகையாலும் சிறந்து விளங்கும் இவனைப் பெறுவதற்கு இவன் தந்தை என்ன தவம் செய்தானோ? என்று உலகத்தார் சொல்லும் சொல்லை உண்டாக்குதல் ஆகும்" என்பது இக்காலத்திற்கும் எக்காலத்திற்கும் பொருந்து மன்றோ?

இவ்வாறு பல புரட்சிகளைத் திருவள்ளுவர் ஆற்றியுள்ளார். ஊன் உண்ணுதலை எதிர்த்தார். கள் உண்ணுதலைக் கடிந்தார். கவறாடுதலை இகழ்ந்தார். இவர் செய்துள்ள புரட்சிகளை விரிப்பின் பெருகும். இவரைத் தமிழகத்தின் - ஏன் - உலகத்தின் முதற் புரட்சியாளர் என்று வாயார வாழ்த்தி நெஞ்சார நினைந்து அவர் வழிமுறைகளில் வாழ்ந்து அவருக்கு நன்றி செலுத்துவோமாக!

# குறள்நெறி

மின்னிதழ்:26 தை-1 -தி.பி.2053 சனவரி-14- பொ.ஆ.2022





நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்











பொங்கல் -தமிழ்ப் புத்தாண்டு சிறப்பிதழ்


உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால்
வெளியிடப்பெறும் இணையத் திங்களிருமுறை —

பொறுப்பாசிரியர் -மறைமலை இலக்குவனார்
இணையாசிரியர் -முனைவர் தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற் பனைக்கு அல் கு

குறள்நெறி நிறுவுநர் ,செந்தமிழ் அரிமா ,பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்களின்

## பொங்கல்வாழ்த்து





வாழ்க தமிழ்மொழி! வளர்க குறள்நெறி!

உழவர் திருநாள்;புலவர் பெருநாள்;

மக்கள் மகிழ்நாள் வண்டமிழ்ப் பொங்கலில்

எடுக்கும் சூளுரை இன்றமிழ் போற்றலே

பொங்குக பாலே பொலிக நம்வளம்

பசியும் பிணியும் பகையும் நீங்கி



வசியும் வளனும் சுரந்து வையகம்

குறள்நெறி போற்றிக் கூடி வாழ்கவே

குறள்நெறி மலரவும் குடியரசோங்கவும்

ஆற்றுவோம் தொண்டே அனைவரும் வம்மின்!



**தைமுதல் நாள் தமிழ்ப் புத்தாண்டில் சூளுரை ஏற்போம்!**

**--மறைமலை இலக்குவனார்**



தைமுதல் நாள் தமிழ்ப் புத்தாண்டில்
சூளுரை ஏற்போம்! செயலில் காட்டுவோம்!
சாதி சமய வேற்றுமை யாவுமே
போக்கித் தீயில் பொசுங்கிட வைப்போம்!
உழவர் நெய்வோர் உழைக்கும் மக்கள்
உழலும் துயர்நிலை உடனே மாற்றுவோம்!
அரும்பும் தலைமுறை விரும்பும் கல்வியை
அல்லல் இன்றி அடைந்திடச் செய்வோம்!
அடிமை வேலை அறவே அகற்றித்
தொழிலும் வணிகமும் ஏற்றிடும் நிலையை
இளைஞர் பெறவே வாய்ப்பை வளர்ப்போம்!
ஊளைக் கதைகளில் நாளைப் போக்கிடும்
ஊடகத் துறையில் உயர்கலை வளர்ப்போம்!
பொய்யும் புரட்டும் வம்பும் பரப்பிடும்
செய்தித் தாளில் உண்மை விதைப்போம்!
அடுத்தவர் அழுக்கை அலசிக் கழுவும்
பருவ இதழ்களில் படைப்போம் இலக்கியம் !
கறைப்படும் கழிசடைக் கதைகளைச் சொல்லும்
திரைப்படம் ஒழிப்போம்! நாடும் வீடும்
முறைப்பட உயர்ந்திடக் கருத்தும் பண்பும்
உருப்படச் செய்திடும் உயர்நெறி உணர்த்துவோம்!
சிறுவர் மகளிரைச் சிதைக்கும் வன்செயல்,
கடத்தல், ஊழல், மோசடி, சூது,
கள்ளக் காதல், கருப்புச் சந்தை,
பிள்ளை கடத்தல் போன்றவை இனிமேல்
தொல்லைக் காட்சியாய்த் தோன்றிடா வகையில்
தொலைந்து போயின எனும்நிலை சமைப்போம்!
ஆட்சி,பயிற்சி,வழக்கு மொழியாய்
அன்னைத் தமிழைச் சிறந்திடச் செய்வோம்!
அன்பும் பண்பும் ஓங்கி ஒற்றுமை
பொங்குக!பொலிக!வெல்க!வாழ்கவே!

## தமிழ்ப் பெருங்காவலர் வள்ளல் கா. நமச்சிவாயர்



18-5-1935 அன்று சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழறிஞர்கள் அனைவரையும் மறைமலை அடிகள் தலைமையில் ஒருங்கிணைத்து வள்ளுவரின் காலம் கி.மு.31 என வரையறுத்துக் கூறிட வழிவகுத்த கா.நமச்சிவாயரும் மறைமலையடிகளும்

வள்ளல் கா. நமச்சிவாயர் 1876 ஆம் ஆண்டு பிப்ரவரி 20ஆம் நாள் வெள்ளி இரவு 10.30 மணிக்கு, வட ஆர்க்காடு மாவட்டத்திலே காவேரிப்பாக்கம் எனும் ஊரிற் பிறந்தார் இவர் தந்தையார் பெயர் இராமசாமி முதலியார் ; தாய் அகிலாண்டவல்லி அம்மை. தந்தை ஒரு திண்ணைப் பள்ளிக்கூட ஆசிரியர்தாம். வள்ளல் அவர்கள் தம் தொடக்கக் கல்வியைத் தம் தந்தையாரிடமே பயின்றார். எளிய குடும்பத்தினராகிய இவர் வேலை தேடிச் சென்னைக்கு வந்து முதலில் ஒருதொடக்கப்பள்ளி ஆசிரியராக அமர்ந்தார்.

ஒரு நல்லாசிரியர் மகன் ஒரு சாதாரண ஆ சிரியராக இல்லாமல் பேராசிரியராகத் திகழ வேண்டும் என்ற ஆவல். அத்துடன் அமையாது இயற்கையிலேயே தமிழ்க் கல்வியில் ஆர்வமும் நாட்டமும் உடையவராய்ப் பல தமிழ் நூல்கள் விரும்பிக் கற்றார். ஒரு சிறந்த தமிழ் ஆசிரியரை நாடி முறையாகத் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்க ஆவல் மிக்கவராய்த் தேடினர். அந்தக் காலத்தில் தமிழ்ப் புலமையில் சிறந்தவாயும் புகழ் வாய்ந் தவராயும் திகழ்ந்த சென்னைத் தொண்டைமண்டலத் துளுவ வேளாளர் உயர் நிலைப்பள்ளியின் தமிழ்ப் புலமை நடாத்திய மயிலை மகா வித்துவான் திரு. சண்முகம் பிள் ளை அவர்களிடம் பன்னிரண்டு ஆண்டுக ள் தமிழ்ப்பயின்று சிறந்த தமிழ்ப் புலவரானார். மகா வித்துவான் சண்முகம் பிள்ளை அவர்களைத் தம் தந்தை போன் றே நினைந்து பத்தி செலுத்தி வ ழிபட்டார். தந்தைக்கு ஒப்பாகிய திரு சண்முகம் பின்கா அவகள உலக வாழ்வி னை நீத்தபின் அவர் தம் துணை வியை அவரது விருப்பப்படி தம் தாயைப்போலவே பேணி அன்பு செலுத்தி அவர் தம் இறுதி நாள்வரைக்காத்து வந்தார்

1891இல் சென்னை வந்து ஒரு தொடக்கப்பள்ளியில் ஆசிரியராய் அமர்ந்தார். பின்னர் 1895 இல்ஓராண்டுக் காலம் சென்னை உயர் நீதி மன்ற அலுவலகத்தில் பணியாற்றினார். தமிழோடு இணைந்த உள்ளமுடைய இவர் அதனைவிட்டுத் தள்ளிச் செயின்ட் சேவியர் உயர் நிலைப் பள்ளியில் நான்கு ஆண்டுக் காலமும், பின்னர் நார்த்விக் மகளிர் உயர்நிலைப் பள்ளியிலும், அதன் பிறகு இப் பொழுது நேசனல் பாங்கு இருக்கும் கட்டிடத்தில் இருந்த சிங்கலர்சு கல்லூரியிலும் தமிழ்ப் புலமை நடாத்தினார். 1902 ஆம் ஆண்டு முதல் 1914 ஆம் ஆண்டு வரை, சென்னை வேப்பேரி எசு.பி.சிஉயர் நிலைப்பள்ளி யில் தமிழ் ஆசிரியராய்ச் சிறக்கப் பணி புரித் தார், அக்காலத்தில் பல எதிர்ப்புகளுக்கிடையே பெண்களுக்கு எனத் தோற்றுவித்த இராணி மேரிக் கல்லூரியில் தமிழ்ப்புலமை நடாத்திப் பாடம் சொல்லுவதில் பிறவியிலேயே திறம் படைத்த நமச்சிவாயர், திருமதி டி. லாகே அவர்களுடன் அரும்பாடுபட்டார். இந்த அம்மையார் தாம் வள்ளல் நமச்சிவாயரின் அறிவு, குணநலம் முதலியவற்றைப் பாராட்டி இவர் தம் மணி விழா மலரில் குறிப்பிட்டுள்ளார், திரு. நமச்சிவாயர் ஓய்வு பெறுமுன் சிலகாலம் மாநிலக்கல்லூரியில்தமிழ்ப்பேராசிரியராய்இருந்தார்.

பேராசிரியர் நமச்சிவாயர் அவர்களின் புலமை நலம் அறிந்த சென்னைப் பல்கலைக் கழகத்தினர் 1917 ஆம் ஆண்டு, தமிழ்த் தேர்வுக் குழுவின் தலைமைத் தேர்வாளராய் இருக்கச் செய்தனர். 1920 முதல் 1934ஆம் ஆண்டுவரை அரசினர் தமிழ்க் கல்விக் குழுவின் தலைவராய் இருந் தார். இவர்களது அரிய முயற்சியினாலேயே "7-டி" எனும் தனித் தமிழ் வித்துவான் தேர்வு நிலை உண்டாயிற்று அன்று அந்த வித்தினை இட்டதின் பயனாகத் தான் இன்று பலர் புலவர் பெருமக்களாக விளங்குகின்றனர்; பலவித ஏற்றங்களும் சிறப்புகளும் பெற்றுள்ளனர். தமிழ் வித்துவான் பாட அமைப்புக் குழுவிலும் தேர்வாளர் குழுவிலும் இருந்து சிறந்த பணிகள் ஆற்றினார். அக்குழுக்களில் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கான ஆக்க நெறிகள் பல கண்டனர். தமிழ் நெறிக்கு மாறாக நடக்க ஒருபோதும் நினைக்க மாட்டார். தமிழ் ஆசிரியர்களின் வருவாய் அதிகமாக வேண்டும் என அயராது பாடுபட்டார்.
1906ஆம் ஆண்டு வரை தமிழ்ப் பாடங்களை படிக்க ஆங்கில அறிஞர்கள் எழுதிய பாடங்களையே படிக்க வேண்டிய நிலை இருந்தது. அப்போது தமிழாசிரியர் ஒருவர் வேதனையுற்று, தம்மோடு பணியாற்றி வந்த எவரிடத்தும் பேச மறுத்து வந்தார். அப்போது பள்ளித் தலைமையாசிரியராக இருந்த ஆங்கிலேயர் பேட்ஸ் என்பவரிடம் பள்ளியை விட்டு விலகப் போவதாக தெரிவித்தார்
பதட்டமடைந்த தலைமையாசியர் பள்ளியை விட்டு விலகுவதா? ஏன் எதற்காக? எனக் கேட்டார். தமிழ் கற்கும் மாணவர்களுக்கு முறையான பாடநூல்கள் வெளிவரவில்லை, இல்லையெனச் சொல்லிக் கொண்டே இருப்பதில் பயன் இல்லை. எனவே பாடநூல்களை நானே உருவாக்கத் திட்டமிட்டுள்ளேன். ஆசிரியர் பணிபுரிபவர் பாடநூல்கள் எழுதுத் தடை இருக்கிறது, எனவே ஆசிரியர் பணியை விட்டு விலகிட முடிவு எடுத்துள்ளேன். அதற்கு அனுமதி தாருங்கள் என்றார் நமச்சிவாயர். அதற்கு பேட்ஸ் மறுமொழியாக, "அறிவில் திறமும். அனுபவத்தில் உரமும் பெற்றுள்ள தங்களைப் போன்றவர்கள் மாணவர் பாட நூல்களை

உருவாக்குவது தான் மிகச் சரியானது, ஆசிரியர் பணியில் இருந்து கொண்டே பாடநூல் உருவாக்குவதற்கு நான் அனுமதி வாங்கித் தருகிறேன்" என்றார்..

102 ஆண்டுகளுக்கு முன்னால் 1920-ஆம் ஆண்டு முதல்வகுப்புக்குரிய கா.நமச்சிவாயர் பாடநூலை வெளியிட்டார்.

அதன் பெயர் என்ன தெரியுமா? **"திராவிட பாலபாடம்!"**

ஒரு தமிழாசிரியரால் இயற்றப்பட்டு வெளிவந்த முதல் பாடநூல் இதுதான்.

அதுவரை வெள்ளைக்கார அதிகாரிகளே தமிழ் வகுப்புகளுக்குரிய பாடநூல்களை எழுதி வெளியிட்டுவந்தமையும் பள்ளியில் பணியாற்றும் ஆசிரியர்கள் பணியில் இருக்கும்போது பாடநூல்களை வெளியிடக் கூடாது என அரசு ஆணை இருந்ததும் தகர்த்தெறியப்பட்டது கா.நமச்சிவாயரின் தறுகண்மை மிக்க முயற்சியாலேயே. 20ஆம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் தமிழ்க்கற்க கீழ் வகுப்பு முதல் மேல் வகுப்பு வரை பாட நூல்களை உருவாக்கித் தந்த அந்த தமிழாசிரியரின் முயற்சி பெரும் வெற்றி பெற்றது. அப்பெருமகனார் எழுதிய பாடநூல்கள் அனைத்தும் அப்போது தமிழ் கற்ற பலராலும் ஒப்பற்ற நூலாக பாராட்டப் பெற்றன

.இதன்மூலம் ஈட்டிய வருவாயை பொருள்நலிவுற்ற தமிழாசிரியர்களுக்குக் கொடுத்துவிடுவது அவர் வழக்கம்.இதன்மூலம் தமிழசிரியர்களை இரவலர்நிலைக்குத் தள்ளிவிடுவதில் அவருக்கு விருப்பமில்லை.எனவே தேவையறிந்து அவர்களுக்குக் கடனாகக் கொடுப்பதுபோல் கொடுப்பார்;பற்றுசீட்டும் எழுதி வாங்கிக்கொள்வார்.அவர்கள் பணம் வாங்கி இடத்தைவிட்டு நகர்ந்ததும் பற்றுசீட்டைக் கிழித்தெறிந்துவிடுவார்.அவர்கள் கடனைக் கொடுக்கவந்தால் "எப்போதுமே கொடுத்ததைத் திருப்பி வாங்கும் பழக்கமில்லை." எனக் கூறி மறுத்துவிடுவார்.

கல்லூரிக்கும் அவரின் பாடத்திட்டம் வேண்டுமென குரல்கள் ஒலித்தன. தமிழ்ப்பாடத் திட்டத்தை உருவாக்கிய அந்த தமிழாசிரியர் தமிழுணர்விலும் எழுச்சிமிக்க ஆளுமையாய்த் திகழ்ந்தார். தமிழரெல்லாம் பொங்கல் திருநாளை தமிழர் திருநாளாக க் கொண்டாடக் காரணமான தமிழறிஞர் கா.நமச்சிவாய முதலியார் தான்!



18-5-1935-இல் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் ஒருங்கிணைந்த தமிழறிஞர்கள்

[அடிகளாருக்கு வலப்பக்கம்நமச்சிவாயர்;இடப் பக்கம் திருமதி.மீனாம்பாள் சிவராசு]

தமிழக வரலாற்றிலே அவர் செய்த சிறந்த செய்தி - திருவள்ளுவர் திருநாள் ' தோற்றுவித்தது. தை முதல் நாளைத் தமிழ்த் திருநாளாகக் கொண்டாட வழி செய்தார். திருவள்ளுவருக்கு முன் - திருவள்ளுவருக்குப் பின் என தமிழகத்துக்கு ஒரு நூற்றாண்டுக் காலஅளவுமுறை கிடைக்க வழிவகுத்தவரும் இவரே. இதற்கு உற்ற துணையாக உ.வே.சாமிநாதய்யரும் , மறைமலை அடிகளாரும் இருந்தனர். நமச்சிவாயரது தமிழ்ப்பணி அனைத்துக்கும் பனகல் அரசர் , தமிழவேள் சர் பி.டி.இரா சன், டாக்டர் ஏ.எல்.முதலியார் ,ராசா.சர். அண்ணாமலை செட்டியார் ஆகியோர் பெரும் பங்களிப்புச் செய்துள்ளனர்

சென்னைப் பல்கலைக்கழக மேனாள் துணைவேந்தர் நெ.து.சுந்தரவடிவேலு , சென்னை விவேகானந்தா கல்லூரி தமிழ்த்துறை மேனாள் தலைவர் சி. செகந்நாதாசாரியார், உச்ச நீதிமன்ற மேனாள் நீதியரசர் பி.எ சு.கைலாசம், மேனாள் மத்திய அமைச்சர் ஓ.வி.அளகேசன் , நீதிபதி அழகிரிசாமி , முன்னாள் சென்னை மாநகராட்சி த்தலைவர் எ சு.ராமசாமி ஆகிய பெருமக்கள் பேராசிரியர் கா.நமச்சிவாயரிடம் பயின்ற மாணாக்கர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

இவரது நினைவைப் போற்றும் வகையில் சென்னை மண்ணடி பவழக்காரத் தெருவில் இயங்கும் ஏ.ஆர்.சி.மகளிர் பள்ளியில் நக்கீரர் கழகம் – திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரியின் காப்பாளர் , சிறுவை மோகனசுந்தரம் என்ற அருந்தொண்டர் , ஆண்டுதோறும் பல தமிழ் அறிஞர்களை ஒன்றுதிரட்டி, “நமச்சிவாய நினைவுச் சொற்பொழிவு நிகழ்ச்சியை 1988 வரை நடத்தி பேராசிரியருக்குப் பெருமை சேர்த்தார் என்பதும் , நுங்கம்பாக்கம் ரயில் நிலையம் அருகில் இவர் பெயரால் அமைந்த “நமச்சிவாயபுரம்” என்றும் குடியிருப்புப் பகுதியும் இவரது தமிழ்த்தொண்டுக்குப் பெருமை சேர்க்கின்றன.

**குழந்தை இலக்கிய முன்னோடி**

முதல் வகுப்பு முதல் பத்தாம் வகுப்புவரை தமிழ்ப் பாடங்கள் இயற்றி வெளியிட்ட நமச்சிவாயர் வெற்றிவேற்கை, கொன்றைவேந்தன், ஆத்திசூடி, நாலடியார், திருக்குறள் ஆகியவற்றுடன் தமது பாடல்களையும் சேர்த்துக்கொண்டார்.

எடுத்துக்காட்டாக முதல்வகுப்புப் பாடநூலில் காணப்படும் அவர் இயற்றியுள்ள எறும்பு என்னும் பாடலை வழங்கியுள்ளோம்.

**எறும்பு**

1சின்னச் சின்ன எறும்பே
சிங்காரச் சிற்றெ றும்பே
உன்னைப் போல நானுமே
உழைத்தி டவே வேணுமே

2 பலர் ஒன்றாய்க் கூடுவீர்
பண்டங் களைத் தேடுவீர்
புல மாக நாடுவீர்
புற்றில் கொண்டு போடுவீர்

3.ஒன்றன் பின்னே ஒன்றாய்
ஊர்ந்து போவீர் நன்றாய்
நன்றாய் உம்மைக் கண்டு
நடந்தால் நலம் உண்டு
4.முட்டை கொண்டு மேலே
திட்டை ஏறி னாலே
மட்டிலாத மழையும்
திட்டமாகப் பொழியும்
5.சோம்பலான பிள்ளையே
சுறுசுறுப்பே இல்லையே
தேம்பாமல் நீ வாராய்
சிற்றெறும்பைப்பாராய்

இங்ஙனம் பல்வேறு குழந்தைப் பாடல்களை இயற்றிப் பாடநூலில் சேர்த்துள்ளார்.

- “வள்ளல் கா.நமச்சிவாயர் என்று விளித்தால் தான் தமிழ் உள்ளங்கள் குளிரும். ஏன்? வள்ளல் என்று சொன்னால் மட்டும் சில உள்ளங்களுக்கு முழு நிறைவு அளிக்காது, அவரைத் தாயினும் சாலப் பரிந்தூட்டும் தயாளனுக்கே அறிந்தோர் ஒப்பிடுவர். பௌராணிக காலத்தில் தோன்றி இருந்தால் தமிழ் அன்னையே இம் மண்ணுலகில் சில நாள் தங்க எண்ணி வந்தனள் எனக் கூறி இருப்பர். இக்கூற்றுகள் அனைத்தும் உயர்வு நவிற்சியின் பாற்பட்டன அல்லவே அல்ல; முற்றிலும் உண்மை. காரணங்கள் ஆயிரம் ஆயிரம்; உவமைகளோ நூற்றுக் கணக்கின. ஆனால் அந்த வள்ளல் இப்புவியில் ஒரு சிலருக்கு ஒரு சாதாரணத் தமிழ்ப் பண்டிதராகவே காட்சியளித்தார். இதற்குக் காரணம். தமிழ் மண் தொன்று தொட்டுச் செய்யும் தவறுகளில் ஒன்று.” “என்னும் சிறுவை.நச்சினார்க்கினியரின் மேற்கோளுடன் இக் கட்டுரையை நிறைவுசெய்தல் பொருந்தும்.

## திருவள்ளுவர் திருநாள் – குழப்ப வேண்டாம்

12/1/22-அன்று வெளிவந்த நாளிதழொன்றில் திருவள்ளுவர் திருநாள் வைகாசித் திங்கள் அனுடம்- திருவள்ளுவர் முக்தி தினம் என்பதை அனைவரும் ஏற்றிருந்தனர் எனவும் இதனைத் தை இரண்டாம் நாள் என மாற்றியமை பிழை எனவும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

**எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு.**

(குறள்-அதிகாரம்-43-பாடல் எண் 423)

1) சான்றோர்கள் இறந்ததாகக் குறிப்பிடக் கூடாது.இறைப்பற்றாளர்கள் இறைவனடி சேர்ந்ததாகவோ முத்தி அடைந்ததாகவோ குறிப்பிடுவதும் பகுத்தறிவாளர்கள் புகழுடல் எய்தியதாகக் குறிப்பிடுவதும் மரபு.யாரேனும் ஒருவர் மறைவுற்ற நாளைத் திருநாள் எனக் கொண்டாடுவார்களா?மரபு உண்டா?
2) திருவள்ளுவர் திருநாள் என அவர் புகழுடல் எய்தியநாளைக் கொண்டாடுதல் பிழையல்லவா?
3) இதனைக் குறித்து முத்தமிழ்க்காவலர் முதன்முதலில் சிந்தித்தார்.அன்றைய பெரும்புலவர்களைக் கண்டு கலந்துரையாடினார்.சமயப் பெரியோர்கள் பிறப்பே இல்லா இறைவனுக்குக் கண்ணன் பிறந்தநாள் எனவும் முருகன் பிறந்தநாள் எனவும் பிள்ளையார் பிறந்தநாள் எனவும் கற்பித்துக்கொண்டு வரையறை செய்ததைப் போலவே அன்றைய தமிழ்ப்புலவர்கள் தை இரண்டாம் நாளைத் திருவள்ளுவர் திருநாள் என முடிவு செய்தார்கள்.அவரால் உருவாகப்பட்ட தமிழகப் புலவர் குழு அன்றைய சிறந்த அறிஞர்களாகப் போற்றப்பட்ட பாவாணர், பாரதிதாசன், இலக்குவனார்,மு.வ.,மயிலை சீனி வேங்கடசாமி, நயினா முகமது, ரம்போலா மாசுகரனேசு முதலாக 49 புலவர்களைக் கொண்டது.(நீண்ட வரலாற்றைத் தேவை கருதிச் சுருக்கியுள்ளேன்.)
4) அந்தப் பெரும்புலவர்கள் ஒன்றிணைந்து எடுத்த முடிவின்படி திருவள்ளுவர் திருநாள் தை இரண்டாம் நாளில் தமிழகமெங்கும் சாதி,சமய,கட்சி வேறுபாடின்றி அறுபது ஆண்டுகளுக்கும் மேலாகக் கொண்டாடப்பட்டுவருகிறது.
5) தி.மு.க.ஆட்சி அமைவதற்கு முன்பிருந்தே இங்ஙனம் கொண்டாடப்பட்டு வருவதாலும் கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்கள் தலைமையில் அமைந்த புலவர்குழு வேண்டிக் கொண்டமையாலுமே கலைஞர் இதனை அறிவித்தார்.(காரணம், முத்தியடைந்த நாளைக் கொண்டாடுதல் மரபன்று என்பதாலேயே.)
6) விருப்பமும் விழைவும் உள்ளோர், சமயச்சான்றோர் குருபூசை செய்வதுபோல் நல்லறச் செயல்களை வைகாசி அனுடத்தில் நிகழ்த்துவதிலே நமக்கு மறுப்பில்லை.

7) ஆயின் தை இரண்டாம் திருவள்ளுவர் திருநாள்-பாரதிதாசன், பாவாணர், இலக்குவனார், பன்மொழிப்புலவர் கா.அப்பாதுரையார் என அனைத்துத் தமிழ்ச் சான்றோர்களும் கொண்டாடி மகிழ்ந்த திருவள்ளுவர் திருநாளைக் கொண்டாடுவோம். கட்சி,சாதி,சமய,வட்டார வேறுபாடுகளைக் களைந்தெறிவோம்-வள்ளுவர் பெயரால்!

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தின் சார்பில் இவ் வேண்டுகோள் மடல் மாண்புமிகு முதலமைச்சர், மாண்புமிகு தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர்பார்வைக்குக் கீச்சுரை(Twitter) வழியாக அனுப்பப்பட்டுள்ளது.ஊடகங்களுக்கு மின்னஞ்சல் வழியாகவும் இரண்டாயிரம் தமிழ் ஆர்வலர்களுக்குப் புலனம் வழியாகவும் அனுப்பப்பட்டுள்ளதுடன் முகநூல் தளத்திலும் வெளியிடப்பட்டுள்ளது.

13/1/2022 நாளிட்ட இதழில் செய்தி வெளியிட்ட “விடுதலை “நாளிதழுக்கு நன்றி.

**திருவள்ளுவர்ஆண்டு**

--சிறுவை.நச்சினார்க்கினியன்

[திரு.மோகனசுந்தரம் எனும் இயற்பெயருடைய இப் பெரியார் “நக்கீரர் தமிழ்க் கழகம் “ என்னும் அமைப்பை நிறுவி மாலைநேரத் தமிழ்க் கல்லூரி நடத்திவந்தார். வித்துவான், இளங்கலை,முதுகலை தனிப்பட்ட முறையில் தேர்வு எழுதும் ஆசிரியப் பெருமக்களுக்கு இலவசமாகத் தொல்காப்பியமும் ஏனைய பாடங்களும் தக்க பேராசிரியர்களைக் கொண்டு வகுப்பு நடத்தினார். சிலம்பொலியார்,பேரா.த.ஞானசுந்தரம், பேரா.திருமதி.சரளா இராசகோபாலன் ஆகியோருடன் குறள்நெறிப் பொறுப்பாசிரியரும் இத்தகைய வகுப்புகளை நடத்திப் பலரது உயர்கல்விக்கும் அதன்வழிப் பதவி உயர்வுக்கும் வழிவகுத்துள்ளனர்.கா.நமச்சிவாயர் நற்பணிகளையும் திருவள்ளுவர் திருநாள் கொண்டாடும் பழக்கம் பரவ அவர் ஆற்றிய அளப்பரும் தொண்டினையும் தான் வாழும்வரை எடுத்துரைத்த நச்சினார்க்கினியன் அவர்களை இன்றைய தமிழ்நாடு மறந்துவிட்டது.]

'தை பிறந்தால் வழி பிறக்கும்' என்பது தமிழகத்தின் நெடு நாளைய பழமொழி. சூரியன் சுற்றும் நிலையின் கணக்கினைக் கொண்டு , அந்நாளில் தை முதல் ஆனி ஈறாக ஒரு பகுதியும் , ஆடி முதல் மார்கழி ஈறாக மற்றொரு பகுதியும் விளங்கின . ஆடி முதல் மார்கழி ஈறாக உள்ள காலம் இருள் நிலை கொண்டது. தை முதல் ஆனி ஈறாக கொண்ட காலம் பகல் நிலை கொண்டது. ஆண்டின இரவுக் காலமாகிய ஆடி முதல் மார்கழி ஈறாக உள்ள காலத்தில் அதாவது ஆடிக் காற்றிலும் அடுத்துள்ள ஐப்பசி மழையிலும் , மார்கழிப் பனி யிலும் குளிரிலும் இடர்ப்படும் பொழுது மக்கள் உள்ளத்தில் 'தை பிறந்தால் வழி பிறக்கும் ' என்ற நம்பிக்கை ஒலி பேரொலியாய்க்கேட்கிறது.

இந்த இரவு நிலை மாறிப் பகல் நிலை பெற்றுப் பயன் தரும் தைப் பிறப்பு நாளைப் புத்தாண்டின் புனித நாளாய் , பிறப்பு நாளாய்ப் பழந்தமிழர் கொண்டாடி வந்தனர். இன்றுங்கூட, தைப் பிறப்பைத் தனிப் பெருஞ் சிறப்பாகத் தமிழர்கள் கொண்டாடி வருகிறார்கள். ஆகவே, நாம் தைத் திங்களையே ஆண்டின் முதல் திங்களாய்க் கண க்கெடுத்துச் செயற்படுத்துவோம்.

'தமிழ்நாடு குறிப்பிட்ட ஓர் ஆண்டிற்கு முன்னே இப்படி இருந்தது. பின்னர் இப்படி ஆயது ' என்று சொல்வதற்கு ஓர் ஆண்டுக் கணக்கு இல்லை. மேலை நாட்டினர் கிறித்துவுக்கு முன் இப்படி இருந்தோம் கிறித்துவுக்குப் பின் இப்படி இருக்கிறோம் என்று ஒரு கால அளவை வைத்துக் கொண்டிருக்கின்றனர். நம்மிடமிருந்து நேற்றுப் பிரிந்து சென்று இன்று மலையாளம் என்ற பெயர் தாங்கியுள்ள சேரநாட்டுத் தமிழர்களும் தமக்கென்று ' கொல்லம் ஆண்டு' என்ற கணக்கை வகுத்துக் கொண்டனர். ஆனால் தமிழர்களாய நாமோ அறுபது ஆண்டு வட்டத்திலேயே சுற்றிச்சுற்றி சுழன்று வருகிறோம். இந்த அறுபது ஆண்டு வட்டத்தில் ஒரு குறிப்பிட்ட பிறப்பு அல்லது இழப்பு நிகழ்ச்சி, ஒரு நள ஆண்டில் ஏற்பட்டு, இரண்டு மூன்று நள ஆண்டுகள் சுற்றிக் கழிந்துவிட்டால் எந்த நள ஆண்டில் அந்தப் பிறப்போ இழப்போ ஏற்பட்டது? என்ற மருட்சி ஏற்படவே செய்கிறது. ஆகவே 60 ஆண்டு வட்டத்தில் சுழலாது நமக்கென ஒரு வரலாற்றுக் காலத்தை நாம் வகுத்துக் கொள்ளவேண்டும். பாரதி கூறியது போல் பெயரளவில் தமிழரெனக் கொண்டுவாழ்ந்திருத்தல்நலம்அன்று.

அங்ஙனம் நாம் அமைத்துக்கொள்ளும் தொடர் ஆண்டு நம்மிடை வாழ்ந்த , நமக்கு என்றும் மங் காத புகழினைத் தேடித் தந்த-நாமும் அவரை உலகினுக்கே அளித்து வான்புகழ் கொண்ட-ஒரு தலைமை சான்ற புலவன் பெயரால் , மனித குலத்திற்கு வாழ்க்கை அமைப்பு முறை சட்டத் தையே உருவாக்கி அளித்த உலகக் கவிஞன் திருவள்ளுவர் பெயரால் தொடர் ஆண்டு அமைதல் வேண்டும். அவ்வாறு தொடராண்டு அமைத்து நடைமுறைக்குக் கொண்டு வந்த பின், இனித் தமிழர்களுக்கு ஒரு தொடராண்டில்லை என்ற பேச்சும் இல்லை , குறையும் இல்லை.

சுமார் 45 ஆண்டுகளுக்கு முன்பே இக் குறையினை உணர்ந்த தமிழ்ப் பேரறிஞர்கள் 1935-ல் சென்னைப் பச்சையப்பன் மண்டபத்தில் பேரா சிரியர் கா. நமச்சிவாயர் அமைப்பாளராய் இருந்து கொண்டாடிய திருவள்ளுவர் திருநாளில் , தலைமை வகித்துப் பேசிய ஆசிரியர் மறைமலையடிகளார் பல ஆய்வுரைகளைக் கூறி , முடிவாக, 'எனவே, திருவள்ளுவனார் காலம் 2 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டதென்பது எளிதிற் பெறப்படும். கிறித்து பிறப்பதற்கு 30 ஆண்டுகட்கு முன் திருவள்ளுவர் பிறந்தார் என்பது நான் ஆராய்ந்து கண்ட முடிபாகும் " எனக் கூறி னார்கள்.

. இன்றைய முறைப் படி இதுவரை பல நாள் , கிழமை, திங்கள் இதழ் களில் , ஆண்டு மலர்களில், அழைப்பு இதழ்களில் எல்லாம் மிக வேகமாகத் திருவள்ளுவர் தொடர் ஆண்டு

பரவிவிட்டது. இன்றும் சில இதழ்கள் 'ஸ்ரீ' என்ற சொல்லை விடாது தொடர்ந்து பிடித்திருப் போல, 60 வட்டத்திலேயே சுற்றி வருகின்றன. இனி , அவ்விதழ்களும் உலகத் தோடு ஒட்ட ஒழுகி மாறிவிடும் என்பதில் ஐயம் இல்லை. திரு. ஆ. 2031-குள் (கி.பி. 2000-க்குள்) தமிழகத்தில் உள்ள எல்லா எழுத்தாளர்களும் அறிஞர் பெருமக்களும் இதனையே கடமையாகக் கொண்டு அவரவர்கள் தொடர்பு கொண்டுள்ள ஆட்சிக்கழகங்கள் , மன்றங்கள், படிப்பகங்கள், இலக்கிய நிறுவனங்கள் அனைத்திலும் தங்களது தலைப்புத் தாள்களில் தங்கள் கடிதப் போக்குவரத் துகளிலும் திருவள்ளுவர் ஆண்டினையே இட்டு வழக்கப்படுத்த வேண்டியது அவரவர் கடமையாகும்.

ஒரு சிலருக்கு இத் தொடர் ஆண்டில் ஐயம் இருக்குமாயின் பின்னர் தக்க ஆய்வு தலைப்படுங்கால் நாம் மாற்றிக்கொள்வதில் இழுக்கொன்றும் இல்லை. இதுபோழ்து இருப்பதைக் கொண்டு , தக்கார் எடுத்த ஆய்வினை ஒட்டி உலகத்தோடு பீடு நடை போட்டு முன்னே செல்வோம். தமிழ் இனம் , தமிழ்மொழியின் வளம் திருவள்ளுவருக்கு முன்பு இப்படி இருந்தது ; திருவள்ளுவருக்குப் பின்பு இப்படி ஆயிற்று என்ற முடிபுகளை உலகத்திற்கு எடுத்துச் சொல்வோம்.

“இனி ஒரு விதி செய்வோம் அதை எந்த நாளும் காப்போம் " என்ற பாரதியாரின் தூய மொழிப்படி, இனியாவது அறிஞர்கள் அனைவரும் தங்களது வேற்றுமைகளை மறந்து, தமிழின் பெயரால் ஒன்று கூடி , திருவள்ளுவர் ஆண்டினைப் பரப்புவோம். அதன் மூலம் தமிழ் இனத்திற்கு ஒரு தொடராண்டில்லை என்ற அவச் சொல்லை அழித்தவர்களாவோம். தமிழன் தலை நிமிர்ந்து வரலாற்றுச் சுவடியில் நேரே செல்ல வழி வகுத்தவர்களாவோம். நம்மை உணர்ந்தவர்ளாகவும்ஆவோம்.நாம்ஒற்றுமைக்குவழிவகுத்தவர்களாவோம்.

திருக்குறள் பணி சிறந்தோங்க , தமிழர் அனை வரும் தங்கள் தங்கள் வருவாயில் ஒரு சிறு பகுதியை அரசுக்குப் பகிர்ந்தளித்து ஊக்குவிக்கலாம். திரு. ஆ. 2031-க்குள் குறள் நூல் இல்லாத குடும்பமே தமிழகத்தில் இல்லை என்ற பெருமையைத் தேடிக் கொள்ள வேண்டும். மக்கள்தொகை(பிறப்பு,இழப்பு)கணிப்பிலும் திருவள்ளுவர் ஆண்டினையே கைக்கொள்ளலாம். அத்தகு பெருமையால் குறள் வழி அரசும் , அரசுவழி குறள் நெறியும் சிறப்பெய்தும்.அந்நாளே,"வள்ளுவன்தன்னைஉலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ் நாடு" என்ற பாரதியாரின் பொன்மொழியை உணர்ந்து மகிழும் நன்னாளாகும்.

---நன்றி: ஐந்தாம் உலகத் தமிழ்மாநாட்டு மலர்:407-408

- ○
- ○
- ○
- ○

## திருக்குறளில் வியப்புச் செய்திகள்



**பேராசிரியர் பெஞ்சமின் இலெபோ – பிரான்சு.**

பாரிசு நகரில் பைந்தமிழ்த் தொண்டாற்றிவரும் பேரா.பெஞ்சமின் இலெபோ அவர்களின் பெருமை விரிக்கிற்பெருகும்.மொழியியல் வல்லுநர்; இலக்கணச்செம்மல்;இலக்கியக்கொண்டல்; பாவலர்; நாவலர்;பேராசிரியர்; நம் இதழின் சிறப்பாசிரியர்களுள் ஒருவர்.

பிரஞ்சு எழுத்தாளர் ழூல் வேர்ன் (Jules Verne) - பிரஞ்சு இலக்கியம் அறிந்தோருக்கு நன்கு தெரிந்த பெயர்.கற்பனை உலகில் சிறகடித்துப் பறந்து பற்பல அற்புதக் கதைகளைப் புனைந்த பிரஞ்சு எழுத்தாளர்.அவர் படைப்புகளில் சில : 'பூவுலகின் நடுப்பகுதிப் பயணம் ' ( *Voyage au centre de la terre*), 'உலகிலிருந்து நிலவுக்கு' ( *De la terre à la lune*), 'நிலவைச் சுற்றி' (*'(Autour de la lune*'), ஆழ் கடலில் '20000 அடிக்குக் கீழ் '(' *Vingt mille lieues sous les mers*'), '80 நாள்களில் உலகை வலம் வருதல்' (' *Le Tour du monde en quatre-vingts jours*')...இவை அனைத்தும் வெறும் கற்பனை கலந்த கதைகள் அல்ல ; அறிவியல் - இணைந்த கற்பனையில் புனைந்த - கதைகள். இவற்றில் அவர் எழுதிய பல செய்திகள் -கருத்துருக்கள் (concepts ) பிற்காலத்தில் உண்மையிலேயே நிறைவேறின .

அந்தப் பிரஞ்சு எழுத்தாளர் காலத்துக்குப் பல நூற்றாண்டுகள் முன்னர் வாழ்ந்த நம் தெய்வப் புலவர் திருவள்ளுவர் கற்பனைக் கட்டுக் கதைகள் புனையவில்லை! நாவல் என்று ஏதேதோ வனையவில்லை. ஆனால் அவர் சொல்லிச் சென்றவற்றில் பல கருத்துருக்கள் இன்றைய அறிவியல் உலகில் நிறைவேறி இருக்கின்றன. வியப்பாக இல்லையா!

இதோ ஒரு காட்சி : கட்டிக் கரும்பாய் இனித்தவளை விட்டுப் பிரிந்து செல்ல வேண்டிய நிலை. ஒதல் பிரிவோ பொருள் வயின் பிரிவோ தூதின் பிரிவோ... எந்தப் பிரிவாக இருந்தால் என்ன! பிரிவு பிரிவுதானே ! "செல்லாமை உண்டேல் எனக்குரை ; மற்று நின் வல் வரவு வாழ்வார்க்குரை" என்று சொல்லிப் பார்த்தாள் . அவன் கேட்கவில்லை! வினையே ஆடவர்க்கு உயிர் அன்றோ! கடமையே கண்ணென்று கண்மணியைப் பிரிந்து செல்கிறான் . பிறந்த நாள் தொட்டுத் தன்னை விட்டு அகலாத அவள் நெஞ்சு இப்போது அவனுக்குப் பின்னாலே போகிறது! அந்த நெஞ்சை அழைக்கிறாள் : "அகலாது அணுகாது தீக்காய்வார் போல

உடனுறைந்த நெஞ்சே! என் கண்கள் அவனைப் பார்க்கவேண்டும் பார்க்கவேண்டும் என்று துடிக்கின்றனவே! அவனுக்குப் பின்னாலே போவதுதான் போகிறாய் என் கண்களையும் உடன் கொண்டு போகக்கூடாதா ! அவனைப் பார்க்கவேண்டும் பார்க்கவேண்டும் என்று என்னைத் தின்னுகின்றனவே!" என்றெல்லாம் அங்கலாய்க்கிறாள்!

தலைவன் செல்லும் இடம் எல்லாம் சென்று அவன் காணும் யாவற்றையும் தனக்குக் காட்டும் கருவி இருந்தால் எப்படி இருக்கும்! தலைவியின் காதல் நெஞ்சை வள்ளுவர் இப்படிப் படம் பிடித்துக் காட்டுகிறார் . திருவள்ளுவரின் கருத்துருவில் உருவான அக்காலக் கருவி வேறொன்று இல்லை ... இக்காலத்தே நாம் அடிக்கடிப் பயன்படுத்தும் webcam தானே! எவ்வளவு தொலைவில் இருந்தாலும் நேரில் பார்ப்பதுபோலக் காட்டும் அற்புதக் கருவி அல்லவா அது!

**" கண்ணும் கொளச்சேரி நெஞ்சே இவையென்னைத்**
**தின்னும் அவர்க்காண லுற்று.**" (குறள் 1244). இப்பாடலில் இக்கருவியின் உருபும் பயனும் உடன் தொக்கி நிற்கக் காணலாமே!

இக்காலத்தே பெரியவர்களும் சிறியவர்களும் பாஸ்தா, பிட்சா, ஹம்பேர்கர், 'barbeque ' என்று அலைகிறார்கள். மிகப் பழங் காலத்துக் காட்டு மனிதன் நெருப்புச் சுவை கண்டபின் உணவுப் பொருள்களைச் சமைத்து உண்ணத்தொடங்கும் முன்பு அவற்றைச் சுட்டுச் சாப்பிடத் தொடங்கினான். அதன் எச்சம் தானே - கொழுப்போடு கூடிய இறைச்சியைத் தணலில் இட்டு ச் சுட்டு உண்ணும் இன்றைய நாகரிக 'barbeque ' ! காதலன் வரும் வரை ஊடி நிற்கும் காதலியின் ஊடல் அவனைக் கண்டதும் தீயில் இட்ட கொழுப்புப் போலாகிக் கரைந்து உருகி மறைந்து போகுமாம் என்று காதலியின் ஊடலைக் கிண்டல் அடிக்கிறார் திருவள்ளுவர். இங்கு இவர் குறிப்பிடும் நிணம் தீயிடல் வேறென்ன 'barbaque ' அல்லாமல்.

"நிணந்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ
புணர்ந்தூடி நிற்பேம் எனல்" (குறள் 1260).

திருவள்ளுவர் காட்டும் இன்னொரு காட்சியைப் பார்க்கும் போது ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்டவையாகத் தெரியவில்லை . இக்கால இளசுகளின் கோணங்கித் தனத்தை அப்படியே படம் பிடித்துக் காட்டும் வள்ளுவர் இக்காட்சியை எங்கிருந்து படம் பிடித்தாரோ!

காதலனை (காதலியை)ப் பிரிந்த சோகத்தில் சின்னத் திரையைப் பார்த்துப் பார்த்துக் கண்கள் ஒளி இழக்கின்றன (சின்னத் திரையின் ஒளி வீச்சு அப்படி): திறன்பேசி (smartphone) யில் தேய்த்துத் தேய்த்து விரல்கள் தேய்ந்து போகின்றனவாம் .என்னையா சொல்கிறீர் என்று

கேட்டால் திருவள்ளுவர் குறும்புப் புன்னகையோடு கண் சிமிட்டிய படி ,

" வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்".(குறள் 1261).
வரிக்கு வரிக்கு பொருத்தமாக இல்லையா!

அடுத்துத் திருவள்ளுவர் எனக்கு உணர்த்திய வேதியல் கருத்து . துள்ளி விளையாடிய பள்ளிப் பருவம் ; அறிவியல் செய்முறை வகுப்பு ! ஆசிரியர் செய்து காட்டுவர் நாங்கள் வேடிக்கை பார்ப்போம் ; சோதனைக் குழாயில் அமிலத்தை எடுத்துக்கொண்டார் ஆசிரியர் . 45 ° கோணத்தில் சாய்த்துக்கொண்டார் ; அதில் அமிலம் விட்டார் ; zinc துணுக்குகளை அதில் போட்டார் ; குழாய் வாயிற் பலூனைக் கட்டினார்! சிறிது நேரத்தில் குபுகுபுவெனக் குமிழ்கள் திரண்டன ; பலூன் மெல்ல விரிந்தது : பலூனனை எடுத்து நூல் கட்டிவிட்டார் ; பலூன் மேலே பறக்க தொடங்கியது. ஆசிரியர் விரிவுரை தொடர்ந்தது : zinc உம் அமிலமும் சேர்ந்து வேதியல் வினை புரிந்ததால் 'hydrogen ' வாயு உருவானது ; அது காற்றை விட எடை குறைவாக இருப்பதால் பலூனை மேலே பறக்கச் செய்கிறது... அறிவியல் பாடம் முடிந்துவிட்டது! எங்கள் ஆர்வம் தொடங்கிவிட்டது.

அது போல நாம் செய்து பார்த்தால் என்ன ? ஏழெட்டு வானரங்கள் சேர்ந்தோம் . திண்ணை நகைக் கடை ஆசாரியிடம் கெஞ்சிக் கூத்தாடி மொத்தமான கோலி சோடா புட்டியில் அமிலம் வாங்கி வந்தோம்.அது அடர் கந்தக அமிலம். பலூன் தயார், பேட்டேரியை உடைத்த zinc துணுக்குகள் தயார் ; அமிலத்தின் அடர்த்தியைக் குறைக்க வேண்டுமே ! புட்டியை கையில் பிடித்துக்கொண்டு தண்ணீரை ஊற்றினேன் ... அவ்வளவுதான் மடமடவென்று கையில் சூடு ஏறியது ! நல்ல வேலை புட்டியை நடு ரோட்டில் வைத்துவிட்டு ஒடுங்கடா என்று அலறியபடி நானும் தலை தெறிக்க ஓடினேன் ! பெரிய பட்டாசு வெடித்தது போல வெடிச் சத்தம். ரோடெல்லாம் கண்ணணாடித் துண்டுகள் . அப்போது எல்லாம் எங்கள் தெருவில் போக்குவரத்து அதிகம் இருக்காது . அவ்வளவு மொத்தமான கோலி சோடா புட்டி எப்படி வெடித்தது என்று எங்களுக்குப் புரியவில்லை.

பள்ளிப் படிப்பு முடித்துக் கல்லூரியில் சேர்ந்து வேதியியல் பயிற்சி வகுப்பில் போன போது பயிற்சி ஆசிரியர் : "விழிப்பாக இருங்கள் ... அமிலத்தில் தண்ணீர் ஊற்றக்கூடாது ; தண்ணீரில்தான் அமிலத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்க்கவேண்டும் "என்று கூறினார் ; அப்போதுதான் புரிந்தது கோலி புட்டி சூடாகி வெடித்தது ஏன் என்று . அதிகமாக உள்ளதில்தான் சிறிதாக உள்ளதைச் சேர்க்கவேண்டும் என்கிறார் ஆசிரியர் : அதனைத்தான் நானும் "பாலொடு தேன் கலந்தற்றே " என்று அன்றே கூறினேனே என்று திருவள்ளுவர் கூற "ஆமாம், ஆமாம்" என்று அசடு வழிந்தேன்.

இப்படித் திருவள்ளுவர் எனக்கு ஐன்ஸ்தீனின் இடம் -காலம் (space -time ) பற்றிக் கூறுவார் ; நியூட்டனின் மூன்றாம் விதியைப் பற்றிச் சொல்வார் (Newton 's thrid law ) ; நிலை ஆற்றல் (static energy) ; இயங்கு ஆற்றல் (kinetic enrgy) பற்றி எல்லாம் சொல்லிக் கொடுப்பார் ... இன்னும் பலப்பல உண்டு : பின்னொருகால் வாய்ப்பு வரின் வந்து எடுத்துச் சொல்வேன்.

## திருக்குறள் நெறி

**----பேராசிரியர் கதி. சுந்தரம்**

(23-2-64ஆம் நாள் புதுக்கோட்டைத் திருக்குறள் கழகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவுச் சுருக்கம்)

பேரன்புகொண்டோரே! பெரியோரே! வணக்கம். வாழ்வியலை அமைத்துத் தருகின்ற புலவர் பெருமக்களுள் திருவள்ளுவர் முதன்மை பெற்று விளங்குகின்றார். திருவள்ளுவரின் உயரிய கருத்துக்கள் உலகமக்கள் அனைவரின் உள்ளத்தையும் கவர்ந்து நிற்கக் காண்கின்றோம். தெள்ளிய ஆலின் சிறு பழத்து ஒருவிதை , வளர்ந்து, மரமாகி, மன்னர் தம் பெரும் படைக்கும் நிழல் தந்து நிற்கும் காட்சியைக் காண்கின்றோம். அஃதேபோல், குறள் வெண்பாவால் ஆகிய திருக்குறள், பல்வேறு துறைகளில் உள்ளார்க்கும் அறநெறியை எடுத்தியம்பும் ஆற்றல் பெற்று விளங்குவதைக் காணலாம். காப்பியம் செய்த பெரும்புலவர்களும் அரசியல் தலைவர்களும் சமயக்குரவர்களும் திருக்குறளை எடுத்து மேற்கோள் காட்டி மேன்மை பெறலாயினர். திருக்குறட் கவியருவியிலே திளைக்கும் மாந்தர் இன்பமும் நல்ஒளியும் பெற்றுத் திகழக்காண்கின்றோம். ஒரு காலத்திலே வாழ்கின்ற மனிதன் , இக்கவிதையின் கருத்து இதுதான் என்றுகூறிமுடித்துவிடக்கூடியதன்மை யில் கவிதை அமைவது பெருஞ்சிறப்பினைத் தராது. எக்காலத்தவரும் கவிதையைப் படிக்கும்பொழுது. ஒப்புக்கொள்ளக்கூடிய விழுமிய கருத்தினை உடை யதாய்ப் புதுமை உணர்வுக்கும் இடம்தரத்தக்கதாய் நவில் தொறும் நயம் பயப்பதாய் நூல் அமைதல் வேண்டும். அத்தகைய முறையில் திருக்குறள் அமைந்திருப்பதால்தான், 'எல்லாப் பொருளும் இதன்பால் உள , இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லை ' என்று கூறும் சிறப்பினைப் பெற்று விளங் குகிறது.

'அறம் தகளி, ஆன்ற பொருள் திரி; இன்பு
சிறந்தநெய்; செஞ்சொல்தீ; தண்டு- குறும்பாவா
வள்ளுவனார் ஏற்றினார் வையத்து வாழ்வார்கள்
உள்ளிருள் நீக்கும் விளக்கு'

எனப் புலவர் பாராட்டுவாராயினர்.

'தத்துவம் என்ற தாய்க்கும் பண்பாடு என்ற தந்தைக்கும் பிறக்கும் குழந்தைதான் கவிதை' என்ற அறிஞர் கருத்திற்கேற்ப, தத்துவமும் பண்பாடும் செறிந்தினிது இலங்கும் சீரிய நூல் திருக்குறள் ஆகும்.

திருக்குறள் கூறும் நெறிகள் பல: சிலவற்றை இங்கே காண்போம்.

மனிதன் தன்னைப்பற்றி முதலில் நன்குணர்தல்வேண்டும் என்றும் மனத்தாலும் மொழியாலும்

செயலாலும் தூயனாக இருக்தல் வேண்டும் என்றும் திருக்குறள் நெறி மிகமிகவற்புறுத்துகிறது. இந்த அடிப்படைத் தத்துவத்திலே பல குறள்கள் அமைந்துள்ளன.
முதலில் தன்னைப்பற்றி உணர்தல் வேண்டும் என்பது. பல குறள்களில் இக்கருத்து அமைந்துள் ளது. சிலவற்றை நோக்குவோம்

1 தென்புலத்தார் தெய்வம் விருந்துஒக்கல் தான் என்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.

2 தன்னைத்தான் காக்கின் சினம்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்

3 கெடுவல் யான் என்பது அறிக தன் கெஞ்சம்
நடுஒரீஇ அல்ல செயின்.

4 தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால
தன்னை அடல்வேண்டா தான்.

5 தன்உயிர்க்கு இன்னாமை தான் அறிவான் என்கொலோ
மன் உயிர்க்கு இன்னா செயல்.

முதலிய திருக்குறள்களை நோக்கின் இவ்வுண்மை புலனாகும்

**திருக்குறளை எப்படிக் கற்க வேண்டும்?**



திருக்குறள் செம்மல், முனைவர் இர. பிரபாகரன்

அமெரிக்காவில் திருக்குறள் பரப்புதலே தம் பணியெனக் கொண்டு இணையத்தின் மூலமும் குவியத்தின் வழியாகவும் எழுத்து,பொழிவு மூலம் பரப்பும் திரு.பிரபாகரன் அவர்கள் நம் இதழின் சிறப்பாசிரியர்களுள் ஒருவர்.

மனித வாழ்க்கையில் அறம், பொருள் மற்றும் இன்பம் ஆகிய மூன்றும் உறுதிப்பொருட்கள் என்று கருதப்படுகின்றன. மனிதன் தன் சொல்லிலும் செயலிலும் அறத்தைப் பின்பற்ற வேண்டும். குறிப்பாக, அறவழியில் பொருள் ஈட்ட வேண்டும். அறவழியில் ஈட்டிய பொருளோடு, அன்பும் அறமும் கூடிய இல்லற வாழ்க்கையில் ஆணும் பெண்ணும் இன்பத்தை நுகர வேண்டும். அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்று உறுதிப்பொருட்களைப் பற்றித் திருக்குறளில் வள்ளுவர் தெளிவாகவும் விளக்கமாகவும், கூறியிருப்பதால், திருக்குறள் இவ்வுலகில் மனிதன் வாழ்வாங்கு வாழ்வதற்கேற்ற கையேடாகக் கருதப்படுகிறது. அனைவருக்கும் வையத்து வாழ்வாங்கு வாழ்வதற்கு வழிகாட்டும் நூலாக இருப்பதால், திருக்குறளை அனைவரும் கற்பது இன்றியமையாததாகிறது. இச்சிறந்த நூலை எப்படிக் கற்க வேண்டும் என்று மறைந்த மூதறிஞர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் *வள்ளுவம்* என்ற தன்னுடைய நூலில் நான்கு கருத்துகளைக் கூறுகிறார்.

- மூலத் திருக்குறள் முழுமையும் (உரைகட்கு அடிமைப் படாது) கற்றல்
- திருவள்ளுவர் நெஞ்சறிந்து கற்றல்
- கற்பவர்தம் வாழ்நிலையோடும் தம் காலநிலையோடும் பொருந்திக் கற்றல்
- கற்றபின் நிற்க வேண்டும் என்ற செயல் முனைப்பொடு கற்றல்

**மூலத் திருக்குறள் முழுமையும் (உரைகட்கு அடிமைப் படாது) கற்றல்**

இங்கு இரண்டு கருத்துகள் கூறப்பட்டிருக்கின்றன. ஒரு கருத்து, திருக்குறளை முழுமையாகக் கற்றல். மற்றொரு கருத்து, உரைகட்கு அடிமைப் படாது கற்றல். முதலில், திருக்குறளை ஏன் முழுமையாகக் கற்க வேண்டும் என்பதைப் பார்ப்போம்.

**முழுமையாகக் கற்றல்:** முழுமையாகக் கற்றல் என்பது திருக்குறளில் உள்ள 1330 குறட்பாக்களையும் கற்றல் என்பதைக் குறிக்கிறது. திருக்குறளில் அறம், கல்வி, நட்பு, சான்றாண்மை போன்ற பல அரிய கருத்துகள் பல கூறப்பட்டிருக்கின்றன. இந்தக் கருத்துகள் பல குறட்பாக்களில், பல அதிகாரங்களில் கூறப்பட்டுள்ளன. உதாராணமாக, நட்பைப் பற்றி நட்பு, நட்பாராய்தல், பழைமை, தீ நட்பு, கூடா நட்பு ஆகிய ஐந்து அதிகாரங்களிலும் வேறு சில அதிகாரங்களிலும் கூறப்பட்டுள்ளது. ஆகவே, நட்பைப் பற்றி வள்ளுவரின் கருத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமானால், திருக்குறளை முழுமையாகக் கற்க வேண்டும்.

திருக்குறளை முழுமையாகக் கற்பதற்கு மற்றொரு காரணமும் உள்ளது. உதாரணமாக, ஊழ் என்ற அதிகாரத்தில், வள்ளுவர்,

**ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று**
**சூழினுந் தான்முந் துறும்.** (குறள் – 380)

என்று கூறுகிறார். அதாவது, ஊழ் மிகவும் வலிமையானது என்றும், அதை விலக்குவதற்கு ஒரு வழியை ஆராய்ந்து எண்ணினாலும் அது குறுக்கே வந்து நிற்கும் என்று இந்தக் குறளுக்குப் பொருள். ஆள்வினையுடைமை என்ற அதிகாரத்தில், வள்ளுவர்

**ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்**
**தாழாது உஞற்று பவர்.** (குறள் 620)

என்று கூறுகிறார். அதாவது, அயராது உழைப்பவர்கள் ஊழையும் வென்றுவிடுவார்கள் என்று இக்குறளுக்குப் பொருள். குறள் 380ஐ மட்டும் படித்தால். ஊழ் வலிமையானது என்பது மட்டும் தெரியும், ஆனால், குறள் 380 மற்றும் குறள் 620 ஆகிய இரண்டையும் படித்தால்தான், ஊழ் வலிமையானதாக இருந்தாலும் அதை விடாமுயற்சியால் வெல்லலாம் என்பது தெரியவரும். பல குறட்பாக்களில் உள்ள கருத்துகள் ஒன்றோடொன்று தொடர்புடையவையாக இருப்பதால், திருக்குறளை முழமையாகக் கற்க வேண்டும் என்பது புலப்படுகிறது.

**உரைகட்கு அடிமைப் படாது கற்றல்:** இக்காலத்தில், உரைகளின் உதவியின்றிப் பலராலும் திருக்குறளைக் கற்க முடியாது . ஆகவே, ஒரு உரையை மட்டுமே படிக்காமல், பல உரைகளையும் ஒப்பிட்டுப் படிக்க வேண்டும் . ஆனால்,

உரையாசிரியர்கள் தங்கள் கருத்திற்கேற்ப , கொள்கைகளுக்கேற்ப உரை எழுதுகிறார்கள்.

உதாரணமாக, சிறந்த உரையாசிரியராகக் கருதப்படும் பரிமேலழகர் தன்னுடைய உரையில் எங்கெல்லாம் மதம் சார்ந்த கருத்துகளைத் திணிக்க முடியுமோ அவற்றைத் தவறாமல் திணிக்கிறார்.

**ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய்.** (குறள் 69)

என்ற குறளுக்கு உரையெழுதும்பொழுது , தன்மகன் சான்றோன் என்று தாய்க்குத் தெரிந்துகொள்ளும் அளவுக்கு அறிவில்லை. வேறு எவராவது சொன்னால்தான் அவள் அதைத் தெரிந்துகொள்வாள் என்று கூறுகிறார் . தன் மகனைத் தானே சான்றோன் என்று தாய் கூறுவது அத்துணை ச் சிறப்பானது அன்று . அவனைச் சான்றோன் என்று பிறர் சொல்வதுதான் சிறந்தது.

மேலும்,

**பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த**
**மக்கட்பேறு அல்ல பிற.** (குறள் 61)

என்ற குறளுக்கு , அவர் எழுதிய உரையில் , பெண்கள் அறிவில் குறைந்தவர்களாகையால், அறிவறிந்த மக்கள் என்பது ஆண்களைத்தான் குறிக்கிறது என்று கூறுகிறார்.

இதுபோன்ற காரணங்களால்தான் , பாவேந்தர் பாரதிதாசன் , “பரிமேலழகர் திருக்குறளுக்கு எழுதியது உரையன்று. அது திருக்குறளுக்கு அவர் இட்ட திரை” என்று கூறுகிறார்.

பரிமேலழகரைப்போல், இன்றைய உரையாசிரியர்களும் தங்கள் கருத்துகளுக்கும் கொள்கைகளுக்கும் ஏற்றவாறுதான் உரை எழுதுகிறார்கள். மறுமை என்ற சொல்லுக்கு மறுபிறவி என்று பொருள். எழுமை என்ற சொல்லுக்கு ஏழு பிறப்புகள் அல்லது பல பிறப்புகள் என்று பொருள்கொள்ளலாம். திருக்குறளை ஆழ்ந்து படித்தால், வள்ளுவருக்கு மறுபிறவியி லும், உயிர் பல பிறவிகள் எடுக்கின்றது என்பதிலும் நம்பிக்கை உண்டு என்பது தெளிவாகத் தெரிகிறது . ஆனால், இன்றைய உரையாசிரியர்களில் சிலர், மறுமை, எழுமை போன்ற சொற்களுக்கு வலிந்து , பொருத்தமில்லாத வேறுபொரு ள்களைக் கூறுகிறார்கள். அவ்வாறு வலிந்து பொருள்கூறாமல், வள்ளுவருக்கு மறுபிறவியில் நம்பிக்கை உண்டு என்பதை

ஏற்றுக்கொண்டு, மறுமை என்பதற்கு எதிர்காலம் என்றும் எழுமை என்பதற்கு நீண்ட காலம் என்று இக்காலத்துக்கு ஏற்ற முறையில் பொருள்கொள்ளலாம். ஆகவே,

**எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு** (குறள் 355)

என்ற குறளுக்கேற்ப , பல உரைகளையும் படித்து , ஒப்பிட்டுப் பார்த்து, சிந்தித்து எது நமக்குச் சரியானதாகத் தோன்றுகிறதோஅதை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

**திருவள்ளுவரின் நெஞ்சறிந்து கற்க வேண்டும்**

எப்படித் திருவள்ளுவரின் நெஞ்சறிந்து கற்பது ? திருக்குறளை முழுமையாகப் படித்து, அதிலுள்ள கருத்துகளை ஆழ்ந்து சிந்தித்தால்தான் வள்ளுவரின் நெஞ்சத்தை ஓரளவுக்குப் புரிந்துகொள்ள முடியும்.

**கற்பவர்தம் வாழ்நிலையோடும் தம் காலநிலையோடும் பொருந்திக் கற்றல்**

ஒரு குறளைக் கற்கும் பொழுது , அது சமகால வாழ்வுக்கு எவ்வாறு பொருந்தும் என்று சிந்திக்க வேண்டும் ; நம்முடைய வாழ்க்கை அனுபவங்களோடு அந்தக் குறள் கூறும் கருத்துகளை ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும் . அவ்வாறு சமகால வாழ்க்கைநிலையோடும் நம்முடைய அனுபவங்களோடும் ஒப்பிட்டுப் பார்த்துப் படிக்கும்பொழுதுதான் திருக்குறள் எப்படி இக்காலத்துக்கு ஏற்றது என்று புரிந்துகொள்ள முடியும்.

**கற்றபின் நிற்க வேண்டும் என்ற செயல் முனைப்பொடு கற்றல்**

திருக்குறள் ஒரு நாளிதழ் அன்று ; சிறுகதை அன்று ; புதினம் அன்று . அது நமது வாழ்க்கைக்குப் பயன்படக்கூடிய நூல் . அதைப் புரிந்துகொள்ளாமல் படிப்பதாலோ அல்லது மனப்பாடம் செய்வதாலோ பயனில்லை . படிப்பதைப் புரிந்துகொண்டு , திருக்குறளில் எவையெல்லாம் ஏற்றுக்கொள்ளக் கூடியவையோ அவற்றைப் பின்பற்ற வேண்டும்.

**முடிவுரை:**

திருக்குறள் நமது வாழ்க்கைக்கு ஒரு கையேடு என்பதால் அதைக் கற்கவேண்டும். தமிழனாகப் பிறந்த ஒவ்வொருவரும் திருக்குறளைக் கற்க வேண்டும் . மூதறிஞர் வ. சுப. மாணிக்கம் அவர்களின் கருத்துக்கேற்பத் திருக்குறளைக் கற்க வேண்டும். குறள் கூறும் நெறிகளைப் பின்பற்றி வாழ வேண்டும்.

# குறள்நெறி

மின்னிதழ்:27 தை-19 -தி.பி.2053 பெப்ருவரி-1- பொ.ஆ.2022



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



பொறுப்பாசிரியர் -மறைமலை இலக்குவனார்
இணையாசிரியர் -முனைவர் தமிழியலன்
இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல் கு

## திருக்குறள் வெளிப்படை



-முனைவர் வ. சுப. மாணிக்கனார்

தமிழ் மறுமலர்ச்சி பெறத் தளராதுழைத்த சான்றோருள் ஒருவர். தமிழ்த்துறைத்தலைவர்,கல்லூரி முதல்வர்,துணைவேந்தர் என்னும் பதவித் திரு வாய்த்த சான்றோர்.எனினும் பணிநிறைவு பெற்ற பின் தமிழ்க்காப்புப்பணிகள்,போராட்டங்கள் எனக் களம் கண்டவர்.

திருக்குறள் காலத்தால் ஈராயிரம் பழமைப்பட்டது என்றாலும் கருத்தாற் பழமையுடையதா? ஆம், ஓரளவு கருத்தாலும் பழமைவாடை கொண்டது. நால்வகை பற்றிக் கூறும் அரண் அதிகாரச் செய்திகளும் போர் குறித்த களச் செய்திகளும் வழக்கு வீழ்ந்தன என்றே ஒப்ப வேண்டும்.

"கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்." (774)
"விழித்தகண் வேல்கொண் டெறிய அழித் திமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு.' (775) என வரும் வேல் மறப்போர் இன்றில்லை
"குன் றேறி யானைப்போர் கண்டற்றால்" (758) என்ற மறக்காட்சியும் இன்றில்லை.

**பழமை எவ்வளவு**

காலங்கடந்த அற நூல் என்று போற்றினாலும், திருக்குறளில் பொச்சாப்பு, ஒருவந்தம், புத்தேளிர், மாண்ட, முதுக்குறைவு, உஞற்றுதல் போன்ற சொற் பழமைகள் உண்டு; அருங்கேடன், நன்னீரை, நிறை நீர, எனல் போன்ற இலக்கன வீழ்ச்சிகள் உண்டு, யாருள்ளித் தும்மினீர்; இருட்டறையில் பிணம் தழுவல், சிவிகை பொறுத்தான், அவிசொரிந்து ஆயிரம் வேட்டல் போன்ற மரபு மறைவுகள் உண்டு,இவ்வாறு எடுத்துக்காட்டினும், இரண்டாயிரம் ஆண்டுத் தொன்மை வாய்ந்த திருக்குறளில் பழமைகளும் வீழ்ச்சிகளும் ஓரிரு விழுக்காட்டிற்கு மேல் என்பதையும் ஒப்பவேண்டும். இதற்குக் காரணம் வள்ளுவர் காலத் தமிழ்மொழி, வழக்காயினும் செய்யுளாயினும், செந்தமிழாக இருந்த நிலையாகும். அதனாலன்றோ தொல்காப்பியமும் சங்கப் பனுவல்களும் இன்றும் விளங்குவனவாக உள.அவை பிறப்பாற் காலப்பழமை படிந்தனவேயன்றி மொழி நடையால் இன்றும் சாலப் புதுமை தவழ்வன. இடைக்காலத்துத் தோன்றிய மயக்கு நடைத் தமிழ் நூல்களோடு ஒப்பு நோக்கின், இவ்வுண்மை வெளிப்படையாகும். பழமையான பிறமொழி உலக இலக்கியங்களோடு ஒத்திடினும், நம் தொன்மை இலக்கியங்களின் புதுமைப் பெருவாழ்வு புலப்படும். உலகிற் சிறந்த தொல்லிலக்கியங்கள் தம் மொழியைச் சாகடித்தன; நம் தொன்னூல்களோ எனின், கம்பர் உணர்ந்து பாடியது போலத் தமிழ்மொழியை என்றுமுள மொழியாக்கின.

**உரைப்பொடிகள்**

திருக்குறளுக்குப் பலவுரைகள் வத்துள்ளன; காலந்தோறும் புதுவுரைகள் புறப்படுகின்றன. சில குறள்களுக்கு உரைவேற்றுமைகள் பல்கியுள. பாடவேறுபாட்டாலும், புணர்ச்சி முறையாலும், கொள்கைப் பிடிப்பாலும், தொகையாலும், இலக்கணத் தன்மையாலும், சொற்பொருளாலும் கால இடையீட்டாலும், புலமைமிகையாலும், புலமைக் குறையாலும், நயப்பாட்டாலும், பொருள் வேற்றுமைகள் எழுந்துள.

"இலனென்னும் எவ்வர் உரையாமை ஈதல்

குலனுடையான் கண்ணே யுள." (223)

என்ற குறளுக்கு எழுந்த உரைகளை நோக்கின் நயவுணர்வு தவிர, பொருளுணர்வில் வேறுபாடில்லை என்பது வெளிப்படை வேற்றுமையுரைகளாகப் பரந்து காணப்படும் இடங்களை யெல்லாம் உராய்ந்து பார்ப்பின் அவ்வேற்றுமைகளில் பல காரமிலாப் பொடிபோல உரைப்பொடிகளாக வறிதுபடுவதைக் காணலாம்.

'விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.' (82)

'அறனாக்கம் வேண்ட பாதான் என்பான் பி றனாக்கம்
பேணா தழுக்கறுப் பான்." (163)

சாவா மருந்தாகிய அமிழ்தமானாலும் தனித்து உண்ணக் கூடாது என்ற கருத்தும், ஒருவன் தனித்துண்ணுதலே சாவா மருந்து ஆகும் என்ற கருத்தும் பெரிய வேற்றுமைகளா? அறனும் ஆக்கமும் என்ற உம்மைத் தொகையும், அறத்தினால் ஆகிய ஆக்கம் என்ற மூன்றாம் வேற்றுமைத்தொகையும் என்ன பொருள் வேற்றுமையைச் செய்து விட்டன?

"நெடு நீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடு நீரார் காமக் கலன்."(605)

இக் குறளில் காமக் கலன் என்பதற்கு விரும்பி யேறும் மரக்கலம் எனவும், விரும்பிப் பூணும் அணிகலம் எனவும் பொருள் வேற்றுமை உண்டு இவை கல்லும் பல்லும் போல முரண்பட்ட வேற்றுமை கள் அல்லவே.. இவ்வுரைகள் மூலப்பொருளை மறையா.

"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு." (338)

குடம்பை என்ற சொல்லுக்குப் பொருள் முட்டை என்பார் பரிமேலழகர்; கூடு என்பார் மணக்குடவர். இவற்றையெல்லாம் உரைக்கிளைகள் என்று கொள்ள வேண்டுமேயன்றி மூலத்தை மறைக்கும் உரைத்திரைகள் அல்லது உரை மூடிகள் என்று பெரிதுபடுத்தலாகாது.

**கருத்துப் பூசல்கள்**

திருக்குறளின் ஆசிரியர், காலம், அமைப்புப் பற்றித் தோன்றிய, தோன்றி வளர்ந்துவரும் ஆய்வுப் பூசல்கள் எண்ணிறந்தன. திருக்குறள் ஒருவர் செய்த தனி நூலா, தொகுப்பு நூலா எனவும், பாயிரம் எனப்படும் முதல் நான்கு அதிகாரங்களும் திருக்குறளுக்கு உரியனவா எனவும், காமத்துப் வள்ளுவர் எழுதினரா எனவும், அதிகாரத் தலைப்புகளும் அதிகார வைப்புமுறையும் அதிகாரத்துள் குறள்வைப்பு முறையும் செய்தவர் யார் எனவும் கருத்தோட்டங்கள் உள. கடவுள், தெய்வம், வினை, உயிர், இம்மை,

மறுமை நரகம், வீடு. பிறப்பு,இறப்பு,துறவு,ஊழ் முதலான கொள்கைகள் பற்றியும், சாதி, வேள்வி என்றின்ன ஆரிய வேத நாகரிகக் கலப்புப்பற்றியும், பிறப்பொழுக்கம், அந்தணர், பார்ப்பான், எழுபிறப்பு, அடியளந்தான், இந்திரன், அறுதொழிலோர் நூல் , ஆதிபகவன், மலர்மிசை யேகினான் என்றிவற்றின் பொருள் பற்றியும் கருத்துப் பின்னல்கள் உள

சொற்பழமை, இலக்கண வீழ்ச்சி, மரபு மாற்றம், உரைப்பன்மை, உரை வேற்றுமை, உரைப் பொடி கள், கொள்கைப் பூசல்கள், கருத்து மோதல்கள் , கருத்துப் பிறழ்வுகள் என்றாங்குப் பல சிக்கல்கள் திருக்குறட்கு வந்து கொண்டிருக்கின்றன எனவும் இந்த இருட்டிரைகளை அகற்றி எல்லாரும் ஒப்ப விளக்கந் தந்தாலல்லது திருக்குறளில் தெளிவு பிறவாது எனவும், கண்டாங்கும் பட்டாங்கும் கற்றாரும் ஆய்வாளரும் மொழியாளரும் குறைபரப்பி வருகின்றனர். இவற்றைத் தெளிவிக்க வேண்டும்; வள்ளுவர் நெஞ்சம் நேர் முகமாகத் தெரிய வேண்டும்; உரை வேற்றுமை குறைய வேண்டும் என்ற வேணவா எனக்கும் நிரம்பவுண்டு. இந்நோக்கில் ஆராய்ச்சிகள் நெறிப்படல் வேண்டும் என்ற ஆரா விருப்பம் குறளன்பர்க்கெல் லாம் வேண்டும்; எனினும் அழுந்திய ஆழமான ஓர் உண்மையை வலியுறுத்துவதற்காகவே இக் கட்டுரையை எழுதுகின்றேன். சிலர் நினைப்பது போலக் கருத்துப் போர்கள் பலவிருப்பினும், மேலும் வளரினுங்கூட, அவையெல்லாம் திருக்குறளின் அடிப் படை அறங்களையும் செயலுக்குரிய வாழ்க்கை வள்ளுவங்களையும் தில்லை மறைபோலத் திரையிட்டு மறைக்கவில்லை; குறள் யாப்பு என்ற ஈரடிப் பாத்தி யில் அறநெறிப் பயிர்கள் வெற்றிக்கொடி போல வெளிப்படையாகவே இயல்புக் கண்ணாளர்க்கும் காட்சி தந்து கொண்டிருக்கின்றன. திருக்குறளில் வள்ளுவரின் எண்ணங்கள் வெளிப்படை; அவற்றைக் கற்பதற்கும் கேட்பதற்கும் இயல்பான வழக்குத் தமிழறிவு போதும். இதனால் உரைகளும் விளக் கங்களும் வேண்டா என்பது கருத்தன்று. அவை நம் புலமையையும் அறிவையும் பெருக்குவன. இதுவே அவற்றின் பெரும் பயன் . அவை செயலைத் தூண்டா; செயலார்வத்தைப் பெருக்கா; நெஞ்சினை நேரடியாக இயக்கா; வாழ்வினை உணர்ச்சிப்படுத்தா; உள்ளத்துள் ஊடுருவிப் பாயா.

**குறள் வெளிப்படை**

திருவள்ளுவர் தம் நூலின் விளக்கத்துக்குப் பிற்கால உரைகளை எதிர்பார்த்தோ கட்டுரைகளை எதிர்பார்த்தோ எழுதவில்லை. தம் நூல் தானே விளங்கும், விளங்க வேண்டும் என்ற வெளிப்படை நடையிற்றான் யாத்துள்ளார்.மூலக்குறள்களைப் பன்முறை படிக்கப் படிக்க வள்ளுவர் நெஞ்சுக்கும் நம் நெஞ்சுக்கும் உணர்ச்சித்தொடர்புநெருங்குவதை உணர்கின்றோம்;குறட்சொற்கள் உயிர்நடை பெற்று நம் உள்ளத்திற் பாய்வதை உணர்கின்றோம்;

குறட்சொற்கள் உயிர் நடை பெற்று நம் உள்ளத்திற் பாய்வதைக் காண்கின்றோம்; உரைகள், விளக்கங்கள் என்னும் தீண்டாமைகளைக் கடந்து குறள் வடிவமாக இருக்கும் திருவள்ளுவரின் நெஞ்சத்தினை நம் செயல் நெஞ்சத்தால் தீண்டுகின்றோம். ‘ மக்கள் மெய் தீண்டல் உடற்கின்பம்' என்பது போல மூலக் குறளைத் தீண்டல் வாழ்வின்பம் ஆகும்.

உரையின் றி, விளக்கமின்றித் திருக்குறளின் மூலங்களை அறிந்துகொள்ள இயலாது என்ற ஒரு பெருந் தவறான கருத்து எப்படியோ மக்களுலகிற் பரவிக் கிடக்கின்றது. இது உரையின் குறையன்று;

விளக்கத்தின் குறையன்று; கல்விமுறையின் குறையாகும். காலிருப்பினும் செருப்பின்றி நடக்கவியலாது என்ற கருத்து இன்று இல்லையா? நடக்கக் கூடாது என்ற கருத்துக்கூட பரவக் காண்கின் றோமே. திருக்குறள் தோன்றியகாலத்து உரையும் உடன் தோன்றவில்லை. ஆயிரம் ஆண்டுகள் கழித்து தான் உரை பெருக்கெடுத்தது. மூலத்தைக் கற்கும் முறை வேறு; உரைகளைக் கற்கும் முறை வேறு . மூலத்தின் பயன் வேறு; உரையின் பயன் வேறு . மூலத்தைக் கற்கும் போது வள்ளுவரை நினைக்கின் றோம்; உரைகளைக் கற்கும்போது உரையாசிரியர்களை நினைக்கின்றோம். குறள் மூலத்தின் பயன் செயல்; குறளுரையின் பயன் விளக்கம். ஆதலின், வாழ்வு வேண்டின், செயலியக்கம் வேண்டின், வள்ளுவர் தம் உறவு வேண்டின், திருக்குறள் மூலங்களோடுதான் நமக்கு முதலுறவு வேண்டும். மூலக் குறள்கள் உரைகளைக் காட்டிலும் ஏன், உரைக்கு உரையைக் காட்டிலும் வெளிப்படை.

“தனக்குவமை யில்லா தான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது.”(7)
“நன்றி மறப்பது நன்றன்று; நன்றல்லது
அன்றே மறப்பது நன்று. “(108)
"சொல்லுக சொல்லிற் பயனுடைய, சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்."(200)
“எல்லா விளக்கும் விளக்கல்ல; சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு." (299)
" எண்ணித் துணிக கருமம்; துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு." (467)
“எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்."(666)
“கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம் புலனும்
ஒண்டொடி கண்ணே யுள." (1101)

இவை போலும் நூற்றுக்கணக்கான குறட்பாக்கள் தம் கருத்துகளை இருட்படை செய்யாமல் ஒளிப் படுத்தி நிற்கின்றன. இவற்றின் பொருளை அறிதற்கும் மேற்கொள்ளற்கும் உரைகள் வேண்டுமா? எழுத்தறிவில்லாருங்கூடக் கேள்வியளவில் இவற்றின் கருத்துகளை உணர்ந்து கொள்ளமாட்டார்களா? 'கற்றிலனாயினும் கேட்க' எனவும், ' செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம்' எனவும் அறிவுப்பறை யறைந்த வள்ளுவர் கல்லாரும் கேட்டு விளங்கிக் கொள்ளுமாறுதானே தம் அற நூலை வெளிப்படை நடையில் இயல்பாக எளிதாக யாத்திருப்பார். ஆதலின், வாழ்வும் உணர்ச்சியும் செயலும் வளமும் விரும்பும் தமிழ் மக்கள் திருக்குறளை உரைகளினின்றும் விடுதலைப்படுத்தி மூலக்குறள்களை நேரே தீண்டுவார்களாக. நீரை, உறிஞ்சி(Straw) வழிக் குடிப்பதைக் காட்டிலும் வாய்வைத்துக் குடிப் பதனால் வரும் சுவை பெருஞ்சுவையல்லவா? (நன்றி:உலகத் தமிழ் மாநாட்டு மலர்,மதுரை-1981.பக்.252-254)

**அறம் என்றால் என்ன? -**

**சொல்லாக்கியன்-(சிறப்பாசிரியர்,குறள்நெறி)**

மனித வாழ்வின் பயன் யாது ? காம இன்பம் துய்ப்பதும் , குழந்தை பெறுவதும் , செல்வம் சேர்ப்பதும் என்றால் , அதாவது இன்பமும் பொருளும் என்றால் , மனிதரில் பலரும் வாழ்வின் பயனை அடைந்து விட்டனர் என்றே சொல்லலாம். இவை எல்லாவற்றையும் பெற்றப் பின்பும் , மனம் எதையோ வேண்டி நிற்கின்றதே , அது எது ? அறம். அது விளைவிக்கும் அமைதியும் ஆனந்தமும்தான் வாழ்வின் பண்பும் பயனுமாகின்றது.

திருவள்ளுவர் காலத்தில் , களப்பிரர் காலத்தில் , பௌத்தமும், சமணமும் மேலோங்கி இருந்திருக்க வேண்டும். துறவு வாழ்வும் மிகுந்திருக்க வேண்டும். பெரும்பாலான அத்துறவிகளும் , தங்களின் மிக அடிப்படையான தேவைகளுக்கு, சமூக உழைப்பாளர்களையே சார்ந்திருக்க வேண்டி இருந்திருக்கும். துறவிகள் மிகுந்து , உழைப்பாளர் குறைந்ததால் , சமூகத்தின் சமநிலை கெட்டிருக்கும். சமூக சமநிலையை மீட்க , எக்காலமும் நிலைக்க, ஒரு புதிய **புரட்சிகரமான கருத்தொன்றை**முன்வைக்கின்றார், திருவள்ளுவர். அதுதான், **இல்லறம்**.

சமூகத்தில், கணவன், மனைவி, பிள்ளை என குடும்பமாய் வாழ்ந்தும் , உற்றார், உறவினர், நட்பு, விருந்தினர், சான்றோர் ஆகியோருடன் இனிமையாய் பழகியும் உதவியும் , புலன்களை ஒழுங்குப்படுத்தியும் , மனத்தை தூய்மைப்படுத்தியும், உயிர்மையை உணரலாம், இறைமையை அடையலாம், பிறப்பும் அறுக்கலாம்.

**அறவழியில் பொருள் ஈட்டி, பொருள் கொண்டு இன்பம் துய்த்து இன்பத்தாலேயே வீடு எய்தும் நுணுக்கம்தான் திருக்குறள் காட்டும் இல்லறம்**

மேலும், இளவயதில், துறவு பூணுதல் கடினம். குடும்ப வாழ்க்கைக்கு ஏங்க நேரலாம். தவறான , அறமற்ற வழிகளில் போக நேரலாம். ஆனால், அறவழியில் வாழ்ந்து, அனுபவித்து, பின் முதுமையில் துறவு போதல் எளிது. எனவேதான், அறத்துப்பாலில், இல்லறத்தை அடுத்து, துறவறத்தை இயலாக்கினார்.

'அறம்' என்பதற்கான வரையறையும் , இலக்கணமும், சான்றும் இறைமை என்பதால் , அறத்துப்பாலில், 'கடவுள் வாழ்த்'தை முதல் அதிகாரமாய், திருவள்ளுவர் அமைத்துள்ளார்.

பிரபஞ்சக் கடலே , **அருமை** மற்றும் **பொருண்மை** என இறைமைக்குள் இரண்டாய் இருக்கும்போதும் , அவன் அருமையான உயிர்மையாய் நிலைக்கின்றான். **மனிதரின் உயிர்மை , இறைமையுடன் ஒன்றாமல் , இல்லற வாழ்விலோ, துறவு வாழ்விலோ, பிறப்பறுக்க முடியாது**

, 'அன்பே' எளிமையாக இறைமையை அடையும் குணம். **துறவு வாழ்வில், அன்புக்கு, இயல்பான இடமில்லை. குடும்ப வாழ்வில், அன்பு செலுத்துவது இயல்பானது, எளியது, இனியது**. அன்பால் இறைமையுடன் ஒன்றலாம். **எல்லா இடத்தும், எல்லாரிடத்தும், எல்லா உயிரிடத்தும் அன்பு செலுத்துவதுஇறைமையாகும்.**

துறவறத்தாலாவது, இல்லறத்தாலாவது, இறைமையுடன் ஒன்றியவர் பிறப்பறுப்பர். ஒன்றாதவர் , ஊழ்வினைக்கேற்ப மீண்டும் பிறப்பெடுப்பர்.

அறத்துப்பாலில், கடவுள் வாழ்த்துக்கு அடுத்த அதிகாரமாக , வான் சிறப்பை அமைக்கிறார் , திருக்குறளார். இறைமையின்றி எப்படி இவ்வுலகம் இல்லையோ , அதே போன்று , நீரின்றி உயிர் தோன்றுவதோ , மனித இனம் நிலைப்பதோ இல்லை என்பதால், இச்சிறப்பு.

இறைமையை உணர்வதற்கு , மனித முயற்சியோடு , இறைவனின் அருள் தேவை என்பதுபோல் , இயல்பாக, இயற்கையாக உணவு போதாதபோது , உணவை உற்பத்தி செய்யும் உழவு முயற்சிக்கும் , மழையின் அருள் தேவை.

மழையின்றி, இறைவழிபாடும், உதவியும், ஓகமும், தியானமும், ஒழுக்கமும் சமூகத்தில் நிகழாது, நிலைக்காது.

மழையின், நீரின் முக்கியத்துவத்தை கூறுவதன் மூலம் , மழை பெய்யவேண்டி மரங்க ளைக் காப்பதையும், வளர்ப்பதையும், பெய்த நீர் வீணாகாமல் சேமிக்க வேண்டியும் , உழவுக்கும், குடிப்பதற்கும் பகிர்ந்தளிக்க வேண்டியும், பூமிப்பந்து மிகுந்த வெப்பமாகாமல் தடுக்க வேண்டியும், சமூக செயல்பாடுகளும், ஒழுங்கும் நிலைக்க வேண்டியும் நாம் செயலாற்ற அறிவுறுத்துகிறார், வள்ளுவப் பெருந்தகை.

குடும்ப வாழ்வு தன்னிலையை முன்னிலைப்படுத்துகின்றது. துறவு வாழ்வோ , சமூகநிலையை முன்வைக்கின்றது. ஆனாலும், குடும்ப வாழ்வில் கிடைக்கும் மனைவி , பிள்ளை, நட்பு, உறவால் ஏற்படும் சுகங்கள், துறவு வாழ்வில் கிடைப்பதில்லை. குடும்ப வாழ்வே , இயல்பான தெரிவு. எனவே தான் , இல்லறவியல், துறவறவியலுக்கு முன்னதாக வைக்கப்பட்டுள்ளது. **ஆனால், சமூகத்தின் சீரான இயக்கத்திற்கு, தன்சுகத்தை தியாகம் செய்யும் துறவறமும் தேவைப்படுகின்றது**. இல்லறமா ? துறவறமா?, இது ஒரு மனச்சிக்கல். **முதலில் இல்லறம், பின்பு துறவறம்** என , இச்சிக்கல் தீர்க்கப்படுகின்றது. இரண்டிற்கும் இலக்கு , உயிர்மையை உணர்ந்து , இறைமையில் ஒன்றி, பிறப்பறுத்தல் என்பதும் , முடிவற்ற அமைதியிலும் , நிபந்தனையற்ற ஆனந்தத்திலும் திளைப்பதும்தான். நடைமுறையில், குடும்ப வாழ்வும், சமூக வாழ்வும் பிணைந்த வாழ்க்கை முறைகளும் உள்ளன.

முதுமையில் செய்து கொள்ளலாம் என்று எண்ணாமல், உயிர்மையை உணர்ந்து, இறைமையுடன் ஒன்றும் 'அறம்' என்பதை இன்றிலிருந்தே செய்க. அம்முயற்சியும் பயிற்சியும் , இறைமையுடன் ஒன்றும்போது , ஐயம் நீக்கும் பொலிவான துணையாகும். இறைமையுடன் ஒன்றும்போது அகத்தில் இருந்து இன்பம் வருகின்றது , பிறப்பும் அழிகின்றது. மற்ற இன்பங்கள் அனைத்தும் புறத்தில் இருந்து வருபவை , அவை பிறப்பை அறுக்காது. ஒருவர்

செய்ய வேண்டியது எல்லாம் , புலன்களை அடக்கி , உயிர்மையை உணர்ந்து , இறைமையுடன் ஒன்றும் அறம்தான். இயல்கின்ற இளமைக் காலத்தில் செய்யாமல் , முதுமையில் செய்ய முடியாமல் போனால் , அவர் மீதமுள்ள வாழ்நாள் எல்லாம், பழிதான் மிஞ்சும்.

குடும்ப வாழ்வின் மூலமே எவ்வாறு சிறிது சிறிதாக புலனடக்கி , மனத்தைத் திருத்தி , செயலைக் கட்டுப்படுத்தி, உயிர்மையை உணர்ந்து , இறைமையுடன் ஒன்றலாம் என்று , ஒரு புரட்சிகரமான ஒருங்கிணைந்த மாற்று வாழ்வியலை வடிவமைத்துத் தந்திருக்கிறார் , எம்மான். துறவறத்தால் கிடைக்கும் பலன்கள் எல்லாம் , இல்லறத்தில் எவ்வப்பொழுதெல்லாம் இன்பநலன்களாய் கிட்டுகின்றது என்று , ஒப்பீட்டு ஆய்வினை இல்லறவியல் நெடுக நிகழ்த்துகிறார்.

தன்னலமாக இல்லாமல் , பசித்தவர்க்கும், வறியவர்க்கும், துறவிகளுக்கும், முதியவர்களுக்கும் உதவி , குடும்ப வாழ்வை மேற்கொள்பவரின் பிறப்பும் அறும் என்கிறார் , வள்ளுவர். மனைவியிடமும் , பிள்ளைகளிடமும், நண்பர்களிடமும், உறவினர்களிடமும், விருந்தினரிடமும், பிற உயிர்களிடமும் அன்பாய்ப் பழகினாலேயே , புலனடக்கத்தின் விளைவான , உயிர்மையை உணர்தலும் , இறைமையுடன் ஒன்றுதலும் நிகழும். இயல்பாக , கட்டாயமின்றி, அன்பான குடும்ப வாழ்க்கை வாழ்பவன் , துறவிகளைக் காட்டிலும் சிறந்தவன். **குடும்ப வாழ்வே அறம்** என்கிறார் , குறளடியார். துறவிகள் , தம் பிறப்பறுக்க வேண்டும் எனும் தன்னலத்தவர். ஆனால் , குடும்பனோ, மனைவி, பிள்ளைகள், நண்பர்கள், உறவினர்கள், விருந்தினர், பிற உயிர்கள் என அனைவருக்காகவும், தன்னலனை குறைத்து வாழ்கின்றான். பயனடைந்தவர்கள் யாவரும் , அவனை தெய்வமாகவே மதித்து வணங்குவர்.

ஐம்பூதங்களை அடக்கி ஆட்டுவிக்கும் திறன் , துறவிக்கு மட்டும் கிட்டுவதல்ல. அன்பான வாழ்க்கை நடத்தும் கணவனை மட்டும் வணங்கும் பெண்ணாலும் மழையை நினைத்த நேரத்தில் வரவழைக்கக் கூடிய திறனைப் பெற முடியும். முழுமையாக ஒன்றும் தன்மை , பலவற்றை ஆளும் திறனை அளிக்கின்றது. **நல்ல மனைவியைப் பெறுவதே அறம்**

அறிவறிந்த பிள்ளைகளை , குடும்ப வாழ்வில் பெற்றால் , அது, உலக வாழ்வில் பெறும் எல்லா சுகங்களிலும் , பெருமைகளிலும் சிறந்ததாகும். அப்பெருமையே , மனதை, நன்றியுடன் இறையுடன் ஒன்ற வைத்து , பிறப்பறச் செய்யும். பண்புடைய பிள்ளைகளைப் பெற்றால் , பிறப்பு எடுக்க வேண்டியதாயின், அப்பெற்றோர்களுக்கு தீங்கு நேராது. தம் குழந்தை சிறிய கைகொண்டு அடித்துக் கலக்கிக் குழப்பித் தெறிக்கும் கூழ் , அமிழ்தத்தினும் இனிதாம். குழந்தையின் கூழ் ஒழுகும் கையை பெற்றோர் சுவைத்து எடுக்கையில் ஏற்படும் ஆனந்தம் , இறைமையுடன் ஒன்றுவதற்கு ஈடானது. தம் பிள்ளைகளின் மேனியை மெல்ல தொடுதலும் , அவர்களுடைய அன்பான சொற்களைக் கேட்டு இன்புறுதல் , மெய்யுணர்வை அடை வது போன்றது , மந்திரத்தால் விளையும் தெளிவைப் போன்றது. கல்வியும் , செல்வமும் ஊழின் விளைவுகள் என்பதால் , தம்மைக் காட்டிலும் தம் மக்கள் அறிவு கொண்டு இருந்தால் , மேலும் நன்மையுற , நல்வினையே புரிவர். உலக மக்களும் அவ்வாறே செய்ய

முனைவர். தன் மகனைச் சான்றோன் என கேட்கும்போது , பிள்ளை பெற்ற போது கிடைத்த இன்பத்தைக் காட்டிலும் மிகுதியான ஆனந்தத்தை அடைவாளாம், தாய். **நன்மக்களே அறம்**

மனைவியும், கணவன் மனைவிக்கு பிறந்த பிள்ளைகள் மட்டும் , குடும்ப வாழ்வில் இன்பம் அளிப்பதில்லை. குடும்ப நண்பர்களும் அன்பாலும், பழகும் ஆர்வத்தாலும் இன்பம் சேர்க்கின்றனர். இத்தகைய உலக இன்பம், ஓக தியானத்தில், இறைமையுடன் ஒன்றி விளையும் ஆனந்தத்திற்கு ஒப்பானது. **அறமே முழுமைபெற அன்பைச் சார்ந்திருக்கின்றது** அறத்தை அறியாத மறவர்க்கும் அன்பே காரணமாகின்றது. அன்பில்லாமை , பிறப்பை மீண்டும் உண்டாக்கும். இல்லற வாழ்வு , அன்பில்லாமல், மிகுந்த வலிமையான உடல் உறவினால் கிட்டும் இன்பத்தால் மட்டும் , நிறைவுறாது. அன்பு என்பது உயிரின் இயல்பு. அன்பு இல்லாதவர் , வெறும் எலும்பும் சதையும் தோலால் போர்த்தப்பட்ட பிணமாவர். **அன்பே அறம்** . முகமலர்ச்சியுடன் விருந்தோம்புபவன் இல்லத்தில், செல்வம் மனமுவந்து தங்கும். விருந்தினரின் தேவையறிந்து செய்யும் விருந்தோம்பல் , வேள்விக்கும் ஓக தியானத்திற்கும் ஒப்பானது. **விருந்தோம்பல் அறம்**

இல்லற வாழ்வில் இருந்து , அன்புடன் கூறிய இனிமையான சொல் , துறவு வாழ்க்கையில் , இறைமையுடன் ஒன்றியவரின் அருள் மிகுந்த சொல்லுக்கு, இணையானது. முகத்தில் அமைதி நிலவ, இனிமையாக பார்த்து, மனம் நிறைந்த **இனிமையான சொல்லைக் கூறுதலே அறம்**. இங்கே, துறவறத்தில் உள்ள புலனடக்கம் , மனவடக்கம், செயலடக்கம் ஆகிய யாவற்றையும் ஒருங்கே காணலாம். எல்லார் இடத்தும் இனிமையான சொல்லைக் கூறினால், பிறப்பறும். நல்லதையே நினைத்து , இனிமையாக கூறினால், ஏற்கனவே சேர்ந்துவிட்ட தேவையற்ற குணங்களும் குறையும், அறத்தின் பயனும் விளையும்.

**அறம் எனும் சொல் ஒற்றைப் பொருளைக் குறிப்பது அல்ல** அது பலபொருள் குறிக்கும் ஒரு சொல். இம்மையில் இடையறா இன்பமும் மறுமையில் பிறப்பறுதலும் எய்த வைக்கும் , இறைமையில் ஒன்றுதலும் , உயிர்மையை உணர்தலும், மனம் அடங்கலும், புலன் அடங்கலும், செயல் இல்லாமையும், இவைகளை அடைய துணைபுரியும் நல்ல மனைவி , நன்மக்கள், அன்புடைமை, விருந்தோம்பல், இனியது கூறல் , அடக்கம், ஒழுக்கம், பொறுமை, அருளுடைமை, கொல்லாமை, புலால் உண்ணாமை , வாய்மை, தவம், துறவு, மெய்யுணர்தல் ஆகிய ஊழால் விளைந்த பண்புகள், செயல்பாடுகள், இலக்குகள், வீடுஅடைதல் யாவுமே அறம்.

இறுதிச்சொல்லாக, **எப்பண்பு, எச்செயல் எல்லாம் , புலனடங்கி, மனமடங்கி, உயிர்மையை உணர்ந்து , இறைமையுடன் ஒன்றி இன்பம் எய்தி, பிறப்பறுக்கின்றதோ அவை யாவும் அறமே**



## மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று

முனைவர் இர. பிரபாகரன்

(சிறப்பாசிரியர்,குறள்நெறி)

கழைதின் யானையார் என்ற புலவர், புறநானூற்றில்[1], "ஈயென இரத்தல் இழிந்த செயல்" என்று கூறுகிறார். துறவியாக இருந்தாலும், ஏழையாக இருந்தாலும், யாராக இருந்தாலும் இரத்தல் ஒரு இழிவான செயல் என்பதில் வள்ளுவரும் உறுதியான கருத்துடையவர் என்பது இரவச்சம் என்ற அதிகாரத்தில் உள்ள சில குறட்பாக்கள் மிகத்தெளிவாகக் கூறுகின்றன. "வறுமையால் வரும் கடுந்துன்பங்களை முயன்று உழைத்து நீக்கக் கருதாது, இரந்து நீக்க முயல்வோம் என்று கருதும் கொடுமையைப்போல் கொடுமையானது வேறொன்றுமில்லை (குறள் – 1063). தெளிந்த நீர்போல் சமைக்கப்பட்ட கூழானாலும், தன் முயற்சியால் தான் பெற்றதை உண்ணுவதைப்போல் இனியது வேறொன்றுமில்லை (குறள்-1065)." என்ற கருத்துக்களை அந்த அதிகாரத்தில் காணலாம்.

***இன்மை இடும்பை இரந்துதீர் வாமென்னும்***
***வன்மையின் வன்பாட்டது இல்.*** (குறள் – 1063)

***தெண்ணீர் அடுபுற்கை யாயினும் தாள்தந்தது***
***உண்ணலின் ஊங்கினியது இல்.*** (குறள் – 1065)

உலக இயல்பை வள்ளுவர் நன்கு உணர்ந்தவர். இரத்தல் இழிந்தது என்பதும் உழைப்பால் கிடைத்ததை உண்ணுவதே சிறந்தது என்பதும் நல்ல கொள்கைகளாக இருந்தாலும், சில சூழ்நிலைகளில், சிலர் இரந்து உயிர் வாழும் நிலைக்குத் தள்ளப்படுகிறார்கள் என்பதும் உண்மை. ஆகவே, ஒருவன் தன் உயிரை விடுவதற்குத் துணிவில்லாமல், மானத்தைவிட்டு, இரப்பானேயானால், அவனுக்கு அறிவுரை கூறாமல், அவனைக் கடிந்துரைக்காமல், அவன்மீது இரக்கப்பட்டு, நம்மால் இயன்றதைக் கரவாது (இல்லையென்று சொல்லாமல்) கொடுத்து உதவுவதே சிறந்தது என்பது வள்ளுவரின் கருத்தாக ஈகை என்ற அதிகாரத்தில் காண்கிறோம்.

**ஈ, தா, கொடு**

---

[1] புறநானூறு - 204

ஒரு பொருளை ஒருவர் மற்றொருவரிடமிருந்து கேட்டுப் பெறுவதற்குத் தமிழில் "ஈ", "தா", "கொடு", என்று மூன்று சொற்கள் உள்ளன. இந்த மூன்று சொற்களும் வெவ்வேறு சூழ்நிலைகளில் பயன்படுத்தப்படும் சொற்களாகத் தொல்காப்பியர் காலத்தில் வழக்கிலிருந்தன.

*"ஈ", "தா", "கொடு" எனக் கிளக்கும் மூன்றும்*
*இரவின் கிளவி ஆகு இடன் உடைய*

(தொல்காப்பியம், 927)

*அவற்றுள்,"ஈ" என் கிளவி இழிந்தோன் கூற்றே*
*"தா" என் கிளவி ஒப்போன் கூற்றே*
*"கொடு" என் கிளவி உயர்ந்தோன் கூற்றே*

(தொல்காப்பியம், 928-930)

"ஈ" என்னும் சொல் தாழ்ந்த நிலையில் உள்ளவன் தன்னிலும் உயர்ந்தவனிடம் கேட்டுப் பெறக் கூறும் சொல். "தா" என்னும் சொல் தனக்குச் சமமானவனிடம் ஒரு பொருளைக் கேட்கக் கூறும் சொல். "கொடு" என்னும் சொல் உயர்ந்தவன் தன்னிலும் தாழ்ந்த ஒருவனிடம் சென்று, உதவி கேட்கும்பொழுது கூறும் சொல். உதாரணமாக, மகன் தந்தையிடம் இருந்து ஒரு பொருளைப் பெறவேண்டுமானால், "அப்பா, அதை எனக்கு ஈவாயாக" என்றும், ஒருவன் தன் நண்பனிடம் இருந்து ஒரு பொருளைப் பெறவேண்டுமானால், "நண்பா, அந்தப் பொருளை எனக்குத் தா." என்றும், மகனிடம் உள்ள ஒரு பொருளைத் தந்தை தனக்கு வேண்டுமென்று கேட்க விரும்பினால், "மகனே, அந்தப் பொருளை எனக்குக் கொடு." என்றும் கேட்க வேண்டும். இப்பொழுது, "ஈ" என்ற சொல் அதிகமாக வழக்கிலில்லை. இன்றும், தெலுங்கில் "ஈ" என்ற சொல் வழக்கில் உள்ளது. ஆனால், "ஈ" என்ற சொல்லை வேர்ச்சொல்லாகக் கொண்ட "ஈகை" என்ற சொல், உயர்ந்தவனிடம் தாழ்ந்தவன் ஒரு பொருளைக் கேட்டுப் பெறுவதற்காகப் பயன்படுத்தப்படுவதைக் குறிக்கிறது. அதுபோல், கொடு என்னும் சொல்லை வேர்ச்சொல்லாகக்கொண்ட "கொடை" என்ற சொல் அறிவிலும், ஆற்றலிலும், கலைகளிலும் சிறந்து விளங்குபவர்களைத் தம்மிலும் உயர்ந்தவர்களாகக் கருதி, அவர்களைப் பாராட்டி, அவர்ளுக்கு மன்னர்களும், வள்ளல்களும் பரிசளிப்பதைக் குறிக்கிறது.

**ஈகைக்கு இலக்கணம்**

2016 – ஆம் ஆண்டு, பொருளாதார ஒத்துழைப்பு மற்றும் வளர்ச்சி நிறுவனம் (Organization for Economic Co-operation and Development – OECD is a Consortium consisting of 36 countries) நடத்திய கருத்துக் கணிப்புப்படி, ஐரோப்பாவில் உள்ள பல நாடுகள் தங்கள் மொத்த உள்நாட்டு உற்பத்தியில் (Gross Domestic Product – GDP) 25 முதல் 31 விழுக்காட்டை சமூக நலத்திட்டங்களுக்காகச் செலவழிக்கின்றன. இருப்பினும், அந்த நாடுகளில் 5 முதல் 15 விழுக்காடுவரை உள்ள மக்கள் வறுமைக்கோட்டுக்குள் (வறுமைக் கோடு –Poverty line) வாழ்கிறார்கள். மிகவும் வளமான நாடு என்று கருதப்படும் அமெரிக்காவில் 11.8 விழுக்காட்டு மக்கள்

வறுமையில் உள்ளார்கள் என்று 2018 – ஆம் ஆண்டு நடைபெற்ற கருத்துக் கணிப்பு ஒன்று கூறுகிறது. இத்தனை வளமும், செழிப்பும் உள்ள நாடுகளில், சமூக நலத்திட்டங்கள் இருந்தும், மக்கள் வறுமையில் இருக்கிறார்கள் என்றால், இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் சமூக நலத்திட்டங்கள் எவையும் இல்லாத காலங்களில், தமிழகத்தில் வறுமையில் வாடியவர்கள் இருந்திருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. குறிப்பாக, ஆதரவற்றோர், அநாதைகள், உடல் ஊனமுற்றோர், வேலை வாய்ப்பு இல்லாதோர், மற்றும் ஏழைகள் வறுமையில் வாடி, பசியோடு வாழ்ந்திருப்பார்கள். அவர்களின் பசியைப் போக்குவதும், வறுமையிலிருந்து அவர்களைக் காப்பாற்றுவதும் மற்றவர்களின் கடமையாகக் கருதப்பட்டது. அதனால்தான், வள்ளுவர். ”வறுமையில் வாடுபவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுப்பதே ஈகையாகும். மற்றதெல்லாம் ஒரு குறிப்பிட்ட கைம்மாறு கருதிக் கொடுக்கும் தன்மையதாகும்.” என்று ஈகைக்கு இலக்கணம் வகுக்கிறார் (குறள் – 221).

*வறியார்க்கொன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்*
*குறியெதிர்ப்பை நீர துடைத்து.* (குறள் – 221)

**ஏழையின் பசியைத் தீர்த்தல்**

ஒரு ஏழைக்கு உதவி செய்யும்பொழுது, அந்த உதவிக்கு கைம்மாறாக அந்த ஏழை எதையும் செய்வான் என்று எதிர்பார்க்காமல் உதவி செய்ய வேண்டும். ஒரு ஏழைக்குச் செய்யக்கூடிய உதவிகளில் மிகப்பெரிய உதவி, அந்த ஏழை, பசி என்று வந்து கேட்கும்பொழுது, அவனுக்கு உணவளிப்பதாகும். அதனால்தான், “வறியவர்களின் கடும்பசியைத் தீர்த்தலே, செல்வம் பெற்ற ஒருவன் அச்செல்வத்தைச் சேமித்து வைக்குமிடமாகும்.” என்று வள்ளுவர் கூறுகிறார் (குறள் – 226).

*அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்*
*பெற்றான் பொருள்வைப் புழி.* (குறள் – 226)

பசியால், வாடும் ஏழைகளுக்கு உணவளித்து அவர்களின் பசியைப் போக்குவது சிறந்த செயல். ஏழைகளுக்கு உதவி செய்வதை ஒரு சிறந்த செயலாக எல்லா மதங்களும், எல்லாச் சமுதாயங்களும் கருதுகின்றன. ”ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காணலாம்.” என்ற சொற்றொடர், திருக்குர்ரானில் உள்ளதாகக் கூறப்படுகிறது. தமிழகத்தின் மேனாள் முதலமைச்சர் அறிஞர் அண்ணா அவர்களும், ”ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காணலாம்.” என்று அடிக்கடிக் கூறுவது வழக்கம்.

சங்க காலத்தில் பண்ணன் என்று ஒரு வள்ளல் இருந்தான். அவனுடைய வள்ளன்மையை குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் என்ற சோழ மன்னன், புகழ்ந்து பாடியதாக ஒரு சிறந்த பாடல்[2] புறநானூற்றில் உள்ளது. அப்பாடலில், பண்ணன் பிறரின் பசியைப் போக்குவதில் ஒப்புயர்வற்றவனாக இருந்ததால் அவனை, ”பசிப்பிணி மருத்துவன்” என்று சோழ மன்னன் புகழ்கிறான். அப்பாடலில், மழைபெய்யும் இடத்திலிருக்கும் எறும்புகள் தம் முட்டைகளைத் தூக்கிக்கொண்டு மேட்டு நிலத்திற்கு வரிசையாகச் செல்வதைப்போல் பண்ணனிடமிருந்து

[2] புறநானூறு - 173

உணவைப் பெற்றுக்கொண்டு கூட்டம் கூட்டமாகப் பாணர்கள் செல்வதாகக் கூறி, பண்ணன் பிறரின் பசிக்கு உணவளிப்பதைச் சோழ மன்னன் பாராட்டுகிறான்.

**மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று**

வள்ளுவர் காலத்தில், சமயஞ் சார்ந்த நூல்களின் தாக்கத்தால், சிலர் துறவறம் மேற்கொண்டார்கள். துறவிகளாக வாழ்பவர்கள், இல்லறத்திலிருப்பவர்களிடமிருந்து உணவைப் பெற்றுத் தங்கள் பசியைத் தீர்த்துக் கொள்வது வழக்கிலிருந்தது. துறவறம் மேற்கொள்வது உயர்ந்ததாகவும், பிறரிடம் இரந்து (யாசித்து) உணவைப் பெறுவது துறவிகளுக்கு ஏற்ற நல்ல வாழ்க்கைமுறையாகவும் கருதப்பட்டது. ஏழைகளும், துறவிகளும் உணவு கேட்கும்பொழுது அவர்களுக்கு உணவளிப்பவர்கள் துறக்க உலகம் (சுவர்க்கலோகம்/மேலுலகம்) செல்வார்கள் என்ற கருத்தும் நிலவியதாகத் தெரிகிறது. ஆனால், வள்ளுவர் இந்தக் கருத்துக்களை மறுத்து, துறவிகள் இரந்து உணவைப் பெறுவதை நல்ல வாழ்க்கைமுறையாகக் கருதினாலும், அது தீயது என்று கூறுகிறார். மற்றும், ஈகையால், மேலுலகம் செல்லும் வாய்ப்பு இல்லாவிட்டாலும், ஈதல் ஒரு நல்ல பண்பு என்றும் கூறுகிறார் (குறள் – 222).

***நல்லாறு எனினும் கொளல்தீது மேலுலகம்***
***இல்லெனினும் ஈதலே நன்று.*** (குறள் – 222)

**ஈதலால் இன்பம்**

வறுமையில் உள்ளவர்கள் உண்ண உணவில்லாமல் வருந்தினால் அவர்களுக்கு உணவளிப்பது இன்றியமையாதது என்பதில் எவருக்கும் கருத்து வேறுபாடு இருக்க முடியாது. ஆனால், உணவளிப்பதால் மட்டுமே வறுமையில் இருப்பவனின் வறுமையை நீக்கிவிட முடியாது. அவனுக்கு உடுக்க உடை, இருக்க இடம் போன்ற வேறு தேவைகளும் இருக்கும். ஆகவே, வறுமையில் இருப்பவனுக்குத் தம்மால் இயன்றதை எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல் கொடுத்து, அவனை வறுமையின் பிடியிலிருந்து விலக்குவதை அனைவரும் தம் கடமையாகக் கருத வேண்டும் என்பது வள்ளுவரின் கருத்தாகத் தோன்றுகிறது. ஒருவன் ஒரு பொருளைக் கேட்டுப் பெற்றுக்கொண்டால், அவன் மகிழ்ச்சி அடைவது மட்டுமல்லாமல், அந்தப் பொருளைக் கொடுத்தவனும் மகிழ்ச்சி அடைவான். ஆகவே, எவருக்கும் எதையும் கொடுக்காமல் தம் செல்வத்தை இழக்கும் கொடியவர்கள், ஈகையால் வரும் இன்பத்தை அறியாதவர்களோ என்று வள்ளுவர் வியக்கிறார்.

***ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை***
***வைத்திழக்கும் வன்க ணவர்.*** (குறள் – 228)

செல்வத்தைப் பிறரோடு பகிர்ந்துகொள்ளாதவர்கள் ஈகையால் வரும் இன்பத்தை அனுபவிக்க மாட்டார்கள் என்ற கருத்து புறநானூற்றுப் பாடல் ஒன்றிலும் காணப்படுகிறது. அப்பாடலில், மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார், “செல்வத்தினால் ஒருவன் பெறக்கூடிய பயன் அதைப் பிறர்க்கு அளித்தலேயாகும். அவ்வாறு பிறர்க்கு அளிக்காமல் தானே அனுபவிக்கலாம் என்று ஒருவன் எண்ணினால், அவன் செல்வத்தினால் வரும் பயன்கள் பலவற்றையும் இழந்தவனாவான்.” என்று கூறுகிறார்.

***செல்வத்துப் பயனே ஈதல்***
***துய்ப்பேம் எனினே, தப்புந பலவே.***

(புறநானூறு, 189: 7-8)

**உயர்குடிப் பிறந்தோரின் ஈதல்**

இரப்பவன் தன் வறுமையைக் கூறும்பொழுது, அவன் உள்ளத்தில் வெட்கம், வேதனை, வருத்தம், எதிர்பார்ப்பு போன்ற பல உணர்வுகளோடு போராடிக்கொண்டிருப்பான். அவன் தன் வறுமையைக் கூறுவதற்கு முன்னரே, அவன் தேவையைக் குறிப்பால் உணர்ந்து அவனுக்கு உதவி செய்வது ஒரு அரிய செயல். அதுபோல், ஒருவனுக்கு உதவி செய்யும்பொழுது, இனி அவன் வேறு எவரிடமும் சென்று இரவாத அளவுக்கு அவனுக்கு உதவி செய்து அவன் வறுமையை முற்றிலும் மாற்றுவதும், ஒரு அரிய செயல்தான். இவ்வாறு உதவி செய்யும் பண்புகள் எல்லோரிடமும் இருப்பதில்லை. மிகுந்த வள்ளன்மை உடைய உயர்ந்த குலத்தில் பிறந்தவர்களிடம் மட்டுமே இந்தப் பண்புகள் இயல்பாக இருக்கும் என்று வள்ளுவர் கருதுவதாகத் தோன்றுகிறது. இங்கு குலம் என்பது சாதியைக் குறிக்காமல் ஈகையிற் சிறந்த குடிவழி வந்த மரபைக் குறிக்கிறது.

***இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்***
***குலனுடையான் கண்ணே உள.*** (குறள் – 223)

தங்கள் கற்பனைக்கும் புலமைக்கும் ஏற்றவாறு அறிஞர்கள் பலர் இக்குறளுக்கு உரை எழுதியுள்ளனர். அவற்றுள் பழைய உரையாசிரியர்களின் (பழைய உரையாசிரியர் பதின்மர்: தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிமேலழகர், பரிதியார், திருமலையர், மல்லர், கலிப்பெருமாள், காளிங்கர். நமக்குக் கிடைதுள்ள உரைகளின் ஆசிரியர் ஐவர்: பரிப்பெருமாள் , மணக்குடவர், பரிமேலழகர், பரிதியார், காளிங்கர்.)[3] இரண்டு உரைகள் குறிப்பிடத் தக்கவை., "இரப்பவன் தன் வறுமைத் துன்பத்தைக் கூறுமுன்னரே அவன் வறுமை தீருமாறு ஈகை செய்யும் பண்புகள் உயர்குடிப் பிறந்தவர்களிடம் மட்டுமே உள்ளன." என்று இக்குறளுக்குக் காளிங்கர் என்பவர் உரை எழுதியுள்ளார். "இரப்பவன் வேறொருவரிடம் சென்று தன் வறுமையைக் கூறி இரவா வண்ணம் அவனுக்கு ஈகை செய்யும் பண்புகள் உயர்குடிப் பிறந்தவர்களிடம் மட்டுமே உள்ளன" என்று பரிதி என்பவர் தன் உரையில் குறிப்பிடுகிறார். இரப்பவன் தன் வறுமையைக் கூறுவதற்கு முன்பே , குறிப்பறிந்து அவனுக்கு ஈவதும் , அவன் பிறரிடத்துச் சென்று , மீண்டும் இரவா வண்ணம் அவனுக்கு ஈவதும் , சில மன்னர்களிடமும் , வள்ளல்களிடமும் இருந்த பண்பு என்பது சில புறநானூற்றுப் பாடல்களிலிருந்து தெரியவருகிறது. "இரவலர்களின் உள்ளக் குறிப்பை அவர்கள் முகத்தால் உணர்ந்து , அவர்களின் வறுமையைத் தீர்க்கும் வல்லமை உடையவன்" என்று கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி என்ற பாண்டிய மன்னனின் வள்ளன்மையை இரும்பிடர்த் தலையார் என்ற புலவர் புகழ்கிறார் [4]. [நின்நசை வேட்கையின் இரவலர் வருவர்அது முன்னம் முகத்தின் உணர்ந்தவர்இன்மை தீர்த்தல் வன்மை யானே.(புறநானூ[5]று, 3: 24-26)]

மற்றொரு பாடலில், "உன்னைப் பாடிய செவ்விய நாவால் பிறர் புகழைப் பாடவேண்டிய தேவை இல்லாதவாறு குறையாது கொடுக்கும் ஆற்றல் மிகுந்த எம் அரசே!' என்று குறுங்கோழியூர் கிழார் என்ற புலவர் சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்ற சேரமன்னனைப் புகழ்கிறார்[6].

---

நிற்பாடிய அலங்குசெந்நாப்

பிறர்இசை நுவலாமை

ஓம்பாது ஈயும் ஆற்றல் எங்கோ! (புறநானூறு, 22: 31-33)

இது போன்ற கருத்துக்களை வேறுசில புறநானூற்றுப் பாடல்களிலும் காணலாம்[7]. [புறநானூறு, பாடல்கள் 68, 376][i]




-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-

மின்னிதழ்:28 மாசி-4-தி.பி.2053 பெப்பிரவரி-16- பொ.ஆ..2022

**நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்**





**பாரதிதாசன் திருக்குறள் உரை : வள்ளுவர் உள்ளம்**

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகம்
வெளியிடும்
இலவச இணையத்திங்களிருமுறை
பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்
இணையாசிரியர்: முனைவர் தமிழியலன்

**தோன்றின் புகழொடு தோன்றுக!**

**---முனைவர் இர. பிரபாகரன்**

**மேரிலாந்து, அமெரிக்கா**



ஒருவரின் சிறப்பான சாதனைகள் பலரால் அறியப்பட்டால் அல்லது பேசப்பட்டால் அவர் புகழுடையவராகக் கருதப்படுகிறார். புகழில் பலவிதம் உண்டு. சிலருடைய புகழ் மின்னலைப் போன்றது. அத்தகைய புகழ் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் சிலகாலம் மட்டுமே தோன்றி, பின்னர் விரைவில் மறைந்துவிடும். சிலருடைய புகழ் கதிரவனைப்போல் நிலம், காலம் போன்றவற்றின் எல்லைகளைக் கடந்து விளங்கும். உதாரணமாக, மெய்யியல் அறிஞர்கள் (Philosophers), அறிவியல் வல்லுநர்கள், பெருமைக்குரிய கலைஞர்கள், சிறந்த எழுத்தாளர்கள் போன்றவர்களில் உயர்ந்த சாதனை படைத்தவர்கள் பலராலும் பலநாடுகளில், நீண்ட காலமாக அறியப்பட்டும் பாராட்டப்பட்டும் வருவதால் அவர்களுடைய புகழ் என்றென்றும் உலகெங்கும் நிலைத்து நிற்கும் தன்மையது. பலருடைய புகழ் மின்னலைப்போல் விரைவில் மறையாமலும், கதிரவனைப்போல் என்றென்றும் நிலைத்து நிற்கும் தன்மை இல்லாமலும், இரண்டு வகையான புகழுக்கும் இடைப்பட்டதாக இருக்கும். ஒவ்வொருவரும் தம்மால் இயன்ற முறையில் புகழோடு வாழவேண்டும் என்பது குறளில் காணப்படும் கருத்து.

**புகழின் சிறப்பு**

ஈகையினால் வரும் புகழைத் தவிர உயிர்க்குப் பயன் அளிக்கக் கூடியது வேறு எதுவுமில்லை (குறள் – 231). புகழ்ந்து சொல்கின்றவர் சொல்பவை எல்லாம் வறுமையால் இரப்பவர்க்கு ஒரு பொருள் கொடுத்து உதவுகின்றவரின்மேல் நிற்கின்ற புகழேயாகும் (குறள் – 232).

***ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது***
***ஊதியம் இல்லை உயிர்க்கு.*** (குறள் – 231)

***உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கொன்று***
***ஈவார்மேல் நிற்கும் புகழ்.*** (குறள் – 232)

கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளில், உலகில் பல மாற்றங்கள் தோன்றியுள்ளன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன், பெரிய நகரங்கள் இல்லை. அக்காலத்தில், பெரும்பாலான மக்கள் சிற்றூர்களில் வாழ்ந்தார்கள்; ஒருவரை ஒருவர் அறிந்திருந்தார்கள். இன்று, பலரும் பெரிய நகரங்களில் அடுக்ககங்களில் வாழ்கின்றனர். மக்களிடையே அதிகத் தொடர்பில்லை. பல ஆண்டுகளாக அடுத்த வீட்டிலே இருப்பவர்களைக்கூட மக்கள் தெரிந்துகொள்வதில்லை; அவர்களோடு பழகுவதில்லை. தொலைத்தொடர்பு (Telecommunication), தகவல்த் தொழில்நுட்பம் (Information Technology), தொலைக்காட்சி (Television), இணையம் (Internet), சமூக வலைத்தளங்கள் (Social Networks), போக்குவரத்து (Transportation) போன்ற துறைகளில் ஏற்பட்டுள்ள வளர்ச்சியால் சமுதாயத்தில் பல நிரந்தரமான மாற்றங்கள் தோன்றியுள்ளன. இது போன்ற மாற்றங்களால், மக்கள் ஒருவரோடு ஒருவர் தொடர்புகொள்ளும் முறையில் மாற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன. நேரடித் தொடர்பைவிடத் தொலைபேசி மற்றும் சமூகவலைத்தளங்கள் வழியாக ஒருவர் மற்றவர்களைப் பற்றித் தெரிந்துகொள்கிறார்கள். ஒருவருடைய ஈகையால் அவரிடம் வந்து இரப்பவனுக்கு நன்மை உண்டு. ஈகையால், கொடுப்பவர் மகிழ்ச்சி அடையலாம். ஆனால், இன்றைய சூழ்நிலையில் ஈகையால் ஒருவன் புகழடைவதற்கு அதிக வாய்ப்பில்லை. அவனுடைய ஈகை பலருக்கும் தெரிந்து, பலராலும் பாராட்டப்பட்டாலும், அதனால் வரும் புகழ் நிலையானதாக இருப்பதற்கும் வாய்ப்பில்லை. பெருஞ்செல்வந்தர்கள் ஒப்புரவு செய்கிறார்கள். அவர்கள் ஒப்புரவைப் பற்றி வெளிவரும் விளம்பரங்களால் அவர்கள் புகழடைகிறார்கள். இந்தப் புகழும் நிலையானதாக இருப்பதில்லை.

”ஈகையால் வரும் புகழைத் தவிர உயிர்க்குப் பயன் அளிக்கக் கூடியது வேறு எதுவுமில்லை”, என்றும் ”புகழ்ந்து சொல்கின்றவர் சொல்பவை எல்லாம் வறுமையால் இரப்பவர்க்கு ஒரு பொருள் கொடுத்து உதவுகின்றவரின்மேல் நிற்கின்ற புகழேயாகும்.”, என்றும் வள்ளுவர் கூறுவது இக்காலத்துக்கு ஏற்ற கருத்தாகத் தோன்றாவிட்டாலும், ஈகையின் சிறப்பையும் அதனால் வரும் புகழையும் வலியுறுத்துவதற்காக அவர் இவ்வாறு கூறியதாகக் கொள்வது பொருத்தமானதாகத் தோன்றுகிறது.

நிலையற்ற இவ்வுலகில் அழியாமல் நிலைத்து விளங்குவது உயர்ந்த புகழைத் தவிர வேறொன்றுமில்லை (குறள் – 233).

***ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்***
***பொன்றாது நிற்பதொன்று இல்.*** (குறள் – 233)

எல்லோருடைய புகழும் நிலைத்து நிற்குமா என்பது ஆய்வுக்குரியது. ஒருவன் தன் வாழ்நாட்களில் ஈகை (Charity), ஒப்புரவு (Philanthropy), கலை, கல்வி, வீரம், இலக்கியம், அரசியல், விளையாட்டு போன்ற துறைகளில் சிறந்து விளங்கினால், அவன் சாதனைகளைப் பற்றி அறிந்தவர்கள் அவனைப் பாராட்டுவார்கள். அவன் புகழுடையவனாகக் கருதப்படுவான். அவன் இறந்த பிறகும் சில காலம் அவனைப் புகழ்ந்து பேசுவார்கள். அவனுடைய புகழ், சில ஆண்டுகளில் அல்லது சில தலைமுறைகளுக்குப் பிறகு மக்களுடைய மனத்தில் இருந்து மறையக்கூடும். ஆனால், மிகச் சிறந்த சாதனை புரிந்தவனாக இருந்தால், அவனுடைய ஈடு இணையற்ற உயர்ந்த புகழ் நீண்ட காலம் நாடு, மொழி, இனம் ஆகிய எல்லைகளைக் கடந்து, காலத்தையும்

கடந்து நிலைத்திருக்கும். புத்தர், சாக்ரடீஸ், இயேசு கிறிஸ்து, காந்தியடிகள் ஆகியோரின் புகழை வள்ளுவர் கூறும் உயர்ந்த புகழுக்கு எடுத்துக்காட்டாகக் கருதலாம்.

**புகழுடையார் எய்தும் மேன்மை**

இந்நிலவுலகின் எல்லைக்கண்ணே ஒருவன் நிலைத்துநிற்கும் புகழுக்குரிய செயல்களைச் செய்வானாகில், தேவருலகம் தன்னிடமுள்ள தேவரைப் போற்றாமல் அவனையே போற்றும் (குறள் – 236). புகழ் பெருகும்பொழுது கேடுறுதலும், புகழ் நிலைக்கச் செய்து சாதலும் பேராற்றல் மிக்கவர்க்கன்றி மற்றவர்க்கு இயலாது. (குறள்-235).

***நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்***
***போற்றாது புத்தேள் உலகு.*** (குறள் – 234)

***நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்***
***வித்தகர்க் கல்லால் அரிது.*** (குறள் – 235)

தேவருலகம் தேவர்களைப் போற்றாமல் நிலைத்துநிற்கும் புகழுக்குரிய செயல்களைச் செய்பவர்களையே போற்றும் என்று வள்ளுவர் கூறுவது, நிலையான புகழுக்குரிய செயல்களைச் செய்பவர்களின் பெருமையை அவர் பாராட்டுவதைக் குறிக்கிறது. சிலர் ஈகை, கொடை போன்றவற்றால் பிறர்க்கு உதவி செய்வதைத் தம் கடமையாகக் கருதி, அவற்றால் தமக்குக் கேடு வந்தாலும், சாவே வந்தாலும் அவற்றைத் தொடர்ந்து செய்யத் தயங்குவதில்லை. உதாரணமாக, கர்ணன் வந்தோர்க்கெல்லாம் வாரிவழங்கும் கொடைவள்ளலாகத் திகழ்ந்ததாக மகாபாரதத்தில் கூறப்படுகிறது. இந்திரன் ஒரு ஏழைப் பார்ப்பனனைப்போல் வந்து, கர்ணனின் உயிர்க்குப் பாதுகாவலாக உள்ள கவசத்தையும் காதணியையும் தனக்குக் கொடுக்குமாறு கேட்டவுடன் கர்ணன் எவ்விதத் தயக்கமும் இன்றி, அவற்றை இந்திரனுக்குக் கொடுத்துத் தன்னுடைய அழிவுக்கு வழி தேடிக்கொண்டதாக மகாபாரதம் கூறுகிறது. தனக்குப் புகழ் வேண்டுமென்று கர்ணன் கொடை கொடுக்கவில்லை. கர்ணனின் கொடை அவனுடைய புகழ் வளர்வதற்கும், வீழ்ச்சிக்கும் காரணமாக இருந்தது.

ஒருவனுடைய புகழ் வளரும்பொழுது அவன் கேடடைவதும், இறுதியாக அவனுடைய புகழே அவனுடைய சாவுக்கும் காரணமாக இருப்பதற்குச் சங்க இலக்கியத்திலும் ஒரு சான்று உள்ளது (புறநானூறு – 110). சங்க காலத்தில், பாரி என்று ஒரு குறுநில மன்னன் முன்னூறு ஊர்களைக்கொண்ட பறம்பு நாட்டை ஆட்சி புரிந்தான். அவன் கடையெழு வள்ளல்களில் ஒருவன். கொடையில் சிறந்தவனாக இருந்ததால், அவனுடைய புகழ் தமிழகம் முழுதும் பரவியிருந்தது. அதைக் கண்டு பொறாமை அடைந்த மூவேந்தர்களும் அவனோடு போர்புரிந்து அவனை அழிப்பதற்காக அவன் இருந்த பறம்பு மலையை முற்றுகை இட்டனர். பல நாட்கள் முற்றுகை இட்டும் அவர்களால் பாரியை வெல்ல முடியவில்லை. அப்பொழுது, பாரியின் நண்பரும் அவைக்களப் புலவராகவும் இருந்த கபிலர், “நீங்கள் எத்தனை நாட்கள் முற்றுகை இட்டாலும், உங்களால் பாரியை வெல்லமுடியாது. அவன் தன் நாட்டில் இருந்த முன்னூறு ஊர்களையும் வந்து கேட்டவர்களுக்குக் கொடுத்துவிட்டான். இப்பொழுது பறம்பு நாட்டில் உள்ளதெல்லாம், பாரியும் எம் போன்ற புலவர்களும்தான். நீங்கள் பரிசிலரைப்போல் பாடி வந்தால் பாரியையும், எம் போன்ற புலவர்களையும் பறம்பு மலையையும் பெறலாம்.” என்று கூறினார். அதற்கேற்ப, மூவேந்தர்களும் பாணர்களாக வந்ததாகவும், அவர்களைக்

காணவந்த பாரியை அவர்கள் கொலை செய்ததாகவும் கூறப்படுகிறது. பாரி புகழுக்காகக் கொடையை மேற்கொள்ளவில்லை. அவனுடைய கொடையால் அவன் தன்நாட்டை இழந்தான். முடிவில் அவனுடைய இறப்புக்கும் கொடையே காரணமாக அமைந்தது. வள்ளுவர் கூறுவதைப்போல், ”நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்” என்பதற்கு பாரியின் வாழ்க்கை ஒரு எடுத்துக்காட்டு.

கர்ணன் ஒரு கற்பனைக் கதாபாத்திரம். பாரியைப் பற்றிய செய்தி இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்தியது. ஆனால், அண்மைக்காலத்தில், தாழ்த்தப்பட்ட தமிழர்களிடையே பகுத்தறிவையும் சுயமரியாதையையும் பெருக்குவதற்காகவும், மகளிரின் உரிமைக்காகவும், முன்னேற்றத்திற்காகவும் போராடியவர் தந்தை பெரியார். தந்தை பெரியார் புகழுக்காக எதையும் செய்யவில்லை. அவருடைய செயல்களால் அவர் புகழ் வளர்ந்தது. அதே சமயம், அவர் தன் செல்வத்தை இழந்தார்; பலமுறை சிறைக்குச் சென்றார். புகழ் வளரும்பொழுது கேடுறுவதற்குத் தந்தை பெரியாரின் வாழ்க்கையும் ஒரு எடுத்துக்காட்டு.

**புகழ் இல்லாதவர்களின் தாழ்வு**

ஒருவன் பிறரால் புகழப்படுவதும் இகழப்படுவதும் அவனுடைய செயல்களால் நடைபெறுபவை. அதனால், தமக்குப் புகழ் உண்டாகுமாறு அதற்கேற்ற செயல்களைச் செய்யாதவர்கள், அதுபற்றித் தம்மைத் தாமே நொந்துகொள்ளாமல் பிறரை நோவது ஏன் (குறள் – 237)?

***புகழ்பட வாழாதார் தம்நோவார் தம்மை***
***இகழ்வாரை நோவது எவன்?*** (குறள் – 237)

புகழ் என்பது ஒருவருடைய செயல்களைப் பொறுத்தது. ஒரு செயலைச் சிறப்பாகச் செய்வதால் ஒருவர் புகழ் பெறுகிறார். உதாரணமாக, ஒரு அலுவலகத்தில் பணியாற்றும் ஒருவர், மிகச் சிறப்பாகப் பணிபுரிந்தால் அவருடைய மேலதிகாரிகள் அவரைப் பாராட்டுவர்கள். அவருக்குப் பதவி உயர்வும் கிடைக்கலாம். அவருடைய செயலால் அவருக்குப் புகழ் கிடைக்கிறது. அதே அலுவலகத்தில் பணிபுரியும் மற்றொருவர் சிறப்பாகப் பணியாற்றாவிட்டால் அவர் கண்டிக்கப்படுவார். அவர் பணியிலிருந்து நீக்கப்படலாம். தனக்குப் புகழ் கிடைக்கவில்லையே என்று சிறப்பாகப் பணிபுரியாதவர் சிறப்பாகப் பணிபுரிந்து புகழ் பெற்றவரையோ அல்லது அவர் பணியாற்றிய நிறுவனத்தில் உள்ள மற்றவர்களையோ நொந்துகொள்வதால் என்ன பயன்? புகழ் கிடைக்கும் முறையில் பணியாற்றாததற்காக அவர் தன்னைத்தான் நொந்துகொள்ள வேண்டும். இதைத்தான், வள்ளுவர் ”புகழ்பட வாழாதார் தம்நோவார் தம்மை இகழ்வாரை நோவது எவன்?” என்று கேட்கிறார்.

தமக்குப் பிறகும் எஞ்சி நிற்கும் புகழைப் பெறாவிட்டால், உலகத்து மக்கள் அனைவருக்கும் அது ஒரு பழியாகும் என்று அறிஞர்கள் கூறுகின்றனர். புகழோடு வாழ்வதே மக்களின் கடமை என்பது வள்ளுவரின் கருத்து (குறள் – 238).

***வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்***
***எச்சம் பெறாஅ விடின்.*** (குறள் – 238)

எஞ்சி நிற்பது எச்சம். ஒருவன் இறந்த பிறகு எஞ்சி இருப்பது அவனுடைய செல்வம், மக்கள் மற்றும். அவனுடைய புகழ். ஓருவன் புகழோடு வாழாவிட்டால், அவன் இறந்த பிறகு அவனுடைய புகழ் எஞ்சி இருப்பதற்கு வாய்ப்பில்லை. ”இசையென்னும் எச்சம்” என்பதற்குப் ”புகழ் எனப்படும் எஞ்சி நிற்பது” என்று பொருள். ஒருவன் இறந்த பிறகு அவனுடைய புகழ் எஞ்சி நிற்காவிட்டால் அது அவனுக்குப் பழியாகும் என்கிறார் வள்ளுவர். ஆகவே, வாழும்பொழுது புகழோடு வாழ வேண்டும் என்பதில் வள்ளுவர் உறுதியான நம்பிக்கை உடையவர் என்பது பெறப்படுகிறது.

வசை (பழி) ஏற்படாமல் வாழ்பவரே உயிர் வாழ்பவராவர். புகழ் பெறாமல் வாழ்பவர்கள் உண்மையில் உயிரோடு இருந்தாலும் அவர்கள் வாழாதவர்களாகவே கருதப்படுவர் (குறள் – 240).

***வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய***
***வாழ்வாரே வாழா தவர்.*** (குறள் – 240)

”வசையொழிய வாழ்வாரே வாழ்வார்” என்பதிலிருந்து பழி இல்லாமல் வாழ்பவர்கள்தான் உண்மையிலேயே வாழ்பவர்கள் என்பது பெறப்படுகிறது. “இசையொழிய வாழ்வாரே வாழாதவர்” என்பதிலிருந்து புகழ் இல்லாமல் வாழ்பவர்கள் உண்மையிலேயே வாழாதவர்கள் என்பது தெரிகிறது. இந்த இரண்டு கருத்துக்களையும் இணைத்துப் பார்த்தால், பழியில்லாமல், புகழோடு வாழ்பவர்கள்தான் உண்மையிலேயே வாழ்பவர்கள் என்பது வள்ளுவரின் கருத்தாகத் தோன்றுகிறது. சிலர் பழி, புகழ் இரண்டும் இல்லாமல் வாழலாம். அத்தகைய வாழ்க்கையை வள்ளுவர் சிறப்பானதாகக் கருதவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இயேசு கிறிஸ்து, காந்தியடிகள் போன்றவர்கள்கூட சிலரால் பழிக்கப்பட்டார்கள். ஆகவே, பழியில்லாமல் வாழமுடியுமா என்பது ஆய்வுக்குரியது.

புகழ் இல்லாத உடலைச் சுமந்த நிலம் தன்னுடைய பழிப்பில்லாத வளமுள்ள விளைச்சல் குன்றும் என்ற கருத்தையும் வள்ளுவர் கூறுகிறார் (குறள் – 239).

***வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா***
***யாக்கை பொறுத்த நிலம்.*** (குறள் – 239)

”மன்னன் செங்கோல் செலுத்தினால் மாதம் மும்மாரி மழை பொழியும்”, ”நல்லோர் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லோர்க்கும் பெய்யும் மழை” போன்றவை தமிழ் நாட்டில் நெடுங்காலமாக நிலவிவரும் நம்பிக்கைகள். பொதுவாக, ”மக்கள் நல்லவர்களாக இருந்தால், அந்த நாடு வளமானதாக இருக்கும். மக்கள் நல்லவர்களாக இல்லாத நாட்டில், நிலம் வளமானதாக இருக்காது.” என்ற கருத்தைச் சில சங்க இலக்கியப் பாடல்களிலும் காணலாம். உதாரணமாக, ஆடவர் நல்லவர்களாக இருந்தால் அந்த நாட்டில் நிலம் நல்ல விளைச்சலைத் தரும் என்ற கருத்தைக் கூறும் ஔவையார் இயற்றிய பாடல் (புறநானூறு – 187) ஒன்று புறநானூற்றில் உள்ளது. ஆடவர்கள் நிலத்தை உழுது, வேளாண்மை செய்வதால், ஔவையார் தன்னுடைய பாடலில் ஆடவரை மட்டும் குறிப்பிடுகிறார். ஆண்கள் மட்டுமல்லாமல், பொதுவாக, மக்கள் கடினமாக உழைப்பவர்களாகவும் ஆற்றலும் அறிவும் உள்ளவர்களாகவும் இருந்தால் நிலம் நல்ல விளைச்சலைத் தரும்

என்றும் நாடு செழிப்பாக இருக்கும் என்றும் இப்பாடலுக்குப் பொருள் கொள்ளலாம். இதுபோல், கலித்தொகையில் உள்ள ஒருபாடல் (கலித்தொகை – 39, 12-14), ”அல்லல் புரிந்தொழுகும் குடிமக்கள் வாழும் மலைநாட்டில் நிலத்தடியில் வள்ளிக்கொடியின் கிழங்கு வீழாது; மலைமேல் தேன்கூடுகள் உண்டாகா; தினைக்கொல்லையில் கதிர்கள் வளமாகத் தோன்றா.” என்று கூறுகிறது. மக்கள் கடின உழைப்பும், ஆற்றலும், விடாமுயற்சியும், தாங்கள் பணியாற்றும் துறையில் சிறந்தவர்களாகவும் இல்லாவிட்டால் அவர்களுடைய நாடு வளமானதாக இருக்காது என்பது வள்ளுவருடைய கருத்தாகத் தோன்றுகிறது.

ஒரு துறையில் முற்பட்டுத் தோன்றுவதானால் புகழோடு தோன்ற வேண்டும்; அத்தகைய சிறப்பு இல்லாதவர் அங்குத் தோன்றுவதைவிடத் தோன்றாமலிருப்பது நல்லது (குறள் – 236). (பேராசிரியர் மு. வரதராசனார்)

***தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்***
***தோன்றலின் தோன்றாமை நன்று.*** (குறள் – 236)

இந்தக் குறளுக்கு விளக்கம் அளிப்பதில் உரையாசிரியர்களிடம் கருத்து வேற்றுமைகள் காணப்படுகின்றன. உதாரணமாக, “மக்களாய்ப் பிறக்கின் புகழுக்கு ஏதுவாகிய குணத்தோடு பிறக்க; அக்குணம் இல்லாதார் மக்களாய்ப் பிறத்தலின் விலங்காய்ப் பிறத்தல் நன்று.” என்று பரிமேலழகர் உரை எழுதுகிறார். பழைய உரையாசிரியர்கள் சிலரும் இதே கருத்தைத் தம் உரைகளில் குறிப்பிடுகின்றனர். நம்முடைய பிறப்பு நம்முடைய கட்டுப்பாட்டுக்குள் இல்லை. பிறக்கும்பொழுது எவரும் புகழோடு பிறக்க இயலாது. ஆகவே, “பிறக்கும்பொழுது புகழுக்கு ஏதுவாகிய குணங்களோடு பிறக்க.” என்ற பரிமேலழகர் உரையும் அத்தகைய கருத்துள்ள உரைகளும் பொருத்தமானவையாகத் தோன்றவில்லை. பல உரைகளையும்விட பேராசிரியர் மு. வரதராசனார் அவர்களின் உரை சிறப்பானதாகத் தோன்றுகிறது. அதாவது, ஒரு செயலைச் செய்வதற்கு ஒருவன் முன்வந்தால், அவன் அந்த செயலைச் செய்வதில் புகழ்பெற்றவனாக இருக்க வேண்டும் என்பது ஏற்புடைய கருத்து. எதிலும் எங்கும் தோன்றுங்கால் புகழுடன் தோன்ற வேண்டும் என்பது இக்குறள் கூறும் கருத்து. இது போன்ற கருத்து, ஔவையார் இயற்றிய புறநானூற்றுப் பாடல் (புறநானூறு – 315) ஒன்றிலும் காணப்படுகிறது. அப்பாடலில், “போர் இல்லாதபொழுது, அதியமான் அமைதியானவன். வீட்டு இறப்பிலே செருகிய தீக்கடை கோல்போல் தன் ஆற்றல் வெளியே தோன்றாது அமைதியாய் அடங்கி இருக்கும் இயல்பு அதியமானிடம் உண்டு. தன் ஆற்றல் வெளிப்படத் தோன்ற வேண்டுமிடத்து, அவன் அக்கோலால் கடையப்பட்ட சுடர்த்தீப்போல் வெளிப்படத் தோன்றவும் செய்வான்.” என்று ஔவையார் கூறுகிறார். அதாவது, போர் இல்லாதபொழுது அமைதியாக இருக்கும் அதியமான், போருக்குச் செல்லும்பொழுது அதற்குரிய ஆற்றலோடும் புகழோடும் தோன்றுவான் என்று ஔவையார் கூறுகிறார். ஔவையார் அதியமானைப் பற்றிக் கூறுவது வள்ளுவரின் குறளோடு ஒத்திருப்பது குறிப்பிடத்தகக்கது.

**முடிவுரை**

ஈகையால் வரும் புகழைவிட மக்களுக்குப் பயனுள்ளது வேறு எதுவுமில்லை. புகழ்ந்து சொல்கின்றவர்கள் புகழ் என்று சொல்பவை எல்லாம் வறுமையால் இரப்பவர்களுக்கு ஒரு பொருள் கொடுத்து உதவுகின்றவரின்மேல் நிற்கின்ற புகழேயாகும். நிலையில்லாத இவ்வுலகில் உயர்ந்த புகழைத் தவிர நிலைத்து நிற்பது வேறொன்றுமில்லை. தேவருலகம் தேவர்களைப் போற்றாமல், புகழடைந்தவர்களையே போற்றும்.

புகழ் பெருகப்பெருக தான் கேடுறுவதும் சாவதும் பேராற்றல் மிக்கவர்க்கே இயலும். புகழோடு வாழாதவர்கள் பிறரை நொந்துகொள்ளாமல் தன்னையே நொந்துகொள்ள வேண்டும். ஒருவன் இறந்த பிறகு, அவனுடைய புகழ் அவனை எஞ்சி நிற்க வேண்டும். அத்தகைய புகழ் பெறாதவர்களுக்கு அது ஒரு பழியாகும். பழியின்றிப் புகழோடு வாழ்பவர்களே உண்மையிலே வாழ்பவர்கள். புகழ் இல்லாதவர்களைத் தாங்கி நிற்கும் நிலம் தன் வளத்தை இழக்கும். ஒரு செயலைச் செய்ய முன்வந்தால் அதற்குரிய புகழோடு வர வேண்டும். அத்தகைய புகழ் இல்லாவிட்டால், அச்செயலைச் செய்ய முன்வராமல் இருப்பது நல்லது.

**பாரதிதாசன் திருக்குறள் உரை : வள்ளுவர் உள்ளம்**



அகர முதல வெழுத்தெல்லா மாதி

பகவன் முதற்றே யுலகு .

என்பது பாட்டு .

அகரம் முதல எழுத்து எல்லாம் ஆதி பகவன் முதற்று ஏ உலகு . என்பது அப்பாட்டின் சொற்களைப் பிரித்துரைத்தது

பொருள் : அகரம் முதல - அகரத்தை முதலாக உடைய , எழுத்து - எழுத்துக்களும் , எல்லாம் - அவ்வெழுத்துக்களாலாகிய சொற்களும் , அச்சொற்களால் பெறப்படும் பொருள்களுமாகிய எல்லாம் . ஆதி - முதன்மையினின்று தோன்றியவை . உலகு பகவன் முதற்று - மக்கள் பகலனை முதல்வனாகக் கொள்ளத் தக்கவர் .

கருத்து : உலகும் , உயிர்களும் , மற்றுள்ளவைகளும் ஆதி என்பதினின்று தோன்றியவை . ஆயினும் உலக மக்கள் பெறத்தக்க பேறு மெய்யுணர்வு ஒன்றே .

வள்ளுவர் உள்ளம் என்னும் இவ்வுரையின் மேல் எழும் ஆத்திக நாத்திக வினாவும் விடையும் வருமாறு :

ஆத்திகன் : பகவன் என்பதற்கு மெய்யுணர்வு , அதாவது அறிவு என்று பொருள் கூறிக் கடவுள் என ஒருவர் இல்லை என்று ஆக்க எண்ணுகின்றீரா ?

உரை ஆசிரியர் : ஆமாம் அறிவான தெய்வமே என்று தாயுமானாரும் , அறிவை அறிவது பொருளென அருளிய குருநாதா என்று அருணகிரிநாதரும் ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே மெய்யுணர்வில்லாதவர்க்கு என்று இந் நூலாசிரியரும் போல .

நாத்திகன் : அறிவு ஒன்றே பெறத்தக்கது என்று கூறிக் கடவுள் ஒருவர் உண்டு என்பதை உறுதி செய்கின்றீர்களா ?

உரை ஆசிரியர் : பெறத்தக்கது அறிவு என்று நான் , உண்மை உரை கூறினேன் . அதனால் கடவுள் ஒருவர் உண்டு என்று ஆய்விடாது . அப்படி ஆய்விடுமானால் ஆய்விடட்டும் . அதனால் உமக்கென்ன முழுகிப்போகும் ?

ஆத்திகன் : மக்கள் பெறத்தக்கது அறிவு என்று மட்டும் கூறிய நீவிர் அறிவாகிய கடவுள் என்று ஏன் கூறவில்லை ?

உரை ஆசிரியர் : கடவுள் என்ற சொல் மக்கள் அறிவு பெறாத காலத்தில் ஏற்பட்டதாய் இருக்கலாம் . கடவுள் கடந்தது ; அறிவுக்கு எட்டாதது என்ற அதன் பொருளையும் நோக்குக . எட்டாத ஒன்றுக்குப் பெயர் எப்படி எட்டியிருக்கும் ? இவைகளைக் கருதியன்றோ வள்ளுவர் தம் நூலில் கடவுள் என்ற பெயரையே எடுத்தாளாது விட்டார் .

நாத்திகன் : சாங்கியம் என்பது ஒரு , மதமா ?

உரை ஆசிரியர் : இல்லை . தமிழர் பால் தொன்று தொட்டு இருந்து வரும் பண்பாடு . இடையில் திருவாரூர்க் கபிலர் எண்ணூல் என்ற பெயரால் நூலாக இயற்றி யருளினார் .

நாத்திகன் : அந்தப் பண்பாடுகளை அடிப்படையாகக் கொண்டே அக்கால நூல்கள் உண்டாகும் என்பதை விளக்க முடியுமா ?

உரை ஆசிரியர் : மேல் என்றால் வானத்தை நோக்கி அண்ணாந்து பார்ப்பது இந்நாள் வழக்கம் . இந்நாளில் ஏற்படும் நூற்களும் அதை அடிப்படையாகக் கொண்டுதான் உண்டாகும் . கீழ்ப்புறத்திற்கும் மேல் என்பது பொருந்தும் என்று கொண்டு கீழ்நோக்கார் . அதுபோலவே அக்காலத் தமிழர்கள் இந்த உலகம் என்றைக்கு உண்டானது என்று ஆராய்வது பயனற்ற வேலை என்பார் , உலகம் ஆதியினின்று முதன்மையினின்று தோன்றிற்று என்றார் ! அந்தக் கருத்தின் , - பண்பாட்டின் அடிப்படையில்தான் அக் கால நூற்களும் அமைந்தன . உலகம் ஒருவனால் உண்டாக்கப்பட்டது என்பதை அடிப்படையாகக் கொண்டு நூல் அமையாது . இதுதான் சாங்கியத்தின் அடிப்படையில் குறள் உண்டாயிற்று எனப்பட்டது . சாங்கியம் மதமன்று . அது எவராலும் உண்டாக்கப்பட்டது அன்று . அக்கருத்துக்களின் தொகுதியே எழுதாக்கிளவி எனப்பட்டது . எழுதியபின் எண்ணூல் என்றார்கள் . எண்ணூல் பல மொழியில் பெயர்க்கப்பட்டது . ஆரியர்- திபேத்தியர் முதலியவர்களால் பலவாறு திரித்து எழுதப்பட்டது . சாங்கியக் கருத்துக்கள் இயற்கையோடு இயைந்தவை . பகுத்தறிவுக்கு ஒத்தவை . ஆதலால் தான் அக்கருத்துக்கள் தத்துவ நூற்கள் என எழுந்த அனைத்திற்கும் அடிப்படையாகி மிளிர்கின்றன .

மதம் , சமையம் என்று சொல்லப்படுவன அனைத்தும் ஒருவனால் - ஒரு கொள்கையை நோக்கி மக்களை இழுக்க உண்டாக்கப்படுவன . சாங்கியம் - கருத்துக்கள் - பண்பாடுகள் எவராலும்- எவரைத் தம்பக்கம்

இழுக்கவும் ஆக்கப் பட்டன அல்ல என்பதை உணர்வார் அதை மதம் என்றார் என்பதை நீவிர் இங்கு நினைவிற் கொள்க .

ஆத்திகன் : எழுத்தெல்லாம் அகரத்தை முதலாகக் காரணமாகக் கொண்டவை . அதாவது அகரத்தினின்றே மற்ற எழுத்துக்கள் உண்டாயின , அது பெரியோர் கொள்கையல்லவா ?

உரை ஆசிரியர் : எழுத்துக்கள் அனைத்தும் ஓம் என்றதினின்று தோன்றியவை என்று விளக்கிய மாணிக்க நாயக்கர் சிறியோரா ? அன்றியும் , அ முதல் ஔ வரைக்குமுள்ள உயிர்கள் பனிரண்டு . அவற்றில் ஓர் எழுத்திலிருந்து மற்றவை தோன்றின என்பது எப்படிப் பொருந்தும் ? காலில் விலங்கும் கையில் விலங்கும் உடல் மறைய ஒரே வகைச் சட்டையு மாய்ச் சிறையில் இருக்கும் பனிரண்டு குற்றவாளிகளில் ஒருவன் மற்றவரை ஆக்கினான் எனில் அதற்கு என்ன அடையாளம் ? என்ன ஆதாரம் ? சொல்லத்தான் வேண்டும் என்று மதமக்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள் . இவையெல்லாம் ஊற்றுக்கு நிற்காது .

ஆத்திகன் : எழுத்துக்களில் நான் அகரமாய் இருக்கிறேன் என்று கண்ணபிரானே சொல்லவில்லையா ?

உரை ஆசிரியர் : ஆமாம் கண்ணபிரான் மக்களை இருட்டில் வருக என்று அழைக்கிறான் . நாம் ஏன் போகவேண்டும் ? வள்ளுவரைப் பின்பற்ற வேண்டுவது வையத்தின் கடனன்றோ ?

ஆத்திகன் : இந்த அதிகாரத்திற்குக் கடவுள் வாழ்த்து என்று இருந்ததை நீவிர் உலகின் தோற்றம் என்றது என்ன ?

உரை ஆசிரியர் : இதுதான் வள்ளுவர் உள்ளம் . கடவுள் வாழ்த்து இடையில் ஏற்பட்ட வேலை .

நாத்திகன் : முதல் நான்கு அதிகாரங்கள் வள்ளுவர் அருளிச் செய்தனவா ?

உரை ஆசிரியர் : இல்லை என்று வ . உ . சிதம்பரனார் எண்ணுகின்றார் . நான் அவ்வாறு எண்ணவில்லை . உரை முழுவதும் நீர் படித்த பின் நான் சொல்லுவது உண்மை என்று உமக்கே தோன்றலாம்.( குயில் 1.12-59 )

**விரிவாகக் காண்பதற்கு:**

பாரதிதாசன் திருக்குறள் உரை [ ஆய்வும் பதிப்பும் ] டாக்டர் ச . சு . இளங்கோ பாரிநிலையம் ,184.பிராட்வே சென்னை 600108 ,முதல் பதிப்பு : டிசம்பர் -1992

---மு.சண்முகம் பிள்ளை

**சமத்துவப் பேச்சு**

சமத்துவம் என்பது எல்லாருக்கும் ஒத்த, ஏற்றத்தாழ்வற்ற , ஒரே சீரான உரிமைகளை உணர்த்துவதற்கு இப்பொழுது வழங்கப்படுகிறது .

*மாதர் தம்மை இழிவுசெய்யும்*
*மடமையைக் கொளுத்துவோம் !*
*வைய வாழ்வு தன்னில் எந்த*
*வகையினும் நமக்குளே*
*தாதர் என்ற நிலைமை மாறி*
*ஆண்களோடு பெண்களும்*
*சரிநிகர் சமானமாக*
*வாழ்வம் இந்த நாட்டிலே*

என்று நம் தேசியகவி சுப்பிரமணிய பாரதியார் இசைக்குமாறு . சரி நிகர் சமானம் என்பது தான் சமத்துவம் . பாரதியார் பாடும் இந்த விடுதலைப்பாட் டில் ஆண் பெண் சமத்துவம் வற்புறுத்தப்படுகிறது நாட்டில் பெண்கள் அடிமைகளாய்க் கருதப்பட்ட முன்னைய நிலைமையும் சுட்டிக் காட்டப்படுகிறது .

இங்கே நாம் காணப்போவது தெய்வப் புலமைத் திருவள்ளுவர் காலத்துச் சமுதாய நிலை . எனவே , பண்டைக் காலச் சூழல் , பண்டைய இலக்கியங்கள் , பண்டைய வரலாற்றுச் சின்னங்கள் . மரபுவழி வழக்காறுகள் முதலியவற்றையும் துணையாகக் கொண்டு திருவள்ளுவ தேவர் தந்த திருக்குறளில் ஆண் பெண் சமத்துவ நிலையைச் சீர்தூக்கிக் காணல் பொருத்தமாம் . ஆனால் , அந்த அளவு விரிவாக நோக்குதற்கு உரிய ஆற்றலும் அவகாசமும் எனக்கு இல்லை . இயன்ற அளவு திருக்குறள் எல்லையிலேயே பெரும்பாலும் நின்று பார்க்க முற்படுகிறேன் .

**சமத்துவம் என்ற சொல்லின் பிறப்பு**

ஒத்த உரிமைபற்றிப் பேசும்போதே பேசப்படும் பொருள்களிடையே வேறுபட்ட தனித் தன்மைகளும் இருத்தல் புலப்படும் . எல்லாம் ஒத்து இருந்தால் அப்பொழுது சமத்துவம் என்ற பேச்சுக்கே இடமில்லை.பெரும்பான்மையும் பண்பு ஒத்து இருக்கின்ற இரு பொருள்களிடத்தில்தான் ஒற்றுமைக் கூறுகள் மிகுதியும் காணப்படும் . இந்த இருபதாம் நூற்றாண்டு உலகியல் வாழ்வில் நாடு , மக்கள் , மொழி , இனம் முதலிய வேற்றுமை குறைந்து எல்லாருக்கும் ஒத்த உரிமையும் , ஏற்றமிகு நல் வாழ்வும் ஏற்பட வேண்டுமென்று சான்றோர் விரும்புகின்றனர் . இத்தகு சீரிய நோக்கில் பொதுநலத்திற்குப் பாடுபட முன்வந்த பெரியார்களால் சமாதான சகவாழ்வு -- அமைதியுடன் கூடி வாழ்வது- என்னும் எண்ணமும் எழுச்சியும் மக்களிடையே பரப்பப்பட்டபோது , சமத்துவம் என்னும் சொல் பெருவழக்காயிற்று . சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதியில் இச்சொல் இடம் பெறாமையினால் இது மிக அண்மைக் காலத்தில் வழக்கிற்கு வந்ததென்பது தெளிவுறும் . 1937 - ஆம் ஆண்டு வெளிவந்த மதுரைத் தமிழ்ப் பேரகராதியில் இச் சொல் இடம் பெற்றுள்ளது . இதற்குச் சமநிலை , சமமான தத்துவம் என்னும் பொருள்களை இவ்வகராதி தந்துள்ளது இதைப் பின்பற்றிப் பின்வந்த ஆனந்தவிகடன் அகராதி முதலியனவும் இச் சொல்லையும் பொருளையும் எடுத்தாண்டுள்ளன.

**சமத்துவப் பொருளில் இலக்கிய வழக்காறுகள்**

சமத்துவம் என்னும் பொருளில் சமநிலை என்னும் சொல் வழக்காறு காலத்தால் முந்தியதே . தண்டியலங்காரத்திலும் தொல்காப்பியப் பொருளதிகாரத்திற்குப் பேராசிரியர் எழுதிய உரையிலும் இச்சொல் இடம் பெறுகிறது . சமநிலை , சமதை , சமம் , நிகர் , ஒப்பு முதலிய பல சொற்கள் இப்பொருள் தருவனவே .
திருவள்ளுவர் திருக்குறளிலே ஒக்க ( 490 ) , ஒக்கின் ( 1100 ) , ஒக்கும் ( 972 , 1112 ) . ஒத்தது ( 214 ) , ஒத்தல் ( 993 ) , ஒத்தாங்கு ( 561 ) , ஒத்தி ( 1119 ) , ஒப்ப ( 702 ) , ஒப்பது ( 162 , 536 , 621 ) , ஒப்பர் ( 413 , 730 ) . ஒப்பாரி ( 1071) , ஒப்பு ( 800 , 812 , 993 ) என்னும் சொற்கள் இடம் பெற்றுள்ளன . ஒத்தநிலை - சமநிலை என்னும் பொருளில் சமன் ( 118 ) என்னும் சொல்லும் திருக்குறளில் ஓரிடத்து வந்துள்ளது .
*சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்*
*கோடாமை சான்றோர்க் கணி* ( 118 )
என்னும் இத்திருக்குறள் நடுவு நிலைமை அதிகாரத்தின் எட்டாம் பாடலாக உள்ளது .” நடுவு நிலைமையாவது பகை , நொதுமல் , நண்பு என்னும் மூன்று பகுதியிலும் அறத்தின் வழுவாது ஒப்ப நிற்கும் நிலைமை”ஆகும் என்பர் . எல்லாருக்கும் ஒப்ப நிற்கும் சமநிலையை நடுவு நிலைமை அதிகாரத்தில் காண்கிறோம் ,

**வள்ளுவர் நூலின் பொதுமை**

மக்கள் வாழ்க்கைக்கு வழி வகுத்துக் காட்டும் நூல்களுள் வள்ளுவர் தந்த பொதுமறை ஈடு இணையற்று விளங்கும் தனிப்பெரும் சிறப்புடையது என்பது அறிஞர் பலரும் ஒருமுகமாகக் கண்ட உண்மை .

*வையம் புகழ்ஞானி வள்ளுவன் மக்களெலாம்*
*உய்யும் படிமுப்பால் ஓதினான் - ஐயமின்றி*
*இம்மை மறுமை இரண்டுக்கும் நோவழியைச்*
*செம்மையிற் கண்டு தெளிந்து*
என்று கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை போற்றி உரைக்கிறார் .
இல்வாழ்க்கை சமநிலை காட்டும் மக்கள் வாழ்வு என்பது ஆண் , பெண் கூடிப் புரியும் இல்லற வாழ்வின் அடிப்படையில் அமைவதல்லவா?நூலின் தொடக்கத்தே ஆடவரும் பெண்டிரும் நடத்தும் இல்வாழ்க்கையில் நூலைத் தொடங்குகிறார் வள்ளுவர் பெருந்தகை. கருத்தொருமித்த காதலர் வாழ்வில் இன்பத்தைக் காமத்துப்பாலில் விளங்க உரைத்து நூலை முடிக்கிறார்.ஆணும் பெண்ணும் ஒத்திணங்கி வாழும் வாழ்வியல் கூறுவதனால் நூலின் முதன்மைப் பகுதி இருபாலாரின் சமத்துவ வாழ்வினை உணர்த்துவதாகும் என்று பொதுப்படையாகக் கூறலாம் .
ஆண் - பெண் ஒத்து இணைந்து புரியும் காதல் வாழ்வினை . *“இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு அன்பொடு புணர்ந்த ஐந்திணை”* ( தொல் , பொருள் . களவு - 1 ) என்று போற்றுகிறார் இலக்கிய மரபுரைக்கும் தொல்காப்பியர் . அறம் பொருள் இன்பம் என்ற மூன்றனுள் வாழ்க்கைக்கு அடிப்படையாய்த் தலைமையிடம் பெறுவது பொருள் . பொருளினால் தான் அறமும் போகமும் எய்த இயலும் .
*அறன் ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து*
*தீதின்றி வந்த பொருள்* . ( குறள் : 754 )
*ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்*
*ஏனை யிரண்டும் ஒருங்கு* ( குறள் : 760 )
எனப் பொருளால் வரும் பயன்களை வள்ளுவர் எடுத்துரைக்கிறார் . இது

பற்றியே பிறிதோரிடத்து உவமை வாயிலாகவும் பொருளிலார்க்கு இவ் வுலகம் இல்லை என்பதைத் திண்மையாய் வலியுறுத்துகிறார் .

**பொருட்பாலின் போக்கு**

பொருள் தேடும் முயற்சி ஆண்பாலார்க்கே உரியது! பொருள் வேண்டி நாடிடையிட்டும் காடிடையிட்டும் செல்வதோடு திரைகடலோடியும் சென்று வருபவன் அவனே . எனவே , இப் பொருட்பாலில் ஆண் - பெண் இருபாலாருக்கும் சமத்துவ நிலை காணலில் , சில பொதுமைப் பண்புகளையே நாம் கவனிப்பது சாலும் .

கல்வி , கேள்வி , அறிவுடைமை , சுற்றம் தழால் , குடிமை , மானம் , நாணுடைமை , பண்புடைமை முதலிய பல பண்புகள் இருபாலார்க்கும் உரியவை . இத்தகு பொதுப்பண்புகளை வற்புறுத்துவதில் சமநிலைப் பண்பையே காண்கிறோம் .

**இருபாலருக்கும் ஒத்த பண்புகள்**

ஆண் பெண் இருபாலாருக்கும் உரிய ஒத்த பண்புகளை எடுத்துக் காட்டும்போது ,
*பிறப்பே , குடிமை , ஆண்மை , ஆண்டொடு*
*உருவு , நிறுத்த காம வாயில் ,*
*நிறையே , அருளே , உணர்வொடு , திருஎன*
*முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே* ( தொல் . பொருள் , உவமை 15 )
எனத் தொல்காப்பியா எடுத்துக் காட்டுவர். இவற்றுள் ஆண்மை என்பது இருபாலாருக்கும் சுட்டடப்படுகிறது .

ஆணிற்கு ஆண்மை என்பது ஆள்வினையுடைமை, குடியாண்மை, இல்லாண்மைகளைக் குறிக்கும்.பெண்ணிற்கும் குடியாண்மையும் இல்லாண்மையும் வேண்டுமன்றோ? இல்லத்தை ஆளும் திறம் அவளுடைய சிறப்புரிமை.
*நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான் பிறந்த*
*இல்லாண்மை யாக்கிக் கொளல்* ( 1026 )
என வள்ளுவரும் இல்லாண்மைபற்றி எடுத்துரைக்கிறார் .

**இல்வாழ்வில் இல்லாளின் முதன்மை**

இல்வாழ்க்கையில் , அவ்வாழ்க்கைக்குரிய மனைவியே முதன்மை இடம் பெறுகிறாள் . இல் ( 45 , 46 , 47 , 48 , 49 ) , இல்லாள் ( 59 , 143 , 145 , 146 ) , மனை ( 60 , 148 , 901 , 1268 ) , மனையாள் ( 904 ) என்னும் சொற்களைப் பெண்பாலார்க்கு வள்ளுவரும் சுட்டியுள்ளமையால் இது நன்கு விளங்கும் .

இல்வாழ்க்கை என்பது மாட்சியுடைய மனைவியுடன் கூடி வாழும் வாழ்வேயாகும் . இல்வாழ்க்கையின் ஏற்றம்பற்றி உரைக்கும் இல்லறவியலின் முதல் அதிகாரத்தில் இல்வாழ்க்கை என்னும் அதிகாரப் பெயரை ஐந்து குறள்களில் ( 5 , 6 , 7 , 8 , 9 ) வள்ளுவர் ஆண்டுள்ளதோடு நான்காம் குறளில் வாழ்க்கை என்றே

அடைமொழியின்றி இல்வாழ்க்கையைக் குறிப்பிடுகின்றார் . இதனால் உலகில் வாழ்க்கை என்று ஏற்றம் பெறுவது இல்வாழ்க்கையே என்பது தெளிவாம் .

**இல்வாழ்வின் முதலும் துணையும்**

இல்வாழ்க்கையை விளக்க முற்படும் இல்லறவியலின் தொடக்க அதிகாரத்தின் முதற்குறளில் இல்வாழ்வான் என இல்லத்தலைவன் சுட்டப்படுகிறான் . அடுத்துவரும் இரண்டாம் அதிகாரம் வாழ்க்கைத் துணையாகிய மனையாளின் இயல்புரைப்பது . இவ்வாறாக ஆண்முதலும் பெண்துணையுமாகச் சிறப்பித்துக் காட்டப்பட்டுள்ளனர் .

**மனையாளின் மாண்புகள்**

இல்வாழ்க்கை அதிகாரத்தைத் தொடங்கும்போது இல்லத் தலைவனைச் சுட்டி , இல்வாழ்வான் என்று அவனுடைய கடமைகளை வற்புறுத்தியது போலவே , அடுத்து வாழ்க்கைத் துணை நலத்தில் மனையாளின் இயல்பும் கடமைகளும் இயம்பப்பட்டுள்ளன . எடுத்த எடுப்பிலேயே வள்ளுவர் ,

*மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்*
*வளத்தக்காள் வாழ்க்கைத் துணை*

என மனைவியை “ வாழ்க்கைத் துணை என்னும் பெயரால் குறிப்பிட்டு , அவளுடைய கடமைகளையும் சுட்டிக்காட்டியுள்ளார் . இந்த அதிகாரத்தின் இறுதிக்குறளில் , ‘ மனைக்கு விளக்கு மனையாள் , அவளுக்கு அணிகலம் நன்மக்கட்பேறு என்று இல்வாழ்வார் பெறும் மக்கட்செல்வம் போற்றி உரைக்கப்படுகிறது . இவ்வாறாக ஆண் பெண் இருவரும் ஒரு பொருளின் முதல் சினைபோல இல்வாழ்க்கை என்னும் நல்வாழ்க்கைக்கு முதலும் துணையுமாக விளங்கும் தன்மை விளக்கமாகிறது . சினை முதலுள் அடங்குதல்போல வாழ்க்கைத் துணையாகிய பெண் ஆண்மகனின் வாழ்க்கைக்கு வலுவூட்டும் பின்னணித் துணையாகிறாள் . இல்வாழ்க்கைச் சகடம் நன்னெறியில் செல்ல ஆணும் பெண்ணும் இருசக்கரங்கள் போல உள்ளனர் என்று கொள்ளலாம் . எனினும் ஆண் முதன்மையாய்ப் பெண் அந்த ஆணினை அடுத்து வாழும் நிலைமையையே காண்கிறோம் .

வாழ்க்கைத் துணையாம் மனைவி, தன்னைக் கொண்ட கணவனைப் பேணி , அவனுடைய புகழுக்குச் சிறிதும் குறைநேராதபடி இல்லக் கடமைகளை ஏற்றபடி செய்து வாழும் பொறுப்புடையவளாவள் . கணவனைக் கண்கண்ட தெய்வமாகப் போற்றிக் கற்பு என்னும் திண்மையுடையவளாய் அவள் திகழவேண்டும் என்று வள்ளுவர் திருமறை அறிவுறுத்துகிறது .

*பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்*
*திண்மையுண் டாகப் பெறின்* . ( 54 )
*தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்*
*பெய்யெனப் பெய்யும் மழை* . ( 55 )
*தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற*
*சொற்காத்துச் சோர்விலாள் பெண்* . ( 56 )
*சிறைகாக்கும் காப்பு எவன் செய்யும் மகளிர்*
*நிறைகாக்கும் காப்பே தலை* . ( 57 )
*பெற்றாற் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்*
*புத்தேளிர் வாழும் உலகு* ( 58 )

எனவரும் குறள் மணிகள் மகளிர் கடமைகளை வற்புறுத்துகின்றன .

**மனைவியும் மக்களும்**

கற்புடைய மனைவியை , மனைக்கு விளக்காகிய வாணுதல் எனப் புகழ்ந்தனர் முன்னையோர் ( புறம் 314 )
*உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்*
*செயிர் தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று*
எனத் தொல்காப்பியரும் ( களவியல் . 23 ) கூறியுள்ளார் .
*மயக்குறும் மக்களை இல்லோர்க்குப்*
*பயக்குறை இல்லைத் தாம் வாழும் நாளே* ( புறம் 188 )
என மக்கட் பெறுதலை இல்வாழ்க்கையின் பெருநோக்கமாகக் கூறியுள்ளான் பாண்டியன் அறிவுடைநம்பி . வள்ளுவரும் ,
*மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்*
*நன்கலம் நன்மக்கட் பேறு* ( குறள் 60 )
என்றனர் . இக்கருத்தினையே நான்மணிக்கடிகையில் விளம்பிநாகனாரும்

*மனைக்கு விளக்கம் மடவாள் ; மடவாள்*
*தனக்குத் தகைசால் புதல்வர்* ( நான்மணி 101 )
என்று சுட்டுகிறார் . இல்வாழ்க்கை , வாழ்க்கைத் துணை நலம் , புதல்வரைப் பெறுதல் என்னும் இல்லறவியலின் முதல் மூன்று அதிகாரங்களும் குடும்பவாழ்வின் அமைப்பினை எடுத்துக்காட்டுவனவாகும் . இதன்பின் வரும் அன்புடைமை , விருந்தோம்பல் , இனியவை கூறல் முதலியவற்றில் இல்லறத்திலே ஆடவரும் பெண்டிரும் பெற்றிருக்கவேண்டிய நற்பண்புகளை உணர்த்துகின்றன . இவையெல்லாம் இருவருக்கும் உரிய பொது அறங்களாம் .

**இல்லறப் பண்புகள்**

மனைவிக்குரிய மாண்புகளாகத் தொல்காப்பியர் ,
*கற்பும் காமமும் நாற்பால் ஒழுக்கமும்*
*மெல்இயல் பொறையும் , நிறையும் வல்லிதின்*
*விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்*
*பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்*
என்று கற்பியலில் எடுத்துக்காட்டியுள்ளார் . இவற்றிற்கு விளக்கம் தரும்பொழுது நச்சினார்க்கினியர் , கற்பாவது . கணவன் முதலியோர் கற்பித்த நிலையில் திரியாத ஒழுக்கம் என்றும் , காமம் என்பது , அன்பு என்றும் , நற்பால் ஒழுக்கம் என்பது , எவ்வாற்றாயினும் தம் குலத்திற்கு ஏற்றவாற்றான் ஒழுகும் ஒழுக்கம் என்றும் கூறுவர் . இவ்வகையில் தான் திருக்குறளிலும் கற்பு , அன்புடைமை , விருந்தோம்பல் முதலியவை இல்வாழ்வோரின் பொது அறமாகப் போற்றி உரைக்கப்பட்டுள்ளன ,

**கணவனுக்கு மனைவி கட்டுப்பட்டவள்**

பெண்டிர்க்கு இல்லக்கிழத்தி என்னும் முறையில் பலவகையான உரிமைகள் இருந்த போதிலும் அவர்கள் கணவனுக்குரியவான உடைமைப் பொருள்களுள் ஒன்றாகவே முற்காலத்தில் கருதப்பட்டு வந்தனர் . வள்ளுவர் பிறனில் விழையாமைபற்றி உரைத்த அதிகாரத்தில் மனைவியைப் பிறன் ஒருவனுக்குப் பொருள் போல் உரிமையுடையவள் என்று குறிப்பிடுதல் காணலாம் .

பிறன் பொருளாள் ( 141 ) , பிறனியலாள் ( 147 ) . பிறர்க்குரியாள் ( 149 ) , பிறன்வரையாள் ( 150 ) என்னும் குறள் மொழிகள் நோக்கத்தக்கன .

**மக்கட் பேற்றின் பொதுமை**

மக்கட்பேறு என்பது ஆண் - பெண் வேற்றுமையின்றிப் பொதுப்படையாகவே காணப்படுகிறது .

*பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த*
*மக்கட் பேறல்ல பிற* . ( 61 )
*தம்பொருள் என்பதம் மக்கள் அவர் பொருள்*
*தம்தம் வினையான வரும்* . ( 62 )
*குழலினிது யாழினிது என்பதம் மக்கள்*
*மழலைச் சொற் கேளாதவர்* . ( 63 )

என்றாற்போல மக்கள் என்று குறிப்பிடப் பெற்ற குறள்களில் ஆண் பெண் வேற்றுமை சுட்டப்படவில்லை . புதல்வரைப் பெறுதல் அதிகாரத்தில் மகனைப் பெற்ற தந்தைகடன் அவனை அவையத்து முந்தியிருப்பச் செய்வதாகும் என்றும் (67) மகனைச் சான்றோன் எனப் பிறர் சொல்லக் கேட்டபொழுது தாய் பெரிதும் மகிழ்வள் ( 69 ) என்றும் திருக்குறள் குறிப்பிடுகிறது .

*தம்மின் தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து*
*மன்னுயிர்க் கெல்லாம் இனிது* ( 68 )

என்னுமிடத்தில் அறிவுடைமையில் பாகுபாடு காணப்படவில்லை.கல்வி , கேள்வி, அறிவுடைமை முதலியவைபற்றிய தனி அதிகாரங்களிலும் பொதுமையே காணப்படுகிறது . சிறப்பு நிலையில் மகனை அவையத்து முந்தியிருப்பச் செயல் தந்தைகடன் என்ற போதிலும் கல்வியை இருபாலருக்கும் பொதுவாகவே குறள் கூறுகிறது .

*எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்*
*கண்ணென்ப வாழும் உயிர்க்கு* . ( 392 )
*தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்*
*கற்றனைத் தூறும் அறிவு* . ( 396 )

என்பன பொதுவாக மக்களுக்குக் கல்வி வேண்டும் என்பதனை வற்புறுத்தி யுரைப்பன .

*யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்*
*சாந்துணையும் கல்லாத வாறு .* ( 397 )
*மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்*
*ஆகுல நீர பிற .* ( 34 )

என்றாற்போலக் கல்வி அறம் முதலியன ஆண்பால் மேற்றாகக் கூறப்பட்டன எண்ணுவதற்கு இல்லை . பொதுவான செய்திகளை ஆண்பால்மேல் வைத்துச் சொல்வது மரபு .

*ஒருபாற் கிளவி ஏனைப்பாற் கண்ணும் ,*
*வருவகை தானே வழக்கென மொழிப .* ( பொருளியல் . 28 )

எனத் தொல்காப்பியர் இம்மரபிளை எடுத்துக்காட்டுதல் நோக்கத்தக்கது .

**பரிமேலழகர் காலத்துக் கருத்து**

திருக்குறளுக்குப் பெருவிளக்கம் தந்த பரிமேலழகர் மக்கள் எனப் பொதுமையாக வரும் இடங்களிலும் அச்சொல் ஆண்பாலரைச் சுட்டியதாகவே கருதுகின்றார் . இவர் , * நன்மக்கட்பேறு ( 60 ) என்பதற்கு நல்ல புதல்வரைப் பெறுதல் என்று உரை தருகிறார்.அறிவறிந்த மக்கட் பேறு ( 61 ) என்ற இடத்து அறிய வேண்டுவனவற்றை அறிதற்குரிய மக்கள் என்று உரை எழுதி , அறிவறிந்த என்றதனால் மக்கள் என்னும் பெயர் பெண்ணொழித்து நின்றது என்று இவர் விளக்கம் தருகிறார் . மேலும் , கேட்ட தாய் ( 69 ) என்பதற்கு அறிவுடையோர் சொல்லக் கேட்ட தாய் என்று பொருள் செய்தவர் , பெண் இயல்பால் தானாக அறிய மாட்டாமையின் கேட்ட தாய் எனக் கூறினார் என்று விளக்கவுரையில் குறிப்பிடுகிறார் . இத்தகு விளக்கங்கள் ஆண் - பெண் சமத்துவம் இன்மை ஊறிப்போன சமுதாய நிலையினை ஒட்டி எழுந்தன என்று கருதலே தக்கதாம் . அன்றி ஆசிரியர் திருவள்ளுவரின் திருவுள்ளம் என இவற்றைக் கருதுவதற்கில்லை .

**காமத்துப்பாலில் ஒத்தநிலை**

ஆண் , பெண் இருவரும் வள்ளுவர் கருத்தில் சமனான பங்குடையவர் என்பதைக் காமத்துப் பாலில் பரக்கக் காணலாம் . புணர்தல் , பிரிதல் , இருத்தல் , இரங்கல் , ஊடல் என்னும் ஐந்தும் ஒன்றனுள் ஒன்று அடங்காத தனித்தனி உரிப்பொருள்களாம் . இவற்றுள் ஊடல் ஒழிந்த நான்கும் களவு கற்பு என்னும் இருவகைக் கைகோளுக்கும் பொது என்று கொள்ளவேண்டும் . தமிழரின் இன்பவாழ்க்கை களவு - கற்பு என்றே பிரிக்கப்பட்டு இருந்தமையைத் தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் களவியல் கற்பியல் என்னும் இரண்டு இயல்களிலும் விரிவாகக் கூறியுள்ளார் . திருக்குறளிலே காமத்துப்பாலும் களவியல் ( அதி . 119-115 ) , கற்பியல் ( அதி . 116-133 ) என்று இருபெரும் பகுப்பாகவே உள்ளது .

காமத்துப்பாலின் முதல் இரண்டு அதிகாரங்களைக் கூர்ந்து நோக்கின் தலைவன் தலைவிமாட்டு எவ்வளவு உயர்த்த நோக்கமுடையவன் என்பதைக் கண்டுகொள்ளலாம் . புணர்ச்சி மகிழ்தல்,நலம் புனைந்துரைத்தல் , காதற் சிறப்புரைத்தல் அதிகாரங்களிலும் தலைவியின் அழகினையும் நலத்தினையும் சிறப்பினையும் எடுத்துரைக்கும் பாங்கில் தலைவன் தலைவியிடம் கொண்டுள்ள பெருவிருப்பும் மதிப்பும் புலனாம் .

**தலைவன் தலைவியர் நேயம்**

காதற்சிறப்புரைத்தல் அதிகாரத்தில் இருவர்தம் அன்பின் ஒத்தநிலை நன்கு புலனாகிறது . இந்த அதிகாரத்தின் முதல் ஐந்து பாடல்கள் தலைமகன் கூற்றாகவும் பின் ஐந்து பாடல்கள் தலைமகள் கூற்றாகவும் அமைத்துள்ளன .

*உடம்பொடு உயிரிடை என்னமற் றன்ன*
*மடந்தையொடு எம்மிடை நட்பு* ( 1122

வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை , சாதல்
அதற்கன்னள் நீங்கு மிடத்து ( 1124 )
என்னும் தலைவன் கூற்றுகள் அவன் அவளை உயிருக்குயிராகக் கருதினான்

என்பதனை எடுத்துக்காட்டுவன . இவ்வாறே ,

*கண்ணுள்ளின் போகார் இமைப்பின் பருவரார்*
*நுண்ணியர் எங் காத லவர்* ( 1126 )
*உவந்துறைவர் உள்ளத்துள் என்றும் இகந்துறைவர்*
*ஏதிலர் என்னும் இவ் ஊர்* ( 1130)

என்னும் தலைவி கூற்றுகள் தலைவி தலைமகனைக் கண்ணுக்குக் கண்ணாகத் தம் நெஞ்சம் நிறைந்தவராகக் கொண்டு போற்றியமையைப் புலப்படுத்தும் .

**சங்கநூல் முதலியவற்றுள் சமநிலை**

ஆண்பெண் சமத்துவ உறவினைச் சங்க நூல்கள் முதலாக எல்லா நூல்களிலும் புலவர் பெருமக்கள் எடுத்துரைத்துள்ளனர் .

*உயிர்க்கு உயிர் அன்னர்* ( குறுந் . 218 )

*உயிர் கலந்து ஒன்றிய செயிர்தீர் கேண்மை* ( ஐங் . 419 )

*ஓர் உயிர்ப்புள்ளின் இருதலையுள் ஒன்று*
*போர் எதிர்ந்தற்றாப் புலவல்* ( கலித் . 89 )

*வினையே ஆடவர்க்கு உயிரே ; வாணுதல்*
*மனை உறை மகளிர்க்கு ஆடவர் உயிர்* ( குறுந் 135 )

என்பன சங்கச் சான்றோர் வாக்குகள் . வள்ளுவர் முதலிய முன்னையோர் கருத்தினை அடியொற்றிக் கம்பரும் இராமனும் சீதையும் ஒருவரையொருவர் கண்டு காதல் கொண்ட நிலையை விளக்கும் போது ,

*இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினார்* ( பால் மிதிலக் 37 ) என்றும் ,

*மருங்கு இலா நங்கையும் வசைஇல் ஐயனும்*
*ஒருங்கிய இரண்டு உடற்கு உயிர் ஒன்று ஆயினார்* ( பால் மிதிலைக் 38 )

என்றும் இருவர்தம் ஒட்டுறவினை எடுத்துரைக்கின்றார். எனவே, தலைவன் தலைவியர் இருவரும் ஒருவருக்கொருவர் இன்றியமையாதவர் என்பது பெறப்படும் . பல பிறவிகளிலும் தொடர்ந்து வந்த உழுவலன்பால் ஏற்பட்ட தொடர்பாதலின் வாழ்நாள் முழுவதும் தொடரும் நட்பு ஆண் - பெண் கூட்டு வாழ்வு என்பது பெறப்படும் .

கற்பியல் குறள்களில் சமநோக்கு

கற்பியல் குறள்களும் கணவன் மனைவியர் சம நோக்கினைக் காட்டுவனவாகவே உள்ளன . குறிப்பறிவுறுத்தல் என்னும் அதிகாரம் தலைமகன் , தலைமகள் , தோழி என்னும் மூவரும் ஒருவர் குறிப்பை ஒருவருக்குச் சொல்லுவதாக அமைந்துள்ளது . இக்குறள்களைக் கூர்ந்து நோக்குமிடத்துத் தலைவன் தலைவரிடையே உயர்வு தாழ்வு இல்லாமையைக் காணலாம் . ஆயினும் நினைந்தவர் புலம்பல்,கனவு நிலை உரைத்தல்,நெஞ்சொடு கிளத்தல், அவர்வயின் விதும்பல் முதலிய சில அதிகாரங்களில் தலைவியின் மெலிவும் தலைவனின் உயர்வும் காணக்கூடும்.ஆயினும் அவையெல்லாம் இன்பச்சுவை கருதிக் கூறப்பட்டன என்று கருதலாம் .

*மலரினும் மெல்லிது காமம் சிலர் அதன்*
*செவ்வி தலைப்படு வார்* ( 1289

என்றபடி இன்பத்தின் மென்மை இயல்பு அறிந்து ஆண் பெண் சமத்துவ உரிமையைப் போற்றுவார் அரியரே .

*ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்*
*அறிவி லோங்கி , இவ்வையம் தழைக்குமாம் ;*
*பூணு நல்லறத் தோடிங்குப் பெண்ணுருப்*
*போந்து நிற்பது தாய்சிவ சக்தியாம்* ! ( புதுமைப்பெண் -5 )
என்று பாரதியாரின் புதுமைப்பெண் எடுத்துரைக்குமாறு பெண்ணின்
பெருமையறிந்து ஆண் - பெண் சமத்துவம் போற்றுதல் நம் கடமை .
வள்ளுவர் தந்த திருமறை நம் வாழ்வுக்கு வழிகாட்டி .

*வள்ளுவர் தந்த திருமறையைத் - தமிழ்*
*மாதின் இனிய உயர் நிலையை ,*
*உள்ளம் தெளிவுறப் போற்றுவமே - என்றும்*
*உத்தம ராகி ஒழுகுவமே .* -- கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை




மின்னிதழ்:29 மாசி-17 -தி.பி.2053 மார்ச்சு-1- பொ.ஆ.2022



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



மாண்புமிகு முதல்வர் அவர்களுக்கு மனங்கனிந்த
பிறந்தநாள் வாழ்த்துகள்

பொறுப்பாசிரியர் -மறைமலை இலக்குவனார்
இணையாசிரியர் -முனைவர் தமிழியலன்

**தளபதி நூறு**

-மறைமலை இலக்குவனார்

பெரியார் நெறியும் அண்ணா வழியும்
கலைஞர் வழங்கிய  களப்பணிப் பயிற்சியும்
அரசியல் நெருக்கடி வழங்கிய பாடமும்
மன்பதை போற்றிடும்  மாண்புறு தலைவராய்
தனிச் சிறப்புடன்  தளபதியை வழங்கின.
தமிழினம் தழைத்திடக் காலம் வழங்கிய
தனிப்பெருங் கொடையே! நிகரிலாத்  தலைவரே!
ஏழையர் துன்பம்  தணித்திடும் செயல்தனை
வாழ்வின் நெறியெனப்   போற்றும்  வள்ளலே!
உணவும்  உறையுளும் பிழைக்கும் வழியும்
வாய்த்திடும்   வழிதனைத் தேடிடும் வறியோர்
நிறைந்த மனத்துடன் வாழ்த்திடும் வகையில்
வறுமையை ஒழித்திடும் கருணைக் கடலே!
வெள்ளம் நிறைந்து வீட்டை இழந்து
வேதனை மிகுந்து வருந்தும் சூழலில்
வேட்டியைத் தூக்கி மடித்துக் கட்டி
வீதியில் இறங்கி மக்களை அணுகி
“யாது?நும் துயர் “எனப் பரிவுடன் வினவி
துயர்தனை நீக்கிட உதவிகள்   வழங்கிக்
கனிவான உரையால் கவலை போக்கித்
தாய்போல் காத்திடும் ஒப்பிலா மணியே!
வெற்றிநாயகனே! மருத்துவர் தோழரே!
பெருந்தொற்று ஓட்டிட முனைப்புக் காட்டும்
மருத்துவர் செவிலியர் காவலர் ஊழியர்
பயன்பெறும் வகையில் ஊக்க ஊதியம்;
உயிர்வளிப் படுக்கை தடுப்பூசி முகாம்;
மருத்துவ மனையில் புதிய விரிவுகள்;
என்றெலாம் நாளும் ஆற்றிடும் பணிபல;
இயம்ப முயன்றால்  காப்பியம் விரியுமே!
உங்கள் முகத்தில் ஒளிவிடும் குறுநகை
குழந்தைகளெல்லாம் மகிழ்ந்திடும் ஒளிநிலா!
அன்புடன் நீங்கள் வழங்கிடும் பரிசினால்
பிஞ்சு நெஞ்சுகள்  அடைந்திடும் மகிழ்ச்சி!










பெற்றோர் அனைவர் உளத்திலும் நெகிழ்ச்சி!
சமூக நீதி குன்றா வகையிலும்
சமதரும நெறி ஓங்கிடும் வழியிலும்
ஓயாது உழைத்து வகுத்திடும் செயலெலாம்
இந்தியா அனைத்தும் முனைப்புடன் நோக்கி
பின்பற்றுகிறதே! பெருமை அடைகிறோம்!
உமது பணிகள் ஒவ்வொன் றையும்
ஒன்றிய அரசு ஏற்றுச் செயல்படுதல்
"திராவிட மாதிரி" என்றே போற்றுவோம்!
புலம்பெயர் தமிழர் கவலை களைந்திடத்
கருத்துடன் விரைந்தே தனித்துறை அமைத்தீர்!
திக்கெலாம் உம்புகழ்! உளமெலாம் மகிழ்ச்சி!
அடித்தள மக்கள் அல்லல் போக்கிடும்
அண்ணா வழியில் கடைநிலை மக்கள்
நினைத்த நலனெலாம் நொடியில் வழங்கிடும்
தலைவர் இவர்போல் தரணியில் உண்டோ?
ஆட்சிப் பொறுப்பை ஏற்ற வேளையோ
அல்லலும் துன்பமும் நிறைந்த வேளை;
உயிர்களைக் கவர்ந்திடும் பெருந்தொற்று ஒருபுறம்;
வயிற்றுப் பிழைப்புக்கே வழியற்றோர் ஒருபுறம்;
கொரானாச் சூழலால் வேலை இழந்தே
செய்வதறியாக் குடும்பங்கள் மறுபுறம்;
நெசவும் உழவும் தொழிலாய்க் கொண்டோர்,
சிறுகுறு தொழிலோர், மாணவர், அலுவலர்,
பலப்பல நிலையினர் படுகின்ற பெருந்துயர்
அனைத்தும் வழங்கிய அறைகூவல்கள்
வென்றுகாட்டினார் வியந்ததே உலகெலாம்!
செம்மொழித் தமிழின் சிறப்பெலாம் போற்றிடும்
அறிஞர் கவிஞர் கலைஞர் மகிழ்ந்திடப்
பரிசுகள் விருதுகள் பலப்பல நல்கியும்
பண்பாட்டுத் துறையிலும் தமிழ்வளர்ச்சியிலும்
பன்முனைத் திட்டம் பாங்குடன் ஆற்றியும்
ஆட்சியில் கல்வியில் அன்னைத் தமிழ்க்கே
முதன்மை வழங்கிடும் முதல்வரே போற்றி!
செம்மொழி கண்ட செம்மல் கலைஞர்







தம்முடைப் பங்காய்ப் பெருநிதி வழங்கிச்
செம்மொழி அறிஞர் விருது நிறுவினார்;
"கலைஞர் செம்மொழி அறிஞர் விருது"
ஆண்டுக்கு ஒருவராய் அறிஞர் பெற்றிட
அருமைத் திட்டம் அவரே வகுத்தார்;
பத்தாண் டுகளாய் உறங்கிக் கிடந்த
அவரது திட்டம் தளபதி ஆட்சியில்
அடைந்ததே மாட்சி! அகமிக மகிழ்ந்தோம்!
இன்று புலவர் இனிதாய்ப் போற்றிடப்
பல்வேறு செயல்களால் தமிழ்மறு மலர்ச்சி
மீண்டும் ஏற்பட வழியமைக் கிறீர்கள்!
தமிழ்படித் தோர்க்கே வேலை வாய்ப்பு
தமிழ்வழிக் கல்விக்குச் சலுகையும் சிறப்பும்
உலகமெங்கும் உயர்தமிழ்க் கல்வி
என்றெலாம் ஏற்றம் இன்று காண்கிறோம்!
ஒன்றிய ஆட்சியில் தமிழும் இடம்பெற
ஒல்லும் வகையெலாம் உரிமை முழக்கம்
வெல்லும் காலம் தங்களால் அமையும்!
வறியவர் முதியவர் ஏதிலர் துயரெலாம்
போக்கிடும் நாட்டமும் பொறுப்பும் கொண்டே
அனைவரும் போற்றிடும் அருள்நிறை மாட்சி
தளபதி ஆற்றிடும் சிறப்புறு ஆட்சி!
வடமொழி இந்தி வன்கண் பிடியில்
வண்டமிழ் இறுக்கிடும் மத்திய அரசின்
கொடுமை முறித்திடும் கொற்றவர் இவரே!
கல்வி நலவாழ்வு எனுமிரு துறையும்
மாநில அரசு பெறும் வழிகாண்பார்!
இனமும் மொழியும் உரிமை பெற்றே
இனிய பொற்காலம் மலர்ந்திடச் செய்வார்!
வாழ்க தளபதி வையகம் போற்றவே!
சூழ்க நலனெலாம் சுடர்க புகழே!
தமிழ்நலன் சிறந்திடத் தரணியை ஆள்கவே!



மாண்புமிகு முதலமைச்சருக்கு ஓர் அன்பு வேண்டுகோள்

உலகத் தமிழ்மாநாட்டை அரசே ஏற்று நடத்தவேண்டும்




உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகம்

International Thirukkural Virtual Institute

52/3 சௌந்தரியா குடியிருப்பு,அண்ணா நகர் மேற்கு,

சென்னை-600 101.

kuralvirtual.com 9791861662

இயக்குநர்

முனைவர் மறைமலை இலக்குவனார்

மேனாள் மாநிலக் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர்,மேனாள் சிறப்பு வருகைப் பேராசிரியர்,கலிபோர்னியா பல்கலைக்கழகம்,பெர்க்கிளி,அமெரிக்கா—சிங்கப்பூர் சமூக அறிவியல் பல்கலைக்கழகம்- பொறுப்பாசிரியர்- குறள்நெறி, இணையத்திங்களிருமுறை இதழ் maraimalai@yahoo.com


மாண்புமிகு முதல்வர் அவர்களின் கனிவான பார்வைக்கு

பெறுநர்: மாண்புமிகு முதலமைச்சர்,

தமிழ்நாடு அரசு,கோட்டை,

சென்னை-600 009.

மாண்புமிகு முதல்வர் அவர்களுக்கு,

மனங்கனிந்த வணக்கங்கள்.

. "தமிழகத்தின் திராவிட முன்னேற்ற கழகத்தின் முதன்மைச் செய்தித் தொடர்பாளர் திரு கே எஸ் ராதாகிருஷ்ணன் அவர்கள் இலங்கைக்கு வந்திருக்கிறார்கள்.

தமிழகத்தில் நடைபெற உள்ள 11ஆவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாட்டு நிகழ்ச்சிகள் தொடர்பாக இலங்கையில் உள்ள பல்கலைக்கழகங்களின் தமிழ்த்துறைத் தலைவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்த உள்ளார்கள். இலங்கையில் அவர்கள் சில காலம் தங்கி இருப்பார்கள்."

என்னும் செய்தியை இணையத்தில் கண்டேன்.

அறிஞர் அண்ணா அவர்கள் உலகத் தமிழ்மாநாட்டை நடத்தியதைப் போலவும் கலைஞர் அவர்கள் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டை நட்த்தியதைப் போலவும் தாங்கள் பொறுப்பேற்று 11-ஆவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாட்டை நட்த்தவேண்டும் என்பதே தமிழ் ஆர்வலர்களின் விருப்பம்.

உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனமும் தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத்துறையும் இணைந்து அந்த மாநாட்டைப் பொறுப்பேற்று நடத்துவதே முறையாகும்.

தமிழினத்துக்கே பொதுவான மாநாட்டை ஒரு குறிப்பிட்ட கட்சியின் செய்திப் பொறுப்பாளர் நடத்துவது பொருத்தமல்ல என்பதைத் தங்கள் கவனத்துக்குக் கொணர விழைகிறேன்.

தாங்கள் ஆட்சிப்பொறுப்பேற்ற நாள் முதலாகத்தமிழுக்கு மீண்டும் ஒரு பொற்காலம் உருவாக்கும் வண்ணம் பல சிறந்த திட்டங்களை நிறைவேற்றி வருகிறீர்கள்.அதற்குச் சிகரம் வைத்தாற்போல இம் மாநாடு அமையும்.இரண்டு ஆண்டுகளாவது திட்டமிட்டபின்னர் இதனைச் சிறப்பாக நடத்தமுடியும் என்னும் என் கருத்தையும் இங்குத் தெரிவிக்க விழைகிறேன்.நன்றி.

தங்கள் உண்மையுள்ள

**தமிழினத்துக்கே பொதுவான மாநாட்டை**

**ஒரு குறிப்பிட்ட கட்சியின் செய்திப் பொறுப்பாளர் நடத்துவது**

**பொருத்தமல்ல என்பதைத் தங்கள் கவனத்துக்குக் கொணர விழைகிறோம்.**

## மக்கட்பேறு

முனைவர் இர. பிரபாகரன்

**பெறுமவற்றுள் பெரும்பேறு**

புறநானூற்றில், பொன்முடியார் என்ற பெண்பாற் புலவர், "ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே" என்று கூறுகிறார்(புறநானூறு - 318:1). பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, போருக்குப் போகும்பொழுது, பகைவருடைய நாட்டில் உள்ளவர்களில் பிள்ளைகள் இல்லாதவர்களை நோக்கி, "நீங்கள் பாதுகாவலான இடத்திற்குச் செல்லுங்கள்." என்று கூறியதாகப் புறநானூற்றில், நெட்டிமையார் என்ற புலவர் குறிப்பிடுகிறார்.

***பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்***
***எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின் . .***

(நெட்டிமையார், புறநானூறு, 9, 4-5)

பிள்ளைகள் இல்லாத போர்வீரர்கள் போரில் இறந்தால், அவர்களுடைய மனைவியருக்குப் பிள்ளைப்பேறு பெறும் வாய்ப்பு இருக்காது என்ற நோக்கத்தோடு, இவ்வாறு பாண்டிய மன்னன் கூறுகிறான். மனைவியின் நற்குண நற்செய்கைகள் இல்வாழ்க்கைக்கு அழகு. நன்மக்களைப் பெறுவது அந்த அழகுக்கு மேலும் அழகுசெய்யும் அணிகலனாக அமையும் என்று

***மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்***
***நன்கலம் நன்மக்கட் பேறு.*** (குறள் – 60)

என்ற குறளில் வள்ளுவர் குறிப்பிடுகிறார். ஆகவே, சங்க காலத்திலும் வள்ளுவர் காலத்திலும், இல்லறத்தில் இருப்பவர்கள் குழந்தைகளைப் பெற்றுக்கொள்வது இன்றியமையாததாகக் கருதப்பட்டது என்பதற்குப் பொன்முடியார், நெட்டிமையார் பாடல்களும் திருக்குறளும் சான்றாக உள்ளன.

நன்மக்களைப் பெறுவது பெரும்பேறு என்பதையும், அதனால் அந்த நன்மக்களின் பெற்றோர் அடையும் நன்மைகளையும் "மக்கட்பேறு" என்னும் அதிகாரத்தில் வள்ளுவர் விரிவாகவும் விளக்கமாகவும் கூறுகிறார். ஒருவன் தன்னுடைய வாழ்க்கையில் மிகுந்த செல்வத்தைப் பெறலாம்; உயர்ந்த பதவிகளை அடையலாம்; வேறு சிறப்புக்களையும் பெறலாம். ஆனால் வள்ளுவரைப் பொறுத்தவரை, ஒருவன் பெறக்கூடிய பேறுகளில் எல்லாம்,

அறிய வேண்டியவற்றை அறிந்தவர்களாக அவனுடைய மக்கள் இருப்பார்களானால், அதுவே மிகச் சிறந்த பேறு. இந்தக் கருத்தை உறுதிப்படுத்துவதற்காக, வள்ளுவர் தான் அறிந்த பேறுகளில் எல்லாம், அறிய வேண்டியதை அறிந்த மக்கள்தான் ஒருவன் பெறக்கூடிய பெரும்பேறு என்று தன்மையில் கூறுகிறார்.

***பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த***
***மக்கட்பேறு அல்ல பிற.*** (குறள் – 61)

இதுபோல், ”யாம்” என்று தன்மையைக் குறிக்கும் சொல்லைப் பயன்படுத்தித் தான் கண்டதாக அல்லது தான் அறிந்ததாக மூன்று குறட்பாக்களில் மட்டுமே வள்ளுவர் கூறுகிறார். அந்த மூன்று குறட்பாக்களில் ஒன்று குறள் 61. மற்ற இரண்டு குறட்பாக்கள்:

***யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்***
***வாய்மையின் நல்ல பிற.*** (குறள் – 300)

***மக்களே போல்வர் கயவர் அவரன்ன***
***ஒப்பாரி யாங்கண்ட தில்.*** (குறள் – 1071)

”யாம்” என்ற சொல்லை வள்ளுவர் பயன்படுத்துவதனால், அவர் தன்னுடைய சொந்த அனுபவத்தை முன்வைத்து, அவர் சொல்ல வந்த கருத்தை உறுதி செய்வதாகத் தோன்றுகிறது.

இந்தக் குறளுக்கு விளக்கம் அளிக்கும்பொழுது ”அறிவறிந்த என்றதனால், ’மக்கள்’ என்னும் பெயர் பெண் ஒழித்து நின்றது.” என்று பரிமேலழகர் கூறுகிறார். அதாவது, இந்தக் குறளில் “அறிவறிந்த மக்கள்” என்று வள்ளுவர் கூறியிருப்பதால், அது பெண்களைக் குறிக்காமல் ஆண்களை மட்டுமே குறிக்கும் என்பதும் பெண்களுக்கு அறிவில்லை என்பதும் பரிமேலழகரின் கருத்து என்பது தெளிவாகத் தெரிகிறது! பரிமேலழகரின் கருத்து பெண்களை இழிவுபடுத்துகிறது. அது ஏற்றுக்கொள்ளத் தக்கது அன்று.

இவ்வுலகில் புகழுடன் வாழ்ந்து, மறுவுலகிலும் சிறந்த இடத்தைப் பெறுபவர் யார் எனில் பகைவரும் கண்டு விரும்பத்தக்க, குற்றமற்ற நல்ல பண்புகளை உடைய குழந்தைகளைப் பெற்றவர்களே என்ற கருத்து சங்க காலத்தில் இருந்ததாகச் செல்லூர்க் கோசிகன் கண்ணனார் இயற்றிய அகநானூற்றுப் பாடலிலிருந்து தெரிகிறது.

*இம்மை உலகத்து இசையொடும் விளங்கி*
*மறுமை உலகமும் மறு இன்று எய்துப*
*செறுநரும் விழையும் செயிர் தீர் காட்சிச்*
*சிறுவர்ப் பயந்த செம்மலோர். . . .*

(செல்லூர்க் கோசிகன் கண்ணனார், அகநானூறு, 66: 1-4)

திருக்குறளிலும் இதே கருத்து காணப்படுகிறது. பிறரால் பழிக்கப்படாமல், நற்குணங்களுடன் கூடிய மக்களைப் பெற்றால், இப்பிறவியில் மட்டுமல்லாமல் பின்வரும் பிறவிகளிலும் அந்த மக்களின் பெற்றோர்களைத் துன்பங்கள் அணுகா என்று வள்ளுவர் கூறுகிறார்.

*எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்*
*பண்புடை மக்கட் பெறின்.* (குறள் - 62)

இந்தக் குறளில் உள்ள ”எழுபிறப்பு” என்ற சொல்லுக்கு உரையாசிரியர்கள் பலவிதமாகப் பொருள் கூறுகின்றனர். எழுபிறப்பு என்பதற்கு ஏழு பிறவிகள் என்று சிலரும், ஏழு தலைமுறைகள் என்று வேறு சிலரும் பொருள்கொள்கின்றனர். மக்கள் அறிவுள்ளவர்களாக இருந்தால் அது அவர்களுக்கும் அவர்களுடைய பெற்றோர்களுக்கும் நன்மை பயக்கும் என்பதை மிகைப்படுத்தி, உயர்வு நவிற்சியாக இவ்வாறு வள்ளுவர் கூறுவதாகத் தோன்றுகிறது.

பெற்றோர்கள் தங்களுடைய குழந்தைகளைத் தங்களின் செல்வமாகக் கருதுவார்கள் என்றும், அந்தக் குழந்தைகளின் செல்வம் அவரவர்களின் செயல்களால் அவர்களை வந்தடையும் என்றும் வள்ளுவர் கூறுகிறார்.

*தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்*
*தம்தம் வினையான் வரும்.* (குறள் – 63)

பராசக்தியைக் கண்ணம்மா என்ற பெண்குழந்தையாகக் கற்பனைசெய்து, பாரதியார் பாடிய பாடலில், குழந்தையைச் செல்வம் என்று கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

*சீர்பெற்று வாழ்வதற்கே – உன்னைப்போல்*
*செல்வம் பிறிது முண்டோ?*

(பாரதியார் கவிதைகள், கண்ணம்மா என் குழந்தை, 39 – 40)

**குழந்தைகளால் பெறும் இன்பம்**

"குழந்தைகளைத் தொடுவதாலும், அவர்களைத் தழுவுவதாலும் பெற்றோர்கள் அளவற்ற மகிழ்ச்சி அடைகிறார்கள். அவர்களுடைய மழலைச் சொற்கள் பெற்றோர்களுக்குக் கேட்பதற்கு மிகவும் இனிமையானவையாக இருக்கின்றன. தம் குழந்தைகளின் மழலைச் சொற்களைக் கேட்காதவர்கள்தான் குழலோசையும் யாழோசையும் இனியவை என்று கூறுவார்கள்." என்று தானே தன் குழந்தைகளோடு பழகி, அவர்களைத் தழுவியதாலும் அவர்களின் மழலைச் சொற்களைக் கேட்டதாலும் பெருமகிழ்ச்சி அடைந்ததை உணர்ந்தவர்போல், குழந்தைகளால் பெறக்கூடிய இன்பத்தை வள்ளுவர் மிக அழகாகச் சித்திரிக்கிறார்.

*மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்று அவர்*
*சொற்கேட்டல் இன்பம் செவிக்கு.* (குறள் – 65)

*குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்*
*மழலைச்சொல் கேளா தவர்.* (குறள் – 66)

ஒரு சமயம், அதியமான் நெடுமான் அஞ்சி ஔவையாருக்கு ஒரு அரிய நெல்லிக்கனியைப் பரிசாக அளித்தான். அதனால், அவர் மனம் மகிழ்ந்து, நாக்குழறிப் பலவாறாக அவனைப் புகழ்கிறார். அவர் பேசுவது சிறுகுழந்தையின் மழலைச் சொற்களைப்போல் உள்ளது என்றும், மழலைச் சொற்கள் யாழிசையோடு ஒத்து வராமல், தாளத்தோடு பொருந்தாமல் இருந்தாலும், தந்தையர்க்கு அச்சொற்கள் அன்பை வரவழைக்கின்றன என்று ஒரு புறநானூற்றுப் பாடலில் ஔவையார் மழலைச்சொற்களின் இனிமையைப் புகழ்ந்து பாடுவது குறிப்பிடத்தக்கது.

*யாழொடும் கொள்ளா; பொழுதொடும் புணரா;*
*பொருள்அறி வாரா; ஆயினும், தந்தையர்க்கு*
*அருள்வந் தனவால் புதல்வர்தம் மழலை*
*என்வாய்ச் சொல்லும் அன்ன; ஒன்னார்*
*கடிமதில் அரண்பல கடந்த*
*நெடுமான் அஞ்சிநீ அருளல் மாறே.*

(ஔவையார், புறநானூறு, 92)

குழந்தைகளைத் தழுவுவதால் உடலுக்கு இன்பமும் அவர்களின் மழலைச் சொற்களைக் கேட்பதால் செவிக்கு இன்பமும் உண்டு என்று கூறியதோடு நிறுத்தாமல், அவர்கள் தம் பிஞ்சுக் கைகளால் குழப்பிய உணவை உண்பது சாவா மருந்தாகிய அமிழ்தத்தைவிட இனிது என்று கூறி, அவர்களால் நாவிற்கும் இன்பம் உண்டு என்று வள்ளுவர் கூறுகிறார்.

***அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்***
***சிறுகை அளாவிய கூழ்.*** (குறள் – 64)

இது போன்ற ஒரு கருத்தை பாண்டியன் அறிவுடை நம்பி இன்னும் சற்று விரிவாகத் தான் இயற்றிய புறநானூற்றுப் பாடலில் குறிப்பிடும்பொழுது, தங்கள் செய்கைகளால் தம்மை மகிழ்விக்கும் சிறுகுழந்தைகள் இல்லாத பெற்றோர்களின் வாழ்நாட்கள் பயனற்றவை என்று கூறுகிறான். ”பலவகையான செல்வங்களையும் பெற்றுப் பலரோடு உண்ணும் பெருஞ்செல்வந்தராயினும், மெள்ள மெள்ள, குறுகிய அடிகளைவைத்து நடந்து, தன் சிறிய கையை நீட்டி, அதை உணவில் இட்டு, தொட்டு, வாயால் கவ்வி, கையால் துழாவி, நெய்யுடன் கலந்த சோற்றைத் தன் உடலில் பூசிப் பெற்றோரை இன்பத்தில் மயக்கும் குழந்தைகள் இல்லாதவர்களின் வாழ்நாட்கள் பயனற்றவையாகும்.” என்பது பாண்டிய மன்னனின் பாடல்.

***படைப்புப்பல படைத்துப் பலரோடு உண்ணும்***
***உடைப்பெருஞ் செல்வர் ஆயினும் இடைப்படக்***
***குறுகுறு நடந்து சிறுகை நீட்டி***
***இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்***
***நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்***
***மயக்குறு மக்களை இல்லோர்க்குப்***
***பயக்குறை இல்லைத் தாம்வாழும் நாளே.***
(பாண்டியன் அறிவுடை நம்பி, புறநானூறு – 188)

குழந்தைகளால் உடலுக்கும், காதுக்கும், நாவிற்கும் மட்டுமல்லாமல், அவர்களைக் காண்பதால் கண்ணுக்கு இன்பமும், அவர்களை முகர்வதால் மூக்குக்கு இன்பமும் கிடைப்பதாகப் பாரதியார் பாடுகிறார்.

***அள்ளி அணைத்திடவே – என்முன்னே***
***ஆடி வருந்தேனே!***
***ஓடி வருகையிலே – கண்ணம்மா!***
***உள்ளங் குளிருதடி!***

*ஆடித் திரிதல் கண்டால் – உன்னைப்போய்*

*ஆவி தழுவுதடீ!*

*உச்சி தனைமுகந்தால் – கருவம்*

*ஓங்கி வளருதடீ!*

(பாரதியார் கவிதைகள், கண்ணம்மா என் குழந்தை, 7 – 14)

இவ்வாறு, பெற்றோர்களின் ஐம்புலன்களுக்கும் இன்பம் அளிக்கும் குழந்தைகளால் பெற்றோர்களுக்கு மற்றொரு இன்பமும் உண்டு. தங்கள் குழந்தைகள், தம்மைவிட அறிவிற் சிறந்தவர்களாக இருந்தால், அது எல்லாப் பெற்றோர்களின் உள்ளத்திற்கும் இன்பம் அளிக்கும் என்று வள்ளுவர் கூறுகிறார்.

*தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து*
*மன்னுயிர்க் கெல்லாம் இனிது.* (குறள் – 68)

ஒருதாய், தன் குழந்தையைப் பத்து மாதம் சுமந்து, பல இன்னல்களைக் கடந்து, முடிவில் அந்தக் குழந்தையைப் பெற்றவுடன், தான் அடைந்த எல்லாத் துன்பங்களையும் மறந்து, பெருமகிழ்ச்சி அடைகிறாள். ஆனால், அவள் குழந்தை வளர்ந்து அறிவிற் சிறந்த சான்றோனாகத் திகழ்கிறான் என்று அவள் கேள்விப்பட்டால், தன் குழந்தை பிறந்தபொழுது அவள் பெற்ற மகிழ்ச்சியைவிடப் பெருமகிழ்ச்சி அடைவாள் என்று வள்ளுவர் கூறுகிறார்.

*ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்*
*சான்றோன் எனக்கேட்ட தாய்.* (குறள் – 69)

”பெண்ணியல்பால் தானாக அறியாமையால், கேட்ட தாய்” என்று இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் விளக்கம் அளிக்கிறார். அதாவது, ”தாய் அறிவில்லாதவளாகையால், தன் மகன் சான்றோன் என்பதைப் பிறர் கூறினால்தான் அவளால் அறிந்துகொள்ள முடியும்” என்பது பரிமேலழகரின் கருத்து. தானே தன் மகனைச் சான்றோன் என்று எண்ணிக் கொள்வதைவிட, அவனைச் சான்றோன் என்று பிறர் கூறுவதுதான் சிறப்பு. அதுதான், ஒரு தாய்க்குப் பெருமகிழ்ச்சி அளிக்கும். அதனால்தான், வள்ளுவர், “கேட்ட தாய்” என்று கூறுகிறார். மீண்டும் பரிமேலழகர் பெண்களைச் சிறுமைப்படுத்துவதைக் காண்கிறோம்.

**தந்தையும் மகனும்**

ஒரு தந்தை தன் மகனுக்குச் செய்யக்கூடிய நன்மை, அவனை அறிவுடையோர் அவையில் முதன்மையாயிருக்குமாறு செய்தல். தந்தை செய்த நன்மைக்கு மகன் செய்ய வேண்டிய கைம்மாறு, "இவன் தந்தை இவனை மகனாகப் பெறுவதற்கு என்ன தவம் செய்தானோ?" என்று அந்த மகனைக் காண்போர் கூறும் சொல்லாகும்.

***தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து***
***முந்தி இருப்பச் செயல்.*** (குறள் – 67)

***மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை***
***என்நோற்றான் கொல்எனும் சொல்.*** (குறள் – 70)

இந்த இரண்டு குறட்பாக்களிலும், வள்ளுவர் தந்தையைப் பற்றியும் மகனைப் பற்றியும் மட்டுமே கூறியிருக்கிறார். "தந்தை, மகனை மட்டுமே அவையில் முந்தியிருக்கச் செய்ய வேண்டுமா? மகளை அவையில் முந்தியிருக்கச் செய்ய வேண்டாமா? மகனையோ, மகளையோ அவையத்து முந்தியிருப்பச் செய்வதில், தாய்க்குப் பங்கு இல்லையா?" போன்ற வினாக்கள் எழுவது இயற்கை. வள்ளுவர் காலத்தில், வீட்டிலுள்ள பணிகளை மகளிரும், வீட்டுக்கு வெளியே உள்ள பணிகளை ஆடவரும் கண்காணித்துக் குடும்ப வாழ்க்கையை நடத்தியிருக்கலாம். அதனால், வள்ளுவர், தந்தையையும் மகனையும் மட்டுமே இந்தக்குறட்பாக்களில் குறிப்பிட்டிருக்கிறார் என்று கருதுவதற்கு இடமிருக்கிறது. "ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே, சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே" என்று பொன்முடியார் பாடியிருப்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது. இன்றைய சமுதாயத்தில் வள்ளுவர் வாழ்ந்தால் இந்தக் குறட்பாக்களை மாற்றி,

***பெற்றோர் மக்கட்காற்றும் நன்றி அவையத்து***
***முந்தி இருப்பச் செயல்.***

***மக்கள் தந்தைக்கு ஆற்றும் உதவி இவர்தந்தை***
***என்நோற்றார் கொல்எனும் சொல்.***

என்று எழுதியிருப்பாரோ என்று எண்ணத் தோன்றுகிறது!

**முடிவுரை**

சங்க காலத்திலும் வள்ளுவர் காலத்திலும், அறிவும் பண்பும் உடைய மக்களைப் பெறுவது ஒருவர் பெறக்கூடிய பேறுகளில் எல்லாம் மிகச் சிறந்த பேறு என்ற கருத்தும், அத்தகைய மக்களைப் பெற்ற பெற்றோர், இப்பிறவியில் மட்டுமல்லாமல் மறுபிறவிகளிலும் தங்களைத் தீமைகள் அணுகாமல், சிறப்பாக வாழ்வார்கள் என்ற கருத்தும் சங்க காலத்திலும் வள்ளுவர் காலத்திலும் இருந்ததாகத் தெரிகிறது. குழந்தைகளைக் கட்டித்தழுவுதல், அவர்களின் மழலைச் சொற்களைக் கேட்டல், அவர்களின் சிறிய கைகளால் துழாவிய அமிழ்தம் போன்ற உணவை உண்ணுதல் ஆகியவை முறையே பெற்றோர்களின் உடலுக்கும், செவிக்கும், நாவிற்கும் இனிமையானதாக இருக்கும். தன் மகனைச் சான்றோன் என்று பிறரால் புகழப்படுவதைக் கேட்ட தாய், அவனைப் பெற்றபொழுது அடைந்த மகிழ்ச்சியைவிட அதிக மகிழ்ச்சி அடைவாள். மகனை அவையத்து முந்தியிருப்பச் செய்வது தந்தையின் கடமை. தந்தையின் செயலுக்குக் கைம்மாறாக மகன் செய்ய வேண்டியது, “இவனை மகனாகப் பெறுவதற்கு, இவன் தந்தை என்ன தவம் செய்தானோ!” என்று பிறர் அவனைக் கண்டு வியக்குமாறு வாழ்தலாகும்.

# வள்ளுவத்தில் கண்கள்

--முனைவர். அ.அ.ஞானசுந்தரத்தரசு க.மு.,கல்.மு.,

**கண் திறத்தல்**

உடலின் மிக இன்றியமையாத உறுப்பு கண். ஐம்புலன்களில் கண் என்பது சென்று பற்றும் பொறியாகும். உலகில் இருக்கும் பொருள்களின் மீது தாவிச்சென்று வீழ்ந்து அவற்றைப் பற்றி அவற்றினது தன்மைகளை அறிவுக்கு உணர்த்தும் கருவி கண் ஆகும். பண்டைக் காலத்தில் கற்களிலும், செம்பிலும் இறைவனின் திருமேனிகள் ஏராளமாகச் செய்யப் பெற்றன. திருமேனி முழுவதும் வடிக்கப்பட்டு விட்டாலும் சிற்பியானவர் அதன் கண்ணை மட்டும் கடைசியில் தான் திறந்துவைத்து முடிப்பார். சிற்பங்களுக்குக்"கண் திறத்தல்" ஒரு சிறப்பு நிகழ்ச்சியாகவே மேற்கொள்ளப்பெற்றது.

**பார்த்துக் கற்றல்**

ஐம்புலன்களாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி என்பனவற்றுள், அறிவுப் புலத்தை விரிவாக்கும் வேலையைக் கண் எனும் உறுப்பு மிகுதியாக ஆற்றுகின்றது. பண்டைக் காலத்தில் கேட்டு அறியும் அறிவே மிகுதியாக இருந்தது. ஆசிரியரை அண்டிச் சென்று குருகுலத்தில் இருந்து, அவர் சொல்வதைக் காதால் கேட்டு அறிவை வளப்படுத்தக் கொள்வதே பண்டைக் காலத்தில் மிகப் பரவலாக இருந்த கல்வி முறை ஆகும். அதனால்தான் கல்வியையும், கேள்வியையும் ஒருசேர ஒருங்கு இணைத்துப் பார்க்கும் பார்வை பண்டைய தமிழ் நூல்களில் பரவிக் கிடக்கக் காண்கிறோம். வள்ளுவரும்

"செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்

செல்வத்துள் எல்லாம் தலை (குறள் -411)

என்றார். பார்த்து அறியும் கல்வி (Visual Education) அக்காலத்தில் கால்கொண்டு வளரவில்லை. பார்த்து அறியும் கல்வி வளர்ச்சி பெற இத்தனை நூற்றாண்டுகள் பிடித்திருக்கிறது. இன்றைக்குக் கல்வித் தொழில் நுட்பத்தின் (Edcational Technology) காரணமாக, தொலைக்காட்சி, தலைமேல் வீழ்த்தி, எண்ணியல் காட்சிக் கருவி (DVD) போன்ற பல்வேறு நுட்பங்களால் பார்த்து அறிவது மிகப் பல்கி கல்விப் புரட்சியானது கால்கொண்டு மிகப்பெரிய வளர்ச்சி பெற்றுள்ளது.

**கண் பெற்றதன் பயன்**

திருவள்ளுவர் எண், எழுத்து ஆகிய இரண்டும் வாழும் மக்களுக்குக் கண் போல இன்றியமையாதது என்றார். அது மட்டும் அன்றி கண் எனும் உறுப்பை மற்றவற்றுக்குப் பயன்படுத்துவதை விட கல்விக்காக மிகப் பெரிதும் பயன்படுத்த வேண்டும் என்ற கருத்தில்

"கண்உடையர் என்பவர் கற்றோர் முகத்து இரண்டு

புண்உடையர் கல்லா தவர்" (குறள் - 393)

என்று மொழிகின்றார்.

கண் பெற்றதன் பயன், பார்த்துக் கற்கும் கல்வி அறிவைப் பெற்றுக் கொள்வதே. அத்தகையவர்களையே கண் உடையவர்கள் என்று சொல்ல முடியும் என்பது வள்ளுவரின் தீர்ப்பு. எனவே பார்த்த கற்றறிவதன் தற்போதையத் தொழில்நுட்ப விரிவாக்கங்களை உள்ளடக்கியதாகவே வள்ளுவரின் குறள் அமைந்திருக்கிறது. கல்வியின் தேவையையும் இன்றியமையாமையையும் கருதியே கல்வியில்லாதவர்கள் கண்களைப் பெற்றிருந்தாலும் அது புண் என்றே அருவருக்கத்தக்கது என்று மிகத் துணிவாகக் கல்லாதவரைச் சாடியுள்ளார் வள்ளுவர்.

**'புண்' என்று கூறிய இரண்டு இடங்கள்**

ல்வி பெறாத கண்ணை, நோய்க் குறியாகப் புண் எனக் கூறியதனைப் போலவே கண்ணோட்டம் இல்லாத கண்ணையும் வள்ளுவர் "புண்" என்றே கூறுகின்றார்.

கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம்
அஃதுஇன்றேல் புண் என்று உணரப் படும். (குறள் - 575)

என்பது வள்ளுவம். கண்ணுக்குக் கல்வி எவ்வாறு இன்றியமையாததோ அதனைப் போலவே. பழகியவர்களிடம் காட்டுகிற, அவர் சொல்வனவற்றை ஏற்றுக்கொள்கிற ஒரு நற்குணமாகிய கண்ணோட்டம் கண்ணுக்கு முக்கியமானது.

புறத்தில் இருப்பவற்றைப் பார்த்து உள்வாங்கிக் கொளல் கல்வி. கண்ணோட்டம் என்பது உள்ளத்திலிருந்து தோன்றி கெழுதகைமையும், நட்பும் உள்ளவர்களிடம் சென்று சோகின்ற நுட்பமான பண்பு. இது கண்ணின் வாயிலாக வெளிப்படுகிறது இப் பண்பு இல்லாத கண்ணையும் வள்ளுவர் புண் என்று குறித்திருப்பது கல்வியும் கண்ணோட்டமும் இல்லையெனில் உலக இயல்பு நடைபெறாது அன்றி என்பதைக் காட்டவே ஆகும்.

கண்ணோட்டம் என்பது பொருட்பாலில் அமைந்துள்ள ஓர் அதிகாரம். இதன் அதிகார வைப்பு முறையை விளக்கும் பரிமேலழகர் "மேல் வெருவந்த செய்யாமையுட் கூறியவற்றையே சிறப்புப் பற்றி விரித்துக் கூறுகின்றமையின் இஃது அதன்பின் வைக்கப்பட்டது" என்று கூறியுள்ளார்.

"வெருவந்த செய்யாமை" என்ற அதிகாரத்தில், "கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின்" என்ற குறள் அமைந்துள்ளது. இங்கே கண்ணோட்டம் என்பது "கண்" என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. கொடுங்கோன்மைக்கு எதிர்மாறான கருணை காக்கும் பண்பே கண்ணோட்டம் ஆகும். இப்பண்பு அரசர்க்கும் ஆட்சியாளர்க்கும் பெரிதும் இன்றியமையாதது எனினும், ஏனையோர்க்கும் பொருந்தும் என்பதைக் குறிக்கவே வள்ளுவர்,

கண்ணோட்டத்து உள்ளது உலகியல், அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை, (குறள்-572)

என உலகியலொடு பகுத்து அதன் பரந்துபட்ட நோக்கத்தைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

பொருட்பாலில் அமைந்த "கண்" என்பது பற்றிய விளக்கத்தைக் கண்டோம். இனி காமத்துப் பாலில் கண் என்பது பற்றிய வள்ளுவர் கருத்தை ஆய்வோம்.

**நோக்கு ஒன்றாதல்**

"குறிப்பறிதல்" என்ற அதிகாரத்தில், தலைமகன், தலைமகள் ஆகிய இருவரது கண்களும் ஒருமைப்பட்டு நோக்கின் அங்கே வாய்ச்சொற்களால் பயன் ஒன்றும் இல்லை என்று வள்ளுவர் கூறுகின்றார்.

காதவர் இருவர் கருத்து ஒருமிக்கக் கண்களே வாயிலாக இருக்கின்றன. உள்ளத்தின் உணர்வுகளை மற்றையோர்க்கு வெளிப்படுத்தும் கண், மற்றையோர் உணர்வுகளையும் உள் வாங்கிக்கொள்ளும் கொள்கலனாகவும், இருக்கிறது.

"கண்ணொடு கண்இணை நோக்குழிக்கின் வாய்சொற்கள்
என்ன பயனும் இல. "(குறள் - 1100)

என்ற வள்ளுவம் பின்னால் வந்த பல புலவர்களுக்கு கண் தொடர்பான ஊற்றுக்கண்களைத் திறக்கும் வாயிலாக அமைந்துவிட்டது. இக்குறளைப் பின்பற்றியே இராமன், சீதை ஆகியோர் முதற்கண் சந்திக்கும் காட்சியைப் புனையும் கம்பன்.

"வரிசிலை அண்ணலும் வாள்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினார்" (மிதிலைக் காட்சிப் படலம் - 37)

என்று கூறினான்.

**வள்ளுவரும் பாரதிதாசனும்**

கண்கள் பற்றிய வள்ளுவத்தின் தாக்கத்தைப் பாரதிதாசனிடமும் காண்கிறோம். "புரட்சிக்கவி" அல்லது "பில்கணீயம்"என் குறுங்காப்பியத்தில் காதலர் இருவரின் கண்களைப் பாரதிதாசன் வள்ளுவர் வழி மிகுந்த அழகுடன் காட்டுகிறார்.

அமுதவல்லி அரசனின் மகள்; உதாரன் இசைவாணன்; அரசனின் மகளுக்கு இசை கற்றுத்தர வேண்டும் என்று உதாரன் பணிக்கப்பட்டான். இருவருக்கும் இடையில் காதல் அரும்புமோ என் அஞ்சிய மன்னன் ஒரு தந்திரம் செய்தான். உதாரன் பார்வையற்ற எனவும். அமுதவல்லி குட்டரோகி எனவும் தெரிவிக்கப்பட்டது இருவருக்கும் இடையே திரையொன்று இடப்பட்டது. இசை வகுப்பு தொடர்ந்தது.

ஒருநாள் அமுதவல்லி அங்கே வரத் தாமதம் ஏற்பட்டது அப்போது உதாரன் முழுநிலாவை இருவிழியால் தழுவி

"நீலவான் ஆடைக்குள் உடல் மறைத்து

நிலாவென்று காட்டுகின்றாய் ஒளி முகத்தை"

என்று பாடி நின்றான். அப்போது அங்கே வந்த அமுதவல் "இசையாசிரியனைக் குருடன் என்றல்லவா கூறினார்கள்; அவன் எவ்வாறு நிலாவை வருணிக்க முடிந்தது?" என ஐயுற்றாள். திரை கிழிந்தது. ஒருவரை ஒருவர் நோக்கினார். அங்கே காதல் அரும்பியது. இந்நிலையை அமுதவல்லி பேசுவதாகப் பாரதிதாசன் பின்வருமாறு படைக்கின்றார்.

"மதி தரிசனமதைப் பாடினை!
கமலங்கள் எனும் கண்ணுடன் - உனைக்
காணப் பெற்றது என் கண்"

என்று இருவர் கண்களும் ஒருங்கிணைந்ததைப் பாரதிதாசன் வள்ளுவர் வழி நின்றே கூறுகின்றார்.

**யாப்பு என்றது ஏன்?**

கண்களின் வழியே அன்பு பரிமாறப்படுகிறது என்பதனை வள்ளுவர்.

நோக்கினாள்: நோக்கி இறைஞ்சினாள்; அஃது அவள்

யாப்பினுள் அட்டிய நீர். (குறள் -1093)

என்று குறிப்பறிதல்" என்ற அதிகாரத்தில் பேசுகின்றார்.

தலைமகள் தலைவனை நோக்கித் தன் மனக்குறிப்பைக் கண்களின் வழியே காட்டினாள். அக்குறிப்பைத் தலைமகன் உணர்ந்து கொண்டான். அப்போது இவ்விருவருக்கும் இடையே அன்புப் பயிர் தோன்றிவிட்டது. இந்த அன்புப் பயிருக்குத் தலைமகள் வார்த்த தண்ணீரே அவளது கடைக்கணித்த பார்வை. இங்கே யாப்பு என்பது ஒருவர் உள்ளத்தை மற்றொருவர் உள்ளத்துடன் கட்டி, ஈர்த்துப் பிணைக்கும் "அன்பு" ஆகும். கண்களின் வாயிலாகக் காட்டப்படும் அன்பு மிகவும் சக்தி வாய்ந்தது.

திருக்குறளில் உள்ள இதே கருத்தைப் பிரதிபலிக்கும் முறையில் சீதை, இராமன் ஆகியோரின் சந்திப்பைக் கம்பன் கீழ்வருமாறு அற்புதமாகப் படைக்கின்றான்.

"பருகிய நோக்கு எனும் பாசத்தால் பிணித்து

ஒருவரை ஒருவர் தம் உள்ளம் ஈர்த்தலால்" (மிதிலைக் காட்சிப் படலம் - 37)

வள்ளுவர் கூறிய "யாப்பு" என்ற சொல்லை அன்பின் ஈர்ப்பு என்ற பொருளில் பயன்படுத்தியுள்ளார். இதே கருத்தைக் கம்பன் "பாசத்தால் பிணித்து "என்று எதிரொலித்துள்ளான்.

இவ்வாறு வள்ளுவர் கண்ட கண்கள், பின்னால் தோன்றிய பல புலவர்களிடம் தாக்கத்தை ஏற்படுத்தி அன்னோர் புதிய கருத்துகளை வழங்குவதற்கான வழித்தடங்களைத் திறந்துவிட்டிருக்கிறது.

# குறள்நெறி

மின்னிதழ்:30 பங்குனி-2 -தி.பி.2053 மார்ச்சு-16- பொ.ஆ.2022



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



**திருக்குறளார் வீ.முனுசாமி**
(செபுத்தம்பர் 26, 1913 - சனவரி 4, 1994)

பொறுப்பாசிரியர் -மறைமலை இலக்குவனார் -
இணையாசிரியர் -முனைவர் தமிழியலன்
இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல் ல

<u>முன்னோர்களைப் போற்றுவோம்</u>

## திருக்குறளார்

திருக்குறள் வீ.முனுசாமி (செபுத்தம்பர் 26, 1913 - சனவரி 4, 1994) கல்லாரும் கற்றாரும் களிப்படையும் வண்ணம் திருக்குறள் சொற்பொழிவுகள் நிகழ்த்திப் புகழ் நிறுவியவர்.. திருக்குறள் மக்களின் அன்றாடப் பயன்பாட்டில் இருக்க வேண்டும் என விரும்பிய இவர், தமிழகத்தின் மூலை, முடுக்கெங்கும் பயணம் செய்து திருக்குறள் பரப்பும் பணியில் ஈடுபட்டார். 1952-1957 காலப்பகுதியில் இந்திய நாடாளுமன்ற உறுப்பினராக இருந்தார்

வாழ்க்கைக் குறிப்பு

விழுப்புரம் அருகே உள்ள தோகைப்பாடி என்ற ஊரில் அ. வீராசாமிக்கும் வீரம்மாளுக்கும் மகனாக 1913 செப்டம்பர் 26ஆம் நாள் பிறந்தார் முனிசாமி. திருச்சியிலுள்ள தூய சூசையப்பர் உயர்நிலைப் பள்ளியில் பள்ளிப்படிப்பை முடித்தார். பின்னர் திருச்சி தூய சூசையப்பர் கல்லூரியில் பயின்று பொருளியலில் இளங்கலைப் பட்டம் பெற்றார். சென்னை சட்டக்கல்லூரியில் பயின்று சட்ட இளவர் பட்டம் பெற்றார். 1943ஆம் ஆண்டில் தமிழ் வித்துவான் புகுமுக நிலையில் தேறினார்.

**குடும்பம்**

முனுசாமி 1939ஆம் ஆண்டில் திருச்சியைச் சேர்ந்த பாலசுப்பிரமணியர் மகளார் ஞானம்பாள் என்பவரை மணந்தார். இவர்கள் குமரகுருபரன், பாலசுப்பிரமணியன், கோபிநாதன், ஞானசூரியன், திலகர், , தேவகுரு என்னும் சுந்தரராஜன் என்னும் ஐந்து புதல்வர்களையும் தேவிகுமாரி, ரேவதி என்னும் இரண்டு புதல்விகளையும் பெற்றார் .

**திருக்குறள் பரப்பும் பணி**

திருச்சி தூய சூசையப்பர் உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் பொழுதே முனுசாமிக்கு திருக்குறளின் மீது ஆழ்ந்த ஈடுபாடு ஏற்பட்டது. 1330 குறட்பாக்களையும் மனப்பாடம் செய்த அவர், திருக்குறளை நகைச்சுவையாகவும் நயமாகவும் அன்றாட வாழ்க்கைக்குப் பொருத்தமாக இருக்குமாறும் மக்களுக்குச் சொல்ல வேண்டும் எனும் முயற்சியில் ஈடுபட்டார் 1935 ஆம் ஆண்டில் திருச்சி மலைக்கோட்டை நூற்றுக்கால் மண்டபத்தில் தனது திருக்குறள் பரப்பும் பணியை ஆரம்பித்தார்.

1949 ஆம் ஆண்டு கடலூரில் கூட்டுறவு முறையில் திருக்குறள் அச்சகம் தொடங்கப்பட்டு, அதனைப் பொறுப்பேற்று நடத்தினார் திருக்குறளார். மேலும், "குறள் மலர்' இதழ் மூலம் மக்களிடையே திருக்குறள் பரவுமாறு செய்தார். தமிழகத்தில் மட்டுமல்லாது தலைநகர் தில்லியிலும், மும்பையிலும், கடல்கடந்து மலேசிய, சிங்கப்பூர் நாடுகளிலும் திருக்குறளாரின் திருக்குறள் பரப்பும் பணி தொடர்ந்தது.

நாடாளுமன்ற உறுப்பினராக (1952-1957) இருந்தபோது, நாடாளுமன்றக் கூட்டங்களில் திருக்குறளுடன் பேச்சைத் தொடங்கினார். நாடாளுமன்றப் பதிவேடுகளில் தனது பெயருக்கு முன்பு திருக்குறளார் என்பதை இடம்பெறச் செய்தார். நாடாளுமன்றத்தில் அப்போது மக்களவைத் தலைவராய் (சபாநாயகர்) இருந்த அனந்தசயனம் அய்யங்கார், திருக்குறளார் நாடாளுமன்றத்தில் பேசுவதற்கு நல்ல ஆர்வமும் ஊக்கமும் கொடுத்தார்.

இக்காலகட்டத்தை தில்லி மற்றும் சுற்றுவட்டாரங்களில் வாழும் தமிழர்களிடையே குறட்பாக்களை எடுத்துப் பேசுவதற்கு திருக்குறளார் பயன்படுத்திக் கொண்டார்.
தமிழக அரசு தொடங்கிய திருக்குறள் நெறி பரப்பு மையத்திற்கு தொடர்ந்து நான்கு முறை இயக்குநராக நியமிக்கப்பட்டார் திருக்குறளார்.

**இயற்றிய நூல்கள்**

அகமும் புறமும்
அவள் சிரித்த சிரிப்பு
இன்பத்தோட்டம்
இன்பம் தரும் இன்பம்
உலகப் பொதுமறை திருக்குறள் உரைவிளக்கம்
ஏன் இந்த வாழ்வு
வடலூரும் ஈரோடும்
வள்ளுவர் உள்ளம்
வள்ளுவர் ஏன் எழுதினார்
வள்ளுவர் காட்டிய வழி
வள்ளுவர் காட்டும் வாழ்க்கைப்பாதை
வள்ளுவரைக் காணோம்
வள்ளுவர் குறளும் ஈ.வெ.ர. வாழ்க்கையும்
வள்ளுவர் வழிப்பயணம்
வள்ளுவர் பூங்கா
வள்ளுவரும் பரிமேலழகரும்
வள்ளுவரும் பெரியாரும்
திருக்குறள் அதிகாரவிளக்கம்
திருக்குறள் இன்பம்
திருக்குறள் உரைவிளக்கம்
திருக்குறள் காமத்துப்பால் பொழிப்புரை
திருக்குறளாரின் சிந்தனைகள்
திருக்குறளில் நகைச்சுவை
திருவள்ளுவரும் திராவிடக்கொள்கையும்

இவற்றுள் உலகப் பொதுமறை திருக்குறள் உரைவிளக்கம் என்னும் நூல் அவருக்கு அழியாப்புகழைக் கொடுத்தது. இதுபோன்ற விளக்க நூல் இதுவரை திருக்குறளுக்கு வெளிவரவில்லை என்ற சிறப்பைப் பெற்றது.

**பட்டங்கள்**

தமிழ்மறைக்காவலர், திருக்குறள் கேசரி, முப்பால் வித்தகர், திருக்குறள் இரத்தினம், நகைச்சுவை இமயம் என ஏராளமான பட்டங்கள் உலகத் தமிழர்களால் வழங்கப்பட்டன. ஆனாலும், 1951, ஜனவரி 23 இல் குடந்தை மாநகரில் உடையார்பாளையம் குறு நிலமன்னர் கச்சியுவரங்க காளாக்க தோழ உடையார் முதன் முதலில் அளித்த பட்டமான "திருக்குறளார்' எனும் பட்டமே இவருக்கு வாழ்நாள் முழுவதும் தொடர்ந்தது.(அடிப்படை:விக்கிபீடியா)

# குறட்பா- நாட்டியம்

**'திருக்குறளார்' வீ. முனிசாமி**

உடலுறுப்புகள் அசைவு பெற்று நடைபெறுவது நாட்டியக் கலையின் முதன்மையான இலக்கணமாகும். வாய்ச் சொற்களில்லாமல் - பேச்சு இன்றி, 'பாவங்களினால்' உள்ளத்தில் எழுகின்ற எண்ணத்தினை வெளிப்படுத்தி - பார்ப்பவர்கள் தெரிந்து புரிந்து அறிந்து சுவைக்குமாறு செய்தல் வேண்டும். கலைகளில் மிக மிக நுண்ணியதான நாட்டியக் கலையின் குறிப்புகளை ஆங்காங்குக் குறிப்பாக உணர்த்துகின்ற முறைகளைக் குறட் பாக்களில் காணுகின்றோம்.

'பாவம்' என்ற சொல் நாட்டியக் கலைக்கு உயிர் போன்றதாகும். கைகளினால், முகத்தினால், மற்றும் அவயவங்களினால் காட்டப்படும் 'பாவங்களுடனே' பாடல்களின் இராகம், பாடல்களை முறைப்படுத்துகின்ற தாளம் ஆகிய இயல்புகளை ஒன்றுபடுத்தி, 'பரதம்' என்று கூறுவார்கள். இசைக் கலையும் நாடகக் கலையும் இணைந்து சிறப்பளிப்பது நாட்டியக் கலையாகும்.

நாட்டியக் கலையின் உயிரோட்டமாக இருப்பது கண்களின் செயல் களாகும். ஆசிரியர் திருவள்ளு வனார் பொதுப்பட எல்லா உறுப்புகளையும் குறித் துக் காட்டிக் குறட்பாக்கள் அமைத்துள்ளார். கண் களின் இயல்புகளைப்பற்றித் தனிப்பட்ட பல அதி காரங்களைத் திருக்குறளில் காண முடிகின்றது.

உதாரணமாக, கண்ணோட்டம், குறிப்பறிதல், (பொருட்பால்), குறிப்பறிதல் (காமத்துப்பால்), குறிப்பு அறிவுறுத்தல், தகை அணங்கு உறுத்தல்,கண்விதுப்பழிதல், படர்மெலிந்து இரங்கல், பசப் புறு பருவரல், உறுப்பு நலன் அழிதல், புலவி நுணுக்கம் முதலியன போன்ற அதிகாரங்கள் கண் களின் சிறப்பினை உணர்த்துகின்றன என்று கொள் ளுதல் வேண்டும். பிறர்பால் இரக்கம் கொள்ளும் தன்மையினைக் கண்களே எடுத்துக் காட்டுவனவாகும் என்று கூறவந்த ஆசிரியர் 'கண்ணோட்டம்' என்று கூறினார்.

கண்ணோட்டம் என்னும் கழிபெருங்காரிகை என்ற தொடர் கண்களின் சிறப்பினைக் கூறுவ தாகும். திருக்குறள் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்ற மூன்று பெரும் பகுதிகளைக் கொண்டதாகும். * குறிப்பறிதல்' என்ற அதிகாரம், பொருட்பாலில் சிறப்பான உண்மைகளைப் புலப்படுத்துகின்றது. 'குறிப்பறிதல்' என்ற இந்தப் பெயரில் காமத்துப்பாலில் ஓர் அதிகாரம் அமைக்கப்பட்டுள்ளது. இந்த அதிகாரத்திற்கும் 'குறிப்பு அறிவுறுத்தல்' என்ற அதிகாரத்திற்கும் உள்ள வேறுபாட்டினைப் புரிந்து கொள்ளுதல் வேண்டும்.

நாட்டுத் தலைவனான மன்னனுக்குப் பல வகைகளில் அறிவுரைகள் கூறுகின்ற ஆசிரியர் ‘குறிப்பறிதல்' என்ற இந்த அதிகாரத்திலும் நுணுக்கமான மறைபொருள் உண்மைகளை விளக்கம் செய்கின்றார்.

பிறருடைய முகக் குறிப்புகளைக் கொண்டே - கண்களின் பார்வைகளைக் கொண்டே - மற்றவர்கள் வாய்விட்டுக் கூறாமலேயே அவர்கள் உள்ளத்தில். கொண்டுள்ள எண்ணங்களை அறிந்து உணர்ந்து சொல்லக்கூடிய ஆற்றல் படைத்தவர்களைக் ' குறிப் பறிதல்' என்ற இந்த

அதிகாரம் எடுத்துக் கூறுகின்றது. இத்தகையவர்களை நாட்டுத் தலைவன் தனக்கு உற்ற துணையாக வைத்திருத்தல் இன்றியமையாததாகும் என்று ஆசிரியர் கூறுகின்றார்,

" 'கூறாமை நோக்கிக் குறிப்பு அறிவான்" என்ற தொடர் கண்களின் சிறப்பினை உணர்த்துவ தாகும். 'நுண்ணியம் என்பார் அளக்குங்கோல்' ' என்ற தொடரும், இவை போன்ற பிறவும் கண்களின் சிறப்பினை உணர்த்துகின்றன. "கடுத்தது காட்டும் முகம்", "முகம் நோக்கி நிற்க அமையும்" என்பன போன்ற தொடர்கள் முகங்களின் இயல்புகளைக் குறிக்கின்றவைகளில் ஒருசில ஆகும். காதலர்கள் ஒருவரையொருவர் நோக்குகின்ற நோக்குகளையெல்லாம் சிறப்பாக, தகையணங்கு உறுத்தல்", "குறிப்பறிதல்" (காமத்துப்பால்) என்ற அதிகாரங்களில் காண முடிகின்றது. காதலியானவள் எதிர்நோக்கு நோக்குவதை 'நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல்" என்ற தொடர் குறித்துக் காட்டுகின்றது . இக் கருத்தினைக் காதலன் வாயிலாக ஆசிரியர் அமைத்துக் காட்டுகின்றார். " இரு நோக்கு இவள் உன்கண் உள்ளது" தொடரும் கண்களின் சிறப்பினைக் காட்டுவதாகும். இவ்வாறாக எண்ணிறந்த இடங்களில் உறுப்புகளுக்கு எல்லாம் தலைமையான கண்களின் செயல் கூறப்படுகிறது.

அழகிய நுதலின் (நெற்றியின்) அழகினைக் கூறுகின்ற குறட்பாக்கள் மிகப் பலவாகும். "கதுப்பி னாள் தோள்", " அமிழ்தின் இயன்றன தோள்" என்ற தொடர்களெல்லாம் தோள்களின் அழகினை யும் சிறப்பினையும் உணர்த்துவனவாகும். பெண்களின் பாதங்களை (அடிகளை)க் குறிக்கின்ற ஒரு குறட்பா மிக அழகாக அமைந்துள்ளது. "அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம்."

மூங்கில் போன்ற தோள்கள், தளிர் நிறம் போன்ற மேனி, முத்துகள் போன்ற பற்கள், இயல்பான மனம், வேல் போன்ற கண்கள் என்ற அனைத்தையும் ஒரு குறட்பா சுருக்கமாக விளக்குகின்றது.

"முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேல் உண்கண் வேய்த்தோ ளவட்கு"

இவ்வாறு உறுப்புகள் பலவற்றையும் ஆங்காங்கே அழகுபடுத்தியும், அவைகளின் செயல்களைப் புலப் படுத்தியும் வருகின்ற ஆசிரியரின் ஆழ்ந்த கருத்துச் சிந்திக்கத் தக்கதாகும். வாய்விட்டுப் பேசாமலேயே தன்னுடைய எண்ணத்தினை, தன்னுடைய உடல் உறுப்புகளின் செயல்களினால் புலப்படுத்தினாள் என்பதற்குப் பற்பல குறட்பாக்கள் எடுத்துக்காட்டுகளாக உள்ளன என்றாலும், இரண்டு குறட்பாக்களை மட்டும் குறித்துக் காட்டலாம்.

' 'நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள்
அஃதவள் யாப்பினுள் அட்டிய நீர்.

"யான்நோக்குங் காலை நிலன்நோக்கும் நோக் காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும்."

நல்ல உறுப்புகளில் ஒன்றான புருவத்தின் செயல்களைக் குறிக்கின்றபோது "கொடும் புருவம்" என்றும், பற்களைக் குறிக்கின்றபோது, "பணி மொழி வால் எயிறு" என்றும், இடுப்பினைக் குறிக்கின்றபோது 'நுசுப்பிற்கு" என்றும் இப்படியாக உறுப்புகளையெல்லாம் ஆசிரியர்

குறித்துக் காட்டுகின்றார்கள். இயல்பாகவே அசைகின்ற இயல்பு மகளிர்க்கு அமைந்துள்ளவொன்றாகும் என்பதனைச் சிந்திக்க வேண்டும்.

அசைகின்ற இயல்பும் மெல்ல நகைக்கின்ற இயல்பும் தனிச் சிறப்பாக அமைவனவாகும் என் பதனைக் குறட்பா ஒன்று சிறப்பிக்கின்றது.

'அசையியற்கு உண்டு ஆண்டுஓர் ஏஎர்யான் நோக்கப்

பசையினள் பைய நகும்."

இயல்பாகவே பெண்கள் வளையல்கள் அணிந்திருப் பவர்கள் என்ற கருத்தினைக் குறட்பாக்கள் பல நமக்கு எடுத்துக்காட்டுகின்றன. ஒரு குறட்பாவினைக் காணலாம்.

"கண்டுகேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும்

ஒண்டொடி கண்ணே உள."

நாயகியைப் பிரிந்து நாயகன் இன்றிமையாப் பணியின்பொருட்டு வெளியூர் சென்றிருக்கின்றான். நாயகன் பிரிவினால் நாயகி மிகுதியும் துன்புறு கின்றாள். உடம்பு மெலிந்துவிடுகின்றது. உடல் மெலிவினை உணர்த்துவதாக வளையல்கள் குறிக்கப்படுகின்றன. கையிலிருந்த வளையல்கள் முன் வரிகளைத் தாண்டிக் கழன்றுவிடுவனவாக உள்ளன. இந்த நிகழ்ச்சியினை உணர்த்துகின்ற குறட்பாவில், ' வளையல்கள் பேசுகின்றன' என்ற கருத்தினை அமைத்து ஆசிரியர் நயமாகக் கூறு கின்றார். சிந்திக்கவேண்டிய ஒரு குறட்பா: கை

"துறைவன் துறந்தமை தூற்றா கொல் முன்கை

இறை இறவா நின்ற வளை."

காதலர்கள் ஒருவரையொருவர் கண் பார்வைகளினால் நோக்குகின்ற நோக்குகளைப் பற்பல நல்ல சொற்களினாலும் தொடர்களினாலும் ஆசிரியர் திருவள்ளுவனார் விளக்கிக் காட்டுகின்ற பான்மை சிந்திக்கத் தக்கதாகும். எதிர்நோக்கு. இருநோக்கு, சிறுநோக்கு. நிலன்நோக்கு, சிறக்கணித்தநோக்கு, பொது நோக்கு. இணை நோக்கு என்பன போன்ற பல இடங்களையும் கண்டு தெளிதல் வேண்டும்,

"கண்தாம் கலுழ்வது", "நோக்கிய உண்கண்" "கதுமெனத் தாம் நோக்கி " "காம நோய் செய்த என் கண் " "வேண்டி அவர்க் கண்ட கண் " "அறைபறை கண்ணார்" என்பன போன்றவைகள் எல்லாம் கண்களுடைய அரிய, நுட்பமான தன்மைகளையெல்லாம் விளக்குகின்ற 'கண்விதுப்பு அழிதல் ' என்ற அதிகாரத்தில் காணப்படுகின்றன,

மென்மைத் தன்மை நிறைந்த உடம்பு இயல் பாகவே மகளிர்க்குரியதாகும் என்பதனை "நோனா உடம்பு" என்ற சொற்களினால் விளக்கிக் காட்டு கின்றார். நல்ல குறட்பா அமைந்துள்ளது.

"காமமும் நானும் உயிர்காவாத் தூங்கும் என்

நோனா உடம்பின் அகத்து"

மகளிர்க்கு மிக மிக ன்றியமையாத கவர்ச்சிகரமான அவயவங்கள் என்று கூறப்படுவனவற்றைத் திருக்குறளிலேயே இரண்டு குறட்பாக்களில் தான் ஆசிரியர் சொல்லிவைத்துள்ளார்,

“கல்லா தான் சொற்கா முறுதல் முலை இரண்டும்
இல்லா தாள் பெண்கா முற் றற்று."
"கடா அக் களிற்றின் மேல் கட்படாம் மாதர்
படாஅ முலை மேல் துகில்."
முந்திய குறட்பா பொருட்பாலிலும், பிந்திய குறட்பா காமத்துப்பாலிலும் காணப்படுவனவாகும்.
கல்வி கற்பதற்கும், காதல் புரிவதற்கும் இள மைப் பருவமே - வாலிபப் பருவமே உரியது என்ற காரணத்தினால் கல்வியைப்பற்றியும், காதலைப் பற்றியும் பேசப்படுகின்ற இடங்களில் ஒத்த முறை யில் இந்த உவமைகள் அமைந்தன போலும்!!

உறுப்புகளின் இன்றியமையாத் தன்மையும் அவைகளின் செயல்களுமே நாட்டியக் கலைக்கு முத லிடம் வகிக்கின்றன என்பதனை நினைவுபடுத்த வேண்டியதில்லை. சிறப்பான உறுப்புகள் அனைத்துமே ஆசிரியர் திருவள்ளுவரால் சுட்டிக் காட்டப் பட்டுவிடுகின்றன என்று அறிதல் வேண்டும். காமத்துப்பாலில், " உறுப்பு நலன் அழிதல்" என்றொரு அதிகாரம் காணப்படுகிறது. திருமணம் நடந்த நாளில் மகளிர் தோள்கள் பூரிக்கின்றன என்பதனைக் குறிக்க வந்த ஆசிரியர் , .
" மணந்த நாள் வீங்கிய தோள்"
என்ற தொடரினால் குறிக்கின்றார். " உறுப்பு நலன்அழிதல்" என்ற இந்த அதிகாரத்தில், 'நாணின கண் “ “பனி வாரும் கண் “ “ வாடிய தோள்", தோள் நெகிழ “ “ வாடு தோள் “ “பேதை நுதல் “ “பெருமழைக் கண் “ “ஒள் நுதல் செய்தது கண்டு “ இவைகளெல்லாம் உறுப்புகளின் செயல்களைப் புலப்படுத்துவன ஆகும்.
ஒருவர் தோற்றத்தினைக் கண்டபோதே அவரது மனநிலையைப் பிறர் கண்டுகொள்ள முடிவதனைப் பொதுவாகக் குறிப் பறிதல்' என்ற அதிகாரம் கூறுகின்றது. இதனை விட மிகவும் ஆழமாகச் சிந்திக்கவேண்டிய அதிகாரம் என்று குறிப்பிடும் தகுதி பெற்ற அதிகாரம் ஒன்று உண்டு. அதுதான் ‘குறிப்பு அறிவுறுத்தல் ‘. மற்றவர்கள் உணர்ந்துகொள்ளும்படி வாயினால் பேசாமலேயே உறுப்புகளினால் உணர்த்துமாறு செய்வதாகும். அதாவது பேசத் தெரியா உறுப்புகளையே பேசவைப்பதாகும்.கண்கள் பேசுகின்றன என்பதனை ஒரு குறட்பா குறிக்கின்றது.
“கரப்பினும் கை இகந்து ஒல்லா நின் உண்கண்
உரைக்கல் உறுவதொன்று உண்டு'
என்று வாயினால் சொல்லாமல் கண்களாலேயே சொல்லி, தன்னுடைய எண்ணத்தினை நிறைவேற்றவேண்டுமென்று நாயகி சொல்லுகின்றாள். முன்னர், ' கண்கள் உரைத்தன' என்று சொல்லியது போல, 'கண்கள் சொல்லுகின்றன' என்று ஒரு குறட்பா விளக்கம் தருகின்றது.
" பெண்ணினால் பெண்மை உடைத்துஎன்ப கண்ணினால்

காமநோய் சொல்லி இரவு "
பெண்கள் பற்பல சொற்களினால் தங்கள் கருத் துகளைச் சொல்லாமல் மிக மிக நுணுக்கமாகக் கருத்துகளை அமைத்து உணர்த்துவார்கள் என்ற சீரிய உண்மையினைப் 'புலவி நுணுக்கம்' என்ற அதிகாரம் மிகத் தெளிவாக எடுத்துக் கூறுகின்றது. காம இன்பத்திற்கு ஊடலும் கூடலும் தேவையென்ற அரிய உண்மையினைப் புலப்படுத்துகின்ற ஆசிரியர் ' புலவி நுணுக்கம்' என்ற அதிகாரத்தில் நுட்பமான மதி படைத்த நாயகியின் சிறப்பினைக் கூறுகின்ற அருமையான முறை பன்முறை யும் சிந்திக்கத் தக்கதாகும்.

நாட்டியக் கலையின் முழுமையான தன்மையினைக் குறட்பா ஒன்றினால் ஆசிரியர் உணர்த்துகின்ற அமைப்பு வியப்பினை உண்டாக்குவதாகும். அந்த நாயகி வாய் பேசவில்லை; அவளுடைய கண்களே கருத்தினை நாயகன் நன்கு புரிந்து கொள்ளுமாறு செய்துவிட்டன. மூன்று முறை அந்த நாயகி பார்த்தாள் என்று ஆசிரியர் குறிக்கின்றார். தன்னுடைய உடம்பில் மூன்று இடங்களையும் அவள் நோக்கினாள் என்று ஆசிரியர் கூறுகின்றார். ஒரு வார்த்தைகூட அவள் வாய் திறந்து பேசவில்லை எனறாலும் தன் மனத்திலுள்ள ஆழ்ந்த கருத்தினைப் புலப்படுத்திவிட்டாள் என்று குறட்பா நமக்கு உணர்த்துகிறது

இந்தக் குறட்பாவில் நினைத்துப் பார்க்க வேன் டிய அரிய உண்மை ஒன்று பொதிந்துள்ளது. அதாவது இவ்வாறு பார்வைகளினால் தன் கருத்தினைப் புலப்படுத்திய அவள் தன்னுடைய நாயகனைப் பார்க்கவில்லை என்பதாகும்.

இந்தக் குறட்பா-நாட்டியம் போல அவன் செய்த செயல்களைக் குறிக்கின்ற சூழ்நிலையினைக் கண்டு அறிதல் வேண்டும்.

நாயகியை வி டுப் பிரிந்து சென்றிருந்த நாயகன் திரும்பவும் வீடு வந்து சேர்ந்தான். நாயகியுடன் மகிழ்ச்சியுடன் வாழ்ந்து கொண்டிருக்கின்றான். பிரிவினால் வருகின்ற துன்பத்தினை அவள் முன்னர் அறிந்து கொண்டிருக்க முடியாதவளாக இருந்தாளானபடியால், முதன் முதலில் நாயகன் பிரிவுக்கு உடன்பட்டுவிட்டாள். பிரிந்த நாயகன் திரும்பி வந்து சேர்ந்தான். மீண்டும் பிரித்து செல்வானோ என்ற ஐயம் உண்டானது.

பிரிந்தால், துன்பம் அதிகரிக்கும். அவள் உள் ல் நிறைந்துவிட்ட துன்பத்தினை வாயினால் சொல்லாமல் பார்வைகளினால் உணர்த்திய பான்மை சிகரம் வைத்த நாட்டியக் கலை போல் தோன்றுகிறது. அவ்வாறு நாயகன் பிரிந்து செல்வானேயானால், அவன் பின்னே தானும் செல்ல வேண்டும் என்று முடிவு செய்துவிட்டாள்.

தொடி என்பது கைகளின் மேற்புறத்தில் அணிந்து கொள்ளப்படுகின்ற வளையல்களாகும்.அது சிறந்த அணிகலமாகும் நாயகி நினைக்கின்ற நினைப்பு என்னவென்றால், நாயகனைப் பிரிந்து விட்டால், உடம்பு மெலிந்து, ‘தொடி ‘ என்கின்ற வளையல் தான் இருந்த இடத்திலிருந்து. கழன்றுவிட நேரிடுமே என்று பரிதாபகரமாக அந்தத் தொடியை (தோள் வளையை) தோக்கினான் அவ்வாறு உண்டாவதற்குக் காரணமாக இருக்கின்ற - மெலிந்து விடப் போகின்றவைகள் தோள்களாகும்.ஆதலால் வருந்தத்தக்க நிலை உண்டாகப்போகின்ற - மென்மையான தோள்களையும் பார்த்தாள். இந்த மாதிரியான -

துன்பகரமான செயல்கள் நடவாதிருக்க வேண்டு மென்றால், நாயகன் பின்னே சென்றுவிடுவது தான் நல்லதென்று முடிவு செய்தாள். அவ்வாறு நாயகன் பின்னே செல்வதற்குப் பாதங்கள் தானே உதவவேண்டும்; அதற்காகத் தன் னுடைய அடிகளையும் பார்த்தான். தொடி நோக்கி னாள்', 'தோள் நோக்கினாள்', அடி நோக்கினாள்´ இந்தக் குறட்பாவில் 'அவள் செய்தது என்பது பன்முறையும் சிந்திக்கத் தக்கதாகும்.

நாட்டியக் கலையினை உணர்த்துகின்ற குறட் பாவினைக் கண்டு மகிழ்வோமாக.

“தொடி நோக்கி மென்தோளும் நோக்கி அடி நோக்கி
அஃது ஆண்டு அவள் செய்தது."

## ஒத்ததறிவான் உயிர்வாழ்வான்

முனைவர் இர. பிரபாகரன்

ஒப்புரவு என்ற சொல் ஒவ்(வு), புரவு என்ற இருசொற்களின் சேர்க்கையால் உருவான ஒருசொல். ஒவ்வு என்பதற்கு ஒத்திருத்தல் என்று பொருள். புரவு என்ற சொல்லுக்குப் பேணல் அல்லது வாழ்வித்தல் என்று பொருள். ஆகவே, மக்கள் அனைவரும் ஒத்தவர்கள் என்று கருதி, அவர்களோடு தனது செல்வத்தைப் பகிர்ந்து வாழ்தலையும், உலக நடையுடன் ஒத்து வாழ்தலையும் ஒப்புரவு என்ற சொல் குறிக்கிறது. மற்றவர்களும் நம்மைப் போன்றவர்கள் என்ற புரிதலும் உணர்வும் இருந்தால், மற்றவர்களின் துன்பம், துயரம், வறுமை ஆகியவை நம்முடைய துன்பம், துயரம், வறுமை ஆகியவற்றைப் போன்றவைதான் என்ற எண்ணம் தோன்றும். அத்தகைய எண்ணம் நமது உள்ளத்தில் உறுதியானதாக இருந்தால், மற்றவர்களுக்கு நம்மால் இயன்ற உதவியைச் செய்ய வேண்டும் என்ற எண்ணமும் தோன்றும். அந்த எண்ணத்தின் தாக்கத்தால், உதவி செய்யும் முயற்சிகளில் நாம் ஈடுபடுவோம். உதவி செய்வதில் பலவகைகள் உள்ளன. அவற்றுள், ஈகையைப் பற்றியும் ஒப்புரவைப் பற்றியும் வள்ளுவர் திருக்குறளில் குறிப்பிடுகிறார். ஈகை வேறு. ஒப்புரவு வேறு. ஒரு ஏழை நம்மிடம் வந்து உணவோ அல்லது ஏதோ ஒரு பொருளோ வேண்டுமென்று கேட்டால், அவனிடமிருந்து எதையும் எதிர்பார்க்காமல், நம்மால் இயன்றதை அவனுக்குக் கொடுப்பது ஈகை. எவரும் நம்மிடம் வந்து கேட்காமலேயே, மற்றவர்களும் நம்மை ஒத்தவர்கள் என்பதை உணர்ந்து அவர்களுக்கு உதவி செய்வதைக் கடமையாகக் கருதி, கைம்மாறு எதையும் எதிர்பார்க்காமல் உதவி செய்வது ஒப்புரவு. உதாரணமாக, பசி என்று நம்மிடம் வந்து கேட்பவனுக்கு உணவளிப்பது ஈகை. நாம் வாழும் ஊரில், வறுமை காரணமாகப் பலர் உண்ண உணவில்லாமல் இருக்கிறார்கள் என்பதை உணர்ந்து, அவர்களுக்காக ஒரு அன்னசத்திரம் நடத்தினால் அது ஒப்புரவு. ஈகை என்ற தமிழ்ச் சொல்லுக்கு இணையான ஆங்கிலச் சொல் Charity; ஒப்புரவு என்ற தமிழ்ச் சொல்லுக்கு இணையான ஆங்கிலச் சொல் Philanthropy.

ஒத்ததை அறிந்தவனே உயிர்வாழ்பவன்

"பிறரும் நம்மைப் போன்றவர்கள்தான் என்பதை உணர்ந்தவன்தான் உண்மையிலேயே உயிரோடு இருப்பவன். அந்த உணர்வு இல்லாதவன் உயிரோடு இருந்தாலும் அவன் செத்தவனாகவே கருதப்படுவான்." என்று வள்ளுவர் (குறள் – 214).கூறுகிறார்

ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். (குறள் – 214)

மக்கள் அனைவரும் ஒப்பானவர் என்ற கருத்தை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் தாம் இயற்றிய புறநானூற்றுப் பாடலில் கூறியிருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது (புறநானூறு-189). அந்தப் பாடலில், அவர், "தெளிந்த கடலால் சூழப்பட்ட இவ்வுலகம் மற்றவர்களுக்கும் பொதுவானது என்று எண்ணாமல், தானே ஆட்சி செய்யும் ஒருவர்க்கும், பகலும் இரவும் தூங்காமல், விரைந்து ஓடும் விலங்குகளை வேட்டையாடுபவனுக்கும் உணவு ஒருபடி அளவுதான்; அவர்கள் உடுப்பது இரண்டு ஆடைகள் தான். அதுபோல், மற்ற தேவைகளிலும் இருவரும் ஒப்பானவரே ஆவர். ஆகவே, எவ்வளவு செல்வம் இருந்தாலும் ஓரளவுக்கு மட்டுமே அதை அனுபவிக்க முடியும். அதனால், செல்வத்தினால் ஒருவன் பெறக்கூடிய பயன் அதைப் பிறர்க்கு அளித்தலேயாகும். அவ்வாறு பிறர்க்கு அளிக்காமல் தானே அனுபவிக்கலாம் என்று ஒருவன் எண்ணினால், செல்வத்தினால் வரும் பயன்கள் பலவற்றையும் அவன் இழந்தவனாவான்." என்று கூறுகிறார்.

**ஒப்புரவு மழையைப் போன்றது**

ஒப்புரவு என்பது மழையைப் போன்றது. மக்களுக்கு நீரை வழங்குவதைத் தன் கடமையாகக் கருதி, மேகம் மழை பொழிகிறது. அந்த மேகத்திற்கு உலக மக்கள் என்ன கைம்மாறு செய்யப் போகிறார்கள் என்று வள்ளுவர் கேட்கிறார் (குறள் – 211). மக்கள் அனைவரும் தன்னை ஒத்தவர்கள் என்று கருதி, அவர்களிடமிருந்து எதையும் எதிர்பார்க்காமல் அவர்களுக்கு ஒப்புரவு செய்பவனின் செயலும் அந்த மேகத்தின் செயலைப் போன்றதுதான் என்று வள்ளுவர் குறிப்பால் உணர்த்துகிறார்.

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்னாற்றுங் கொல்லோ உலகு? (குறள் – 211)

முயற்சியால் வந்த செல்வத்தைப் பிறர்க்கு அளித்தல் ஒருவன் தன் முயற்சியால் பெற்ற செல்வம் முழுதும் தகுதியுடையவர்களுக்குப் பலவகைகளிலும் உதவி செய்தற் பொருட்டே ஆகும் என்பது வள்ளுவரின் கருத்து (குறள் – 212).

தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. (குறள் – 212)

தாள் என்ற சொல்லுக்கு முயற்சி என்றும் வேளாண்மை என்ற சொல்லுக்கு உபகாரம் என்றும் பொருள். ஒருவன் தன்னுடைய செல்வத்தைத் தகுதியுடையவர்களுடன் பகிர்ந்துகொள்வதுதான் ஒப்புரவு என்பது வள்ளுவரின் கருத்து. அதனால்தான் அரசன் தன் குடிமக்களுக்குச் செய்யும் உதவியை ஈகை என்றும் கொடை என்றும் மட்டுமே கூறி, ஒப்புரவு என்று வள்ளுவர் கூறாமல் விட்டுவிட்டார். அரசனின் பொருளெல்லாம் மக்களின் பொருளாகையால் அவன் அவற்றைப் பிறர்க்குக் கொடுப்பது ஒப்புரவாகாது. அதுபோல், இக்காலத்தில் ஆட்சியில் இருப்பவர்கள், மக்களின் செல்வத்தில் ஒரு பகுதியை மக்களுடன் பகிர்ந்துகொள்வதும் ஒப்புரவு அன்று. தேர்தல் சமயங்களிலும், பொங்கல் போன்ற விழாக்காலங்களிலும் வாக்காளர்களுக்குப் பரிசு வழங்குவது ஒப்புரவு அன்று. அது ஒருவகைக் கையூட்டு. மேலும், ஒப்புரவு செய்பவன் தன் செல்வத்தைத் தகுதியுடையவர்களுடன் பகிர்ந்துகொள்ள வேண்டும் என்று வள்ளுவர் கூறியிருப்பதால், கோயில்களுக்குக் கொடுப்பதும், சாமியார்களுக்குக் கொடுப்பதும், பொருள் உள்ளவர்களுக்குக் கொடுப்பதும், உழைக்க விருப்பமில்லாத சோம்பேறிகளுக்குக் கொடுப்பதும் ஒப்புரவு அல்ல என்பது புலப்படுகிறது. ”பாத்திரம் அறிந்து பிச்சை இடு” என்ற பழமொழி இங்கு நினைவுகூரத்தக்கது. தேவநேயப் பாவாணர், தன்னுடைய உரையில் “தமிழைக் கெடுப்பவரும் தகுதியற்றவராவார்” என்று கூறுகிறார். அது அவருடைய தீவிரத் தமிழ்ப்பற்றுக்கு ஒரு அடையாளமாகத் தோன்றுகிறது!

இந்தக் குறளுக்கு எடுத்துக்காட்டாக, தமிழகத்தில் கலியாணசுந்தரம் என்பவர் வாழ்ந்துகொண்டிருக்கிறார். இவர் திருநெல்வேலிக்கு அருகில் உள்ள மேலக்கருவேலங்குளம் என்ற ஊரில் பிறந்தவர். இவர் தமிழ், வரலாறு மற்றும்

நூலகவியல் (Library Science) ஆகிய துறைகளில் பட்டம் பெற்று, முப்பத்தி ஐந்து ஆண்டுகள் நூலகராகப் (நூலகர் – Librarian) பணியாற்றி ஓய்வு பெற்றவர். இவர் நூலகராகப் பணியாற்றியபொழுது, உணவகங்களில் உணவு பரிமாறுபவராகவும் பணிபுரிந்தார். உணவகங்களில் கிடைக்கும் வருமானத்தைத் தன் செலவுக்கு வைத்துக்கொண்டு, நூலகராகப் பணிபுரிந்ததற்காகக் கிடைத்த வருமானத்தை ஏழைகளுக்கு உதவும் அறக்கட்டளைகளுக்கு கொடுத்துப் பொதுநலத் தொண்டாற்றினார். இவ்வாறு அவர் கொடுத்தது 30,00,000 உரூபாய்கள். இவர் பெற்ற ஓய்வூதியமாகிய 10,00,000 உரூபாய்களையும் ஏழைகளுக்கு அளித்தார். இவருடைய சேவையைப் பாராட்டி ஒரு அமெரிக்க நிறுவனம் இவருக்கு 30 கோடி உரூபாய்களைப் பரிசாகவும் "ஆயிரம் ஆண்டுகளில் சிறந்த மனிதர் (Man of the Millennium)" என்ற பட்டமும் அளித்தது. அந்தத் தொகையை குழந்தைகள் நலனுக்கு அளித்து, இவர் பலரையும் வியப்பில் ஆழ்த்தினார். இங்கிலாந்தில் உள்ள கேம்ப்ரிட்ஜ் பல்கலைக்கழகம் (University of Cambridge), "உலகிலேயே மிகவும் குறிப்பிடத் தக்க மனிதர்" என்ற பட்டம் அளித்ததோடு மட்டுமல்லாமல், நூலகத்துறைக்கு நோபல் பரிசு என்ற ஒன்று இருந்தால், அதை பெறும் தகுதி இவருக்கு உண்டு என்ற குறிப்பையும் வழங்கியது. புகழ்பெற்ற திரைப்பட நடிகர் ரஜினிகாந்த் இவரைத் தன் தந்தையாகத் தத்தெடுத்துக்கொண்டு தன் வீட்டிலேயே தங்குமாறு கூறினார். இவர் அவருடைய அழைப்பை ஏற்றுக்கொள்ளவில்லை. கலியாணசுந்தரம் அவர்கள் மக்கள் அனைவரும் சமம் என்ற நோக்கத்தோடு, ஏழைகளுக்குத் தன்னால் இயன்றதைச் செய்யவேண்டும் என்ற மனவுறுதியோடு, தன் உழைப்பால் பெற்ற வருமானம், ஓய்வு ஊதியம், பரிசுத் தொகைகள் ஆகிய அனைத்தையும் ஏழைகளுக்குக் கொடுத்து வேளாண்மை செய்த பெருமைக்குரிய வள்ளல். இவர் வள்ளுவரின் குறளுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக வாழ்ந்துவருகிறார் என்றால் அது மிகையாகாது. இந்த உலகம் ஏன் இயங்கிக் கொண்டிருக்கிறது என்று சிந்தித்த, கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என்ற பாண்டிய மன்னன், "தனக்கென்று வாழாமல் பிறர்க்காக வாழ்பவர்கள் இருப்பதால்தான்." என்ற முடிவுக்கு வந்தான் (புறநானூறு – 182). அவன் முடிவு சரியானது என்பதற்கு, கலியாணசுந்தரம் போன்றவர்கள் சான்று.

ஒப்புரவில் மூன்று வகைகள்

பல வகைகளில் ஒப்புரவு செய்யலாம். அவற்றுள் மூன்று விதமான ஒப்புரவுகளை வள்ளுவர் குறிப்பிடுகிறார். ஒன்று, பேரறிவாளனின் ஒப்புரவு, மற்றொன்று, நயனுடையவனின் ஒப்புரவு, மற்றொன்று, பெருந்தகையானின் ஒப்புரவு.

பேரறிவாளனின் ஒப்புரவு: பேரறிவாளன் என்பது மிகுந்த அறிவுடையவனைக் குறிக்கிறது. மிகுந்த அறிவுடையவனிடம் செல்வம் இருந்தால், அவன் அந்த செல்வத்தைப் பலரோடு பலகாலம் பகிர்ந்துகொள்வதற்கு ஏற்ற வகையில் ஒப்புரவு செய்வான். அவன் ஒப்புரவு செய்வதை, ஊரில் உள்ளவர்கள் நீர் அருந்தும் குளத்திற்கு வள்ளுவர் ஒப்பிடுகிறார். உலகிலுள்ள உயிர்களை எல்லாம் விரும்பி ஒப்புரவு செய்யும் பேரறிவாளனின் செல்வம், ஊரில் வாழ்பவர்கள் அனைவரும் நீர் அருந்தும் குளம் போன்றது (குறள் – 215). அந்தக் குளம் தன்னிடமுள்ள நீரை அனைவரோடும் பகிர்ந்துகொள்வதைப்போல் பேரறிவாளன் தன் செல்வத்தைப் பகிர்ந்துகொள்வான். பேரறிவாளன் செய்யும் ஒப்புரவு பலருக்கும் பலகாலம் பயன்படக்கூடியது.

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. (குறள் – 215)

நயனுடையவனின் ஒப்புரவு: சிலருடைய ஒப்புரவுப் பணிகள் பேரறிவாளர்களின் ஒப்புரவுப் பணிகளிலிருந்து வேறுபட்டதாக இருக்கும். உதாரணமாக, ஒருவன் மிகுந்த அன்புடையவனாக இருந்தால், "அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு" என்பதற்கு இணங்க, அவன் பிறர்க்கு எதையும் கொடுக்கத் தயங்க மாட்டான். தன்னிடமுள்ள விலையுயர்ந்த பொருளைக்கூட மற்றவர்களுக்குக் கொடுத்து, அவர்களின் மகிழ்ச்சியைக் கண்டு அவனும் மகிழ்வான். அத்தகையவனிடம் செல்வம் இருந்தால், அது ஊர்நடுவில் உள்ள பழமரம் பழுத்ததைப் போன்றது என்கிறார் வள்ளுவர் (குறள் – 216). அந்த மரம் ஊர்நடுவில் இருப்பதால் அது அனைவருக்கும் பயன்படக்கூடிய மரம். அந்த மரத்தின் உறுப்புக்களில் இனிமையானது அதிலுள்ள பழங்கள்தான். அந்தமரம் அதிலுள்ள பழங்களை அனைவருக்கும் கொடுக்கிறது. பழங்களை உண்பவர்கள் பயனடைகிறார்கள். அதுபோல், மிகுந்த அன்புடையவர்களிடம் செல்வம் இருந்தால் அவர்கள் தம் செல்வத்தை, அந்த மரம்போல் பலரும் மகிழும் வகையில் அவர்களுக்கு அளித்து மகிழ்வார்கள். இத்தகைய ஒப்புரவு, பலருக்குச் சிலகாலம் மட்டுமே பயனளிக்கும்.

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்

நயனுடை யான்கண் படின். (குறள் – 216)

பெருந்தகையானின் ஒப்புரவு: பெருந்தகையான் என்ற சொல் பெருந்தன்மையுடையவன் என்பதைக் குறிக்கிறது. பெருந்தன்மையுடையவன் ஒப்புரவு செய்வது மருந்துமரத்தைப் போன்றது என்கிறார் வள்ளுவர் (குறள் – 217). ஒரு மரத்தினுடைய வேர், பட்டை, காய், இலை, பூ, கனி போன்றவை எல்லாம் பிணிகளை நீக்குவதற்குப் பயன்படும் மருந்தாக இருக்குமானால், அவற்றை எல்லாம் மக்கள் வெகுவிரைவில் எடுத்துக்கொள்வார்கள். அந்த மரம் தன்னையே அனைவருக்கும் அளித்து தன்னையே அழித்துக்கொள்வதுபோல், பெருந்தன்மையுடையவன் தன் செல்வத்தை எல்லாம் பிறர்க்கு விரைவில் அளித்துவிடுவான். இது போன்ற ஒப்புரவு சிலருக்குச் சில காலம் மட்டுமே பயனளிக்கும்.

மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின். (குறள் – 217)

ஒப்புரவினால் ஒருவனுக்குப் பொருட்கேடு வருமாயின், அக்கேட்டை ஒருவன் தன்னையே விற்றாவது கொள்ளத்தக்கதாகும் என்று,

ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து. (குறள் – 220)

என்ற குறளில் கூறுகிறார் (குறள் – 220). பெருந்தகையாளனின் ஒப்புரவும் அத்தகையதே. ஒப்புரவினால் தன் வாழ்வுக்கே கேடு வருமானால், அவன் தன்னையே விற்றாவது ஒப்புரவு செய்யத் தயங்க மாட்டான்.

தற்காலத்து ஒப்புரவுகள்

வள்ளுவர் கூறும் மூன்றுவகையான ஒப்புரவுகள் தற்காலத்திலும் நடைபெறுகின்றன. கடந்த நூற்றாண்டில், அமெரிக்காவில், ஆண்ட்ரு கார்னகி (Andrew Carnegie), ஜான் ராக்கஃபெல்லர் (John D. Rockefller) மற்றும் ஹென்றி ஃபோர்டு (Henry Ford) போன்ற பெருஞ்செல்வந்தர்களும் அவர்களின் குடும்பத்தினரும் பல கோடிக்கணகான டாலர் மதிப்புள்ள தங்கள் செல்வத்தை பல கல்வி நிறுவனங்களுக்கும்,

கலைக்கூடங்களுக்கும், ஏழைகளுக்கு உதவுவதற்கும், மருத்துவத்துறையில் ஆய்வு செய்வதற்கும் நன்கொடையாக அளித்துப் பொதுநலத் தொண்டாற்றியுள்ளனர். இந்த நூற்றாண்டிலும் இது போன்ற ஒப்புரவுச் செயல்கள் தொடர்ந்து நடைபெற்றுவருகின்றன. உதாரணமாக, பில் கேட்ஸ் (Bil Gates), மார்க் சக்கர்பர்க் (Mark Zuckerburg), வாரென் பஃப்ஃபெட் (Warren Buffett), ஓப்ரா வின்ஃப்ரி (Opra Winfrey) போன்றவர்களும் அவர்கள் குடும்பத்தினரும் அறக்கட்டளைகளை நிறுவி, பலகோடி டாலர்கள் மதிப்புள்ள தங்கள் செல்வத்தை அந்த அறக்கட்டளைகளில் மூலதனமாக வைத்து அதிலிருந்துவரும் வட்டியைத் தங்கள் பொதுநலப் பணிகளுக்குப் பயன்படுத்துகிறார்கள். மூலதனம் குறையாமல் இருப்பதால், பலருக்கும் பலகாலம் நீர் அருந்தப் பயன்படும் ஊருணிபோல் உலகின் பலபகுதிகளில் உள்ள எண்ணற்ற ஏழைமக்களின் கல்விக்கும், அவர்களின் உடல்நலத்திற்கும் இந்தப் பேரறிவாளர்களின் நற்பணி என்றென்றும் தொடரும் எனபதில் ஐயமில்லை. இந்தியாவிலும், ஷிவ் நாடார் (Shiv Nadar), முகேஷ் அம்பானி (Mukesh Ambani) மற்றும் பலரும் கோடிக்கணக்கான உரூபாய்களை தங்கள் அறக்கட்டளைகளில் மூலதனமாக வைத்து அதிலிருந்துவரும் வட்டியை பொதுநலத்திற்குப் பயன்படுத்துகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. ஆகவே, வள்ளுவர் கூறும் ஊருணிபோன்ற, பலருக்கும் பலகாலம் பயன்படும் ஒப்புரவுகள் இன்றும் நடைபெற்றுவருகின்றன என்பது புலப்படுகிறது.

ஊருணி பலகாலம் பலருக்கும் பயன்படக்கூடிய ஒன்று. ஆனால், பழங்களைத் தரும் மரம் ஒரு குறிப்பிட்ட பருவத்தில்தான் பழுக்கும். அந்த மரத்தில் பழங்கள் இல்லையென்றால், பழங்களைப் பெற விரும்புபவர்கள் மீண்டும் பழங்கள் தோன்றும்வரை காத்திருக்க வேண்டும். சில ஒப்புரவுகளும் அதுபோன்றவைதான். உதாரணமாக, அமெரிக்காவில் உள்ள தமிழர்கள் தமிழ்நாடு அறக்கட்டளை என்ற ஒரு அமைப்பை நிறுவி, அங்குள்ள தமிழர்களிடமிருந்து பணம் திரட்டி, தமிழகத்தில் உள்ள பள்ளிகளில் நூலகங்கள் மற்றும் கழிப்பறைகள் கட்டுவதற்கும், அநாதைக் குழந்தைகளுக்கு ஆதரவு அளிப்பதற்கும், பள்ளி மாணவர்களுக்கு சிறப்புப் பயிற்சி அளிப்பதற்கும், ஏழை மகளிர்க்குத் தையற்தொழிலில் பயிற்சி அளிப்பதற்கும் ஏற்பாடு செய்துவருகிறார்கள். கடந்த முப்பத்தி ஐந்து ஆண்டுகளில் பல கோடிக்கணக்கான டாலர்களைத் தமிழ்நாட்டிற்கு அனுப்பித் தமிழர்களுக்கு உதவிவருகிறார்கள். பணம் இருந்தால்தான் இந்த நிறுவனத்தால் உதவி செய்ய முடியும். பழமரம் பருவகாலத்தில்

பழமளிப்பதைப் போன்ற ஒப்புரவுக்கு தமிழ்நாடு அறக்கட்டளை ஒரு எடுத்துக்காட்டாகும். தமிழ்நாடு அறக்கட்டளையைப்போல் பலரிடமிருந்து பணம் திரட்டி அதை பொதுநலத் தொண்டுக்குகளுக்குப் பயன்படுத்தும் நிறுவனங்கள் உலகெங்கும் உள்ளன. இவை அனைத்தும், பழமரம் பருவ காலத்தில் மட்டுமே உதவி செய்வதைப்போல், பணம் இருந்தால்தான் உதவி செய்ய முடியும்.

அமெரிக்காவில் சில செல்வந்தர்கள், தங்கள் செல்வத்தைத் தகுதியுடையவர்களுக்கும், தகுதியுடைய நிறுவனங்களுக்கும் தங்கள் வாழ்நாளிலேயே பகிர்ந்தளிக்க விரும்பி "வாரி வழங்கி மறையும் அறக்கட்டளைகளை (Spend Down Foundation)" நிறுவுகிறாரகள். உதாரணமாக, அமெரிக்காவில், சக் ஃபீனி (Chuck Feeney) என்பவர் தன்னுடைய 800 கோடி டாலர் மதிப்புள்ள செல்வத்தை, அமெரிக்கா (United States of America), ஆஸ்திரேலியா (Australia), வியட்நாம் (Vietnam), தென்னாப்பிரிக்கா (South Africa), பெர்முயூடா (Bermuda), கியூபா (Cuba) ஆகிய நாடுகளில், கல்வி, மருத்துவம், சுகாதாரம், போன்ற துறைகளில் செலவு செய்வதற்காக அட்லாண்டிக் ஃபிலாந்த்ரபீஸ் (Atlantic Philanthropies) என்ற அறக்கட்டளையை நிறுவித் தன்னுடைய செல்வம் முழுதும் தகுதியுடையவர்களுக்கும் தகுதியுடைய நிறுவனங்களுக்கும் பகிர்ந்தளித்துள்ளார். செல்வம் முழுதும் பிறர்க்கு அளித்த பிறகு, அவருடைய நிறுவனம் மூடப்படும். இதுபோல் வேறு சிலரும், தங்கள் செல்வம் முழுவதையும் மற்றவர்களுக்கு விரைவாகப் பகிர்ந்தளிக்கும் நிறுவனங்களை நிறுவியுள்ளனர். இவையெல்லாம், மருந்துமரம்போல் தன்னிடமுள்ள பொருளை விரைவாகப் பிறர்க்குக் கொடுக்கும் முயற்சிகளுக்கு எடுத்துக்காட்டுகளாகும்.

ஒப்புரவு என்பது பெருஞ்செல்வந்தர்கள் மட்டுமே செய்யக்கூடியது அன்று. தற்காலத்தில், செஞ்சிலுவைச் சங்கம் (Red Cross), யுனைடெட் வே (United Way), குட் வில் (Goodwill), சால்வேஷன் ஆர்மி (Salvation Army) போன்ற எண்ணற்ற நிறுவனங்கள் அமெரிக்காவில் உள்ளன. மற்ற நாடுகளிலும் இது போன்ற நிறுவனங்கள் உள்ளன. அவை ஒரு டாலர் அல்லது ஒரு உரூபாய் அளித்தாலும் ஏற்றுக் கொள்ளும். ஆகவே, அனைவரும் ஒப்புரவு செய்யலாம்.

தற்காலத்தில் பணம், உணவு போன்றவற்றை அளிப்பது மட்டுமல்லாமல், தன்னார்வத் தொண்டர்களாகத் தங்கள் நேரத்தைப் பொதுநலத் தொண்டுக்காகச் செலவழிப்பதும்,

இறந்த பிறகு உடல் உறுப்புக்களை பிறர்க்கு அளிப்பதும், குருதியைத் தானம் செய்வதும் ஒப்புரவாகவே கருதத் தக்கவையாகும்.

ஒப்புரவாளனும் வறுமையும்

ஒப்புரவு செய்யும் நல்லியல்பு உடையவன் தனக்கொன்று இல்லாதபொழுது வறுமையைக் கண்டு வருந்துவதில்லை. பிறர்க்கு ஒப்புரவு செய்ய இயலாத நிலைதான் அவனுக்கு வறுமையாகும் (குறள் – 219).

நயனுடையான் நல்கூர்ந்தா னாதல் செயும்நீர்
செய்யாது அமைகலா வாறு. (குறள் – 219)

**ஒப்புரவின் சிறப்பு**

”இவ்வாறு ஒப்புரவு செய்வது போன்ற நற்செயல்கள் விண்ணுலகத்திலும் இல்லை; மண்ணுலகத்திலும் இல்லை.” என்று கூறி ஒப்புரவு செய்பவர்களையும், செய்ய விரும்புபவர்களையும் வள்ளுவர் ஊக்குவிக்கிறார் (குறள் – 213).

புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற. (குறள் – 213)

**முடிவுரை**

உணவோ அல்லது ஒருபொருளோ தனக்குத் தேவை என்று ஒருவன் நம்மிடம் வந்து கேட்ட பிறகு அவனுக்குக் கொடுப்பது ஈகை. அனைவரும் நம்மை ஒத்தவர்கள் என்பதை உணர்ந்து, எவரும் நம்மிடம் வந்து கேட்காமலேயே அவர்களுக்குக் கொடுப்பது ஒப்புரவு. ஒப்புரவு என்பது, எத்தகைய கைம்மாறும் கருதாமல் பெய்யும் மழையைப் போன்றது. பலவகைகளில் ஒப்புரவு செய்யலாம். வள்ளுவர், மிகுந்த அறிவுடையவனின் ஒப்புரவை பலருக்கும் பலகாலம் பயன்படும் ஊருணிக்கும், மிகுந்த அன்புடையவனின் ஒப்புரவை, இனிய கனிகளைப் பலருக்கும் பருவகாலத்தில் மட்டுமே தரும் ஊர்நடுவில் உள்ள பழமரத்திற்கும், மிகுந்த பெருந்தன்மையுடையவனின் ஒப்புரவைத் தன்னையே பிறர்க்கு அளித்து, சிலருக்குச் சிலகாலம் பயனளிக்கும் மருந்துமரத்திற்கும் ஒப்பிடுகிறார். இது போன்ற ஒப்புரவுகள் தற்காலத்திலும் நடைபெறுகின்றன. தற்காலத்தில் செல்வந்தர்கள் மட்டுமல்லாமல் அனைவரும் பங்குபெறும் வகையில் பல அறக்கட்டளைகள் உள்ளன. பசிக்கு உணவும், தேவைக்கேற்ற பொருளும் கொடுப்பது மட்டுமல்லாமல், தற்காலத்தில்,

தன்னார்வத் தொண்டர்களாகப் பணியாற்றுவதில் தங்கள் நேரத்தைச் செலவழிப்பதும், இறந்த பிறகு, உடல் உறுப்புக்களை பிறர்க்கு அளிப்பதும், குருதியைத் தானமாக அளிப்பதும் ஒப்புரவாகக் கருதத் தக்க செயல்களாகும். முடிவாக, ஒப்புரவினால் தனக்குக் கேடு வந்தாலும் ஒப்புரவு செய்யத் தயங்கக் கூடாது என்ற கருத்தையும் வள்ளுவர் வலியுறுத்துகிறார். இங்கு,

நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர்
நிதி குறைந்தவர் காசுகள் தாரீர்
அதுவுமற்றவர் வாய்ச்சொல் அருளீர்
ஆண்மையாளர் உழைப்பினை நல்கீர்

என்று பாரதியார் கூறியது நினைவுகூரத்தக்கது.




மின்னிதழ்:31 பங்குனி-18 -தி.பி.2053 ஏப்பிரல்-1- பொ.ஆ.2022



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



திருக்குறளார்இர.பிரபாகரன்

பொறுப்பாசிரியர் -மறைமலை இலக்குவனார் -
இணையாசிரியர் -முனைவர் தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

# வள்ளுவர் காட்டும் சொல்லாற்றல்

---திருக்குறளார் முனைவர் இர. பிரபாகரன்

[.நம் “குறள்நெறி “மின்னிதழி ன் சிறப்பாசிரியர்களுள் ஒருவராகிய முனைவர் இர.பிரபாகரன் இந்த இதழின் முகப்புநாயகர் .தொடர்ந்து இந்த இதழுக்கும் ஆங்கிலத் திங்களிருமுறையாகிய “Thirukkural Express” எனும் நம் இதழுக்கும் கருத்துவளம் செறிந்த கட்டுரைகளை அனுப்பிவருகிறார் .அமெரிக்காவில் பல அரங்குகளிலு ம் இணையவழி யாக உலகெங்கும் குறள்பொழிவுகளைப் பல்லாண்டுகளாக வழங்கி க் குறள் பரப்புரை நிகழ்த்திவருகிறார் .தமிழில் மட்டுமின்றி ஆங்கிலத்திலும் குறள் குறித்த ஆய்வுநூல்களை இயற்றி வெளியிட்டுவருகிறார் .எனவே இவரை இனி “திருக்குறளார் பிரபாகரன் “என்றே அழைப்போம் .]

தகவல்களைப் பரிமாறிக்கொள்ளும் ஆற்றல் மனிதர்களிடம் மட்டுமல்லாமல் விலங்குகளிடத்திலும் உள்ளது என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர். ஆனால் , மனிதர்கள் தகவல் பரிமாறிக்கொள்ளும் முறை விலங்குகள் தகவல் பரிமாறிக்கொள்ளும் முறைகளிலிருந்து முற்றிலும் மாறுபடுகிறது. உணவுப் பொருள்களைச் சேகரிப்பதற்கும் , பகிர்ந்துகொள்வதற்கும் , தங்களையும் தங்களின் கூட்டத்தையும் பாதுகாத்துக்கொள்வதற்கும் , இனச்சேர்க்கைக்கும் விலங்குகள் தகவல் பரிமாற்றம் செய்துகொள்கின்றன. மனிதர்கள் மட்டுமே , மொழியைப் பயன்படுத்தி அன்பு , காதல் , கோபம் , வியப்பு , வருத்தம் , உவகை போன்ற உணர்வுகளையும் , தங்கள் உள்ளத்தில் உள்ள எண்ணங்களையும் , அறிவு சார்ந்த கருத்துக்களையும் மற்றவர்களோடு பகிர்ந்துகொள்ளும் ஆற்றல் உடையவர்களாக இருக்கிறார்கள். சில சமயங்களில் , மொழியின் உதவி இல்லாமலும் , தங்கள் கண்களாலும் உடலாலும் தங்கள் உணர்வுகளை மற்றவர்களுக்குத் தெரியப்படுத்தும் ஆற்றலும் மனிதர்களிடம் உள்ளது. ஒரு மனிதன் மற்றொரு மனிதனோடு தொடர்புகொண்டு தன் மனத்தில் உள்ள எண்ணங்களை வெளிப்படுத்துவதோடு மட்டுமல்லாமல் , ஒரே சமயத்தில் பலரிடம் தன் கருத்துக்களைக் கூறக்கூடிய ஆற்றலும் உடையவனாக இருக்கிறான். இன்றைய வானொலி , தொலைக்காட்சி , கணினி போன்ற தொழிநுட்பக் கருவிகளின் உதவியால் ஒரே சமயத்தில் எண்ணற்ற மக்களோடு தன் கருத்துக்களைப் பகிர்த்துகொள்ள முடிகிறது. மேலும் , ஒருவருடைய சொற்பொழிவு அல்லது பேச்சு , தொழில் நுட்பக் கருவிகளில் பதிவு செய்யப்பட்டுக் காலம் , இடம் ஆகியவற்றின் எல்லைகளைக் கடந்து

எங்கெங்கும் , என்றென்றும் கேட்கக்கூடியதாகவும் உள்ளது. மனிதனின் சொல்லாற்றல் என்பது மிக வலிமையான ஒரு ஆற்றல். அதன் சிறப்பைப் பற்றியும் , அதனால் வரும் நன்மை தீமைகளைப் பற்றியும் , அந்த ஆற்றலைப் பயன்படுத்தி எப்படிச் சொற்போழிவாற்ற வேண்டும் என்பதைப் பற்றியும் ”சொல்வன்மை ”, ”அவையறிதல் ”, ”அவையஞ்சாமை ” ஆகிய அதிகாரங்களில் வள்ளுவர் விளக்கமாகக் கூறுகிறார்.

சொல்லாற்றலின் சிறப்பு

மனிதனுடைய சொல்லாற்றல் என்ற ஆற்றல் ஒரு தனிச்சிறப்பான ஆற்றல் ; அது அவனுடைய மற்ற ஆற்றல்களில் அடங்காது (குறள் – 641) என்று வள்ளுவர் கூறுகிறார்.

நாநலம் என்னும் நலனுடைமை அந்நலம்
யாநலத்து உள்ளதூஉம் அன்று. (குறள் – 641)

ஒருவன் தன் சொற்களால் பிறரை மகிழ்விக்க முடியும் ; துன்புறுத்த முடியும் ; ஆத்திரம் அடையச் செய்ய முடியும் ; உணர்ச்சிவசப்படுத்த முடியும் ; தான் விரும்பும் செயல்களைச் செய்யுமாறு ஊக்குவிக்க முடியும் ; கல்வி கற்பிக்க முடியும். பிறரோடு உரையாடுவதால் அவர்களோடு கருத்துப் பரிமாற்றம் செய்துகொள்ள முடியும். தங்கள் கருத்துக்களைத் தெளிவாக எடுத்துரைக்கும் வலிமையான ஆற்றல் அனைவருக்கும் மிகவும் இன்றியமையாதது என்பதில் எவருக்கும் கருத்து வேறுபாடு இருக்க முடியாது.

சொல்லாற்றலால் விளையும் நன்மையும் தீமையும்

”நாவில் பிறக்கும் நன்மையும் தீமையும் ” என்ற பழமொழிக்கேற்ப , தங்கள் சொல்லாற்றலைப் பயன்படுத்தி மனிதர்கள் நன்மையும் செய்ய முடியும் ; தீமையும் செய்ய முடியும். ஒருவனுக்கு மேன்மேலும் உயரும் ஆக்கமும் அழிவும் அவனுடைய சொல்லால் வருவதால் , தன்னுடைய சொற்களில் தவறு ஏற்படாதவாறு அவன் தன்னைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும் (குறள் – 642) என்று வள்ளுவர் எச்சரிக்கிறார்.

ஆக்கமுங் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு. (குறள் – 642)

தங்கள் சொல்லாற்றலைப் பயன்படுத்தி மனிதர்கள் பல சாதனைகளைப் படைத்திருக்கிறார்கள். சிலர் எண்ணற்ற மக்களுக்கு வேதனைகளையும் அளித்திருக்கிறார்கள். இரண்டாம் உலகப் போர் நடந்தபொழுது , ஜெர்மனியைச்

சார்ந்த அடால் பு இட்லரும் ( Adolf Hitler, 1189 – 1945) இத்தாலியைச் சார்ந்த முசோலினியும் ( Benito Mussolini, 1883 – 1945) தங்கள் நாவன்மையால் மக்களிடையே யூதர்களுக்கு எதிரான வெறுப்புணர்ச்சியை எழுப்பி , எண்ணற்ற யூதர்களைக் கொன்று குவித்தார்கள். அந்தப் போர் நடந்தபொழுது , இங்கிலாந்தைச் சார்ந்த வின் சுடன் சர்ச்சில் ( Winston Churchill, 1874 – 1965) தம்முடைய சொல்லாற்றலால் தன் நாட்டு வீரர்களை ஊக்குவித்துப் போரில் வெற்றிக்கு வழிவகுத்தார். அவருடைய புகழ் பெற்ற "Never Give In" சொற்பொழிவு அவருடைய நாவன்மைக்கு ஒரு எடுத்துக்காட்டு. அமெரிக்காவில் உள்ள பியர்ல் ஆர்பர் ( Pearl Harbor) துறைமுகத்தின்மீது சப்பானியர்கள் 1941 – ஆம் ஆண்டு , சரமாரியாகக் குண்டுகளைப் பொழிந்து அங்கிருந்த பல கப்பல்களையும் விமானங்களையும் அழித்ததோடு மட்டுமல்லாமல் , நூற்றுக்கணக்கான அமெரிக்க வீரர்களையும் கொன்றார்கள். அப்பொழுது , அமெரிக்கக் குடியரசின் தலைவராக இருந்த பிரேங் கிளின் டெலனோ ரூ சுவெல்ட் ( Franklin Delano Roosevelt, 1882 – 1945), அமெரிக்கப் பாராளுமன்றத்தில் ஆற்றிய "Day of Infamy" என்ற சொற்பொழிவு , அமெரிக்கர்களை ஒருங்கிணைத்து இரண்டாம் உலகப் போரில் பங்கேற்கச் செய்தது. அவருடைய சொற்பொழிவு இருபதாம் நூற்றாண்டின் சிறந்த சொற்பொழிவுகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது. ஆப்பிரிக்க அமெரிக்க இனத்தவரின் உரிமைகளுக்காகப் போராடிய மார்ட்டின் லூதர் கிங்குடைய ( Martin Luther King, 1929 – 1968) சொல்லாற்றல்தான் ஆப்பிரிக்க அமெரிக்க மக்களைத் தட்டியெழுப்பி அவர்களின் சமஉரிமைகளுக்காக அவர்களைப் போராடத் தூண்டியது. அவருடைய "I Have a Dream" என்ற சொற்பொழிவு மக்களின் மனத்தில் இன்றும் ஒலித்துகொண்டிருக்கிறது. கடந்த நூற்றாண்டில் , தமிழ்நாட்டின் பட்டி தொட்டிகளுக்கெல்லாம் சென்று தன் சொற்பொழிவுகளின் மூலம் , மக்களிடையே பகுத்தறிவைப் பரப்பி , தமிழ்ச் சமுதாயத்தில் விழிப்புணர்ச்சியை உருவாக்கிய பெருமைக்குரியவர் தந்தை பெரியார் (1879 – 1973).

அவையில் பேசுதல்

தனியாக ஒருவரோடு உரையாடுவது வேறு. பலர் முன்னிலையில் , ஒரு அவையில் சொற்பொழிவாற்றுவது என்பது வேறு. அன்றாட வாழ்க்கையில் அனைவரும் எவரோடாவது பேசிக்கொண்டுதான் இருக்கிறோம். சிறு குழந்தையாக இருந்தபொழுதே பேசத் தொடங்கி வாழ்நாள் முழுதும் பேசிக்கொண்டிருக்கிறோம். இவ்வாறு உரையாடுவதற்குத் தனிப்பயிற்சியோ , சிறந்த கல்வியோ தேவையில்லை. ஆனால் பலர் முன்னிலையில் சொற்பொழிவாற்றுவது என்பது ஒரு கலை. இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் , "சொற்பொழிவு ஆற்றுவது எப்படி ?" என்று கிரேக்க நாட்டைச் சார்ந்த பிளேட்டோ ( Plato, 428/427 B. C. – 348/347 B. C.), அரிசுடாட்டில் (Aristotle, 384 B. C. – 322 B. C.) டெமாசுதனீசு (Demosthenes, 384 B. C. – 322

B. C.) போன்றவர்கள் ஆராய்ச்சி செய்து , சொற்பொழிவாற்றுவதை மற்றவர்களுக்குக் கற்பிப்பதற்காகப் பயிற்சிப் பட்டறைகள் நடத்தினார்கள் என்று வரலாறு கூறுகிறது.

அவையில் பேசுவதைப் பற்றி அரி சுடாட்டில்

அவையில் பேசுவதற்கு ஒரு தகவல் தொடர்பு மாதிரியை அரி சுடாட்டில் (அரிசுடாட்டிலின் தகவல் தொடர்பு மாதிரி – Aristotle"s Model for Communications) முன்மொழிந்தார். இன்றும் மேலை நாடுகளில் , கருத்தரங்கங்களிலும் , சொற்பொழிவுகளிலும் அரி சுடாட்டிலின் மாதிரி பரவலாகப் பயன்படுத்தப்படுகிறது. அரிசுடாட்டிலின் மாதிரி ஐந்து கூறுகள் அடங்கியது. அவை: 1)பேச்சாளர் , 2)பேச்சு , 3)சூழ்நிலை , 4)கேட்பவர்கள் , 5)விளைவு ( Effect). அரிசுடாட்டிலின் மாதிரிப்படி , தகவல் தொடர்பில் பேச்சாளர்தான் முக்கியமான பங்கு வகிக்கிறார். மேலும் , அனைத்துத் தகவல் தொடர்புகளுக்கும் பேச்சாளர்தான் முழுப் பொறுப்பையும் ஏற்றுக்கொள்ள வேண்டும். பேச்சாளர் த மது சொற்களை மிகவும் கவனமாகத் தேர்ந்தெடுக்க வேண்டும். பேசுவதற்குமுன் , அவையில் இருப்பவர்களின் தகுதியையும் , எதிர்பார்ப்புக்களையும் பேச்சாளர் ஆராய்ந்து அறிந்துகொள்ள வேண்டும். பேச்சு , குழப்பம் இல்லாமல் தெளிவாகவும் , புரிந்துகொள்வதற்கு எளிதாகவும் இருக்க வேண்டும். பேசும் முறை அவையில் இருப்பவர்களைக் கவர்வதாக இருக்க வேண்டும். பேச்சாளர் நம்பத் தகுந்தவராகவும் , எதைப் பற்றிப் பேசுகிறாரோ அதைப் பற்றி நன்கு அறிந்தவராகவும் இருக்க வேண்டும். பேச்சைக் கேட்பவர்கள் ஒவ்வொருவரும் , பேச்சாளர் தன்னோடு பேசுவதாக உணரவேண்டும். கேட்பவர்களின் உள்ளத்தைத் தொடும் வகையிலும் உணர்ச்சியைத் தூண்டும் வகையிலும் பேச்சு அமைய வேண்டும். பேச்சில் நகைச்சுவையைப் பயன்படுத்துவது ஒரு சிறந்த உத்தியாகும். பேச்சாளர் கூறும் கருத்துக்கள் உண்மையானவையாகவும் , முன்னுக்குப்பின் முரணானவையாக இல்லாமலும் இருக்க வேண்டும்.

கிரேக்கத் தத்துவஞானிகளைப்போல் , வள்ளுவரும் அவையில் பேசப்படும் பேச்சு எத்தகையதாக இருக்க வேண்டும் என்பதை ஆராய்ந்து , தன் கருத்துக்களைத் திருக்குறளில் கூறியுள்ளார். அரி சுடாட்டிலின் தகவல் தொடர்பு மாதிரிக்கும் அவையில் பேசுவதைப் பற்றி வள்ளுவர் கூறும் கருத்துக்களுக்கும் இடையே மிகுந்த ஒற்றுமை காணப்படுகிறது.

அவையில் பேசுவதைப் பற்றி தேல் கார்னகி ( Dale Carnegie, 1888 – 1955):

கடந்த நூற்றாண்டில் , அமெரிக்காவில் வாழ்ந்த தேல் கார்னகி என்பவர் ஒரு சிறந்த எழுத்தாளராகவும் , பேச்சாளராகவும் திகழ்ந்தது மட்டுமல்லாமல் , சுயமுன்னேற்றம் ,

மேடைப்பேச்சு ஆகிய துறைகளில் நூல்கள் எழுதியும் மற்றவர்களுக்குப் பயிற்சி அளித்தும் சிறப்பாகச் சேவை செய்தவர். மேடையில் சிறப்பாகப் பேசுவது எப்படி என்பதைப் பற்றி , The Quick and Easy Way to Effective Speaking என்ற தலைப்பில் அவர் ஒரு அருமையான நூல் எழுதியுள்ளார். பலர் முன்னிலையில் ஒருவன் சிறப்பாக மேடையில் பேச வேண்டுமானால் , எதைப் பற்றிப் பேச விரும்புகிறானோ அதைப் பற்றி அவன் நன்கு அறிந்திருக்க வேண்டும் என்று அந்த நூலில் அவர் கூறுகிறார். பேச்சாளனுக்குப் பயிற்சி தேவை என்கிறார். மேலும் , மேடையில் பேசுவதற்குமுன் , ஒருவன் தன்னுடைய பேச்சில் என்ன சொல்லப் போகிறான் , அதை எப்படிச் சொல்லப் போகிறான் என்பவற்றை நன்கு சிந்தித்துப் பார்க்க வேண்டும். அதாவது , அவன் தன் பேச்சை ஆயத்தம் செய்துகொள்ள வேண்டும். அவர் கருத்துப்படி , பேச்சாளான் என்பவன் ஒரு விற்பனையாளனைப் (விற்பனையாளன் - Salesman) போன்றவன். ஒரு பொருளை நம்மிடம் விற்பனை செய்பவன் , எந்தப் பொருளை விற்பனை செய்கிறானோ அந்தப் பொருளைப் பற்றி ஐயந்திரிபறக் கற்றிருக்க வேண்டும். அந்தப் பொருளைப் பற்றி யார் என்ன கேள்வி கேட்டாலும் அந்தக் கேள்விக்குச் சரியான விடை அளிக்கக் கூடிய ஆற்றல் உடையவனாகவும் இருக்க வேண்டும். அது போன்ற ஆற்றலைப் பெறுவதற்கு , அந்தப் பொருளைப் பற்றிய அறிவோடு பயிற்சியும் தேவை. ஒரு அவையில் பலர் முன்னிலையில் பேசுபவனுக்கு , கல்வியும் , அறிவும் , பயிற்சியும் , பேச்சைத் தயாரிப்பதும் தேவை என்று தேல் கார்னகி கூறுகிறார். மேடைப்பேச்சைப் பற்றிய கருத்துக்களில் , வள்ளுவருக்கும் தேல் கார்னகிக்கும் இடையேயும் ஒற்றுமை காணப்படுகிறது.

அவையில் பேசுவதைப் பற்றி வள்ளுவர் :

அவையில் பேசுவதற்கு அறிவும் கல்வியும் தேவை. ஒருவன் எதைப் பற்றிப் பலர் முன்னிலையில் பேச விரும்புகிறானோ அதைப் பற்றி அவன் நன்கு அறிந்திருக்க வேண்டும் என்பதை வள்ளுவர் பல குறட்பாக்களில் வலியுறுத்துகிறார். அவையில் பேசுவதற்குத் தன் அறிவு நிரம்புவதற்குரிய நூல்களைக் கல்லாது , ஒருவன் ஒரு அவையில் சொற்பொழிவாற்ற முயற்சி செய்வது , அரங்கத்தை அமைத்துக்கொள்ளாது காய்களை மட்டும் உருட்டி விளையாட நினைப்பதைப் போன்றது (குறள் – 401). கல்லாத ஒருவன் , ஒரு அவையில் சொற்பொழிவாற்ற விரும்புதல் , முலை இரண்டும் இல்லாத பெண் ஒருத்தி காதல் இன்பத்தைப் பெற விரும்புவதைப் போன்றதாகும் (குறள் – 402). கற்றோர் அவையில் எதையும் சொல்லாமல் இருப்பார்களேயானால் , கல்லாதவர்களும் நல்லவர்களாகவே கருதப்படுவார்கள் (குறள் – 403). கல்லாதவனுடைய இயற்கையான அறிவு , சில சமயங்களில் மிகச் சிறந்ததாகத் தோன்றினாலும் , அவனைச் சிறந்த அறிவுடையவனாக மற்றவர்கள் கருதமாட்டார்கள் (குறள் – 404). கல்லாத ஒருவன் தன்னைக் கற்றவன் போலத் தனக்குத் தானே

மதிப்பிட்டுகொண்டு கற்றவர்களோடு உரையாடத் தொடங்கினால் , அந்த மதிப்பானது கெட்டுவிடும் (குறள் – 405).

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல். (குறள் – 401)

கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று. (குறள் – 402)

கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின். (குறள் – 403)

கல்லாதான் ஒட்பம் கழியநன் றாயினும்
கொள்ளார் அறிவுடை யார். (குறள் – 404)

கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். (குறள் – 405)

இந்தக் குறள்களிலிருந்து , ஒருவன் கற்றவர் அவையில் பேச விரும்பினால் , அவன் கல்வியும் அறிவும் உடையவனாக இருப்பது இன்றியமையாதது என்பது வள்ளுவரின் கருத்து என்பது தெளிவாகத் தெரிகிறது. மேலும் , வள்ளுவரின் கருத்துக்கும் , தேல் கார்னகி மற்றும் அரி சுடாட்டிலின் கருத்துக்கும் இடையே மிகுந்த ஒற்றுமை இருப்பதும் தெரிகிறது.

அவையறிதல்: சொற்களைத் தொகுத்துப் பேசுவதை அறிந்த தூய அறிவுடையவர்கள் அவையை அறிந்து , சொல்ல வேண்டியதை ஆராய்ந்து சொல்ல வேண்டும் (குறள் – 711). சொல்லின் வழக்கை அறிந்த நல்லறிவாளர் , அவையின் இடம் , காலம் , நிலைமை ஆகியவற்றை நன்கு ஆராய்ந்து சொல்ல வேண்டும் (குறள் – 712). அறிவுடையவர்கள் உள்ள அவையில் அறிவில் சிறந்தவர்களைப் போலவும் , பாமரமக்கள் உள்ள அவையில் அவர்களில் ஒருவனாகவும் , அவர்களுக்குப் புரியுமாறும் பேச வேண்டும் (குறள் – 714). முதிர்ந்த அறிவுடையவர்கள் கூடியுள்ள அவையில் , முந்திக்கொண்டு பேசாமல் இருப்பது , நற்பண்புகள் என்று சொல்லப்படும் பண்புகள் எல்லாவற்றிலும் சிறந்த நற்பண்பாகும் (குறள் – 715). பரவலாகப் பலநூல்களையும் கற்று

உணர்ந்தவர்கள் உள்ள அவையில் , குற்றம் உண்டாகும்படிப் பேசுதல் நல்ல நெறியில் நின்றவன் அந்நெறியிலிருந்து தவறியதற்கு ஒப்பாகும் (குறள் – 716). கருத்துக்களை உணர்ந்துகொள்ளும் அறிவுடையவர்கள் முன்னிலையில் பேசுதல் பயிர் விளையும் பாத்தியில் நீர் சொரிந்தைப் போன்றது (குறள் – 718). தம் தகுதியோடு பொருந்தாதவர்முன் சிறந்த கருத்துக்களைப் பேசுதல் சாக்கடையில் அமிழ்தத்தை ஊற்றியது போலாகும் (குறள் – 720).

அவையறிநது ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர். (குறள் – 711)

இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர். (குறள் – 712)

ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணம் கொளல். (குறள் – 714)

நன்றென்ற வற்றுள்ளும் நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு. (குறள் - 715)

ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்னர் இழுக்கு. (குறள் – 716)

உணர்வ துடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று. (குறள் – 718)

அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தங்கணத்தர்
அல்லார்முன் கோட்டி கொளல். (குறள் – 720)

அவையஞ்சாமையும் தேவை: தேல் கார்னகியின் கூற்றுப்படி , கல்லூரி மாணவர்களில் எண்பது முதல் தொண்ணூறு விழுக்காடு பேர் அவையில் பேசுவதற்கு அஞ்சுகிறார்கள். அவையில் பேசுவதற்கு அஞ்சும் பெரியவர்களின் விழுக்காடு அவையில் பேசுவதற்கு அஞ்சும் மாணவர்களைவிட அதிகமாக இருக்கலாம் என்றும் அவர் கூறுகிறார். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே , வள்ளுவர் இதே கருத்தைக் கூறியுள்ளார். அஞ்சாது அவையில் பேசும் ஆற்றல் உடையவர்களைப் பாராட்டியும் , அவையில் பேச

அஞ்சுபவர்களை வீரமில்லாதவர்களோடு ஒப்பிட்டும் பல குறட்பாக்களில் வள்ளுவர் கூறுகிறார்.

அவைக்கு அஞ்சாதவர்களின் இயல்பு: பகைவர் இருக்கும் போர்க்களத்தில் போரிட்டுச் சாகின்றவர்கள் பலர். ஆனால், ஒரு அவையில் நின்று அஞ்சாது பேசக்கூடியவர்கள் வெகு சிலரே (குறள் – 723). சொற்களைத் தொகுத்துப் பேசும் தூய அறிவுடையவர்கள், அவருடைய பேச்சைக் கேட்கவிருக்கும் அவையின் தன்மையை அறிந்து, கல்வியில் சிறந்தவர்கள் கூடிய அவையில் சொற்சோர்வு உண்டாகுமாறு பேசமாட்டார்கள் (குறள் – 721). கற்றவர்முன் தாம் கற்றவற்றை அவர்களுடைய மனத்தில் பதியுமாறு சொல்ல வல்லவர்கள் கற்றவர்கள் எல்லோரையும்விடச் சிறப்பாகக் கற்றவர்கள் என்று கருதப்படுவார்கள் (குறள் – 722).

பகையகத்துச் சாவார் எளியர் அரியர்
அவையகத்து அஞ்சா தவர். (குறள் – 723)

வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர். (குறள் – 721)

கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார். (குறள் – 722)

அவைக்கு அஞ்சுபவர்களின் இயல்பு: தாம் கற்றவற்றை பிறர் புரிந்துகொள்ளுமாறு விரித்துரைக்க முடியாதவன், கொத்தாக மலர்ந்திருந்த்தும் மணம் கமழாத மலரைப் போன்றவன் (குறள் – 650). உள்ளத்தில் வீரமில்லாதவர்க்குக் கையில் வாளிருந்து என்ன பயன் ? அதுபோல், நுண்ணறிவு படைத்தோர் கூடிய அவையில் பேச அஞ்சுபவர்க்கு, அவர் கற்ற நூலால் என்ன பயன் (குறள் – 726)? கற்க வேண்டியதைக் கற்று அறிந்திருந்தும், அவற்றை நல்லவர் கூடிய அவையில் பேச அஞ்சுபவர்கள் கல்லாதவரைவிடக் கீழானவர்களாகக் கருதப்படுவார்கள் (குறள் – 729). கற்றறிந்தோர் அவையில் உரையாற்ற அஞ்சுபவன் கற்ற நூலறிவு, பகைவரோடு போரிடும் களத்தில் கோழையின் கையில் உள்ள ஒளிபொருந்திய வாளைப் போன்றது (குறள் – 727).

இணருழ்த்தும் நாறா மலரனையர் கற்றது
உணர விரித்துரையா தார். (குறள் – 650)

வாளொடென் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை அஞ்சு பவர்க்கு. (குறள் – 726)

கல்லா தவரின் கடையென்ப கற்றறிந்தும்
நல்லா ரவையஞ்சு வார். (குறள் – 729)

பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து
அஞ்சு மவன்கற்ற நூல். (குறள் – 727)

அவையில் பேசுவதற்கு அஞ்சாமல் இருப்பதற்கு என்ன செய்ய வேண்டும் ?: அவையோரின் தகுதியை முதலில் அறிந்துகொள்ள வேண்டும். அவையில் உள்ளவர்கள் புரிந்துகொள்ளும் வகையில் பேச வேண்டும். எதைப் பற்றிப் பேச வேண்டுமோ அதைப் பற்றி ஆராய்ச்சி செய்து , தேவையான செய்திகளைச் சேகரித்துக்கொள்ள வேண்டும். அடுத்து , எவ்வளவு நேரம் பேச வண்டும் என்பதை அறிந்துகொள்ள வேண்டும். சேகரித்த செய்திகளைச் சரியாக வரிசைப்படுத்தி , அவையோருக்குப் புரியும்படி பேச்சைத் தயாரித்துக்கொள்ள வேண்டும். தயாரித்த பேச்சைப் பலமுறை பேசிப் பழக வேண்டும். கல்வி , அறிவு மட்டுமல்லாமல் , பயிற்சியும் தேவை என்று டேல் கார்னகி வலியுறுத்துகிறார். அவையைப் பற்றிய புரிதல் , பேசும் பொருளைப் பற்றிய செய்திகளைச் சேகரித்தல் , பேச்சைத் தயாரித்தல் , பேசிப் பயிற்சி பெறுதல் ஆகிய அனைத்தையும் முறையாகச் செய்தால் , பேச்சாளனுக்குத் தன்னம்பிக்கை பிறக்கும். தன்னம்பிக்கை இருந்தால் , பேச்சாளன் அவையைக் கண்டு அஞ்ச மாட்டான். அவையில் பேசுவதற்குப் பயிற்சி தேவை என்று குறிப்பாகக் கூறாவிட்டாலும் , எல்லாச் செயல்களையும் செவ்வனே செய்வதற்கு முயற்சி தேவை என்பதைப் பல குறட்பாக்களில் வள்ளுவர் வலியுறுத்துகிறார். உதாரணமாக , எந்த ஒரு செயலும் செய்வதற்கு அரிய செயல் என்று முடிவு செய்து , மனம் தளர்ந்துவிடாமல் முயற்சி செய்தால் , அந்த முயற்சி பெருமையைத் தரும் என்பது வள்ளுவரின் கருத்து என்பது , “அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும் பெருமை முயற்சி தரும் (குறள் – 611)” என்ற குறளிலிருந்து தெரிகிறது. முயற்சியினால் வருவது பயிற்சி. ஆகவே , ஒருவன் முதலில் அவையில் பேசுவதில் வல்லமை படைத்தவனாக இல்லாவிட்டலும் , தொடர்ந்து முயற்சி செய்தால் , வெற்றி அடைவான் என்பதுதான் வள்ளுவரின் அறிவுரை. ஆகவே , மீண்டும் தேல்கார்னகியின் கருத்துக்கும் வள்ளுவரின் கருத்துக்கும் ஒற்றுமை இருப்பது தெரிகிறது.

சொற்பொழிவைப் பற்றி வள்ளுவர்

சொல்லாட்சி: கேட்பவர்களைக் கவரும் தன்மை உடையதாகவும் , கேளாதவரும் கேட்க விரும்பும்படி பேசுவதே சிறந்த சொல்வன்மையாகும் (குறள் – 643). கேட்பவரது மனநிலையை அறிந்து , ஒருவர் சொல்லக்கருதும் சொல்லை , முறையாகச் சொல்ல வேண்டும். அவ்வாறு சொல்வதைவிடச் சிறந்த அறமோ , பொருளோ வேறொன்றும் இல்லை (குறள் – 644). தாம் சொல்லக் கருதிய சொல்லை வெல்லக்கூடிய சொல் வேறொன்றும் இல்லை என்பதைத் தெளிவாக அறிந்த பிறகே , அச்சொல்லைச் சொல்ல வேண்டும் (குறள் – 645). தான் சொல்ல விரும்பியதை பிறர் ஏற்றுக்கொள்ளுமாறு சொல்வதில் வல்லவனாய் , அவைக்கு அஞ்சாதவனாகவும் இருப்பவனை தருக்கத்தாலும் , கருத்து மாறுபட்டாலும் வெல்லுதல் எவருக்கும் அரிய செயலாகும் (குறள் – 647).

கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல். (குறள் – 643)

திறனறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனினூஉங்கு இல். (குறள் – 644)

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து. (குறள் – 645)

சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது. (குறள் – 647)

சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல்: தாம் கருதியவற்றைக் குற்றமிலாத சில சொற்களால் தெளிவாகவும் , சுருக்கமாகவும் சொல்லத் தெரியாதவர்கள்தான் வீணாகப் பல சொற்களால் விரித்துக் கூற விரும்புவார்கள் (குறள் – 649).

பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்லல் தேற்றா தவர். (குறள் – 649)

வள்ளுவர் கூறுவதற்கிணங்க , உலக வரலாற்றில் , நெருக்கடியான சந்தர்ப்பங்களில் பெருந்தலைவர்கள் மிகச் சுருக்கமாகவும் தெளிவாகவும் , தங்கள் சொற்பொழிவுகளின் மூலம் தங்கள் கருத்துக்களை மக்களிடம் எடுத்துரைத்திருக்கிறார்கள். உதாரணமாக ,

அமெரிக்காவில் உள்நாட்டுப் போர் நடந்தபொழுது , 1863 – ஆம் ஆண்டு , அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஆபிர காம் இலிங்கன் ( Abraham Lincoln, 1809 – 1865) ஆற்றிய உலகப் புகழ்பெற்ற கெட்டி சுபர்க் ( Gettysburg, Pennsylvania) சொற்பொழிவு மூன்று மணித்துளிகளில் முடிவடைந்தது. 1941 – ஆம் ஆண்டு , சப்பானியர்கள் அமெரிக்காவைத் தாக்கியபொழுது , அமெரிக்கக் குடியரசின் தலைவர் ,பிரேங் கிளின் டெலனோ ரூ சுவெல்ட் , அமெரிக்கா ஜப்பானை எதிர்த்துப் போரிட வேண்டும் என்று பாராளுமன்றத்தில் ஆற்றிய "Day of Infamy" என்ற சொற்பொழிவு ஏழு மணித்துளிகளில் முடிவடைந்தது. அதே ஆண்டு , இங்கிலாந்தின் தலைமையமைச்ச ராக இருந்த வின் சுடன் சர்ச்சில் , இங்கிலாந்து செருமனியை எதிர்த்துப் போரிட வேண்டும் என்பதற்காக ஆற்றிய உரை மிகச் சுருக்கமாக நான்கு மணித்துளிகளில் முடிவடைந்தது. ஆப்பிரிக்க அமெரிக்கர்களின் சம உரிமைக்காகப் போராடிய மார்ட்டின் லூதர் கிங்குடைய "I Have a Dream" என்ற சொற்பொழிவு பதினெட்டு மணித்துளிகளில் முடிவடைந்தது.

சொல்லாற்றல் மிக்க அறிஞர் அண்ணா :

தமிழ்நாட்டில் முதலமைச்சராக இருந்த அறிஞர் அண்ணாவைப் பற்றித் தெரியாத தமிழர்கள் எவரும் இருக்க மாட்டார்கள். தமிழ்நாட்டின் வரலாற்றில் , தனக்கென்று தனியிடம் படைத்துக்கொண்டவர் அறிஞர் அண்ணா. வள்ளுவர் கூறும் சொல்வன்மைக்கு அவர் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தார். அண்ணாவின் சொற்பொழிவில் , கருத்துச் செறிவு இருக்கும் ; அழகிய தமிழ் இருக்கும் ; அடுக்குமொழி இருக்கும் ; நகைச் சுவை இருக்கும். "சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை வெல்லும்சொல் இன்மை அறிந்து (குறள் – 647)" என்பதற்கிணங்க , தகுந்த சொற்களைப் பயன்படுத்திப் பேசுவார். அவர் அவையில் பேசுகின்றபொழுது , அவரால் கேட்பவர்களைச் சிந்திக்க வைக்க முடியும் ; சிரிக்கவைக்கவும் முடியும் ; செயல்செய்யத் தூண்ட முடியும். மாற்றுக் கருத்துடையவர்கள்கூட அவர் பேச்சை விரும்பிக் கேட்டார்கள். அவர் பேச்சைக் கேட்டவர்கள் அவற்றை மறப்பதில்லை. "நாம் அவருடைய சொற்பொழிவைக் கேட்கும் வாய்ப்பை இழந்து விட்டோமே! " என்று வருந்துபவர்கள் இன்றும் உள்ளார்கள். அவருடைய சில சொற்பொழிவுகளை இன்றும் எண்ணற்றவர்கள் வலையொளியில் (வலையொளி – YouTube) கேட்டு மகிழ்கிறார்கள் ."கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிவதாம் சொல் (குறள் – 643)" என்ற குறளுக்கு எடுத்துக்காட்டாக அவர் பேச்சு இருக்கும். அவர் அவையறிந்து பேசும் ஆற்றல் உடையவர். பாமர மக்களிடமும் பேசுவார் ; பாராளுமன்றத்திலும் பேசுவார் ; கல்லாதவர்களிடமும் பேசுவார் ; கல்லூரிகளிலும் பேசுவார். அரசியல் பேசுவார் ; பொருளாதாரம் பேசுவார் ; சட்டம் பேசுவார் ; இலக்கியமும் பேசுவார் ; எந்தத் தலைப்பில் வேண்டுமானாலும் பேசுவார் ; எந்தத் தலைப்பும் இல்லாமலும் பேசுவார்.

அவர் இந்தியப் பாராளுமன்றத்தின் மேலவையில் ஆற்றிய சொற்பொழிவு, அமெரிக்காவின் யேல் பல்கலைக்கழகத்தில் (Yale University, New Haven Connecticut) ஆற்றிய சொற்பொழிவு, மற்றும் தமிழ்நாட்டின் மூலைமுடுக்குகளில் எல்லாம் அவர் ஆற்றிய ஆயிரக்கணக்கான சொற்பொழிவுகள் கேட்டவர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டன.

அண்ணா அவர்கள் மணிக்கணக்கில் மக்களை ஈர்க்கும் வகையில் பேசக்கூடிய ஆற்றல் மட்டுமல்லாமல், சுருங்கச்சொல்லி விளங்கவைக்கும் ஆற்றலும் உடையவராக இருந்தார். ஒரு சமயம், ஒரு ஊரில் நடைபெற்ற திராவிட முன்னேற்றக் கழகத்தின் (திமுக) தேர்தல் பிரச்சாரக் கூட்டதிற்கு அவர் செல்ல வேண்டியதாக இருந்தது. அந்தக் கூட்டத்திற்கு ஒன்பது மணிக்கு வரவேண்டியவர் ஏறத்தாழ பத்தரை மணிக்கு வந்தார். அண்ணா வந்தவுடன், கூட்டத்தை ஏற்பாடு செய்திருந்தவர்கள், “ஐயா, பத்தரை மணிவரைதான் கூட்டம் நடத்த நமக்கு அனுமதி அளித்திருகிறார்கள். இப்பொழுது, பத்தரை மணிக்கு இன்னும் ஒரு மணித்துளிதான் உள்ளது. என்ன செய்வது?” என்று அவரைக் கேட்டார்கள். அதற்கு அண்ணா, “பரவாயில்லை. நான் ஒரு மணித்துளியில் என் பேச்சை முடித்து விடுகிறேன்.”, என்று சொல்லிவிட்டு, மேடைக்குப் போய், “என் அருமைத் தோழர்களே! மாதமோ சித்திரை; மணியோ பத்தரை; உங்களைத் தழுவுவதோ நித்திரை; மறக்காமல் எமக்கு இடுவீர் முத்திரை!” என்று கூறித் தன் பேச்சை முடித்தார். அவர் சுருங்கச் சொல்லி விளங்கவைத்த செய்தி, அந்தத் தொகுதியில் போட்டியிட்ட திமுக வேட்பாளருக்கு வெற்றியைப் பெற்றுத் தந்தது.

அண்ணாவின் சொற்பொழிவுகளைக் கேட்கும் பேறு பெற்றவர்களுள் நானும் ஒருவன். நான் சென்னையில் உள்ள இலயோலாக் கல்லூரியில் இளங்கலைப் பட்டப் படிப்புப் படிக்கும்பொழுது, கல்லூரி விடுதியில் தங்கிப் படித்துகொண்டிருந்தேன். அங்கு, விடுதியில் இருக்கும் மாணவர்கள், இரவு எட்டு மணி முதல் மறுநாள்நாள் காலை ஆறுமணி வரை தங்கள் அறையில் இருக்க வேண்டும்; எவரிடமும் பேசக்கூடாது. இந்த விதிமுறைகளை மீறினால், மாணவர்கள் விடுதியில் இருந்து வெளியேற்றப் படுவார்கள். இது போன்ற கடினமான கட்டுப்பாடுகள் இருந்தாலும், நானும் என்னுடைய நண்பர்களில் ஒரு சிலரும், சென்னையில் மெரினா கடற்கரையில் அண்ணாவின் சொற்பொழிவு நடக்கும் நாட்களில், விடுதியிலிருந்து எவருக்கும் தெரியாமல் வெளியேறி, அண்ணாவின் பேச்சைக் கேட்டுவிட்டு, விடுதிக்கு இரவில் திரும்பி வருவது வழக்கம். மறுநாள் காலை, என்னோடு அண்ணாவின் பேச்சைக் கேட்க வராத நண்பர்கள் என்னைச் சூழ்ந்துகொண்டு, “அண்ணா என்ன பேசினார்?”, “எப்படிப் பேசினார்?” என்று கேட்பார்கள். ”அண்ணா பேசியதைப்போல் பேசிக்காட்டுங்கள்” என்றும் என்னைக் கேட்பார்கள். அண்ணாவைப்போல் எவராலும் பேச முடியாது. இருந்தாலும், நான் என்னால் இயன்றவரை அண்ணா பேசுவதுபோல் பேச முயற்சி

செய்வது வழக்கம். நான் பலமுறை அண்ணாவின் சொற்பொழிவுகளைக் கேட்டிருக்கிறேன். இரண்டு முறை அண்ணாவைச் சந்தித்திருக்கிறேன். அந்த நிகழ்வுகள் என் நெஞ்சிலிருந்து நீங்காமல் நிரந்தரமாக இடம் பெற்றுள்ளன. என் நெஞ்சில் மட்டுமல்லாமல் கோடிக்கணக்கான மக்களின் மனத்திலும் , தமிழ்நாட்டின் வரலாற்றிலும் அண்ணா எப்பொழுதும் நிலைபெற்றிருப்பார் என்பது உறுதி.

முடிவுரை

ஒருவனுடைய சொல்லாற்றல் அவனுடைய மற்ற ஆற்றல்களைவிட வலிமையான ஆற்றல். சொல்லாற்றலைப் பற்றி ஆய்வு செய்து தங்கள் கருத்துக்களைக் கூறிய கிரேக்கத் தத்துவஞானிகளைப்போல் , வள்ளுவரும் சொல்லாற்றலைப் பற்றித் தன்னுடைய அரிய கருத்துக்களைக் கூறியுள்ளார். சொல்லாற்றலைப் பற்றிய வள்ளுவரின் கருத்துக்களை , "சொல்வன்மை", "அவையறிதல்", "அவையஞ்சாமை" ஆகிய அதிகாரங்களில் காணலாம். ஆக்கமும் கேடும் சொல்லால் வருதலால் சொல்லில் தவறு ஏற்படாமல் பாதுகாத்துக்கொள்ள வேண்டும் என்று வள்ளுவர் கூறுகிறார். அவையில் பேசுவதற்கு அஞ்சுபவர்கள் பலர். ஆனால் , கல்வி கேள்விகளில் சிறந்தவர்கள் அஞ்சாமல் , தங்கள் கருத்துக்களை மற்றவர்களோடு பகிர்ந்துகொள்ள வேண்டும் என்பதும் , அவ்வாறு பகிர்ந்துகொள்ளத் தெரியாதவர்கள் மணமில்லாத மலர்களைப் போன்றவர்கள் என்பதும் வள்ளுவரின் கருத்து. ஒரு அவையில் பேசும்பொழுது , அவையில் இருப்போரின் தன்மையை அறிந்து அதற்கேற்பப் பேச வேண்டும் என்றும் வள்ளுவர் கூறுகிறார். ஒருவருடைய பேச்சு , கேட்பவர்களைக் கவர்வதாகவும் , கேளாதவர்களும் கேட்க விரும்பும் வகையிலும் இருக்க வேண்டும் என்று வள்ளுவர் அறிவுரை கூறுகிறார். ஒரு அவையில் பேசும்பொழுது , சுருங்கச் சொல்லி விளங்கவைக்க வேண்டும் என்ற கருத்தையும் வள்ளுவர் வலியுறுத்துகிறார். வள்ளுவர் கூறும் சொல்லாற்றலுக்கு மிகச்சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தவர் அறிஞர் அண்ணா .



அண்ணாவும் பேராசிரியர் சி.இலக்குவனாரும்

# வள்ளுவர் வழங்கும் சிந்தனை வளம்

-மறைமலை இலக்குவனார்

திருவள்ளுவரின் சிந்தனைக் கருவூலமாகிய திருக்குறள் ஒவ்வொரு அறிஞர் உள்ளத்திலும் பல்வேறு தாக்கங்களை ஏற்படுத்துகின்றது.இதன் விளைவாக அவர்கள் ஒரே குறளுக்குப் பலவிதமான சிந்தனைகளை  உரைகளாக முன்மொழிகின்றனர்.

இவை நம் அறிவுக்கு விருந்தாகவும் சிந்தனைக்குத் தூண்டுகோலாகவும் அமைந்துள்ளன.

*நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும் வித்தகர்க் கல்லா லரிது.*-235 என்னும் குறளைப் பற்றிய சில உரையாசிரியர்களின் கருத்துகளை இங்கு எடுத்துக்காட்டியுள்ளேன்.

புகழ் நிலைத்தற் பொருட்டுப் பொருள் வளமழிந்து வறுமையுறலும் வறுமையுற்ற போதும், இயன்றவரை, உயிர் ஒழியும் வரை, அருஞ்செயலாற்றிப் புகழ் நிறுத்தி இறத்தலும் சான்றோர்க்கன்றி மற்றையோர்க்குக் கிட்டாது.

நில்லாப் பொருள் போற்றாது ; நிலைக்கும் புகழ் போற்றுக.

"நிலன் நெளி மருங்கில் நீர் நிலை பெருகத் தட்டோர் அம்ம இவண் தட்டோரே தள்ளாதோர் இவண் தள்ளாதோரே."-புறநானூறு, 18.

நிலம் குழியாக உள்ள இடங்களில், நீர் நிலைகளைப் பெருகச் செய்தல் வேண்டும்; அவ்வாறு நிலத்துடன் நீரைக் கூட்டியோர் உலகம் உள்ளவரை தம் பெயரை நிறுத்திய புகழை அடைவர்; அவ்வாறு செய்யாதவர், இவ்வுலகத்தோடு தம் பெயரைச் சேர்த்த புகழை அடையார்.

*திருக்குறள்- சிறப்புரை-முனைவர் இரெ.குமரன்-ஆசிரியர்) எண்மப் பதிப்பு:  செபுத்தம்பர்2021*

(பொ-ரை): புகழைப் பெருக்குவதன் மூலம் துயர் அடைவதும், புகழை நிலைநிறுத்திச் சாவை அணைப்பதும் ஆகிய செயல்களை ஆற்றல்மிக்கவர் மட்டுமே செய்ய இய லும்; மற்றவர்களால் செய்ய இயலாது

(நத்தம் - புகழ் பெருகுதல்; சாகாடு - சாவு; வித்தகம் ; ஆற்றல்மிக்கவர்.)

(க-ரை): துயருற்றாலும் ஈந்து புகழை வளர்த்தலும், உலகில் புகழை நிலைநாட்டி இறத்தலும் ஆற்றல்மிக்கவர்கள் மட்டுமே செய்யக்கூடிய செயல்கள் ஆகும்; அவை பிறரால் ஆகா, (235)

*.-திருக்குறள்--நாவலர் தெளிவுரை-ஆசிரியர்: டாக்டர் நாவலர்இரா.நெடுஞ்செழியன்,*

வெளியிடுவோர்: நாவலர் நெடுஞ்செழியன் கல்வி அறக்கட்டளை 4, மாசிலாமணி தெரு, சீத்தம்மாள் காலனி, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018,

புகழின் வளர்ச்சியோடு துன்பமும் தொடர்ந்து வரும், அறவாழ்வில் நிலைக்கும் ஆற்றலாளர் செத்தாலும் எக்காலத்தும் புகழுலகில் பெயர் மங்காது வாழ்வர்

திரிக்குறள்: தெளிவுரை-ஆசிரியர்: தமிழ்மறையான்- வெளியீடு-இரண்டாம் பதிப்பு-103அறிவுலகம்- உரிமை ஆசிரியர்க்கு

புகழைத்தரும் அழிவும் சாவும் திறமை உடையார்க்கு அல்லது இல்லை. (புகழின் பொருட்டு வாழ்க்கையில் துன்பம் அடைதலும் இறத்தலும் யாவர்க்கும் உரியன அல்ல.)

திருக்குறள்-எளிய பொழிப்புரை-சி. இலக்குவனார்- பூம்புகார் பதிப்பகம் 127 (ப. எண். 6.3), பிரகாசம் சாலை (பிராட்வே) சென்னை - 600 108.

இன்மையில் நிவப்புறும் இறப்பினில் நிலைப்புறும் தன்மைகள் எட்டுவோர் தகுதியர் மட்டுமே கேட்டினால் உயர்தலும் சாவினால் நிலை நிற்பதும் அறிவுடையோர்க்கு அல்லாமல் மற்றவர்க்கு இல்லை.

திருக்குறள் ( பொருள் & புதுக்குறள்)- ஆசிரியர்:பேராசிரியர் டாக்டர் அ.மீனாட்சிசுந்தரம், கண் மருத்துவர், கோவில்பட்டி-வெளியீடு & உரிமை: ஆசிரியருக்கே.- முதல் பதிப்பு (டிசம்பர் 2017)

செக்கிழுத்த செம்மல் வ.உ.சிதம்பரனாரின் புரட்சி உரை:

வ.உ.சி. இந்தக் குறளையே பின்வருமாறு மாற்றுகிறார்.

நத்தம்போர் கேடு முளதாகுஞ் சாக்காடும் வித்தகர்க் கல்லா லரிது.

நத்தம்போல் என்பது நத்தம்போர் என்றிருக்கவேண்டுமென்பது அவர் கருத்து.

குறள் எண் (205) என்கிறார்.ஏனெனில் பாயிரம் (முதல் மூன்று அதிகாரங்கள் இடைச்செருகல் என்பது அவர் துணிபு.

பொருள்: நத்தம் போர் கேடும் - ஆக்கத்தைப் போர்த்த கேடும் உள்ளது ஆகும் சாக்காடும் - (என்றும்) உள்ளது ஆகும் சாவும். வித்தகர்க்கு அல்லால் ஏனையோர்க்கு) அரிது - அறிஞர்க்கு அல்லாமல் மற்றையோர்க்குச் செய்தல் இயலாது.

அகலம்: ஈகை தோற்ற மாத்திரையில் பொருட் கேட்டையும், உண்மையில் பொருளாக்கத்தையும் நல்குவதால், அதனை 'நத்தம் போர் கேடு' என்றார். பிறர் நன்மைக்காக உயிரை வழங்குதல் தோற்ற மாத்திரையில் சாவையும் உண்மையில் (புகழுடம்போடு கூடி) என்றும் உள்ளதாம் தன்மையையும் நல்குவதால் அதனை (உளதாகும் சாக்காடு) என்றார். ‘உள்ளதாகும்' என்பது ‘ள கர வொற்றுக் கெட்டு நின்றது. 'போர்' என்பது வினைத்தொகை. முந்திய உரையாசிரியர்கள் பாடம் `நத்தம்போற் . இக் குறளின் மூன்றாஞ் சீரின் முதற் சொல்லாகிய 'உளது` என்பது ஆகும் என்னும் ஆக்கச் சொல்லைக் கொண்டு நிற்றல் போல, இக் குறளின் முதற் சீரின் முதற் சொல்லாகிய 'நத்தம்` என்பதும் *ஆம் அல்லது போர் என்பது போன்ற பொருள் தரும் ஒரு சொல்லோடு சேர்ந்து நிற்றல் பொருள் கோளுக்கு இன்றியமையாததா யிருக்க, அச்சொல்லை விடுத்துப் பொருள் கோளுக்கு வேண்டாத ‘போல் என்னும் உரையசைச் சொல்லைச் சேர்த்துப் புலவரெவரும் பாடாராகலின், 'நத்தம்போற்` என்பது ஏடு பெயர்த் தெழுதியோனால் நேர்ந்த பிழையெனக் கொள்க.'மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயா, தேந்தியகைகொ டிரந்தவரெந்தாய், வீய்ந்தவ ரென்பர் வீய்ந்தவரேனும் ஈய்ந்தவரல்லதிருந்தவர் யாரே´-கம்பராமாயணம்

கருத்து: பிறருக்கு ஈவோரும் பிறருக்காக உயிர்வழங்குவோரும் பெரியர்.

நூலின் பெயர் -திருக்குறள் அறப்பால் -வ.உ.சிதம்பரனார் உரை

# குறள் நெறி

மின்னிதழ்:32 சித்திரை-3 -தி.பி.2053 ஏப்பிரல்-16- பொ.ஆ.2022



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



பாவலரேறு பெருஞ்சித்திரனார்

பொறுப்பாசிரியர் -மறைமலை இலக்குவனார் -
இணையாசிரியர் -முனைவர் தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

## கடவுள் வாழ்த்து -பெருஞ்சித்திரனார் விளக்கம் :

தென்மொழி ஆசிரியரும் உலகத் தமிழ்க்கழக நிறுவனருமாகிய பாவலர் பெருஞ்சித்திரனார் இயற்றிய "திருக்குறள் மெய்ப்பொருளுரை " ஆய்வுத்திறனால் தனித்தன்மை பெற்றிலங்குவது .பாவலரேறு அவர்களின் சங்கநூற்புலமையும் தமிழ் இலக்கியப் பயிற்சியும் புலப்படுத்தும் பெற்றியது .தேய்ந்த பாதையிற் செல்லும் செக்குமாடுகள் எழுதும் உரையைக் கண்டு மனம் சலிப்போர் இவ்வுரையை உவகையுடன் கற்பார் என்பது திண்ணம் .பானைச்சோற்றுக்கு ஒருசோறு பதமாக கடவுள்வாழ்த்து எனும் திருக்குறள் அதிகாரத் தலைப்புக்கு அவர் வழங்கிய உரையை இங்கு வெளியிட்டுள்ளோம் .

இறைமை உணர்வு தேவை :
செயற்கைக்கும் இயற்கைக்கும் அடிப்படையான மூல அறக்கூறை நினைந்து , உணர்வொன்றிப் போற்றுதலாகும் இது.
அறமுதல் - இயங்கியலின் மூல மெய்ப்பொருள்.
அதாவது மூல உண்மை. ......
உலக அறவியலும் இயங்கியலும் வாழ்வியலும் வகுத்துச் சொல்லப் புகுந்தவர் , முதற்கண் , இவ்வுலக உயிர்களும் , அவற்றுக் கிருப்பிடனாய இவ்வுலகமும் , அதுவும் பிறவும் இயங்குறும் இப்புடவியும் " அது போற் _ பலவும் நின்று. இயங்குவதற்கு அடிப்படையாய் நிற்கும் அறமுதலாகிய இறைமைப் பேராற்றலும் , அதற்கும் நம் வாழ்வியலுக்கும் உள்ள தொடர்பும் , அத்தொடர்பால் விளைதரும் நன்மைகளும் கூறுவான் வேண்டி , அவ்வற முதலாம் இறைமையுணர்வுத் தேவையை இவ்வதிகாரத் தின்கண் கூறப் புகுந்தார்.
[1 அறவியல் - Science of Ethics or Virtue, The reality of Natural existece -. அறவுண ர்வின் இயல்பாந் தன்மைகள் , இயற்கையின் ஒழுங்கியல்.
2. இயங்கியல் - பூதவியலும் ( Physics), 'வேதியலும் ( Chemistry) இணைந்து , பொருளாகவும் ( Matter), ஆற்றலாகவும் ( Energy), இயற்கையாய் அமைந்து , தானியங்கு நிலை. ( Naturalism, spontaneousness).
3. புடவி - பிரபஞ்சம் ( Universe)]
அதிகாரப் பெயர் மாற்றம் - அறமுதல் உணர்தல்:

பிற உரையாசிரியர்கள் கொண்ட பாடங்களில் இவ்வதிகாரப் பெயர் "கடவுள் வாழ்த்து ' முதலிய வேறு பெயர்களில் உள. கடவுள் என்னும் பெயர்க் குறிப்பு இவ்வதிகாரத்து

மட்டுமன்றி , நூலுள் வேறு எங்குமே வராமையானும் , இறைவன் வேறு , கடவுள் வேறு , தெய்வம் வேறு ஆகலானும் , இறைவன் என்று இவ்வதிகாரத்துள் வந்த ( 5,10] ஈரிடங்களிலும்கூட , அறமுதலையே உணர்த்தியுள்ளார் ஆகலானும் , இவ்வதிகாரப் பெயர் அறமுதல் உணர்தல் - (அஃதாவது அறத்தின் முதலாக நின்றியங்கும் மூலமெய்ப் பொருளாகிய இறைமையை உணர்தல்) என மாற்றப்பெற்றது. “வாழ்த்து" எனும் சொல்லும் , பொருளும் பொருத்தம். இன்மையாலும் அச்சொல்லும் தவிர்க்கப்பெற்றதென்க.

இறைவன் , கடவுள் , தெய்வம்:

இறைமை அல்லது இறைவன்: தோற்றம். கொண்ட அனைத்துக்கும் மூலமாய் , முதலாய் நிற்கும் முதற்பொருள் அல்லது மூல ஆற்றல் தனித்து நிற்கும் நிலை.
கடவுள்: அம்மூலப்பொருள் உயிர்களுடன் கலந்து நிற்கும் நிலை. இறக்க(அவதார) நிலையும் அது.
தெய்வம்: உயிர்களுள் மேம்பாடுற்றுச் சிறந்த மீமிசை மாந்த உயிர்கள் , உலகத்து வாழ்ந்து மறைந்து , மீண்டும் உடற்பிறவியற்று உயிரொளியாய் இயங்கும் நிலை.
இம்மூன்று நிலைகளும் தொடக்கத்தே வேறு வேறு காலங்களில். கருத்துப் படிநிலையும் , சொற் படிநிலையுமாகிய வளர்ச்சி பெற்றுப் பல்வேறு உணர்வு நிலைகளை. உணர்த்தி , இக்கால் ஒன்றெனவும் மிகைப்படவும் மயங்கி வழங்குகின்றன. தெள்ளிதின் உணர்வதற்காக இங்கு “வேறு பிரித்துச் சொல்லப்பெறுகிறது. இவற்றின் தோற்ற விரிவு விளக்க வரலாறெல்லாம் இதன் 'நிறைவுரையில். கூறப்பெறும்.

இந்நூலைப் பொறுத்த அளவில் , கடவுள். என்னும் சொல் கையாளப்பெறவில்லை.ஆனால் திருவள்ளுவர் காலத்திற்கு முன்பிருந்தும் , அவர் காலத்தும் அவர்க்குப். பின்னும் இச்சொல் நெடுகலும் வழங்கப் பெற்றுள்ளது. இச்சொல்லை அவர் ஏன் தவிர்த்தார் என்பது. புலப்படவில்லை. அவர் காலத்தில் ஆரியச் சார்பான கடவுள் இறக்க(அவதாற) நிலைக் கதைகளும் தமிழகத்துள் வழங்கியுள்ளமை அறியப்பெறுகிறது. அவற்றை அவர் அறிந்திருக்கவே முடியும். அனால் , ஏனோ அவற்றாலெல்லாம் அவர் கவரப்படவில்லை என்றே தெரிகிறது. அவர் இந்நூலுள் கடவுள் என்னும் சொல் தவிர , இறை - இறைவன் , தெய்வம் என்னும் மற்றிரண்டு சொற்களையும் பயன்படுத்தியுள்ளார். “இறை” என்னும் சொல் , ஏழு இடங்களில் ( 388, 547, 547, 264, 783, 847, 1152] வருகின்றது. இவற்றுள் , ஒரே ஓர் இடத்தில் ( 888) மட்டுந்தான் அது இறைவனைக் குறிக்கிறது. மற்ற இரண்டு இடங்களில் ( 547, 564] அரசனையும் , ஓர் இடத்தில் ( 541) அரசு அல்லது நடுநிலையையும் , ஓர். இடத்தில் ( 783) இறைப்பொருளையும் , ஓர் இடத்தில் ( 8427) வருத்தத்தையும் , மற்று ஒர் இடத்தில் ( 1157). மணிக்கட்டையும் குறிக்கின்றது. அதேபோல் , இறைவன் என்னும் சொல் ஐந்து இடங்களில் ( 5, 10, 690, 734, 779)

**வருகிறது. இவற்றுள் இரண்டு இடங்களில் ( 5, 10) மட்டும் இறைவனைக் குறிக்கிறது. மீதி மூன்று இடங்களிலும் ( 690, 733, 779) அரசனையே குறிக்கின்றது. இனி , தெய்வம் என்னும் சொல் ஆறு இடங்களில் ( 43, 50, 55) 619, 702, 1023) வருகிறது. அவ்வாறு இடங்களிலும் அது தெய்வத்தையேதான் குறிக்கிறது. இம்மூன்று சொற்களின் பயன்படுத்தங்களையும் வைத்துப் பார்க்கும் பொழுது , திருவள்ளுவர். அனைத்து நிலைகளின் மூல முதற்பொருளாகிய 'இறைமை' அஃதாவது 'இறைவனை'யும், மாந்த நிலையினின்று மேம்பட்டு உயர்ந்த 'தெய்வ' நிலையினையும் ஓப்புகிறார். கடவுள் நிலையை அவர் கருதவில்லை , அல்லது ஏற்கவில்லை என்றே. தெரிகிறது.**

**[பெருஞ்சித்திரனார்- திருக்குறள் மெய்ப்பொருளுரை உரைச் சுருக்கம் -**
**இரண்டாம் பகுதி-குறட்பாக்கள் 1 முதல் 100 வரை**
**வெளியீடு: தென்மொழி பதிப்பகம் ,பாவலரேறு தமிழ்க்களம் ,**
**1, வடக்குப்பட்டுச் சாலை , - மேடவாக்கம் , சென்னை - 601. 302.**
**திருக்குறள் -பாயிரவியல் - அ- 1.1. அறமுதல் உணர்தல்- 1. அதிகார முன்னுரை: ]**

பாவலரேறு வாழ்க்கைக் குறிப்பு

பாவலரேறு எனவும், பெருஞ்சித்திரனார் எனவும் தமிழ் உணர்வாளர்களால் போற்றி மதிக்கப்படும் பெருஞ்சித்திரனார் 10-03-1933 இல் பிறந்தவர். இவர்தம் பெற்றோர் துரைசாமியார், குஞ்சம்மாள் ஆவர். இவர்களுக்குச் சொந்த ஊர் சேலம் மாவட்டம், சமுத்திரம் என்பதாகும். பெருஞ்சித்திரனாரின் இயற்பெயர் இராசமாணிக்கம் என்பதாகும். பெருஞ்சித்திரனார் தம் தந்தையார் பெயரின் முன்னொட்டை இணைத்து துரை-மாணிக்கம் எனத் தொடக்க காலத்தில் வைத்துக் கொண்டார்.

கல்வி

பெருஞ்சித்திரனாரின் தொடக்கக் கல்வி சேலத்திலும் ஆத்தூரிலும் அமைந்தது. இவருக்கு உயர்நிலைப்பள்ளியில் சேலம் நடேசனாரும், தமிழ் மறவர் பொன்னம்பலனாரும் ஆசிரியர்களாக விளங்கி தமிழறிவும் தமிழ்உணர்வும் புகட்டினர்.

பெருஞ்சித்திரனார் பள்ளியில் பயிலும் காலத்தில் தமிழ் ஈடுபாட்டுடன் கற்றவர். "குழந்தை' என்னும் பெயரில் கையெழுத்து ஏட்டைத் தொடங்கி மாணவர் பருவத்தில் நடத்தியவர். பின்பு அருணமணி என்னும் புனைபெயரில் "மலர்க்காடு' என்னும் கையெழுத்து ஏட்டினை நடத்தினார். மல்லிகை, பூக்காரி என்னும் பாவியங்களைப் பள்ளிப்பருவத்தில் இயற்றிய பெருமைக்குரியவர்.

பெருஞ்சித்திரனார் 1950இல் பள்ளிப்படிப்பை நிறைவு செய்த பின்னர், சேலம் நகராட்சிக் கல்லூரியில் பயின்றார். பாவாணர் அங்குப் பணிபுரிந்தபொழுது அவர்தம் மாணவராக

தமிழறிவு பெற்றார். இளமையில் பெருஞ்சித்திரனாருக்கு உலக ஊழியனார், காமாட்சி குமாரசாமி முதலானவர்களும் ஆசிரியர் பெருமக்களாக விளங்கினர்.
கல்லூரியில் பெருஞ்சித்திரனார் பயிலும் காலத்தில் பாவேந்தர் பாரதிதாசன் பாடல்களில் மிகுந்த ஈடுபாட்டுடன் விளங்கினார். எனவே தாம் இயற்றிய மல்லிகை, பூக்காரி என்னும் இரு பாவியங்களையும் எடுத்துக்கொண்டு பாவேந்தரைச் சந்திக்க புதுச்சேரி சென்றார். ஆனால் பாவேந்தர் அந்நூல்களைப் பார்க்க அக்காலத்தில் மறுத்துவிட்டதையும் பின்னர் ஒரு நூலைக் கொய்யாக்கனி எனும் பெயரில் அவரே அவர் தம் அச்சகத்தில் அச்சிட்டுத் தந்ததையும் பெருஞ்சித்திரனார் குறிப்பிடுவதுண்டு.
பெருஞ்சித்திரனார் கல்லூரியில் பயிலும் போது கமலம் என்னும் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார். அப் பெண்ணே தாமரை அம்மையாராகத் தனித்தன்மையும் தலைமைப் பண்பும் கொண்டு பெருஞ்சித்திரனார் மறைவுக்குப் பின்பு தம் வாழ்நாளெல்லாம் அவருடைய இயக்கத்தைச் சிறப்புடன் பொறுப்பேற்று நட்த்தினார்.
தென்மொழி இதழும் எழுத்துப் பணியும்
பெருஞ்சித்திரனார் புதுவையில் அஞ்சல் துறையில் முதன்முதலில் பணியில் இணைந்தார். ஐந்து ஆண்டுகள் புதுவையில் வாழ்க்கை அமைந்தது. அக்காலத்தில் பாவேந்தருடன் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது.
1959 இல் பெருஞ்சித்திரனாருக்குப் பணிமாற்றல் கிடைத்து  கடலூருக்கு மாற்றப்பட்டார். இச்சூழலில் பாவாணர் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் அகரமுதலித் துறையில் பணியேற்றார். பாவாணர் விருப்பப்படி தென்மொழி என்னும் இதழை1959இல் பெருஞ்சித்திரனார் தொடங்கி நடத்தினார். அரசுப் பணியில் இருந்ததால் தம் இயற்பெயரான துரை-மாணிக்கம் என்பதை விடுத்து பெருஞ்சித்திரன் என்னும் புனைபெயரில் எழுதினார். தென்மொழியின் தொடக்க ஏட்டில் சிறப்பாசிரியர் பாவாணர் எனவும் பொறுப்பாசிரியர் பெருஞ்சித்திரன் எனவும் பெயர்கள் தாங்கி இதழ் வெளியானது. தென்மொழியின் 16 இதழ்கள் வெளிவந்த சூழலில் பொருள் முட்டுப்பாட்டால் இதழ் இடையில் நின்றது. பின்பு கருத்துச் செறிவுடனும் புதுப்பொலிவுடனும் மீண்டும் வந்து கல்லூரி மாணவர்கள் தமிழாசிரியர்களால் விரும்பிப் படிக்கப்பட்டது.
தமிழ்ப்பற்றும் தமிழ் உணர்வும் கொண்டு தம் பாட்டு ஆற்றலால் இதழை நடத்திய பெருஞ்சித்திரனார் அக்காலத்தில் சுடர் விட்டு எழுந்த இந்தி எதிர்ப்புப் போரில் தம் உரையாலும் பாட்டாலும் பெரும் பங்காற்றினார். இந்தி எதிர்ப்புப் போரில் இவர்தம் தென்மொழி இதழிற்குப் பெரும் பங்குண்டு. தம் இயக்கப்பணிகளுக்கு அரசுப்பணி தடையாக இருப்பதாலும் முழுநேரம் மொழிப் பணியாற்றவும் நினைத்து அரசுப்பணியை உதறினார். இவர் எழுதிய பாடல்கள் இந்தி எதிர்ப்பு உணர்வைத் தூண்டுவதாக அரசால் குற்றம் சாற்றப்பெற்றது. இவருக்கு இதனால் சிறைத் தண்டனை கிடைத்தது.வேலூர் சிறையில் அடைக்கப்பட்டார். சிறையில் இருந்தபோது ஐயை என்னும் தனித்தமிழ்ப் பாவியத்தின் முதல் தொகுதியை எழுதினார்.
பெருஞ்சித்திரனார் சிறையில் இருந்து வெளிவந்த பிறகு மாணவர்கள் படித்துப் பயன்பெறும் வண்ணம் தமிழ்ச்சிட்டு என்னும் இதழைத் தொடங்கினார். இவ்விதழில் பள்ளிகளில் படிக்கும் மாணவர்கள் விரும்பும் வண்ணம் பாட்டுகளையும் கட்டுரைகளையும் வரைந்தார். தம்மை ஒத்த பாவலர்களின் படைப்புகளையும் வெளியிட்டு ஊக்கப்படுத்தினார்.

பாவாணரின் உலகத்தமிழ்க்கழகம் தோற்றம் பெற்றபொழுது அதில் இணைந்து பணிபுரிந்தவர். அதுபோல் பாவாணர் அகரமுதலி தொகுப்பதற்குப் பொருளுதவி செய்யும் திட்டத்தைத் தொடங்கி உதவியவர்.

தென்மொழிப் பணியை முழுநேரப் பணியாக அமைத்துக்கொண்ட பிறகு 1972இல் திருச்சியில் தென்மொழி கொள்கைச் செயற்பாட்டு மாநாடு ஒன்றை நடத்தினார். 1973இல் தென்மொழி கொள்கைச் செயற்பாட்டு மாநாடு மதுரையில் நடத்த முயற்சி செய்தபோது சிறை செய்யப்பட்டார். இக்காலகட்டங்களில் தமிழ் உணர்வுடன் பாடல் வரைந்த உயர்செயல் நினைத்துப் பாவாணர் அவர்கள் "பாவலரேறு' என்னும் சிறப்புப் பெயரைச் சூட்டி மகிழ்ந்தார். தமிழகம் முழுவதும் தென்மொழி இதழ் வழியாகவும் பொது மேடைகள் வழியாகவும் தனித்தமிழ் உணர்வைப் பரப்பிய பெருஞ்சித்திரனாரின் வினைப்பாடு உலகம் முழுவதும் பரவியது. எனவே மலேசியா, சிங்கப்பூர் முதலான நாடுகளில் வாழ்ந்த தமிழ் மக்களின் அழைப்பினை ஏற்று 1974இல் சிங்கை மலையகச் செந்தமிழ்ச் செலவை மேற்கொண்டார். இச்சுற்றுச்செலவிற்குப் பின் கடலூரில் இருந்து தென்மொழி அலுவலகம் சென்னைக்கு மாறியது.

திரு. செ. பன்னீர்ச்செல்வம் அவர்கள் தென்மொழி வளர்ச்சியிலும் பெருஞ்சித்திரனாரின் குடும்ப வளர்ச்சியிலும் பெரும் துணையாக நின்றார். அதுபோல் பெருஞ்சித்திரனாரின் இதழ் வெளியீட்டுப் பணிகளில் தொடக்க காலங்களில் ம.இலெனின் தங்கப்பா, மு. தமிழ்க்குடிமகன் (சாத்தையா),பாளை. எழிலேந்தி முதலான அறிஞர் பெருமக்கள் துணையாக இருந்தனர். அண்ணாமலைப் பல்கலைக்கழக மாணவர்கள் தென்மொழி ஏட்டின் வளர்ச்சியில் பெருந்துணையாக இருந்தனர்.

இந்தியாவில் நெருக்கடி நிலை நடைமுறைக்கு வந்தபோது பெருஞ்சித்திரனார் சிறைப்பட்டார். அப்போது ஐயை நூலின் இரண்டாம் பகுதியை எழுதி முடித்தார். பெருஞ்சித்திரனார் பன்னெடுங்காலமாக எழுதிக் குவித்திருந்த தமிழ் உணர்வுப் பாடல்கள் முதற்கட்டமாக முறையாகத் தொகுக்கப்பட்டு கனிச்சாறு என்னும் பெயரில் மூன்று தொகுதிகளாக (1979) வெளிவந்தன.

பெருஞ்சித்திரனார் தம் இதழ்களில் எழுதியதோடு அமையாமல் பகுத்தறிவு, தென்றல், முல்லை, வானம்பாடி தமிழ்நாடு, செந்தமிழ்ச் செல்வி, விடுதலை, உரிமை முழக்கம், தேனமுதம், சனநாயகம், குயில் முதலிய இதழ்களில் எழுதியவர்.

பெருஞ்சித்திரனாரின் பாட்டுத்திறமை முழுவதையும் காட்டுவனவாகவும், கொள்கை உணர்வினை வெளிப்படுத்துவனவாகவும் விளங்குவன இவர்தம் கனிச்சாறு நூலாகும். இந்நூலின் மூன்று தொகுதிகளுள்ளும் 1. தமிழ், 2. இந்தி எதிர்ப்பும் இன எழுச்சியும், 3. நாட்டுரிமை, 4. பொதுமை உணர்வு, 5. இளைய தலைமுறை, 6. காதல், 7. இயற்கை, 8. இறைமை, 9. பொது என்ற அமைப்பில் பாடல்கள் அமைந்துள்ளன. தமிழ்மொழியின் சிறப்பினையும் தமிழுக்கும் தமக்கும் உள்ள தொடர்பினையும் பெருஞ்சித்திரனார் சீரிய யாப்பமைப்பில் பாடியுள்ளார்.

"என்மொழி, என்னினம், என்நாடு நலிகையில்
எதனையும் பெரிதென எண்ண மாட்டேன் - வேறு
எவரையும் புகழ்ந்துரை சொல்ல மாட்டேன்! - வரும்

புன்மொழி, பழியுரை, துன்பங்கள் யாவையும்
பொருட்டென மதித்துளம் கொள்ள மாட்டேன்! - இந்த(ப்)
பூட்கையில் ஓரடி தள்ள மாட்டேன்!

என்று தமிழ்மொழியின் வளர்ச்சியைவிட, தனக்கெனத் தனியான ஒரு வளர்ச்சி இல்லை என்று பாடியவர் பெருஞ்சித்திரனார்.

1981இல் பாவாணர் இயற்கை எய்திய நிகழ்வு பெருஞ்சித்திரனாருக்கு மிகப்பெரிய இழப்பாக அமைந்தது. மொழிப்பற்றும் இனஉணர்வும் ஊட்டி வளர்த்த தம் ஆசிரிய பெருமகனாரின் மறைவு குறித்துப் பெருஞ்சித்திரனார் எழுதிய கட்டுரை கண்ணீர் வரச் செய்யும் தரத்ததாகும்.

பெருஞ்சித்திரனார் 1981இல் உலகத் தமிழின முன்னேற்றக் கழகம் என்னும் அமைப்பை நிறுவி தமிழகம் முழுவதும் இயக்கம் கட்டி எழுப்பினார். அதன் அடுத்த முயற்சியாக 1982இல் தமிழ் நிலம் என்னும் ஏட்டைத் தொடங்கி நடத்தினார்.

1983-84ஆம் ஆண்டில் மேற்கு உலக நாடுகளில் இவர்தம் சுற்றுச் செலவு அமைந்தது.

1985இல் மலேசியாவிற்கு இரண்டாவது முறையாகப் பயணம் செய்தார்.

1988இல் செயலும் செயல்திறனும் என்னும் நூல் வெளிவந்தது. மொழி, இனம், நாட்டு உணர்வுடன் பாடல்கள் புனைந்து, இதழ்கள் நடத்தி, மேடைதோறும் தமிழ் முழக்கம் செய்து, இயக்கம் கட்டமைத்து உண்மையாகத் தமிழுக்கு வாழ்ந்த பெருஞ்சித்திரனார் 11.06.1995இல் இயற்கை எய்தினார்.

சென்னை மேடவாக்கத்தில் "பாவலரேறு தமிழ்க்களம்' என்னும் நினைவகம் அமைக்கப்பட்டுள்ளது.

பெருஞ்சித்திரனாரின் அரசியல்:

பெருஞ்சித்திரனார் தன் மொழிவழி முன்னோடி இயக்கமான தனித்தமிழ் இயக்கத்தவர்களிடமிருந்து தீவிரமாக வேறுபடும், முரண்படும் புள்ளி அவரின் அரசியலாகும். தமிழ்நாடு இந்திய அரச கட்டமைப்பிலிருந்து விடுபட்டு தனித்தமிழ்நாடு என்பதாக தனித்தேசமாக உருவாகவேண்டும் என்பது பெருஞ்சித்திரனாரின் அரசியல் நிலைப்பாடாகும். அவர் தமது தென்மொழி இதழின் முதல் இதழிலிருந்து இதனை வலியுறுத்திவந்தார்.

பெருஞ்சித்திரனாரின் குடும்பம்:

பெருஞ்சித்திரனார் அவர்களின் குடும்பம் தமிழின வரலாற்றில் தவிர்க்க முடியாத குடும்பமாக திகழ்கிறது. முதுபெரும்புலவர்.இறைக்குருவனார், தமிழ்மொழியின் தொன்மையை ஆய்ந்து உலகுக்குணர்த்திய சொல்லாய்வறிஞர்.ப.அருளியார், தமிழ்வழிப்பள்ளியை முதன்முதலில் உருவாக்கிய திருவாட்டி.இறை.பொற்கொடி, பகுத்தறிவுக் குமுகாயம் ஆக்கம் செய்யும் பெண்ணியப்போராளி தழல்.தேன்மொழி, பேராசிரியர்.மா.பூங்குன்றன், முனைவர்.கி.குணத்தொகையன், அறிஞர்.ஆறிறைவன், தமிழ்த்தேசியப்போராளி மா.பொழிலன், வழக்கறிஞர்.அங்கயற்கண்ணி, வரலாற்றறிஞர் தெள்ளியன் உள்ளிட்ட குடும்பமே இனத்தையும் மொழியையும் வழிநடத்துகின்றது. தென்மொழி, தழல், தமிழ்நிலம், மாணவர்களம் என்ற இதழ்களும் பல்வேறு இயக்கங்கள், கல்வி அறக்கட்டளைகளும் இக்குடும்பத்தால் நடத்தப்படுகின்றன.

நூல்கள்:

1. அறுபருவத் திருக்கூத்து
2. ஆரியப் பார்ப்பனரின் அளவிறந்த கொட்டங்கள்
3. இட்ட சாவம் முட்டியது
4. இனம் ஒன்றுபட வேண்டும் என்பது எதற்கு?
5. இலக்கியத் துறையில் தமிழ்வளர்ச்சிக்குரிய ஆக்கப் பணிகள்
6. இளமை உணர்வுகள்
7. இளமை விடியல்
8. உலகியல் நூறு
9. எண் சுவை எண்பது
10. ஐயை (பாவியம்)
11. ஓ! ஓ! தமிழர்களே
12. கற்பனை ஊற்றுக் கட்டுரைகள்
13. கழுதை அழுத கதை
14. கனிச்சாறு (எட்டு பாடற்தொகுதிகள்)
15. கொய்யாக் கனி (பாவியம்)
16. சாதித் தீமைகளும் அதை ஒழிக்கும் திட்டமும்
17. சாதி ஒழிப்பு
18. செயலும் செயல்திறனும்
19. தனித்தமிழ் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்
20. தன்னுணர்வு
21. தமிழீழம்
22. திருக்குறள் மெய்ப்பொருளுரை பகுதி-1
23. திருக்குறள் மெய்ப்பொருளுரை பகுதி-2
24. திருக்குறள் மெய்ப்பொருளுரை பகுதி-3
25. திருக்குறள் மெய்ப்பொருளுரை பகுதி-4
26. நமக்குள் நாம்....
27. நூறாசிரியம்
28. நெருப்பாற்றில் எதிர் நீச்சல்
29. பள்ளிப் பறவைகள்
30. பாச்சோறு (குழந்தைப்பாடல்கள்)
31. பாவலரேறு பெருஞ்சித்திரனார் பாடல்கள்-1
32. பாவலரேறு பெருஞ்சித்திரனார் பாடல்கள்-2
33. பாவியக் கொத்து (இரண்டு தொகுதி)

34. பாவேந்தர் பாரதிதாசன்

35. பெரியார்

36. அருளி

37. மகபுகுவஞ்சி

38. மொழி ஞாயிறு பாவாணர்

39. வாழ்வியல் முப்பது

40. வேண்டும் விடுதலை

நன்றி: தமிழ் விக்கிபீடியா

## வாய்மையின் நல்ல பிற இல்லை

*-"திருக்குறளார்" முனைவர் இர. பிரபாகரன்*



முன்னுரை

அமெரிக்காவில் உள்ள யு. ஸ். நியூஸ் & வேள்டு ரிபோர்ட் (U.S. News & World Report) என்ற நாளிதழில், 2012 – ஆம் ஆண்டு ஏஞ்சலா ஹாப்ட் (Angela Haupt) என்ற பெண்மணி எழுதிய கட்டுரையில், அமெரிக்காவில் உள்ளவர்கள் சராசரியாக ஒருவாரத்திற்கு பதினொருமுறை பொய் சொல்கிறார்கள் என்று கூறுகிறார். அந்தக் கட்டுரையில், நாட்ர டேம் (Notre Dame) பல்கலைக்கழகத்தில் உளவியல் (Psychology) பேராசிரியராகப் பணியாற்றும் அனிதா கெல்லி (Anita Kelly) என்பவர் நடத்திய பரிசோதனையில், பொய் பேசுபவர்களின் உடல்நலமும் மனநலமும் பாதிக்கப்படுவதாகவும், பொய்பேசாதவர்களின் உடல்நலத்திலும் மனநலத்திலும் முன்னேற்றம் இருப்பதாகவும் கண்டறிந்ததாகக் கூறுகிறார். பொய் பேசுபவர்களின் இதயத் துடிப்பின் வேகம் (Heart Rate), இரத்த அழுத்தம் (Blood Pressure), மன அழுத்தம் (Depression) ஆகியவை அதிகரிப்பதாகவும், மன அழுத்தம் அதிகரிப்பதால் நோய்களைத் தடுக்கும் ஆற்றல் (Immunity) படைத்த இரத்தத்தில் உள்ள வெள்ளை அணுக்களின் (White Blood Cells) எண்ணிக்கை குறைவதாகவும், தலைவலி, மலட்டுத் தன்மை (Infertility) போன்றவை தோன்றுவதற்கான வாய்ப்பு அதிகரிப்பதாகவும் மற்ற அறிஞர்கள் கூறுவதாகத் தன்னுடைய கட்டுரையில் ஏஞ்சலா ஹாப்ட் குறிப்பிடுகிறார். அமெரிக்காவில் உள்ளவர்கள் பொய்சொல்வதில் தனித்திறமை உடையவர்கள் என்றோ, தனித்திறமையற்றவர்கள் என்றோ கூறுவதற்குச் சான்றுகள் எதுவும் இல்லாததால், இந்தக் கணிப்பு பொதுவாக உலகில் உள்ள மற்ற நாட்டவர்களுக்கும் பொருந்தும்.

"உண்மை என்றால் என்ன?" என்றும், "மக்கள் ஏன் பொய் சொல்கிறார்கள்?" என்றும் நெடுங்காலமாகவே பலரும் ஆராய்ச்சி செய்துவருகிறார்கள். இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் கிரேக்கத்தில் வாழ்ந்த சாக்ரடீஸ், பிளேட்டோ, அரிஸ்டாட்டில் போன்ற மெய்யியல் அறிஞர்கள் (philosophers) உண்மையைப் பற்றி பல அரிய கருத்துகளைக் கூறியிருக்கிறார்கள். ஆனால், அவர்கள் கூறும் கருத்துகள் புரிந்துகொள்வதற்கு எளிமையானவையாகவும் தெளிவானவையாகவும் இல்லை. உண்மைக்கு இலக்கணமாகக்

காந்தியடிகள் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது. சத்தியத்தின் (உண்மையின்) அடிப்படையில்தான் அவர் இந்திய விடுதலைப் போராட்டத்தை நடத்தி வெற்றிபெற்றதாகவும் கூறப்படுகிறது. காந்தியடிகள் முதலில் கடவுள்தான் உண்மை என்றார். பின்னர், அதை மாற்றி, உண்மைதான் கடவுள் என்றார். கடவுள் என்றால் என்ன என்று மனிதர்கள் நீண்டகாலமாக ஆராய்ச்சி செய்தும், இன்னும் தெளிவான முடிவுக்கு வரமுடியவில்லை. கடவுளைப் பற்றியே தெளிவாகத் தெரியாமல் இருக்கும்பொழுது கடவுள்தான் உண்மை என்றோ, உண்மைதான் கடவுள் என்றோ கூறுவது குழப்பத்தைத்தான் உண்டாக்குகிறது. தமிழிலும் உண்மை, மெய், பொய், பொய்யாமை, வாய்மை போன்ற சொற்களுக்குப் பலரும் பல்வேறு விளக்கங்கள் அளிக்கின்றனர். இந்தச் சொற்களைப் பற்றி வள்ளுவர் கூறும் கருத்துகளை ஆராய்வதுதான் இந்தக் கட்டுரையின் நோக்கம்.

உண்மை, மெய், பொய், பொய்யாமை, வாய்மை

“உண்மை” என்ற சொல்லுக்கு “உள்ளது” என்று பொருள். ஒருவன் உண்மை பேசுகிறான் என்றால், ”அவன் உள்ளதை உள்ளவாறு சொல்கிறான்” என்று பொருள். “உண்மை” என்ற சொல்லை “உள்ளது” என்ற பொருளிலும், “மெய்” என்ற சொல்லை “உடல்” அல்லது “உண்மை” என்ற பொருளிலும் வள்ளுவர் பயன்படுத்துகிறார். “பொய்” என்ற சொல்லை “உண்மைக்குப் புறம்பானது” என்ற பொருளிலும், “பொய்யாமை” என்ற சொல்லை, “பொய் கூறாமல் இருப்பது” என்ற பொருளிலும், வள்ளுவர் பயன்படுத்துகிறார். “வாய்மை” என்ற சொல்லுக்கு, “உண்மை” என்பதுதான் அகராதி கூறும் பொருள். ஆனால், வள்ளுவர், ”வாய்மை” என்ற சொல்லுக்கு ஒரு புதுவிளக்கம் அளிக்கிறார். அவர் கருத்துப்படி, “எவருக்கும் எந்தத் தீமையும் விளைவிக்காத உண்மைதான் வாய்மை”. சில சமயங்களில், உள்ளதை உள்ளவாறு கூறுவது பிறர் மனத்தைப் புண்படுத்தலாம்; அவர்களுக்கு வேறுவகைகளில் துன்பங்களையும் தரலாம். ஆகவே, ஒருவன் உண்மை பேசும்பொழுது, அவனுடைய பேச்சால், எவருக்கும் எந்தத் தீமையும் வராமல் இருக்குமானால் அதுவே வாய்மையாகும்.

வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல். (குறள் – 291)

உதாரணமாக, ஒருசிறுவனுடைய தாய், கோபத்தில், அவனுடைய தந்தையைப் பற்றி அவனிடம் ஒரு செய்தியைச் சொன்னால், அவன் தான் கேட்ட செய்தியைக் கேட்டவாறே தன் தந்தையிடம் உரைப்பதால், தந்தை மன வருத்தம் அடைவதோடு மட்டுமல்லாமல், அவனுடைய தாய்க்கும் தந்தைக்கும் இடையே மேலும் சச்சரவு அதிகரிக்கலாம். அவன் கூறியது உண்மையாக இருக்கலாம். ஆனால், அது வாய்மை அன்று. எவருக்கும் எந்தத் தீமையும் தராத உண்மைதான் வாய்மை. இதே கருத்தை, சமண மதத்தின் தலைவர்களுள் மிகச் சிறந்தவராகக் கருதப்படும் மகாவீரரும் கூறியிருப்பதாக, தவத்திரு குன்றக்குடி அடிகளார் குறிப்பிடுகிறார்.

புரைதீர்ந்த நன்மை பயக்குமானால் பொய்மையும் வாய்மைதான்
சில சமயங்களில் பொய்யும் வாய்மையைப் போன்றதாக இருக்கும் என்று வள்ளுவர் கூறுகிறார். ஒரு பொய் கூறுவதினால், குற்றமற்ற (புரைதீர்ந்த) நன்மை பிறக்குமானால், அந்தப் பொய்யும் வாய்மையைப் போன்றதுதான் என்பது வள்ளுவரின் கருத்து.

பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின். (குறள் – 292)

உதாரணமாக, ஒருவனுடைய மனைவி, தான் மிகவும் விரும்பி வாங்கிய புதுப்புடைவையை உடுத்திக்கொண்டு அவனிடம் வந்து, "இந்தப் புடைவையில் நான் அழகாக இருக்கிறேனா?", என்று கேட்டால், அந்தப் புடைவையில் அவள் அழகாக இல்லாவிட்டலும், அவன், "இந்தப் புடைவையில் நீ மிகவும் அழகாக இருக்கிறாய்." என்று கூறினால், அவன் கூறியது உண்மைக்குப் புறம்பானதாக இருந்தாலும், அவன் அவ்வாறு கூறியதால் அவன் மனைவி மனமகிழ்ச்சி அடைவாள். அவ்வாறு அவன் கூறியதால் எந்தக் குற்றமும் இல்லாத நன்மை உண்டாவதால், அவன் கூறியது வாய்மையைப் போன்றதுதான் என்கிறார் வள்ளுவர். அவர் அதை வாய்மை என்று கூறாமல், ”வாய்மையைப் போன்றது” என்று கூறுவது குறிப்பிடத்தக்கது. அந்தக் கணவன் அவ்வாறு கூறுவதால் வரும் நன்மைக்கும், அவ்வாறு கூறாவிட்டால் வரும் பின்விளைவுகளுக்கும் அதிக விளக்கம் தேவையில்லை. திருமணமானவர்கள் எளிதில் புரிந்துகொள்வார்கள்! இதுபோன்ற பொய், ஆங்கிலத்தில் "White lie" என்று அழைக்கப்படுகிறது.

தன்நெஞ்சறிவது பொய்யற்க
”எது உண்மை?, எது பொய்?" என்று நமது மனத்திற்கு நன்கு தெரியும். நம்முடைய மனத்தில் ஒரு உண்மையை அறிந்திருந்தும், அதற்கு மாறாக, அதை மறைத்துப் பொய் சொன்னால் நம் மனமே நம்மை வருத்தும் என்கிறார் வள்ளுவர்.

தன்நெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்நெஞ்சே தன்னைச் சுடும். (குறள் – 293)

”நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்” என்று தான் இயற்றிய உலகநீதி என்னும் நூலில், அதன் ஆசிரியர் உலகநாதர் கூறுவது இங்கு குறிப்பிடத்தக்கது. பொய்பேசுவதால் ஏற்படும் குற்ற உணர்வால் மன அழுத்தம் ஏற்படுகிறது என்று தற்கால உளவியல் அறிஞர்களும் தங்கள் ஆராய்ச்சியில் கண்டுபிடித்துள்ளனர்.

பொய்யாமையின் சிறப்பு

ஒருவன் தன்னுடைய உள்ளத்தில் எது உண்மை என்று கருதுகிறானோ அதற்கு மாறாக நடக்காமல் இருந்தால், அவன் உயர்ந்தோர் அனைவரின் உள்ளத்திலும் நிலையான இடத்தைப் பெறுவான் (குறள் - 294). காந்தியடிகள் கடவுள்மீது ஆழ்ந்த பற்றுடையவராக வாழ்ந்தார். அவர் உண்மையும் கடவுளும் ஒன்று என்றே கருதியதால், தன் மனத்தில் எது உண்மை என்று கருதினாரோ அதையே பேசி, அதற்கேற்ப வாழ்ந்ததால் அவர் இந்தக் குறளுக்குத் தக்க எடுத்துக்காட்டாவார்.

உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன். (குறள் – 294)

தன் மனத்தோடு பொருந்துமாறு வாய்மையான சொற்களையே ஒருவன் பேசுவானாயின், அவன் தவமும் தானமும் செய்பவர்களைவிட மேலானவன் ஆவான் (குறள் – 295). தனக்கு நேர்ந்த துன்பங்களைப் பொறுத்துக்கொண்டு, பிற உயிர்கட்குத் துன்பம் செய்யாமல் வாழ்வதே தவத்திற்கு உரிய அடையாளம் என்பது தவத்திற்கு வள்ளுவர் கூறும் இலக்கணம் (குறள் – 261). தானம் செய்வது தன்னிடமுள்ள பொருளைப் பிறர்க்குக் கொடுப்பது. தவமும் தானமும் சிறந்த பண்புகளாகும். இந்த இரண்டு பண்புகளும் ஒருங்கே கொண்டிருப்பவர்களைவிட, தான் அறிந்ததைப் பிறர்க்குத் துன்பம் உண்டாகாதவாறு வாய்மை பேசுபவன் சிறந்தவன் என்று கூறுகிறார் வள்ளுவர்.

மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ்செய் வாரின் தலை. (குறள் – 295)

”பொய் பேசாமல் இருப்பதால் வரும் புகழுக்கு இணையாக வேறு புகழ் இல்லை. பொய் பேசாதவர்களுக்கு, அவர்கள் அறியாமலேயே அறச்செயல்களால் வரக்கூடிய நற்பயன்கள் எல்லாம் தானாகவே வரும் (குறள் – 296).” என்று பொய்யாமையினால் வரும் பயனைக் கூறிப் பொய் பேசாமல் இருப்பதற்கு ஊக்கம் அளிக்கிறார் வள்ளுவர்.

பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமுந் தரும். (குறள் – 296)

ஒருவன் பொய் பேசாமல் இருந்தால் அறத்தினால் வரும் பயன் அனைத்தும் அவனுக்குத் தானாகவே வரும் என்று முந்தைய குறளில் கூறிய வள்ளுவர், அடுத்த குறளில், ஒருவன் இடைவிடாமல் பொய்பேசாமல் இருப்பானானால், அவன் வேறு அறச்செயல்கள் எதுவும் செய்ய வேண்டியதில்லை என்று கூறி, பொய்யாமையை வலியுறுத்துகிறார் (குறள்- 297).

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று. (குறள் – 297)

“பொய்யாமை பொய்யாமை” என்ற அடுக்குத்தொடர் “பொய்யாமையை இடைவிடாது கடைப்பிடித்தல்” என்ற பொருளிலும், “செய்யாமை செய்யாமை” என்ற அடுக்குத்தொடர், “வேறு அறங்களைச் செய்யத் தேவையில்லை” என்பதை வலியுறுத்துவதற்காகவும் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

வாய்மையால் உள்ளம் தூய்மை அடைகிறது
ஒருவன் நீரில் குளிப்பதால் அவன் உடல் தூய்மை அடைகிறது. அதுபோல், வாய்மையால் உள்ளம் தூய்மை அடைகிறது (குறள் – 298) என்கிறார் வள்ளுவர்.

புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும். (குறள் – 298)

மனிதர்கள் பொய்பேசுவதற்குப் பல காரணங்கள் உள்ளன. உதாரணமாக, பிறரிடமிருந்து சில செய்திகளை மறைப்பதற்காகவும், தமக்கு வரக்கூடிய தீமைகளைத் தவிர்ப்பதற்காகவும், தமக்குச் சில நன்மைகள் கிடைக்க வேண்டும் என்பதற்காகவும், பிறர்க்குத் தீமை செய்ய வேண்டும் என்பற்காகவும் மனிதர்கள் பெரும்பாலான பொய்களைக் கூறுகிறார்கள். அவர்கள் பொய் பேசுவதற்குக் காரணம் அவர்களுடைய உள்ளத்தில் உள்ள தீய எண்ணங்கள். பொய் பேசுவதைத் தவிர்த்து வாய்மை பேசும்பொழுது, தீமை இல்லாதவற்றையே கூறுகிறார்கள். வாய்மையைத் தொடர்ந்து பேசும்பொழுது உள்ளத்தில் உள்ள தீய எண்ணங்கள் குறைகின்றன அல்லது மறைகின்றன. அதாவது, மனமாசுக்களை நீக்குவதற்கு வாய்மை பயன்படுகிறது. நீரில் குளிப்பதால், புற அழுக்கு நீங்குவதுபோல் வாய்மையால் மனம் தூய்மை அடைகிறது. ”மனத்துக்கண் மாசிலனாதல் அறம்” என்பதால், வாய்மை பேசுபவன் தன் மனத்தூய்மை பெற்று, குறட்பாக்கள் 296 மற்றும் 297 ஆகியவற்றில் வள்ளுவர் கூறியுள்ளதைப்போல், அறத்தால் வரும் பயன்கள் அனைத்தையும் அடைவான்.

சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு
சான்றோர் எனப்படுபவர் நற்குணங்கள் அனைத்தும் ஒருங்கே அமையப் பெற்றவர்கள். அவர்கள் தங்கள் உள்ளத்தில் உள்ள அகவிருளை (மனத்தில் உள்ள மாசுக்களை) நீக்குவதற்குப் பொய்யாமை என்னும் விளக்கைப் (பண்பைப்) பயன்படுத்துவார்கள் (குறள் – 299).

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. (குறள் – 299)

”சான்றாண்மை” என்ற அதிகாரத்தில், ஒரு சான்றோனுக்கு இருக்க வேண்டிய இன்றியமையாத நற்குணங்களைக் கூறும்பொழுது, சான்றாண்மையை ஒரு மண்டபமாக உருவகித்து, அன்பு, நாணம், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்தும் அந்த மண்டபத்தைத் தாங்கி நிற்கும் தூண்கள் என்கிறார் (குறள் – 983) வள்ளுவர்.

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண். (குறள் – 983)

வாய்மையைவிட நல்லது வேறொன்றும் இல்லை
”யாம் மெய்யாகக் கண்டவற்றுள், வாய்மையைவிடச் சிறந்தது வேறொன்றும் இல்லை”, என்கிறார் வள்ளுவர் (குறள் – 300).

யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற. (குறள் – 300)

தன்னை முன்னிலைப்படுத்தித் தன்மைப் பன்மையில் வள்ளுவர் அழுத்தமாகக் கூறுமிடங்கள் மூன்று. ஒன்று, “அறிய வேண்டியவற்றை அறியும் அறிவுள்ள மக்களைப் பெறுவதைத் தவிர, ஒருவன் பெறக்கூடிய பேறு வேறு எதையும் யாம் அறியவில்லை (குறள்– 61)” என்று மக்கட்பேறு என்ற அதிகாரத்தில் குறிப்பிடுகிறார். இரண்டு, வாய்மையின் சிறப்பைப் பற்றிக் கூறும்பொழுது, அதைத் தன்மைப் பன்மையில் குறிப்பிடுகிறார். மூன்று, கயமை என்ற அதிகாரத்தில், “கயவர்கள் வடிவால் மற்ற மக்களை ஒத்திருப்பர். அந்த ஒற்றுமையைப்போல் வேறு எந்த இரண்டு பொருட்களிடையே ஒப்புமையுள்ளதை யாம் கண்டதில்லை (குறள்– 1071).” என்று கூறுகிறார். வள்ளுவர் தன்னை முன்னிலைப்படுத்திக் கூறுவது, அவருடைய அனுபவத்தின் அடிப்படையில் அவர் கூறும் கருத்தில் அவருக்கு இருக்கும் ஆழமான நம்பிக்கையைக் குறிக்கிறது.

முடிவுரை
மக்கள் வாரத்திற்குப் பதினொரு முறை பொய்பேசுவதாகவும், பொய்பேசுவதால் உடல்நலமும் மனநலமும் பாதிக்கப்படும் வாய்ப்புக்கள் உள்ளதாகவும் உளவியல் ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். “உண்மை”, “பொய்”, “வாய்மை” போன்றவற்றைப் பற்றி நெடுங்காலமாகவே அறிஞர்கள் பலரும் ஆராய்ச்சி செய்துவருகின்றனர். வள்ளுவரும், “வாய்மை” மற்றும் “பொய்யாமை” ஆகியவற்றைப் பற்றிப் பல அரிய கருத்துகளைக் கூறியுள்ளார். எவருக்கும் எந்தத் தீமையும் விளைவிக்காத சொற்களைக் கூறுவது வாய்மை என்றும், குற்றமற்ற நன்மை விளைவிக்கும் சொற்கள் பொய்யாக இருந்தாலும், அவை வாய்மையைப் போன்றவைதான் என்றும் வள்ளுவர் கூறுகிறார். தன்னுடைய மனத்தில் உண்மையை அறிந்திருந்தும், அதை

மறைத்து ஒருவன் பொய் சொன்னால் அவனுடைய மனமே அவனை வருத்தும் என்கிறார் வள்ளுவர். பொய் பேசாதவன் உலகத்தார் உள்ளத்திலெல்லாம் நிலையான இடத்தைப் பெறுவான் என்றும், வாய்மை பேசுபவன் தவம் தானம் ஆகிய இரண்டையும் செய்பவனைவிடச் சிறந்தவன் என்றும், பொய்யாமையைவிடச் சிறந்த புகழைத் தருவது வேறொன்றும் இல்லை என்றும், பொய்பேசாதவனுக்கு அவனை அறியாமலேயே அறச்செயல்களால் கிடைக்கக்கூடிய நற்பயன்கள் எல்லாம் கிடைக்கும் என்றும், பொய்பேசாதவன் வேறு எந்த அறச்செயல்களையும் செய்யத் தேவையில்லை என்றும் பொய்யாமையின் சிறப்பைக் கூறுகிறார் வள்ளுவர். வாய்மையால் உள்ளம் தூய்மை அடைகிறது என்பதும், சான்றோர்கள் பொய்யாமையைத் தவறாமல் பின்பற்றுவார்கள் என்பதும் வள்ளுவரின் கருத்து. முடிவாக, வாய்மையைவிட நல்லது எதையும் தான் கண்டதில்லை என்று தன்னை முன்னிலைப்படுத்திக் கூறி வாய்மையின் சிறப்பைச் சுட்டிக்காட்டுகிறார் வள்ளுவர்.

துணைநூல்களும் இணையதளங்களும்
https://health.usnews.com/health-news/articles/2012/08/20/how-lying-affects-your-health
http://iosrjournals.org/iosr-jhss/papers/Vol18-issue4/H01846769.pdf
தவத்திரு குன்றக்குடி அடிகளார் நூல்வரிசை (திருக்குறள் :தொகுதி -3), பக்கம் 94-95
https://www.projectmadurai.org/pm_etexts/utf8/pmuni0022.html

# வாழ்வின் செம்மைக்குவழிகாட்டும் பெரியோர்

- அன்பு செயா, சிட்னி



நம் ‘குறள்நெறி ‘ இதழின் சிறப்பாசிரியர்களுள் ஒருவராகத் தொண்டாற்றி வருகிறார்.ஆத்திரேலியாவில் நடைபெறும் திருக்குறள் பணிகள் குறித்து “குறள்முழக்கம் “இதழிலும் அவ்வப்போது எழுதிவருகிறார்.மருந்தியல் துறையில் முனைவர்;மிகப் பெரும் பன்னாட்டு மருந்துக்குழுமத்தில் மேலாண் இயக்குநராகப் பணியாற்றிப் பணிநிறைவு பெற்றுள்ளார்.உடற்பிணி போக்கும் மருந்தியல் வல்லுநர்;பிறவிப்பிணி நீக்கும் பிரானடி போற்றும் பெற்றியராய்த் திருமுறை இலக்கிய ஆய்வுநூல்கள் படைத்துவருகிறார்.சிட்னி தமிழ்வளர்ச்சி மன்றத்தலைவர்.

தொன்றுதொட்டு நாம் செவிமடுத்து வருகின்ற ஓர் அறிவுரை, “பெரியவர்கள் சொல்வதைக் கேள்’ என்பது. இங்கு பெரியவர்கள் என்பது வயதிலும் அனுபவத்திலும் முதிர்ந்தவர்களாக உள்ளவர்களையே குறிக்கிறது என்று கொள்ளலாம். பெரியோர் என்பவர் யார் என்றும் அவர்களின் குணங்கள் பற்றியும் தமிழிலக்கியங்கள் பல விளக்கியுள்ளன.

வள்ளுவப் பெருந்தகை ‘செயற்கரிய செய்வார் பெரியர்’’(குறள் 26) என்று கூறியுள்ளார். இங்கு நோக்கத்தக்கது.

“எஞ்ஞான்றும் பெறுமின் பெரியார்வாய்ச் சொல்” என்றுஎக்காலத்திலும் பெரியோர் வாயிலிருந்து வருகின்ற நன்மொழிகளைக் கேட்டு அதன்படி செயல்படுங்கள் என்று நாலடியார் (172) எடுத்துரைக்கிறது.

பெரியோரின் வாய்ச்சொல் முதலில் துன்பத்தை தருவதாக இருந்தாலும் இறுதியில் இன்பமாகவே முடியும் என்பதை,

“செயல்வேண்டா நல்லன செய்விக்கும், தீய
செயல்வேண்டி நிற்பின் விலக்கும், இகல்வேந்தன்
தன்னை நலிந்து தனக்குறுதி கூறலால்
முன்இன்னா மூத்தார் வாய்ச்சொல்” (பழமொழி நானூறு (63)

என்றபாடல் பகர்கின்றது.

பெரியோரின் துணையைப் பற்றியும் அவர்களை மதிக்க வேண்டியதின் அவசியம் பற்றியும் அறிவுறுத்த வள்ளுவப் பெருந்தகை, பெரியாரைத் துணைக்கோடல், பெரியாரைப் பிழையாமை என்று இரண்டு அதிகாரங்களைப் படைத்துள்ளார்.

‘அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை’ (குறள் 32) என்று அறத்தினை வலியுறுத்திய வள்ளுவர், அந்த அறன் பற்றிய ஆழ்ந்த அறிவு உடையவர்களாகவும், அதைத் தம் வாழ்க்கையில் எப்பொழுதும் கடைப்பிடிப்பவர்களாகவும் பெரியோர்கள் இருப்பார்கள் என்பதை, ‘அறனறிந்து மூத்த அறிவுடையார்’ (குறள் 441) என்று குறிப்பிட்டுள்ளார். மூத்த

அறிவுடையோர் என்று அவர்களிடம் பட்டறிவு அதிகமாக இருக்கும் என்பதையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

அப்படிப்பட்ட பெரியோர்கள் நமக்கு வந்த துன்பத்தை நீக்கி, மீண்டும் அதே போன்ற துன்பம் வராமல் காக்கும் திறன் உள்ளவர்களாகவும் இருப்பார்கள். அப்படிப்பட்ட பெரியோரை நாம் துணையாகக் கொள்ளவேண்டும் என்பதை,

உற்றநோய்நீக்கி உறைஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக்கொளல். (குறள் 442),

என்ற குறளில் வலியுறுத்திஅத்தகைய பெரியவர்களின் நட்பை நாம் எப்படியாவதுதேடிப் பெறவேண்டும் என்று கூறிய வள்ளுவப் பெருந்தகை,

தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை (குறள் 444)

என்று அப்பெரியார்களைப் போற்றி வாழ்வது நாம் வாழ்க்கையில் பெறவேண்டிய பெருமைகளிளெல்லாம் மிகச் சிறந்ததாகும் என்றும் கூறுகின்றார்.

அப்படிப்பட்டவர்களின் நட்பின் சிறப்பை மேலும் விவரிக்க,

அரியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல், (குறள் 443)

என்று, அவர்களின் நட்பைப் பெற்றுக் கொள்ளுவதென்பது, நாம் பெறக்கூடிய பேறுகளிளெல்லாம் சிறந்த பேறுமாகும் என்றுவலியுறுத்துகின்றார்.வள்ளுவப்பெருந்தகை ஏன் அப்படிக் கூறுகிறார் என்று சிந்தித்துப் பார்த்தோமேயானால்,“பெரியோர்கள் வயதிலும் அறிவிலும் மூத்தவர்களாக இருப்பதால் நம்மை நல்வழியில் நடத்திச் செல்லும் திறம் படைத்தவர்களாக இருப்பார்கள். அதனால் நம்முடைய தவறுகளைச் சுட்டிக்காட்டத் தயங்க மாட்டார்கள்.நமது வாழ்க்கை சீரான பாதையில் சென்றிட அறிவுரை கூறக்கூடியவர்களாக இருப்பார்கள்,” என்ற உண்மை நமக்குப் புலப்படும்.

வள்ளுவர் கூறுவதுபோலக் கண்டிக்க வேண்டிய தருணங்களில் நம்மைக் கண்டிப்பதற்குப் பெரியோரின் துணை இல்லாமல் போகுமானால் நமக்கு அழிவு வந்து சேரும் என்பதை,

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும். (குறள் 448)

என்ற குறளில் எடுத்தரைத்துள்ளார்.அப்படியொரு துணை இல்லாதவன் மன்னனாக இருந்தாலும், அவனுக்குப் பகைவரின் தொல்லை எதுவுமே இல்லை என்ற நிலை இருந்தாலும் கூட அவன் அழிவைத் தேடிக்கொள்வான் என்று கூறியுள்ளார்.

ஆனால்,

இடிக்குந் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர். (குறள் 447)

என்று தீமைகளைக் கண்டித்து நமக்கு அறிவுரை கூறக்கூடிய பெரியோர் நம் அருகில் இருக்கும்போது நம்மை யாராலும் அழிக்கமுடியாது என்கிறார். அதனால் பெரியவர்களின் வழிகாட்டுதலுடன் வாழ்கின்ற ஒருவனுக்கு பகைவர்களால் எந்தத் தீங்கும் ஏற்படாது என்பதை,

தக்கா ரினத்தனாய் தானொழுக வல்லானைச்
செற்றார்செயக்கிடந்த தில். (குறள் 446)
என்ற குறளின் மூலம் நமக்குத் தெளிவு படுத்துகின்றார் வள்ளுவப் பெருந்தகை.
நமக்கு மட்டுமல்ல,
சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல் (குறள் 445)
என்று நல்வழிகளை ஆராய்ந்து சூழ்நிலைக்கு ஏற்ப அறிவுரைகள் வழங்குகின்ற பெரியோரை தன்னுடனே வைத்துக்கொள்ளுதல் வேண்டும் என்று மன்னனுக்கும் அறிவுரை கூறுகிறார். ஏனெனில், ஆட்சி செய்பவன் தன் வேலைப் பளுவினால் மக்களுக்கு வேண்டியஅனைத்தையும் ஆழ்ந்து சிந்தித்துச் செயலாற்ற இயலாது. அப்படிப்பட்ட பெரியோரை தன்னுடன் வைத்துக் கொள்வதால் அவர்களின் உதவியுடன் தன் கடமையைச் செவ்வனே மன்னனால் செய்யமுடியும் என்று விளக்கியுள்ளார் வள்ளுவர்.
அடுத்து,
முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை (குறள் 449)
என்ற குறளில் முதல் போட்டுத் தொழில் தொடங்குபவன் தன் உழைப்பிற்கேற்ற ஊதியத்தைத்தான் எடுத்துக் கொள்ளுதல் வேண்டும். அப்படி முதல் போடாதவனுக்கு ஊதியம் என்பது எப்படிக் கிட்டாதோ, அதுபோல பெரியோரின் அறிவுரையைப் பெற்றுக்கொள்கின்ற வாய்ப்பு இல்லாதவர்களுக்கு புகழும் பெருமையும் கிட்டாது. அப்படிப்பட்டவன் ஒரு மன்னனாக இருந்தால் அவனுடை ஆட்சி நிலையானதாக இருக்காது என்று கூறியுள்ளார். இந்தக் கருத்தானது, இக்காலத்திற்கும் ஏற்றதாக உள்ளதை தற்கால அரசியலில் கூட நாம் காணக்கூடியதாக உள்ளது. சரியான ஆலோசகர்கள் இல்லாத அரசும், நடுநிலையான ஆய்வுரைஞர்களின்(ஆலோசகர்களின்) அறிவுரையைக் கேட்டு அதன்படி நடக்காத அரசும் அதிக காலம் நிலைத்திருப்பதில்லை என்பது கண்கூடாகத் தெரிகின்றது.
வள்ளவப்பெருந்தகை அத்தோடு நின்றுவிடாமல்,
பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல் (குறள் 450),
எனும் குறளில் நமக்குக் கிடைத்துள்ள பெரியோரின் துணையை நழுவ விடக்கூடாது என்றும், அப்படி நழுவ விடுகின்ற செயலானது நமக்குப் பல பகைவர்களிடமிருந்து ஒரே நேரத்தில் வருகின்ற துன்பதைவிடப் பன்மடங்கு துன்பத்தை விளைவிக்கும் என்று அழுத்தம் திருத்தமாகக் கூறுகின்றார்.
அப்படிப்பட்ட பெரியோரை மதிக்கவேண்டியதின் இன்றியமையாமையையும், அவர்களிடம் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்பதைப் போன்ற அறிவுரைகளையும் நமக்கு கூறிச் சென்றுள்ளார் வள்ளுவர் பெருமான்.
அறிவும் திறமையும் கொண்டு எடுத்தசெயலை வெற்றிகரமாக முடிக்கக் கூடிய பெரியோரின் திறமையைப் புறந்தள்ளாமல் போற்றுதல் பெருமைகளில் எல்லாம் சிறந்தது என்பதை

ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை (குறள் 891),
என்ற குறளின் மூலம் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது. மேலும்,
பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற்
பேரா விடும்பை தரும் (குறள் 892)
அப்படிப்பட்ட பெரியோரின் அறிவுரைகளை மதிக்காதிருப்பது நீங்காத துன்பத்தை விளைவிக்கும் என்று கூறிய வள்ளுவர்,
எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார் (குறள் 896),
என தீயினால் எரிக்கப்பட்டாலும் ஒரு வேளை தப்பிவிடலாம், ஆனால் பெரியோருக்குப் பிழை செய்தவர்கள் அமைதியாக வாழ இயலாது, என்றும்,
குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து (குறள் 898)
என சிகரம் போன்ற உயர்வையும் புகழையும் அடைந்த பெரியோரின் சீற்றத்திற்கு ஆளாகுபவர்களின் வாழ்க்கை நிலைகுலைந்து போகும்படி அழிவார்கள் என்றும்,
இது மக்கள் அனைவருக்கும் பொருந்தும் என்பதை,
வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னாந்
தகைமாண்ட தக்கார் செயின் (குறள் 897)
என்ற குறள் மூலம் பெரியோரைப் போற்றுதலின் இன்றியமையாமையைத் தெளிவுபடுத்தியுள்ளார்.
நிறைவாக,

- மூத்த அறிவுடையோரைத் துணையாகக் கொள்ளவேண்டும்
- அவர்களின் துணை கிட்டும்போது அதை நழுவ விடுதல் கூடாது
- பெரியோரின் நட்பு பெறற்கரிய பேறாகும்
- அவர்கள் தீமைகளைக் கண்டித்து அறிவுரை கூறுவார்கள்
- பெரியோர் வாய்ச்சொல் கேட்டு அதன்படி செயல்பட வேண்டும்
- பெரியோரைப் போற்றி வாழ்தல் வேண்டும்

என்று பெரியோர்பற்றிப் பல அறிவுரைகளை வள்ளுவப் பெருந்தகை நமக்குத் தந்தருளியுள்ளார். அவற்றையெல்லாம் பின்பற்றி நாம் வாழ்ந்தால் அவை நமது வாழ்க்கை சிறப்படையப் பேருதவியாக இருக்கும்.

-----------------------------------------




மின்னிதழ்:32 சித்திரை-3 -தி.பி.2053 ஏப்பிரல்-16- பொ.ஆ.2022-இணைப்பு



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

# சமத்துவ மலர்



அண்ணல் அம்பேத்கர்

பொறுப்பாசிரியர் -மறைமலை இலக்குவனார் -
இணையாசிரியர் -முனைவர் தமிழியலன்
இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

மாண்புமிகு தமிழ்நாட்டு முதல்வர் மு.க.ஸ்டாலின் தமிழ்நாடு சட்டப் பேரவையில் விதி 110-ன் கீழ் அறிவித்துள்ள அறிவிப்பு:

"அண்ணல் அம்பேத்கர் வடக்கில் உதித்த சமத்துவ சூரியன் ;

பலர் வாழ்வில் கிழக்காய் இருந்த பகலவன் ;

சமூகம் ஏற்படுத்திய ஏற்றத் தாழ்வை , கல்வி, சட்டம், அரசியல் எழுச்சி மூலமாக சமப்படுத்திய போராளி ; 'இருட்டறையில் இருக்குதடா உலகம்; சாதி இருக்கிறதென்போனும் இருக்கின்றானே' என்ற புரட்சிக் கவிஞர் பாரதிதாசனுடைய வரிகளைப்போல , சாதிக் கொடுமையால் இருண்ட உலகத்தைத் தன்னுடைய பரந்த அறிவால், ஞானத்தால் விடிய வைத்த விடிவெள்ளி அண்ணல் அம்பேத்கர். அவர் வேண்டாததை நீக்கிய சிற்பி; வேண்டியதைச் சேர்த்த ஓவியர் ; அண்ணல் அறிவுச்சுடராய் விளங்கி அரசியலமைப்புச் சட்டத்தை வகுத்துக்கொடுத்தவர். அவருடைய கருத்துக்கள் ஆழமும் , விரிவும் கொண்டவை ; எதிர்காலத்திற்கு ஒளிவிளக்கு அது.

ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நலத் துறை சார்பாக மாநில அளவிலான உயர்நிலை விழிப்புணர்வு மற்றும் கண்காணிப்புக் குழுக் கூட்டம் நேற்று நடைபெற்றது. அந்தக் கூட்டத்தில் பெரியார் பிறந்தநாளை 'சமூகநீதி நாளாக'அறிவித்தது போல, அண்ணல் அம்பேத்கர் பிறந்த நாளான ஏப்ரல் 14 ஆம் தேதியை 'சமத்துவ நாள்' என்று கொண்டாட வேண்டுமென்ற கோரிக்கை எழுப்பப்பட்டது.



இந்தக் கோரிக்கையை ஏற்று , ஏப்ரல் 14 ஆம் தேதி இனி சமத்துவ நாளாகக் கொண்டாடப்படும் என்றும், சமத்துவ நாள் உறுதிமொழி தமிழகம் முழுவதும் எடுத்துக்கொள்ளப்படும் என்றும் மகிழ்ச்சியோடு இந்த அவைக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

நேற்றைய கூட்டத்தில் அண்ணல் அம்பேத்கர் மணிமண்டபத்தில் , அண்ணலுடைய முழு அளவு வெண்கலச் சிலையை நிறுவ வேண்டுமென்ற கோரிக்கையை விடுதலைச் சிறுத்தைகள் கட்சியினுடைய தலைவரும், நாடாளுமன்ற உறுப்பினருமான தொல். திருமாவளவன் முன்வைத்தார். அந்தக் கோரிக்கையையும் ஏற்று , அண்ணல் அம்பேத்கர் மணிமண்டபத்தில் முழுஉருவ வெண்கலச் சிலை நிறுவப்படும் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

திமுகவைச் சேர்ந்த நாடாளுமன்ற உறுப்பினரும் , முன்னாள் மத்திய அமைச்சருமான ஆ.ராசா , பெரியாருடைய நூல்களை 21 மொழிகளில் மொழி பெயர்த்ததைப் பாராட்டியதோடு , அண்ணல் அம்பேத்கருடைய தேர்ந்தெடுக்கப்பட்ட நூல்களைத் தமிழில் வாசிக்க வாய்ப்பாக மொழிபெயர்த்துப் புதுப்பிக்க வேண்டும் என்ற ஒரு கோரிக்கையை விடுத்திருந்தார். அந்தக் கோரிக்கையும் ஏற்றுக்கொள்ளப்பட்டு, தமிழக அரசால் அம்பேத்கரின் தேர்ந்தெடுக்கப்பட்ட நூல்கள் செம்பதிப்பாக தமிழில் வெளியிடப்படும் என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

சமூகநீதியின் நோக்கம் சமத்துவத்தை அடைவதே என்பதையும் , இவ்விரண்டும் நம் இலக்கின் இரண்டு கண்கள் என்பதையும் இந்த மாமன்றம் மட்டுமல்ல ; இந்தியத் துணைக் கண்டமே அறியும். தமிழர்கள் அனைவரும் உயர்ந்த நிலையை அடைய , எத்தகைய விண்ணப்பம் வந்தாலும் , அதை உடனே பரிசீலித்து ஆவன செய்கிற ஆட்சிதான் இப்போது நடக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்" என்று அவர் கூறினார்.

# சமத்துவ நாயகன்

**மனநலம் நன்குடையர் ஆயினும் சான்றோர்க்கு**

**இனநலம் ஏமாப்பு உடைத்து.**(குறள் 458)

247 ஆண்டுகாலம் அடிமைகளாய் ஆங்கிலேயரிடம் இருந்தோம். அன்னியன் நம்மை ஆள்கிறான் என்பதால் நாடு முழுவதும் பல ஆயிரக்கணக்கான தலைவர்களின் போராட்டத்தால் சுந்தந்திரம் பெறப்பட்டதாம் வெள்ளையனிடமிருந்து என்று கற்றுத் தெரிந்து கொண்டேன் பாடப்புத்தகத்திலிருந்து…!

அனால் 2500 ஆண்டுகளுக்கும் மேலாக தன் சொந்த நாட்டிலேயே அடிமைகளாய், தீண்டத்தகாதவர்களாய், கீழ்சாதி வகுப்பினராய் “சாதி” என்னும் பெயரால் வாழ்ந்த மக்களுக்கு யாரிடம் இருந்து பெறப்பட்டது சுதந்திரம்? யார் பெற்றுத் தந்தது? மனிதனை மனிதனாய் பாகுபாடின்றி சமத்துவ நோக்கோடு நடத்தவில்லை என்பதை பார்த்து தெரிந்து கொண்டேன் அனுபவத்திலிருந்து…!

இதோ உங்களையும் சிந்திக்க வைக்க முயல்கிறேன், சமத்துவம் பெற்றுத் தந்த நம் சரித்திர நாயகனை சாதியின் நாயகனாக சித்தரிக்கும் நம் இந்தியாவை குறித்து.

கார்ல் மார்க்ஸ் பற்றி படியுங்கள் என்றபோது

நீங்கள் யூதனா என்று கேட்கவில்லை,

விலாடிமிர் பற்றி படியுங்கள் என்றபோது

நீங்கள் ரஷ்யனா என்று கேட்கவில்லை,

பிடல் காஸ்ட்ரோ பற்றி படியுங்கள் என்றபோது

நீங்கள் க்யூபனா என்று கேட்கவில்லை,

மார்டின் லூதர் கிங்கைப் பற்றி படியுங்கள் என்றபோது

நீங்கள் நீக்ரோவா என்று கேட்கவில்லை,

அனால் தன் வாழ்நாளில் 46 லட்சம் புத்தகங்களை வாசித்த உலகின் மிகப்பெரிய வடிவிலான அரசியலமைப்புச் சட்டத்தை வடிவமைத்து, 15000 பக்கங்களை எழுதி 55-க்கும் மேற்பட்ட புத்தகங்களை வெளியிட்ட, சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம், பகுத்தறிவு, பொதுவுடைமை போதித்து, காலனி ஆதிக்கத்தை ஒழித்த, பாபா சாஹிப் டாக்டர் B.R அம்பேத்கர் அவர்களைப் பற்றி படியுங்கள் என்று சொன்னால்... நீங்கள் தலித் இனத்தவரா?!!! என்று கேட்பது ஏன்?

தன் தாய்நாட்டிலேயே படிக்க வழியில்லாமல் இருக்க இருப்பிடமில்லாமல் செய்கின்ற தொழிலை வைத்து உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்று மனிதனை வேறுபடுத்தியதும், ஆண் என்றும் பெண் என்றும் வேறுபடுத்தியதும் மதத்தில் உயர்வு தாழ்வு என்று மதம் பிடித்து அலைந்ததும் நம் இந்தியர்கள் தான். காலனி அணியக்கூடாது, கீழ்சாதி பெண்கள் மேலாடை அணியக்கூடாது, பொதுக்குளத்தில் நீரருந்தக்கூடாது, கோவிலுக்குள் நுழையக்கூடாது என்று கட்டுபாடுகளை விதித்தது நம் இந்தியர்களே!

சூத்திரன் கல்வி கற்க அனுமதி இல்லை, உயர் தொழில் செய்யும் அருகதை அற்றவன் என்றது ஆங்கிலேயன் அல்ல! நம் இந்தியனே!

உண்மையை உரக்கச் சொல்ல வேண்டுமானால் ஆங்கிலேயர்களின் அடக்கமுறை மற்றும் ஆதிக்கப் போக்கை காட்டிலும் கொடுமையானது நம் இந்திய நாட்டின் சாதி முறைகளும், அவற்றை உள்ளடிக்கிய சடங்குகளும், மூடப்பழக்கங்களும் மற்றும் சமத்துவமற்ற நிலையம்...

இவற்றையெல்லாம் அடிமையோடு நாட்டிலிருந்து அகற்றி அனைத்து வழிகளிலும் இனம், சாதி, மதம், மொழி, நிறம் வேறுப்பாடற்ற சமத்துவ இந்தியாவை கொடுத்தவர் நம் டாக்டர் அம்பேத்கர் அவர்கள்.

பல ஆயிரக்கணக்கான ஆண்டுகள் இந்திய மன்னராட்சியை பின்பற்றிய நாடு. இந்தியர்கள் மட்டுமல்லாது வெளிநாட்டிலிருந்து இந்தியாவில் குடியேரியதோடு அரியணையில் அமர்ந்து அடக்குமுறையான மன்னராட்சியை பின்பற்றியவர்கள் பலர்..

கோரி வம்சம், துக்களக் வம்சம், கில்ஜி வம்சம் சையது வம்சம், லோடி வம்சம், சூரி வம்சம் முகாலய வம்சம், பிறகு ஆங்கிலேய ஆட்சியென தொடர்ந்து மன்னர்களின் கீழ் மக்கள் கைப்பொம்மைகளாய் மாறுவதையும், ஒவ்வொரு முறையும் இந்தியாவை மற்ற நாடுகள் ஆக்கிரமித்து, அடிமைப்படுத்தியதும், ஒவ்வொரு பிரிவினரின் அடக்குமுறையால் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மேன்மேலும் அடிமைப்படுத்தியவதும் மன்னராட்சியால்தான்

என்பதை உணர்ந்த டாக்டர் அம்பேத்கர் அரிசனம் அரியணை ஏற அரசியலமைப்பை மலரச்செய்தார்.

“எவன் ஒருவன் தன் உரிமைகளை எப்பொழுதும் தற்காத்துக் கொள்ளத் தயாராக இருக்கிறானோ! எவன் பொது விமர்சனத்திற்கு அச்சப்படாமல் இருக்கிறானோ! அடுத்தவன் கைப்பாவையாக இல்லாமல் போதிய சிந்தனையும் சுயமரியாதையும் பெற்று இருக்கிறானோ! அவனே சுதந்திரமான மனிதன்” என்பேன் என்று உலகத்திற்கு சுதந்திரம் என்னும் வார்த்தையின் வலிமையின் உன்னதத்தை உரக்கச் சொன்னவர். நம் நாட்டில் பல்வேறு சாதிகளும், மதங்களும் மொழிகளும் பின்னிப் பிணைந்து நாட்டின் ஒற்றுமை வேறுபட்டு காணப்பட்ட நிலையின் “**இந்தியாவை யாரும் சொந்தம் கொண்ட முடியாது இது பல இனக்குழுக்களின் தேசம், அப்படி சொந்தம் கொண்டாடி வேண்டிய நிலை வந்தால் இந்தியாவின் பூர்வகுடியான தமிழர்களே கொண்டாட முடியும்**” என தமிழ் மொழியின் தொன்மையை 1949 ஆம் ஆண்டிலேயே தீர்க்கமாக கூறிவர்.

தன் வாழ்நாளின் கடைசி நேரத்தில் **“என் இந்திய மக்களுக்காக நான் சாதித்தவைகளெல்லாம் தனி ஆளாக நின்று கொடுமையான துயரங்களையும் முடிவற்ற சிரமங்களையும் கடந்து எல்லா பக்கங்களிலிருந்தும் குறிப்பாக இந்து பதிரிக்கையிடமிருந்து வந்த அவதூறுகளையும் என் எதிரிகளுக்கு எதிராக போராடி பெற்றவையே என் வாழ்நாளின் இறுதிவரை ஒடுக்கப்பட்ட எனது சகோதரர்களுக்காகவும் பெண்களின் முன்னேற்றத்திற்காகவும் இந்த நாட்டிற்காகவும் எனது பணியை தொடர்வேன். என் நாடு மக்கள் பயணிக்கும் இந்த ஊர்தியை மிகவும் சிரமப்பட்டே இப்போது இருக்கும் இடத்திற்கு கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறேன் வழியில் வரும் தடைகளையும் மேடு பள்ளகங்களியும் பொருட்படுத்தாமல் என் நாட்டு இளைஞர் சமுதாயத்தால் இந்த ஊர்தி முன்னேறிச் செல்லட்டும்.**

**மாண்புடனும், மரியாதையுடனும் என் மக்கள் வாழ நினைத்தால் இச்சமுதாயத்தில் அவர்கள் கிளர்ந்தெழ வேண்டும். என் மக்களாலும் என் இயக்கத்தினராலும் அந்த ஊர்தியை இழுத்துச் செல்ல முடியாது போனால் அது இப்போது எங்கு நிற்கிறதோ அங்கேயே அதனை விட்டுச் செல்லட்டும். அனால் அதனை எந்த சூழ்நிலையிலும் பின்னோக்கி தள்ளி விட வேண்டாம்”**

அவர் அச்செய்தியால் குறிப்பிட்டது நாட்டில் சாதி, மதம், இனம்,மொழி, வேறுபாடு இல்லாமல் நாடு சமத்துவத்தை பின்பற்றி முன்னேற்ற வேண்டும். இதனை அவர் ஒரு குறிப்பிட்ட சாதியினருக்கு மட்டுமே கொடுத்துச் செல்லவில்லை. இந்தியா என்ற பழம்பெரும் நாடு “இந்தியன் என்ற மானிட சாதியாக மாற வேண்டும்” என்பதே அவரின் நோக்கமும் தாக்கமும்.

“உனக்கு பெருமை வேண்டுமானாலும், உற்சாகம் வேண்டுமானாலும் பிற மனிதனுக்கு தொண்டு செய்வதில் போட்டி போடுவதின் மூலம் தேடிக்கொள், இன்று நீ தலை குனிந்து படிப்பதே நாளை தலை நிமிரத்தான்” என்பது தெருவிளக்கின் வெளிச்சத்தில் படித்து தலை நிமிர்ந்தவரின் கூற்று.

அனால், அவர் இந்திய நாட்டின் சட்ட மாமேதை என்றும், இந்திய அரசியலமைப்பின் தந்தை என்றும் வரலாற்றில் இடம் பெற்றுள்ளார். எனினும் அவரது பிறந்தநாட்களை நாம் எவ்வாறு கொண்டாடுகிறோம்?

நம் சிந்தனையை தூண்ட சில நடப்பு நிகழ்வுகளை குறிப்பிடுகிறேன்..

“காந்திக்கு காந்தி ஜெயந்தி, நேருவிற்க்கு குழந்தைகள் தினம், ராதாகிருஷ்ணன் அவர்களுக்கு ஆசிரியர் தினம்” என நாடு முழுதும் கொண்டாடிகிறோம். இவ்விழாகளின் மூலம் மாணவர்களுக்கு தலைவர்களின் பெருமை, உழைப்பு தியாகம் கடைசிக்கு பெயர் என்பதை மாணவர்களிடம் கொண்டு சேர்க்க தான் என நானும் அறிவேன்.

ஆனால் அண்ணலின் பிறந்தநாளை மேற்கூறிய நோக்குடன் கொண்டாடப்படுகிறதா? சிந்தியுங்கள்!! தமிழகத்தை பொறுத்தவரை அவரின் பிறந்தநாள் என்பதை விட தமிழ் வருடப் பிறப்பு விடுமுறை என்றே பெரும்பாலானோர் கருதுகின்றனர்.

அரசியல் தலைவர்களும், சாதிச் சங்கத்தலைவர்களும் அந்நாளை அவரின் திருவுருவ சிலைக்கு மாலை அணிவித்து பேட்டிகொடுத்துக் கொண்டாடுகின்றனர்.

சட்டம் இயக்கிய சாணக்கியனுக்கு சாதி பெயரால் மட்டுமே விழா எடுக்கப்படுகிறது. பல கிராமங்களில் தெருமுனையில் அம்பேத்கரின் சிலை இருப்பின், அது கீழ்சாதி மக்கள் வாழும் இடம் என்றே அடையாளம் காணப்படுகிறது. அவர் ஒரு தலித்தின தலைவர் என்றே பெரும்பானையோருக்கு தெரியும் என்பது மறுக்க முடியாத உண்மை. ஒருவேளை காந்தி, நேரு, ராதாகிருஷ்ணன் போன்ற தலைவர்கள் மேல் சாதி, அதனால்தான் நாடுமுழுதும் கொண்டாடபடுகிறார்களோ என்ற சந்தேகம் எழ தோன்றுகிறது. அவர் அனைத்து சமுதாய மக்களுக்காகவும் குரல் கொடுத்தவர் அண்ணல் அம்பேத்கர்.[உங்கள் குறையைத் தமிழ்நாட்டு முதல்வர் நீக்கிவிட்டாரே]

அவரின் தொண்டுகள், உழைப்பு, முயற்சி, எழுத்துக்கள், புரட்சி மிக்க கருத்துக்கள், தியாக உணர்வுகள் என அண்ணலின் அனைத்தையும் மாணவர்களுக்கு நாம் எடுத்துரைக்க வேண்டும். இன்றும் நடக்கும் ஏற்றத் தாழ்வுகளை வேரோடு அழிக்க வேண்டும். அழகான

மானிட உலகம் பிறக்க வேண்டும். அவர் கூறிய ஊர்தியை நகர்த்த மாணவர்களால் மட்டுமே முடியும்.

சாதிக் கோவதிலிருந்தே சாதிக்க கற்றவனின் வரலாறு ஒவ்வோர் இந்திய பிரஜையும் கற்க வேண்டிய பாடம். தன்னை வறுமை தின்று செரித்த போதும் இன்னொருவர் பட்டினிக்கு தன் கல்வியால் உணவு தயாரித்தவன். அவரின் ஆளுமை வெறும் சாதியினால் போற்றி மூடி வைத்துவிட்டதீர்கள். அவர் ஒரு புரட்சியாளர், போராளி, மேதை, வெறும்.. வெறும் இந்த சாதியின் அடையாளமாக மாற்றி விட வேண்டாம்.

**---திருமதி. விக்டோரியா, துணை முதலவர், வித்யா விதையின் கூட்டுப்பள்ளி**

## சமத்துவம் என்றால் என்ன:

(கலைக்களஞ்சிய விளக்கம்)

மனிதர்களிடையே சமத்துவம் என்பது பல பண்பாடுகளில் ஒரு உரிமையாகக் கருதப்படுகிறது, இருப்பினும் பல சந்தர்ப்பங்களில் பொருளாதார, இன அல்லது மத காரணிகளுக்கு சமத்துவம் இல்லை. இந்த அர்த்தத்தில், இது நீதி மற்றும் ஒற்றுமை போன்ற பிற சொற்களுடன் தொடர்புடையது.

Equality எனும் சொல் ('சமத்துவம்') இலத்தின் மொழியிலிருந்து வருகிறது AEQUALITAS, -ātis , க (இரண்டுக்கும் ஒரே சமச்சீர்). 'சமத்துவம்' என்பதற்கு ஒத்த பெயர் 'சமத்துவம்'. எதிர் பொருளைக் கொண்ட சில சொற்கள் 'சமத்துவமின்மை' மற்றும் 'சமத்துவமின்மை'..

**பாலின சமத்துவம்**

பாலின சமத்துவம் என்பது பாலினத்தைப் பொருட்படுத்தாமல் உரிமைகள் மற்றும் கடமைகளின் அடிப்படையில் மக்கள் சமம் என்பதை நிறுவும் ஒரு கருத்து. சில நேரங்களில் இது ' பாலின சமத்துவம் ' என்றும் தோன்றும் . இது முரண்பாடாகத் தோன்றினாலும், ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையிலான சமுதாயத்தில் சமத்துவத்தை அடைவதற்காக, பாலினத்தைப் பொருட்படுத்தாமல் எல்லா மக்களுக்கும் ஒரே சிகிச்சை எப்போதும் வழங்கப்படுவதில்லை. வேறு வார்த்தைகளில் கூறுவதானால், சில சமயங்களில் நேர்மறையான பாகுபாடு என்று அழைக்கப்படும் சட்டங்களும் நடவடிக்கைகளும் உள்ளன, அவை தற்போதுள்ள பாலின ஏற்றத்தாழ்வுகளுக்கு ஈடுசெய்ய பெண்களுக்கு நன்மைகளை வழங்க முற்படுகின்றன.

பல இடங்களில், பாலின சமத்துவம் இல்லை, குறிப்பாக நிறுவனமயமாக்கப்பட்ட இயந்திரங்கள் உள்ள சமூகங்களில். வழக்கமாக, பாலின சமத்துவம் கோரப்படும் தலைப்புகள் குடும்பச் சூழல் (எடுத்துக்காட்டாக, பாத்திரங்கள் மற்றும் பணிகளின் வேறுபாடு), கல்வி (கல்வி உரிமை) மற்றும் வேலை (சில வேலைகளுக்கான அணுகல், எடுத்துக்காட்டாக ).

**சமூக சமத்துவம்**

தத்துவம், சமூகவியல், மானுடவியல் மற்றும் அரசியல் போன்ற பல்வேறு பிரிவுகள் ஒரு சமூகத்தின் உறுப்பினர்களிடையே சமத்துவம் என்ற கருத்தை பகுப்பாய்வு செய்கின்றன. சமூக சமத்துவம் என்பது சமூக நீதி தொடர்பான ஒரு கருத்து என்று பொதுவான முறையில் புரிந்து கொள்ளப்படுகிறது . உதாரணமாக, ஐக்கிய நாடுகள் சபையின் மனித உரிமைகள் பற்றிய உலகளாவிய பிரகடனம், "எல்லா மனிதர்களும் சுதந்திரமாகவும், கண்ணியத்திலும் உரிமைகளிலும் சமமாக பிறந்தவர்கள்" என்று உறுதிப்படுத்துகிறது . சமூக சமத்துவம் என்பது சில அரசியல் கட்சிகள், அமைப்புகள் மற்றும் சங்கங்களின் நோக்கங்களில் ஒன்றாகும். அரசியல் மட்டத்தில், சமூக சமத்துவத்தை மேம்படுத்த முற்படும் வெவ்வேறு நிறுவன மாதிரிகள் உள்ளன. வரலாறு முழுவதும், சமுதாயத்தில் மக்கள் அல்லது குழுக்களுக்கு இடையில் சமத்துவமின்மை ஏற்படும் சூழ்நிலைகள் ஏற்படும் போது, இந்த வகை

சூழ்நிலையை முடிவுக்குக் கொண்டுவர அல்லது எதிர்க்க முற்படும் மோதல்கள் அல்லது சமூக மோதல்கள் உள்ளன. சமூக சமத்துவம் என்பது ஒரு பரந்த காலமாகும், இது கல்வி, வேலை அல்லது சுகாதாரம் போன்ற சமூகத்தின் பல்வேறு பகுதிகளுக்குப் பயன்படுத்தப்படலாம், மேலும் இது பாலின சமத்துவம் மற்றும் சம வாய்ப்புகள் போன்ற பிற கருத்துகளையும் உள்ளடக்கியது.

**சட்டத்தின் முன் சமத்துவம்**

சட்டத்தின் முன் சமத்துவம் என்பது ஒரு சட்டத்தின் கொள்கையாகும் , இது ஒரு சமூகத்தின் அனைத்து குடிமக்களுக்கும் பொதுவான உரிமைகள், கடமைகள் மற்றும் உத்தரவாதங்களின் வரிசையை நிறுவுகிறது. எனவே, எந்தவொரு பாகுபாடும் (மத, இன, பாலினம் ...) மற்றும் சலுகைகளும் (எடுத்துக்காட்டாக, உன்னதமான தலைப்புகளிலிருந்து பெறப்பட்டது) விலக்கப்படுகின்றன.

மனித உரிமைகளுக்கான யுனிவர்சல் பிரகடனம் கட்டுரை 7 இல் கூறுகிறது, 'அனைவரும் (மனிதர்கள்) சட்டத்தின் முன் சமம், வேறுபாடு இல்லாமல், சட்டத்தின் சமமான பாதுகாப்பிற்கான உரிமை உண்டு' . பல நாடுகளில், சட்டத்திற்கு முன் சமத்துவம் என்ற கொள்கை அரசியலமைப்பில் சேர்க்கப்பட்டுள்ளது. இருப்பினும், பெரும்பாலான நாடுகளில் சட்டத்தின் முன் உண்மையான சமத்துவம் இல்லை, சில நேரங்களில் ஒரு முறைப்படி இருப்பது ஒரு உண்மை அல்ல. பல சந்தர்ப்பங்களில் இந்த கொள்கை பூர்த்தி செய்யப்படவில்லை என்றாலும், சனநாயக அமைப்பு அதன் குடிமக்களின் சமத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது என்பது பொதுவாக புரிந்து கொள்ளப்படுகிறது.

**சமத்துவத்தின் பொருள்** (கருத்து மற்றும் வரையறை)

ஈக்விட்டி என்றால் என்ன. சமத்துவத்தின் கருத்து மற்றும் பொருள்: நேர்மறை சட்டத்தின் கடிதத்திற்கு மாறாக சமத்துவம் சமூக நீதி என்று அழைக்கப்படுகிறது. சொல் ...

பாலின சமத்துவத்தின் பொருள்

பாலின சமத்துவம் என்பது கருத்துக்கள், நம்பிக்கைகள் மற்றும் சமூக விழுமியங்களின் தொகுப்பாகும்.

பாலின சமத்துவம் என்பது பாலினம் அல்லது பால் ஆகியவற்றைப் பொருட்படுத்தாமல் அனைத்து மக்களுக்கும் சமமான மற்றும் பாகுபாடற்ற அணுகுமுறையாகும்.

**அரசியலில் பாலின சமத்துவம்**

அரசியல் பிரதிநிதித்துவத் துறையில் பாலின சமத்துவம் என்பது சனநாயகத்தின் மிகத் தெளிவான பற்றாக்குறைகளில் ஒன்றாகும். பிரதிநிதித்துவ அமைப்புகளில் பெண்களின் தொடர்ச்சியான ஓரங்கட்டப்படுதல், பொது அலுவலகத்தை அணுகுவதில் சமத்துவம் இல்லாதது மற்றும் பெண்களின் நலன்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவதில் உள்ள சிரமம் ஆகியவை அரசியலில் வெளிப்படையான சிக்கல்கள்.

அரசியல் அதிகாரத் துறைகளில் பெண்கள் சமமாக இருப்பதை ஊக்குவிக்க பாலின ஒதுக்கீடுகள் மிகவும் பயன்படுத்தப்படும் வழிமுறைகளில் ஒன்றாகும்.

பாலின ஒதுக்கீட்டு நெறிமுறையானது ஆண்களும் பெண்களும் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையோ அல்லது உறுப்பினர்களின் சதவீதத்தையோ கொண்டிருக்க வேண்டும் என்பதைக் குறிக்கிறது , இது வேட்பாளர்களின் பட்டியல், பாராளுமன்ற சட்டமன்றம், ஒரு கட்சி ஆணையம் அல்லது உத்தரவு அல்லது நடவடிக்கை பொருந்தக்கூடிய நிறுவனம்.

பள்ளியிலும் குழந்தைகளிலும் பாலின சமத்துவம்

குழந்தைகளில் பாலின சமத்துவம் தொடர்பாக கல்விக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. இதற்காக, வகுப்பறையில் சமமான சிகிச்சை போன்ற கற்பித்தல் வழிகளில் கவனமாக இருப்பது மட்டுமல்லாமல், ஆசிரியர்கள் விழிப்புடன் இருக்க வேண்டியது அவசியம், மேலும் சில வண்ணங்கள், பொம்மைகள் அல்லது தொழில்கள் ஒரு குறிப்பிட்ட பாலினத்திற்குத் தனித்தன்மையானவை.

**பாலின சமத்துவச் சொற்றொடர்கள்**

உலகில் பாலின சமத்துவத்திற்காக தீவிரமாக போராடும் அரசியல், கல்வி மற்றும் கலைத்துறையைச் சேர்ந்த கதாபாத்திரங்கள் பல. பாலின சமத்துவம் பற்றிய மிகவும் பிரபலமான சில சொற்றொடர்களை இங்கே காணலாம்:

- "பாலின சமத்துவம் என்பது ஒரு குறிக்கோளை விட அதிகம். வறுமையைக் குறைத்தல், நிலையான வளர்ச்சியை ஊக்குவித்தல் மற்றும் நல்லாட்சியை உருவாக்குதல் போன்ற அறைகூவல்களை எதிர்கொள்வதற்கான முன் நிபந்தனையாகும். ” ஐக்கிய நாடுகள் சபையின் (ஐ.நா) முன்னாள் பொதுச்செயலாளர் கோஃபி அனன்
- "நாங்கள் எந்த சுதந்திரத்திற்காகப் போராடினாலும் அது சமத்துவத்தின் அடிப்படையில் சுதந்திரமாக இருக்க வேண்டும்." பெர்க்லியின் கலிபோர்னியா பல்கலைக்கழகத்தின் தத்துவ பேராசிரியர் சூடித் பட்லர்.
- "பெண்கள் மற்றும் ஆண்களின் சமத்துவத்தையும் முழு மனித நேயத்தையும் அங்கீகரிக்கும் ஒருவர் பெண்ணியவாதி." குளோரியா ஸ்டீனெம், பத்திரிகையாளர் மற்றும் பெண்கள் உரிமை ஆர்வலர் எழுத்தாளர்:
- “அவர்கள் இரு பாலினங்களும் ஒருவருக்கொருவர் உயர்ந்தவர்கள் அல்லது தாழ்ந்தவர்கள் அல்ல. அவை வெறுமனே வேறுபட்டவை ”. மருத்துவரும் எழுத்தாளருமான கிரிகோரியோ மரான்.
- “மனித இனம் ஒரு பறவை போன்றது, பறக்க அதன் இரண்டு இறக்கைகள் தேவை. இப்போது, அதன் சிறகுகளில் ஒன்று கட்டப்பட்டிருக்கிறது, அது எங்களை உயரமாக பறப்பதைத் தடுக்கிறது. " நடிகை மற்றும் பெண் நல்லெண்ணத்திற்கான தூதர் எம்மா வாட்சன்
- "பெண்களுக்கு சமத்துவம் என்பது அனைவருக்கும் முன்னேற்றம்." ஐக்கிய நாடுகள் சபையின் பொதுச்செயலாளர் பான் கீ மூன்
- “பாலின சமத்துவம் என்ற கட்டுக்கதையை வாங்குவதை நாம் நிறுத்த வேண்டும். இது இன்னும் ஒரு உண்மை அல்ல ”. பியோன்ஸ் நோல்ஸ், பாடகர்.

**ஆண், பெண் சமத்துவம்** ஆண்கள் மற்றும் இடையே பாலியல் வேறுபாடு, பாலினம், சமத்துவம் மற்றும் நீதி தொடர்பாக யோசனைகள், நம்பிக்கைகள் மற்றும் சமூக மதிப்புகள் நடத்தைகள், பாத்திரங்கள், வாய்ப்புகளை, மதிப்பீடு தொடர்பாக மற்றும் உறவுகள் ஆகியவற்றின் நுண்ணிய தொகுப்பு ஆகும்.

இந்தச் சிக்கலைப் பற்றி குறிப்பிடுகையில், பல ஆண்டுகளாக பெண்கள் மீதான பாகுபாடு காணப்படுகிறது, அவர்கள் கருத்துத் தெரிவிக்க முடியவில்லை, மேலும் சமூகத்தில் அவர்களது பங்கு ஆண்களைப் பொறுத்தவரை வேறுபடுத்தப்பட்டது, ஏனெனில் அவர்கள் வேலை செய்யும் திறனுடன் காணப்பட்டார்கள். தனது பங்கிற்கு, அந்தப் பெண்கள் தன்னை வீடு மற்றும் குடும்பத்திற்காக மட்டுமே அர்ப்பணித்தனர்.

இருப்பினும், பல ஆண்டுகளாக, பெண்கள் மேற்கூறிய சூழல்களில் பெரிய முடிவுகளால், பொருளாதார, அரசியல் மற்றும் சமூகத் துறைகளுக்கான திறன்களையும் திறன்களையும் பெண்கள் கொண்டுள்ளனர் என்பதை நிரூபித்துள்ளனர். இதேபோல், பாலின சமத்துவம் இல்லாததற்கான சான்றுகள் உள்ள குழுக்கள் இருப்பதால் பெண்கள் தொடர்ந்து போராட்டத்தில் தொடர்கிறார்கள் என்பது தெளிவாகிறது.

**பாலின சமத்துவம் அல்லது சமத்துவத்தின் நோக்கம்**அனைத்து மக்களுக்கும் அவர்களின் பாலினம், அதே நிபந்தனைகள், வாய்ப்புகள் மற்றும் சிகிச்சையைப் பொருட்படுத்தாமல் வழங்குவதாகும், ஆனால் ஒவ்வொருவரின் குறிப்பிட்ட பண்புகளையும் கணக்கில் எடுத்துக்கொள்வதன் மூலம் மக்கள் தங்கள் உரிமைகளை அணுகுவதை உறுதிசெய்கிறது. எனவே, இது வேறுபாடுகளை நீக்குவதற்கான கேள்வி அல்ல, ஆனால் அவற்றை மதிப்பிடுவது மற்றும் சமூக ஏற்றத்தாழ்வுகளை பராமரிக்கும் நிலைமைகளை சமாளிக்க அவர்களுக்கு சமமான சிகிச்சையை வழங்குவது.

பாலின சமத்துவம் என்பது இந்த வழியில், சமத்துவம், நீதி மற்றும் கண்ணியம் போன்ற கருத்துகளுடன் தொடர்புடையது. கடைசியாக, பாலின சமத்துவம் என்பது ஒவ்வொரு நபருக்கும் உரிய உரிமையை அளிக்கிறது, ஆண்கள் அல்லது பெண்களுக்கு எதிரான பாகுபாட்டை ஒதுக்கி வைத்து, சமூக நீதியின் அடிப்படையாக இருப்பது, இது ஒரு நியாயமான, சீரான சமூகத்தின் வளர்ச்சியை அனுமதிக்கிறது, அங்கு மனித உரிமைகள் ஆதிக்கம் செலுத்துகின்றன.

**பாலின சமத்துவத்திற்கான எடுத்துக்காட்டுகள்**

பாலின சமத்துவம் என்ற கருத்து பரந்த மற்றும் சமூக யதார்த்தத்தின் வெவ்வேறு பகுதிகளில் தோன்றுகிறது. அவர்களில் சிலர் குடும்பம், கலாச்சாரம், கல்வி மற்றும் வேலை என இருக்கலாம். அவற்றில் சமத்துவமின்மை மற்றும் பாலின சமத்துவம் ஆகிய இரண்டின் சூழ்நிலைகளும் ஏற்படலாம்.

இன்னும் சில உறுதியான எடுத்துக்காட்டுகள், எடுத்துக்காட்டாக, ஒரு குடும்பச் சூழலில், பாலின அம்சங்களை மதிப்பீடு செய்யாமல் வீட்டு வேலைகளை விநியோகிப்பது.

உதாரணமாக, அரசியலில், பெரும்பாலான நாடுகளில் அரசியல் அதிகாரம் ஆண்களின் கைகளில் உள்ளது. சில ஜனநாயக நாடுகளில், இந்த நிலைமை சீரானதாக இல்லை என்பது அங்கீகரிக்கப்பட்டுள்ளது, அதனால்தான் கூட்டு தேர்தல் பட்டியல்கள் போன்ற நடவடிக்கைகள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன.

**பள்ளியில் பாலின சமத்துவம்**

கல்வி நிறுவனங்களுக்குள், பாலின சமத்துவத்தின் வளர்ச்சி மிகவும் முக்கியமானது, இது ஆசிரியர்களுக்கு பாலின சமத்துவத்தைப் பற்றி கற்பிப்பதற்கும், சிறுவர்களும் சிறுமிகளும் பங்கேற்கும் நடவடிக்கைகளை ஒரே வாய்ப்புடன் மேற்கொள்வதற்கும் ஒரு முக்கிய பங்கு ஆகும்.

வேலையில் பாலின சமத்துவம்

சில நாடுகளில், பாலின சமத்துவம் என்பது வேலைகளில் உள்ள சிக்கலை ஒழிக்க சில கொள்கைகளை செயல்படுத்துவதில் ஒரு மேம்பட்ட பிரச்சினை. இருப்பினும், மற்றவர்கள் மிக மெதுவாக இருக்கிறார்கள், அதைக் காணலாம்; சம்பளத்தின் சமத்துவமின்மை, ஆண்கள் அதிகம் சம்பாதிப்பது, சமநிலையற்ற செயல்பாடுகளை விநியோகித்தல், பெண்கள் மீதான பாலியல் துன்புறுத்தல், பெண் பாலினத்திற்கு வேலை மறுப்பது, ஒரு காரணத்திற்காக அல்லது இன்னொரு காரணத்திற்காக: கர்ப்பம், அவர்களின் திருமண நிலை காரணமாக, குழந்தைகளுடன், மற்றவர்களுடன்.

மேற்கூறியவை அனைத்தும் சமூக பாகுபாடுகளுக்கு எதிராகப் போராட சமூகத்தை தூண்ட வேண்டும் அல்லது ஊக்குவிக்க வேண்டும், மேலும் சமூக மற்றும் பாலியல் நிலை காரணங்களுக்காக பாலினங்களிடையே வேறுபாடு இல்லாமல், சமமான வேலை வாய்ப்புகளுடன் ஆண்களுக்கும் பெண்களுக்கும் நியாயமான சிகிச்சையை அடைய வேண்டும். , அல்லது பாலினம்.

**அரசியலில் பாலின சமத்துவம்**

அரசியல் என்ற வகையில், பெண்கள் பல ஆண்டுகளாகப் பாகுபாடு காட்டப்பட்டு வருகிறார்கள், நாட்டின் தேர்தல் தேர்தல்களில் அவர்கள் பங்கேற்பதைத் தடுக்கிறார்கள், இது பெண்கள் போராட்டத்தோடு, மற்றும் பாலின சமத்துவத்தை ஆதரிக்கும் அமைப்புகளும் காலப்போக்கில் சிறிதளவே அடையவில்லை தனது நாட்டின் அரசியல் துறையில் அவரது தலையீடு சிறிது சிறிதாக, நாட்டின் முன்னேற்றத்திற்குப் பொருத்தமான அரசியல் செய்திகளை முடிவெடுப்பதில் கணக்கில் எடுத்துக்கொள்ளப்படுகிறது.

## வள்ளுவம் காட்டும் வாழ்வியல் நெறி– நா.தனராசன்

2004 ஆம் ஆண்டில் அண்ணா பல்கலைக்கழகமும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் இணைந்து நடத்திய பன்னாட்டு திருக்குறள் மாநாட்டில் வாசிக்கப்பட்ட கட்டுரை.

திருக்குறள் நீதி நூல் மட்டுமன்று அது ஒரு வாழ்வியல் நூல். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட மனிதனுக்காக மட்டுமல்ல, இருபத்தோராம் நூற்றாண்டின் புதிய தலைமுறையினர்க்கும் வழிகாட்டும் புரட்சி நூல். வள்ளுவத்தின் பொருண்மை காலந்தோறும் புதிய புதிய கருத்தாக்கங்களைத் தந்து, இனம், மொழி, நாடு என்னும் எல்லைகளைக் கடந்து மனித வாழ்க்கையை வளப்படுத்துகிறது.

**பொருண்மைச் சிறப்பு**

சங்க காலத்தைத் தொடர்ந்து தமிழுக்கும், தமிழர்க்கும் கிடைத்த அரிய களஞ்சியமான வள்ளுவத்தில் உலகளாவிய சிந்தனைகளும் மனிதனை உயர்த்தும் உயரிய நோக்கும் காணப்படுகிறது. வள்ளுவம் ”தமிழனுக்குரியது” என்னும் நிலையைக் கடந்து உலகத்தவர் அனைவர்க்கும் உரியதாக உள்ளமையை உணர்ந்த பாரதி ”வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு”, எனப் புகழ்ந்துரைத்தார். வள்ளுவப் பொருட் சிறப்பை அறிந்த மதுரைத் தமிழ் நாகனார் ”எல்லாப் பொருளும் இதன் பால் உள” என்று தெளிந்துரைத்துள்ளார். இவை வள்ளுவத்தின் காலமும் எல்லையும் கடந்து நுண்பொருட்ச் சிறப்பை உணர்த்துவன.

வாழ்வியல் பதிவு

வள்ளுவம் தான் தோன்றிய காலத்தோடு நின்று விடாமல் இந்த நூற்றாண்டு மனிதனுக்கும் வாழச்சொல்லிக் கொடுக்கிறது. வாழ்க்கையைச் சொல்லிக் கொடுக்கிறது. வள்ளுவம் இலக்கியம் என்னும் நிலையில் நின்று விடாமல் மனித வாழ்வியல் கூறுகளை காட்டும் பதிவுகளாக உள்ளது.இதனை

சராசரி மனிதன் அன்றாட வாழ்க்கையில் ஒழுகவேண்டிய நெறிமுறைகளின் தொகுப்பாகத் திருக்குறள் படைக்கப்பட்டுள்ளது.

என்னும் அறிஞர் கருத்தினால் அறியலாம். ‘வள்ளுவத்தில் உள்ள ஒவ்வொரு குறளும் மனித வாழ்க்கையின் நெறிகளை, வழிமுறைகளைத் தருவன.

மானிடப் பண்பு இயல்புகளுக்கு ஓர் உறைவிடமாய் – வாழ்க்கை, வழி நெறிமுறைகளுக்கான வழிகாட்டியாய் அமைந்துள்ளது திருக்குறள் ‘ என்னும் முத்தமிழ் அறிஞரின் கருத்தும் வள்ளுவம் ஒரு வாழ்வியல் நூல் என்பதை உறுதிப்படுத்துகிறது.

**முதன்மைப் பயன்**

உயிரினத்தின் உச்சியில் வாழும் இன்றைய மனிதனை, அவனது வாழ்க்கையைப் பகுத்து நோக்கி, அறம், பொருள், இன்பம் ஆகிய முதன்மைப் பயனை அறிய வைத்துப் பயனுடைய வாழ்க்கை வாழ வள்ளுவம் வழி காட்டுகிறது. எதிலும் விரைவும், ஓட்டமும் காட்டும் இந்த நூற்றாண்டு மனிதனுக்கு உள்ளத்தை உறுதிப்படுத்தவும் வாழ்வியல் பொருண்மைத் தெளிவுபெறவும் வள்ளுவர் வாக்கு ஊன்றுகோலாய் இருக்கிறது.

**பன்முகப்பார்வை**

தனி மனிதநிலை, குடும்ப நிலை, உறவினர் நிலை, சமூக உறுப்பினர் நிலை, குடிமக்கள் நிலை என்னும் தளங்களில் மனிதர்கள் பாதுகாக்க வேண்டிய பண்புகள், ஆற்ற வேண்டிய பணிகள், எனப் பன்முகக் கூறுகளை ஒழுங்குற அமைத்து ஒரு முழுமையான வாழ்வியல் கருத்தாக்கத்தை வள்ளுவம் தந்துள்ளது.
தமிழ்ச் சமுதாயத்தில் காலங்காலமாய் இருந்து வந்த மரபுத்தளைகளை உடைத்து, மனிதப் பழக்க வழக்கங்களை மாற்றித் தனிமனிதத் தூய்மையை உருவாக்க வள்ளுவர் முயன்றுள்ளார்.

**மரபுகளைத் தகர்த்தல்**

மது அருந்துதலும் புலால் உண்ணுதலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒழுக்கம் என்னும் நிலையை மாற்றி மனித மனத்தினை, வாழ்வின் பயனைத் தடம்மாற்றும் தவறுகள் என வள்ளுவர் சுட்டிக் காட்டியுள்ளார்.

இலங்கு இழை மகளிர் பொலங் கலத்து ஏந்திய மணம் கமழ் தேறல் மடுப்ப நாளும் மகிழ்ந்து இனிது உறைமதி பெரும எனவும்

சிறியகட் பெறினே எமக்கீயும் மன்னே பெரியகட் பெறினே யாம்பாடத் தான் மகிழ்ந்தது உண்ணும் மன்னே

என்றும் கள்ளுண்டுகளித்தலையும், கள்ளுண்ணல் பெருமித வாழ்வாக இருந்த மரபுகளையும் பின்பற்றக் கூடிய ஒழுக்கமாய்க் காட்டும் வழக்கினை மாற்றி அதனைச் சமுதாயத் தீமையாக உரைத்தவர் வள்ளுவர்.

”உண்ணற்க கள்ளை” என்றும் அது ”ஈன்றாள் முகத்தேயும் இன்னாதது” எனவும் ”நஞ்சுண்பார் கள் உண்பவர்” என்றெல்லாம் மது அருந்துதலின் தீமையை உணர்த்தித் தனிமனித வாழ்வு சிறக்கும் நெறியைக் காட்டியுள்ளார் வள்ளுவர் எனலாம்.

புலால் உண்பது மனித நெறி அல்ல என்பது வள்ளுவரின் கருத்தாக உள்ளது. இன்றைய மனிதர்களின் உணவு முறையில் சைவ உணவே சிறந்தது என்பதை அறிவியல் ஆய்வுகள் மூலம் மேலைநாட்டு உணவியல் வல்லுனர்கள் தெளிவுபடுத்தியுள்ளனர். தெய்வப் புலவர் வள்ளுவர் ”புலால் மறுத்தல்” என்னும் அதிகாரத்துள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இதனை விளக்கமுறச் செய்துள்ளார்.

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி

எல்லா உயிரும் தொழும்

என்னும் குறட்பா மனிதன் உயர்வதற்கான வழியைக் காட்டுகிறது. இன்றைய தமிழக அரசு உயிர்க்கொலை, உயிர்ப் பலி கூடாது எனச் சட்டம் கொண்டு வந்துள்ள நிகழ்காலச் சூழலில் வள்ளுவரின் வாழ்வியல் நெறி வெற்றி பெற்றுள்ளதாகவே கருதலாம். அன்பு, பண்பு, நட்பு போன்ற வாழ்வியல் இலக்குகளை எளிய முறையில் மனித மனம் ஏற்கும் வகையில் உரைத்துத் தனி மனித வாழ்க்கையை வள்ளுவர் பண்படுத்தியுள்ளார்.

**அறநெறிப்பட்ட வாழ்க்கை**

மனித வாழ்க்கை ஒரு குறுகிய வட்டத்திற்குள் நின்றுவிடாமல் விரிந்து பரந்து முக்கியத்துவம் மிக்கதாக அமைய வேண்டும். மனித மனங்களை விரிவுபடுத்தி அறவழிப்பட்ட சமுதாயத்தை உருவாக்குவது திருக்குறளின் நோக்காகவும் உள்ளது.

மனமாசின்றி வாழும் வாழ்க்கை சிறப்புடையது. அதுவே அறங்களில் முழுமை. மனித வாழ்க்கை நெறி என்கிறார்.

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்

ஆகுல நீர பிற.

என்னும் குறட்பா இதனை உணர்த்துகிறது. அறம் என்பது பற்றிய இலக்கிய மரபுசார் கருத்தாக்கத்தை வள்ளுவர் மாற்றியமைக்கிறார்.

அறமெனப்படுவது யாதெனக் கேட்பின் மறவாத இதுகேள் மன்னுயிர்க் கெல்லாம் உண்டியும் உடையும் உறையுளும் அல்லது கண்டது இல்

என்னும் காப்பியக் கருத்தினை மறு ஆய்வு செய்து அறத்திற்குப் புதிய விளக்கங்களைத் தந்தவர் வள்ளுவர். மனத்தூய்மை, ஈகை, காதல் என்னும் தூயநெறிகளை வாழ்வியல் அறமாகக் கொள்ள வேண்டியதின் தேவையை உணர்த்தியுள்ளார்.

**வாய்மை**

திருக்குறள் அன்பு, பண்பு, இன்சொல், நன்றியறிதல் என மனித மாண்புகளை விளக்குகிறது. இவற்றைப் பின்பற்றுவோர் பேற்றினையும் ஒதுக்கியவர் அடையும் இழிவினையும் திறம்படக் காட்டுகிறது. "வாய்மை" என்பதே தலையாய அறம் என்கிறது வள்ளுவம். பொய்மை கோலோச்சும் இக்கால மனித சமுதாயத்திற்கு வள்ளுவர் கருத்துக்கள் மலர்ச்சியை உண்டாக்கும் மருந்தாகக் கொள்ளலாம். அறங்களில் எல்லாம் வாய்மையே சிறப்புடையது என்பதை

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற

செய்யாமை செய்யாமை நன்று

என்னும் குறட்பாவால் அறிய முடிகிறது.

மும்மை அறம்

மனிதர்களின் வாழ்க்கை நெறியை உயர்த்தும் கோட்பாடாக வள்ளுவம் மூன்று அறங்களைப் பின்பற்றுமாறு வலியுறுத்துகிறது.

1. ஆன்மீக அறம்; 2. ஈதல் அறம்; 3. காதல் அறம்

கடவுளை "அறிவு, ஆற்றல், அப்பாற்பட்ட நிலை" என்றும் கருதுகோள் நிலையில் வைத்து மனித ஒருமைக்கும் சமுதாய அமைதிக்கும் வள்ளுவர் குறள் வழிக் குரல் கொடுத்துள்ளார். முதற் குறட்பாவில் "உலகு" என நினைவூட்டி உலகளாவிய நேயத்தை மறைமுகமாக உணர்த்தியுள்ளார். கடவுளின் பெயரால், மதத்தின் பெயரால் சண்டையிட்டுக் கொள்ளும் மனிதனுக்கு, அவனது மனமாற்றத்திற்கு வள்ளுவம் ஒரு புதிய ஆன்மீக அறத்தை தந்துள்ளது. இதனை,

வள்ளுவம் கடவுளை நம்புகிறது. ஆனால் அது ஆணும் அல்ல; பெண்ணுமல்ல. வள்ளுவம், காட்டும் கடவுளுக்குக் கோபுரங்கள், கோட்டைகள் இல்லை. வள்ளுவத்தின் கடவுளுக்குக் கணக்கும் இல்லை; வழக்கும் இல்லை. அது பேரறிவு; தூய்மையான அறிவு; குணங்களின்

திருவுரு; இன்பத்தின் திருவுரு; அன்பின் திருவுரு; அறத்தின் அடையாளம்! என்னும் அறிஞர் கருத்தும் இதனைத் தெளிவுபடுத்தும்.

**ஈதலறம்**

மனிதப் பண்பினை உயர்த்தும் ஒரு நெறி ஈகை. பிறருக்குக் கொடுத்து மகிழும் மனம் பெற்றால் மனிதன் பக்குவம் அடைந்தவனாகிவிடுவான். போட்டியும், பொறாமையும் அடுத்தவர் பொருளைக் கவரும் எண்ணமும் மனிதனை மிருக நிலைக்குக் கொண்டு செல்லும். ஈகைக் குணம் ஒன்றே மனிதனை மாண்புடையவனாக்கும். வள்ளுவர் ஈகைக் குணமே உயிரின் ஊதியம் என்பர்.

ஈதல் இசைபட வாழ்தல்; அதுவல்ல

ஊதியம் இல்லை உயிர்க்கு

கொடுத்துப் புகழடையும் வாழ்க்கையே பயனுடைய வாழ்க்கை என்பதைக் குறள் உணர்த்துகிறது.

**காதலறம்**

காமத்துப்பால் அறவழிப்பட்ட காதலுறவுகளை எடுத்துரைத்துள்ளது. காதலையும், ஆண்-பெண் உறவையும் வள்ளுவர் நெறிப்படுத்தியுள்ளார். காமத்துப்பாலில் காதல், காதலர் உறவு நிலை ஆகியவற்றை இனிமை பயக்கப் பாடி, அன்பெனும் நெறிக்குள், மனங்களின் சங்கமத்திற்குள், மாசுபடாத வாழ்வியல் படிநிலையை வடித்துத் தந்துள்ளார். களவையும் கற்பையும் வகைப்படுத்தி ”மனிதம்” அடையும் வாழ்க்கை நெறியை வள்ளுவர் தந்துள்ளார்.

பிறன்மனை நயத்தலையும், பரத்தையர் உறவையும், பெருங்குற்றமாகச் சொல்லி அன்புடைய காமத்தைச் சமுதாய அறமாகத் தந்துள்ளார்.

**ஆண் – பெண் சமனியம்**

ஆண் – பெண் உறவு நிலை, திருமணத்திற்கு முன்னும் பின்னுமாகக் காதல் நிலை ஆகிய செய்திகளைக் குறள் விரிவாகப் பேசுகிறது. ஆண் – பெண் சமத்துவம் வள்ளுவரின் கொள்கையாகக் காணப்படுகிறது.

ஆண் மேலாதிக்க காலத்தில், அதற்கெதிரான, துணிவுடைய சிந்தனைகளை வழங்கியுள்ள வள்ளுவரின் அணுகுமுறை புரட்சிகரமானது. பெண்களின் உரிமைக்காகவும், உலகியல்

மாற்றத்திற்காகவும் அவர் பாடுபட்டுள்ளார். பெண் ஆணுக்கு இணையானவள். ஆற்றல் மிக்கவள் என்பதை,

சிறைகாக்கும் காப்பு எவன்செய்யும் மகளிர்

நிறைகாக்கும் காப்பே தலை என்று ஆற்றலும் அறிவும் நிறையும் மிக்க பெண்களை உலகுக்கு உருவாக்கித் தந்தவர் வள்ளுவர் எனலாம். இத்தகைய வள்ளுவரின் வழிகாட்டல்தான் பிற்காலத்தில் பாவலன் பாரதியை "வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி வைப்போமென்ற விந்தை மனிதர் தலை கவிழ்ந்தார்" என்று பாட வைத்தது எனலாம்.

**சமுதாயக் கொடுமைகள்**

சாதி, மதத்தின் பெயரால் நிலவும் ஏற்றத்தாழ்வுகள் சமுதாயக் கொடுமைகள். இதனை மாற்ற வள்ளுவரின் குறட்பாக்கள் முனைந்துள்ளன. பிறப்பால் இனம் பிரித்த வருணாசிரம முறையை வள்ளுவம் எதிர்க்கிறது. பிறப்பால் அனைவரும் ஒன்றே என ஓங்கி ஒலிக்கிறது.

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்; சிறப்பொவ்வா

செய்தொழில் வேற்றுமை யான்

என்னும் குறட்பா வள்ளுவரை ஒரு சமுதாயப் புரட்சியாளராக அடையாளம் காட்டுகிறது.

**பகுத்தறிவு நோக்கு**

வள்ளுவரைத் தமிழ்கூறும் உலகில் தோன்றிய முதல் "பகுத்தறிவாளர்" எனக் கூறலாம். எந்தவொரு கருத்தையும், சிந்தனையையும் உள்ளவாறு ஏற்காமல் பகுத்து நோக்கி, உள்ளத் தெளிவு பெற்று ஏற்க வேண்டும் என்பதே வள்ளுவர் கொள்கை.

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்

மெய்ப்பொருள் காண்பது அறிவு

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்

மெய்ப்பொருள் காண்பது அறிவு

என்னும் குறட்பாக்கள் இதற்குச் சான்றாகும்.

**மானுடத்தின் மலர்ச்சி**

வள்ளுவரின் நெம்புகோல் அடிகள் மானுடத்தின் மலர்ச்சி எனலாம். மரபுகளைத் தகர்த்துப் புதுமையை நிலை நிறுத்துவது வள்ளுவரின் சமுதாயப் பணியாக இருக்கிறது.

அந்தணர் என்போர் அறவோர்

அன்பின் வழியது உயிர்நிலை

மனநலம் மன்னுயிர்க்குக் காக்கம்

அறத்தால் வருவதே இன்பம்

என்றெல்லாம் உயரிய சிந்தனைகளை வழங்கி மனித வாழ்க்கையை மலர்ச்சியடையச் செய்தவர் வள்ளுவர் ஒருவரே எனலாம்.

அடிக்குறிப்புகள்

1. பாரதியார், பாரதியார் கவிதைகள், வானதி பதிப்பகம், சென்னை, ஐந்தாம் பதிப்பு, 1883, ப. 39.

2. மதுரைத் தமிழ் நாகனார், திருவள்ளுவ மாலை, திருக்குறள் – பரிமேலழகர் உரை, கழக வெளியீடு, சென்னை, 1964, ப. 408.

3. ந. முருகேச பாண்டியன், "திருவள்ளுவர் என்ற மனிதர்", வள்ளுவம் இதழ் (வைகாசி – ஆனி) திருக்குறள் பண்பாட்டு ஆய்வு மையம், விருத்தாசலம், மே – 2000.

4. மு. கருணாநிதி, "திருக்குறள் என் சிந்தனையை நெய்திருக்கும் செந்நூல்", கோட்டம் முதல் குமரி வரை, குமரி முனை திருவள்ளுவர் சிலை திறப்பு விழா மலர், ப. 8.

5. மாங்குடி மருதனார், மதுரைக் காஞ்சி, கழக வெளியீடு, சென்னை, பாடல் வரிகள், 778-782.

6. புறநானூறு, கழக வெளியீடு, சென்னை, பாடல் எண். 235.

7. சீத்தலைச் சாத்தனார், மணிமேகலை, பாரி நிலையம், சென்னை, எட்டாம் பதிப்பு, 1987, ப. 306.

8. குன்றக்குடி அடிகளார், வள்ளுவத்தின் சமயவியல், வள்ளுவம் இதழ் (பங்குனி – சித்திரை), திருக்குறள் பண்பாட்டு ஆய்வு மையம், விருத்தாசலம், மார்ச் 1999, ப. 11.

முனைவர் நா. தனராசன்

முதுநிலை விரிவுரையாளர் தமிழ்த்துறை

ம.இரா. அரசினர் கலைக் கல்லூரி

மன்னார்குடி – 614 001.

https://malaysiaindru.my/113763

திருக்குறள் நால்வருண சாதிமுறையைப் பின்பற்றிய நூலா?

பேராசிரியர் ந. கிருஷ்ணன், ம.சு.பல்கலைக்கழகம், திருநெல்வேலி.

"பொங்கு தமிழர்க்கு இன்னல் விளைத்தால் சங்காரம் நிசமெனச் சங்கே முழங்கு!"

- பாவேந்தர் பாரதிதாசன்

காலத்தை வென்று நிற்கும் திருக்குறளின் பன்மைத்துவம்

திருக்குறள் காலத்தை வென்று நிற்பதன் காரணமே அதன் பன்மைத்துவம்தான். அறவழி நிற்கும் சமயங்களைப் பின்பற்றும் சமயிகள் பலரும், குறிப்பாக,, சமணர், பௌத்தர், சிவனியம், திருமாலியம் உள்ளிட்ட சமயக்கணக்கர்கள் திருக்குறள் தத்தம் சமய அறங்களையே சொல்லுகின்றது என்று உரிமைகொள்ளும் நூற்கள் எழுதியுள்ளனர். அப்படி இருக்கும்போது , ஸ்மார்த்தரான திரு. நாகசாமியில் நூலில் என்ன பிழை கண்டீர் என்று வினவினார் என் நண்பர்.

பல்வேறு சமயக்கணக்கரும் திருக்குறளுக்கு உரிமை கொண்டாட முயல்வது அறம் சார்ந்த விடயங்கள் ; தவிர, அவர்கள் திருக்குறள் அவரவர் சமயக் கருத்துக்களின் சுருக்கம் என்று ஒருபோதும் இழிவு செய்ய முயன்றதுமில்லை. ஆனால், பிறப்பின் வழியாக, மனிதருக்குள் ஏற்றத்தாழ்வுகளைத் திணிக்கும் அறத்திற்குப் புறம்பான நால்வருண சாதிமுறை அமைப்பை அடிப்படையாகக் கொண்டே திருக்குறள் எழுதப்பட்டுள்ளது என்றல்லவா திரு.நாகசாமி அவர்கள் உரிமை கொண்டாடுகின்றார் ; அதுமட்டுமல்ல, அறத்திற்குப் புறம்பான மனுதர்ம சாத்திரங்களின் சுருங்கிய வடிவே திருக்குறள் என்ற திரு.நாகசாமியின் வாதம் அறமே வடிவான திருக்குறளுக்கு அறத்திற்குப் புறம்பான ஆரியச்சாதிச் சாயம்பூசும் கயமைச் செயலன்றி வேறென்ன?

அறத்திற்குப் புறம்பான நால்வருண சாதிமுறைத் திணிப்பை , மனுதருமம், என்றுமுள்ள சநாதன தருமம், பாரத மண்ணின் பாரம்பரிய இந்து தரும வாழ்வியல் முறை , கீதை சொல்லும் இலட்சிய வாழ்வு என்று பல்வேறு சாயங்களைப் பச்சோந்திபோல் வார்த்தைச் சூதுகளால் மக்களை மூளைச் சலவை செய்து , பிராமணர்களின் மேலாண்மையை ஏனையமக்கள் தாங்களே மனமுவந்து ஏற்கச் செய்யும் முயற்சிகளின் ஒரு பரிமாணமே திரு.நாகசாமியின் நூல்!

திருக்குறளை மனுதருமத்தின் சுருங்கிய வடிவென்றும் , ஆரியப் பிராமணனே 'அறவாழி அந்தணன்' என்னும் தெய்வம் என்று திருக்குறளே கூறிவிட்டதாக திரு.நாகசாமி ஏற்ற முயலும் ஆரிய நஞ்சு தமிழர்களின் பொதுப்புத்தியில் ஏறிய பிறகு , ஆரியப்பிராமண மனிதப் புனிதர்களுக்குப் பணிவிடை செய்து அடிமையாக வாழ்ந்தால், அடுத்த பிறவியில் மேம்படலாம் என்னும் மனுசாத்திரத்தை எளிதில் இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தில் ஏற்றிவிடலாம் அல்லவா?

தமிழர்களிடம் இல்லாத நால்வகைச் சாதியை நாட்ட முயலும் ஆரியர்கள்!

பரிதிமாற்கலைஞர் குறிப்பிட்ட இரண்டாவது கருத்து "(2) தமிழர்களிடத்தில்லாதிருந்த அந்தணர் , அரசர், வணிகர், வேளாளர்' என்ற நால்வகைச்சாதி முறையை மெல்லமெல்ல நாட்டிவிட்டனர்." இக்காலத் தமிழர்கள் உன்னிப்பாகக் கவனிக்கவேண்டிய மிக முக்கியமான கருத்தாகும்.

உயிர் சமத்துவமும், அன்பும் மையநாடியாகக் கொண்டு தமிழ் அறம் படைத்த திருவள்ளுவர் நால்வகைச் சாதியைத்தான் அடிப்படையாகக் கொண்டு தமது திருக்குறளைப் படைத்தார் என்று சொல்லி திரு.நாகசாமி ஆடும் ஆரியக்கூத்து அவர்க்கு முன்னரே திருக்குறளுக்கு உரையெழுதிய பரிமேலழகர் உள்ளிட்ட பல்வேறு ஆரியப் பார்ப்பனர்கள் ஏற்கனவே ஆடித்தீர்த்த ஆரியக்கூத்துகளின் தொல்லெச்சமே! இதைத் தப்பும் தவறுமான ஆங்கிலத்திலும் , சமற்கிருதத்திலும் எழுதி , அவசரக் கோலத்தில் அள்ளித் தெளித்தது நகைப்புக்குரியது. ஆரியக்கூத்துக்கு இலக்கணமும் தேவையில்லை ; மொழித் தூய்மையும் அவசியமில்லை என்று எண்ணியிருப்பார் போலும்!

கபிலர் என்னும் ஆரியப் பிராமணரின் நேர்மை

பரிதிமாற்கலைஞருக்கு ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ஆரியப் பிராமண குலத்தில் தோன்றிய கபிலர் தம் இனத்தவரான ஆரியப் பிராமணரை வசைசொல்லிப் பாடும் பாடல் கீழே தரப்பட்டுள்ளது:

"இத் தமிழ்நாட்டில் இல்லாத நால்வருணச் சாதிமுறையை நீர் கொண்டுவந்து நாட்டினீர்" எனத் தன் இனத்தவரான ஆரியரை நோக்கி குற்றப்பத்திரிக்கை முழக்கிய கபிலரின் நேர்மை வியப்புக்குரியது.

'முற்சடைப் பலனில் வேறாகிய முறைமை சொல்

நால்வகைச் சாதி இந்நாட்டில் நீர் நாட்டினீர்' - கபிலரகவல்

பரிதிமாற்கலைஞர் குறிப்பிட்ட மூன்றாவது கருத்து "(3) தமிழரிடத்திருந்த பல அரியவிஷயங்களையும் மொழி பெயர்த்துத் தமிழர் அறியுமுன்னரே அவற்றைத் தாமறிந்தன போலவும் , வடமொழியினின்றுமே தமிழிற்கு அவை வந்தன போலவும் காட்டினர்." என்பது முற்றிலுமாக உண்மை என்று நிறுவும் நூலாக திரு.நாகசாமியின் "TIRUKKURAL - An Abridgement of Sastras" நூல் இருக்கின்றது.

ஆரிய தரும சாத்திரங்களான மனுசாத்திரம் உள்ளிட்ட நூற்களின் தொகுப்பே திருக்குறள் என்று நிறுவும் பொருட்டு நூல் எழுதிய ஆரியப் பிராமணர் திரு.நாகசாமி வாழையடி வாழையாக வந்த ஆரியக் கூத்தாடிகளின் மரபினில் உதித்த ஒப்பற்ற ஆரியக்கூத்தாடியாகச் செயலாற்றியுள்ளார் என்றால் மிகையன்று.

எல்லாம் சரி, "தீக்குறள்" என்று திருக்குறளைத் தூற்றிய மகாப்பெரியவா-வின் படத்தைப் போட்டு "TIRUKKURAL - An Abridgement of Sastras - Dr. R.Nagaswamy" என்று அன்னாரது அடிப்பொடி நூல் வெளியிடுவது ஏன் என்பதுதான் நம்முன் தொக்கி நிற்கும் கேள்வி. சங்கராச்சாரியின் அடிப்பொடியான திரு.நாகசாமிப்பிராமணர் தமது ஆரியச்சாதி மேலாண்மையை நிறுவ , திருக்குறள் மனு அதர்ம சாத்திரங்களின் தொகுப்பு என்று காட்டும் முயற்சியில் தோற்றுக் கேவலப்படுகின்றார் , அவ்வளவே! அண்ணல் அம்பேத்கார் அவர்களுக்கே காவி வண்ணம் பூசிய சக்திகள் , திருக்குறளுக்குக் காவிவண்ணம் பூசும் 'Painting Contract'-ஐ திரு.நாகசாமிக்குத் தந்துள்ளதாகவும் , வேலையை முடித்தால், அதற்குக் கூலியாக 'பத்மவிபூஷன்' பட்டமும், பணமுடிப்பும் தரப் பரிந்துரைப்பதாகக் கூறப்படும் குற்றச்சாட்டை மெய்ப்பிப்பதுபோல், இந்நூல் தயாரானதும் திரு.நாகசாமிக்கு 'பத்மவிபூஷன்' வழங்கப்பட்டிருக்கிறது. 'Operation Success! Patient is Dead, Contract is Executed, but Building got Collapsed' என்பதுபோல், "நூல் தயார்! நோக்கம் பணால்!" என்றாகிவிட்டது! தப்பும் , தவறுமான 'I Walk English! I talk English' பட்லர் ஆங்கிலத்தில், 'தர்க்க சாஸ்திரம்' என்றால் கிலோ என்ன விலை என்று கேட்கும் நூலாசிரியரைக் கொண்டு எழுதப்பட்ட இந்நூல், எவ்வித ஆதாரங்களும் தாராமல், நூலாசிரியரின் ஆரிய மனம் ஆடும் கூத்தையெல்லாம் முடிவுகளாக அறுதியிடும் போக்கும் , தப்பும், தவறுமான மேற்கோள்களுடன் ஆய்வுநூல் என்பதற்கான எந்த வரையறையும் பின்பற்றப்படாத வகையில் எழுதப்பட்டுள்ளது. 1963-ல் திருக்குறளைத் 'தீக்குறள்' என்று "திருவாய்" மலர்ந்த மகாப்பெரியவா சந்தித்த கேவலத்தைவிடப் படுகேவலமான நிலையைத்தான் ஆரிய மேலாண்மைக் கருத்தியலுக்கு இந்நூல் பங்களித்துள்ளது என்பதே உண்மை.

திருக்குறளில் பயின்றுவரும் அந்தணன், அரசன், வணிகன், வேளாளன் என்ற நான்கு தமிழர் தொழிற்பிரிவுகளையும் பிராமணன் , சத்திரியன், வைசியன், சூத்திரன் என்று பிறப்பின் அடிப்படையிலான ஆரிய குலப்பிரிவுகளாக மடைமாற்றம் செய்து , திருக்குறளை நால்வருணத்தின் அடிப்படையில்தான் திருவள்ளுவர் அமைத்துள்ளார் என்று பரிமேலழகர் முதல் திரு.நாகசாமி வரையான ஆரியர்கள் கூறும் அபத்தம் ஆதாரமின்றி ஆரிய மேலாண்மையை நிறுவமுயலும் ஆரிய இனப்பற்றின் வெளிப்பாடு மட்டுமே.

தமிழ் மன்னர்கள் சத்திரியர்கள் அல்லர்!
திருக்குறள் சொல்லும் அந்தணர், பார்ப்பனர் ஆகியோர் தூய தமிழர்களே; ஆரியப் பிராமணர்கள் அல்லர் என்று குறள் ஆய்வு-3ல் நிறுவப்பட்டது. இனி, தமிழகத்தில் சத்திரியர் என்று ஒரு குலம் இருந்ததா என்று ஆராய்வோம்.
குல வேற்றுமையின்றி தமிழர் எவரும் நாட்டின் மன்னர் ஆகலாம்!
தமிழ்நிலத்தை ஆண்ட தமிழ் அரசர்கள், பிறப்பு வழிப்பட்ட ஆரிய சத்திரியகுல அரசர்கள் போல், சத்திரிய குலத்தைச் சார்ந்தவர்கள் அல்லர். அரசன் வாரிசு இல்லாமல் இறந்துவிட்டால் , அவ்வரசனின் பட்டத்து யானையின் துதிக்கையில் மாலையைக் கொடுத்து , கோட்டையிலிருந்து வெளியே விடுவர்; குடிமக்கள் எவர் ஒருவர் கழுத்தில் யானையின் கையிலுள்ள மாலை விழுகிறதோ அவரையே அரசனாகும் நடைமுறை பண்டைய மன்னராட்சி இருந்த தமிழக அரசுகளில் இருந்துள்ளது. ஆளும் அரசன் சத்திரியன் என்னும் குலத்தில் தோன்றியவனாக இருந்தால் , சத்திரிய குலத்திலிருந்துதான் அடுத்த அரசனைத் தேர்ந்தெடுத்து இருப்பார்களே அன்றி , வேறு எவரையும் ஏற்றுக்கொண்டிருக்க மாட்டார்கள்.
அவ்வாறு அல்லாமல், யானையால் மாலையிடப்பட்டவர் யாராயினும் (குலம், கோத்திரம், குடி, சூத்திரன் போன்றவை இங்கு கணக்கில் கொள்ளப் படாதவை) அவரே இறைவன் திருவுள்ளப்படி வாய்த்த புதிய அரசன் என்று பயின்றுவந்த நடைமுறை உரக்கச் சொல்லும் சமூகச் சான்று ஒன்றே ஒன்றுதான்! செய்யும் தொழிலால் தமிழர்கள் பல்வேறு சிறப்புகளைப் பெற்றிருந்தாலும் , சாதியற்ற ஒரே இனமாகத்தான் தமிழர்கள் வாழ்ந்திருந்தனர் என்பதுதான் அது! செய்தொழில் வேற்றுமையால் சிறப்பு ஒவ்வாமல் இருப்பினும், தமிழர்கள் அனைவருக்கும் "பிறப்பு ஒக்கும்' என்னும் திருக்குறள் அறமே நடைமுறையில் இருந்த நீதியாகவே இருந்தது என்பதற்கு வலுவான வரலாற்றுச் சான்றாகத் திகழ்கின்றது கரிகாற் சோழன் சோழ அரசனாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட வரலாறு..
கழுமலம் என்னும் சீர்காழியைத் தலைநகராகக் கொண்ட சோழநாட்டின் மன்னன் வாரிசு இல்லாமல் இறக்கவே, மாலையுடன் வீதிக்கு வந்த பட்டத்துயானை, பல ஊர்களைக் கடந்து சென்று, சேர நாட்டின் கருவூரில் வாழ்ந்திருந்த சாமானியன் கரிகாலன் கழுத்தில் மாலையிட்டதால் , சோழ மன்னனாக முடிசூட்டப்பட்டுக் கரிகாற்சோழன் ஆனான்; ஆயினும் கரிகாலன் பிறந்த குலம் குறித்த எக்குறிப்பும் வரலாற்றில் இல்லை; பிறப்பால் தமிழன் ஒரே இனம் என்ற தகுதிப்பாடே அக்காலத்தில் போதுமானதாக இருந்திருக்கிறது.
காவிரி பெருக்கெடுத்தால் துள்ளுமிடமான கொள்ளிடத்தின் குறுக்கே காலத்தை வென்று நிற்கும் கல்லணையைக் கட்டியதால் வரலாறு இவனைக் கரிகால் பெருவளத்தான் என்று கொண்டாடுகின்றது! (காவிரியைக் கன்னடர்களிடம் அடகுவைத்த 'கரிகாலனை(காலா'-வை) இங்கு குறிப்பிடவில்லை)
பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றான முன்றுரையனார் இயற்றிய பழமொழி நானூறு பாடல் எண்.62 ஒருவருக்கு வரவேண்டிய நன்மைகள் வந்தே தீரும் என்னும் நல்லூழ் விளக்கம் சொல்லும் போக்கில் இவ்வரலாற்றுச் செய்தியை வெளிப்படுத்துகிறது.

சீகாழியின்கண் கட்டப்பட்டிருந்த பட்டத்து யானை, கருவூரின்கண் இருந்த சிறப்புடையவனாகிய கரிகாலனின் கழுத்தில் மாலைசூடி, அவனைக் கரிகாற்சோழனாக்கி, சோழ அரசுரிமையைப் பெறவைத்தது; ஆகையினால், ஒருவன் சிறந்த பொருட்களை, வேண்டினாலும் வேண்டாவிட்டாலும், அவன் அப்பொருட்களை அடைதற்குரியவனாயின், அந்நன்மைகள் அவனுக்கு வந்தே தீரும் என்கின்றது முன்றுரையனாரின் பழமொழி அறுபத்தி இரண்டாம் பாடல்.

கழுமலம் - இது சோழநாட்டுள்ளதோர் ஊர். கருவூர் - இது சேரநாட்டுள்ளதோர் ஊர் ; இவ்விரண்டும் இடையே உள்ள பெருந்தொலைவால் பிரிக்கப்பட்டனவாயினும் , ஊழ், கருவூரிலுள்ள கரிகால் பெருவளத்தானைச் சோழ அரசனாக்கியது.

இப்பாடலில், 'விழுமியோன்' என்றது, சிறுவனாக அரியணை ஏறிய கரிகாற்சோழன் , ('இளமை நாணி முதுமை எய்தி, உரைமுடிவு காட்டிய வுரவோன்' ஆக,) நீதிமன்றத்துக்கு முதியவர் வேடமணிந்து சென்று, நல்லதீர்ப்பு வழங்கிய தன்மையைக் கருத்தில் கொண்டு சொல்லியதாகும்.

கரிகால் சோழன் மிகச்சிறிய வயதிலேயே அரசனாகிவிட்டவன். போதுமான அனுபவம் இல்லாவிட்டாலும் அவனுக்குப் புத்திக் கூர்மை அதிகம். ஒருநாள் , கரிகாலனின் சபையில் ஒரு சிக்கலான வழக்கொன்று வந்தது. மன்னன் என்ற முறையில் முறைப்படி வழக்கை விசாரித்துத் தீர்ப்புச் சொல்லத் தயாரானான் கரிகாலன். மன்னனானாலும் , வயதில் மிகவும் இளையவன் என்பதால் , அந்த வழக்கைத் தொடுத்தவர் , மறுத்தவர் இருவருமே வழக்கைச் சொல்லத் தயங்கினர். புத்திகூர்மையுடைய கரிகாலன் அவர்கள் தயக்கத்தைப் புரிந்துகொண்டு , 'நல்லது, நீங்கள் இருவரும் நாளை வாருங்கள் , மிகவும் சிக்கலான இந்த வழக்கை விசாரிப்பதற்காக அனுபவசாலியான ஒரு நீதிபதியை அனுப்பிவைக்கிறேன்' என்றுகூறி, அவையை ஒத்திவைத்தான்.

கழுமலத்தில் யாத்த களிறும் கருவூர்
விழுமியோன் மேற் சென்றதனால் - விழுமிய
வேண்டினும் வேண்டா விடினும் உறற்பால
தீண்டா விடுதல் அரிது - பழமொழி 62 (முன்றுரையனார்)

வழக்குத் தொடுத்தவர்-மறுத்தவர் ஆகியோர் மறுநாள் மீண்டும் அவைக்கு வந்தார்கள். நீதிபதி இருக்கையில் அமர்ந்திருந்த தலைமுடி முழுவதும் நரைத்த முதியவர் , வழக்கை விசாரித்து , இருதரப்பும் ஏற்றுக்கொள்ளும் சரியான தீர்ப்பு வழங்கினார்.

'இளமை நாணி முதுமை எய்தி , உரைமுடிவு காட்டிய வுரவோன்

தனது இளம் வயதின் காரணமாகத் தன்னிடம் வழக்குரைக்கத் தயங்கிய மக்களின் உணர்வுக்கு மதிப்பளித்து, முதியவர் வேடமணிந்து வந்து சரியான தீர்ப்புச் சொன்னான் கரிகாற் சோழன்.

குலத்தொழில் கல்லாமலேயே கைவரும் என்கிறது பின்வரும் பழமொழி நானூறின் இருபத்தி ஒன்றாம் பாடல்.

உரைமுடிவு காணான் இளமையோன் ; என்ற
நரை முது மக்கள் உவப்ப … நரை முடித்துச்
சொல்லால் முறை செய்தான் சோழன், குல விச்சை
கல்லாமல் பாகம் படும் - பழமொழிநானூறு-21,முன்றுரையரையனார்

சோழ மன்னனுக்கு மகனாகப் பிறக்காது , பட்டத்து யானையால் மாலையிடப்பட்டு, சோழமன்னனான கரிகாலனுக்கு, "குலவிச்சை கல்லாமல் பாகம் படும்" என்று முன்றுரையனார் பாடியது பலருக்கும் முரணாகத் தோன்றலாம். கரிகாற்சோழன் வாரிசு இன்றி இறந்த சோழமன்னனின் வாரிசாக பட்டத்து யானையால் மாலைசூட்டப்பட்டு மன்னன் ஆனான் என்று முன்றுரையனாரே பாடியுள்ளதால் , இங்கு 'குலம்' என்பது 'ஏற்றுக்கொண்ட தொழில் சூழல்' என்ற பொருளில் கவிஞரால் எடுத்தாளப்பட்டுள்ளது என்பதை ஊகித்து உணர முடியும்;

சில திறமைகள் கல்வியாலோ , அனுபவத்தாலோ மட்டும் வருபவை அன்று ; அந்தந்தக் தொழிற்சூழல் அல்லது குடும்பச் சூழலில் வளர்கிறவர்களுக்குத் தானே அமையும்.

சூத்திரன் . . அந்தணன் என்ற நால்வருண முறை தமிழ் மண்ணில் நடைமுறையில் இருந்திருந்தால் யாரை வேண்டுமானாலும் பட்டத்துயானை மாலையிட்டு அரசனைத் தேர்ந்தெடுக்கும் முறை

நடைமுறையில் இருந்திருப்பது சாத்தியமில்லை; சத்திரிய குலத்திலிருந்து ஒருவர் என்றே சங்கப்பாடல்கள் அமைந்திருக்கும்.
தமிழர் பூணூல் அணிந்ததில்லை!
ஆரியப் பண்பாட்டில், சூத்திரரைத் தவிர, ஏனைய மூவரும் பூணூல் அணியும் துவிஜர் என்னும் இருபிறப்பாளர்கள். ஆனால், தமிழகத்தில், ஆரியப் பிராமணர்களும், கோயில் பூசகர்களும் (அந்தணர், பார்ப்பார்) மட்டுமே பூணூல் அணிந்ததாகச் சான்றுகள் இலக்கியங்களில் காணப்படுகின்றதே தவிர , அரசரும், வணிகரும் பூணூல் அணிந்ததாக சங்க இலக்கியங்கள் எதிலும் சான்றுகள் காணப்படவில்லை.
தமிழர் அனைவரும் அரசுரிமை பெற்றவர்கள்!
மேலும், தமிழக சமுதாய அரசியல் நிலைகளில் வேளாளர் அரசர்க்கு சமமானவர் என்பதை அரசர்க்கும் , வேளாளர்க்கும் இடையே மணவுறவு உண்டு என்பதிலிருந்தும் , வணிகர்க்கும், வேளாளர்க்கும் அரசுரிமையுண்டு என்று தொல்காப்பியம் கூறுவதிலிருந்தும் அறிந்துகொள்ளலாம்.

வில்லும், வேலும், கழலும், கண்ணியம்,
தாரும், மாலையும், தேரும், மாவும்,
மன் பெறு மரபின் ஏனோர்க்கும் உரிய - தொல்காப்பியம்: பொருளதிகாரம்:மரபியல்: 1573.

(வில்லு முதலாகச் சொல்லப்பட்டன எல்லாம் மன்னனாற் பெற்ற மரபினால் வணிகர்க்கும் , வேளாளர்க்கும் உரியன)
வணிகர்கள் என்போர் உலகெங்கும் காணப்படுபவர் ; தமிழகத்தில் வேளாளரே வணிகராகவும் இருந்துள்ளதால், அப்படியொரு தனி இனம் தமிழ் மண்ணில் இருந்ததில்லை.
அரசர் உள்ளிட்ட அனைவரும் தமிழினம்
எனவே, பிராமணர் என்ற ஒரு இனத்தவரைத் தவிர , சத்திரிய, வைசிய, சூத்திர குலத்தவர்கள் தமிழ் மண்ணில் ஒருபோதும் வாழ்ந்திருக்கவில்லை. அரசர்கள் உள்ளிட்ட ஏனையத் தமிழர்கள் அனைவரும் ஒரே தமிழ் இனம் என்பதுவே சரித்திரம் சொல்லும் செய்தி. ஆனாலும் , ஆரியப் பிராமணர்கள், வந்தேறிய தமிழ் மண்ணில், தாங்களே முதற்தரக் குடிகள்; தமிழர்கள் இழிந்தோர் என்ற கருத்தியலை நிலைநாட்டும் ஒரே நோக்கத்தோடு, நால்வருண சநாதன தருமம் என்று தமிழகத்தில் நடைமுறையில் இல்லாத ஒன்றை, இருப்பதாகக் காட்டுவதற்காக, தொடர்ந்து பொய்ப்பிரச்சாரம் செய்து வருகின்றனர். தமிழ் மண்ணில் வந்தேறிய ஆரியர்களுக்கும், பூர்வகுடிகளான தமிழர்களுக்கும் இடையில் தொடர்ந்து இருந்துவரும் இனப்போராட்டத்தின் அடையாளமே 'நால்வருணம்' என்னும் ஆரியக் கருத்தியல் வன்முறை.
எனவே, நால்வருணம் தமிழ் மண்ணில் எக்காலத்தும் நடைமுறையில் இருந்ததில்லை ;
தொல்காப்பியரின் காலத்துக்கு முன்பே ஆரியப் பிராமணர்கள் தமிழ் மண்ணில் குடியேறிவிட்டனர் ;
தொல்காப்பியரின் காலத்திலேயே அந்தணர் , பார்ப்பனர், ஆரியப்பிராமணர் என்னும் மூவகை மக்களுக்கும் உள்ள வேறுபாடு தெளிவாக இல்லாத நிலை இருந்ததோ என்ற ஐயம் உண்டு ; மக்களின் பொதுப்புத்தியில் அந்தணர் என்பவர் ஆரியப் பிராமணரோ என்ற எண்ணம் இருந்திருக்கலாம்.
அந்தணர் என்போரின் அடையாளம் என்ன என்பது குறித்துத் தொல்காப்பியர்

"நூலே, கரகம், முக்கோல், மணையே,
ஆயும் காலை, அந்தணர்க்கு உரிய" - தொல்காப்பியம்: மரபியல்: 1560

என்று ஐயத்துடனேயே ஆராய்ந்து பார்க்கும்போது என்று பொருள்படும் 'ஆயும் காலை' என்னும் முன்னொட்டுக் கொடுத்து அடையாளம் காட்டுகிறார். ஆரியப் பிராமண இல்லறத்தார்

முக்கோல்களையோ, கரகத்தையோ பயன்படுத்தியவர்கள் அல்லர் என்பதால் , இங்கு, 'அந்தணர்' என்னும் சொல்லால் துறவியரையே தொல்காப்பியர் குறித்திருக்க வேண்டும் என்பது தெளிவு.
வள்ளுவரின் குறள் நால்வருணத்தைப் பின்பற்றியது என்பதற்கான அகச்சான்று திருக்குறளிலும் இல்லை.
தமிழ் மண்ணில் வந்தேறிய மூவாயிரம் ஆண்டுகளில் பிராமணர் என்னும் ஒற்றை ஆரிய சாதியின் இருப்பை வலுவாக்கிக் கொண்டனரே தவிர , சூத்திரர் என்று ஆரியர்கள் வாய்கூசாமல் சொல்லும் வேளாளர்கள் வகுப்பைச் சார்ந்தவர்கள் , அரசியல், சமூக தளங்களில் ஆரியப் பிராமணர்களுக்கு இணையாகவும், பல இடங்களில் உயர்வான நிலைகளிலும் தொடர்ந்து இருந்து வருவதைத் தடுக்க முடியவில்லை என்பதோடு, கல்வித்தகுதியில் குறைவு பட்டால் , இழிநிலை அடைந்து கடைநிலை ஊழியம் செய்யவேண்டிய கட்டாயத்துக்கும் ஆளாகினர்.(காண்க பின்வரும் நறுந்தொகை- 37ம் பாடல்)
கல்வியறிவு அற்ற முட்டாள்களே ஆனாலும் , பிறப்பால் ஆரியப் பிராமணரானால், சமூகத்தின் அனைத்து நிலை மக்களையும்விட உயர்ந்த நிலையில் இருப்பதற்கு ஒப்புக்கொள்ளும் மனுதரும , சநாதன தரும விதிகளை வட இந்திய சமூகம் ஏற்றுக்கொண்டதைப் போல் , தமிழ்ச் சமூகத்தை ஏற்றுக்கொள்ளவைக்க ஆரியப் பிராமணர்களால் இயலவில்லை.
உதாரணமாக, பதினைந்தாம் நூற்றாண்டில் அதிவீரராம பாண்டியன் அல்லது குலசேகரப்பாண்டியன் என்பவரால் இயற்றப்பட்ட அறநூலான நறுந்தொகையின் 36-39 வரையுள்ள நான்கு பாடல்கள், கல்வியே ஒருவனுக்குக் குலம் தரும் ; நால்வருணப் பிறப்பன்று என்று தெளிவாகக் கூறுகின்றன.
தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே தமிழகம் வந்தேறிய ஆரியர்களால் , பதினைந்தாம் நூற்றாண்டுவரையிலும் கூட, நால்வருணத்தைத் தமிழ் மண்ணில் திணிக்க முடியவில்லை ;
கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதரா கும்மே. நறுந்தொகை- 36
கல்வியை முறையாகக் கற்காத ஒருவன் தன் குலப்பெருமை பேசுவது , நெல்மணிகளுக்கிடையில், உள்ளீடாகிய அரிசி இல்லாத பதர்நெல்லுக்கு ஒப்பாகும் என்கின்றது மேற்கண்ட நறுந்தொகைப் பாடல் ; பதர்நெல் எவ்வாறு காற்றினால் தூற்றப்பட்டுக் குப்பைக் கூளத்துடன் கிடக்குமோ , அதுபோல் குலப்பெருமை பேசும் ஒருவன் வீணாவான். நால்வருணத்தைப் பின்பற்றும் ஆரியப் குலப் பிராமணன் ஆக இருந்தாலும், கல்வியறிவு இல்லாதவனாக இருப்பானேயானால் , அவன் கீழ்மகனாகவே வாழ்தல் வேண்டும் என்கின்றது கீழ்க் காணப்படும் நறுந்தொகைப் பாடல்.
நாற்பாற் குலத்தின் மேற்பால் ஒருவன்
கற்றிலன் ஆயிற் கீழ் இருப்பவனே. நறுந்தொகை-37
நால்வருண சாதி பாராட்டும் ஆரியப் பிராமணனும் கற்ற கல்வித் தகுதி ஒன்றினால் மட்டுமே ஏனையத் தமிழர்களால் ஏற்கப்பட்டனர்; கல்வித்தகுதி இல்லாவிட்டால் ஆரியப் பிராமணனும் வயிற்றுப் பிழைப்புக்காக கீழ்மட்ட வேலைகளைச் செய்து கீழ் நிலையில் இருத்தல் வேண்டும் என்பதே தமிழ் மண்ணின் பொதுவிதியாகும்.அதுமட்டுமல்ல , எத்தகைய தாழ்ந்தகுடியில் பிறந்திருந்தாலும் , யாவராயிருப்பினும், கல்வியறிவில் சிறப்புற்றிருந்தால் அவரை மேலே வருக என்று உயர்த்தும் தமிழ் சமூகம் என்கின்றது 38ம் நறுந்தொகைப் பாடல்; 39ம் நறுந்தொகைப் பாடலோ அறிவுடையவனையே அரசனும் விரும்புவான் என்கின்றது.
எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியிற் கற்றோரை மேல்வருக என்பர். நறுந்தொகை- 38
அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும். நறுந்தொகை- 39

மனுதருமம் "முட்டாளாயினும், பிராமணனை ஏனையோர் வழிபடவேண்டும். ஏனெனில், முட்டாளானாலும், பிராமணனே சிறந்த தெய்வம்!" என்கின்றது. ஆனால் திருக்குறளோ இத்தகைய கல்லாதோர் எவராயினும், அவர்கள் பெற்ற இரு கண்களும், முகத்தில் உள்ள இரண்டு புண்களாகவே கருதப்படும் என்கிறது.

கண்ணுடையர்என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர். -குறள் 393.

இக்குறள் மனுதர்ம விதிக்கு முற்றிலும் எதிரான குறள். திரு.நாகசாமி போன்ற ஆரியப் பார்ப்பனர்கள் இக்குறளைப் படித்தல் நலம்.

சான்றோர்களாகிய கல்விமான்களே தமிழக அரசர்களால் போற்றப்பட்டனர் என்பதுவும், அத்தகைய கல்விமான்களாக இருந்ததாலேயே சில-பல ஆரிய பிராமணர்கள் உயர்நிலை பெற்றனரே அல்லாமல், பிராமணர்கள் என்னும் பிறவிமேன்மைக்காக அன்று என்பது தெளிவு.

திருக்குறள் நால்வருண சாதிமுறையைப் பின்பற்றிய நூல் அன்று!

எனவே, மனுதர்ம சநாதன சாதி படிநிலை அமைப்பு தமிழக அரசர்களால் பின்பற்றப்படவில்லை; வடஇந்திய ஆரிய நாடுகளைப் போல் அல்லாமல், திருக்குறள் சொல்லும் நீதிமுறையைப் பின்பற்றிய தமிழகம், கல்வியை அடிப்படையாகக் கொண்ட நெகிழ்வுத் தன்மையுடன் விளங்கிற்று என்பதையே தமிழக வரலாற்றுச் சான்றுகள் தருகின்றன. எனவே, திருக்குறள் ஒருபோதும் நால்வருண சாதிமுறையைப் பின்பற்றிய நூல் அன்று என்பதே முடிந்த முடிவான உண்மை.:

https://yarl.com/forum3/topic/213762-

குறள்நெறி



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



அறிஞர் க.த.திருநாவுக்கரசு (1931- 1989)

பொறுப்பாசிரியர் -மறைமலை இலக்குவனார் -
இணையாசிரியர் -முனைவர் தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

அறிஞர் க. த. திருநாவுக்கரசு (1931- 1989) தமிழ்ப் பேராசிரியர் , தமிழ் எழுத்தாளர் , அறிஞர் , திற னாய்வாளர் , மொழிபெயர்ப்பாளர் எனப் பல்துறைவித்தகம் வாய்ந்தவர் . இவர் வரலாறு , கல்வெட்டு , மொழியியல் , சமூகவியல் , மானிடவியல் , தத்துவம் போன்ற பல்வேறு துறைகளில் புலமை பெற்றவர் . சென்னை பச்சையப்பன் கல்லூரியில் படித்தவர் . முனைவர் மு. வரதராசனின் படைப்பிலக்கியங்களை ஆய்வுசெய்து முனைவர் பட்டம் பெற்றவர் . இவருக்கு சாகித் திய அகாடமி நிறுவனம் 'திருக்குறள் மணி' என்னும் பட்டம் வழங்கிப் பாராட்டியது . பின்னர் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் பேராசிரியராகப் பணி புரிந்தார் . 1974-இல் இவர் எழுதிய திருக்குறள் நீதி இலக்கியம் என்ற இலக்கிய த்திறனாய்வு நூலுக்குச் சாகித்திய அகாதமி விருது வழங்கப்பட்டது .

எழுதியுள்ள நூல்கள் :

(இப் பட்டியல் முழுமையானதல்ல )

ஆங்கிலம் :

1. Studies in Tamil and Greek Literature
2. Chieftains of the Sangam age
3. A Critical study of Dr. Mu. Va's works

தமிழ் :

1. சிந்துவெளி தரும் ஒளி (1959)
2. வாழ்வும் வரலாறும் (1960)
3. தமிழர் நாகரிக வரலாறு - விடிவெள்ளி (1962)
4. தம்மபதம் , (1971), பாரி நிலையம் , சென்னை .
5. முதலாம் ராசராச சோழன் (1975) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் , சென்னை
6. வரலாற்று வஞ்சி (1976)
7. திருக்குறள் நீதி இலக்கியம் (1977), சென்னை பல்கலைக்கழகம் , சென்னை .

8. அறிஞர் அறவாழி (1978) மணியகம் , சென்னை
9. இலங்கையில் தமிழ்ப்பண்பாடு (1979)
10. பர்மாவில் தமிழ்ப்பண்பாடு (1982)
11. தாய்லாந்தில் தமிழ்ப்பண்பாடு (1982)
12. தமிழ் நிலவு
13. திருக்குறளும் இந்திய அறநூல்களும் ,
14. சான்றோர் கண்ட திருவள்ளுவர்
15. அடிமை விலங்கு
16. பழந்தமிழ் மொழியியல்
17. வாழ்வும் இலக்கியமும்
18. சிந்துவெளி எழுத்து வடிவங்கள் (1982)
19. திருக்குறள் கற்பனைத் திறனும் நாடக நலனும் , (1982) சென்னை ப் பல்கலைக்கழகம் , சென்னை .
20. தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு , (1987) , உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் , சென்னை .
21. திருக்குறள் நூலடைவு , தமிழுறவு வெளியீடு , சென்னை
22. தொல்காப்பிய நூலடைவு , தமிழுறவு வெளியீடு , சென்னை
23. தமிழ்ப்பண்பாடு , (2009) உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் , சென்னை .
24. ஒளி விளக்கு
25. மானிடவியல் சொல்லகராதி , (1972), தி.தெ.சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் , சென்னை .

மொழிபெயர்ப்பு :

1. ராஜாராம் மோகன் ராய் : இந்திய இலக்கிய சிற்பிகள் வரிசை , சாகித்ய அகாதெமி
2. ஜீவானந்த தாஸ் : இந்திய இலக்கிய சிற்பிகள் வரிசை , சாகித்ய அகாதெமி
3. லட்சுமிநாத பெஸ்பருவா : இந்திய இலக்கிய சிற்பிகள் வரிசை , சாகித்ய அகாதெமி

## அறிஞர் க.த.திருநாவுக்கரசு-தன்னேர் இலாத தமிழறிஞர்

--புதுகை மு.தருமராசன்

பாரத மாநில வங்கியின் அதிகாரியாகவும் அதிகாரிகள் சங்கத்தின் துணைத்தலைவராகவும் அச் சங்க இலக்கிய அணியின் அமைப்பாளராகவும் அரும்பணியாற்றிப் பணிநிறைவு பெற்ற புதுகை மு.தருமராசன் அவர்கள் கடந்த பத்தொன்பது ஆண்டுகளாக " புதுகைத்தென்றல்" என்னும் இலக்கியத் திங்களிதழைச் சிறப்பாக நடத்திவருகிறார்.சிறந்த இதழியலாளராக மட்டுமின்றிச் சிறந்த கட்டுரையாளராக, சொற்பொழிவாளராக,இலக்கியநிகழ்வுகளின் அமைப்பாளராகப் புகழ் பெற்றுள்ளார்.க.த.தி அவர்களின் மாணவர் என்பதைப் பெருமிதத்தோடு என்றும் தெரிவித்துக்கொள்ளும் மு.தருமராசன் அவர்களின் இக் கட்டுரை ஆசிரியரைப் பற்றிய மாணவருன் மனப்பதிவாக அமைகிறது.

தளர்விலாத தமிழ்ப் பணியிலும், அந்த முழுமையிலிருந்து தனிமைப்படுத்திக்கொள்ள இயலாத தனி வாழ் விலும், புதியதோர் அத்தியாயத்தைத் தொடங்க வேண்டிய நிலையில், திடீரென இயற்கை எய்திய தன்னேரிலாத தமிழறிஞர், உலகத் தமிழாராய்ச்சி நிலைய இயக்குநராகப் பணியாற்றிய டாக்டர் க.த. திருநாவுக்கரசு அவர்கள். இளமையிலேயே ஏற்பட்ட இயல்பான தமிழார்வத்தாலும், மாணவப் பருவத்தில் தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தின் தாக்கத்தால் பெற்ற உந்துதலாலும் அன்னைத் தமிழை ஐயந்திரிபறக்கற்று நாளும் தமிழுக்காக உழைத்து, தமிழால் உயர்ந்தும். தமிழை உயர்த்தியும் வாழ்ந்த தகைமையாளர் பேராசிரியர் டாக்டர் க த திருநாவுக்கரசு அவர்கள்

1954-ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக் கழகத் தேர்வில் முதல் வகுப்பில் முதனிலை பெற்றுத் தேர்ச்சியுற்று அதற்காகப் 'பிராங்கிளின் ஜில்' தங்கப்பதக்கத்தைப் பெற்றது உட்பட, பல்கலைக் கழகங்களில் பல்வேறு பட்டங்களையும், பட்டயங்களையும் பெற்றுச் சிறந்த டாக்டர் க.த. தி அவர்கள் தமிழ் மொழியில் மட்டுமின்றி, ஆங்கிலம், சமஸ்கிருதம். இந்தி முதலிய மொழிகளிலும் பயிற்சி பெற்றவராவார்.

புதுக்கோட் டை மன்னர் கல்லூரியில் பயிற்றாசிரியராகப் பணி தொடங்கிய பேராசிரியர் க த தி அவர்கள் பல்வேறு நிலையங்களில் பொறுப்புகளையும் பலப்பல பதவிகளையும் வகித்துள்ளார்.

பேராசிரியர் திரு க.த. திருநாவுக்கரசு அவர்கள் தொல் காப்பியத்திலும், சங்க இலக்கியத்திலும், திருக்குறளிலும் பேரீடுபாடு கொண்டவராவார் அவற்றில் வல்ல அறிஞர் பலரை நாடி, அவர்களிடம் பலமுறை அவற்றைப் பாடம் கேட்டு. ஆழமான புலமையைப் பெற்றிருந்தார்.இதைப் போன்றே, திருமூலரின் திருமந்திரம், சித்தர்களின் பாடல்களையும் தக்கார் வாயிலாக அவர் ஐயந்திரிபறக்கற்றவர்.

இலக்கண, இலக்கியப் புலமையைப் பெற்றதோடு நிற்காமல், இலக்கியத் திறனாய்வு, இலக்கிய ஒப்பாய்வு, மொழியில், சமூகவியல், பண்டை உலக நாகரிக வரலாறு, இந்திய இயல் (Indology) இந்தியத் தத்துவமும் அறவியலும், கல்வெட்டியல், நாடகம். மொழிபெயர்ப்பியல் போன்ற பல்வேறு அறிவுத்துறைகளில் ஆர்வத்தோடு அவர் பயிற்சி பெற்று ஆய்வுகள் நடத்தி வந்தார். எந்நேரமும் திருக்குறள் ஆராய்ச்சியிலும், பண்பாட்டு வரலாற்றிலும் அவர் பேரார்வமும் இடையறாத ஈடுபாடும் காட்டி வந்தார்.

பள்ளி மாணவராக இருந்த காலம் முதற்கொண்டு, சிந்துவெளி நாகரிக ஆராய்ச்சியில் அவர் மூழ்கித் திளைத்து வந்தார். முதன் முதலில் நூல் ஒன்றை எழுதி, அவர் 1959-இல் வெளியிட்டது 'சிந்துவெளிப் பண்பாட்டைப்' பற்றியதாகும். தொடர்ந்து முப்பது ஆண்டுகளுக்கு மேலாக, சிந்துவெளி எழுத்துவடிவ ஆராய்ச்சியில் பேராசிரியர் திரு. க.த. திருநாவுக்கரசு அவர்கள் பல பரிசோதனைகள் நடத்தி வந்தார். இது தொடர்பாக அவர் வெளியிட்டுள்ள நூல்கள் இரண்டு அவை:

1. சிந்துவெளி தரும் ஒளி, வள்ளுவர் பதிப்பகம், புதுக்கோட்டை, 1959.
2. சிந்துவெளி எழுத்து வடிவங்கள், மணியகம். சென்னை 1981.

சிந்துவெளி எழுத்துவடிவ ஆராய்ச்சியில் மூழ்கித் திளைத்திட்ட ஒரேவொரு தமிழறிஞர், டாக்டர், க.த. திருநாவுக்கரசு அவர்கள் என்பதை அறிவுலகம் ஒப்பும். இந்த ஆராய்ச்சியில் அவர் கண்ட முடிவுகளை, ஒரு நூலாக வெளியிட முயன்று வந்தார்.

1974-ல் சாகித்திய அகாதமியின் பரிசினைப் பெற்ற 'திருக்குறள் நீதி இலக்கியம்' எனும் பேராசிரியர், திரு.க.த. திருநாவுக்கரசு அவர்களுடைய நூல், திருக்குறள் ஒப்பாய்வுத் துறையில் தலைசிறந்த நூலாக அறிஞர்களால் போற்றப் படுகிறது. 'Studies in Tamil and Greek Literature' எனும் அவருடைய ஒப்பாய்வு நூல் (1980) மேற்கு நாட்டு அறிஞர்களின் பாராட்டைப் பெற்றதாகும்.

ஆழ்ந்த புலமையும், ஆராய்ச்சித் திறனும், வளமான சிந்தனைப் போக்கும், எழுச்சிமிகு எழுத்து நடையும் தனி முத்திரை பதித்துவர, மூல நூல்கள் பலவற்றைப் படைத்தளித்த முற்போக்கு எழுத்தாளரான பேராசிரியர் க.த. திருநாவுக்கரசு அவர்கள், மொழி பெயர்ப்புக் கலையிலும் தனிச் சிறப்புடன் திகழ்ந்தார்.

தமிழ்நாட்டு அரசு நடத்தி வரும் மொழி பெயர்ப்புத் தேர்வில், 1959-இல் பேராசிரியர் திரு. க.த. தி. தேர்ச்சி பெற்றுள்ளார். தமிழ் வெளியீட்டுக் கழகத்திற்காகவும், சாகித்திய அகாதமிக்காகவும் ஐந்து நூல்களை அவர் மொழி பெயர்த்துள்ளார். அவற்றள், ஜி.எம். டிரெவெலியனின்" இங்கிலாந்தின் வாலாறு" எனும் தமிழாக்க நூல், அந்நாலை, 1965-ஆம் ஆண்டு சித்திரை முதல் நாள் அன்று, வெளியிட்டுச் சிறப்புரையாற்றிய சர்.சி.பி. இராமசாமி ஐயர் அவர்கள், '"டிரெவெலியனின் ஆங்கில நடை மிடுக்கானது; சில சமயங்களில் நெருடலாகவும் இருக்கும். இந்தத் தமிழ் நூலின் நடை, டிரெவெலியனை விஞ்சும் வகையில் எளிமையும், தெளிவும்,

உயிரோட்டமும் உடையதாக இருக்கிறது இந்தப் பெரிய நூலை, ஒரே இரவில், ஆறு, அல்லது ஏழு மணி நேரத்தில், நான் படித்து முடித்து விட்டேன், கையில் எடுத்த நூலை கீழே வைக்க மனம் வராமல், விடியற்காலை நான்கு மணி வரையில் தொடர்ந்து படித்தேன்", என்று பாராட்டிப் பேசினார்கள்.

தமிழ் இலக்கியத்திலிருந்து சுவை மிக்க 120 கவிதைகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து, ருஷியாவில் இருந்த அவருடைய மாணவர் திரு. செம்பியன் (Rudin) அவர்களுக்கு அனுப்பினார். செம்பியன் ருஷிய மொழியில் மொழிபெயர்த்து, இருமொழி பெயர்ப்பு நூலாக அதனை 1970 இல் வெளியிட்டுள்ளார்.

'திருக்குறள்மணி', 'திருக்குறள் சித்தர்', 'குறள்நெறித் தோன்றல்' போன்ற பல்வேறு பட்டங்களையும் பாராட்டு தல்களையும் பெற்ற பேராசிரியர் க.த. தி. அவர்களிடத்தில் "திருக்குறளில் ஒரு பேரீடுபாட்டு உணர்ச்சி வளர்ந்து, செழித்துத் தழைத்து வந்திருக்கிறது". அவர் திருக்குறளை வாழ்க்கை நெறிக்குரிய வழிகாட்டும் வான் பொருள் நூலாகப் போற்றிப் பின்பற்றக்கூடிய ஒரு சூளுரை எடுத்துக்கொண்டு அதை வாழ்க்கையில் கடைப்பிடித்து வந்தார். திருக்குறளைப் பற்றி விரிவான ஆராய்ச்சி மேற்கொண்டு திருக்குறளின் அருமை பெருமைகளை அனைத்துலக மக்களுக்கும் ஆராய்ச்சியின் அடிப்படையில் எடுத்துரைத்து உலகெங்கும் குறள் நெறியைப் பரப்பும் பணியினை மிக அடக்கமாக. ஆரவாரமின்றிக் கடமை உணர்வோடு மேற்கொண்டு வந்தார்

தமிழன்னைக்குப் புதிய அணிகலன்களைப் பூட்டி மகிழ்வதில் அவர் பேரார்வத்தோடு சாதனைகள் புரிந்து மன நிறைவு கொண்டார். ஆயினும் மொழிக்காகத் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்ட அவருக்கு வற்றாத 'தமிழ்ப்பசி' இருந்தது என்பதை அவரே சொல்கிறார்:

> 'பசித்தவன் பழங்கணக்குப் பார்ப்பான்' என்பது பழமொழி. எனக்குத் தீராத 'தமிழ்ப்பசி' நெடுநாட்களாக இருந்து வருகிறது. அடிக்கடி என்னை நானே "இந்நூற்றாண்டில் தமிழ் மொழி வளர்ந்து இருக்கிறதா?" எனும் கேள்வியைக் கேட்டுக் கொள்வேன்: இலக்கிய ஈடுபாடுடைய தோழர்களையும், நண்பர்களையும் சந்திக்கும் போதெல்லாம், இந்தக் கேள்வியைக் கேட்டுத் தொல்லைப் படுத்துவேன்.
>
> விரும்பத்தகாத இந்த இயல்பு, எப்படியோ என்னிடம் குடிகொண்டு விட்டது.

தமிழகத்தில் மட்டுமின்றி அலைகடலுக்கு அப்பாலும் அவர் ஆராய்ச்சி விரிந்திருந்தது. அதன் பயனாக மலர்ந்த. 'தென் கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு' எனும் நூல் தமிழக அரசின் முதல் பரிசு பெற்ற நூலாகும். அந்த நூலின் இறுதிப் பகுதியில் அவர் எழுதுகிறார்: 'முறைப்படுத்தி முழுமையாக எழுதப்படும் தமிழ் நாட்டு வரலாற்றின் முக்கியமான பகுதியாக 'அலைகடல்களுக்கு அப்பால் மலர்ந்த தமிழ்ப் பண்பாடு' சுடர்விட்டுப் பிரகாசிக்க வேண்டும் என்பது இந்த வரலாற்று, தமிழ் மாணவனின் விழைவார்ந்த விருப்பமாகும்."

தமிழ்நாட்டின் வரலாறு 'முறைப்படுத்தி முழுமையாக எழுதப்பட வேண்டும்' என்பது அவரது இலட்சியப் பணிகளில் ஒன்றாகும்.

ஏற்றுக்கொண்ட பணிகளைச் செம்மையாகவும் சிறப்பாகவும், முழுமையாகவும் செய்யும் திறமையுடைய பேராசிரியர் க.த. தி. அவர்கள், எத்தகைய கருத்தினையும் எளிய நடையில் முறைப்படுத்தி, வகைப்படுத்தி, வகுத்தும், தொகுத்தும் சொல்வதில் வல்லராக விளங்கினார். சாவின் சமீபத்தில் நின்று அவர் நடத்திய தேசியக் கருத்தரங்கில் நிகழ்த்திய வரவேற்புரையில் கூட இந்தப் பாங்கினை நாம் காண முடிந்தது. இந்தியப் பண்பாட்டை ஒரு அழகிய தாமரை மலருக்கு ஒப்பிட்ட அய்யா அவர்கள், அந்தத் தாமரை மலரில் இருக்கும் ஒவ்வொரு இதழும் ஒவ்வொரு மாநில-வட்டாரப் பண்பாட்டைப் புலப்படுத்துவதாகும் என்றார்கள். இந்திய மண்ணில் 32 வகையான துணைப் பண்பாடுகள் செழித்து, சிறந்து விளங்குகின்றன என்பதை, பண்பாட்டு மானிட இயல் ஆராய்ச்சியாளர்கள் கணக்கிட்டு ஆராய்ந்து விளக்கி இருக்கிறார்கள் என்றும், அந்த 32-ஐயும் மூன்று பெரும் பிரிவுகளுக்குள் அடக்கிவிடலாம் என்பதையும் எடுத்துரைத் தார்கள். (திராவிட மொழிகளின் வழி வந்த திராவிடப் பண்பாடு, ஆரிய மொழிகளின் வழிவந்த ஆரியப் பண்பாடு ஆகிய இரண்டும் அந்த மூன்றனுள் அடங்கும்.)

சாகித்திய அகாதமியின் விருது முதல் திரு. வி.க. விருது உட்பட பல்வேறு சிறப்புகளைப் பெற்றவர் டாக்டர் க.த.தி. எத்தகைய பாராட்டும், பட்டங்களும், பரிசுகளும் அவரை இறுமாப்புறச் செய்ததில்லை. மாறாகக் கடமை உணர்வை மேலும் தூண்டுவதாகவே அமைந்தன. எண்ணிறந்த எதிர்காலத் திட்டங்களை அவர் தீட்டி வைத்திருந்தார். செய்து முடித்த பணிகள், செய்துவந்தவை, செய்யவிருந்தவை, என்றும், எழுதி வெளியிட்ட நூல்கள்,அச்சில் இருப்பவை, வெளியிடப் படுவதற்காக எழுதி முடித்தவை என்றும் அவற்றை வகைப்படுத்தி அறியலாம்.

வாழ்ந்த நாட்களில் அவர் ஈட்டிய சாதனைகள் பல. சந்தித்த சோதனைகள் பலப்பல. எண்ணற்ற இடர்ப்பாடுகள் வரினும் அவர் இதயம் இடிதாங்கியாய் நின்று அவற்றைத் தாங்கியது. ஆனால் அவர் உடல்... தளர்வுற்றது; உயிரைத் தப்பவிட்டுவிட்டது.

அவர் படைத்த நூல்கள் காலத்தை வென்று நிலைக்கும்; அவரை நம்மோடும், நம் சந்ததியோடும் வாழவைக்கும்.

பேரறிவுப் பெட்டகமாய்த் திகழும் டாக்டர் க.த. தி. அவர்களின் நூல்கள் மிகச் சிலவற்றிலிருந்து, சிந்தனைக்கு விருந்தாகத் திரட்டப்பட்டுள்ள சில கருத்து மலர்கள் பின்வருமாறு:

தமிழர் நாகரிகம்

“வரலாறு என்பது ஒரு பெருங்கடல். அக்கடலில் தோன்றி மறையும் நாகரிக அலைகள் எண்ணிறந்தன. அவற்றுள் ஒன்று தமிழர் நாகரிகமெனும் அலையாகும். அந்நாகரிக அலைகள்

காலமெனும் கரையோரத்தில் கொண்டுவந்து ஒதுக்கியுள்ள மணிகள் பல. அவை உலகம் உள்ளளவும் மங்காமல் ஒளி வீசி, மன்பதையை மாண்புறச் செய்யும் என்பது திண்ணம். "" - தமிழர் நாகரிக வரலாறு, பக்.5

ஒப்புயர்வற்ற நீதி இலக்கியம்

“நீதி இலக்கிய ஒப்பியல் ஆராய்ச்சியின் பயனாக உலகத்துச் செம்மொழிகளில் உள்ள நீதி இலக்கியங்களுள், திருக்குறள் ஒன்றே தன்னிகரற்ற நீதி இலக்கியமாகத் திகழ்கிறது. என்ற உண்மை புலனாகின்றது. கருத்து வளத்தாலும், அவற்றை எடுத்தியம்பும் முறையாலும், நூலின் வடிவ அமைப்பாலும் திருக்குறள் ஒப்புயர்வற்ற நீதி இலக்கியமாகும். அதற்கு அடுத்த நிலையில் இலத்தீன் மொழியிலுள்ள லுக்கிரிஷஸின் பொருள்களின் இயற்கை'யை நாம் குறிப்பிடலாம். உலக நீதி இலக்கியத்துள் மூன்றாவது இடத்தைக் கன்பூசியஸின் 'நடுவழிக் கோட்பாடு' பெறுகிறது என்று கூறினால், அது தவறாகாது. பார்த்ருஹரியின் ‘நீதி சதகம்' நான்காம் இடத்தையும், கிரேக்க மொழியிலுள்ள 'வேலையும் நாள்களும்' என்ற நீதி இலக்கியம் ஐந்தாவது இடத்தையும் பெறுவதற்குரிய தகுதியும் சிறப்பும் வாய்ந்தனவாக உள்ளன. எனவே, நடுவுநிலையோடு உலகச் செம்மொழி இலக்கியங்களை ஆராய்ந்து பார்ப்பவர்களுக்குத் திருக்குறளைப் போன்று, மனித இனத்திற்கு வழிகாட்டும் ஒளிவிளக்காகத் திகழும் நீதி இலக்கியம் உலகில் வேறெந்த மொழிகளிலும் தோன்றவில்லை என்பது எளிதில் புலனாகும்."- திருக்குறள் நீதி இலக்கியம், பக்.366

திருவள்ளுவர் ஆண்டு

"திருவள்ளுவர் சங்ககாலத்தில் (கி.மு.300 முதல் கி.பி. 300 வரை) வாழ்ந்தவர் என்பது பொதுவாக அறிஞர்களால் ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மையாகும். இந்நூற்றாண்டின் முற்பகுதியில் திருவள்ளுவரின் அருமை பெருமைகளை நினைவூட்டும் வகையில், 'திருவள்ளுவர் ஆண்டு' எனும் சகாப்தத்தினைத் தமிழறிஞர் சிலர் நடைமுறைக்குக் கொண்டு வந்தனர். கி.மு.31-ல் அவர் விண்ணுலகு அடைந்தார் எனும் மரபு வழிச் செய்தியின் அடிப்படையில் அவ்வாண்டினை முதலாகக் கொண்டு "திருவள்ளுவர் ஆண்டு" கணக்கிடப்பட்டு வருகிறது.”சான்றோர் கண்ட திருவள்ளுவர், பக்.5.

திருவள்ளுவரின் காலம் - மறைமலையடிகள் ஆய்வில்!

"மறைமலையடிகளாரின் திருக்குறள் ஆராய்ச்சிப் பணியில் தன்னிகரற்று விளங்குவது திருவள்ளுவரின் காலத்தைக் கணித்து, தமிழருக்கென்று ஒரு சகாப்தத்தை (Era) வரையறுத்துத் தந்துள்ளமையாகும். இந்திய வரலாற்றில் எத்தனையோ சகாப்தங்கள் இடம் பெற்றுள்ளன. ஆனால் தமிழருக்கென்று இது வரையில் சகாப்தம் கண்டவர் யாருமிலர். எனவே, அது ஒரு பெருங்குறையாகவே இருந்து வந்தது. அக்குறையைப் போக்குகின்ற வகையில், யுவ ஆண்டு தைத் திங்கள் ஐந்தாம் நாள் (18.1.1935) திருவள்ளுவர் திருநாள் கழகத்தினர் நடத்திய

திருவிழாவில் தலைமை பூண்டருளிய அடிகள், "கிறித்துப் பிறப்பதற்கு 30 ஆண்டுகட்கு முன் திருவள்ளுவர் பிறந்தார் என்பது நான் ஆராய்ந்து கண்ட முடிவாகும்' என்று அறிவித்துத் திருவள்ளுவர் நூற்றாண்டைத் தொடங்கிவைத்தார்.வருங்காலத்தில் தமிழ் வரலாற்றையும் தமிழக வரலாற்றையும் ஆராய்வோருக்கு இத் திருவள்ளுவர் நூற்றாண்டு ஒரு கலங்கரை விளக்கமாக விளங்கும் என்பது உறுதி." சான்றோர் கண்ட திருவள்ளுவர், பக்.69-70

மனிதம் விளக்கம்

'மனிதம் என்பது மனிதப் பண்புகளை மதித்துப் போற்றுகின்ற ஒரு நெறி; மனித உரிமைகளைப் போற்றிக் காக்கின்ற ஒரு நெறி: 'தன்னுயிர் மன்னுயிர்: மன்னுயிர் தன்னுயிர்' என்னும் உண்மையை உணர்த்துவது மனிதம். எல்லாரும் `இன்புற்றிருக்க நினைப்பது' மனிதம். பிறருக்குத் தொண்டு செய்து அவர்களுடைய துன்பத்தைத் துடைப்பதே மனிதம் தன்னைச் சிறிதளவாவது மறந்து, மற்றவர்களுக்காக வாழுமாறு தூண்டுகின்ற நெறிமனிதமாகும். சுருங்கக் கூறின், மனித இனத்தின் நல்வாழ்வை குறிக்கோளாகக் கொண்ட வாழ்க்கை நெறியே மனிதமாகும்.

'மனித இனநலக் கோட்பாட்டினையே' நாம், 'மனிதம்' என்னும் சொல்லால் குறிப்பிடுகிறோம். ஆங்கிலத்தில் 'யூமனிசம்' (Humanism) என்றும், பிரஞ்சு மொழியில் 'எகாலிடேரியனிசம்' (Egilitarianism) என்றும் வழங்கப்படுகின்ற சொற்கள் உணர்த்தும் பொருளையே, நம் தமிழ் மொழி 'மனிதம்' எனும் சொல்லால் உணர்த்துகிறது." தமிழ் நிலவு, பக் 135

வழக்கின் வகைகள்

"நம்முடைய முன்னோர்கள் வழக்கினைப் பதினெட்டு வகையாகப் பாகுபடுத்தியுள்ளனர். அவை கடன் கோடல், உபதிதி, கூடிமேம்படல், நல்கியதை நல்காமை, ஒப்பிப் பணி செய்யாமை கூலி கொடாமை உடையன் அல்லான் விற்றல், விற்றுக் கொடாமை, கொண்டு உள்ளம் ஒப்பாமை, கட்டுப்பாடு கடத்தல், நில வழக்கு, மாதர் ஆடவர் ஒழுகலாறு, தாயபாகம், வன்செய்கை, சொற்கொடுமை, தண்டக் கொடுமை, சூது, ஒழிபு என்பனவாகும்" தமிழ் நிலவு பக் 2

மடை மாற்றம் செய்தல்

"இன்னொருவகை விளக்கத்தை. உளவியல் அறிஞர் பிராய்டின் (S, Freud) உளநிலைப் பகுப்பாய்வு (Psycho-analysis) நோக்கில் தரலாம். மனிதனுடைய நிறைவேறாத ஆசைகளும், ஏமாற்றங்களும் உள்ளத்தில் கொந்தளிப்பை உண்டாக்கு கின்றன. இந்தக் கொந்தளிப்பிற்கு மனிதனது அடிமனத்தில் (Id) பலவகை உணர்வுகள் 'நீறுபூத்த நெருப்பாக' நெடுங்காலம் உறங்கிக் கொண்டு இருக்கும். இவ்வுணர்ச்சிப் போராட்டத்தால் அலைக்கழிக்கப்படும் மனிதனுக்குப் படைப்புத்திறன் இருக்குமானால், தன்னுடைய உணர்ச்சி உந்துதல்களைச் சிறப்புமிகு கற்பனை வளம் வாய்ந்த கதைப் படைப்புகளை உருவாக்குவதற்குப்

பயன்படுத்துவர். இதனை 'மடை மாற்றம் செய்தல்' (Sublimation) என்பர் பிராய்ட். நினைவு உலக வாழ்க்கையில் அடைய முடியாதவற்றை இந்த மடை மாற்றத்தின் மூலம் 'கனவுலக வாழ்க்கையில்' அனுபவித்து, மனநிறைவு பெற இயலும் என்பது அவருடைய துணிவு. கலைப்படைப்புகளை உருவாக்கும் பொழுது நனவலி மனமாகிய (Subconcious mind) அடிமனத்தில் ஆற்றல் மிகுதிப்படுகிறது. என்றோ அதில் பதிந்து விட்ட எண்ணங்களும், ஏக்கங்களும், ஏமாற்றங்களும் வெவ்வேறு வகையான வடிவங்களில் வெளிப்படுகின்றன என்பது பிராய்ட் தரும் விளக்கமாகும்." தமிழ்க் கவிதையில் பாரதியின் தாக்கம் பக் 321-22

அகமும், புறமும்

'நம்முடைய பண்டைத் தமிழ்ச் சான்றோர்கள் பொருளினை 'அகம்' எனவும், 'புறம்' எனவும் பாகுபாடு செய்துள்ளனர். இப்பாகுபாடு உலகில் வேறெந்த மொழிகளிலும் காணமுடியாத சிறப்புமிக்க பாகுபாடாகும்.' தமிழ் நிலவு, பக். 58.

அறம்

"மனிதன் தனக்கென வரையறுத்துக் கொண்ட ஒழுக்க முறைகளின் தொகுதியே - முழுநிறை வடிவமே - அறம் எனக் கூறுவர். மனித வாழ்வின் பயன் மதிப்புகளுள் தலையாயது அறம். அறம் என்பது ஒருவகை வாழ்க்கைநெறி. பொருளையும் இன்பத்தையும் நுகர்ந்து மகிழ்வதில், மனிதனை நெறிப்படுத்தும் சக்தியாக இருப்பது - மனிதனை நெறியோடும் முறையோடும் வாழுமாறு இயக்குவது அறம்.

அறம் எனும் சொல் ஒழுக்கம், வழக்கம், இராசநீதி, கடமை, ஈகை, புண்ணியம், அறக்கடவுள், சமயம் எனும் பல்வேறு பொருள்களை உடைய தனித் தமிழ்ச் சொல்லாகும். இதற்கு நேரான வடமொழிச் சொல் 'தருமம்' என்பதாகும். "

கம்பன் கண்ட அறம், (Kamban, Chinmaya Yuva Kendra, Madras 1981, Page.28)

அறிவு

'மக்கள் மனதைச் சென்ற இடத்தில் செல்லவிடாமல் தீமையானதிலிருந்து நீக்கிக் காத்து நன்மையானதில் செலவிடுவதே அறிவாகும் என்பது ஆன்றோர் கண்ட உண்மை. மனிதன் அறிவுடைய வனாய் விளங்குவதற்குக் கல்வி கற்றல் இன்றியமையாததாகும். கல்வியினுடைய நோக்கம் பொருள் ஈட்டுதல் அன்று; அறிவுடையவராய் ஆக்குதலேயாகும். அறிவு இரு வழியில் நிரம்புவது. கற்றறிந்தோர் கூறுவனவற்றைக் கேட்டலால் அறிவு பெறுதல் ஒருவழி; இதனைக் 'கேள்வி அறிவு' என்பர். நூல்களைக் கற்றலால் அறிவு நிரம்பப்பெறுதல் மற்றொரு வழியாகும். இதனை 'நூல் அறிவு' எனலாம். மணலின் கண் தோண்டிய அளவுக்கு நீர் சுரப்பதுபோல, நூலினை ஆழ்ந்து, ஆழ்ந்து கற்கும் அளவுக்கு அறிவு பெருக்கெடுக்கும் என்பது வள்ளுவர் வாய்மொழி. நூலறிவைப் பெற மக்கள் பயிற்சியுடையவர்களாக இருத்தல் வேண்டும். அப் பயிற்சியைத் தருவதே 'கல்வி'யாகும்.' தமிழர் நாகரிக வரலாறு, பக் 235

# அழுக்காறு இலாத இயல்பு

-திருக்குறளார் முனைவர் இர. பிரபாகரன்

இன்றைய சமுதாயத்தில் தொழில்நுட்பத்தின் வளர்ச்சியால் நாம் பல நன்மைகளை அடைந்திருக்கிறோம். அதே நேரத்தில், சில தீமைகளையும் நாம் சந்திக்கிறோம். உதாரணமாக, முகநூல் (Facebook), படவரி (Instagram), கீச்சகம் (Tweeter) போன்ற சமூக வலைத்தளங்களில் (சமூக வலைத்தளம் - Social Media) பலரும் தங்களுடைய புகைப்படங்களையும், காணொளிகளையும் வெளியிடுகிறார்கள். மேலும், அவர்கள் விடுமுறைக்குச் சென்றபொழுதும் நண்பர்களோடு கூடிக் களித்தபொழுதும் எடுத்த புகைப்படங்களையும் காணொளிகளையும் பதிவு செய்கிறார்கள். இவற்றைக் காண்பவர்களில் பலர், தாமும் அவர்களைப்போல் மகிழ்ச்சியாக இருக்க முடியவில்லையே என்று பொறாமை அடைகிறார்கள். தொடர்ந்து சமூக வலைத்தளங்களைப் பார்ப்பவர்களில் சிலர் பொறாமையால் மனவழுத்தம் அடைவதாக ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

பிறருடைய வளர்ச்சி, முன்னேற்றம், செல்வம், செல்வாக்கு, புகழ், நல்வாழ்வு போன்றவற்றைக் கண்டு பொறுக்க முடியாமல், தனக்கு அவை இல்லையே என்று வருந்துவோர் பலர். அவ்வாறு அவர்கள் வருந்துவது பொறாமை என்று அழைக்கப்படுகிறது. பொறாமையால் நன்மையும் உண்டு, தீமையும் உண்டு. பிறருடைய நல்வாழ்வைக் கண்டு, தானும் அது போன்ற வாழ்க்கைக்கு வழி தேடவேண்டும் என்று தீவிரமாக எண்ணி, ஊக்கத்தோடும் உற்சாகத்தோடும் உழைத்து முன்னேறுவது பொறாமையால் வரக்கூடிய நன்மை. பிறருடைய நல்வாழ்வைக் கண்டு மனம் வருந்தி, மனம் தளர்ந்து, முயற்சிகளைக் கைவிட்டு, வாழ்க்கையில் தோல்வி அடைந்து மனவழுத்தம் போன்ற நோய்களால் துன்பப்படுவது பொறாமை உடையவர்கள் அடையக்கூடிய தீமை. அவர்கள் தீமை அடைவது மட்டுமல்லாமல், பிறரும் நல்வாழ்வை இழந்து துன்பப்பட வேண்டும் என்று எண்ணுவதும், சில சமயங்களில் அதற்கான முயற்சிகளில் அவர்கள் ஈடுபடுவதும் ஒருவருடைய பொறாமையால் பிறர்க்கு வரக்கூடிய தீமைகளாகும். பொறாமையால் துன்பப்படுபவர்களின் எண்ணிக்கை, பொறாமையால் நன்மை அடைபவர்களின் எண்ணிக்கையைவிட அதிகம் என்று கருதப்படுகிறது. சிலர் பொறாமையால் நன்மை அடைந்தாலும், பொறாமை ஒரு தீயொழுக்கமாகவே கருதப்படுகிறது. பல மதங்களும் பொறாமையை தியொழுக்கமாகவே கருதுகின்றன.

ஆதாமுக்கும் (Adam) ஏவாளுக்கும் (Eve) பிறந்த மூத்த மகனாகிய கேய்ன் (Cain) என்பவன் தன்னுடைய தம்பியாகிய ஏபெல் (Abel) என்பவன்மீது பொறாமைகொண்டு அவனைக் கொன்றதற்காகக் கடவுளால் தண்டிக்கப்பட்டான் என்று விவிலியம் கூறுகிறது. கிறித்துவ மதத்தின் பெரும்பிரிவாகிய கத்தோலிக்க மதம் பொறாமையை ஏழு கொடிய பாவங்களில் ஒன்றாகக் கருதுகிறது. இந்து மதத்தின் மிகப்பெரிய இதிகாசங்களில் ஒன்றான மகாபாரதம் கௌரவர்களுக்குப் பாண்டவர்களின்மீது இருந்த பொறாமையால் எழுந்த போரைப்பற்றி விரிவாகப் பேசுகிறது. புத்த மதம் ஆசைதான் துன்பத்திற்குக் காரணம் என்று கூறுகிறது. பொறாமையும் ஆசையின் அடிப்படையில் தோன்றுவதால், புத்த மதமும் பொறாமையை ஒரு தீயொழுக்கமாகவே கருதுவதாகத் தோன்றுகிறது. முகமது நபி அவர்கள், ”பொறாமையை விட்டுவிடுங்கள். அது நெருப்பு விறகைத் தின்பதைப்போல் நன்மைகளை எல்லாம் அழித்துவிடும்.” என்று மக்களை எச்சரிப்பதாக திருக்குர்ரான் கூறுகிறது.

பிறருடைய நல்வாழ்வைக் காணும்பொழுது, “அவை தனக்கு வேண்டும்” என்று ஒருவன் எண்ணுவதால் அவனுக்குத் துன்பம் ஏற்படுகிறது என்றும் அத்தகைய துன்பம் அவனுக்குப் பொறாமை என்னும் மனவலியை உண்டுபண்ணுகிறது என்றும் கிரேக்கத் தத்துவஞானி அரிசுடாட்டில் (Aristotle (384 B.C. – 322 B.C.)) கூறுகிறார். பெர்ட்ரண்டு இரசல் (Bertrand Russell (1872 A.D – 1970 A.D.)) என்ற இங்கிலாந்தைச் சார்ந்த பேரறிஞர், “ஒருவருடைய மகிழ்ச்சியின்மைக்கு மிக முக்கியமான காரணம் அவருடைய பொறாமை என்னும் இயல்புதான்.” என்று கூறுகிறார்.

மதங்களையும் மற்ற அறிஞர்களையும்போல், வள்ளுவரும், பொறாமையை ஒரு தீயொழுக்கமாகவும், அறத்திற்கு முற்றிலும் புறம்பானதாகவும் கருதுகிறார். “மனத்துக்கண் மாசிலானாதல் அனைத்து அறன் (குறள் – 34)“ என்று அறத்திற்கு இலக்கணம் வகுத்த வள்ளுவர், பொறாமை ஒரு மனமாசு என்று கூறுகிறார். மாசுக்கு மற்றொரு பெயர் அழுக்கு. ஆகவே, பொறாமையை ஒரு அழுக்கு என்றும், பொறாமையோடு இருப்பதை அழுக்குறுதல் என்றும் கூறலாம். ” ‘அழுக்குறு’ என்பது மருவி, ’அழுக்கறு’ என்று ஆகியது என்றும், அழுக்கறு என்பது நீண்டு அழுக்காறு ஆயிற்று.” என்று மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் கூறுகிறார். தமிழ் இலக்கியத்தில், அழுக்காறு என்ற சொல் பொறாமையையும் அழுக்காறாமை என்ற சொல் பொறாமையில்லாமல் இருப்பதையும் குறிக்கும் சொற்களாகப் பயன்படுத்தப்படுகின்றன. வள்ளுவரும் பொறாமை என்ற சொல்லுக்குப் பதிலாக, அழுக்காறு என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். மனத்தில் இருக்கக்கூடிய

மாசுக்களில் அழுக்காறு, அவா, வெகுளி (சினம்), இன்னாச்சொல் (கடுஞ்சொல்) ஆகிய நான்கும் முற்றிலும் விலக்கப்பட வேண்டியவை என்று கூறும்பொழுது, அழுக்காறு (பொறாமை) என்னும் மாசை வள்ளுவர் முதலில் குறிப்பிடுகிறார் (குறள் – 35).

அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம். (குறள் – 35)

அழுக்காறு உடையவனின் செயல்கள்
ஆக்கம் என்ற சொல், வளர்ச்சி, முன்னேற்றம், இலாபம், பொன், பொருள், செல்வம், மேம்பாடு, நல்வாழ்வு, வளம், மற்றும் பேறு போன்ற பலவற்றைக் குறிக்கும் ஒருசொல். அறநெறிகளைப் பின்பற்றி வாழ்வதால் வரும் ஆக்கத்தை வேண்டாதவன் என்று சொல்லப்படுபவன் பிறருடைய ஆக்கத்தைக் கண்டு மகிழாமால் பொறாமை அடைவான் (குறள் -163).

அறன்ஆக்கம் வேண்டாதான் என்பான் பிறனாக்கம்
பேணாது அழுக்கறுப் பான். (குறள் –163)

தனிமனிதர்கள் மட்டுமல்லாமல், ஒரு குழு, கட்சி, இனம் ஆகியவற்றைச் சார்ந்தவர்கள் தங்கள் குழு, கட்சி, இனம் ஆகியவற்றிற்குப் போட்டியாக இருப்பவர்கள்மீது பொறாமைகொண்டு அவர்களுக்குத் தீமைகள் வரவேண்டும் என்று விரும்புவதும், அவர்களுக்குத் தீமைகளைச் செய்வதும் உலக இயல்பாக நாம் காண்கிறோம். உதாரணமாக, இருபதாம் நூற்றாண்டில் செருமனியில் இருந்த யூதர்களின் வளமான வாழ்க்கையைக் கண்டு, யூதர் அல்லாதவர்கள் பொறாமை அடைந்தனர். அவர்களின் பொறாமையைத் தனக்குச் சாதகமாகக்கொண்டு அடால்பு இட்லர் (Adolf Hitler) இலட்சக்கணக்கான யூதர்களைக் கொன்று குவித்தான் என்பது வரலாறு.

பொறாமையால் வரும் தீமைகள்
அறம் அல்லாத தீயநெறிகளைப் பின்பற்றுவதால் துன்பம் தோன்றும் என்பதை அறிந்தவர்கள், அழுக்காறு கொண்டு அறம் அல்லாதவற்றைச் செய்யமாட்டார்கள் (குறள் – 164). பகைவர்கள் கேடு செய்யத் தவறினும், பொறாமை உடையவர்களுக்குப் பொறாமை ஒன்றே போதுமானது; அவர்களுக்கு வேறு பகைவர்கள் வேண்டியதில்லை

(குறள் – 165). மற்றவர்க்குக் கொடுப்பதைக் கண்டு பொறாமைப்படுபவன் தானும் கேடடைவதோடு மட்டுமல்லாமல், அவனுடைய சுற்றத்தாரும் உண்ண உணவும், உடுக்க உடையும் இல்லாமல் கெடுவர் (குறள் – 166). மனக்கோட்டத்தோடு பொறாமை கொள்பவனைத் திருமகள் தன் தமக்கையாகிய மூதேவியிடம் காட்டிவிட்டுத் தான் நீங்கிவிடுவாள் (குறள் – 167). அழுக்காறு என்னும் கொடியவன் (பாவி), தன்னை உடையவனுடைய செல்வத்தை அழித்து அவனைத் தீயவழிகளில் செலுத்திவிடுவான் (குறள் – 168).

அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக்கு அறிந்து. (குறள் – 164)

அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடீன் பது. (குறள் – 165)

கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும். (குறள் – 166)

அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும். (குறள் – 167)

அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும். (குறள் – 168)

ஒருவன் பிறர்க்குப் பொருள்களைக் கொடுத்து உதவி செய்வதைக் கண்டு மற்றொருவன் பொறாமை அடைந்தால், பொறாமை அடைபவனும் அவனுடைய சுற்றத்தாரும் உண்ண உணவும் உடுக்க உடையும் இல்லாமல் கெடுவர் என்பதற்கு எவ்விதமான ஆதாரமும் இல்லை. பொறாமையால் விளையும் தீமைகளை மிகைப்படுத்திக் கூறினால், மக்கள் பொறாமை அடையாமல் இருப்பார்கள் என்ற நோக்கத்தோடு வள்ளுவர் இவ்வாறு கூறியிருக்கலாம் என்று தோன்றுகிறது. அடுத்த குறளில், அழுக்காறு உடையவனைத் திருமகள் மூதேவியிடம் செலுத்திவிடுவாள் என்பது அழுக்காறு உடையவன் வறுமை அடைவான் என்பதைக் குறிக்கிறது. இந்தக் குறளிலும், முந்தைய குறளைப்போல், அழுக்காற்றினால் விளையும் தீமைகளை மிகைப்படுத்திக்கூறி, அழக்காறு ஒரு தீயொழுக்கம் என்பதை வள்ளுவர்

வலியுறுத்துகிறார். அடுத்த குறளில், அழுக்காறு என்னும் கொடியவன் (பாவி) தன்னை உடையவனின் செல்வத்தை அழித்து, அவனைத் தீயவழிகளில் செலுத்திவிடும் என்பதும், அழுக்காறு ஒரு தீயொழுக்கம் என்பதை வலியுறுத்துவதற்காகவே கூறப்பட்டதாகப் பொருள்கொள்வது சிறந்ததாகத் தோன்றுகிறது.
அழுக்காறு உடைவனின் கேடும் அழுக்காறு இல்லாதவனின் ஆக்கமும் பொறாமையோடு இருப்பவன் வாழ்க்கையில் வளர்ச்சி அடைந்ததில்லை. பொறாமை இல்லாதவன் தன் வள்ரச்சியில் குறைந்ததும் இல்லை (குறள் – 170). இங்கு வளர்ச்சி என்பது செல்வம், செல்வாக்கு, பெருமை, முன்னேற்றம் போன்றவற்றில் எதுவாக வேண்டுமானலும் இருக்கலாம். ஆனால், சில சமயங்களில் பொறாமை உடையவர்கள் பல நன்மைகளை அடைவதையும், பொறாமை இல்லாதவர்கள் பல கேடுகளை அடைவதையும் நாம் காண்கிறோம். இவ்வாறு நிகழ்வதற்குக் காரணம் என்னவென்று ஆராயவேண்டும் என்கிறார் வள்ளுவர் (குறள் – 169).

அழுக்கற்று அகன்றாரும் இல்லைஅஃது இல்லார்
பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல். (குறள் – 170)

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும். (குறள் – 169)

”அழுக்காறு உடையவன் வறுமை அடைவான்”, ”அழுக்காறு உடையவன் வாழ்க்கையில் முன்னேறமாட்டான்”, ”அழுக்காறு இல்லாதவன் செல்வந்தனாக இருப்பான்.”, ”அழுக்காறு இல்லாதவன் வாழ்க்கையில் முன்னேறுவான்” போன்ற கருத்துக்களுக்கு ஆதாரம் எதுவுமில்லை. இவை அறிவியல் கூறும் கருத்துக்களைப் போல் அனைவரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய உண்மைகளும் அல்ல. இது போன்ற கருத்துக்கள் வெறும் நம்பிக்கைகள்தான். எல்லா விதிகளுக்கும் விதிவிலக்கு உள்ளதுபோல், எல்லா நம்பிக்கைகளும் எல்லாச் சூழ்நிலைகளிலும் சரியானவை என்று கூறமுடியாது. அழுக்காறு உடையவன் தன்னுடைய அயராத உழைப்பு, முயற்சி, அறிவு, ஆற்றல் போன்றவற்றால் வாழ்க்கையில் முன்னேறலாம். அழுக்காறு இல்லாதவன் அயராத உழைப்பு, முயற்சி, அறிவு, ஆற்றல் போன்றவை இல்லாததால் வாழ்க்கையில் முன்னேறாமல் இருக்கலாம். வள்ளுவர் இதை அறியாதவர் இல்லை. அதனால்தான், அழுக்காறு உடையவனின் வளர்ச்சியும் அழுக்காறு இல்லாதவனின் வளர்ச்சியின்மையும் ஆராயத் தக்கவை என்றார்.

அழுக்காறு இலாத இயல்பு
எவரிடத்தும் பொறாமையில்லாமல் ஒருவன் இருப்பானாயின், அவன் பெறும் சிறந்த சிறப்புக்களில் அதைப் போன்றது வேறு எதுவும் இல்லை (குறள் – 162). ஒருவன் அழுக்காறு இல்லாத தன்மையை தன்னுடைய இயல்பாகக் கொள்ள வேண்டும் (குறள் – 161).

விழுப்பேற்றின் அஃதொப்பது இல்லையார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின்.   (குறள் – 162)

ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து
அழுக்காறு இலாத இயல்பு.    (குறள் – 161)

அழுக்காறு இல்லாமல் இருப்பதால் பல நன்மைகள் இருப்பதால், அதை ஒருவன் தன்னுடைய இயல்பாகக் கொள்ள வேண்டும் என்பது வள்ளுவரின் கருத்து.
முடிவுரை
அழுக்காறு என்ற சொல் பொறாமையையும், அழுக்காறாமை என்ற சொல் பொறாமையின்மையையும் குறிக்கின்றன. மனத்தின் மாசுக்களில் அழுக்காறும் ஒன்று என்றும், அழுக்காறு அறத்திற்கு முற்றிலும் புறம்பானது என்றும் வள்ளுவர் கூறுகிறார், ”அழுக்காறு உடையவர்கள் பிறருடைய நல்வாழ்க்கையைக் கண்டு மகிழமாட்டார்கள். அழுக்காறு உடையவர்களுக்குப் பகைவர்களே தேவையில்லை. பகைவர்களால் வரும் கேடுகள் அனைத்தையும் பொறாமையாலேயே அவர்கள் அடைவார்கள். அழுக்காறு உடைவர்களும் அவர்களுடைய சுற்றத்தாரும் உண்ண உணவும், உடுக்க உடையும் இல்லாமல் துன்பப்படுவார்கள். அழுக்காறு உடையவன் வறுமையில் வாடுவான்; அழுக்காறு அவனைத் தீயவழிகளில் செலுத்திவிடும்.” என்ற கருத்துக்களை ”அழுக்காறாமை” என்ற அதிகாரத்தில் காண்கிறோம். பொதுவாக, அழுக்காறு உடையவர்கள் தங்கள் வாழ்க்கையில் முன்னேறுவதில்லை என்றும் அழுக்காறு இல்லாதவர்கள் வாழ்க்கையில் முன்னேறாமல் இருப்பதில்லை என்றும் கருதப்பட்டாலும், சில சமயங்களில் அழுக்காறு உடையவர்கள் வளமாக வாழ்வதையும் அழுக்காறு இல்லாதவர்கள் அத்தகைய வாழ்க்கை இல்லாதவர்களாக இருப்பதையும் கண்டு வியந்த வள்ளுவர், அவை ஆய்வுக்குரியவை என்கிறார்.

குறள் நெறி

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



## திருக்குறள் ஆய்வு முன்னோடி



சோழவந்தான் அரசஞ் சண்முகனார்
15-09-1868---11.01.1915

# பெரும்புலவர் அரசஞ்சண்முகனார்

-----வ.க.கன்னியப்பன்

பெரும்புலவர் அரசஞ்சண்முகனார் சோழவந்தானில் 1868ஆம் ஆண்டு செப்டம்பர் 15ஆம் நாள் பிறந்தார். அவ்வூர்த் திண்ணைப் பள்ளியில் கல்வி கற்றார். எழுத்திலக்கணம், நிகண்டு, அந்தாதி ஆகியன கற்றுத்தேர்ந்தார். பின்னர், அவ்வூரிலுள்ள பேட்டை, கிண்ணிமங்கல மடம் என்ற இடத்திலிருந்த சிவப்பிரகாச சுவாமிகளிடம் சங்க நூல்கள், இலக்கண, இலக்கியங்கள், தருக்கம், சோதிடம் ஆகியன கற்றுப் புலமை பெற்றார்.



சோழவந்தானூர்,
அரசஞ்சண்முகனூர்
திருக்குறட்
சண்முகவிருத்தியும்
முதற்குறள் விருத்தி.
மதுரைத்
தமிழ்ச் சங்கம்
சுந்தரபாண்டிய ஓதுவாரால்
கையெழுத்துப் பிரதிகளைக்கொண்டு
பரிசோதித்து,
எ-வது புத்தகமாக
மதுரை
மீனலோசனி அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பெற்றது,
1921. [அணா 5.
(Copyright Registered.)

இவர் எழுதிய நூல்கள்:

சிதம்பர விநாயகர் மாலை

மாலை மாற்று மாலை

ஏகபாத நூற்றந்தாதி

இன்னிசை இருநூறு

மதுரை மீனாட்சியம்மை

சந்தத் திருவடிமாலை

திருவடிப்பத்து

நவமணிக்காரிகை நிகண்டு

வள்ளுவர் நேரிசை

இசை நுணுக்கச் சிற்றுரை

தொல்காப்பியப் பாயிர விருத்தி

திருக்குறளாராய்ச்சி

திருக்குறட்சண்முகவிருத்தி

எனப் பலவாகும்.

சண்முகனார் மதுரை சேதுபதி உயர்பள்ளியில் தமிழாசிரியராகப் பன்னிரண்டு ஆண்டுகள் பணிபுரிந்தார். பள்ளித் தலைமையாசிரியர் 1902 ஆம் ஆண்டில் ஒருநாள் மாணவர்க்குரிய பாட அட்டவணையில் தமிழ்ப்பாட நேரத்தைக் குறைத்திருந்தார்.

அங்கு தலைமைத் தமிழாசிரியராகப் பணியிலிருந்த சண்முகனார் தமிழுக்கு உரிய பாட நேரத்தை ஒதுக்கித்தர வேண்டும் என்று கேட்டார். “தமிழ்தானே! அதனால் பயன் என்ன?" என்று தலைமையாசிரியர் மறுத்துவிட்டார். எனவே, அன்றே வேலையில் இருந்து விலகிக் கொள்வதாக எழுதிக் கொடுத்துவிட்டு, பள்ளியை விட்டு வெளியேறினார்.

இவரது எளிய தோற்றம் நாட்டுப்புறங்களில் வேலை செய்யும் உழவனை நினைவுபடுத்தும். உடம்பை மறைக்க நான்குமுழம் வேட்டி; மேலே ஒரு துண்டு; தலையிலே சிறு குடுமி; வெற்றிலைக் காவி படிந்த மீசை; அடிக்கடி நோயினால் மெலிந்து காணப்படும் உடம்பு; இறைவனை என்றும் நினைவுபடுத்தும் நீறு.

எனவே, ‘ஏகபாத அந்தாதி’ என்று முப்பது வெண்பாக்கள் எழுதி, மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றச் சென்றபோது, பார்த்த அறிஞர்கள் இவர்தாம் இப்பாக்களை இயற்றினாரா என்ற ஐயம் கொண்டு அவர்தம் பாக்களுக்கு பொருள் சொல்லுமாறு வேண்டினார்களாம். சண்முகனாரும் ஊரிலிருந்து மதுரைக்குச் சென்று ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பாடலுக்குப் பொருள் சொன்னாராம். இன்னும் ஐயம் விலகாத தமிழ்ச் சங்க சான்றோர்கள், முப்பது பாக்களை நூறு பாக்களாக்கும்படி பணித்தார்களாம். மீண்டும் தினமும் ஒரு பாடலாக இயற்றி நூறு பாடல்களைப் பாடி, பொருள் விளக்கமும் அளித்து ‘ஏகபாத நூற்றந்தாதி’ ஆக்கினாராம்.

மதுரைத் தமிழ்ச்சங்கம், 14.09.1901 இல் தொடங்கப்பட்டது. அதன் பயனாய் உருவாகிய சேதுபதி செந்தமிழ்க் கலாசாலையில் 1902 முதல் 1906 வரை அரசஞ் சண்முகனார் ஆசிரியர் பணியில் நான்கு ஆண்டுகள் பணி புரிந்தார்.

மதுரைத் தமிழ்ச்சங்கம் தொடங்கிய காலம் முதல் இறுதிக்காலம் வரை உ.வே.சா, மறைமலையடிகள், மு.இராகவையங்கார், பண்டிதமணி கதிரேசன் செட்டியார், இரா.இராகவையங்கார், மு.ரா. அருணாசலக் கவிராயர் ஆகிய பலரிடம் நட்பு கொண்டிருந்தார்.

ஆராய்ச்சியாலும், தொண்டினாலும் தமிழ் அறிஞர்களின் மனதில் என்றும் வாழ்ந்து வரும் சண்முகனார் அவரது 47 ஆம் வயதில் 11.01.1915 ல் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

**அரசஞ் சண்முகனார் இயற்றிய திருக்குறட்சண்முக விருத்தியுண் முதற்குறள் விருத்தி என்னும் நூலுக்கு அதனைப் பதிப்பித்த சுந்தரபாண்டிய ஓதுவார் எழுதியுள்ள முகவுரை**

மதுரையை அடுத்துள்ள சோழவந்தானூர் அரசஞ்சண்முகனாரென்பார் இலக்கண இலக்கியங்களில் ஆற்றன் மிக்கபெரும்புலவராய்த் தமிழ்மக்கள் போற்றவிருந்து ஏழாண்டின்.முன்னர்க் காலஞ் சென்றமையை இற்றைக்கும் தமிழுலகம் நன்கறியும். இவர் சித்திர கவிகளாலாய நூல்களை எளிதிலியற்றுவதினும், கேட்போருவப்ப எப்பொருளையும் அவையிடைத் தெளிய விளம்புவதினும், எழுதுவதினும் பேராற்றாலுடையராய் விளங்கினா ரென்பதை நேரேயறிந்துள்ள தமிழ்ப்புலவர்களிற் பலர் இப்போது மிருந்து வருகின்றனர். இவரியற்றிய நூல்களில் “மாலைமாற்றுமாலை”"இன்னிசையிருநூறு" "தொல்காப்பியப் பாயிரவிருத்தி” மீனாக்ஷியம்மைமீது சந்தத் திருவடிமாலை" “வள்ளுவர் நேரிசை' ஆகிய நூல்கள் முன்னரே வெளிவந்துள்ளன.
“ தொல்காப்பிய நூன்மரபுவிருத்தி” “ஷே எழுத்துவிருத்தி' “திருக்குறட் சண்முகவிருத்தி" "ஏகபாத நூற்றந்தாதி," "நவமணிக் காரிகை நிகண்டு" ஆகிய நூல்கள் இனிவெளிவரவேண்டுவனவாய் ஆசிரியர் அரசஞ்சண்முகனார் உடன் பிறந்தாரும் எனது நண்பரு மாகிய திருவாளர் அ. இராமசாமிப் பிள்ளையவர்களிடத்தும் என்னிடத்தும் இருந்து வருகின்றன.
"திருக்குறளாராய்ச்சி" என்ற தலைப்பெயரிட்டு மதுரைத் தமிழ்ச்சங்கச் செந்தமிழ்ப் பத்திரிகையில் சிலகுறட்பாக்கள் வெளி வந்துள்ளன. அவ்வரியவிஷயங்கள் ஆசிரியரியற்றிய விருத்தியுணின்று அக்காலத்தே எடுத்தெழுதப்பட்டனவேயாம். அவற்றுள் முதற்குற ளாராய்ச்சியும் ஒன்றாகுமென்பதை யாவருமறிவர்.
இப்பொழுது திருக்குறட் சண்முக விருத்தியுண் முதற் குறள் விருத்தியாகிய இப்புத்தகம் பேருரைகாணும் வேட்கையுற்றார் தங்கருத்தின்படி எனது நண்பரான மேற் கூறிய பிள்ளையவர்கள் பாலிருந்து கிடைக்கப்பெற்ற பிரதிகளிரண்டையும் பெற்று எனது பிரதியோடு

ஒப்பிட்டுப் பார்த்து அவற்றுள் அடித்தும் வரிப்பிளந்தெழுதியுமுள்ள இடங்கள் தோறும் இயன்றவரை சோதித்து உள் ளவாறு அச்சிட்டு வெளியிடப் பெற்றுள்ளது.

திருக்குறட்சண்முகவிருத்தியுட்கண்ட இம் முதற்குறள் விருத்தி; பரிமேலழகர் உரையினைக்காண்டிகையாக்கொண்டு அவ்வுரையுட் பொருந்தாதன மறுத்து எனையவற்றோடு வேண்டிய அளவில் விரிப்பனவிரித்து வெளிவாப்பெற்றுள்ளது. திருக்குறள் நூலுக்கு "திருவள்ளுவமாலை" சிறப்புப்பாயிரமாதலைப் பாயிரவியலுண்முதலாவது அதிகாரம் கடவுள் வாழ்த்து முதற்குறளின் பின்னர் விளங்க வைத்துள்ளது. இன்னிலை, துறவுநிலையெனத் தமிழ் நூன்முறை யிலங்க விளங்கும் முப்பாலி னாற்பான் மொழிந்த இந்நூலின் முதற் குறட்பாவிற்கு ஆசிரியர் அரசஞ் சண்முகனார் இயையக் கூறிய அகர மாகிய அகத்திசைக்கும் நாதவொலி யோடு அதிபகவனிலக்கணமும பிறவும் ஊன்றியுணர்வாரெவரும் பேருரையாசிரியதாற்றலை வியந்து பாராட்டாமலிரார் என்பது யான் கொண்ட துணிபு. திருக்குறள் நூலுக்கு இத்தகைய பேருரை நாலொன்று இது காறும் வெளிவந்ததில்லை ; ஆதலின் இவ்வுரை நூலோடு ஆசிரியரியற்றிய எல்லா நூல்களும் வெளிவருமாறு முதற்குறன் விருத்தியைக் கண்ணுறும் நீங்கள இயன்ற உதவிபுரியுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன், இப்பதிப்பில் நோந்த வழுக்கள் எனது மறதிமுதலியவற்றால் நேர்ந்தன வென்று கருதிப் பொறுத்தருளுபாறு அன்பாகளை வேண்டிக்கொள்கின்றனன்.
ஆசிரியரியற்றிய “ஏகபாத நூற்றந்தாதி" என்னும் அரிய அந்தாதி நூல் உரையுடன் விரைவில் வெளிவரும்.
இங்ஙனம்
ம. சுந்தரபாண்டிய ஓதுவார்,
தலைவர், தமிழர் சங்கம் மதுரை துன்மதி ஆவணிமீ-ங்உ

திருக்குறள்-பழைய  உரை-அறத்துப்பால்

. டாக்டர் அ.மா.பரிமணம்

[திருக்குறள்:பழைய உரை-அறத்துப்பால்-தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு-எண்:233-]

சரசுவதி மகால் வெளியிடும் இவ்வுரையின் ஆசிரியர் பெயர் அறியப்படாமையினும் . காலப் பழமை கருதியும் இவ்வுரை ' திருக்குறள் பழைய உரை என்ற பெயரோடே வெளி வருகின்றது .

இந்தப் பழைய உரை .

இந்த உரையின் ஆசிரியர் பெயர் அறியக்கூடவில்லை.மேலும் உரையின் போக்கினை நோக்கும் போது , இது , பரிதியார் உரையினைப் பின்பற்றி அமைந்துள்ளதாகத் தெரிகிறது . சில குறள்களுக்குப் பரிதியார் கூறிய உரையின் விளக்கமாக அமைந்துள்ளது

எடுத்துக் காட்டாக காட்டாக அகர முதல எழுத்தெல்லாம் என்னும் முதற் குறளுக்குப் பரிதியார் உரையும் , இப்பழைய உரையும் பின் வருமாறு அமைந்துள்ளன .

உயிரெழுத்துப் பன்னிரண்டுக்கும் அகரம் முதலெழுத்தாதல் முறைமை போல : ஆதியான பகவன் உலகத்துக்கு என்றவாறு . --பரிதியார்

அகர நாதமே உயிரெழுத்துப் பன்னிரண்டு , மற்ற எழுத்துக்கெல்லாம் நிறைந்திருக்கும் முறைமை போல ஆதி பகவானான திருவுளம் சகல உயிர்கள் சராசரங்கள் உலக முதலானவைக் கெல்லாம் ஒருத்தனே நிரம்பிப் பூரணமாயிருப்பான் என்றவாறு .- இந்தப் பழைய உரை .

உரையாசிரியர் சமயம்:

இவ்வுரையாசியர் ஊர் பெயர் முதலியன அறியக்கூடவில்லை ஆயினும் , தெய்வம் , விதி , சமயம் பற்றிய கருத்துக்களை விளக்கும் போது இவர் மேற்கொண்ட சமயத்தினை ஒரு வகையால் உணர முடிகிறது . குறளில் தெய்வம் முதலியன பற்றி விளக்கம் செய்ய வேண்டிய பகுதிகளுக்கு , இவர் தெளிவாகச் சைவ சமயச் சார் புடையவராகவே விளக்கம் தந்துள்ளார் .

இறைவன் - ( 4 ) என்பதற்குச் சிவன் என்றும் , வேண்டுதல் வேண்டாமை இலான் ( 5 ) என்பதற்கு ‘விருப்பும் வெறுப்புமற்ற நிராகாரப் பொருள் என்னும் பரமசிவன்’ என்றும் ‘அருள் வெஃகி ஆற்றின் கண் நின்றார்’ ( 176 ) என்பதற்கு ‘முத்தியை விரும்பித் தரும நெறியிலே நின்று அருட் செல்வம் என்னும் சிவ சிந்தையராய் நிற்போர் என்றும் ‘ அருளை விளக்குங்கால் ( 253 ) ‘அருளாவது ஏதெனில் சிவபூசை சிந்தனை’ என்றும் கூறியுள்ளார் . மேலும் , ‘சமயங்களுக்கெல்லாம் தலைமையாகிய சுத்தமென்னும் சைவ சமயத்தின் நெறியறிந்து’ ( 257 என்றும் , ‘தனக்கு ஆத்தும லாபமான தவம் நிஷ்ட்டை தேவபூசை , தான தர்மம் சிவத்தியானம்
முதலான தெய்வ நெறி ‘. ( 261 ) என்றும் குறிப்பிடுவதனால் இவர் சமயம் சைவ சமயம் என்பது தெளிவாகிறது. சுத்த சைவத்தினைக் குறிப்பிட்டாலும்,’தன்னுயிரென்னும் சீவாத்துமாவைப் பந்த பாசமென்னும் இச்சையின் வழியே நடத்தாமல் தான் என்னும் பிரமத்தினிடத்தில் சேரும்படி மோட்ச வழியே நடத்தி’ ( 263 ) என்று குறிப்பிட்டுள்ளதால் , இவர் சைவசித்தாந்த நெறியினராயினும் , பிரமத்தைப் போற்றும் அத்துவித நெறியாகிய வேதாந்தக் கொள்கையும் உடையவர் என்பது தெரிகிறது . அதனால் , இவர் சைவ சித்தாந்தத்தையும் , வேதாந்தத்தையும் தனித் தனியாக வேறுபடுத்திக் கொள்ளாது , அவற்றைப் போற்றிக் கொள்ளும் நெறியினர் கொள்ளலாம் . தாயுமானவருக்குப் பின்னர் இது போன்றதொரு நிலை தமிழகத்தில் பரவலாகக் காணலாயிற்று . இது கொண்டு இவ்வுரையாசிரியர் , தாயுமானவர் காலத்தை அடுத்த காலத்தினைச் சார்ந்தவராவார் எனக் கொள்வது தவறாகாது .
உரையின் நடையியல்பு .
கருத்தால் மட்டுமன்றி , தெளிந்த நடையாலும் பரிமேலழகர் உரை சிறப்புற்றுத் திகழ்கிறது . பரிதி, காளிங்கர் முதலிய பழைய உரைகள் பரிமேலழகருக்கு முற்பட்டன எனக் கூறப்பட்டாலும் அவற்றின் நடை வேற்று மொழிக் கலப்பு மிக்க நடையாகவே உள்ளன . இப்பழைய உரையும் செறிவில்லாத , வேற்றுச் சொற் கலப்பு மிக்க சாதாரண நடையிலேயே அமைந்துள்ளது .
எடுத்துக்காட்டாக ,
" ஆகாசத்திலேயிருந்து உலகத்தை இரட்சிக்கும் பொருட்டாய் மழை வருஷிக்கிறதினாலே , சீவ செந்துக்கள் விருட்ச சாதிகள் சகலத்துக்கும் தேவர் அமிர்தம் வருணசலம் ( 11 ) என்னும் உரையினைக் காட்டலாம் . இவ் வுரையாசிரியர் பெண் , பெண்கள் என்பதற்கு ஸ்ரீ , ஸ்ரீகள் என்று எழுதியுள்ளார் .

எளிய மக்கள் தம் வழக்கில் பயன்படுத்தும் ஞானதேகம் ஆகச்சே(77), குண்டணி ( 91 ) , புறஞ் சாஞ்சு வழக்குப் பேசுவது ( 92 ) , கெதிமோட்சம் (110 ) , கண்டது சொல்லும் குண்டுமணி (123) ,கொஞ்சபோகம் ( 174 ) , போன்ற வழக்குச் சொற்களையும் பயன்படுத்தியுள்ளார் . இயன்ற மரியாதி ( 36 ) , களவாண்டு ( 275 ) , ஈங்கிசை ( 278 ) போன்ற தொடர்களும் காணப்படுகின்றன .

'ஒருவன் செய்த துன்பப் பகைக்கு வதில் நினைப்பான் கொடிய பாவி' என்னுமிடத்தில் வதில் என்றொரு சொல் அமைந்துள்ளது . பதில் என்பதன் திரிந்த வடிவமே வதில் என்பது . இது , பதில் என்னும் வேற்று மொழிச் சொல்லாட்சி , தமிழகத்தில் இடம் பெற்ற காலத்திற்குப் பிற்பட்டது இவ்வுரையாசிரியர் காலம் என்பதனை உணர்த்தி நிற்கின்றது . விதனம் போன்ற சொற்கள் இவர் உரை நடையில் பயின்று வழங்கப்படுகின்றன . சிற்சில விடங்களில் வாக்கிய முடிவு தவறுபட அமைந்து விடுவதனையும் காண முடிகிறது . சங்கும் முத்தும் பிறவாது ( 17 ) , தானம்களும் நடவாது ( 18 ) என்பன போன்ற இடங்களில் காணப்படும் எண் வழு போல்வன ஒரு கால் ஏடெழுதுவோரால் நிகழ்ந்திருத்தலும் கூடும் . எனினும் இவையும் , இவை போன்ற பிறவும் , செப்பம் செய்யப் பெறாது பதிப்பறம் கருதி , உள்ளவாறே பதிப்பிக்கப்பட்டுள்ளன .

இவரது நடை கலப்பு நடையாயினும் , தன் கருத்தை விளக்குவதில் தெளிவாக அமைந்துள்ளது . 'புறங்குன்றி' என்னும் குறளில் ( 277 ) குன்றிமணியினை ஒப்புக் கூறும்போது இவர்

'மேலே காவி காவி வஸ்த்திரச் செவப்பு , மனத்தில் ஆசைக் கருப்பு' ஆதலால் குன்றிமணி என்று காட்டியுள்ளார் . பலவிடங்களில் குறளுக்கு உரை கூறி இறுதியில் குறட்கருத்தினைச் சுருக்கமாக விளக்குவது இவர் இயல்பு . இதற்குத் 'துப்பார்க்குத் துப்பாய' என்னும் குறளுரையில் ( 12 ) , 'ஆகையால் மழைச் சிறப்பு அளவிறந்த சுக சந்தோடம்' என்பதும் , 'ஏரின் உழாஅர்' என்னும் குறளில் ( 14 ) 'ஆகையால் மழையே தெய்வம்' என்றும் , 'அன்றறிவாம்' என்னும் குறளில் ( 32 ) . 'தர்மம் உயிர்த்துணையாகும் செல்வம் உயிர்த்துணையாக மாட்டாது' என்றும் வருவன எடுத்துக்காட்டாகும் . மகனுக்குத் தகப்பன் செய்யும் நன்றி இது வெனக் காட்டுமிடத்து ( 70 ) மிகவும் விளக்கமாக அதனைக் காட்டியிருப்பது சிறப்பாக உள்ளது .

உரைத் திறன் .

வலியில் நிலைமையான் வல்லுருவம் காட்டியமைக்குத் திருவள்ளுவர் கூறிய ‘பெற்றம் புலியின் தோல் போர்த்து மேய்தல்’ என்னும் உவமையைப் பலரும் பலவாறு விளக்கியுள்ளனர். இவ்வுரையாசிரியர் தம்மியல்பிற்கு ஏற்றாற் போல ‘தவத்தில் உறுதியில்லாத வஞ்சகன் உலகத்தில் வலுவாகக் கொண்ட ஈசுர வேடம் விஷ்ணு வேடம் அழுக்கு மன முடையார்கள் சுமந்து கொண்டு பிழைப்பது எப்படி யென்னில் , எருதானது ஒருவர் பயிரிலே களவாண்டு தின்று பிழைக்கிறதற்காகப் புலித் தோலைப் போர்த்துக் கொண்டு மேய்ந்தது போல இந்த வேடத்துடனே உலகத்திலே மேய்ந்தான்’ என்று கூறியிருப்பது நயமுடையதாகும் . ‘உலகத்
திலே மேய்ந்தான்’ என்னும் சொல்லாட்சி அத்தகையோனை இவ் வுரையாசிரியர் மிகவும் இகழ்ந்து குறிப்பிடும் பாங்கினைக் காட்டுகிறது. ‘யாமெய்யாக் கண்டவற்றுள்’ என்னும் குறளுக்கு உரை கூறி , அதனை விளக்கும் வகையில் ‘ஒரு பொய் சொன்ன தருமர் நரகங் கண்டார் . என்ன அவதிப்பட்டும் பொய் சொல்லாமல் சத்தியஞ் சொன்ன அரிச்சந்திரன் சொர்க்கமும் , கீர்த்தியும் பெற்றான் . நிச வசனம் சொல்வது அதிக சுக புண்ணியம்’ என்று
புராணச் செய்தியினை எடுத்துக் காட்டி முடிவு கூறியிருப்பது நயமிக்கதாக உள்ளது .

‘அந்தணர் என்போர்’ என்னும் குறளை ( 30 ) விளக்கும் போது , அந்தணர் என்னும் சொல்லுக்கு வள்ளுவர் கருதிய பொருளையும் , அச்சொல் தம் காலத்து ஒரு சாதிப் பெயராக வழங்கப் படுவதையும் மனத்துட் கொண்டு அவற்றைத்
தெளிவுபடுத்தியிருப்பது குறிப்பிடத் தக்கதாகும் . அவ்வுரை வருமாறு : “எல்லா உயிரும் தன்னுயிர் போலெண்ணி அன்புந் தயவும் கிருபையும் இரக்கமும் வைத்துப் பார்க்கும் நல்லோர்களே அந்தணர் என்பதாயிற்று . ஆதலால் அந்தணர் என்னும் பேர் பொருந்தினவர் தர்மகர்த்தரேயல்லாது . மற்றப் பிராமணர் முதலான பேர்களுக்கு அந்தணர் என்னும் பேர் வரமாட்டாது , சாதி அந்தணராகுமாம் .”
உயிருக்கும் உடம்பிற்கும் உளதாய நட்பினை ( தொடர்பு ) விளக்க வந்த வள்ளுவர் , ‘குடம்பை தனித் தொழியப் புட்புறக்தற்றே’ என்னும் ஓர் உவமை காட்டி விளக்கியுள்ளார் . மணக்
குடவர் குடம்பை என்பதற்குக் கூடு எனப் பொருள் கூறினார் . அவருக்குப் பின்னர் வந்த பரிமேலழகர் , கூடு என்னும் பொருளின் பொருந்தாமை காட்டி மறுத்து , முட்டை என்று பொருள் விளக்கம் செய்துள்ளார் .

இப்பழைய உரையாசிரியர் , கூடு , முட்டை என்னும் இரு பொருளையும் ஏற்று இணைத்து , "பட்சியானது கூட்டிலேயிருந்து அப்பாற் பறந்தது போலும் ; முட்டையிலிருந்து குஞ்சு வெளியேறினது போலும் உடம்போடு சீவனென்னும் உயிரிடை நட்பு" என்று விளக்கியுள்ளார் ( 338 ) .

'அவா என்பது' என்னும் குறளில் வரும் 'பிறப்பீனும் வித்து' என்னும் தொடரை விளக்குகையில் பரிமேலழகர், "உடம்பு இங்கிப் போங் காலத்து அடுத்த வினையும் , அது காட்டும் கதி .நிமித்தங்களும் , அக்கதிக்கண் அவாவும் உயிரின்கண் முறையே வந்துதிப்ப , அறிவை மோகம் மறைப்ப , அவ்வுயிரை அவ்வவா அக்கதிக்கண் கொண்டு செல்லுமாகலின் அதனைப் பிறப்பீனும் வித்து என்றார்' எனக் கூறியுள்ளார் . இக்கருத்தினை வாங்கி , எளிமைப்படுத்தி 'உடம்பு நீங்கி உயிர் போங்காலம் தான் செய்த இருவினைப் படியே மெய்ஞ்ஞான மென்னும் அறிவை மோகம் மறைப்ப , அவ்வுயிரை அவா வென்னும் ஆசை பற்ற , இதனால் பிறப்புண்டாயிற்று' என்று ( 361 ) விளக்கியுள்ளார் . இதில் 'அறிவை மோகம் மறைப்ப' என்னும் தொடரை அப்படியே ஆண்டிருப்பது குறிப்பிடத்தக்கது .

புதுமை .

திருக்குறளின் இயல்கள் பற்றிய பிரிவுகளில் உரையாசிரியர்கள் சிலர் மாறுபட்டுள்ளனர் . ஒவ்வோரதிகாரத்திலும் அமைந்துள்ள பத்துக் குறள்களும் மாறாமல் அமைந்த போதிலும் , முந்தைய உரையாசிரியர்கள் சிலர் ஒவ்வோரதிகாரத்திலுள்ள பத்துக் குறள்களின் வரிசையினைத் தம் விருப்பம் போல மாற்றியுள்ளனர் . பரிமேலழகர் உரைச் செல்வாக்கிற்குப் பின்னர் உரை கண்ட அண்மைக்கால உரையாசிரியர்கள் , பலரும் , பரிமேலழகர் கொண்ட குறள் நிரலினையே மேற்கொள்வாராயினர் . இந்தப் பழைய உரையாசிரியர் அதிகாரத்திலமைந்துள்ள குறள்களைத் தாம் விரும்பியவாறு மாற்றி அமைத்துள்ளார் . அதனோடமையாது, இதுகாறும், எந்த உரையாசிரியரும் மேற்கொள்ளாத ஒரு மாற்றத்தினையும் இவர் செய்துள்ளார் .

உரையாளர் எவரும் , வழக்கமாக அமையும் 1330 குறள்களில் ஒன்றைமாற்றி வேறொன்றைச் செருகும் முயற்சி மேற்கொள்ளவில்லை . பாட பேதம் காண

முடியுமேயன்றி , வேற்றுக் குறளைக் காண முடியாது . இந்த உரையில் , ஒழுக்கமுடைமை அதிகாரத்தைச் சேர்ந்த
'நன்றிக்கு வித்தாகும்' என்னும் குறளுக்கு வேறாக .
தன்மம் பெருக்கும் ஒழுக்கம் அதுவிடில்
கன்மம் பெருக்கும் கவர்ந்து என்னும் ஒரு குறள் வெண்பாவினை அவ்வதிகாரத்தின் ஈற்றுக் குறளாக அமைத்து உரையும் வரைந்துள்ளார் . இந்த வேற்றுக் குறள் இவருடையதோ அன்றிப் பிறர் எழுதியதோ என்பதனை அறியக் கூடவில்லை . அறிய முடியாத நிலையில் , அக்குறளை இவரே எழுதி இணைத்துள்ளார் என்று கொள்ளுவதில் தவறில்லை .

தேவாரம் , பெரிய புராணம் ஆகிய நூல்களில் வேறு புலவர் செய்த சில பாடல்கள் இடைச் செருகலாக அமைக்கப் பட்டனவென்பதும் , அவை வெள்ளிப் பாடல்கள் எனப்பட்டன என்பதும் கூறப்படுகின்றன.அவ்வகையில் இக்குறள் வெண்பாவினை. வெள்ளிக் குறள் என்று குறிப்பிடலாம் . ஆனால் , வெள்ளிப்பாடல் எனப்படும் பாடல்கள் இடைமிடைந்த நூல்களில் , உள்ள பாடல்களை அகற்றி விட்டுப் புதிதாக வெள்ளிப் பாடல்களைச் சோத்ததாகத் தெரியவில்லை.ஏற்கனவே அமைந்துள்ள பாடல்களோடு , வேறு சில பாடல்களை இயற்றி இடைமடுத்தனவாகவே அவை அமைந்தன . இங்கோ , மிகச் சிறந்தகுறள் ஒன்றினை அகற்றி விட்டு , வேற்றுக் குறள் வெண்பா ஒன்றினைத் திணித்து அதிகாரத்தை நிறைவு செய்த செயல் காணப்படுகிறது . பரிமேலழகர் , உவமானத் தொடரில் சில சொற்கொண்டு உவமேயத்தையும் , உவமேயத் தொடரில் சில சொற்கொண்டு உவமானத்தையும் பொருள் நிறைவு செய்து விளக்கம் கூறிய சிறந்த குறளினை நீக்கிவிட்டு இவ்வாறு வேறு செய்யுளை இணைத்த இம்முயற்சிக்குக் காரணம் யாதென அறியக் கூடவில்லை . காரணம் எதுவாயினும் குறள் பேணும் நல்லுகம் இதனை ஏற்றுக் கொள்ளாது என்பது உறுதி . இம்முயற்சி உரையாசிரியருடையதாக இருந்தாலும் அல்லது வேறொரு புலவருடையதாக இருந்தாலும் புறக்கணிக்கத் தக்கதேயாகும் .

பாட பேதம் :

ஒரு நூலிலுள்ள செய்யுளில், பயிற்சி, ஏடெழுதுவோர் கவனக் குறைவு போன்ற பல காரணங்களால் பாடபேதங்கள் உண்டாவது இயல்பே.கடுமையான யாப்பியல் வரையறையுடைய குறள் வெண்பாவில் பாட பேதம் உண்டாகும் வாய்ப்பு மிகவும்

குறைவாகும் . அவ்வகையில் சில பாடபேதங்கள் இவ்வுரைநூலில் அமைந்துள்ளன . அத்தகு பாடபேதங்களிற் சிலவற்றை ஏற்றும் சிலவற்றை மறுத்தும் கூறிப் பரிமேலழகர் தம் உரையில்
குறளைத் தெளிவுபடுத்தியுள்ளார்.அதனால் 'அவர் தம் உரையால் குறளுக்கு வேலியமைத்தார்' என்பது முன்னரும் விளக்கப்பட்டது . இவ்வுரையாசிரியர் கொண்ட குறட் பாடத்தில் அறத்துப் பாலில் மட்டும் 20 -க்கும் மேலான பாடபேதங்கள் அமைந்துள்ளன . பாடபேதங்களுக்கான இயல்பான காரணங்களோடு . அமைத்த வேலியை வலிந்து மீறும் இயல்பும் இம்மிகுதியான
பாடபேதங்களுக்குக் காரணமாகலாம் . இப்பாடபேதங்களை ஆராய்ந்து நோக்கினால் அவற்றுள் பல தேவையற்றன என்பது புலனாகும் . எனினும் அவற்றைச் செம்மை செய்ய முற்படாது , அப்பாட பேதங்களோடே பதிக்கப்பட்டுள்ளது இந்நூல் .
இருள்சேர் இருவினையும் சேரா என்பது ஏனையோர் கொண்ட பாடம். இருள்சேர் இருவினையும் சேராது ( 4 ) என்பது இவ்வுரையாசிரியர் கொண்ட பாடம் . இங்கு , இருவினை என்னும் பன்மையொடு சேராது என்னும் ஒருமை முடிவு மயக்கமாக உள்ளது.'பிறவிப் பெருங்கடல் நீந்துவர்' என்பதனைப் , பிறவிப் பெருங்கடலை நீந்துவர் என்று ( 8 ) உருபு விரித்துப் பாடங் கொண்டமையால் சிறப்பேதுமில்லை , துப்பாய தூஉம் என்பதனைத் துப்பாய தூவும் எனக் கொண்டு , ( 12 ) 'துப்பாகிய பொருள்களைக் கொடுக்கும்' என்று பொருள் தந்துள்ளார் .
'துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும்' என்பதனைத் 'துறந்தார்க்குந் தூவாதவர்க்கும்' எனக் கொண்டமையால் ( 42 ) எவ்விதப் பொருட் சிறப்பும் பெற்று விட வில்லை .
மறப்பினும் ஒத்துக்
கொளலாகும் என்பதனை 'மறப்பினும் ஓதிக் கொளலாகும்' என்று ( 136 ) கொண்டமையால் பெயர்ச் சொல் எச்சச் சொல்லான தன்றிப் பொருளில் குறிப்பிடத் தக்க வேறுபாடில்லை .
'ஒழுக்கம் இலான்கண் உயர்வு' என்பதனை எதுகை நோக்கி , " ஒழுக்காறில்லான் கண்' என்று (138 ) கொண்டார் போலும் ! 'இறந்தார் வாய்' என்பதனை 'இரந்தார் வாய்' எனக் கொண்டு
( 156 ) அதற்குத்தக இரப்பாளி என்று வேறு பொருள் கூறியுள்ளார். 'உடுப்பதூஉம் உண்பதூஉம்'என்பதனை'உடுப்பதுவும் உண்பதுவும்' எனக் கொண்டமை,

கம்பராமாயணத்தில் ‘உடுப்பதுவும் இன்றிக் கெடுகின்றாய்’ என்னும் தொடர்ச் செல்வாக்கி
னாலாகலாம், ‘கெடுப்பதூஉம் எடுப்பதூஉம்’ என்னுமிடத்தில் ( 15 ) இவ்வுரையாசிரியரே , அளபெடை வடிவத்தினை அவ்வாறே கொண்டுள்ளார் .
‘செவ்வியான் கேடும் நினைக்கப்படும்’
என்பதனைச் ‘செவ்வியான் கேடும் இமைப்பிற் கெடும்’ எனக் கொண்டு ( 156 ) இமைப் பொழுதும் நில்லாது கெடும் என்று வேறு பொருள் கூறியுள்ளார். ‘தான் பிறி தூனுண்பான்’ என்பதனைத் தான் ‘பிறி தூன் உண்பானேல்’ எனப்பாட பேதம் ( 255 ) கொண்டதனால் விளமுன் நேர் என்பது காய் முன் நேர் என்று மாறிய மாற்றம் தவிரப் பொருட்சிறப் பொன்றுமில்லை .
விலைப் பொருட்டால் என்பதனை , வினைப் பொருட்டால் எனக் கொண்டு ( 260 ) கூறும் பொருளில் தனிச் சிறப்பு அமைந்துள்ளதாகக் கூற முடியவில்லை .
‘பொச்சாப்புப் பார்ப்பார் கண்’ என்பதனைப் ‘பொய்ச்சார்ப்புப் பார்ப்பார் கண்’ என்று கொண்டு ( 288 ) அதற்குத்தகப் பொருள் கூறியுள்ளார் . இவ்வாறு , இவ்வுரையாசிரியர் பாடபேதங் கொண்டவிடங்களைக் காணும் போது பொருளால் வேறுபடும் இடங்கள் குறைவாக அமைவதனையும் , அப்பொருள் தானும் இன்றியமையாச் சிறப்புடையதன்று என்பதும் புலனாகும் . யாப்பியல் பிழையாமை என்னும் ஒன்றினை மட்டும் மேற்கொண்டு இவ்வாறெல்லாம் பாடபேதம் கொள்வது உரையறமாகாதெனலாம் , குறளுக்குப் பரிமேலழகர் கூறிய கருத்தினை உடன்படாவிடிலும் , அவர் வகுத்த உரைவேலியினை மதித்துப் போற்றுவது பின்னை உரையாசிரியர்கள் பின்பற்றத் தக்க உரையறமுமாகும் . இல்லையேல் காலப் போக்கில் குறளின் மூல வடிவம் பலவாறாகத் திரிந்து கெடும் வாய்ப்புப் பெருகி விடும் .

உரையில் உவமை .

குறட் கருத்தினையோ தொடரினையோ விளக்குங்கால் இவ்வுரையாசிரியர் சிலவிடத்தே தக்க உவமைகளைப் பயன்படுத்தியுள்ளார் . ‘தாளை வணங்காத் தலை’ ( 8 ) என்பதற்குத் ‘தாளை
வணங்காத பேர் , அவரது தேகம் சித்திரம் எழுதிய மரப் பாவைக்கு ஒக்கும்’ என்று கூறியுள்ளார் . அவர் பயன்படுத்திய உவமைகளிற் சிலவற்றை அடியிற் காணலாம் .

அறிவறிந்த மக்கட்பேறு - பொற்பூவும் வாசமும் போல அறி
வறிந்த கல்விச் செல்வமான பிள்ளையைப் பெறுதல் ( 61 ) .

விருந்து புறத்ததாத் தானுண்டல் -சுற்றத்தார் அகதி பரதேசி இரப்போர் முதலான பேர் இளைப்போடும் பசித்துப் புறத்திருக்கத் தான் பார்த்தும் பாராதது போலே தன் வயிறே பெரிதாய் மலந்தின்னும் வராகம் போலே பொசிப்பது ( 81 ) .

விருந்தோம்பி வேளாண்மை செய்தலின் பயன் விதைத்து ஒரு கோட்டைத் தவசம் அனுபவிப்பது போலே இம்மைக்குச் செல்வமும் ஆயிசு வார்த்தினையும் தீவினை விலக்கமும்
உண்டாய்ப் பொன்றும் காலத்துக்குத் துணையாம் ( 82 ) .
நாவினால் சுட்டவடு - அகங்கார நிமித்தம் தாரதம்மியந் தெரியாமல் கொடூரமான வசனங்களைப் பேசினால் அது கேட்டவுடனே எண்ணெய்ப் பந்தத்தினாற் பொசுக்கினது போலே சூடுண்டாய் மனம் புண்ணாகும் ( 124 ) .
பிறன் வரையாள் பெண்மை நயத்தல் - பிறன் மனையாளை விரும்பி காய் போலே திரியும் பாவி ( 141 ) .
அருளாதான் செய்யும் அறம் - குழந்தை கையில் மாணிக்கம் போல அறிவில்லான் செய்யும் தருமம் ( 249 ) .
துறந்தார்- பொறி புலாதி யெண்ணும் ஆணவ மாயை சிறந்த தொண்ணூற்றாறு தத்துவமும் உடலோடு இருக்கப் புனியம் பழமும் தோடும் போலே துறந்து தவசு பண்ணும் ரிஷி ( 301 ) .
பெண் பற்றிய கருத்து .
தம் காலத்தில் நிலவும் சில கருத்துக்களின் தாக்கத்திற்கு உட்படாமல் உரைவரை வரைவது அரிதேயாகும் . மிகச் சிறந்த உரையாசிரியராகிய பரிமேலழகரும் தம் காலக் கருத்தினின்றும்
விடுபட இயலாது . சான்றோன் எனக் கேட்டதாய் என்னும் தொடரை விளக்குங்கால் , “பெண்ணியல்பால் தானாக அறியாமையில் ‘கேட்டதாய்’ எனக் கூறினார்” என்று குறிப்பிட்டுள்ளார்.(திருக்.பரி.69) அவ்வாறே , ‘பெறுமவற்றுள்’ என்னுங் குறளின்

விளக்கவுரைப் பகுதியில்,’அறிவறிந்த என்றதனால் மக்கள் என்னும் பெயர் , பெண்ணொழித்து நின்றது’ என்று எழுதியுள்ளார்.( திருக்.பரி.61).இவை காலச் சூழலால் தோன்றும் கருத்துக்களின் தாக்கத்திற்கு ஆட்பட்டு . அவற்றிலிருந்து மீள இயலாத நிலையில் அவற்றை உடன்பட்டெழுதியதன் பயனாகும். இவ்வாறே இந்தப் பழைய உரையாசிரியரும் , ‘பெண்ணிற் பெருந்தக்க’ என்னும் குறளுரையில் , ‘பெண் சென்மம் பாவத்திலெடுத்த ஈன ஸ்ரீ ( 53 ) என்று குறிப்பிட்டுள்ளார் .

இவ்வுரையின் இயல்பு எத்தகையதாயினும் , நூல் முழுவதற்கும் உரை கிடைக்காதது ஒரு குறையேயாகும் . வணிக நோக்குடைய பதிப்பாளர் எவரும் , நூல் முழுவதற்கும் அமையாமல் குறைபட்டுள்ள உரையைப் பதிப்பித்து வெளியிட முன் வரார் . ஆய்வாளர்களுக்குப் பயன்பட வேண்டும் என்பதில் மிக்க நாட்டமுடைய தஞ்சைச் சாரபோசி மன்னர் சரசுவதி மகால் நூலகத்தார் இவ்வுரைப் பகுதியோடு அறத்துப் பாலினை முதற் கண் வெளியிடுவது பாராட்டுதற்குரிய செயலாகும் அறத்துப்பால் மட்டும் கொண்ட இந்நூல் வெளிவந்த பின்னர் , இவ்வுரையின் எஞ்சிய பகுதி கிடைக்குமாயின் , இவர்கள் உவந்து வெளியிடுவார்கள் என்பதில் ஐயமில்லை . பொருட்பாலில் அரசியலுக்கும் அங்கவியலில் ஒரு பகுதிக்கும் இந்தவுரை கிடைத்துள்ளது . எஞ்சிய பகுதியும் கிடைத்து உரை முழுதும் வெளிவருமாயின் திருக்குறட் கருவூலத்தை ஆய்ந்து காண முற்படும் அறிஞர்க்கு அஃதோர் அரும்பேறாக அமையும் .

# மெய்ப்பொருள் காண்பது அறிவு

---------திருக்குறளார் முனைவர் இர. பிரபாகரன்

மனிதர்களின் ஆழ்மனத்தில், “நாம் ஏன் பிறந்தோம்? பிறந்தவர்கள் அனைவரும் இறக்கத்தான் வேண்டுமா? இறந்த பின்னர் உடலைவிட்டு உயிர் விலகித் தனித்து இயங்குமா? மறுபிறவி என்ற ஒன்று உண்டா? கடவுள் என்று ஒருவர் உண்மையிலேயே இருக்கிறாரா?” போன்ற கேள்விகள் எழுகின்றன. இத்தகைய கேள்விகள் ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகக் கோடிக் கணக்கான மக்களிடம் இருந்துவருகின்றன. இது போன்ற கேள்விகளுக்குத் தங்களிடத்தில் விடைகள் இருப்பதாக மதங்கள் கூறுகின்றன. ஆனால், மதங்கள் கூறும் விடைகளில் கருத்து ஒற்றுமை இல்லை. வள்ளுவரும் இது போன்ற சில கேள்விகளுக்கு விடை அளிக்கிறார்.

நிலையாமை

வாழ்க்கை, செல்வம் ஆகியவை நிலையில்லாதவை என்பதைப் பல குறட்பாக்களில் வள்ளுவர் வலியுறுத்துகிறார். ஒருவனிடம் பெருஞ்செல்வம் சேர்தல், கூத்தாடுகின்ற அரங்கில் சிறிது சிறிதாகக் கூட்டம் வந்து சேர்வதைப் போன்றது. அச்செல்வம் கைவிட்டுப் போவது, கூத்து முடிந்தவுடன் அக்கூட்டம் கலைந்து போவதைப் போன்றது. அதாவது, செல்வம் கொஞ்சம் கொஞ்சமாக வந்து சேரும். ஆனால், அது போகும்போது விரைவில் சென்றுவிடும் (குறள் – 332). அண்மையில் கொரொனா நோய்க்கிருமியால் உலகெங்கும் பொருளாதாரச் சரிவு ஏற்பட்டதால், பலருடைய

செல்வம் வெகுவிரைவில் பெருமளவில் குறைந்தது குறிப்பிடத்தக்கது. நேற்று உயிரோடு இருந்தவர் இன்று உயிரோடு இல்லை என்பதுதான் இவ்வுலகின் பெருமை (குறள் – 336). நாள் என்பதைப் பற்றி நன்கு அறிந்தவர்கள், அது ஒரு கால அளவன்று என்றும், அது உடலிலிருந்து உயிரைச் சிறிது சிறிதாகப் பிரிக்கும் வாள் என்பதையும் உணர்வார்கள் (குறள் – 334).

கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று. (குறள் – 332)
நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்துஇவ் வுலகு. (குறள் – 336)
நாளென ஒன்றுபோற் காட்டி உயிர்ஈரும்
வாளது உணர்வார்ப் பெறின். (குறள் – 334)

யாக்கை (உடல்) நிலையாமை, செல்வம் நிலையாமை, மற்றும் இளமை நிலையாமை பற்றிய கருத்துக்களை சமண முனிவர்களால் இயற்றப்பட்ட நாலடியாரிலும், சைவத்திருமுறை பன்னிரண்டில் பத்தாவது திருமுறையாகக் கருதப்படும் திருமூலர் இயற்றிய திருமந்திரத்திலும் காணலாம். யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை போன்றவற்றில் எவருக்கும் கருத்து வேறுபாடு இருக்க முடியாது. ஒருவருடைய செல்வம் பெருகுவதற்கும், குறைவதற்கும் வாய்ப்பு உள்ளது. சில சமயங்களில் சிலருடைய செல்வம் முற்றிலும் அழியலாம். சிலருடைய செல்வம் அவர்கள் இறந்த பிறகு அவர்களுடைய சந்ததியினருக்குச் சென்றடைவதையும் நாம் காண்கிறோம். அதனால், செல்வம் நிலையில்லாதது என்று உறுதியாகக் கூறமுடியாது.

உயிர்

உயிர் என்பது நமது உடலை இயக்கும் ஒரு ஆற்றல் என்று கருதப்படுகிறது. உயிர் நிலையானது என்றும், அது மீண்டும் மீண்டும் பல பிறவிகளை எடுக்கிறது என்றும் வள்ளுவர் கருதுகிறார். இவ்வுடம்புக்கும் உயிருக்குமுள்ள நட்பு, முட்டைக்குள் இருந்த பறவை இறக்கை முளைத்தபின் வெளிவந்து, அந்த முட்டையைவிட்டுப் பறந்து போவதைப் போன்றது (குறள் – 338). மற்றும், சாவு என்பது உறக்கத்தைப் போன்றது;

பிறப்பு என்பது உறங்கி விழித்தலைப் போன்றது (குறள் – 339). உறங்கியவன் மீண்டும் எழுவதைப்போல், ஒரு உடலில் இருந்த உயிர் அந்த உடலின் மரணத்திற்குப் பிறகு அந்த உடலைவிட்டு வெளியேறி, மீண்டும் மற்றொரு உடலோடு இயங்குகிறது என்பதை உணர்ந்த வள்ளுவர், "உடம்பில் ஒதுக்குக் குடியாக இருந்த உயிர்க்கு புகுந்து தங்குதற்கு நிலையான ஒரு இல்லம் அமைந்திடவில்லையே (குறள் – 340)" என்று வியக்கிறார்.

குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே
உடம்பொடு உயிரிடை நட்பு. (குறள் – 338)
உறங்கு வதுபோலுஞ் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. (குறள் – 339)
புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு. (குறள் – 340)

வள்ளுவர் காலத்தில், இன்றைய இந்து மத்தின் முன்னோடியாக இருந்த மதம் வைதீக மதம் அந்த மதத்தில், ஆத்மா என்ற ஒன்று உடலில் இருப்பதாகவும், உயிர் உடலைவிட்டு நீங்கினால் ஆத்மா உடலைவிட்டு நீங்குவதாகவும் கூறப்படுகிறது. மேலும், "ஆத்மா நிலையானது. உடல் அழிந்தாலும் ஆத்மா அழியாமல் மீண்டும் மீண்டும் பிறவிகளை எடுக்கிறது." என்ற கருத்தும் வைதீக மதத்தில் காணப்படுகிறது. சமண மதத்திலும் ஆத்மாவைப் பற்றி இதே கருத்துக்கள் காணப்படுகின்றன. சமண மதம் "ஆத்மா" என்ற சொல்லுக்குப் பதிலாக "ஜீவா" என்ற வடமொழிச் சொல்லைப் பயன்படுத்துகிறது. "ஜீவா" என்ற சொல் தமிழில் உள்ள "உயிர்" என்ற சொல்லுக்கு இணையான வடமொழிச்சொல். ஆத்மா என்பதற்கு இணையான தமிழ்ச்சொல் இல்லாததால் உயிர் என்ற சொல் ஆத்மாவைக் குறிக்கும் சொல்லாகத் தமிழில் பயன்படுத்தப்படுகிறது. வள்ளுவரும் ஆத்மாவைத்தான் உயிர் என்று குறிப்பிடுவதாகத் தோன்றுகிறது.

கர்மா

கர்மா என்ற சொல்லுக்குச் செயல் என்பது பொதுவான பொருள். ஒவ்வொரு செயலுக்கும் எதிர் வினை ஏற்படும் என்பது உலகப் பொது வழக்கு. அந்த வழக்குப்

போலவே, வைதீக மதத்தில் ஒவ்வொருவரின் செயலுக்கும் ஏற்றாற்போல் பலன் கிட்டும் என்பதைக் குறிப்பதற்கு வைதீக மதம் “கர்மா” என்ற சொல்லைப் பயன்படுத்துகிறது. ஒருவருடைய கர்மா என்பது அவரவர் வினைப்பயன். அது அவரவர் செய்யும் செயல்களில்தான் இருக்கிறது. நல்ல செயல்களைச் செய்தால் அதன் பயன் நன்மையானதாக இருக்கும். மாறாக, தீவினை துன்பம் தரும் என்பது வேதங்களில் காணப்படும் கருத்து. ஒருவருடைய கர்மா (வினைப்பயன்கள்) அவருடைய ஆத்மாவோடு தொடர்புகொண்டு அவருடைய அடுத்த பிறவியில் அவருடைய வாழ்க்கை எப்படி இருக்கும் என்பதையும் முடிவு செய்கிறது என்று வேதங்களில் கூறப்பட்டுள்ளது. வேதாந்தத் தத்துவத்தின்படி தீவினைகள் செய்தவர்கள், மரணத்திற்குப் பிறகு நரகத்தில் உழன்று மீண்டும் பூமியில் இழி பிறப்பாளர்களாகவும், நல்வினைகள் செய்தவர்கள் சொர்க்கலோகம் சென்று, நல்வினைப்பயன்கள் முடிந்தவுடன் மீண்டும் புவியில் உயர்பிறப்பாளர்களாகவும் பிறப்பர். சமண மதத்திலும் கர்மாவைப் பற்றி ஏறத்தாழ இதே கருத்துக்கள் காணப்படுகின்றன.

வள்ளுவரும் கர்மாவும்

நற்செயல்களைச் செய்தவர்கள் அவர்களின் செயல்களுக்கேற்ப நற்பயன் அடைவார்கள் என்ற கருத்தும், தீச்செயல்களைச் செய்தவர்கள் அவர்களின் செயல்களுக்கேற்ப தீயபயன்களை அடைவார்கள் என்ற கருத்தும் குறளில் காணப்படுகின்றன. அவர்கள் அடையும் பயன் இம்மையிலோ அல்லது மறுமையிலோ இருக்கலாம் என்றும் வள்ளுவர் கூறுகிறார். ”பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கு இன்னா பிற்பகல் தாமே வரும் (குறள் -319)” என்ற குறளில், தீவினைகளினால் வரும் தீயபயன்கள் இப்பிறவியிலேயே வரும் என்ற கருத்து காணப்படுகிறது. ”சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும் (குறள் – 98)” என்ற குறளில், இன்சொற்களால் வரும் இன்பம் இப்பிறவியிலும் மறுபிறவியிலும் வரும் என்று வள்ளுவர் கூறுகிறார். ஒருவருடைய நற்செயல்களின் பயன்களும் தீச்செயல்களின் பயன்களும் இம்மையில் அல்லது மறுமையில் அல்லது இம்மை மற்றும் மறுமை ஆகிய இரண்டு நிலைகளிலும் அவரை வந்தடையலாம் என்ற கருத்து குறளில் காணப்பட்டாலும், அவருடைய

மறுபிறவி கர்மாவால் முடிவு செய்யப்படுகிறது என்ற கருத்து குறளில் காணப்படவில்லை.

வள்ளுவர் பார்வையில் மறுபிறவி

ஆத்மா மீண்டும் மீண்டும் பிறவிகளை எடுக்கிறது என்பதில் வள்ளுவர் நம்பிக்கை உடையவர் என்பது பல குறட்பாக்களிலிருந்து தெரிகிறது. இப்பிறவிக்குப் பிறகு, மற்றுமொரு பிறவியைப் பற்றிப் பல குறட்பாக்களில் வள்ளுவர் கூறுகிறார், இப்பிறவியில் மட்டுமல்லாமல் மறுபிறவியிலும் இன்சொல் இன்பம் தரும் (குறள் – 98) என்றும், மனநலத்தால் மறுமையிலும் இன்பம் கிடைக்கும்(குறள் – 459) என்றும், மனைவிக்கு அஞ்சி வாழ்பவன் மறுமையிலும் புகழ் இல்லாதவன் (குறள் – 904) என்றும், வறுமையால் மறுபிறவியிலும் இன்பம் இல்லை (குறள் – 1042) என்றும், வள்ளுவர் மறுமையைப் பற்றிக் கூறுகிறார்.

சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும். (குறள் – 98)
மனநலத்தின் ஆகும் மறுமைமற்று அஃதும்
இனநலத்தின் ஏமாப்பு உடைத்து. (குறள் – 459)
மனையாளை அஞ்சும் மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்தல் இன்று. (குறள் – 904)
இன்மை எனவொரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும். (குறள் – 1042)

பழியில்லாத மக்களைப் பெற்றால் பின்வரும் பிறவிகளிலும் துன்பங்கள் அணுகா (குறள் – 62) என்றும், தங்களுக்கு நேர்ந்த துன்பத்தை நீக்கியவருடைய நட்பைப் பல பிறவிகளிலும் மக்கள் நினைவில் வைத்துக்கொள்வார்கள் (குறள் – 107) என்றும், ஒருவன் தன் ஐம்புலன்களையும் ஒரு பிறப்பில் ஆமை தன் கால்களையும் முகத்தையும் உள்ளே இழுத்துக் கொள்வதைப்போல் அடக்கிக்கொள்வானானால், அது பின்வரும்

பிறவிகளிலும் அவனுக்குப் பாதுகாவலாக இருக்கும் என்றும் (குறள் – 126), ஒருவன் ஒரு பிறப்பின்கண் கற்ற கல்வி அவனுக்குத் தொடர்ந்து வருகின்ற பிறவிகளிலும் உதவியாக இருக்கும் (குறள் – 398) என்றும், பின்வரும் பிறவிகளில் தான் நரகம் என்னும் சேற்றில் அழுந்திக் கிடக்கும் நிலையை, அறிவில்லாத பேதையாகிய ஒருவன், தனது ஒருபிறப்பிலேயே செய்துகொள்ளும் ஆற்றலுடையவன் என்றும் (குறள் - 835) வள்ளுவர் கூறுகிறார்.

எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின். (குறள் – 62)
எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமம் துடைத்தவர் நட்பு. (குறள் – 107)
ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து. (குறள் – 126)
ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து. (குறள் – 398)
ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக் கழுந்தும் அளறு. (குறள் – 835)

“இம்மை” என்பதற்கு “இக்காலம்” என்றும், “மறுமை” என்பதற்குப் “பிற்காலம் அல்லது எதிர்காலம்” என்றும், “எழுமை” என்பதற்கு “நீண்ட காலம்” என்றும் பொருள் கூறுவது இக்காலத்தில் நமக்கு ஏற்றதாகத் தோன்றினாலும், வள்ளுவர் காலத்தில் அவை “இப்பிறவி”, “மறுபிறவி”, “எழுகின்ற பிறவிகள்” ஆகியவற்றைக் குறிக்கும் சொற்களாகவே பயன்படுத்தப்பட்டன. எழுமை என்பதற்கு ஏழுபிறப்புக்கள் என்று பலரும் பொருள்கொண்டாலும், வள்ளுவர் அவ்வாறு கருதுவதாகத் தோன்றவில்லை. ”குடம்பை தனித்து ஒழியப் புள்பறந் தற்றே, உடம்பொடு உயிரிடை நட்பு (குறள் – 338)” என்ற குறளையும், ”உறங்குவது போலுஞ் சாக்காடு உறங்கி விழிப்பது போலும் பிறப்பு (குறள் -339).” என்ற குறளையும், ”புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள் துச்சில் இருந்த உயிர்க்கு (குறள் – 340)” என்ற குறளையும் ஆழ்ந்து

சிந்தித்துப் பார்த்தால், பிறப்புக்கள் மீண்டும் மீண்டும் வருவதாகவும் அவை எண்ணற்றவை என்றும் வள்ளுவர் கருதுவதாகத் தோன்றுகிறது. ஒருவனைப் பார்த்து, “அவன் நாலும் தெரிந்தவன்” என்றால் அவன் நான்கு செய்திகளை மட்டும் தெரிந்தவன் என்று பொருள்கொள்வது தவறு. அவன் பலவற்றை அறிந்தவன் என்பதுதான் பொருள். அதுபோல், எழுபிறப்பு என்பதற்கு எழுகின்ற பிறப்புக்கள் என்று பொருள்கொள்வது சரியானதாகத் தோன்றுகிறது.

வள்ளுவர் பார்வையில் மறுபிறவிக்குக் காரணம் என்ன? அவற்றைத் தவிர்ப்பது எப்படி?

துன்பத்திற்குக் காரணம் அவா என்பது வள்ளுவரின் கருத்து. அவா இல்லாதவர்களுக்குத் துன்பம் இல்லை என்றும், அவா இருந்தால் துன்பங்கள் மேலும்மேலும் விடாது வந்துகொண்டே இருக்கும் என்றும் வள்ளுவர் கூறுகிறார்.

அவாஇல்லார்க்கு இல்லாகும் துன்பம்அஃ துண்டேல்
தவாஅது மேன்மேல் வரும். (குறள் – 368)

அவா (ஆசை) என்பது ஒருபொருள்மீது நமக்குள்ள விருப்பம். ஒரு பொருள்மீது நமக்குள்ள விருப்பம் தீவிரமாக மாறும்பொழுது அது பற்று என்று அழைக்கப்படுகிறது. உதாரணமாக, ஒருவன் மது அருந்துவதில் விருப்பம் உள்ளவனாக இருந்து குடிகாரனாக மாறும்பொழுது, அவனுக்கு மதுமீதுள்ள விருப்பம் பற்றாகிறது. பற்று என்ற சொல்லுக்கு “பசை” என்று ஒருபொருள் உண்டு. விரும்பிய பொருளின்மீது உள்ள விருப்பம் நம் மனத்தில் பசைபோல் ஒட்டிக்கொள்ளும்பொழுது விருப்பம் பற்றாக மாறுகிறது. ஒரு பொருளின்மீது நமக்கு உள்ள விருப்பம் பற்றாக மாறும்பொழுது, அந்தப்பொருள் இல்லாமல் நம்மால் இருக்க முடியாது. குடிகாரனுக்கு மது இல்லாமல் இருக்க முடியாது. ஒரு போதைப் பொருளைப் பயன்படுத்துபவனால் அந்தப்பொருள் இல்லாமல் இருக்க முடியாது. அவா என்னும் விதை முளைத்துப் பற்றாக வளர்கிறது. பற்றுக்களால் ஆத்மா மீண்டும் பிறக்கிறது என்பது வள்ளுவரின் கருத்து (குறள் – 361). ஆகவே, பற்றுக்கள்தான் ஆத்மா மீண்டும் மீண்டும் பிறப்பதற்குக் காரணம். பற்றுக்களைத் தவிர்த்தால்தான் தொடர்ந்து வருகின்ற

பிறவிகளிலிருந்து விடுதலை பெறமுடியும். பற்றுக்களை நீக்காவிட்டால் மாறிமாறிப் பிறவிகள் வருகின்ற நிலையாமையே காணப்படும் (குறள் – 349).

அவாஎன்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து. (குறள் – 361)

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும். (குறள் – 349)

“அவா அறுத்தல்” என்ற அதிகாரத்தில், பிறப்பிற்குக் காரணம் பற்றுக்கள் என்றும், பற்றுக்களை நீக்கினால் மீண்டும் பிறப்பில்லை என்றும் கூறும் வள்ளுவர், “கடவுள் வாழ்த்து” என்ற அதிகாரத்தில், ”இறைவன் திருவடியாகிய புணையைச் சேர்ந்தவர் பிறவியாகிய பெருங்கடலைக் கடப்பார்கள்; அப்புணையைச் சேராதவர் பிறவியாகிய பெருங்கடலைக் கடக்க மாட்டார்கள் (குறள் – 10).” என்று கூறுகிறார்.

பிறவிப் பெருங்கடல் நீந்துவார் நீந்தார்
இறைவன் அடிசேரா தார். (குறள் – 10)

அதாவது, ”இறைவனை இடைவிடாமல் நினைத்துத் தொழுது இறைவன் அருள் பெற்றவர்களுக்கு மீண்டும் பிறவி இல்லை. அவ்வாறு அருள் பெறாதவர்களுக்கு மீண்டும் பிறவி உண்டு.” என்று வள்ளுவர் கூறுவதாகத் தோன்றுகிறது.
”ஒருவன் மீண்டும் பிறவாமல் இருக்க வேண்டும் என்று நினைத்தால், பற்றுக்களை நீக்க வேண்டுமா அல்லது கடவுளைத் தொழ வேண்டுமா?” இந்த இரண்டு அணுகுமுறைகளும் ஒன்றோடு ஒன்று முரணானவையா?” என்ற கேள்விகள் எழுகின்றன. ஒருவன் சென்னையிலிருந்து மதுரைக்குச் செல்ல வேண்டுமானால், விமானத்தில் செல்லலாம். அல்லது சீருந்தில் செல்லலாம். இவை இரண்டும் முரணானவை அல்ல. இவை இரண்டும் ஒரு இடத்தை அடைவதற்கான இரண்டு வழிகள். கடவுள் நம்பிக்கை உடையவர்கள் கடவுளைத் தொழுவதோடு மட்டுமல்லாமல், பற்றுக்களை விலக்கிக்கொள்ளும் முயற்சிகளிலும் ஈடுபடலாம். அது, சென்னையிலிருந்து மதுரைக்குச் செல்ல விரும்புபவன், திருச்சிக்கு விமானத்தில் சென்று பிறகு திருச்சியிலிருந்து மதுரைக்குச் சீருந்தில் செல்வது போன்றது. ஆகவே, இரண்டு நெறிகளும் வள்ளுவருக்கு உடன்பாடானவையாகத் தோன்றுகிறது.

அவாவை விலக்கினால் என்ன நடைபெறும்?

அவாவை முற்றிலும் விலக்கினால் இப்பிறவியிலேயே இடையறாத இன்பம் கிடைக்கும் என்று வள்ளுவர் கூறுகிறார் (குறள் – 369). ஒருபோதும் நிரம்பாத இயல்புடைய அவாவை ஒருவன் விடுவானாயின், அந்த நிலையில் அவன் மாறாத இயல்புடைய இயற்கையான நிலையை அடைவான் (குறள் – 370). அவாவை விடுவதால் இப்பிறவியில் கிடைக்கும் "இடயறாத இன்பம்" பிறவாத நிலையிலும் தொடருமா என்பது தெளிவாகக் கூறப்படவில்லை.

இன்பம் இடையறாது ஈண்டும் அவாவென்னும்
துன்பத்துள் துன்பம் கெடின். (குறள் – 369)
ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும். (குறள் – 370)

மெய்ப்பொருள் காண்பது அறிவு

தெய்வம் என்ற சொல்லைப் பல இடங்களில் வள்ளுவர் பயன்படுத்துகிறார் (குறட்பாக்கள் 43, 50, 55, 619, 702 மற்றும் 1023). இறைவன் என்ற சொல்லை "கடவுள் வாழ்த்து" என்ற அதிகாரத்தில் வள்ளுவர் பயன்படுத்துகிறார் (குறட்பாக்கள் 5,10), "தாமரைக்கண்ணான்", "வகுத்தான்", "பற்றற்றான்", "உலகியற்றியான்" .ஆகிய சொற்களையும் வள்ளுவர் பயன்படுத்துகிறார். இது போன்ற கருத்துக்கள் மக்களிடையே பரவியிருந்ததால், வள்ளுவர் இச்சொற்களைப் பயன்படுத்தியிருக்கலாம் அல்லது வள்ளுவர் கடவுள் நம்பிக்கை உடையவராக இருந்திருக்கலாம். ஆகவே, தெய்வம், கடவுள் ஆகியவற்றில் வள்ளுவர் நம்பிக்கை இல்லாதவர் என்று உறுதியாகக் கூறமுடியாது. எவ்வாறாயினும், கடவுளைப் பற்றிய தெளிவான கருத்துக்கள் குறளில் காணப்படவில்லை என்பது தெளிவு.

ஆத்மாவைப் பற்றி வள்ளுவர் கூறும் கருத்திற்கும் சமண வைதீக மதங்கள் ஆத்மாவைப் பற்றிக் கூறும் கருத்திற்கும் ஓரளவு ஒற்றுமை இருக்கிறது. புத்த மதம் ஆத்மா என்ற ஒன்று இல்லை என்று கூறுகிறது. எது உண்மை? வள்ளுவரும் புத்தரும்

பிறவிக்குக் காரணம் ஆசை என்கிறார்கள். சமண மதமும் வைதீக மதமும் பிறவிக்குக் காரணம் கர்மா என்று கூறுகின்றன. எது உண்மை? ஆத்மா மீண்டும் மீண்டும் பிறவிகளை எடுக்கிறது என்று வைதீக, சமண மதங்கள் கூறுகின்றன. ஆத்மா என்ற ஒன்று இருப்பதை புத்த மதம் ஏற்றுக்கொள்ளாததால், ஆத்மாவிற்குப் பதிலாக எந்நேரமும் மாறிக் கொண்டிருக்கும் மனச் சக்தியின் ஓட்டம் (Consciousness) மறுபிறவிகளை எடுப்பதாகப் புத்த மதம் கூறுகிறது. எது உண்மை? வைதீக, சமண, புத்த மதங்கள் ஆத்மா (அல்லது மனச் சக்தி) பல பிறவிகளை எடுக்கிறது என்று கூறுகின்றன. கிறித்துவ, இஸ்லாமிய மதங்கள் ஆத்மா மீண்டும் பிறப்பதில்லை என்று கூறுகின்றன. எது உண்மை? கடவுள் என்ற ஒருவர் இருக்கிறார் என்று வைதீக, கிறித்துவ, இஸ்லாமிய மதங்கள் கூறுகின்றன. சமண புத்த மதங்கள் கடவுள் என்ற ஒருவர் இருப்பதை ஏற்றுக்கொள்ளவில்லை. எது உண்மை? இந்து மதத்தின் கடவுட்கொள்கை அதன் முன்னோடியாகிய வைதீக மதத்திலிருந்து வேறுபடுகிறது. எது உண்மை? பிறவிகள் எல்லாம் முடிந்த பிறகு ஆத்மா கடவுளோடு ஒன்றிவிடுவதாக வைதீக மதம் கூறுகிறது (அத்வைதம்). பிறவாத நிலையைப் பற்றிய கருத்துக்களில் சமண, புத்த, கிறித்துவ, இஸ்லாமிய மதங்கள் வெவ்வேறு கருத்துக்களைக் கூறுகின்றன. எது உண்மை? உண்மை என்பது ஒவ்வொரு மதத்தினருக்கும் வெவ்வேறாக இருக்க முடியாது. கடவுள் என்ற ஒருவரைப் பற்றிய தெளிவான கருத்துக்கள் விஞ்ஞானிகளிடையேயும் காணப்படவில்லை. பல விஞ்ஞானிகள் கடவுள் நம்பிக்கை இல்லாதவர்களாகவும், பல விஞ்ஞானிகள் கடவுள் நம்பிக்கை உடைவர்களாகவும் உள்ளார்கள். கடவுள் இல்லையென்றோ உண்டு என்றோ இதுவரை எந்த விஞ்ஞானியும் திட்டவட்டமாக நிரூபிக்கவில்லை.

இந்தக் குழப்பமான சூழ்நிலையில் நாம் என்ன செய்வது? மதங்களும் வள்ளுவரும் கூறும் கருத்துக்களை ஏற்றுக்கொள்வதா அல்லது மறுப்பதா? இந்தச் சிக்கலான கேள்விக்கும் வள்ளுவர் விடை அளிக்கிறார்.

> எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பது அறிவு. (குறள் – 423)

ஒவ்வொருவரும் தங்கள் பகுத்தறிவைப் பயன்படுத்தி, யார் எதைச் சொன்னாலும் அந்தக் கருத்து ஏற்றுக்கொள்ளக் கூடியதா என்று ஆராய்ந்து, உண்மையைக் கண்டுபிடிப்பதுதான் உண்மையான அறிவு என்பது வள்ளுவரின் கருத்து. ஆனால், ஆத்மா, கர்மா, மறுபிறவி, பிறவாத நிலை, கடவுள் போன்றவற்றிற்கு மதங்களிடையே மிகுந்த கருத்து வேறுபாடுகள் உள்ளன. இவற்றை ஆராய்ந்து அனைவரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய - மறுக்க முடியாத - உண்மைகளை இதுவரை எவரும் கூறவில்லை. இந்த நிலையில், சாதாரண மனிதன் எவ்வாறு மெய்ப்பொருளைக் கண்டறிய முடியும்? இது போன்ற கருத்துக்களைப் பற்றிக் கவலைப்படுபவர்களின் எண்ணிக்கை மிகமிகக் குறைவு. ஆத்மா, கர்மா, மறுபிறவி, கடவுள், பிறவாத நிலை ஆகியவற்றைப் பற்றி அனைவராலும் ஏற்றுக்கொள்ளக்கூடிய, மறுக்கமுடியாத உண்மைகளை அறிஞர்கள் கண்டுபிடிக்கும்வரை நம்மைப் போன்றவர்கள் எது மூடநம்பிக்கை என்று நமக்குத் தெளிவாகத் தோன்றுகிறதோ அவற்றைத் தவிர்க்கலாம். மற்ற நம்பிக்கைகளைப் பற்றியும் நாம் ஆராயலாம். மதங்களும் மதவாதிகளும் கூறும் கருத்துக்களை ஆராயாமல் உண்மை என்று ஏற்றுக்கொள்ளத் தேவையில்லை.

இந்தச் சூழ்நிலையில், இல்லற வாழ்க்கையில் இருந்து, மனைவி, மக்கள், பெற்றோர், சுற்றத்தார், நண்பர்கள் ஆகியோரோடு அன்போடு பழகி, அவர்களுக்கு ஆதரவாக இருந்து, அடக்கத்தையும் ஒழுக்கத்தையும் கடைப்பிடித்து, பிறர்க்கும், பிறவுயிர்களுக்கும் எவ்விதமான தீமையையும் செய்வதைத் தவிர்த்து, நம்மால் பிறர்க்கும் பிறவுயிர்களுக்கும் என்ன நன்மைகளைச் செய்ய முடியுமோ அவற்றைச் செய்து, வாய்மை பேசுவதையே நமது கொள்கையாகக் கொண்டு நாம் இறந்த பிறகும் நம்முடைய புகழ் நிலைத்து நிற்குமாறு வாழ முயற்சி செய்வதை நம்முடைய கடமையாகக்கொண்டு வையத்து வாழ்வாங்கு வாழ்வதே சிறந்ததாகத் தோன்றுகிறது.

முடிவுரை

ஆத்மா, கர்மா, மறுபிறவி, பிறவாத நிலை, கடவுள் போன்றவற்றைப் பற்றி மதங்களிடையே மிகுந்த கருத்து வேறுபாடுகள் உள்ளன. வள்ளுவருடைய கருத்திற்கும் வைதீக, சமண, புத்த மதங்களின் கருத்திற்கும் சில ஒற்றுமைகளும் பல வேற்றுமைகளும் காணப்படுகின்றன. ஆத்மா, கர்மா, மறுபிறவி, பிறவாத நிலை, கடவுள் போன்றவற்றைப் பற்றி விஞ்ஞானமும் திட்டவட்டமான கருத்துக்களை இதுவரை முன்வைக்கவில்லை. இதுபோன்ற கருத்துக்களை ஆராய்ந்து

மெய்ப்பொருளைக் கண்டறியக்கூடிய ஆற்றலும் ஆர்வமும் எவரிடத்தும் இருப்பதாகத் தெரியவில்லை.  இந்தக் குழப்பமான சூழ்நிலையில், எவையெல்லாம் மூட நம்பிக்கை என்று நம்முடைய பகுத்தறிவுக்குத் தோன்றுகிறதோ அவற்றை விலக்கி, நம்முடைய அன்றாட வாழ்க்கையை அன்போடும் அறத்தோடும் நடத்துவதே சிறந்ததாகத் தோன்றுகிறது.

துணைநூல்களும் இணையதளங்களும்

https://www.britannica.com/topic/Vedic-religion

https://sadhanandaswamigal.blogspot.com/2012/10/blog-post_10.html

”குறள் கூறும் சமயம்”, முனைவர்  செல்வி. காமாட்சி சீனிவாசன். மதுரை காமராசர் பல்கலைக்கழகம் (1979)






நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்




குறள்நெறி போற்றித் தமிழகம் ஆண்டார்
குன்றாப் புகழால் வையகம் அளந்தார்;
உலகில் வேறெந்தப் புலவர்க்கும் இல்லா
உயர்வாய்க் கோட்டம் உவப்புடன் அமைத்தார்;
நிலமும் வானும் கடலும் போற்றிட
நிலையாய்ப் படிமம் வள்ளுவர்க் கமைத்தார்;
வள்ளுவர் திருநாள் வரையறை செய்தார்;
வள்ளுவர் குறள்போல் வரம்பிலாப் புகழுடன்
வரலாற்றில் நிலைப்பார்;வாழ்க கலைஞர்!


பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்
இணையாசிரியர்; தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

## தமது திருக்குறள் உரைக்குக் கலைஞர் எழுதிய முன்னுரை

இமயமலைக்குப் பொன்னாடை போர்த்துகிற முயற்சியில் ஈ.டுபடுவதும், திருக்குறளுக்கு உரை எழுதுவதும் ஒன்றுதான் என்பதை நானறியாதவனல்லன் முன்னூற்று ஐம்பத்து நான்கு குறட்பாக்களைக் கொண்டு குறளோவியம் எழுதி முடித்தபிறகு ஆயிரத்து முன்னூற்று முப்பது குறட்பாக்களுக்கும் உரை எழுத வேண்டும் என்ற ஆர்வத்துடிப்பு என்னை ஆட்கொண்டது. அதனை நிறைவேற்றி மகிழ, `முரசொலி' நாளேட்டில் ஒவ்வொரு நாளும் நான் எழுதிய திருக்குறள் உரைகளின் தொகுப்பே இந்தநூல்.

வள்ளுவர் வாழ்ந்த காலத்து நம்பிக்கைகள், பண்பாடுகள் அவை குறித்து அவரது பார்வை ஆகியவற்றுக்கு மாறுபடாமலும், வலிந்து என்கருத்து எதையும் திணிக்காமலும், குறளில் அவர் கையாண்டுள்ள சொல்லுக்கு இதுவரை உரையாசிரியர்கள் கொண்டுள்ள பொருளையன்னியில் தமிழில் மற்றொரு பொருளும் இருக்கிறது என்ற உண்மை நிலையைக் கடைபிடித்து, நான் எண்ணுவது போல் அவர் எண்ணினாரா என்று நோக்காமல் அவர் எண்ணி எழுதியது என்ன என்பதை அறிவதில் மட்டுமே அக்கறை கொண்டு என் அறிவுக்கும் ஆற்றலுக்கும் எட்டியவரையில் இந்தப் பொன்னாடையை நெய்துள்ளேன்.

``கடவுள் வாழ்த்து" எனும் அதிகாரத்தலைப்பை ``வழிபாடு" எனக் குறித்துள்ளேன். வள்ளுவரைக் கடவுள் மறுப்பாளர் அல்லது கடவுள் நம்பிக்கையாளர் எனும் வாதத்திற்குள் சிக்கவைக்க நான் விரும்பவில்லை. ``வழிபாடு" எனும் அதிகாரத்தில் அமைந்துள்ள குறட்பாக்களுக்கு நான் எழுதியுள்ள உரைகளைக் கொண்டு இதனை உணரலாம்.

மற்றும் நான் தரவேண்டிய விளக்கங்கள் பலவற்றை இந்நூலினை வெளியிடும் திருமகள் நிலையத்தார் சார்பாகப் பதிப்புரை தீட்டியுள்ள முனைவர் திரு.நன்னன் அவர்கள் சுட்டிக் காட்டியுள்ளார். பதிப்புரையை ஏறத்தாழ ஒரு மதிப்புரையாகவே எழுதியுள்ள தமிழறிஞர் நன்னன் அவர்கட்கு என் நன்றி.

அணிந்துரையை அழகு தமிழ்க் கவியுரையாகவே வடித்துள்ள இனமானஏந்தல் பேராசிரியப் பெருந்தகை அன்பழகனார் அவர்களுக்கு என் நன்றி உரியதாகுக.

தமிழ்க்கனிப் பதிப்பகத்திற்கு உரிமையுடைய இந்நூலின் முதற்பதிப்பை வெளியிட முன்வந்து அழகுறத் தமிழ் மக்களின் பால் வழங்கியுள்ள திருமகள் நிலைய உரிமையாளர் திரு.இராமநாதன் அவர்களுக்கும் நன்றி சொல்லி, இந்நூலை என் தமிழுக்குக் காணிக்கை ஆக்கித் தமிழ் மக்களுக்குப் படைக்கின்றேன்.

அன்புள்ள,
மு.க.

``வாழ்க்கையில் பல நாட்கள் திருநாட்களாக அமைகின்றன. அந்தத் திருநாட்களில் எல்லாம் சிறந்த திருநாளாக, திருவிழா நாளாக அமைந்தது இந்த நாள், இந்த நாள் என்னுடைய களைப்பையும், எல்லாவிதமான துன்ப துயரங்களையும் துடைத்திருக்கின்ற நாள்".

(1996-இல் நடந்த திருக்குறள் உரை வெளியீட்டு விழாவில்)

கலைஞரின் திருக்குறள் உரைக்கு இனமானப் பேராசிரியரின் அணிந்துரை

உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் எனத்தெளிந்து

உள்ளத்தில் ஊறிடும் எண்ணமெலாம் ஆய்ந்தே

தள்ளத்தகுவது மதவழிக் கற்பனையென ஓர்ந்து

கொள்ளத்தகுவது ஒப்புரவு நெறியென்றார் வள்ளுவர்!

சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான் எனினும்

பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் எனச்சாற்றி,

பிறவிவழியாம் வருணத்துக் கொருநீதி புகன்றிடும்

அறக்கேடாம் மநுவாதிசூது மறுத்திட்டார் வள்ளுவர்!

சிறப்புடன் செல்வமீனும் அறத்தினூங்கு ஆக்கமில்லை

மறத்தலின் கேடில்லை; மாசற்றமனச் சான்றூறும்

திறத்தினாவது இன்பம்; அழுக்காறு அவாவெகுளி

புறத்ததா, இன்னாச்சொல் தவிர்தலே அறமெனவும்;

தீதற்ற பொருளாக்கம் முயற்சியின் பயனெனவும்,

கோதற்ற காதலின்பம் உற்றதுணையின் உறவெனவும்

சூதற்ற அகத்துறவு ஐம்புலனடக்க விளைவெனவும்

ஏதமிலாப் பெருவாழ்வின் நெறிகண்டார் வள்ளுவர்!

இறை, தெய்வம் கடவுளெனப் போற்றிடுவார்,

நிறைகுணப் பேறெய்தும் 'தொழல்' எதுவெனவும்,

மறுபிறவி, ஆன்மா, துறக்கமென நம்பிடுவார்

உறுபிறவிப் புகழெய்தும் ‘நெறி’எதுவெனவும்

உற்ற பிறப்பே ‘ கருமவினை’ தலைவிதி என நம்புவார்

உற்றிடுமியற்கைச் சூழலின் விளைவே 'ஊழ்' எனவும்

உணர்வுடையார் உளமருள் நீங்கியே தெருளுமாறு

உலகவர் வாழ்வுக்கு உறுதுணையாவது முப்பால்!

வான்றோய் முகில்பொழி தூநீர் அனையதாய்

வாயுறையாம் வள்ளுவன்தரு முப்பால் வாய்ப்பினும்

தொல்லறநூல் உரைகண்ட பதின்மர் தாமும்

தத்தமது சமயமத வண்ணம் குழைந்திடவும்.

ஆத்திகஞ்சார் வடமொழி விரவிடவுஞ் செய்ததால்

குறள்நெறித் தனித்தகவு புலப்படுத்தா ரல்லர்.

இருபதாம் நூற்றாண்டின் மறுமலர்ச்சி விளைவால்

உரைகண்ட இணையிலாப் புலவரோ பலப்பலர்!

அவர்தம் பெயர்களோ விரிக்கினும் எஞ்சும்!

ஆய்வுசெய் நோக்கில் வரைந்தவர் சிலரெனினும்

புதிய சிந்தையைத் தூண்டுவ உண்டெனினும்

படிந்தபழமைச் சார்பைத் துடைத்திட ஒல்லாததும்

துடைத்திடத் தலைப்படின் ஏற்புடைத்தா காததுமாய்

வள்ளுவர் திருவுரு வரைவார்கற்பனை யானதுபோல்

வள்ளுவச் சிந்தனையும் கொண்டவர் 'காட்சி' யானது,

எவ்வெவர் உரைதனைப் பயில்வோ ராயினும்

அவ்வுரை மெய்ப்பொருள் தேரும் ஆர்வத்தில்

பொய்யா மொழிதனைப் பகுத்தறிந் திடலால்

மெய்மை காணுந்திறனு முயர்ந்தது நாளும்!

திருக்குறள் வகுத்திட்ட வாழ்க்கை நெறியொன்றே

திருவிடத்தின் பண்பாட்டு ஊற்றுக்கண் ஆகலின்

திருமறை உரைபொருள் எவரும் எளிதுணர

திருக்குறள் கருத்துரை வரையலானார் கலைஞர்.

குறட்பா மொழிந்திடும் பொருளொன்றே எனினும்

குறள்பொருள் தெளிவார் உணர்திறன் வேறாகலின்

குறட்பா சொற்றொடர் புணர்வகை யாலன்றிக்

குறள்நெறி உளத்தூன்ற உரைதந்தார் கலைஞர்.

தெளிந்த சிந்தையன், தேர்ந்த புலமையன்,

நுண்மாண் நுழைபுலம் வாய்த்த மதியினன்,

ஆழ்ந்த கருத்தினன், அசைவிலா உறுதியன்,

வெல்லுஞ் சொல்வலான், சோர்வு மிலான்,

கொண்ட கொள்கையே கோட்பாடாய் ஏற்றவன்,

எண்ணிய எண்ணியாங்கு எய்தும் திண்ணியன்,

பகுத்தறிவுத் திறலோன், பண்பினை மறவோன்

பொங்குநடையினில் 'சங்கத்தமிழ்ச் சாறளித்தோன்

பளிங்குப் பாவையெனக் 'குறளோவியம்' படைத்தோன்

தெளிதமிழின் நடைபலவும் வல்லவனாம் கலைஞர்

"வீழ்வது நாமாக இருப்பினும்,

வாழ்வது தமிழாகட்டும்" எனத்துணிந்து

'தமிழே தனது உயிர்மூச் செனவும்

தமிழர் வாழ்வே தன்வாழ்வென வுங்கொண்டு

இனநலம் மொழிநலம் காக்கும் தொண்டே

தன்பிறவிக் கடனென்று ஏற்ற செம்மல்!

தன்மானத் தந்தை பெரியாரின்

உணர்வு காக்கும் மைந்தன்!

இனமான ஏந்தல் அண்ணாவின்

இதயம் நாடிய இளவல்!

இனமாந்தர்தம் இழிவு துடைத்திட

முனைவோருக்கோ தோழன்!

இலட்சியப் பணியினில் கலைஞர்

என்பெருமைக்குற்ற நண்பர்!

தொண்டால், தியாகத்தால், திறமையால், பெற்ற

தகுதியால், தமிழினத்தின் தலைவரான கலைஞர்

தமிழர் வாழ்வை மயக்கிடு 'மாயை' அகன்றிட

\உய்வு நெறியாம் குறளறம் விளங்கிடத்

தன்மதிநுட்பத் திறன்காட்டும் உரைதந்தார் இன்று

அதனதிநுட்பம் காட்டலும் எளிதன்றே எமக்கு!

தேனிறால் திருக்குறள் எனிலோ

அதன் பிழிவே இவ்வுரை என்பேன்;

தித்திக்கும் தேன்சுவையே யன்றி

மருத்துவப் பயனும் இவ்வுரைச் சிறப்பாம்!

பயில்தற்கும் தெளிதற்கும் எளிதாகும் இவ்வேடு,

துயில்நீங்கி எழும் தமிழர்க்கோர் கைவிளக்கு!

இளைய தலைமுறையினர் தமக்கோ வாழ்வினில்

இருளகற்றி வழிகாட்டும் திருவிளக்கு!

---க.அன்பழகன்

# கலைஞரின் திருக்குறள் உரை உத்திகள் ஓர் ஆய்வு



முனைவர் நா.இளங்கோ,

புதுச்சேரி அரசின் கலை அறிவியல் கல்லூரிகளில் தமிழ்ப் பேராசிரியர், தமிழ்த்துறைத் தலைவர், கல்லூரி முதல்வர் என முப்பத்தெட்டு ஆண்டுகள் பணியாற்றிய பின்பும் ஓய்வு கொள்ளாது தமிழினத்தின் விடிவுக்கும் தமிழ்மறுமலர்ச்சிக்கும் உழைத்துவரும் தகைசால் புலவர். சங்க இலக்கியங்கள், திருக்குறள், நாட்டுப்புறவியல், தகவல் தொடர்பியல் கணினியியல் முதலான துறைகளில் மிகுந்த ஈடுபாடும் புலமையும் மிக்கவர்.பல்வேறு இலக்கிய ஆய்விதழ்களில் இணைய இதழ்களில், வலைப்பதிவுகளில் தொடர்ந்து தமிழியல் ஆய்வுக் கட்டுரைகளை எழுதி வருபவர்.கவிதை, இலக்கியம், ஊடகவியல், தொல்லியல் முதலான துறைகளில் பல நூல்களை எழுதி அளித்துள்ளவர்.மலையருவி என்ற பெயரால் அறியப்படும் தமிழ்க் கவிஞர்.முற்போக்குச் சிந்தனையாளர். தாய்மொழிவழிக் கல்வி, மனிதஉரிமை, சுற்றுச்சூழல், சமூகநீதி இவைகளுக்காகப் போராடிவரும் செயல்மறவர்..

கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் தோன்றியதாகக் கருதப்படும் திருக்குறள் தான் தோன்றிய காலந்தொடங்கி இன்றுவரை தமிழுலகில் நிலைத்து வாழ்ந்தும் தமிழர்களை வாழ்வித்தும் வருவது கண்கூடு.

உரையாசிரியர் கலைஞர்:

அரசியல் அரங்கில் உலகத் தமிழர்களின் ஒப்பற்ற தலைவராக விளங்கும் தமிழவேள் டாக்டர் கலைஞர் என்று சிறப்பிக்கப்படும் மு.கருணாநிதி அவர்கள் இலக்கிய உலகிலும் தன்னேரில்லாத படைப்புகள் பலவற்றைப் படைத்துத் தமிழிலக்கிய உலகில் தனக்கென ஒரு தனியிடத்தைப் பெற்றிருப்பது அனைவரும் அறிந்ததே.

கலைஞர் தம் பன்னிரண்டாம் வயதில் எழுதத் தொடங்கி இன்றுவரை எழுதிக்குவித்த இலக்கியங்கள் எத்தனையோ. நூற்றுக்கணக்கான சிறுகதைகளையும் இருபதிற்கும் மேற்பட்ட நாடக நூல்களையும் ஐம்பதிற்கும் மேற்பட்ட திரைக்கதை உரையாடல்களையும் உருவாக்கியுள்ள கலைஞர் ஒரு பன்முகப் படைப்பாளி. கலைஞரின் இலக்கியப் படைப்புக்களை எட்டு வகையாகப் பாகுபடுத்தலாம்.

1. கவிதைகள்

அ. கவியரங்கக் கவிதைகள், ஆ. திரைப்படப் பாடல்கள், இ. தனிப்பாடல்கள்

2. கதைகள்

அ. சிறுகதைகள், ஆ. குறும் புதினங்கள், இ. புதினங்கள்

3. நாடகங்கள்

அ. ஓரங்க நாடகங்கள், ஆ. முழு நாடகங்கள்

4. காப்பியங்கள்

5. மடல்கள்

6. சொற்பொழிவுகள்

7. இலக்கிய விளக்கங்கள்

8. இலக்கிய இலக்கண உரைகள்

என்பன கலைஞரின் இலக்கியப் படைப்பின் வகைப்பாடுகளாகும். இலக்கண இலக்கிய உரைகள் என்ற எட்டாம் வகைப்பாட்டில் அடங்கும் நூலே கலைஞரின் திருக்குறள் உரை ஆகும். தமிழன் நாளேட்டில்தான் கலைஞரின் திருக்குறள் உரை முதன் முதலில் தொடங்கப்பட்டது. பின்னர் முரசொலி நாளேட்டில் தொடர்ந்து ஒவ்வொரு நாளும் வெளிவந்து முழுமைபெற்றது. திருக்குறள் கலைஞர் உரை என்ற பெயரில் நூலாக வெளிவந்த ஆண்டு 1996.

திருக்குறள் கலைஞர் உரை:

கலைஞர் குறளோவியம் என்ற பெயரில் முந்நூற்று ஐம்பத்து நான்கு குறட்பாக்களுக்கு விரிந்த அளவில் சொல்லோவியமாய்த் தீட்டிய குறள் உரை இலக்கியம் தமிழுக்குக்

கிடைத்த ஓர் புத்திலக்கியம் எனும் பாராட்டையும் பெற்றது. குறளோவியத்தின் வெற்றி திருக்குறள் முழுமைக்கும் உரையெழுத வேண்டும் என்ற ஆர்வத்துடிப்பை எனக்குள் ஏற்படுத்தியது என்று உரையாசிரியர் கலைஞரே உரையெழுதியதற்கான காரணத்தைத் தம் நூல் முன்னுரையில் குறிப்பிடுவார்.

தம்முடைய உரையின் நோக்கத்தையும் அமைப்பையும் உரை எழுதுகையில் கையாண்ட நெறிமுறைகளையும் முன்னுரையில் உரையாசிரியரே பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

வள்ளுவர் வாழ்ந்த காலத்து நம்பிக்கைகள், பண்பாடுகள் அவை குறித்து அவரது பார்வை ஆகியவற்றுக்கு மாறுபடாமலும், வலிந்து என்கருத்து எதையும் திணிக்காமலும், குறளில் அவர் கையாண்டுள்ள பொருளன்னியில் தமிழில் மற்றொரு பொருளும் இருக்கிறது என்ற உண்மைநிலையைக் கடைபிடித்து, நான் எண்ணுவது போல் அவர் எண்ணினாரா என்று நோக்காமல் அவர் எண்ணி எழுதியது என்ன என்பதை அறிவதில் மட்டுமே அக்கறை கொண்டு என் அறிவுக்கும் ஆற்றலுக்கும் எட்டிய வரையில் இந்தப் பொன்னாடையை நெய்துள்ளேன் (உரை எழுதியுள்ளேன்).

இந்த முன்னுரைப் பகுதியில் உரையாசிரிர் கலைஞர் உரை எழுதுவதற்கான நெறிமுறைகள் சிலவற்றை வகுத்துத் தருகின்றார்.

1. உரையெழுதப் போகும் நூலின், நூலாசிரியனின் காலத்து நம்பிக்கைள், பண்பாடுகள், அவைகள் குறித்த நூலாசிரியன் பார்வை என்ன என்பதையெல்லாம் உரையாசிரியர் அறிந்து வைத்திருத்தல் வேண்டும்.

2. நூலாசிரியன் கருத்துக்கு மாறாக வலிந்து உரையாசிரியர் தம் கருத்துக்களை உரையில் திணித்தல் கூடாது.

3. உரையாசிரியர் எண்ணுவதை விட நூலாசிரியன் எண்ணியதற்கே முதன்மை அளித்தல் வேண்டும்.

4. உரையாசிரியர் தம் அறிவையும் ஆற்றலையும் முழுமையாகப் பயன்படுத்தி உரை வரைதல் வேண்டும்.

மேற்கூறிய நெறிமுறைகள் கலைஞரால் வகுத்துக் கொள்ளப்பட்ட நெறிமுறைகள். இந்த நெறிமுறைகளைப் பின்பற்றியே இவர் தமது உரையை எழுதிச் செல்கின்றார் என்பதும், எந்த இடத்திலும் தாம் வகுத்துக்கொண்ட நெறிமுறைகளுக்கு மாறாக அவர் உரை எழுதவில்லை என்பதும் கவனத்தில் கொள்ளத்தக்கது.

கடவுள் வாழ்த்தா? வழிபாடா?

திருக்குறளின் அதிகார வரிசைமுறை, குறள் வரிசைமுறை, அதிகாரப் பெயர்கள் முதலான  நூலின் அமைப்புமுறை ஒவ்வொரு உரையாசிரியருக்கும் வேறுபடுகின்றது. எனவே இன்று நாம் காணும் திருக்குறள் அமைப்பு முறை திருவள்ளுவர் வடிவமைத்ததல்ல என்ற கருத்து அறிஞர் பலராலும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. உரையாசிரியர்கள் பலரும் பல இயல் பகுப்புகளில் மாற்றம் செய்தும் அதிகாரங்களை இயல் மாற்றி வகைப்படுத்தியும் அதிகாரத்திற்குள் வரும் குறட்பாக்களை இடம் மாற்றியும் அமைத்து உரை வகுத்துள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

திருக்குறளின் முதல் அதிகாரப் பெயராக இருந்துவந்த கடவுள் வாழ்த்து என்ற பெயரைக் கலைஞர் வழிபாடு என்று பெயர்மாற்றம் செய்கின்றார்.

> கடவுள் வாழ்த்து எனும் அதிகாரத் தலைப்பை வழிபாடு எனக் குறித்துள்ளேன். வள்ளுவரைக் கடவுள் மறுப்பாளர் அல்லது கடவுள் நம்பிக்கையாளர் எனும் வாதத்திற்குள் சிக்கவைக்க நான் விரும்பவில்லை. வழிபாடு எனும் அதிகாரத்தில் அமைந்துள்ள குறட்பாக்களுக்கு நான் எழுதியுள்ள உரைகளைக் கொண்டு இதனை உணரலாம்.

என்று உரையாசிரியர் முன்னுரையில் குறிப்பிடும் பகுதி இது. கடவுள் கோட்பாட்டை மறுக்கவோ மறைக்கவோ நான் அதிகாரத் தலைப்பை மாற்றவில்லை என்று எழுதும்

கலைஞர், வழிபாடு எனப் பெயர் மாற்றம் செய்ததற்கான காரணத்தைத் தம் முதலதிகார உரையில் வெளிப்படுத்துகின்றார். பத்து குறட்பாக்களில் எங்கும் கடவுள் சொல்லோ வாழ்த்தோ இடம் பெறவில்லை. மாறாக வணக்கத்திற்குரிய பெருந்தகையாளரை வழிபடுதல் பற்றிய செய்திகளே காணக் கிடைக்கின்றன. அடி சேர்தல், தாள் சேர்தல் என்ற சொற்களுக்கெல்லாம் அடியொற்றி நடத்தல் என்றே உரை கூறுகின்றார் கலைஞர். தன் உரையின் வழி வழிபாடு என்ற பெயரே முதலதிகாரத்திற்குப் பொருந்தும் என நிறுவுகிறார் அவர்.

கலைஞரின் திருக்குறள் உரை உத்திகள்:

கலைஞரின் திருக்குறள் உரை நூலுக்குப் பதிப்புரை எழுதிய பேராசிரியர் மா.நன்னன் அப்பதிப்புரையை ஓர் ஆய்வுரையாகவும் வரைந்துள்ளமை குறிப்பிடத் தக்கது. நன்னன் கலைஞர் உரையின் சிறப்பியல்புகளைக் குறிப்பிடும் போது,

இவர் மரபுப் பொருள், சொற்பொருள், தெளிவுப் பொருள், சுருக்கப் பொருள் என்பன போன்ற முறையில் பொருள் கூறிச் செல்லாமல் இக்காலத் தமிழன் ஒரு குறளைப் படித்தால் எதைத் தெரிந்துகொள்ள வேண்டுமோ அதை இற்றெனக் கிளந்து, தெற்றெனக் காட்டுவதையே தம் உத்தியாகக் கொண்டுள்ளார் எனத் தெரிகிறது.

என்று கலைஞர் உரையின் தனித்தன்மையை, அதன் புரிதலை, அதன் எளிமையை உத்தியாக எடுத்துக் காட்டுகின்றார்.

புலவரேறு அரிமதி தென்னகன் திருக்குறள் கலைஞர் உரை ஒரு பார்வை என்ற நூலில் கலைஞர் உரையின் தனித்தன்மையைப் பின்வருமாறு விளக்கி யுரைக்கின்றார்.

அது பதவுரையா? இல்லை! தோலுரித்த பழம் போன்ற பொழிப்புரையா? இல்லை! பழத்தில் உள்ள கொட்டைகளை நீக்கிய சுளைகளைப் போன்ற சுருக்கமான கருத்துரையா? இல்லை! கனியைப் பிழிந்திட்ட சாறு என்பார்களே அத்தகைய கனியுரையே கலைஞர் உரை! ஆம் குறளின் பிழிவே கலைஞர் உரை என்பதே

உண்மை. .. அதுதான் எளிமை! அதுவே இனிமை! அதுதான் தெளிவு! அதுதான் தேவை!.. (அரிமதி தென்னகன், திருக்குறள் கலைஞர் உரை ஒரு பார்வை, ப.129)

கனியைப் பிழிந்திட்ட சாறு போல் எளிமையின் வடிவாகவே கலைஞர் உரை அமைந்துள்ளது எனக்குறிப்பிடும் புலவரேறு, கலைஞர் உரையின் சிறப்பியல்புகளாக மேலும் சில செய்திகளைக் குறிக்கின்றார். அவை, 1.குறளிலிருந்து பெறும் பொருளைவிடக் குறளால் உணரப்படும் செய்தியே எளிமையானதாக அமையும் என்பதில் கலைஞர் உறுதியாக நின்றுள்ளார். 2.அறிவால் பெறப்படும் செய்தியைவிட நெஞ்சால் உணரப்படும் செய்தியை உரையாகத் தருவதே, சேர வேண்டிய இடத்திற்கு எளிதாகக் கொண்டு செல்லும் என்னும் நோக்கமே கலைஞர் உரையாகப் பொலிவு பெற்றுள்ளது.

கருத்துரை கூறுவதில் புதிய உத்திகள்:

பதவுரை என்றால் எல்லாச் சொற்களுக்கும் உரை கூற வேண்டும். பொழிப்புரை என்றால் எல்லாச் சொற்களுக்குமான உரையைத் தொடர்ச்சியாகத் தருதல் வேண்டும். கருத்துரை என்றால் எல்லாச் சொற்களுக்கும் உரைகூற வேண்டுமென்ற தேவையில்லை, பொழிப்புரையைச் சுருக்கித் தந்தால் போதுமானது. கலைஞரின் உரை பதவுரையும் இல்லை. பொழிப்புரையும் இல்லை. ஒருவகையில் கருத்துரை என்று சொல்லத்தக்க அளவில் தம் உரையை வரைந்துள்ளார்.

கருத்துரையிலேயும் எளிதில் புரிதல் என்னும் புதிய நடைமுறை ஒன்றை உத்தியாக வகுத்துக்கொண்டு உரை வரைகின்றார் கலைஞர்.

அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்

பிறன்பழிப்ப தில்லாயின் நன்று குறள்: 49

கலைஞர் உரை: பழிப்புக்கு இடமில்லாத இல்லாழ்க்கை இல்லறம் எனப் போற்றப்படும்.

மேலே குறிப்பிட்ட குறளில், சுருக்கத்திற்கே பெயர் பெற்ற திருக்குறளுக்கு உரை விளக்கம் அதைவிடச் சுருக்கமான வடிவில் கலைஞரால் வடிக்கப்பட்டுள்ளது. ஏழு சீரால் அமைந்த குறளுக்கு ஆறு சீரால் உரை. குறளின் எந்தச் சொல்லையும் உரையாசிரியர் புறக்கணிக்கவில்லை. குறம் கூறும் செய்தியின் ஆழமும் அழுத்தமும் உரையிலேயும் பொதித்து வைக்கப்பட்டுள்ளது. ஆனால் குறளுக்கும் உரைக்கும் என்ன வேறுபாடு என்றால், எளிமை, இனிமை, சுருக்கம், புரிதல் நான்கும் உரையில் மேலோங்கியுள்ளது. மேலே குறிப்பிட்ட குறளுரையின் சீர்மையையும் பெருமையையும் முற்ற முழுதாக உணரவேண்டுமென்றால் இக்குறளின் பிற உரைகளோடு கலைஞர் உரையை ஒப்பிட்டுப் பார்த்து உணரலாம். கலைஞர் உரையின் பெரும்பகுதி இவ்வகையில் அமைந்த சுருக்க உரையாகவே அமைந்திருப்பது இவ்வுரை நூலின் சிறப்பு.

கருத்துரையில் இடைப் பிறவரல் எனும் புதிய உத்தியைக் கையாண்டு உரையின் எளிமைக்கு பலம் சேர்க்கின்றார் கலைஞர்.

ஒன்றானுந் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்

நன்றாகா தாகி விடும் குறள்: 128

கலைஞர் உரை: ஒரு குடம் பாலில் துளி நஞ்சு போல் பேசும் சொற்களில் ஒரு சொல் தீய சொல்லாக இருந்து துன்பம் விளைவிக்கு மானாலும், அந்தப் பேச்சில் உள்ள நல்ல சொற்கள் அனைத்தும் தீயவாகிவிடும்.

அடக்கமுடைமை எனும் அதிகாரத்தில் வரும் மேற்கூறிய குறளுக்குப் பரிமேலழகரின் உரைக்கு மாறுபட்டு எளிய, புதிய உரை கூறவந்த உரையாசிரியர் கலைஞர் உரைப் பொருள் எளிமையாக விளங்குதல் பொருட்டு ஒரு குடம் பாலில் துளி நஞ்சு போல் என்ற நடைமுறையில் உள்ள பொருத்தமான உவமை ஒன்றை எடுத்துக்காட்டி உரை வகுக்கின்றார். பரிமேலழகர் நன்றாகாதாகி விடும் என்ற குறள் பகுதிக்கு, பிற

அறங்களால் உண்டான நன்மை தீதாய்விடும் என்று சொன்ன உரையை விட, பேச்சில் உள்ள நல்ல சொற்கள் அனைத்தும் தீயவாகிவிடும் என்று கலைஞர் உரைக்கும் உரையே அனுபவ உரையாக பொருத்தமான உரையாக அமைந்து சிறக்கின்றமை உரையில் இடைப்பிறவரலாக அவர் அமைத்த பழமொழியின் உதவியால் எளிதில் விளங்குகிறது.

பழமொழியை இடைப்பிறவரலாக இணைத்துத் தம் கருத்துரையில் புதுமை சேர்த்தது போலவே மேலும் பல குறள் உரைகளில் சில புதிய சொற்களை வருவித்து உரைத்து உரைவழங்கும் உத்தியைச் சிறப்பாகக் கையாளுகின்றார். சான்றாக,

உறங்குவது போலுஞ் சாக்காடு உறங்கி

விழிப்பது போலும் பிறப்பு  குறள்: 339

கலைஞர் உரை: நிலையற்ற வாழ்க்கையில் உறக்கத்திற்குப் பிறகு விழிப்பதைப் போன்றது பிறப்பு, திரும்ப விழிக்க முடியாத மீளா உறக்கம் கொள்வதே இறப்பு

இக்குறள் உரையில் குறளில் இல்லாத புதிய சொல்லாக நிலையற்ற வாழ்க்கையில் என்று சேர்த்து நிலையாமை என்ற அதிகாரப் பொருளை நினைவு கூர்கின்றார். மேலும் திருவள்ளுவர் உறங்குவது போலும் சாக்காடு என்று சொன்ன குறட்பகுதிக்கு விளக்கம் சொல்லும் போது மீளா உறக்கம் கொள்வதே இறப்பு என, மீளா என்ற புதிய சொல்லை இணைத்து உரை காண்கின்றார். உறக்கமே இறப்பு என்பதற்கும் மீளா உறக்கமே இறப்பு என்பதற்கும் ஆழமான பொருள் வேறுபாடு உண்டு. மீளா உறக்கம் என்பதில் பிறப்பு இறப்புச் சுழற்சி இல்லை. மறுபிறப்பு இல்லை. பாவம், புண்ணியம், சொர்க்கம், நரகம் இவை முதலான ஆன்மா தொடர்பான கருத்தியல்கள் ஏதும் இல்லை. பிறப்ப இறப்பு என்ற இரண்டுக்கு மட்டுமே இடம் உண்டு. கலைஞர் உரையின் நுட்பமும் ஆழமும் இதுபோன்ற உரை உத்திகளில்தாம் சிறப்புற வெளிப்படுகின்றன.

கருத்துரைகளில்தான் எத்துணை புதுமை செய்கின்றார் உரையாசிரியர் கலைஞர். சொல்லுக்குச் சொல் என்று சுருக்கி உரை சொல்ல வந்த கலைஞர் சில குறட்பா உரைகளில் சொல்லுக்குச் சொல் அடைகொடுத்துச் சிறப்பிக்கும் உத்தியைக் கையாண்டு பல குறட்பாக்களின் நுட்ப விளக்கங்களை யெல்லாம் ஒரே குறட்பாவில் விளங்கிக் கொள்ள வைக்கின்றார்.

படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும்

உடையான் அரசருள் ஏறு குறள்: 381

கலைஞர் உரை: ஆற்றல்மிகு படை, அறிவார்ந்த குடிமக்கள், குறையா வளம், குறையற்ற அமைச்சு, முரிபடாத நட்பு, மோதியழிக்க முடியாத அரண் ஆகிய ஆறு சிறப்புகளும் உடையதே அரசுகளுக்கிடையே ஆண்சிங்கம் போன்ற அரசாகும்.

இக்குறளுக்குப் பரிமேலழகர் படையும் குடியும் கூழும் அமைச்சும் நட்பும் அரணும் என்று சொல்லப்பட்ட ஆறு அங்கங்களையும் உடையவன் அரசருள் ஏறு போல்வான் என்று இயல்பாக அடுக்கி உரை சொல்ல, கலைஞரோ அடைமொழிகளை யெல்லாம் இணைத்து அரிய உரையொன்றை இக்குறளுக்கு வழங்குகின்றார். ஆற்றல்மிகு படை, அறிவார்ந்த குடிமக்கள், குறையா வளம், குறையற்ற அமைச்சு, முரிபடாத நட்பு, மோதியழிக்க முடியாத அரண் என்ற பகுதியில் மோனைகளால் சிறந்து விளங்கும் கவிதை நடையைக் கண்டு இன்புற முடியும். இயல்பாகவே பேச்சிலும் கவிதைநடை மிளிரும் ஆற்றல் மிக்க கலைஞர் குறள் உரையிலும் கவிதை நடையைக் கையாண்டு அழகு சேர்த்துள்ளமையை ஒரு புதிய உத்தி என்றே கொள்ள வேண்டும்.

இந்த அடைமொழிகள் அழகுக்காகக் கோர்க்கப்பட்ட அணிகலன்களாக இல்லாமல் அரசனின் ஆறு அங்கங்களையும் விளக்கிக் கூறும் ஆற்றல் வாய்ந்த விளக்கங்களாக அமைந்துள்ளமை கண்கூடு. வரும் குறட்பாக்களில் பொருட்பாலில் விவரித்துச்

சொல்லப்போகும் ஆறு அங்கங்களின் விளக்கங்களையும் ஒரே குறள் உரையில் பெய்து நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றார்.

கருத்துரையில் ஒரு புதுமை: (சொல்லியதும் சொல்லாததும்)

கலைஞர் உரையில் எளிமை மட்டுமல்ல ஏராளமான புதுமைகளும் உண்டு. திருக்குறள் பல சமயங்களில் எதைச் சொல்ல வேண்டுமோ அதைச் சொல்லாமல் வேறொன்றைச் சொல்லி, சொல்ல வந்ததைக் குறிப்பால் உணர்த்திவிடும். பீலி பெய் சாகாடும்.., நுனிக்கொம்பர் ஏறினார்.., கடலோடா கால்வல் நெடுந்தேர்.., போன்ற குறட்பாக்களை இவ்வுத்திக்குச் சான்றாகக் காட்டலாம். அணி நூலார் இதனை ஒட்டணி என்றுரைப்பர். கலைஞரோ தம் திருக்குறள் உரையில், திருவள்ளுவர் நேரடியாகச் சொன்ன ஒரு குறள் செய்தியை விளக்கும் போது அதனோடு தொடர்புடைய பிறிதொரு அறத்தையும் நினைவு படுத்தி ஒரு கல்லில் இரு மாங்காய் என்பது போல திருக்குறள் சொல்லியதையும் சொல்கிறார் சொல்லாததையும் சொல்கிறார்.

நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி

தான்நல்கா தாகி விடின்                    குறள்: 17

கலைஞர் உரை: ஆவியான கடல்நீர் மேகமாகி அந்தக் கடலில் மழையாகப் பெய்தால்தான் கடல்கூட வற்றாமல் இருக்கும். மனித சமுதாயத்திலிருந்து புகழுடன் உயர்ந்தவர்களும் அந்தச் சமுதாயத்திற்கே பயன்பட்டால்தான் அந்தச் சமுதாயம் வாழும்.

மேற்காட்டிய குறள் உரையில் திருவள்ளுவர் சொன்னது, ஆவியான கடல்நீர் மேகமாகி அந்தக் கடலில் மழையாகப் பெய்தால்தான் கடல்கூட வற்றாமல் இருக்கும் என்ற செய்தி. திருவள்ளுவர் சொல்லாதது, மனித சமுதாயத்திலிருந்து புகழுடன் உயர்ந்தவர்களும் அந்தச் சமுதாயத்திற்கே பயன்பட்டால்தான் அந்தச் சமுதாயம் வாழும் என்ற செய்தி. கடலிலிருந்து நீரை முகக்கிற மேகம் மீண்டும் அந்தக் கடலுக்கு

மழையாகப் பொழிந்து நீரை வழங்க வேண்டியது அதன் கடமை. மேகம் அப்படிச் செய்யவில்லை யென்றால் அளப்பரிய அந்தக் கடல்கூட வற்றிவிடும். அதே போல் மனித சமுதாயத்தில் பலப்பல நன்மைகளைப் பெற்று உயர்ந்து புகழ் பெற்றவர்களும் மீண்டும் அந்தச் சமூகத்திற்குத் தொண்டு செய்து பயன்பட வேண்டும் அது அவர்களின் கடமை. அவர்கள் அப்படிச் செய்யவில்லை என்றால் சமூகமும் அழிவை எதிர்கொள்ள வேண்டிவரும் என்ற எச்சரிக்கையை இடமறிந்து பொருள் பொருத்தமறிந்து சொன்ன உரையாசிரியர் கலைஞரை வியக்காமலிருக்க முடியாது. உடன் ஒன்று சேர்த்துச் சொல்லல் என்ற இந்த உத்தி கலைஞர் கையாளும் தனித்துவம் வாய்ந்த உத்தி என்பதை நினைவில் கொள்ளுதல் வேண்டும்.

உரை மரபை மீறும் உத்தி:

மூல நூலாசிரியன் சொல்லுகிற கருத்தை வலியுறுத்திக் கூறுவதும் விளக்கமளிப்பதும் மட்டுமே உரையாசிரியன் பணி என்பது மரபார்ந்த உரைநூல்களின் இலக்கணம். ஆனால் கலைஞர் உரை இந்த உரை மரபிலிருந்து மாறுபடுகின்றது. உரை மரபுகளை மீறுதல் என்பதையே ஒரு உத்தியாகக் கையாண்டு பல குறட்பாக்களுக்கு விளக்கமளித்துள்ளார் உரையாசிரியர் கலைஞர்.

பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா

பிற்பகல் தாமே வரும் குறள்: 319

கலைஞர் உரை: பிறர்க்குத் தீங்கு விளைவித்து விட்டோம் என்று ஒருவர் மகிழ்ந்து கொண்டிருக்கும் போதே, அதே போன்ற தீங்கு அவரையே தாக்கும்.

இன்னா செய்யாமை என்ற அதிகாரத்தில் வரும் இக்குறட்பாவிற்குக் கலைஞர் கூறும் உரையை நுணுகிப் பார்த்தால் இரண்டு புதிய செய்திகளை அவர் பதிந்துள்ளது தெரியவரும். ஒன்று, இன்னா செய்யின் என்று மட்டுமே மூல நூலாசிரியன் சொல்லியிருக்க உரையாளரோ தீங்கு விளைவித்து விட்டோம் என்று ஒருவர் மகிழ்ந்து

கொண்டிருக்கும் போதே என, தீங்கு செய்தவரின் மகிழ்ச்சியைப் பதிவு செய்கிறார். ஒருவர் மனமறிந்து அல்லது வேண்டுமென்றே தீங்கு செய்தால் அதாவது பிறர் துன்பத்தில் இன்பம் காணும் கொடிய நெஞ்சினராக இருந்தால் அவர் செய்த தீமை அவருக்கே வந்து மூளும் என்று புதிய விளக்கம் தருகிறார். அறியாமல் பிறர்க்கு தீங்கு விளைவித்து விட்டவர்களுக்கு இவ்விதி பொருந்தாது என்பது உரையாசிரியரின் மற்றுமொரு உட்கருத்து.

இரண்டாவது, பிறருக்கு நாம் முற்பகலில் தீங்கு செய்தால் பிற்பகலிலேயே நமக்குத் தீங்கு வந்து சேரும் என்று திருவள்ளுவர் தம் குறளில் சொல்லியிருக்க உரையாசிரியரோ, ஒருவர் பிறர்க்குத் தீங்கு செய்ததை நினைத்து மகிழ்ந்து கொண்டிருக்கும்போதே அதேபோன்ற தீங்கு அவரைத் தாக்கும் என்று உரை செய்துள்ளார். முற்பகல் பிற்பகல் என்று கால வேறுபாட்டை மூல நூலாசிரியன் சொல்லியிருக்க, கலைஞரோ கால இடையீடின்றி உடனே தீங்கு செய்தவனைத் தாக்கும் என்கிறார். இந்த உரை வேறுபாட்டினைக் கூர்ந்து கவனித்தால் அறத்தை வலியுறுத்துவதில் மூல நூலாசிரியனை விட உரையாசிரியர் வேகம் காட்டுகிறார் என்பது புலனாகும். இப்போக்கு உரை மரபுக்கு மாறானது என்றாலும் கூட இதனையே ஓர் உத்தியாகக் கையாண்டு வெற்றிபெற்றுள்ளார் உரையாசிரியர் கலைஞர் என்பதை உணரமுடியும்.

புதிய விளக்கங்களை இணைக்கும் உத்தி:

உரையாசிரியர்கள் மூல நூலுக்கு உரை எழுதும் போது, தாம் எழுதும் இவ்வுரைக்கு முன் தோன்றிய உரைகள் அனைத்தையும் படித்து உள்வாங்கி எழுதுவது வழக்கம். அப்படி உரை வகுக்கும்போது பிறர் உரைகளை ஏற்று எழுதுவதும், மறுத்து அல்லது மாறுபட்டு எழுதுவதும் வழக்கமான நடைமுறைகளாகும். உரையாசிரியர்கள் சிலர் பழைய உரைகளோடு ஒத்துப் போகும் இடங்களில் கூடச் சில சொற்களுக்குப் புதிய விளக்கங்களை இணைத்துத் தமது உரைக்கு ஒரு புதிய பரிமாணத்தை

ஏற்றிவிடுவதுண்டு. உரையாசிரியர் கலைஞர் குறளுரையின் பல இடங்களில் இத்தகு உத்தியைக் கையாண்டுதம் உரைக்குப் புதுமை சேர்க்கின்றார்.

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு

ஐம்புலத்தார் ஓம்பல் தலை. குறள்: 43

கலைஞர் உரை: வாழ்ந்து மறைந்தாரை நினைவு கூர்தல், வாழ்வாங்கு வாழ்வோரைப் போற்றுதல், விருந்தோம்பல், சுற்றம் பேணல், ஆகிய கடமைகளை நிறைவேற்றத் தன்னை நிலைப்படுத்திக் கொள்ளல் எனப்படும் ஐவகை அறநெறிகளும் இல்வாழ்வுக்கு உரியனவாம்.

இல்வாழ்க்கை அதிகாரத்தில் வரும் மேற்குறிப்பிட்ட குறளுக்குப் பரிமேலழகர் பிதிரர், தேவர், விருந்தினர், சுற்றத்தார், தான் என்று சொல்லப்பட்ட ஐந்திடத்தும் செய்யும் அறநெறியை வழுவாமல் செய்தல் இல்வாழ்வானுக்குச் சிறப்புடைய அறமாம் என்று உரை எழுதுகின்றார். ஆனால் கலைஞரோ இக்குறள் உரையில் மூன்று புதிய விளக்கங்களை இணைத்துப் புத்துரை படைக்கின்றார்.

1. தெய்வம் என்று குறள் குறிப்பிடும் சொல்லுக்கு தேவர் என்று பொருள் கூறுகின்றார் பரிமேலழகர். கலைஞரோ தெய்வம் எனடபதற்கு வாழ்வாங்கு வாழ்வோர் என்று பொருள் காணுகின்றார். 2. ஐவருக்கும் செய்யும் அறங்கள் என்று பொதுப்பட பரிமேலழகர் உரை சொல்லியிருக்க, கலைஞரோ ஒவ்வொரு அறத்தையும் நினைவு கூர்தல், போற்றுதல், ஓம்புதல், பேணுதல், நிலைப்படுத்திக் கொள்ளல் என்று விளக்கி விரிவுரை செய்கின்றார். 3. இல்வாழ்வான் அறநெறியை வழுவாமல் செய்ய வேண்டிய இடங்கள் ஐந்தினைக் குறிப்பிடும்போது, தான் என்று இல்வாழ்வானையும் இணைத்துக் கொள்கின்றார். இல்வாழ்வான் தனக்கே அறநெறி வழுவாமல் எப்படி? என்ன? செய்துகொள்ள முடியும் என்ற மயக்கம் இவ்வுரையில் தோன்றுகிறது. உரையாசிரியர் கலைஞரோ இத்தகு குழப்பத்திற்கு இடமில்லாமல் உரை

எழுதுகின்றார். எப்படியெனில், வாழ்ந்து மறைந்தாரை நினைவு கூர்தல், வாழ்வாங்கு வாழ்வோரைப் போற்றுதல், விருந்தோம்பல், சுற்றம் பேணல், ஆகிய நான்கு கடமைகளையும் நிறைவேற்றத் தன்னை நிலைப்படுத்திக் கொள்ளல் என்று ஐந்தாவதாக இடம்பெறும் தான் என்பதற்கு விளக்கம் கூறிக் குறளுரையை முழுமை செய்கின்றார். புதிய விளக்கங்களை இணைக்கும் இவ்வுத்தி கலைஞரின் உரை உத்திகளில் தனிச்சிறப்பானதாகும்.

காமத்துப்பாலில் இடம்பெறும்,

பெண்ணியலார் எல்லாரும் கண்ணிற் பொதுவுண்பர்

நண்ணேன் பரத்தநின் மார்பு குறள்: 1311

மேற்கூறிய புலவி நுணுக்கம் அதிகாரப் பாடலில் பரத்த நின் மார்பு என்பதற்குப் பரத்தமை ஒழுக்கம் உடையவனே என்று எல்லா உரையாசிரியர்களும் உரை கூற, கலைஞரோ பரத்த என்பதை வலித்தல் விகாரமாகக் கொண்டு பரந்த நின் மார்பு என்று புதிய விளக்கம் தருகின்றார். இப்புதிய விளக்கம் பரத்தமை செய்திகளை முற்றிலுமாக விலக்கி நூல் சமைத்த திருவள்ளுவரின் உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்தும் உரையாக அமைந்து சிறக்கின்றது.

முடிப்புரை:

கலைஞரின் திருக்குறள் உரை வழக்கமான திருக்குறள் உரைகளிலிருந்து மாறுபட்டுப் பல இடங்களில் புத்தம் புத்துரையை வழங்குகின்ற உரையாகத் திகழ்கின்றது. கலைஞரின் புத்துரைகள் தனித்தலைப்பில் ஆராயப்பட வேண்டிய தனித்தன்மை வாய்ந்தவை. கலைஞரின் உரையிலியே அளவில் பெரிய உரை அறத்தாறு இதுவென வேண்டா.. என்ற குறளுக்குக் கலைஞர் வரைந்துள்ள உரையே. நுட்பம் வாய்ந்த இக்குறள் தனியே விரித்துரைக்கத் தக்கது.

இமயமலைக்குப் பொன்னாடை போர்த்துகிற முயற்சியில் ஈடுபடுவதும், திருக்குறளுக்கு உரையெழுதுவதும் ஒன்றுதான் என்று உரையாசிரியர் கலைஞர் தம் முன்னுரையில் குறிப்பிட்டிருப்பது குறள் உரையில் அவர் காட்டும் சிரத்தைக்கு ஓர் அடையாளம். அவையடக்கமாக இச்செய்தியைக் கலைஞர் குறிப்பிட்டாலும் இமயமலைக்குப் பொன்னாடை போர்த்தும் பெரிய முயற்சியில் அவர் வெற்றிபெற்றுள்ளார் என்றே தோன்றுகிறது.

திருக்குறளை வாசிக்கும் ஒவ்வொருவருக்கும் எளிதில் குறட்கருத்துக்கள் புரிதல் வேண்டும் என்ற கொள்கையோடு உரை வரையத் தலைப்பட்ட கலைஞர் தம் எளிமையான நடையாலும் தாம் கையாண்டு வெற்றி பெற்றுள்ள பல்வகைப் புதிய உத்திகளாலும் இச்சாதனையை நிகழ்த்தியுள்ளார். கலைஞர் உரையை வாசிக்கும்தோறும் நம் நினைவுக்கு வருகிற திருக்குறள்,

இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து

அதனை அவன்கண் விடல் (குறள்: 517)

# குறள் நெறி





நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்




செம்மொழி காத்த செம்மல்
மா.கோபாலசாமி இரகுநாத இராசாளியார்


பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்
இணையாசிரியர்; தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

செம்மொழி காத்த செம்மல் மா.கோபாலசாமி இரகுநாத இராசாளியார்

--இலக்குவனார் திருவள்ளுவன்

உலகின் முதல் மொழியான தமிழ், உலக மொழிகளுக்கெல்லாம் தாய் என்னும் செம்மைச்சிறப்புடன் தோன்றும் பொழுதே செம்மொழியாய் அமைந்தது. இருப்பினும் ஆங்கிலேயர் ஆட்சியில் செயற்கை மொழியான சமற்கிருதம் போன்றவற்றைச் செம்மொழி என்ற போர்வையில் ஊக்கப்படுத்தி வந்தது அரசு. ஆனால் உயர்தனிச் செம்மொழியான தமிழுக்கும் செம்மொழிக்குரிய அறிந்தேற்பு வழங்க வேண்டும் என நல்லறிஞர்கள் குரல் எழுப்பி வந்தனர்.

இதன் தொடர் நிகழ்வால் 12.10.2004 அன்று மத்திய அரசு தமிழுக்கான செம்மொழி அறிந்தேற்பை வழங்கியது. இதற்கு அமைப்பு நிலையில் முதலில் வித்திட்டது கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் 1919 ஆம் ஆண்டுத் தீர்மானம் என்பதைத் தமிழறிஞர்கள் அனைவரும் அறிவர். ஆனால் அத்தகைய தீர்மானத்தைக் கொண்டுவந்தது யார் என்பதைத் தமிழறிஞர்களும் அறியாமல் உள்ளனர். அத்தகைய சிறப்பு மிக்க பெருந்தகையாளர்தாம் செம்மொழிப்புரவலர் மா.கோபாலசாமி இரகுநாத இராசாளியார். நாமறிந்த சிறப்பிற்குரிய பலரின் பணிகளுக்கு வேராய் இருந்து பணநீராய்ப் பொழிந்து ஊக்க உரமிட்டு வளர்த்தவர், மக்களால் இராசா என அழைக்கப்பெற்ற, குறு நில மாமன்னர் போல் திகழ்ந்த கோபாலசாமியாரே ஆவார்.

அறிஞர் பெருந்தகை கோபாலசாமி தமிழ், ஆங்கிலம், சமற்கிருதம் ஆகிய மொழிகளில் புலமை மிக்கவர்; நூலாராய்ச்சியில் ஈடுட்ட அறிஞர்; சிறந்த சொற்பொழிவாளர்; இறைப்பணிகள்

ஆற்றியவர். தமிழ் மருத்துவ நூலில் பயிற்சியும் பட்டறிவும் மிக்கவர். என்றபோதும் மருத்துவ அறிவைப் பணமாக்கக் கருதாமல் ஏழைகளின் மருத்துவராக விளங்கிய செம்மல். ஐம்பதுக்கும் மேற்பட்ட ஊர் மக்கள் பயனுறும் வகையில் 'ஔடதசாலை' என்னும் மருத்துவமனை அமைத்தவர்.

அரசன் சண்முகனார், பின்னத்தூர் நாராயணசாமி(ஐயர்), உ.வ.சாமிநாத(ஐயர்), விஞ்சைராயர் சதாசிவம்(பிள்ளை), சக்கரை இராமசாமிப்பபுலவர், மு.இரா.அருணாசலக் கவிராயர், கோபாலகிருட்டிண பாரதியார், சேதுராம பாரதியார், தூத்துக்குடி பொ.முத்தையா(பிள்ளை), இலக்கணக்கடல் சாமிநாத(பிள்ளை), கவியரசு வெங்கடேச(ப் பிள்ளை), நாகை முத்துசாமி(ஐயர்), ந.மு.வேங்கடசாமி நாட்டார், நீ.கந்தசாமி(ப்பிள்ளை), பரிதிமாற்கலைஞர், இராகவ(ஐயங்கா)ர், முதலான அறிஞர் பெருமக்களின் தமிழ்வளர்ச்சிப் பணிகளுக்குப் புரவலராக இருந்து ஆதரித்தவர்.

ஞானசம்பந்தரால் பாடப்பெற்ற திருத்தலமே அரதைப் பெரும்பாழி. இதுவே இப்பொழுது சமற்கிருதமயமாகி அரித்துவார மங்கலம் எனப்படுகிறது. இவ்வூரில் பிறந்து புகழ் சேர்த்தவர்களுள் முதன்மையான ஆன்றோராகத் திகழ்பவர் வா. கோபாலசாமி இரகுநாத இராசாளியார். புரவலர் கோபாலசாமி கார்த்திகை 17 , 1901 / திசம்பர் 1, 1870 இல் வாசுதேவரகுநாத இராசாளியார்.- ஆயி அம்மாள் ஆகியோரின் திருமகனாகப் பிறந்தவர்; இளம் அகவையில் தந்தை காலமானதால், குடும்பச்சுமையை ஏற்பதற்காகக் கல்லூரிப் படிப்பைக் கைவிட்டவர்; மாமா வேலு(வாண்டையாரின்) திருமகள் பெரியநாயகி அம்மையை வாழ்க்கைத் துணையாக ஏற்று நல்லறம் நடத்தியவர்; கல்லூரிக் கல்வியைத் தொடர முடியாவிட்டாலும் தனிப்பட்ட முறையில் இலக்கியங்களைப் படித்து இலக்கிய ஆர்வலராகச் செயல்பட்டவர்.

பிறருக்கும் தமிழ் இலக்கிய ஈடுபாடு வேண்டும் என்பதற்காகத் தம் ஊரில் பண்டைய இலக்கிய நூல்கள் யாவற்றையும் தொகுத்து நூலகம் அமைத்தவர்; தொல்காப்பியப் பாயிர உரை விருத்தி, தொல்காப்பியம் தெய்வச்சிலையார் உரை, வீரசோழியம் முதலான இலக்கணநூல் ஓலைச்சுவடிகளையும் நற்றிணை, புறநானூறு முதலான இலக்கிய நூல் ஓலைச் சுவடிகளையும் உலகிற்குத் தந்து அச்சேற்ற உதவியவர்; வள்ளல் பாண்டித்துரை(த் தேவர்)

மதுரையில் தமிழ்ச்சங்கம் தோற்றுவித்த பொழுது உடனிருந்து இணைந்து  தமிழ்ச்சங்கத் தோற்றத்திற்குக் காரணமாக இருந்தவர்; மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் சார்பில் தமிழ்க்கல்லூரி தோற்றுவித்த பெருமைக்குரியவர்; கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் வளர்ச்சிக்கு வித்தானவர்; ஆளுநர் இலாலி நட்பால், சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறை நிறுவக் காரணமாக இருந்தவர்; சமய நல்லிணக்கர்; அன்னிபெசண்ட்டு அம்மையாரின் பிரம்ம ஞான சபையில் ஈடுபாடு கொண்டு  அவரை அழைத்துக் கூட்டங்கள் நடத்தியவர்; இவ்வாறு இப்பெருந்தகையைப் பற்றிக் கூறிக் கொண்டே போகலாம்.

கரந்தைத் தமிழ்ச்சங்கம் தோற்றுவிக்கப்பட்டவுடன் அதன் நூலகத்திற்குத் தம்மிடமிருந்த நூற்றுக்கணக்கான நூல்களை அன்பளிப்பாக வழங்கியவர். ஆவணி 25, 1942 / செப்.10, 1911 அன்று குன்னூரிலும் ஒரு நூலகம் அமைத்தவர். அதைவிடப் பெருஞ்சிறப்பு மூவாத் தமிழின் தொல்லிலக்கண நூலான தொல்காப்பியத்தை இயற்றிய பேராசான் தொல்காப்பியருக்கு அங்குச் சிலை எழுப்பியுள்ளார்.  தொல்காப்பியரை என்றென்றும் மக்கள் நினைவில்  கொள்ள வேண்டும் என்பதற்காக முதன்முதலில் அவருக்குச்  சிலை எழுப்பிய பெருமை செம்மொழிப்புரவலர் மா.கோபாலசாமி இரகுநாதரையே சாரும்.

5ஆம் சார்சு மன்னர் தில்லியில் முடிசூட்டும் விழாவில் பங்கேற்றவர்.  அப்பொழுது அவரிடம் பேட்டியும் எடுத்துள்ளார். குற்றப் பரம்பரை என்னும் கொடிய சட்டம் நீங்க வாதாடி அதன் கடுமையைத் தணித்துள்ளார். [முத்துராமலிங்க[த்தேவ)ர் தொடர் முயற்சியால் பின்னர் இச்சட்டம் நீக்கப்பட்டது. ஆனால், இராசாளியார் வரலாற்று நூலில் இவரால் எடுக்கப்பட்டு விட்டதாகத்தவறாக இடம் பெற்றுள்ளது.] மணிமுடிநாள் நினைவாக மணிமுடி ஓய்வில்லம் (Coronation rest house) ஒன்றையும் மணிமுடிக்கிணறு   ஒன்றையும் தம் பகுதியில் நிறுவியுள்ளார்.

மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்

பெருந்தகை யான்கண் படின். (திருக்குறள் 217)

என்னும் தெய்வப்புலவர் திருவள்ளுவர் வாக்கிற்கிணங்கத் தம் செல்வத்தை எல்லா வகையிலும் பிறர் பயன்பட அருந்தொண்டாற்றிய வள்ளல்.

பங்குனி 25, 1951 / ஏப்பிரல் 7, 1920 இல் செம்மொழிப் புரவலர் கோபாலசாமி இயற்கை எய்தினார்; இறந்த உடன், அவர் விருப்பத்திற் கிணங்கத் தமிழில் இறைப்பாடல்கள் பாடப்பட்டன. தாம் இறந்த பின்னரும் தமிழே முழங்க வேண்டும் என்ற தணியா ஆசை இவரின் தமிழ்ப்பற்றை உணர்த்தும். அன்னி பெசண்ட் அம்மையார் இவரது சமூக சேவையைப் பாராட்டி F.T.S ( Fellowship thiophical society) என்ற விருதை வழங்கினார்.

அறிஞர் ந.மு.வேங்கடசாமிநாட்டார் அவர்களின் கள்ளர் வரலாற்று நூலிலும் தலைமையாசிரியர் த.கோபால்சாமி தொகுத்த சாதனைச் சரித்திரத்திலும் இராகுல்தாசனின் தீக்கதிர்க் கட்டுரையிலும் செம்மொழிப்புரவலர் வா.கோபாலசாமி இரகுநாத இராசாளியார் அருந்தொண்டுகளும் கொடைச்சிறப்புகளும் சொற்பொழிவுத்திறனும் நூலாராய்ச்சிப்பணிகளும் குறிக்கப்பெற்றுள்ளன. எனினும் இவரை இளந்தலைமுறையினர் அறியும் வண்ணம் இவரது வரலாறு பாடமாக வைக்கப் பெற வேண்டும். “இராசாளியாருக்குச் செய்யும் சிறப்பு, தமிழன்னைக்குச் செய்யும் சிறப்பு” எனக் கூறியுள்ளார் சிலம்புச் செல்வர் ம.பொ.சி(வஞானம்).ஆனால் செம்மொழி மாநாடு நடந்த பொழுதும் அவர் நினைவு சிறப்பிக்கப்படவில்லை. அவரால் குன்னூரில் கட்டப்பட்ட நூலகம் மூடப்பட்டு உலகச்செம்மொழி மாநாட்டின்பொழுது திறக்குமாறு வேண்டுதல் விடுத்தும், இன்றுவரை திறக்கப்படவில்லை. அவரால் எழுப்பப்பெற்ற தொல்காப்பியர் சிலையும் பேணப்படவில்லை. இவற்றைப் பேண அரசு நடவடிக்கை எடுக்க வேண்டும். அருந்தொண்டாற்றிய இவரை மாப்பிள்ளை எனக்கூறிய பார்புகழ் பாண்டித்துரை(த்தேவரின்) மதுரைத் தமிழ்ச்சங்கத்திலும் இவரால் உருவாக்கப்பெற்ற மதுரைப் புலவர் கல்லூரியிலும் சங்கம் தோன்றிய நாள் முதல், தான் மறையும் நாள் வரை இவரால் பேணப்பட்ட கரந்தைத் தமிழ்ச்சங்கத்திலும் இவரது நினைவுகூரும் ஒளிப்படங்கள்கூட இல்லை.

எனவே, அவரது படங்களை இங்கே திறக்க வேண்டும். அரசு ஆண்டுதோறும் தமிழ்ப்புரவலர் ஒருவருக்கு இவர் பெயரில் விருது வழங்க வேண்டும். தமிழ்ப்பல்கலைக்கழகத்தின் கட்டடம் ஒன்றிற்கு இவர் பெயரைச் சூட்ட வேண்டும். செம்மொழிப்புரவலர் கோபாலசாமி அவர்களின் நினைவை நாம் போற்றுவதே தமிழுலகு அவருக்குச் செய்யும் கைம்மாறு ஆகும்.

செம்மொழிப் புரவலரைக் கொண்டாடிச் செந்தமிழைப் போற்றுவோம்!

## யாகாவாராயினும் நாகாக்க!

திருக்குறளார் முனைவர் இர. பிரபாகரன்

”கடவுள் மனிதனுக்குச் சொன்னது பகவத் கீதை. மனிதன் கடவுளுக்குச் சொன்னது திருவாசகம். மனிதன் மனிதனுக்குச் சொன்னது திருக்குறள்.” என்று கூறப்படுகிறது. திருக்குறள் என்ன சொல்கிறது? சுருங்கச் சொன்னால், பிறர் மனம் புண்படும்படியான தீயசொற்களைக் கூறாமல், தனக்கும் பிறர்க்கும் தன் செயல்களால் தீங்கிழைக்காமல், அன்போடும் அறத்தோடும் மனிதன் வாழவேண்டும் என்று, எக்காலத்திற்கும் எந்நாட்டவருக்கும் ஏற்ற கருத்துக்களைத் திருக்குறள் கூறுகிறது. பிறர் மனம் புண்படும்படியான சொற்களைக் கூறுவது சொற்குற்றம் என்று அழைக்கப்படுகிறது. புறங்கூறுதல், பயனில சொல்லுதல், இன்னாச்சொல் கூறுதல் மற்றும் பொய்சொல்லுதல் ஆகிய நான்கும் சொற்குற்றங்களாகக் கருதப்படுகின்றன. புறங்கூறாமை, பயனில சொல்லாமை, இனியவை கூறல், மற்றும் வாய்மை ஆகிய அதிகாரங்களில் சொற்குற்றங்களால் வரும் தீமைகளையும், அவற்றைத் தவிர்ப்பதால் வரும் நன்மைகளையும், வள்ளுவர் விளக்கமாகவும், தெளிவாகவும் கூறுகிறார். இந்த நான்கு அதிகாரங்களில் வள்ளுவர் கூறும் கருத்துக்களைத் தொகுத்து வழங்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

### புறங்கூறுதல்

பொதுவாக எல்லா மதங்களிலும், நீதிநூல்களிலும் புறங்கூறுதலைத் தவிர்க்க வேண்டும் என்று கூறப்படுகிறது. குறிப்பாக, பஹாய் மதம், இஸ்லாமிய மதம், கிறித்துவ மதம், யூத மதம், மற்றும் புத்த மதம் ஆகிய மதங்கள், புறம்பேசுவதைப் பெருங்குற்றமாகவும் பாவமாகவும் கருதுகின்றன. புறங்கூறுதல் ஒருவனுடைய ஆத்மாவுக்குக் கேடு விளைவிப்பதாகவும்,

கடவுளின் கோபத்திற்குக் காரணமாகவும் அமையும் என்று பஹாய் மதம் கூறுகிறது. ஒருவன் புறங்கூறினால், அது அவன், அவனுடைய இறந்த சகோதரனின் தசைகளைத் தின்பதைப் போன்றது என்று திருக்குர்ரான் கூறுகிறது. புறங்கூறுதல் புத்த மதத்தின் எட்டு நெறிகளில் (The Eightfold Path) ஒன்றான நன்மொழி (Right Speech) என்பதற்கு முற்றிலும் மாறானது என்று புத்த மதத்தின் நூல்கள் கூறுகின்றன. ஓருவனுக்கு நேரே எதிர்நின்று, கருணையின்றிப் பேசினாலும் பேசலாம். ஆனால், அவன் இல்லாதபொழுது, பின்னர் விளையுந் தீமையை எண்ணிப் பார்க்காமல் புறங்கூறக் கூடாது (குறள் - 184). இந்தக் குறளில், "கற்க கசடறக் கற்பவை, கற்றபின் நிற்க அதற்குத் தக." என்ற குறள் நடையைப்போல், "சொல்லற்க" என்பது வள்ளுவரின் கட்டளையாகத் தோன்றுகிறது. "ஒருவன் அறத்தைப் பற்றிப் பேசாமல் தீமைகளையே செய்தாலும், அவன் ஒருவரையும் பற்றிப் புறங்கூறமாட்டான் என்று உலகத்தாரால் சொல்லப்படுதல் நன்று." என்று குறள் 181- இல் வள்ளுவர் கூறுகிறார். இவ்வாறு வள்ளுவர் கூறுவதால், தீமைகள் செய்தாலும் பரவாயில்லை; புறங்கூறாமல் இருந்தால் மட்டும் போதும் என்ற முடிவுக்கு வரக் கூடாது. புறங்கூறாமையை வலியுறுத்துவதற்காக இங்ஙனம் கூறியதாகப் பொருள்கொள்ள வேண்டும். அடுத்த குறளில், "அறமல்லாத செயல்களைச் செய்வதைவிட, புறங்கூறுதல் கொடிய செயல்." என்று வள்ளுவர் கூறுகிறார். ஒருவனைக் காணாதபொழுது, அவனைப் பழித்துக்கூறி, அவனைக் கண்டபொழுது அவனோடு பொய்யாகச் சிரித்து மகிழ்தல், அறம் என்று ஒன்றுமில்லை என்று அழித்துக்கூறி அறமல்லாத செயல்களைச் செய்வதைவிடத் தீய செயலாகும் (குறள் – 182). முடிவாக, "ஒருவனைக் காணாதபொழுது, அவனைப் பற்றி இகழ்ந்து பேசி, அவனைக் கண்டபொழுது, நல்லவன்போல் நடித்து வாழ்வதைவிடச் சாதல் அறநூல்கள் கூறும் நன்மைகளைத் தரும் (குறள் – 183)." என்றும் வள்ளுவர் கூறுகிறார். இங்கு, புறங்கூறி வாழ்வதைவிடச் சாவதே மேல் என்று கூறி, வள்ளுவர் புறங்கூறாமையின் இன்றியமையாமையை வலியுறுத்துகிறார். ஒருவன் புறங்கூறினால் அவன் உடனே சாக வேண்டும் என்பது வள்ளுவரின் கருத்தன்று. தன்னைத் திருத்திக்கொண்டு, மீண்டும் அவன் புறங்கூறாமல் இருக்க வேண்டும் என்பதுவே வள்ளுவரின் கருத்து என்பதற்குச் சான்றாக, குறள் 190 – இல், "மற்றவர்களின் குற்றங்களைக் கண்டுபிடித்துப் புறங்கூறுபவர்கள், தம்மிடமுள்ள குற்றங்களையும் கண்டு உணர வல்லாராயின் புறங்கூறமாட்டார்கள். அவர்களின் உயிருக்குத் தீங்கு உண்டாகாது." என்று வள்ளுவர் கூறுகிறார். அதாவது,

புறங்கூறுபவர்கள் தங்கள் குற்றங்களை உணர்ந்தால், பிறர் தங்களைப் பற்றிப் புறம்போசுவார்கள் என்பதைப் புரிந்துகொண்டு, தங்கள் குற்றங்களையும், புறங்கூறுவதையும் திருத்திக்கொள்வார்கள் என்பது கருத்து.

கண்நின்று கண்ணறச் சொல்லினும், சொல்லற்க

முன்இன்று பின்நோக்காச் சொல். (குறள்- 184)

அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்

புறங்கூறான் என்றல் இனிது. (குறள் -181)

அறனழீஇ அல்லவை செய்தலின் தீதே

புறனழீஇப் பொய்த்து நகை. (குறள்-182)

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்

அறங்கூறும் ஆக்கம் தரும். (குறள் – 183)

ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்

தீதுண்டோ மன்னும் உயிர்க்கு. (குறள் – 190)

**பயனில சொல்லுதல்**

"ஒருவன் தன்னுடைய நண்பர்களிடம் விரும்பத் தகாத செயல்களைச் செய்வது தீய செயல். பயனற்றவற்றைப் பலர்முன் ஒருவன் சொல்லுதல் அதைவிடத் தீய செயலாகும்." என்று குறள் 192-இல் வள்ளுவர் அறிவுறுத்துகிறார். மேலும், அறிவுடையவர்கள் பலரும் வெறுக்குமாறு பயனற்றவற்றைப் பேசுபவன் எல்லோராலும் இழிவாக எண்ணப்படுவான் என்றும், ஒருவன் பயனவற்றவற்றை விரிவாகப் பேசுவது அவன் நேர்மையில்லாதவன் என்பதை அறிவிக்கும் என்றும், ஒருவன் பலரிடம் பயனற்ற சொற்களைப் பேசினால், அது அவனை விரும்பத்தகாதவனாக்கி, அவனடைய வேண்டிய நன்மைகளை நீக்கும் என்றும்,

நற்பண்புடையவர்கள் பயனற்றவற்றைப் பேசினால், அவர்களது புகழும் சிறப்பும் அவர்களை விட்டு நீங்கும் என்ற கருத்துக்களும் குறளில் காணப்படுகின்றன (குறட்பாக்கள் 191, 193, 194,195). பயனில சொல்பவனை மனிதனாகவே கருதக்கூடாது என்றும், அவன் உள்ளீடு இல்லாத பதரைப் போன்றவன் என்றும் வள்ளுவர் கூறுகிறார் (குறள் 196). மேலும், சான்றோர்களும், அறிதற்கரியவற்றை ஆராயக்கூடிய அறிவுடையவர்களும், மனதில் மாசற்ற அறிவுடையவர்களும், பயனில்லாத சொற்களை தப்பித் தவறியோ அல்லது மறந்தோகூடப் பேசமாட்டர்கள் என்ற கருத்தையும் குறளில் காண்கிறோம் (குறட்பாக்கள் 197, 198 மற்றும் 199). முடிவாக, “பயனுள்ள சொற்களைச் சொல்லுக; பயனில்லாத சொற்களைச் சொல்லற்க குறள் – 200).” என்பது வள்ளுவரின் அறிவுரை.

பயனில பல்லார்முன் சொல்லல் நயனில

நட்டார்கண் செய்தலிற் றீது. (குறள் – 192)

பல்லார் முனியப் பயனில சொல்லுவான்

எல்லாரும் எள்ளப் படும். (குறள் – 191)

நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்

பண்பில்சொல் பல்லார் அகத்து. (குறள் – 194)

சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில

நீர்மை யுடையார் சொலின். (குறள் – 195)

பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்

மக்கட் பதடி எனல். (குறள் – 196)

நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்

பயனில சொல்லாமை நன்று. (குறள் – 197)

பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருள்தீர்ந்த

மாசறு காட்சி யவர். (குறள் – 199)

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க

சொல்லிற் பயனிலாச் சொல். (குறள் – 200)

இன்றைய சூழ்நிலையில் பயனில சொல்லுதல் பல பரிமாணங்களில் நடைபெறுகிறது. மின்னணுத் தொழில்நுட்ப வளர்ச்சியால் (மின்னணுத் தொழில்நுட்பம் – Electronic Technology) கணினி மற்றும் அலைபேசி (அலைபேசி – mobile phone) ஆகியவற்றில் முகநூல் (முகநூல் -Facebook), புலனம் (புலனம் - WhatsApp), கீச்சகம் (கீச்சகம் - Tweeter) போன்ற செயலிகளின் (செயலி - Program) உதவியால் பயனில்லாதவற்றைப் படித்தும், எழுதியும், பேசியும் பலரும் தங்கள் பொன்னான நேரத்தை வீணாக்குகிறார்கள். அமெரிக்காவில், இளைஞர்கள் சராசரியாக ஒவ்வொரு நாளும் நான்கு மணிநேரம் அலைபேசியைப் பயன்படுத்துவதில் செலவழிக்கிறார்கள் என்று அண்மையில் நடைபெற்ற கருத்துக் கணிப்பு கூறுகிறது. இந்திய இளைஞர்களும் கணினி மற்றும் அலைபேசியில் முகநூல், புலனம், கீச்சகம் போன்ற மென்பொருள்களைப் பயன்படுத்துவதில் நேரத்தைச் செல்வழிக்கிறார்கள் என்பது அனைவரும் அறிந்த செய்தி. கணினி மற்றும் அலைபேசி மட்டுமல்லாமல், பல ஒளியலை வரிசைகளில் (ஒளியலை வரிசை - Channels) ஒளிபரப்பப்படும் பயனற்ற நிகழ்ச்சிகளைப் பார்ப்பதிலும், அவற்றைப் பற்றிப் பேசுவதிலும் மக்கள் தங்கள் நேரத்தைச் செலவழிக்கிறார்கள். இவையனைத்துமே சொற்களின் வழியாக நடைபெறுவதால், இவையும் பயனில சொல்லுதல் என்ற சொற்குற்றத்தைச் சார்ந்தவையாகும்.

***இன்னாச்சொல் கூறுதல்***

பொறாமை, புலன்களின்மீதும் பொருள்களின்மீதும் அதிக ஆசை, சினம், மற்றும் இன்னாச்சொல் இவை நான்கையும் விலக்கி வாழ்வதே அறநெறிப்படி வாழும் வாழ்வாகும் என்று,

அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்

இழுக்கா இயன்றது அறம். (குறள் – 35)

என்ற குறளில் வள்ளுவர் கூறுகிறார். கடுஞ்சொல், வன்சொல், தீயசொல் ஆகியவை இன்னாச்சொல் என்பதில் அடங்கும். இன்னாச்சொற்களைக் கூறுவது அறநெறிக்கு முரண்பட்டது மட்டுமல்லாமல், அது ஒருவனுக்குக் கேடு விளைவிக்கும் என்றும் வள்ளுவர் கூறுகிறார். குறிப்பாக, ஒரு மன்னன் கடுஞ்சொற்களைக் கூறி, கண்ணோட்டம் இல்லாமல் ஆட்சி நடத்துவானானால் அவனுடைய பெருஞ்செல்வம் நீடிக்காமால் அப்பொழுதே கெடும் என்றும், ஒரு மன்னன் கடுஞ்சொல் கூறுவதும், குற்றங்களுக்கு அளவிற்கு மிஞ்சிய தண்டனை அளிப்பதும், அவனது பகையை வெல்லுதற்கேற்ற வலிமை என்னும் இரும்பைத் தேய்க்கும் அரம் என்றும் குறள் கூறுகிறது.

கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ்செல்வம்

நீடுஇன்றி ஆங்கே கெடும். (குறள் - 566)

கடுமொழியும் கைஇகந்த தண்டமும் வேந்தன்

அடுமுரண் தேய்க்கும் அரம். (குறள் – 567)

கடுஞ்சொல் கூறும் மன்னன் தன் செல்வத்தையும் வலிமையையும் இழப்பான் என்று கூறியதைப்போல், அவன் கடுஞ்சொல் கூறாதவனாக இருந்தால், அவன் நாட்டை ஏனைய நாடுகளைவிடச் சிறந்ததாக உலகம் புகழும் (குறள் – 386) என்றும், அவன் இன்சொல்லோடு, மக்களுக்கு வேண்டியவற்றைக் கொடுத்து அன்பாக நாட்டைக் காத்தால், இவ்வுலகம் அவன் புகழைக் கூறுவது மட்டுமல்லாமல் அவன் எண்ணியபடி நடக்கும் (குறள் – 387) என்றும் இன்சொல்லால் வரும் நன்மைகளையும் குறளில் காண்கிறோம்.

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்

மீக்கூறும் மன்னன் நிலம். (குறள் – 386)

இன்சொலால் ஈத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலால்

தான்கண் டனைத்திவ் வுலகு. (குறள் – 387)

திருக்குறளில், ”அரசியல்” என்ற இயலில் கூறப்பட்டிருக்கும் கல்வி, கேள்வி, அறிவுடைமை போன்ற கருத்துக்கள் ஒரு மன்னனுக்கு மட்டுமல்லாமல் அனைவருக்கும் ஏற்ற கருத்துக்களாகும். அதுபோல் இன்னாச்சொற்களால் வரும் தீமையைப் பற்றிய குறட்பாக்களும், இன்சொல்லால் வரும் நன்மைகளைப் பற்றிக் கூறும் குறட்பாக்களும் அனைவருக்கும் ஏற்றவையாகும்.

தீயினால் சுட்ட புண் ஆறினாலும், அந்தப் புண்ணினால் ஏற்பட்ட வடு (தழும்பு) மறைவதில்லை. அதுபோல், கடுஞ்சொற்களால் ஒருவன் மனம் புண்படுத்தப்பட்டால், அந்தப்புண் தீயினால் சுட்டதால் ஏற்பட்ட தழும்புபோல் எப்பொழுதும் ஆறுவதில்லை (குறள் – 129). அதனால், கடுஞ்சொற்களைக் கூறி, ஒருவர் மனத்தையும் புண்படுத்தாமல் இருக்க வேண்டும் என்று வள்ளுவர் கூறுகிறார்.

தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே

நாவினால் சுட்ட வடு. (குறள் - 129)

இன்சொற்கள் இருக்கும்பொழுது, வன்சொற்களைப் பேசுவது, இனிய கனிகள் இருக்கும்பொழுது காய்களை உண்ணுவதுபோல் என்று ஒரு உவமையைக் கூறி (குறள் 100), பிறர் கூறும் இன்சொல்லால் தனக்கு இன்பம் பிறத்தலை அறிகின்றவன், பிறரிடத்து வன்சொற்களைப் பேசுவது ஏனோ (குறள் - 99) என்று ஒரு கேள்வியையும் எழுப்பி, இன்னாச்சொல் கூறுவதைத் தவிர்க்குமாறு வள்ளுவர் அறிவுரை கூறுகிறார்.

இனிய உளவாக இன்னாத கூறல்

கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. (குறள் – 100)

இன்சொல் இனிதுஈன்றல் காண்பான் எவன்கொலோ

வன்சொல் வழங்கு வது. (குறள் – 99)

**பொய்பேசுதல்**

பிற உயிர்களுக்கு எந்தத் தீமையும் பயவாத சொற்களைப் பேசுவது வாய்மை என்று வாய்மைக்கு வள்ளுவர் இலக்கணம் கூறுகிறார் (குறள் – 291). பிறர்க்குக் குற்றமற்ற நன்மை (புரை தீர்ந்த நன்மை) பயக்குமானால் பொய்யான சொற்களையும் வாய்மையாகவே கருதலாம் என்றும் வள்ளுவர் கூறுகிறார் (குறள் – 292). இந்த இரண்டு கருத்துக்களையும் சேர்த்துப் பார்த்தால், எது பொய்மை, எது வாய்மை என்பதில் குழப்பம் ஏற்படலாம். ஒருவன் பொய் சொன்னால் அந்தப் பொய்யை ஏன் சொல்கிறான் என்றும், அவன் சொல்கின்ற பொய்யால் ”புரை தீர்ந்த” நன்மை உண்டா இல்லையா என்பதும் அவனுக்குத் தெரியும். அவன் கூறும் பொய்யால், புரை தீர்ந்த நன்மை உண்டாகும் என்று அவன் கருதினால், அவன் மகிழ்ச்சியாக இருப்பான். அவன் நெஞ்சு அவனை வருத்தாது. அதனால்தான், வள்ளுவர், “ஒருவன் தன் நெஞ்சு அறிந்த ஒன்றைப் பிறர் அறியவில்லை என்று கருதிப் பொய் சொல்லக்கூடாது. அங்ஙனம் பொய் கூறினால், பின்னர் அப்பொய்யே அவன் நெஞ்சைச் சுட்டு வருத்தும் (குறள் – 293).”, என்று கூறுகிறார். ”புரைதீர்ந்த நன்மை வரும் சூழ்நிலைகளில் கூறும் பொய்யை வாய்மையாகக் கருதலாம். மற்ற எல்லாச் சூழ்நிலைகளிலும் பொய் சொல்வது தவறு. பொய்சொன்னால் தன் நெஞ்சே தன்னைச் சுடும்.” என்பது வள்ளுவர் கருத்தாகத் தோன்றுகிறது.

வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்

தீமை இலாத சொலல். (குறள் – 291)

பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த

நன்மை பயக்கும் எனின். (குறள் – 292)

தன்நெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்

தன்நெஞ்சே தன்னைச் சுடும். (குறள் – 293)

இங்கு, “நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்.” என்று உலகநாதர் என்பவர் இயற்றிய உலகநீதி என்ற நூலில் கூறியிருப்பதும், ”நெஞ்சை ஒளித்தொரு வஞ்சகம் இல்லை” என்று கொன்றை வேந்தன் என்ற நூலில் ஔவையார் கூறியிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

பொய் சொல்லாமல் இருப்பது நல்லொழுக்கம் என்பது உலகறிந்த உண்மை. ஒருவன் நெஞ்சாரப் பொய் சொல்லாது ஒழுகுவானாயின், அவன் உலக மக்கள் அனைவரது உள்ளத்திலும் இடம்பெறும் சிறப்பைப் பெறுவான் (குறள் – 294). இக்குறளுக்கு எடுத்துக்காட்டாக காந்தியடிகள் வாழ்ந்தது நினைவுகூரத்தக்கது. ஒருவன் பொய்யாமையை இடைவிடாது கடைப்பிடித்தால், அவன் வேறு அறங்களைச் செய்ய வேண்டியதில்லை. பிற அறங்களால் பெறக்கூடிய பயனை பொய்யாமையாலேயே அடையலாம் (குறள் – 297). முடிவாக, தான் மெய்யாக் கண்டவற்றுள் வாய்மையைவிட நல்லது வேறொன்றுமில்லை என்று தன்மைப் பன்மையில் அழுத்தம் திருத்தமாக வாய்மையின் பெருமையை வள்ளுவர் பறைசாற்றுகிறார் (குறள்- 300).

உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்

உள்ளத்து ளெல்லாம் உளன். (குறள் – 294)

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற

செய்யாமை செய்யாமை நன்று. (குறள் - 297)

யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்

வாய்மையின் நல்ல பிற. (குறள் - 300)

**யாகாவாராயினும் நாகாக்க**

அடக்கமுடைமை என்ற அதிகாரத்தில், “ ஒருவன் ஐம்பொறிகளில் எவற்றையும் அடக்கிக் காவான் எனினும், வாய்ச்சொற்களை அடக்கிக் காத்தல் வேண்டும். அவன் அவ்வாறு செய்யாவிட்டால், தன் வாய்ச்சொற்களால் இழிவு உண்டாகித் துன்பம் அடைவான் (குறள் 127).”, என்ற கருத்து குறளில் காணப்படுகிறது.

யாகாவார் ஆயினும் நாகாக்க காவாக்கால்

சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (குறள் – 127)

”நா” என்பது ”சொல்” என்பதைக் குறிக்கிறது. நாகாத்தல் என்பது, எதைச் சொல்லலாம், எதைச் சொல்லக்கூடாது என்பதைச் சிந்தித்து, சொல்லக்கூடாததைச் சொல்லாமல் தவிர்ப்பதைக் குறிக்கிறது. நாகாத்தல் செய்யாதவன் புறங்கூறுதல், பயனில சொல்லுதல், கடுஞ்சொல் கூறுதல் மற்றும் பொய்பேசுதல் ஆகிய சொற்குற்றங்களைச் செய்து, அவற்றால் வரும் துன்பங்களை அடைவான்.

சொற்குற்றம் வராமல் காப்பது எப்படி? சொல்லுக்கும் செயலுக்கும் மூலகாரணமாக அமைவது மனம். ஒருவனுடைய மனம் தூய்மையாக இருந்தால், அவனுடைய சொல்லும் செயலும் தூய்மையானவையாக இருக்கும். அவன் சொற்களில் குற்றங்கள் இரா. அதாவது, அவன் புறங்கூறமாட்டான்; பயனில கூறமாட்டான்; இன்னாச்சொல் கூறமாட்டான்; பொய் பேசமாட்டான். அவனுடைய செயல்களிலும் தீமை இருக்காது.

அடுத்து, மனதை எப்படித் தூய்மையாக வைத்துக்கொள்வது என்ற கேள்வி எழுகிறது. வள்ளுவர் இந்தக் கேள்விக்கும் விடை அளிக்கிறார். நீரில் குளிப்பதால் உடலைத் தூய்மையாக வைத்துக்கொள்ள முடியும். அதுபோல், எபொழுதும் வாய்மையே பேசுவதால் மனத்தைத் தூய்மையாக வைத்துக்கொள்ள முடியும் என்பது வள்ளுவரின் கருத்து.

புறம்தூய்மை நீரான் அமையும் அகம்தூய்மை

வாய்மையால் காணப் படும். (குறள் – 298)

வாய்மையைக் கடைபிடிப்பவன் தான் சொல்லும் தீய சொற்களுக்கும், செய்யும் தீய செயல்களுக்கும் பொறுப்பேற்றுக்கொள்ள வேண்டும். அதனால், அவன் பிறரால் இகழப்படுவதும், தீய செயல்களுக்குத் தண்டனை அடைவதும் உறுதி.  ஆகவே, காலப்போக்கில், தீய சொற்களைக் கூறுவதையும் தீய செயல்களைச் செய்வதையும் அவன் விட்டுவிடுவான்.

முடிவுரை

புறங்கூறுதல், பயனில சொல்லுதல், இன்னாச்சொல் கூறுதல், பொய்பேசுதல் ஆகிய நான்கும் சொற்குற்றங்கள் என்று கருதப்படுகின்றன. இந்த நான்கு சொற்குற்றங்களால் வரும் தீமைகளையும், அவற்றை விலக்குவதால் வரும் நன்மைகளையும், வள்ளுவர் புறங்கூறாமை, பயனில சொல்லாமை, இனியவை கூறல், வாய்மை என்ற அதிகாரங்களில் விளக்குகிறார். சொற்குற்றங்களுக்கும், தீயசெயல்களுக்கும் காரணம் மனதில் தூய்மையின்மை. எப்பொழுதும் வாய்மையே பேசுவதால் மனதில் உள்ள மாசுக்களை நீக்கி, சொற்குற்றங்களையும் தீயசெயல்களையும் செய்யாமல் வாழமுடியும் என்பது வள்ளுவரின் கருத்து.

# குறள் நெறி



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



தமிழறிஞர் சாலை இளந்திரையனார்

பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்
இணையாசிரியர்; தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

சாலை இளந்திரையனாரின் புரட்சிப் பயணம்

தமிழ்ப் பேராசிரியர்; திறனாய்வாளர்; சொற்பொழிவாளர்; கவிஞர்; எழுத்தாளார்; இதழாளர்; அரசியற் செயற்பாட்டாளர்; பொதுவுடைமைத் தமிழ்தேசியச் சிந்தனையாளர் எனப் பன்முகம் கொண்ட பண்பாளர். சொல்லுதற்கு ஒரு செய்தி இருந்தால் மட்டும் போதாது; அதைச் சுவைபடச் சொல்லும் திறமையும் பெற்றவர் சாலை இளந்திரையன்.

பிறப்பு: திருநெல்வேலி மாவட்டம், களக்காட்டிற்கு அருகில் உள்ள சாலை நயினார் பள்ளிவாசல் என்னும் சிற்றூரில் வாழ்ந்து வந்த வ. இராமையா - அன்னலட்சுமி இணையருக்கு 06.09.1930 அன்று மகனாகப் பிறந்தா ர். இவரை இவர்தம் பாட்டி சொக்கன் எனச் செல்லப் பெயரிட்டு அழைப்பார். சாலை இளந்திரையனின் இயற்பெயர் வ. இரா. மகாலிங்கம் ஆகும்.

பள்ளிக் கல்வி: சாலை இளந்திரையன் 1936 முதல் 1941 வரை களக்காட்டில் உள்ள தொடக்கப் பள்ளியில் முதல் வகுப்பு முதல் ஐந்தாம் வகுப்பு வரை பயின்றார். பின்னர் 1941 முதல் 1944 வரை டோணாவூரில் உள்ள நடுநிலைப் பள்ளியில் எட்டாம் வகுப்பு வரை பயின்றார். 1944 முதல் 1947 வரை பாளையங்கோட்டையில் உள்ள தூய யோவான் உயர்நிலைப் பள்ளியில் பதினொன்றாம் வகுப்பு வரை பயின்றார்.

கல்லூரிக் கல்வி: 1948 முதல் 1950 வரை சென்னை பச்சையப்பன் கல்லூரியில் இடைநிலை வகுப்பில் பயின்றார். அங்கு பேராசிரியர் மு. வரதராசன், அ. மு. பரமசிவானந்தம், அ. ச. ஞானசம்பந்தன் ஆகியோர்களிடம் பயின்றார். 1950 முதல் 1952 வரை சென்னை மாநிலக் கல்லூரியில் பயின்று இளங்கலை பட்டம் பெற்றார். அதே கல்லூரியில் 1952 முதல் 1954 வரை பயின்று முதுலை பட்டம் பெற்றார். அப்பொழுது புகழ்பெற்ற தமிழ்ப் பேராசிரியர்களான சரவண ஆறுமுகன், தெ. பொ. மீனாட்சிசுந்தரம், கொண்டல் சு. மகாதேவன், சு. ந. சொக்கலிங்கம் ஆகியோரிடம் பயின்றார்.

ஆய்வுக் கல்வி: 1954 சூலையில் சென்னை மாநிலக் கல்லூரியில் முதன் முறையாக இலக்கிய முதுவர் பட்டத்திற்கான ஆய்வு வகுப்பு தொடங்கப்பட்டது. அவ்வகுப்பில் 1954 - 1955 ஆம் கல்வி ஆண்டில் முதல் மாணவராகச் சேர்ந்து, பேராசிரியர் தெ. பொ .

மீனாட்சிசுந்தரனாரை நெறியாளராகக் கொண்டு ஆய்வு செய்து அப்பட்டத்தைப் பெற்றார். பின்னர் 1971ஆம் ஆண்டில் தமிழ்நாட்டுப் பழமொழிகள் என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழகத்தில், முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொண்டு, மெய்யியல் முனைவர் பட்டம் பெற்றார்.

புனைபெயர்: இரா. இளந்திரையன் என்னும் பெயரில் 15.08.1950 பிரசண்ட விகடன் இதழில் வெளிவந்த கவிதை இரா. இளந்திரையன் என்னும் பெயரில் 01.09.1950 நாளிட்ட பிரசண்ட விகடன் இதழில் வெளிவந்த கதை சென்னை பச்சையப்பன் கல்லூரியில் பயின்ற காலத்தில் வ. இரா. மகாலிங்கம் அந்நாளில் புகழ்பெற்ற இதழ்களான பிரசண்ட வி கடன், தமிழ்ப் பொழில் உள்ளிட்ட பல இதழ்களில் இலக்கியக் கட்டுரைகள், கவிதைகள், கதைகள் எழுதத் தொடங்கினார். அப்பொழுது மாணவர்களிடம் பெரும் செல்வாக்குப் பெற்றிருந்த திராவிட இயக்கக் கருத்தியலுக்கு மகாலிங்கமும் ஆட்பட்டிருந்தார். எனவே அவ்வியக்க மரபின்படி தனக்கென ஒரு புனைபெயரை வைத்துக்கொள்ள விழைந்தார். ஆகவே சங்ககால மன்னனான இளந்திரையன் பெயரை தன்னுடைய புனைபெயராகக்கொண்டு இரா. இளந்திரையன் என்னும் பெயரில் படைப்புகளை ஆக்கினார். பின்னாளில் தன்னுடைய ஊர்பெயரின் முதற்பகுதி தனது புனைபெயருக்கு முன்னே இணைத்து சாலை இளந்திரையன் ஆனார்.

திருமணம்: சாலை இளந்திரையன் சென்னை மாநிலக் கல்லூரியில் பயின்ற பொழுது அங்கு கலை இளவர் (சிறப்பு) பட்டத்திற்காக விருதுநகரைச் சேர்ந்த கனகசவுந்தரி பயின்று வந்தார். சாலை இளந்திரையனும் கனகசவுந்தரியும் காதலித்தனர். கல்லூரிக் கல்வி முடிந்ததும் இருவரும் தத்தம் பெற்றோரின் ஒப்புதலோடு 1954 சூலை மாதம் விருதுநகரில் திருமணம் செய்துகொண்டார். ஆசிரியர் பணி: 1954 சூலை முதல் 1957 ஏப்ரல் வரை சென்னை மாநிலக் கல்லூரியின் தமிழ்த் துறையில் ஆசிரியர் பணியிடம் ஒன்று தற்காலிகமாக ஏற்பட்டது. சாலை இளந்திரையன் அப்பணியில் அமர்த்தப்பட்டார். அரசு அலுவலகத்தில் 1957 ஆம் ஆண்டின் நடுவில் இந்திய ஒன்றிய அரசின் விளம்பர, தகவல் ஒலிபரப்புத் துறையில் மொழிபெயர்ப்பாளராகப் பணியாற்றத் தொடங்கினார்.

பேராசிரியர் பணி: 1959 ஆம் ஆண்டில் தில்லிப் பல்கலைக் கழகத்தில் தமிழ்துறை தொடங்கப்பட்டதும் சாலை இளந்திரையன் அத்துறையில் விரிவுரையளராகப்

பணியேற்றார். அப்பல்கலைக் கழகத்திலேயே 1972 ஆம் ஆண்டில் பேருரையாளராகவும் (Reader) 1983 ஆம் ஆண்டில் பேராசிரியராகவும் (Professor) பதவி உயர்வுபெற்றார். 1985 ஆம் ஆண்டில் விருப்ப ஓய்வுபெற்று தமிழகம் திரும்பினார். ஓய்விற்குப் பின்னர் சென்னையில் சாலை அச்சகத்தை உருவாக்கி நடத்தினார்.

இதழ்ப் பணிகள்: தில்லி தமிழ்ச் சங்கத்தின் சார்பில் வெளியிடப்பட்ட சுடர் என்னும் இதழின் ஆசிரியராக 1960 ஆம் ஆண்டு முதல் 1971 ஆம் ஆண்டு வரை சாலை இளந்திரையன் பணியாற்றினார். 1975 அக்டோபர் முதல் 1987 ஏப்ரல் வரை அறிவியக்கம் என்னும் இதழும் 17 மே முதல் 1993 ஏப்ரல் வரை வீரநடய் அறிவியக்கம் என்னும் இதழும் அறிவியக்கப் பேரவை சார்பில் வெளியிடப்பட்டன. சாலை இளந்திரையன் அவ்விதழ்களின் சிறப்பாசிரியராகப் பணியாற்றினார்.

பரப்புரைப் பயணங்கள்:

தமிழ் இலக்கியம்,மொழி,கலை,பண்பாடு,அறிவியக்கம் ஆகியவற்றைப் பரப்புதற்காகச் சாலையர் இருவரும் வாழ்நாள் முழுவதும் பல பயணங்களை மேற்கொண்டனர்.ஒருமுறை நேரில் சந்தித்தபொழுது "அட்டவணை போட்டுக்கொண்டு இவ்வாறு பரப்புரைப் பயணம் மேற்கொண்ட முதல் பேராசிரியர் இலக்குவனார் அவர்களே.இவ் வகையில் அவரை முன்னோடியாக்க் கொண்டே இத்தகைய பரப்புரைப் பணியை மேற்கொண்டேன்.. "எனக் கூறினார்

1961 ஆம் ஆண்டில் சாலையர் இருவரும் சிங்கப்பூர், மலேசிய நாடுகளுக்கும், 1962 ஆம் ஆண்டில் இலங்கைக்கும் இலக்கியப் பயணம் மேற்கொண்டனர். 1974 ஆம் ஆண்டில் நான்காவது உலகத் தமிழ் மாநாட்டின் பொழுது இலங்கைக்குச் சென்று வந்தார். இவை தவிர, 1966 முதல் 1984 வரை ஆண்டுதோறும் கோடைவிடுமுறைக் காலத்தில் தம் தமிழகத் தோழர்களின் உதவியோடு தமி ழகத்தின் பல்வேறு பகுதிகளுக்கும் சமூக, இலக்கிய, அரசியற் பயணம் மேற்கொண்டனர். அமைப்பாக்கப் பணிகள்: உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கழகம் 1964 ஆம் ஆண்டில் தில்லியில் உள்ள கீழ்க்கலை ஆராய்ச்சி மையம் தனது 26 ஆவது மாநாட்டைக் கூட்டியது. அதிற் கலந்துகொள்வதற்காக தனிநாயகம் அடிகள் உள்ளிட்ட தமிழறிஞர்கள் பலரும் உலகின் பல பகுதிகளிலிருந்து அம்மாநாட்டிற்கு வருகை தந்தனர். அவர்களோடு

சாலை இளந்திரையனும் இணைந்து உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கழகத்தை நிறுவினர். இக்கழகமே உலகத் தமிழ் மாநாடுகளை நடத்துகிறது.

இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம்:

1968 ஆம் ஆண்டில் சென்னையில் நடந்த இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டில் இந்தியத் தமிழ்ப் பேராசிரியர்கள் பலருக்கு அவர்தம் ஆய்வுரைகளை நி கழ்த்த வாய்ப்புக் கிடைக்கவில்லை. எனவே ஆண்டுதோறும் இந்தியத் தமிழ்ப் பேராசிரியர்கள் தம்முடைய ஆய்வுகளை வெளியிடுவதற்காக இந்தியப் பல்கலைக் கழக தமிழாசிரியர் மன்றம் என்னும் அமைப்பை உருவாக்க சாலை இளந்திரையன் உந்து சக்தியாக செயல்பட்டார்.

அறிவியக்கப் பேரவை: 1971 ஆம் ஆண்டில் குத்தூசி குருசாமியாரின் சுயமரியாதை இயக்கத்தைச் சார்ந்த நாத்திக நந்தனார், மணிமார்பன் உள்ளிட்டோரின் உதவியோடு அறிவியக்கப் பேரவை என்னும் அமைப்பை சாலை இளந்திரையன் உருவாக்கினார். அவ்வியக்கத்தின் வழியாகவே 1986 ஆம் ஆண்டு வரை தம்முடைய சமூக, அரசியற் செயற்பாடுகளை வெளிப்படுத்தினார். அதன் ஒரு பகுதியாக பின்வரும் மாநாடுகளையும் நடத்தினார். சென்னையில் 20.05.1979 அன்று எழுத்துச் சீர்மை மாநாடும் சென்னையில் 10.05.1980 அன்று அறிவியக்க மாநாடும் குடந்தையில் மே 1982-இல் விழிப்புணர்ச்சி மாநாடும் திருப்பூரில் மே 1984-ல் எழுச்சி நடை மாநாடும் பெருங்களத்தூரில் 19.05.1985 அன்று அரசுத் திட்டங்களால் நலிந்தோர் வாழ்வு மலர்ந்ததா? கருத்துப் பேரரங்கு மாநாடும் குடந்தையில் மே 1986ல் ஓராசிரியர் பள்ளிகள் சீரமைப்பு மாநாடும் ஈரோட்டில் 17.05.1987 அன்று இந்தி, ஆங்கில ஆதிக்க எதிர்ப்பு மாநாடும் சென்னையில் 22.05.1988 அன்று தமிழ்த் தேசிய இனமக்களின் வாழ்வுரிமை மாநாடும் சென்னையில் மே 1989ல் கூடங்குளம் அணுமின் திட்டம், மழலையர் பள்ளிகள் எதிர்ப்பு இரட்டை மாநாடும் கோயமுத்தூர் 22.08.1992 அன்று வளர்தமிழ் மாநாடும் சென்னையில் 29.12.1993 அன்று மொழிச் சிறுபான்மையினர் உரிமைகள் சீரமைப்பு மாநாடுகளையும் நடத்தினார்.

உலகத் தமிழ்ப் பண்பாட்டு இயக்கம்: 1974 ஆம் ஆண்டில் யாழ்ப்பாணத்தி ல் நடைபெற்ற நான்காம் உலகத் தமிழ் மாநாட்டின் பொழுது அங்கு கூடிய தமிழறிஞர்கள் உலகத் தமிழ்ப் பண்பாட்டு இயக்கம் என்னும் அமைப்பை உருவாக்கினர். அப்பணியில் சாலை இளந்திரையன் முதன்மைப் பங்காளராகப் பணியாற்றினார்.

தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகம்: 1980 ஆம் ஆண்டில் தஞ்சையில் தமிழ்ப் பல்கலைக் கழகத்தை நிறுவத் தமிழக அரசு முடிவு செய்தது. அதற்காகப் பேராசிரியர் முனைவர் வ. சுப. மாணிக்கம் தலைமையில் சாலை இளந்திரையன் உள்ளிட்ட எண்மரைக்கொண்ட வல்லுநர் குழு அமைக்கப்பட்டது. அக்குழுவில் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் வரைவுத் திட்டம் ஒன்றை சாலை இளந்திரையன் அளித்தார். அதனைச் சில மாற்றங்களுடன் வல்லுநர் குழு ஏற்றுக்கொண்டது. அதன் அடிப்படையிலேயே தமிழ்ப் பல்கலைக் கழகம் உருவாக்கப்பட்டது.

சமூக - அரசியற் செயற்பாட்டுப் பணிகள்: விடுதலைப் போராட்டம் உச்சத்தில் இருந்த 1944-47 ஆம் ஆண்டுகளில் பள்ளி மாணவராக இருந்த சாலை இளந்திரையன் இந்திய தேசிய காங்கிரசின் ஆதரவாளராக கதராடை அணிந்து இயங்கினார். 1948 ஆம் ஆண்டில் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் பயின்ற பொழுது திராவிட இயக்கக் கருத்தியலால் ஈர்க்கப்பட்டு இயங்கினார். அதன் பின்னர் தன்னுடைய இறுதிநாள் வரை திராவிடத் தந்தை ஈ. வெ. ராமசாமி பெரியாரின் அரசியற் கொள்கைகளையும் பாவேந்தர் பாரதிதாசனின் இலக்கியக் கொள்கையையும் சாலை இளந்திரையன் பின்பற்றி வந்தார். பொதுவுடைமைத் தமிழ்தேசியத்தை தன்னுடைய சமூக அரசியற் கொள்கையாகக் கொண்டு அறிவியக்கப் பேரவையை உருவாக்கி தனது செயற்பாடுகளை மேற்கொண்டார். தன்மான வாழ்வியல், இந்திய தேசிய மறுப்பு, மூடநம்பிக்கை ஒழிப்பு, ஈழவிடுதலை ஆதரவு, தமிழர் தன்னுரிமை ஏற்பு, நக்சலிய ஆதரவு ஆகிய கொள்கைகளை வெளிப்படுத்தும் உரைகளை, படைப்புகளை, அறிக்கைகளை, கடிதங்களை சாலை இளந்திரையன் தொடர்ந்து வெளியிட்டு வந்தார். 5/8 1991 ஆம் ஆண்டில் பழ. நெடுமாறன் தடையை மீறி தமிழர் தன்னுரிமை பிரகடன மாநாட்டை நடத்தத் திட்டமிட்டார். அம்மாநாட்டில் கலந்துகொள்ளத் தஞ்சாவூருக்கு வந்தால் கைதாவோம் என அறிந்தே அங்கு வந்து சாலையர் இருவரும் கைதாயினர். தமிழ், தமிழன், தமிழ்நாடு என்னும் நூலை எழுதியதற்காக இவர் மீது குற்றவியல் வழக்குத் தொடரப்பட்டது.

படைப்புகள்: மாணவப் பருவத்திலேயே கதை, கவிதை, கட்டுரை என எழுத்துப்பணியில் ஈடுபட்ட சாலை இளந்திரையன் பின்வரும் நூல்களை எழுதியிருக்கிறார். 1962-ல் சாலை இளந்திரையன் கவிதைகள் 1963-ல் உலகம் ஒரு குடும்பம் கட்டுரைகள் 1963ல் சிந்தனைக்கு கட்டுரைகள் 1964ல் அன்னை நீஆட

வேண்டும் (கவிதைகள்) 1964ல் இரண்டு குரல்கள் (கட்டுரைகள்) (பேராசிரியர் முனைவர் சா லினி இளந்திரையனுடன் இணைந்து எழுதியது) 1965-ல் சிலம்பின் சிறுநகை (கவிதைகள்) 1965-ல் புரட்சிக் கவிஞரின் கவிதை வளம் திறனாய்வு (பாரதிதாசன் கவிதைகளைப் பற்றிய திறனாய்வு) 1965-ல் தமிழ்க் கனிகள் (கட்டுரை கள்) (பேராசிரியர் முனைவர் சாலினி இளந்திரையனுடன் இணைந்து எழுதியது) 1966-ல் காலநதி தீரத்திலே (கவிதைகள்) 1966-ல் தமிழில் சிறுகதை (திறனாய்வு) 1966-ல் புதிய தமிழ்க் கவிதை (திறனாய்வு) 1966-ல் சிறுகதைச் செல்வம் (திறனாய்வு) 1966-ல் தமிழனே தலைமகன் கட்டுரைகள் (பேராசிரியர் முனைவர் சாலினி இளந்திரையனுடன் இணைந்து எழுதியது) 1968-ல் பூத்தது மானுடம் (கவிதைகள்) 1968-ல் கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே (கவிதைகள்) 1968-ல் Some Aspects of Modern Tamil Literature (சென்னையில் நடைபெற்ற இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டின் பொழுது வெளியிடப்பட்ட சிற்றேடு) 1968-ல் நேயப்பாட்டு (திறனாய்வு) 1968-ல் தமிழுக்காக (கட்டுரைகள்) 1968-ல் உலகத் தமிழர் (ஓர் நடப்பு வருணனை) 1968-ல் எங்கள் காவியம் 1968-ல் தமிழ் தந்த பெண்கள் (பேராசிரியர் முனைவர் சாலினி இளந்திரையனுடன் இணைந்து எழுதியது) 1969-ல் புதுத்தமிழ் முன்னோடிகள் (திறனாய்வு) 1970-ல் வீறுகள் ஆயிரம் (கவிதைகள்) 1970-ல் சமுதாய நோக்கு (திறனாய்வு) தமிழிலக்கியத்தில் சமுதாய நோக்கோடு படைக்கப்பட்ட கவிதைகளைப் பற்றிய 13 கட்டுரைகளின் தொகுப்பு. 1971-ல் கூட்டின் அமைதி குலைகிறது (கட்டுரைகள்) 1971-ல் வெற்றி மலர்கள் (கட்டுரைகள்) 1971-ல் எழுச்சி வேண்டும் (கட்டுரைகள்) 1972ல் நஞ்சருக்குப் பஞ்சணையோ? (கவிதைகள்) 1972-ல் நம்மைப் பற்றிய சிந்தனைகள் 1973-ல் காலத்தின் கேள்விகள் 1973-ல் திருந்திய திருமணம் 1974-ல் தமிழ் மாநாடு 1975-ல் எங்கள் பயணங்கள் (பயணக் கட்டுரைகள்) 1975-ல் உரைவீச்வீசு (1979ஆம் ஆண்டில் தமிழக அரசின் பரிசு பெற்றது) 1976-ல் நடைகொண்ட படைவேழம் (கவிதைகள்) 1976-ல் ஏன் இந்த மெத்தனம்? 1976-ல் தமிழ்ப் பண்பாட்டுக்கு ஓர் இயக்கம் 1977-ல் மக்கள் நாயக மரபுகள் (அரசியற் கட்டுரைகள்) (மக்கள்நாயகம் தொடர்பான 22 கட்டுரைகளின் தொகுப்பு) 1977-ல் உள்ளது உள்ளபடி (உரைவீச்சு)

7/8 1978-ல் கேள்விகள் ஆயிரம் (கட்டுரைகள்) 1978-ல் புரட்சி முழக்கம் திறனாய்வு (தமிழக அரசின் பரிசினைப் பெற்றது) 1979-ல் களத்திலே கடிதங்கள் (எழுத்துச்

சீர்திருத்தத்தை ஆதரித்து சாலினியும் சாலை இளந்திரையனும் பலருக்கும் எழுதிய கடிதங்களின் தொகுப்பு) 1980-ல் தமிழகத்தில் அறிவு இயக்கம் 1981-ல் காவல் துப்பாக்கி (உரைவீச்வீசு) 60 உரைவீச்வீசுகளின் தொகுப்பு தமிழ்நாட்டுப் பழமொழிகள் (சாலை இளந்திரையனின் முனைவர் பட்ட ஆய்வேடு) 1981-ல் அய்ந்தாவது தமிழ் மாநாடு 1981-ல் ஒரு புதிய தமிழ் எழுச்சி 1981-ல் வெடிப்புகள் உடைப்புகள் 1982-ல் பொறுத்தது போதாதா? 1982-ல் ஏழாயிரம் எரிமலைகள் 1984-ல் நாளுக்கு நல்லபடி 1986-ல் தமிழுக்காக 1986-ல் ஓராசிரியர் பள்ளிகள் 1986-ல் ஒரு மேல்சாதி நயவஞ்சகம் 1986-ல் புதிய கல்விக்கொள்கை 1987-ல் நெருப்பிலே மலர்ந்த தாய்மொழிப் பூக்கள் 1987-ல் கணீரெணீ ன்று வாழுங்கள் 1988-ல் உரிமைகொண்ட தேசிய இனங்கள் 1989-ல் இந்தியம் ஈழம் நச்சலியம் 1989-ல் இப்படித்தான் வாழ வேண்டும் 1989-ல் கூடங்குளம் கொதிக்கிறது 1990-ல் அறுபதில் சில வீச்சுகள் (சாலையார் தன்னுடைய 60ஆம் வயதில் எழுதிய 70 உரைவீச்வீசுகளின் தொகுப்பு) 1990-ல் நினய்வூட்டு 8/8 1990-ல் மண்டல் குழு அறிக்கை ஒரு சமூகநீதி ஆவணம் 1990-ல் நெருப்பை வளர்க்கிறார்கள் 1991-ல் தமிழின் ஒரே கவிஞன் திறனாய்வு (பாரதிதாசனே தமிழின் ஒரே கவிஞன் என நிறுவ முனையும் நூல்) 1991-ல் சொக்கன் கதை: ஒரு வணங்காமுடியின் கதை தன்வரலாறு (சாலை இளந்திரையனின் தன்வரலாற்று நூல்) 1992-ல் தமிழ் தமிழன் தமிழ்நாடு (அரசியற் கட்டுரைகள்) ((இந்நூலை எழுதியதற்காக சாலை இளந்திரையன் மீது குற்றவியல் வழக்குத் தொடரப்பட்டது)) 1992-ல் ஈழத்துப் புலிகளுடன் 28 நாட்கள் (உரைவீச்வீசு) 1997-ல் நாட்டிலும் ஏட்டிலும் தமிழர்கள் 1997-ல் தாய் எழில் தமிழ் (கவிதைகள்) 2000-ல் சுடர் ஏந்திய தமிழ் மலர்கள் (வாழ்க்கை வரலாற்றுக் கட்டுரைகள்) வ.உ.சி., கவிமணி, பாரதிதாசன், கல்கி, திருவள்ளுவர், அறிஞர் அண்ணா ஆகியோரைப் பற்றி தில்லி தமிழ்ச் சங்கத்தின் சுடர் இதழில் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பு) இன்னும் தொகுக்கப்பட வேண்டிய கட்டுரைகள், கவிதைகள், கதைகள் எனப் பல இருக்கின்றன.
விருதுகள்: 1991 ஆம் ஆண்டில் பாரதிதாசன் நூற்றாண்டு நிறைவு விழாவி ல் இவருக்குப் பாரதிதாசன் விருது வழங்கப்பட்டது. மறைவு: நெஞ்சக நோயால் நீண்ட நாள்களாக அவதிப்பட்டு வந்த பன்முகப் பண்பாளர் 04.10.1998- ல் இயற்கை எய்தினார். அவரது விருப்பப்படியே அவரது உடல் சென்னை மருத்துவக் கல்லூரி மருத்துவமனைக்கு ஆய்விற்காக அளிக்கப்பட்டது.

மூலத் தரவுகள்: நன்றி :தினமணி;விக்கிபீடியா

**திருக்குறளில் மேலாண்மைக் கருத்துகள்**

***--சொல்லாக்கியன்,கனடா.***

திருக்குறளில் உள்ள மேலாண்மைக் கருத்துகள் யாவை? அதற்கு முன், மேலாண்மை என்றால் என்ன? என்று காண்போம். "ஒரு அமைப்பு, தன்னுடைய குறிக்கோளை அடைவதற்காக, நிகழ்த்தும் செயல்பாடு", என மேலாண்மையை வரையறுக்கலாம் அல்லவா?

அமைப்பு என்றால் என்ன? அணு, பொருள், உயிர், பொருளாதாரம், சமூகம், அரசியல், கலாச்சாரம், பண்பாடு, விஞ்ஞானம், தொழில் நுட்பம், சூரிய மண்டலம், விண்வெளி என அனைத்தும் அமைப்பு வகையாகவே இயங்குகின்றன. அமைப்பற்ற எதுவும், ஒழுங்காக இயங்கி, தன் குறிக்கோளை அடைய முடியாது.

ஒவ்வொரு அமைப்பும், தனக்கான குறிக்கோளை வகுத்துக் கொள்கின்றது. தம் இருப்பை நிலைநிறுத்திக் கொள்ளவும், வளரவும், மறு உற்பத்தி செய்யவும், அமைப்புகள், குறிக்கோள்களை வகுத்துக் கொள்கின்றன.

செயல்பாடு என்பதற்கு, உற்பத்திக் காரணிகள் தேவைப்படுகின்றன. முதலாளித்துவ கோட்பாட்டின்படி, நிலம், உழைப்பாளர், முதலீடு, தொழில் முனைவு ஆகியவையே காரணிகள். ஆனால், திருக்குறளில் கூறும் காரணிகளை, விரைவில் காண்போம். அதற்கு முன், மேலாண்மை எனும் கருத்து உள்ளடக்கியுள்ள துறைகளைக் காண்போம். மேலாண்மையின் கீழ் வராத துறைகள் எதுவுமே, இன்று, இல்லை. கருத்தரிப்பு மேலாண்மை, பிறப்பு மேலாண்மை, குழந்தை மேலாண்மை, பதின்மர் மேலாண்மை, வயது வந்தோர் மேலாண்மை, முதியோர் மேலண்மை, பொருளாதார மேலாண்மை, சமூக மேலாண்மை, அரசியல் மேலாண்மை, கலை மற்றும் பண்பாட்டு மேலாண்மை, கல்வி மேலாண்மை, குடும்ப மேலாண்மை, ஆளுமை மேலாண்மை, சொத்து மேலாண்மை, உடல் நலம் மேலாண்மை, மன நலம் மேலாண்மை, மருத்துவ மேலாண்மை, வேளாண்மை மேலாண்மை, தொழில் மேலாண்மை, சுற்றுப்புறச் சூழல் மேலாண்மை, நாடு மேலாண்மை, பாதுகாப்பு மேலாண்மை, பன்னாட்டு மேலாண்மை, விண்வெளி மேலாண்மை என உலகியலின், மனித வாழ்வின் அனைத்துப் பரிமாணங்களும், மேலாண்மையின் ஆளுமையின் கீழ் வந்துவிட்டன.

மேலாண்மை எனும் கோணத்தில், திருக்குறளைக் கண்ணுற்றால், தனிமனித அக மேலாண்மை, பொதுச் சமூக மேலாண்மை மற்றும் பிரபஞ்ச ஆன்மீக மேலாண்மை என அனைத்துப் புலங்களையும் உள்ளடக்கிய மனித வாழ்வு மேலாண்மை நூலாக, திருக்குறளைக் காணலாம். இருப்பினும், நாம் ஆழ்ந்து நோக்கப் போவது, திருக்குறளில் உள்ள உற்பத்திக் காரணிகளையும், நிர்வாகத்தையும் தான். அதிகாரம்... அமைச்சு!

இக்குறள்கள், படை, கட்டுமானம், விவசாயம், தொழில், மருத்துவம், கல்வி, கலைகள், ஆன்மீகம் என பல, ஏன், எல்லாத் துறைகளுக்கும் பொருந்தும். குறள், பல களங்களிலும், பல தளங்களிலும் பொருந்தும் அருமை, பெருமை!

கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யும்
அருவினையு மாண்ட தமைச்சு-631.

கருவி = தேவையான பொருட்களும், ஆயுதங்களும்.காலம் = பருவம், மாதம், வாரம், நாள், கிழமை, சமயம், காலை, மாலை, இரவு, கால எல்லை, துவக்கம், இடைவெளி, முடிவு.

செய்கை = செய் + கை. செய்கின்ற கை. பொருட்களையும், ஆயுதங்களையும் கையாளும் ஆட்கள்.

செய் = நிதி.

அருவினை = அரு + வினை. கருத்தளவிலான செயல். திட்டம். அருவினை = செயல் திட்டம். கருவி, காலம், செய்கை, நிதி ஆகிய அனைவற்றையும் உள்ளடக்கிய திட்டம். வேலை ஓட்டம்.

கருவி, காலம், வேலையாள், நிதி, திட்டம் ஆகியவற்றை நிர்வகித்த அனுபவம் உள்ளவரே அமைச்சராக, அமைச்சகமாக வேண்டும்.

அணை கட்டுவதாயினும் சரி, போர் தொடுப்பதாயினும் சரி, வேறெந்த கட்டுமானப் பணியாயினும், மேற்கண்ட காரணிகள் பொதுவானவை. முதலாளித்துவ கோட்பாட்டின் காரணிகளான, நிலம், வேலையாள், முதலீடு, தொழில் முனைவு ஆகியவை போதுமானவை அல்ல, பொதுப்படையானவையும் அல்ல, எல்லாச் சமுதாயத்திற்கும், எல்லா காலத்திற்கும் பொருந்தவும் செய்யாது.

ஒரு செயலை முடிக்க பல வழிகள் உண்டு. அவற்றிற்கு தேவையான கருவிகளும் வேறுபடும். செலவு குறைந்த, வேலையாட்கள் பழகிய, தொடர்ந்து கிடைக்கக் கூடிய கருவிகளைக் கொண்டு செய்வதே, மேலாண்மைத் திறமை. முதலாளித்துவ கோட்பாடு, இதையும் ஒரு காரணியாக எடுப்பதில்லை. முதலீடு என்ற ஒற்றைக் காரணியே,

அதற்கு எல்லாமாய் இருக்கின்றது, எதையும் சாதித்துவிட முடியும் என நினைக்கின்றது. ஆனால், என்ன விலையில்? எல்லாவற்றிற்கும்தான் இருக்கிறானே, ஒரு பலிகடா, உழைப்பாளன்!

காலம் என்பதும் மிக முக்கிய காரணி. மழை வெள்ளக் காலத்தில், அணை கட்ட முடியாது. பகைவன் வலிமையாய் இருக்கையில், போர் தொடுக்க முடியாது. செயல்பாட்டின் கால நேரத்தை வைத்தே, ஒரு திட்டத்தின் செலவும் இருக்கும். காலத்தைக் கட்டுப்படுத்தாமல், செலவைக் கட்டுப்படுத்த முடியாது.

'செய்யும்' என்பதில், 'செய்', என்பதை, தனியான காரணியாக பார்க்காமல், 'செய்யும் அருவினை' என, பல உரையாசிரியர்களால் சேர்த்தே பார்க்கப்பட்டுள்ளது. அது, பிழை என்றே தோன்றுகின்றது. ஏனெனில், அடுத்த குறளிலேயே, இந்தக் குறளில் கூறிய ஐந்தையும் சேர்த்து பிற நான்கு உயர் நிருவாகக் காரணிகளையும் குறிப்பிடுகின்றார். 'செய்' என்பது, செயல்பாட்டிற்கு மிகவும் அவசியமான, நிதியைக் குறிக்கும். செய்யாள் = திருமகள், என்பதை நினைவு கூர்க.

மேலும், 'அருவினை' என்பது 'அருமையான வினை' என்றே, இதுவரை, பொருள் கூறப்பட்டுள்ளது. ஆனால், அது ஒரு அருவமான, பொருண்மையாக்க வேண்டிய 'செயல் திட்டம்' என்பதை அறிந்தால், திருவள்ளுவரின் அறிவியல்பூர்வமான, நடைமுறை மேதைமை புரியும்.

வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ டைந்துடன் மாண்ட தமைச்சு.- 632.

வன்கண் = வல் + கண். வலிமையான கண். உறுதியான பார்வை. தவறு நேராமை. மன உறுதி. கண்காணிப்பு.

குடிகாத்தல் = வேலையாட்களின் நலமும் பாதுகாப்பும்.

கற்றறிதல் = கற்று + அறிதல். தடைகளும் தீர்வுகளும். நிபுணர்களின் ஆலோசனை. தேவையான மாறுதல்கள்.

ஆள்வினை = ஆள், வேலை நிருவாகம். மேற்பார்வை.

பணிக் கண்காணிப்பு, வேலையாட்களின் நலம் மற்றும் பாதுகாப்பு, சிக்கல்களுக்கு நிபுணர்களின் ஆலோசனை, ஆள்வேலை நிருவாகம் ஆகிய நிருவாகக் காரணிகளுடன் மேல்கூறிய கருவி, காலம், வேலையாள், நிதி, செயல் திட்டம் ஆகிய ஐந்து உற்பத்திக் காரணிகளையும், ஒருங்கிணைத்து நிருவகித்த அனுபவமுள்ளவரே அமைச்சராக, அமைச்சகமாக வேண்டும்.

எனவே, ஒரு செயல்பாட்டின் காரணிகளாக, ஒன்பதைக் கூறுகின்றார், திருவள்ளுவர். உற்பத்திக் காரணிகளாக, கருவி, காலம், வேலையாள், நிதி, செயல்திட்டம் ஆகிய

ஐந்தையும், மேலாண்மைக் காரணிகளாக, கண்காணிப்பு, வேலையாட்களின் நலமும் பாதுகாப்பும், சிக்கல்களுக்கு நிபுணர்களின் ஆலோசனை, ஆள்வேலை நிருவாகம் ஆகிய நான்கையும் குறிக்கின்றார்.

இக்காரணிகள் யாவும், இன்றைய மேற்கத்திய நாடுகளில், கட்டுமானப் பணிகளில், நடைமுறையாக, வெற்றிகரமாகப் பயன்படுத்தப்படுகின்றன. இந்தியாவில்..., “அந்நிய மோகம்”தான் இன்னும் விடுபடவில்லையே! பாவம், பாரதி!

பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.- 633

ஒரு பணி நடக்கையில், அந்த இடத்தில் ஏற்கனவே வாழ்பவர்களை அவ்விடத்தில் இருந்து அப்புறப்படுத்தல், அப்படிப் பிரிக்கப்பட்டவர்களுக்கு தற்காலிகமாக வாழ்வாதாரங்களைத் தருதல், அவர்கள் நிரந்தரமாக வாழ்வதற்கு மாற்று ஏற்பாடுகளைச் செய்து தருதல் ஆகிய வலிமை உள்ளவரே அமைச்சராக, அமைச்சகமாக வேண்டும்.

இதோ, அடுத்தது, கட்டுமானப் பணிகளின்போது, சமூகப் பொறுப்புகள்! முதலீட்டையும், இலாபத்தையும் மட்டும் பார்த்தால், பாதிக்கப்படும் மக்களை, யார் கண்டுக் கொள்ளப் போகின்றார்கள்? உழைப்பாளர்களையே கண்டுகொள்ளாத நிருவாகமும், அமைச்சும், பொது மக்களுக்காகவா கவலைப்படப் போகின்றது? அரசின் கட்டுமானப் பணியால் பாதிக்கப்படும் மக்களைப் பற்றி, எந்த வித மாற்றுத் திட்டமும் இல்லாமல், அவர்களை அலைக்கழிப்பதும், போராட வைப்பதும், கைக்கூலிகளை உருவாக்குவதும், நிவாரணம் எனக் கொடுக்கும் பணத்தில் கையூட்டு பெறுவதும், வழக்கமான சமூக அரசியல் ஆகிவிட்டதே!

இறுதியாக, திருவள்ளுவர், ஒரு அறிவியல்பூர்வமான அமைப்பையும், நடைமுறை ஒழுங்கையும் தந்திருக்கின்றார். அதன்படி, சமூக பொறுப்புகளும், செயல் திட்டத்தின் அவசியமான நிபந்தனைகளாக இருக்க வேண்டும்.

இதை வெறும், கல்விப்பாடமாக மட்டும் கொள்ளாமல், நடைமுறை வாழ்க்கையில், பொருளாதார, சமூகச் செயல்பாடுகளில் எப்படிச் செயல்படுத்த வேண்டும் என்று, இனியாவது, அரசும், தனியார் நிறுவனங்களும் உறுதியாகச் சிந்திப்பார்களாக!

வள்ளுவர் பார்வையில் நட்பு

திருக்குறளார் முனைவர் இர. பிரபாகரன்

மனிதன் சமூகத்தோடு கூடி வாழும்பொழுது சிலரோடு நட்புக்கொள்கிறான். மனிதர்களுக்கிடையே தோன்றும் நட்பைப் பற்றி ஆராய்ச்சி செய்த மேலைநாட்டு அறிஞர்களுள் கிரேக்கத்தைச் சார்ந்த பிளேட்டோ (Plato, 428/427 BC – 348/347 BC) மற்றும்  அரிஸ்டாடில், ரோமாபுரியைச் சார்ந்த மார்க்கஸ் துல்லியசு சிசரோ (Marcus Tullius Cicero, 106 BC – 43 BC), பிரான்சு நாட்டைச் சார்ந்த மிச்சல் ஐக்யூம் டி மாண்டெய்ன் (Michel Eyquem de Montaigne, 1533 – 1592), இங்கிலாந்தைச் சார்ந்த சர் பிரேன்சிசு பேகன்  (Sir Francis Bacon, 1561 – 1626) ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களைப்போல் வள்ளுவரும் நட்பைப் பற்றி விரிவாக ஆராய்ச்சி செய்திருக்கிறார். நட்பைப் பற்றி ஏறத்தாழ 70 குறட்பாக்களில் வள்ளுவர் தன் கருத்தைக் கூறுகிறார். நட்பைப் பற்றி இந்த மேலைநாட்டு அறிஞர்களின் கருத்துக்களையும் வள்ளுவரின் கருத்துக்களையும் ஒப்பிட்டு ஆய்வு செய்த பேராசிரியர் ப. மருதநாயகம், “நட்பைப் பற்றிப் பேசும் மேலைநாட்டு அறிஞர்களுள் ஓரளவிற்கு வள்ளுவருக்கு நெருக்கமானவர் அரிஸ்டாட்டிலே.” என்று கூறுகிறார்.

நட்பைப் பற்றி அரித்தாட்டில்

நட்பை மூன்று வகையாக அரித்தாட்டில் பிரிக்கிறார். அந்த மூன்று வகையான நட்புகள்: மகிழ்ச்சிக்கான நட்பு, பயன் கருதும் நட்பு, அறம் சார்ந்த நட்பு. மகிழ்ச்சிக்கான நட்பு என்பது மகிழ்ச்சியாக இருப்பதையே நோக்கமாகக் கொண்ட நட்பு. பயன் கருதும் நட்பு என்பது நட்பினால் என்ன பயனடையலாம் என்பதையே நோக்கமாகக் கொண்ட நட்பு. அறம் சார்ந்த நட்பு என்பது நண்பர்களின் அறிவு மற்றும் நல்லொழுக்கம் ஆகியவற்றின் அடைப்படையில் தொடங்கி வளரும் நட்பு. இந்த மூன்று வகையான நட்புகளில், மகிழ்ச்சி மற்றும் பயன் கருதும் நட்பு வகைகள் நிரந்தரமானவையாக இருக்க வாய்ப்பில்லை. மகிழ்ச்சியும் பயனும் குறைந்தால் அந்த நட்புகள் முடிவடைந்துவிடும். ஆனால், அறம் சார்ந்த நட்பு நல்லவர்களுக்கிடையே நல்லொழுக்கம் மற்றும் அறிவு சார்ந்ததாக இருப்பதால் அது முழுமையான, நிரந்தரமான நட்பு என்கிறார் அரித்தாட்டில். இந்த மூன்று வகையான நட்புகளில் அறம் சார்ந்த நட்பே சிறந்த நட்பு என்பது அரிஸ்டாட்டிலின் கருத்து. வள்ளுவரும்

அறம் சார்ந்த நட்பையே மிகச் சிறந்த நட்பாகவும், மகிழ்ச்சிக்கான நட்பையும், பயன் கருதும் நட்பையும் தீய நட்பாகவும் கருதுகிறார். நட்பைப் பற்றி வள்ளுவரின் கருத்துக்களைப் பார்ப்போம்.

நல்ல நட்பின் இலக்கணம்



அரித்தாட்டில்

நட்பைப் பற்றி அரித்தாட்டிலுடைய கருத்துக்களுக்கும் வள்ளுவருடைய கருத்துக்களுக்கும் இடையே சில ஒற்றுமைகள் காணப்பட்டாலும், வள்ளுவருடைய கருத்துக்கள் அரித்தாட்டிலின் கருத்துக்களைவிட முழுமையானதாகவும் விரிவானதாகவும் உள்ளன. பிறரிடம் அன்பு செலுத்துவதுதான் மனித வாழ்க்கையின் நோக்கமும் பயனும் (குறள் – 73) என்கிறார் வள்ளுவர். மேலும், அன்பின்வழி நிற்பவன்தான் உயிருள்ள மனிதன்; அன்பில்லாத மனிதன் வெறும் எலும்பும் தோலும் போர்த்திய உடம்பு (குறள் – 80) என்றும் வள்ளுவர் கூறுகிறார். நாம் அன்புடையவராக இருந்தால், மற்றவர்களுக்கு நம்மோடு பழக வேண்டும் என்ற ஆர்வத்தை நம்முடைய அன்பு உண்டாக்கும். அந்த ஆர்வம் நட்பு என்னும் சிறப்பை, நாம் தேடிப் போகாமல் தானே நம்மை வந்தடையச் செய்யும் (குறள் – 74). அத்தகைய அன்புதான் நட்புக்கு அடித்தளமாக அமைகிறது என்பது வள்ளுவரின் கருத்து.

அன்போடு இயைந்த வழக்குஎன்ப ஆருயிர்க்கு
என்போடு இயந்த தொடர்பு. (குறள் – 73)
அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு. (குறள் – 80)
அன்புஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு. (குறள் – 74)

நல்ல நட்பு என்பது அன்பின் அடிப்படையில் நல்லொழுக்கம் உடையவர்களின் நட்பு. ஒரு நல்ல நட்பு எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு வள்ளுவர் சில அழகான உவமைகளைக் கையாளுகிறார். நல்ல நட்பு என்பது நாளுக்குநாள் வளர்ந்துகொண்டே

இருக்கும் தன்மையது.  படிக்கும்பொழுதெல்லாம் ஒரு நல்ல நூல் இனிமையும் நன்மையும் தருவதுபோல், பழகப்பழக, நல்ல நட்பு நண்பர்களுக்கு இனிமையும் நன்மையும் பயக்கும் (குறள் – 783). நட்பு நல்லதாக இல்லாவிட்டால் அது நாளுக்குநாள் குறைந்துகொண்டே போய்க் கடைசியில் இல்லாமலே போய்விடும். எப்படி வளர்பிறையில் திங்கள் வளர்ந்துகொண்டிருக்கிறதோ அதுபோல் நல்லவர்களின் நட்பு வளர்ந்துகொண்டிருக்கும். எப்படித் தேய்பிறையில் நாளுக்குநாள் திங்கள் குறைந்து தோற்றமளிக்கிறதோ அதுபோல், அறிவில்லாதவர்களின் நட்பு குறைந்துகொண்டே போய் சிலகாலத்திற்குப் பிறகு அவர்களின் நட்பு முறிந்து போகும் (குறள் – 782).

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

(குறள் – 783)

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு.

(குறள் – 782)

இது போன்ற கருத்து நாலடியார் பாடல் ஒன்றிலும் காணப்படுகிறது. அப்பாடலில், "கரும்பை நுனியிலிருந்து தின்றால் வரவர இனிமை அதிகமாவதுபோல், கற்றோர் நட்பு நாளுக்கு நாள் இனிமை மிகும்; அதற்கு எதிராக, நற்பண்பில்லாதவர்களின் நட்பு கரும்பை அடியிலிருந்து தின்றால் வரவர இனிமை குறைவதைப் போன்றது." என்ற கருத்து கூறப்பட்டிருக்கிறது.

கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மை எஞ்ஞான்றும்
குருத்திற் கரும்புதின் றற்றே; - குருத்திற்கு
எதிர்செலத்தின் றன்ன தகைத்தரோ, என்றும்
மதுரம் இலாளர் தொடர்பு.                    (நாலடியார் – 211)

நல்ல நட்புள்ள நண்பர்களில் ஒருவர் ஒரு துன்பம் அடைந்தால், அவருடைய நண்பர் அந்தத் துன்பத்தைத் தன்னுடைய துன்பமாகக் கருதித் தன்னால் இயன்ற உதவியை எவ்விதத் தயக்கமும் இன்றி உடனே செய்வார். இந்தக் கருத்தை ஒரு சுவையான உவமையின் உதவியால் வள்ளுவர் விளக்குகிறார். ஒருவன் அணிந்திருக்கும் ஆடை

அவிழ்ந்து நெகிழ்ந்து விழும்பொழுது, அதைச் சீர்செய்வதற்கு எப்படி அவனுடைய கை விரைந்து சென்று உதவுகிறதோ, அதுபோல் தன் நண்பனுக்குக் கேடு வந்தால் உடனே சென்று உதவி அளிப்பதுதான் நல்ல நட்புக்கு அடையாளம் (குறள் – 788) என்கிறார் வள்ளுவர். மேலும், அழிவைத் தருகின்ற தீயவழிகளிலிருந்து தன் நண்பனை விலக்கி, அவனை நல்ல நெறியில் செலுத்தி, அவன் துன்புறும்போது தானும் அவனோடு சேர்ந்து அத்துன்பத்தை அனுபவிப்பதே சிறந்த நட்புக்கு அடையாளம் என்று வள்ளுவர் கூறுகிறார் (குறள் – 787).

உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு. (குறள் – 788)

அழிவி னவைநீக்கி ஆறுய்த்து அழிவின்கண்
அல்லல் உழப்பதாம் நட்பு. (குறள் – 787)



நல்ல நண்பர்களாக இருப்பவர்கள், ஒருவர் துன்பத்தை மற்றொருவர் பகிர்ந்துகொள்வதற்கு உதாரணமாக ஒரு கதை ஒன்று கிரேக்கத்தில் வழக்கில் உள்ளது. கிரேக்கத் தத்துவஞானி பித்தகோரசின் (Pythagoras) சீடர்களாக இருந்த தாமன் (Damon) மற்றும் பித்தியசு (Pythias) ஆகிய இருவரும் நெருங்கிய நண்பர்களாக இருந்தார்கள். அவர்கள் இருவரும் தயோனிசியசு (Dionysius) என்ற கொடுங்கோலன் ஆட்சி செய்துகொண்டிருக்கும் சிரக்குயூஸ் (Syracuse) என்னும் பகுதிக்குச் சென்று, அவன் ஆட்சியை எதிர்த்துப் போராடினார்கள். தயோனிசியசுக்கு எதிராகச் சதி செய்ததாக பித்தியசு மீது குற்றம் சாட்டப்பட்டது. அந்தக் குற்றத்திற்குத் தண்டனையாக, தயோனிசியசு பித்தியசுக்கு மரண தண்டனை விதித்தான்.

தனக்கு அளிக்கப்பட்ட தண்டனையை பித்தியசு ஏற்றுக்கொண்டான். ஆனால், வயதான தன் தாயைப் பார்க்கவும், அவருக்குச் சில உதவிகளைச் செய்வதற்காகவும், தான் தன்னுடைய தாய் இருக்கும் ஊருக்குச் சென்று அவரைப் பார்க்க அனுமதி வேண்டும் என்று பித்தியசு தயோனிசியசிடம் வேண்டினான். தன் தாயைப் பார்த்துவிட்டு, உடனே திரும்பிவந்து கொலைத்தண்டனையை ஏற்றுக்கொள்வதாகவும் கூறினான். பித்தியசை விடுவித்தால், அவன் ஒருபோதும் திரும்ப மாட்டான் என்று தயோனிசியசு நினைத்தான். ஆகவே, பித்தியசின் கோரிக்கையை தயோனீசியசு ஏற்க மறுத்துவிட்டான். பித்தியசு இல்லாதபொழுது,

அவனுக்குப் பதிலாகத் தான் சிறையில் இருப்பதாகவும், ஒருக்கால், பித்தியசு திரும்பி வராவிட்டால், அவனுக்குப் பதிலாகக் குறிப்பிட்ட நாளில் தான் கொலைத் தண்டனையை ஏற்றுக்கொள்வதாகவும் தாமன் தயோனிசியசிடம் உறுதி அளித்தான். தாமனின் கோரிக்கையை ஏற்றுக்கொண்டு தயோனிசியசு பித்தியசை விடுதலை செய்தான்.

குறிப்பிட்ட நாளில் பித்தியசு திரும்பிவரவில்லை.தாமனைத் தூக்கிலிடுமாறு காவலாளிகளுக்கு தயோனிசியசு உத்தரவிட்டான். ஆனால், மரணதண்டனையை நிறைவேற்றுபவர் தாமனைத் தூக்கிலிடப் போகும்பொழுது, பித்தியசு ஓடோடி வந்தான். தான் கடற்கொள்ளையர்களிடம் பிடிபட்டதாகவும், அவர்கள் தன்னைக் கடலில் எறிந்ததாகவும், தான் கரைக்குவ நீந்த வேண்டியதாக இருந்ததாகவும், சிரக்குயூசுக்கு எவ்வளவு விரைவாக வரமுடியுமோ அவ்வளவு விரைவாக வந்ததாகவும் கூறி, பித்தியசு தாமனிடம் மன்னிப்புக் கேட்டான். தாமனுக்கும் பித்தியசுக்கும் இடையிலான நட்பைக் கண்டு தயோனிசியசு வியப்படைந்தான். அவன் பித்தியசுக்கும் தாமனுக்கும் மன்னிப்பு வழங்கினான். இந்த நிகழ்வின் அடிப்படையில், இரண்டு நண்பர்களிடையே உள்ள நல்ல நெருங்கிய நட்பு, "தாமன் மற்றும் பித்தியசு நட்பு" என்று அழைக்கப்படுகிறது.

நல்ல நெருங்கிய நண்பர்கள் நெருங்கிப் பழக வேண்டுமா என்ற கேள்வி எழுவது இயற்கை. ஒருவருடன் ஒருவர் நட்புக்கொள்வதற்கு ஒரே இடத்தில் கூடி ஒன்றாக இருக்க வேண்டியதில்லை என்றும், அவர்கள் அடிக்கடி சந்தித்துப் பழக வேண்டியதில்லை என்றும், அவர்களிடம் ஒத்த உணர்ச்சி இருக்குமானால், அவர்களுடைய மனம் பொருந்திய உணர்ச்சியே நட்பு என்னும் உரிமையைப் பயக்கும் என்றும் வள்ளுவர் கூறுகிறார் (குறள் – 785).

புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும். (குறள் – 785)

நேரடியாகச் சந்திக்காமலும், கூடிப் பழகாமலும் நல்ல நண்பர்களாக இருப்பதற்கு இக்காலத்தில் முகநூல் (Facebook), கீச்சகம் (Tweeter) போன்ற தொழில்நுட்பக் கருவிகள் பேருதவியாக உள்ளன. சங்க காலத்தில், கூடிப் பழகாமல் நல்ல நெருங்கிய

நண்பர்களாகக் கோபெருஞ்சோழன் என்ற சோழமன்னனும், பிசிராந்தையார் என்ற புலவரும் இருந்ததாகப் புறநானூற்றிலிருந்து தெரிகிறது.




கோப்பெருஞ்சோழன் என்ற மன்னன் சோழநாட்டை ஆண்டுவந்தான். ஆந்தையார் என்ற புலவர் பாண்டிய நாட்டிலிருந்த பிசிர் என்ற ஊரில் வாழ்ந்துவந்தார். கோப்பெருஞ்சோழனும் பிசிராந்தையாரும் வேறுவேறு நாட்டில் வாழ்ந்தாலும், அவர்கள் கருத்தொருமித்தவர்களாக இருந்ததால், நெருங்கிய நண்பர்களாக இருந்தார்கள். ஒரு சமயம், கோப்பெருஞ்சோழனுக்கும் அவனுடைய மகன்களுக்குமிடையே தோன்றிய பகையால், அவர்களுக்கிடையே போர் மூண்டது. பொத்தியார் என்ற புலவர் கூறிய அறிவுரைக்கேற்ப, கோப்பெருஞ்சோழன் போர் செய்வதை நிறுத்திவிட்டான். ஆனால், தன் மகன்களோடு போர் செய்யும் சூழ்நிலை ஏற்பட்டதை நினைத்து, வெட்கப்பட்டு, வடக்கிருந்து உயிர் துறக்க முடிவு செய்தான். அவ்வாறு அவன் வடக்கிருக்கும்பொழுது, அவனைக் காணப் பிசிராந்தையார் வரவில்லை. அவனோடு இருந்தவர்கள், ”பிசிரந்தையார் வரவில்லையே என்பதைக் குறித்து நீங்கள் வருத்தப்பட வேண்டாம் அவர் வேறு நாட்டில் இருப்பதால் அவர் இப்பொழுது இங்கு வரும் வாய்ப்பில்லை.” என்று அவனுக்கு ஆறுதல் கூறினார்கள். ஆனால், கோப்பெருஞ்சோழன்,

தென்னம் பொருப்பன் நன்னாட்டு உள்ளும்
பிசிரோன் என்பஎன் உயிர்ஓம் புநனே;
செல்வக் காலை நிற்பினும்
அல்லற் காலை நில்லலன் மன்னே. (புறநானூறு, 215)

என்றும்,

இன்னதோர் காலை நில்லலன்;
இன்னே வருகுவன்; ஒழிக்கஅவற்கு இடமே! (புறநானூறு, 216)

என்றும் கூறினான். அதாவது, ”தென்திசையில் உள்ள பொதிகை மலையையுடைய பாண்டிய நன்னாட்டில் உள்ள பிசிர் என்னும் ஊரில் உள்ளவர் ஆந்தையார். அவர் என் உயிரைப் பாதுகாப்பவர்; நான் ஆட்சியிலிருந்த காலத்தில் அவர் வந்து என்னைப் பார்க்காவிட்டாலும் நான் துன்பத்தில் இருக்கும்பொழுது என்னைப் பார்க்க வராமல் இருக்கமாட்டார். அவர் இப்பொழுதே வருவார்; அவருக்கு ஓரிடம் ஒதுக்கி வையுங்கள்.”, என்று கோப்பெருஞ்சோழன் கூறினான். அவன் இறந்த பிறகு, பிசிராந்தையார் வந்ததாகவும், பின்னர் அவரும் வடக்கிருந்து உயிர் துறந்தாகவும் கூறப்படுகிறது. நெருங்கிப் பழகாமல் நெருங்கிய நண்பர்களாக இருக்க முடியும் என்பதற்கு, கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையார் நட்பு ஒரு எடுத்துக்காட்டு.
நட்பு தங்கியிருக்கும் மிக உயர்வான இடம் எதுவென்றால், மனம் சுழற்சி இன்றி, இயலும் வழியாலெல்லாம் நண்பர் தளர்ச்சியுற்றபோது தாங்கி நிற்கும் மனவலிமை பொருந்திய நிலையேயாகும் (குறள் – 789) என்று வள்ளுவர் கூறுகிறார்.

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின் கொட்பின்றி
ஒல்லும்வாய் ஊன்றும் நிலை. (குறள் – 789)

“கொட்பு” என்ற சொல்லுக்கு “மனச் சுழற்சி” என்று பொருள். “கொட்பின்றி ஒல்லும்வாய் ஊன்றும் நிலை” என்பது உதவி செய்யலாமா வேண்டாமா என்று சிந்தித்து, மனத்தைக் குழப்பிக்கொள்ளாமல், இயன்ற வழியெல்லாம் தன் நண்பருக்கு உதவி செய்வதைக் குறிக்கிறது. தன்னுடைய நண்பருக்கு உதவி செய்ய வேண்டும் என்று நினைத்தாலும், சிலரால் அந்த உதவியைச் செய்யலாமா வேண்டாமா என்று பலமுறை சிந்தித்த பிறகுதான் செய்ய முடியும்.

எனக்கு மிக நெருங்கிய உறவினர் ஒருவர் இருந்தார். அவர் வயதில் மூத்தவர்; அறிவிற் சிறந்தவர். அவரைச் சந்தித்து உரையாடுவதற்கு, பலரும் அவர் வீட்டுக்கு வருவது வழக்கம். ஒருநாள், அவருடைய பெண்ணுக்குத் திருமணம் நிச்சயம் செய்யப்பட்டது. அவரைப் பார்க்க அவருடைய நெருங்கிய நண்பர் ஒருவர் வந்தார். வந்த நண்பர், “ஐயா, பெண்ணுக்குத் திருமணம் நிச்சயமானது குறித்து நீங்கள் மிகுந்த மகிழ்ச்சியாக இருப்பீர்கள் என்று நினைத்தேன். நீங்கள் மகிழ்ச்சியாகத்தான் இருக்கிறீர்கள். ஆனாலும், உங்கள் முகத்தில் ஒரு கவலை தோன்றுகிறது. அது ஏன்?”, என்று

கேட்டார். அந்தப் பெரியவர், “திருமணம் குறித்து மகிழ்ச்சிதான். ஆனால், அதற்குத் தேவைப்படும் பணத்திற்கு என்ன செய்வது என்று சிந்தித்துக்கொண்டிருந்தேன். வேறொன்றுமில்லை.” என்றார். பெரியவர் பேச்சைக் கேட்டவுடன், அவரைப் பார்க்க வந்த நண்பர், அவருடைய சீருந்துக்குச் சென்று காசோலைகள் அடங்கிய புத்தகம் ஒன்றைக் கொண்டுவந்தார். நான்கு காசோலைகளில், தொகையும் தேதியும் குறிப்பிடாமல், அந்தப் பெரியவரின் பெயரை மட்டும் எழுதி, கையெழுத்திட்டு, “இவற்றை வைத்துக்கொள்ளுங்கள். எவ்வளவு பணம் வேண்டுமானலும் எடுத்துக்கொள்ளுங்கள். அந்தப் பணம் என்னிடம் இருப்பதைவிட, உங்களுக்குப் பயன்பட்டால், அது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தரும்.” என்று கூறி, அந்த நான்கு காசோலைகளையும் பெரியவரிடம் கொடுத்தார். பெரியவருக்கு அந்தக் காசோலைகளைப் பெற்றுக்கொள்ள விருப்பம் இல்லாவிட்டாலும், வேறு வழியின்றி அவற்றைப் பெற்றுக்கொண்டார். பெரியவரின் பெண்ணுக்குத் திருமணம் இனிதே நடைபெற்றது. சில மாதங்களில், பெரியவர் அவர் நண்பருடைய வங்கிக் கணக்கிலிருந்து எடுத்துக்கொண்ட தொகையை நண்பரிடம் திருப்பிக் கொடுத்தார். பெரியவரின் நண்பர், அந்தப் பெரியவருக்கு, எவ்விதத் தயக்கமும் இல்லாமல், அவர் கேட்காமலேயே அவருக்கு உதவி செய்தார். இது “கொட்பின்றி ஒல்லும்வாய் ஊன்றும் நிலை” என்று வள்ளுவர் கூறுவதற்கு ஒரு எடுத்துக்காட்டு.

நல்ல நட்பு எப்படி இருக்க வேண்டும் என்று விளக்கமாகக் கூறும் வள்ளுவர், நல்ல நட்பு எப்படி இருக்கக் கூடாது என்றும் கூறுகிறார். முகம் மலரும்படியாக நட்புக்கொள்வது நட்பாகாது; உள்ளுக்குள் மனம் மகிழும்படியாகப் பழகி, நட்புக்கொள்வதே நட்பாகும்(குறள் – 786). ஒருவரோடு ஒருவர் நட்புக்கொள்ளுதல் என்பது சிரித்துப்பேசி மகிழ்வதற்கன்று. நண்பர் தகாத செயலைச் செய்யத் தொடங்குமுன் தாமே முன்னதாகச் சென்று தயங்காமல் கடிந்து கூறித் திருத்துதற் பொருட்டாகும் (குறள் – 784).

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து
அகநக நட்பது நட்பு.

(குறள் – 786)

நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தற் பொருட்டு. (குறள் – 784)



புளூடார்க்

நண்பன் தவறு செய்தால் அவனைத் திருத்த வேண்டும் என்ற கருத்தை கிரேக்கத்தைச் சார்ந்த வரலாற்று ஆசிரியரான புளூடார்க் (Plutarch, 45AD – 120AD) என்பவரும் கூறியுள்ளார். “நான் மாறும்போது என்னுடன் மாறி, நான் தலையசைக்கும்போது என்னுடன் தலையசைக்கும் நண்பன் எனக்குத் தேவையில்லை. என் நிழலே அதைச் சிறப்பாகச் செய்கிறது.” என்கிறார் புளூடார்க்.

நல்ல நட்பின் சிறப்பு

நல்ல நட்பின் இயல்பைக் கூறும் வள்ளுவர் அதன் சிறப்பையும் கூறத் தவறவில்லை. நட்பைப்போல், ஒருவன் தனக்குச் செய்துகொள்வதற்கு அருமையான செயல் வேறொன்றுமில்லை என்றும், ஒரு காரியத்தைச் செய்வதற்குப் பாதுகாப்பாக அமைவது நட்பைப்போல் வேறொன்றுமில்லை என்றும் வள்ளுவர் கூறுகிறார் (குறள் – 781).

**செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல் வினைக்கரிய யாவுள காப்பு.(குறள் – 781)**

# குறள் நெறி

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்







இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல் ல

## மறைக்க முடியா மலை !

**--மு.சுகுமார்,** மாநிலச் செயலாளர், தமிழியக்கம்.



வேலூரில் பிறந்து வளர்ந்த மு. சுகுமார் அவர்கள் பொருளாதரத்தில் முதுகலை (M.A.,) மற்றும் இளம்முனைவர் (M.Phil.,) பட்டங்களை சிறப்புத் தகுதியுடன் (Outstanding) பெற்றவர்.
உணவு பொருட்கள் வழங்கீட்டுத் (விநியோகம்) தொழிலில் பொருள் ஈட்டும் சுகுமார் அவர்கள் தொழிலிலும் வணிகத்திலும் சுழற்கழகத்தின் (ரோட்டரியின்) உறுதிமொழியினை ஊக்கத்தோடு கடைப்பிடிப்பவர்.
காதல் தீராத அன்புத் துணைவி திலகவதி அவர்தம் காதலின் அடையாளமாக மகள் முத்துலட்சுமி என்கிற இலக்கியம், தமிழ் நிறைந்த நண்பர்கள், நூல்களால் நிரப்பப்பெற்ற வீடு, மெல்லிய இசை போல வாழ்க்கையை அழகாகவே வாழ்ந்து வருபவர்.
1990 தொடங்கி சுழற்கழகத்தில் (ரோட்டரியில்) இயங்கிவரும் சுகுமார், சுழற்கழகத்தில் தமிழும் தமிழுக்குள்சுழற்கழகமும் ஊடுருவி உலாவர உழைப்பவர். சமூக வண்ணங்களால் நிரப்பப் பெற்று அவரைச் சுற்றி இருக்கும் எண்ணங்களை எதிரொலிக்க, தமிழியக்கம் மாநிலச் செயலாளர், வேலூர் தமிழ்ச் சங்கச் செயலாளர் ,வேலூர் தமிழ்ச் சங்கம் அறக்கட்டளை செயலாளர், வேலூர் சிந்தனையாளர் மன்றத் தலைவர், வேலூர் மாநகரப் பகுத்தறிவாளர் கழகத் தலைவர், என தமிழ் மற்றும் தமிழர் நலம் நாடும் சேவையில்ஈடுபட்டிருப்பவர். மனிதம் நிரம்பிய மனிதத்தை இவ்வுலகில் நிரப்பும் பணியை நித்தமும் செய்துவருபவர் மு. சுகுமார். அது மட்டுமே இவர்தம் அடையாளம்.

**மறைமலையடிகளின் வரவு தமிழ் நெடுவெளியில் நிகழ்ந்த பெருநிகழ்வு என்றே சொல்ல வேண்டும். அவரை ஒரு நூற்றாண்டின் வெடிப்பு என்று சொல்லலாம்.1800 ஆண்டுகளாய்த் தமிழ் மொழியில் அப்பிக் கிடந்த அந்நியப் பாசிகளை முற்றும் களைய வந்த மொழிச் சலவையாளர் என்றும் கணிக்கலாம்.**

**தனித்தமிழ் இயக்கத்தைத் தோற்றுவித்த தந்தை என்ற ஆழ்ந்த அடையாளத்திற்காக எம்மொழித் துணையும் இன்றித் தனித்தியங்கவல்ல செம்மொழி என்ற நம்பிக்கையைத் தமிழுக்குத் தந்ததற்காக, முத்தெடுக்கப்போனவன் பவளப் பாறையைக் கண்டு பிடித்த**

கதைபோல், மொழித் தூய்மை காக்கப்போய் இனப்பெருமை காத்ததுதான் மறைமலை அடிகளின் திருவரலாறு.

பன்னூறாண்டுகளாய்த் தமிழ் மீது படிந்து கிடந்த அயன்மொழிச் சாம்பல்களை ஓர் ஊழிக் காற்றாய் அவர் வந்து ஊதிப் பார்த்தபோதுதான் உள்ளிருந்த தணல்தான்தான் தமிழ் தமிழ் தமிழ்' என்று தகித்தது.

மறைமலை என்ற அலை மட்டும் அடித்திராவிடில்காலப்போக்கில் தமிழ் இலக்கியங்களின் மூலங்களும்கூட முகம்மாறிப் போயிருக்கலாம். தொல்காப்பியம் ஐந்திர மாகியிருக்கலாம்; தொல்காப்பியர் திரணதூமாக்கினி ஆகியிருக்கலாம்; திருவள்ளுவர் ஸ்ரீவல்லபராய்த் திரிந்திருக்கலாம்;தமிழ்நாடு என்பது வட இந்தியாவின் தென்துண்டு என்றுவரலாறு வளைக்கப்பட்டிருக்கலாம்.

தம் எழுத்திலும் பேச்சிலும் அயற்சொல் விரவாத தனித்தமிழையே வாழ்நாள் முழுவதும் வழங்குவதென்று உறுதிகொண்ட மறைமலையார்தாம் அவ்வண்ணமே வாழ்ந்ததன்றித் தமிழர்களையும் அவ்வண்ணமே பயிற்றுவித்தார்'எழுத்தெண்ணிப் பயின்றவர்' என்பது ஆழங்காற்பட்ட கல்வியாளர் ஒருவர் அடையும் அதிகப்படியான அடைமொழியாகும். மற்றவர்க்கது பொருந்துமோ இல்லையோ அடிகளார்க்கு மட்டும் அப்படியே பொருந்தும்.

தனித்தமிழ் எண்ணம் தலையெடுத்த பிறகுதாம் எழுதிய பழைய நூல்களிலும் அயன்மொழிச் சொற்களைக் களைய வேண்டும் என்று கட்டளையிட்டுக் கொண்டார். அதன் பின்னர், அவரது பேச்சு மடைமாற்றம் கண்டது; எழுத்து நடைமாற்றம் கொண்டது. சுடர்கொண்ட சொல்லும் - உயிரள்ளும் பொருளும் - உணர்ச்சியும் - உண்மையும் கூடிக் கும்மியடிக்கும் இந்தக் கொழுந்தமிழ் நடை தமிழ்நாட்டு அரசியலையே புரட்டிப்போட்ட ஒரு புரட்சிக்கு வித்திட்டது. அடிகளாரின் எழுத்து புலவர்களுக்கு மட்டுமன்று - தலைவர்களுக்கும் ஒரு கோட்பாட்டுப் பொருளானது.

தமிழ் ஆட்சி பெறவும் தமிழர் மீட்சி பெறவுமே அவர் எழுத்தும் பேச்சும் மூச்சுள்ளவரை இயங்கின என்று உணர முடிகிறது. தண்ணீரைத் தேடிப் பயணித்த கடப்பாரை புதையலில் முட்டிப் பொறி தட்டியதுபோல,மொழி மீட்சிக்குத் தோன்றிய தனித்தமிழ் இயக்கம், இனமீட்சியில் போய் முடிந்தது.

திராவிட இயக்கத்தைக் கொழுந்துவிட்டு எரியச்செய்த கொள்கைகளுள் ஒருபாதி இனம்; மறுபாதி மொழி. அந்த மொழிக் கொள்கை மறைமலையடிகளின் மூளைக் குழந்தை என்பதை மறைக்கவோ மறுக்கவோ இயலாது.

ஒருவரைப் பாராட்டுவதில் பணத்தைவிடச் சிக்கனமாய்ச் சொற்களைப் பயன்படுத்துகிற தந்தை பெரியார் மறைமலையடிகளைத் தன் கரமென்று சொல்லியிருக்கிறார்."மறைமலையடிகளும் எம்.எல்.பிள்ளையும் எனக்கு வலக்கையும் இடக்கையும் போன்றவர்கள். எனக்குப் பகுத்தறிவுப் பாதையில் ஏதேனும் அய்யம் உண்டாகும் போதெல்லாம் அவர்களிடமே தீர்த்துக்கொள்வேன்"என்ற அய்யா பெரியாரின் கூற்றை நாம் பெரிதினும் பெரிதாய்க் கருதுகிறோம்.

திராவிட இயக்க மேடைகளும் மறைமலையடிகளின் தாக்கத்தால் ஆக்கமுற்றன. 'அக்ராசனர்' தலைவரானார்; 'மகாஜனங்கள்' பொதுமக்கள் ஆயினர்; 'பிரேரணை' தீர்மானமாயிற்று; 'நமஸ்காரம்' வணக்கமாயிற்று. 'முனிசிபாலிட்டி' நகராட்சி ஆயிற்று; 'கார்ப்பரேஷன்' மாநகராட்சி ஆயிற்று; 'கமிஷனர்' ஆணையாளரானார்; 'ஜி.ஓ' அரசாணையானது; 'சர்க்குலர்' சுற்றறிக்கை ஆனது. மறைமலையடிகளின் நீண்டு விழுந்த நிழல்களே இவையெல்லாம்.

அறிஞர் அண்ணா இந்த மண்ணுக்குத்'தமிழ்நாடு' என்று பெயர் சூட்டியதும், தமிழ்நாட்டுத் தலைநகரத்திற்கு கலைஞர்'சென்னை' என்று பெயர் சூட்டியதும் மறைமலையடிகளால் நேர்ந்த மங்கலங்களாகும்.

தமிழ் மொழியின் பெயர்ச் சொற்களெல்லாம் தமிழ்தானா என்ற வினாவுக்கு முன்னால், தமிழின மாந்தர்களின் பெயர்களெல்லாம் தமிழ்தானா என்று ஓர் எரியும் வினாவோடு நம்மை எதிர்கொள்கிறது நிகழ்காலம்.

தம் பிள்ளைகளுக்குத் தமிழ்ப் பெயர் சூட்டி வழிவழியாக வழங்கினார்கள். திராவிட இயக்க எழுச்சியில் தனித்தமிழ்ப் பெயர்கள் வீடுகள்தோறும் விளங்கின. தற்காலத்தில் பொருளறியா ஓசைகளும் கிரந்த எழுத்துக்களின்றி இயங்க முடியாத ஒலிக்கூட்டமும் தமிழர்களின் பெயர்களாகத் துலங்கத் தொடங்கியிருப்பது இன வரலாற்றுக்கு எதிர்மறையாகும்.

தமிழர்கள் அனைவரும் தமிழ்ப் பெயர் சூடிக்கொண்டால்,பள்ளி - கல்லூரி ஆவணங்களில் - அடையாள அட்டைகளில் - குடும்பக் கோப்புகளில் - வங்கிகளில் -

அரசு - தனியார் அலுவலகங்களில் - நீதிமன்றங்களில் - காவல் நிலையங்களில் - ஊடகங்களில் - பயணங்களில் - உலகவழக்கில் எட்டுக் கோடித் தமிழ்ப் பெயர்கள் எல்லா நாட்களிலும் புழங்கப்பெறும். அந்த எட்டுக் கோடிப் பெயர்ச் சொற்களின் மீது ஒரு மொழி தன்னை ஊன்றி நடக்கும் உறுதி கிட்டும்.

தமிழர்களே ! இப்போது துலங்கும் பெயர்கள் இப்படியே துலங்கட்டும்;இனிவரும் தலைமுறைகளுக்குத் தமிழ்ப் பெயர்களே விளங்கட்டும்.

மீண்டும் இயற்கைக்குத் திரும்ப வேண்டும் என்று சுற்றுச்சூழல் சொல்கிறது.
மீண்டும் தாய்மொழிக் கல்விக்கே திரும்ப வேண்டுமென்று உலகக் கல்விக்கொள்கை உரக்கக் கூவுகிறது.

நாமும் திரும்ப வேண்டும்.
மறைமலைகள் மீண்டும் வேதாசலங்களுக்குத் திரும்ப வேண்டாம்;
வேதாசலங்கள் மறைமலைகளுக்குத் திரும்பட்டும் ! வாழ்க மறைமலை அடிகள் !



## தனித்தமிழ் மாட்சி

**மறைமலையடிகளார்**

பண்டைக்காலந் தொட்டு இன்றுகாறும் நடைபெறும் மொழி தமிழ் ஒன்றே ஆகும். பண்படுத்தப்பட்ட பழைய மொழிகளில் தன்னைத் தவிர மற்றையவெல்லாம் இறந்து போகவுந், தான்மட்டும் இறவாமல் நடைபெற்றுப், பன்னூறாயிரம் மக்களுக்குப் பெரிது பயன்பட்டு வரும் பெருஞ்சிறப்பு வாய்ந்த தமிழ்மொழியைக் கல்லாதவர் எல்லாந் தூயதாய் வழங்கியவர் , அதனைக் கற்று அதனாற் பேரும் புகழும் பொருளும் அடைந்துவருஞ் சிற்சிலர் மட்டுந் தமக்கு எல்லா நலங்களையுந் தந்து தாயினுந் தம்மைப் பாதுகாத்துவரும் அதனை நிலைகுலைத்து அழித்தற்குக் கங்கணங்கட்டி நிற்கின்றார்கள். இவர்களின் இக்கொடுஞ் செயல் தன்னைப் பெற்ற தாயைக் கொல்லுங் கொடுஞ்செயலினுங் கொடியதாக இருக்கின்றது.

இன்னுந் தமிழிற் பிறமொழிச் சொற்களை ஏற்றி அதனை மாசுபடுத்தியழிப்பதுதான் அதனை வளர்ப்பதாகும் என்று எழுதுவோர் , தூய தனித்தமிழ் எழுதுவாரைக் ‘குறுகிய மனநிலை’ ‘அறியாமை’, ‘பேதமை’ யுடையரென இகழ்ந்து பேசிவிடுகின்றனர். கொள்கையளவில் ஒருவரோடு ஒருவர் மற்றொருவர் மாறுபட்டிருப்பது பற்றி , அவர் மற்றவரைக் ‘குறுகிய மனநிலையுடையவர்’ எனவும், ‘அறியாமை’, ‘பேதமை’ மிக்கவர் எனவும் இகழ்ந்து பேசுதல் அறிவுடையோர்க்கு முறையாகாது என்பதை மட்டும் வற்புறுத்துகின்றோம். தாங்கொண்ட கொள்கையே உண்மையானது என்று ஒவ்வொருவருந் துணிந்துரைத்தல் ஆகாது. மக்கள் எல்லாருஞ் சிற்றறிவுஞ் சிறுதொழிலும் உடையர். ஒருவர் ஒருகாலத்து அறிவெனக் கொண்டது பிறிதொரு காலத்து அறியாமையாக மாறுதலும் உடைத்து. இதனைத் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரும் “அறிதோ றறியாமை கண்டற்றால் ” என நன்கு தெருட்டியிருக்கின்றனர். இத்தகைய நிலையில் உள்ள மக்கள் ஒருவரை யொருவர் “அறியாமையுடையர்” என்று இகழ்ந்து பேசுவதினுந் தகாத்து யாது உளது! தாந்தாம் உண்மை யெனக் கண்டவற்றைத் தக்க சான்றுகள் கொண்டு விளக்கிப்போதலே

அறிவுடையார்க்குக் கடனாவதாம் ; தமக்கு மாறான கொள்கை யுடையாரை இகழ்ந்து பேசுதல் அவர் தமக்குச் சிறிதும் முறையன்றாம். அது நிற்க.

இனி, நமது செந்தமிழ்மொழியில் ஆரியம் ஆங்கிலம் முதலான பிறமொழிச் சொற்களைக் கலவாமல. நம்மாற் கூடியவரையில் முயன்று அதனைத் தூயதாக வழங்கல் வேண்டும். ஆனால். ஒருசாரர் , உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களும் மாறுந் தன்மையவாகலின் , அவற்றுள் ஒன்றாகிய மொழியும் மாறுதல் அடைதல் இயற்கையேயாம் என்றும், அதனால் நன்றேயாமென்றும் வரைந்திருக்கின்றனர். இனி 'மாறுதல்' என்னுஞ் சொல்லால் உணர்த்தப்படும் பொருள் என்னை ? ஒன்று தன் றன்மை திரிந்து மற்றொடு கலக்கப்பெற்றுத் தன்நிலை குலைதலா ? அல்லது தன்னிலைக்கு ஏற்றவாறு பிறவற்றின் உதவியால் தானே வரவர வளர்ந்து திரிபுறுதலா? எனின் இம்மூன்றும் அம்மாறுதல் என்னுஞ் சொல்லுக்குப் பொருளேயாம்.

முதலிற் சொன்ன பொருளின் படி , தவளையினத்திற் சேர்ந்த சில சிற்றுயிர்களும் பட்டுப்பூச்சி முதலியனவும் முதலில் ஒருவகை யுருவத்திலிருந்து , பிறகு அவ்வுருவு முழுதுந் திரிந்து தவளையாகவும் பட்டுப் பூச்சி முதலியனவாகவும் மாறுகின்றன ; இரண்டாவது சொன்ன பொருளின்படி , மக்கள் முதலான எத்தகைய உயிர்களுந் தம்முடம்பின் இயல்புக்கு ஏலாத நோய்ப் புழுக்களோடும் பாம்பின் நஞ்சையொத்த நச்சுப் பொருள்களோடுங் கலக்கப் பெறுமானால் தம்முடம்பின் நிலை குறைந்து மாறி விரைவில் அழிந்துபோகின்றன ; இனி, மூன்றாவது சொன்ன பொருளின்படி , உலகத்தில் உள்ள எல்லா உயிர்களுந் தத்தம் நிலைக்கு ஒத்த பொருள்களின் சேர்க்கையால் தமது நிலை கெடாமலே வளர்ந்து திரிபெய்தி வருகின்றன. மக்கள் தமக்கேற்ற உணவுகளை உட்கொண்டும். இசைவான இடங்களிற் குடியிருந்தும் , வரவரத் தம்முடம்பும் உணர்வும் மாறிமாறி வளர்ந்து வருகின்றனர் மக்கள் அல்லாத மற்றை உயிர்களில் நிலையியற் பொருள்களாகிய புல் மரஞ் செடி கொடி முதலியனவும், இயங்கியற் பொருள்களிற் புழு முதல் யாடு மாடு முதலான எல்லா வுயிர்களுந் தத்தமக்கேற்ற உணவுப் கொருள்களை உட்கொண்டு த்தமக்கு இசைவான இடங்களிலிருந்து நாடோறும் மாறுத ல் எய்தி வளர்ந்து வருகின்றன. இம் மூவகைப் பட்ட மாறுதல்களில் எத்தகைய மாறுதலை எல்லா உயிர்களும் விரும்புகின்றன வென்று உற்றுநோக்கின், தம் இயல்புக்கு ஒத்தவற்றின் சேர்க்கையால் தமது தன்மைகெடாமல் வரவரப் பெருக்கமுற்று மாறிமாறி வளர்ந்து வருதலையே அவையெல்லாம் அல்லும் பகலும் விழைந்து வருகின்றனவென்பது எல்லார்க்கும்

புலனாம், தமக்கு ஏலாத பொருள்களோடு கலந்து தமது நிலைகுலைந்து மாறி மாய்தலை எவ்வகைப்பட்ட உயிரும் விரும்புவ தில்லை ; தமக்கு இடர்தரும் இடத்தையேனும் பொருளையேனுங் கண்டால் அவற்றை அகன்றுபோய்ப் பிழைக்கும் முயற்சியைப் புழு முதல் மக்கள் ஈறான எல்லா உயிர்களும் மிகவும் பரபரப்பொடு நிரம்பக் கருத்தாய்ச் செய்தல் எவரும் உணர்ந்த்தேயாம். இடம் விட்டுப் பெயராத புல்மரம் முதலியனவுங் கூடத் தத்தமக்கேற்ற உணவுகளை உட்கொள்ளும் வரையில் உயிரோ டிருத்தலும் , அங்ஙனம் அமையாக்கால் அவை பட்டுப்போதலும் எல்லாரு ம் அறிவர்.

ஆகவே உலகில் உள்ள எல்லாப் பொருள்களும் எல்லா உயிர்களும் மாறுதல் அடைதலாகிய பொது நிகழ்ச்சியைப்பார்த்து , அப்பொதுவகையான மாறுதலுள் எத்தகைய மாறுதல் மக்களால் வேண்டப்படுவது என்பதனை உணர்ந்துபாராமல் , தம் நிலைகுலைந்து மாறுதலாகிய வேண்டாத தொன்றைக் கடைபியைய் பிடித்துக் கொண்டு, அதன்பை நமது அருமைச் செந்தமிழ்மொழியுந் தனது தூயநிலை குலைந்து மாறுதல் அடையவேண்டுமென்று உரைப்பது அறிவுடையோரால் ஏற்றுக்கோடற்பாலதாமோ? எல்லாப்பொருள்களும் எல்லா உலகமும் ஒரு காலத்து மாறி மாய்தல் உண்மையேயாயினும் , அம் மாறுதலும் அதனால் வரும் அழிவும் இப்போதே வந்துவிடல் வேண்டுமென்று எவரேனும் விரும்புவரா ? அங்ஙனம் எவரேனும் விரும்புவராயின் அவரை அறிவு திரிபெய்திய வெறியர் என்றே உலகங் கொள்ளுமல்லது, மற்று அவரை அஃது உயர்த்துக் கூறுமோ ? ஆண்டில் முதிர்ந்திருவர்களுந் கூடத் தமது உடம்பின் நலம் பழுதுபதாதவாறு அறிவான முறைகளைக் கையாண்டு மேலும்மேலும் அதனை நலமுறைவைத்து வாழ்நாளைப் பெருக்கதற்கன்றோ முயல்கின்றனர் ? நலமுடனிருந்து வாழ்நாளைப் பெருகச் செய்பவரக்ளுக்கு அறிவு வளர்ச்சியும் அதனாற் பேரின்ப்ப் பேறும் வாய்த்தலால் , உடம்பை விரைவில் நிலைகுலையச் செய்பவர்பகளுக்கு அறிவும் இன்பமும் வாயா.

இது போலவே , நமது செந்தமிழ்மொழியாகிய ஒலியுடம்பும் பழுதுபடாமற் செவ்வையாகப் பாதுகாக்கப் படுமானால் அஃது இன்னும் பலநூறாயிரம் ஆண்டு உயிரோடு உலவித், தன்னைப் போற்றி வழங்கும் மக்களுக்கு அரிய பல நலங்களையும் நன்கு பயக்கும் , சிலருடம்பு தமக்கு அரிய பல நலங்களையும் நன்கு பயக்கும். சிலருடம்பு தமக்கு இயற்கையிலேயுள்ள குறைபாட்டானுந் , தம்மையுடையவர்களால் நன்கு பேணப்படாமையானும் விரைவில் அழிந்துபோதல் போலச் , சமற்கிருதம், இலத்தீன், கிரீக்கு, ஈபுரு முதலான பழைய மொழிகளுந் தமக்கு இயல்பாகவுள்ள

குறைபாட்டானுந் தம்மை வழங்கியியோர் நாகரிகம அற்றவராய் இருந்தமையானும் வழங்குதல் அற்றன. நமது செந்தமிழ்மொழியோ தன்னை வழங்கிவரும் நாகரிக நன்மக்களின் அறவுமுயற்சியாற் பெரிது போற்றப்பட்டு வருதலானுந் தனது இளமைத் தன்மை குன்றாது இன்னும் உலவி வருகின்றது. சிலர் இளமையிலேயே மூத்துப் போதலையும் வேறு சிலர முதுமையிலும் அது தோன்றாமற் புத்திளமையோடுங் கட்டழகோடும் விளங்குதலையும் நீங்கள் பார்த்த்தில்லையா ? பாதுகாப்பினால் இளமையும் வாழ்நாளும் இவ்வாறு நீண்டுவருவதல் போலவே , நமது தனித்தமிழையுந் தூயதாக வைத்துப் பாதுகாப்போமாயின் அது மக்கள் உள்ள்ளவும் இறவாது நடைபெறுதல் திண்ணமன்றோ ? எனவே, தமிழ்மொழியின் வளவிய வளர்ச்சிக்கு ஏதுவாகிய மாறுதலே எல்லாரும் விரும்பத்தக்கதா மன்றி , அதுகுன்றி மாய்தற்கு ஏதுவான மாறுதல் அறிவுடையார் எவரானும் எக்காலத்தும் விரும்பற்பாலதன்று.

# தீ நட்பும் கூடா நட்பும்

திருக்குறளார் முனைவர் இர. பிரபாகரன்

**தீ நட்பு**

மனிதர்களுடைய வாழ்க்கையில் நட்பு ஒரு இன்றியமையாத உறவு. ஒருவனுடைய நண்பர்கள் நல்லவர்களாக இருந்தால் , அவர்கள் அவனுக்கு உறுதுணையாக இருந்து உதவி செய்வார்கள். அவனுக்குத் துன்பம் நேர்ந்தால் அதைத் தமக்கு நேர்ந்த துன்பமாகக் கருதி அவனுடைய துன்பத்தில் பங்கேற்பார்கள். அவன் தவறான வழிகளில் சென்றால் அவனை இடித்துரைத்துத் திருத்த முயற்சி செய்வார்கள். நல்ல நண்பர்கள் இருந்தால் எதையும் எளிதில் சாதிக்க முடியும். நல்ல நண்பர்களால் பல நன்மைகள் உள்ளதைப்போல் , தீய நண்பர்களால் பல தீமைகளும் வருவதற்கு வாய்ப்புகள் உள்ளன. அதனால்தான் , ஒருவரை நம்முடைய நண்பராக்கிக்கொள்வதற்குமுன் அவரைப் பற்றி நன்கு ஆராய வேண்டும் என்ற கருத்தை "நட்பாரய்தல்" என்ற அதிகாரத்தில் வள்ளுவர் வலியுறுத்துகிறார். ஆனால் , சில சமயங்களில் , எவ்வளவு ஆராய்ந்தாலும் , ஒருவர் நல்லவரா அல்லது தீயவரா என்று உறுதியாகத் தீர்மானிக்க முடியாது. சிலகாலம் நண்பர்களாகப் பழகினால்தான் ஒருவரைப் பற்றி நன்கு தெரிந்துகொள்ள முடியும். ஒருவரோடு நண்பராகப் பழகியபின், அவர் தீயவர் என்று தெரிந்தால் , அவருடைய நட்பைக் குறைத்துகொள்ள வேண்டும். முடிந்தால் , அவருடைய நட்பைவிட்டு விலக வேண்டும் என்று வள்ளுவர் கூறுகிறார். "தீ நட்பு" என்ற அதிகாரத்தில் , 1)பண்பில்லாதவர்கள், 2)பயன் மட்டுமே கருதுபவர்கள், 3)நம்ப முடியாதவர்கள் , 4)பேதைகள், 5)மகிழ்ச்சியை மட்டுமே விரும்புவோர், 6)காரியத்தைக் கெடுப்பவர்கள் , மற்றும், 7)தனிமையில் நண்பராக இருந்து பொது இடத்தில் பழிப்பவர்கள் ஆகிய ஏழு திறத்தாருடைய நட்பினால் வரும் தீமைகளைப் பற்றியும் , அவர்களின் நட்பை விலக்க வேண்டும் என்றும் வள்ளுவர் நம்மை எச்சரிக்கிறார்.

பண்பில்லாதவர்களின் நட்பு: நம்மைக் காணும்போது அன்பின் மிகுதியால் அப்படியே நம்மை அள்ளிக் குடித்துவிடுபவர் காணப்பட்டாலும் , அவர்கள் பண்பற்றவர்களாக இருந்தால், அவர்களுடைய நட்பை மேன்மேலும் வளர்த்துக்கொள்வதைவிடக் குறைத்துக்கொள்வது நல்லது (குறள் – 811).

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை

பெருகலிற் குன்றல் இனிது. (குறள் – 811)

பயன் கருதுபவர்களின் நட்பு: தமக்கொரு பயனுள்ளபோது நட்புச்செய்து, பயனில்லாதபோது நீங்கிவிடுகின்ற, தமக்குப் பொருத்தமில்லாதவரின் நட்பைப் பெற்றால் என்ன? இழந்தால் என்ன? (குறள் – 812). நட்பினால் கிடைக்கும் பயனை அளந்துபார்த்து, நட்புக்கொள்ளும் நண்பர்களும், கொடுப்பவரை விரும்பாமால் அவர் கொடுக்கும் பொருளை மட்டும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்ளும் விலைமாதரும், பிறர்க்கு ஏற்படும் துன்பங்களைப் பற்றிக் கவலைப்படாமல் அவர்களின் பொருளைத் திருடும் கள்வரும் சமமானவர்கள் (குறள் – 813). இது போன்ற பயன் கருதும் நட்பை, வள்ளுவரைப்போல் அரிஸ்டாட்டிலும் தீய நட்பாகவே கருதுகிறார். ”நட்பு என்பது ஒரு மிகப் பெரிய பொறுப்பு. ; அது பயன் அடைவதற்கான வாய்ப்பு அன்று. ” என்று கலீல் சிப்ரான் ( Khalil Gibran, 1881 – 1931)) என்ற கவிஞர் கூறியது இங்கு நினைவுகூரத்தக்கது.

உறின்நட்டு அறின்ஒருஉம் ஒப்பிலார் கேண்மை
பெறினும் இழப்பினும் என். (குறள் – 812)

உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது
கொள்வாரும் கள்வரும் நேர். (குறள் – 813)

நம்ப முடியாதவர்களின் நட்பு: ஒருவர் நமக்கு உதவி செய்வார் என்று அவரை நாம் நம்பி இருக்கும்பொழுது, அவர் உதவி செய்யாமல் நம்மைக் கைவிட்டுவிட்டால், அவரோடு நட்புக்கொள்வதைத் தவிர்க்க வேண்டும். அதுபோல், ஒருவர் சொல்வது ஒன்று, செய்வது வேறாக இருந்தால் அவரோடும் நட்புக்கொள்வதைத் தவிர்க்க வேண்டும். இது போன்றவர்கள் நம்பத் தகுந்தவர்கள் என்று கருத முடியாது என்பது வள்ளுவரின் கருத்து. போர்க்களத்தில், தன்மீது அமர்ந்திருக்கும் வீரனைக் கீழே தள்ளிவிட்டுவிட்டு ஓடிப்போகும் பயிற்சி போதாத குதிரை போன்றவருடன் பழகி அவரோடு நட்புக்கொள்வதைவிடத் தனிமையாக இருப்பதே சிறந்தது (குறள் – 814). செயல் வேறாகவும், சொல் வேறாகவும் இருப்பவர்களின் நட்பு கனவிலும்கூடக் கொடியது (குறள் – 819). இங்கு, “உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும். ” என்று இராமலிங்க அடிகளார் கூறியது நினைவுகூரத்தக்கது.

அமரகத்து ஆற்றறுக்கும் கல்லாமா அன்னார்
தமரின் தனிமை தலை. (குறள் – 814)

கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. (குறள் – 819)

பேதைகளின் நட்பு: அறிவில்லாதவருடன் மிகநெருங்கிப் பழகி நண்பர்களாக இருப்பதைவிட, அறிவுடையவர்களின் பகைமை , கோடி மடங்கு நன்மை பயக்கும் (குறள் – 816).

பேதை பெருங்கெழீஇ நட்பின் அறிவுடையார்
ஏதின்மை கோடி உறும். (குறள் – 816)

மகிழ்ச்சியை மட்டும் விரும்புவோரின் நட்பு: மகிச்சிக்காக மட்டுமே ஒருவர் நம்முடையாக நண்பராக இருக்க விரும்பினால் , அத்தகைய நட்பும் தீய நட்புதான் என்பது வள்ளுவரின் கருத்து , உள்ளத்தில் அன்பில்லாமல் , புறத்தே சிரித்து நடிப்பவர்களின் நட்பைவிட பகைவரால் பத்துக்கோடி மடங்கு நன்மை உண்டாகும்.

நகைவகையர் ஆகிய நட்பின் பகைவரால்
பத்தடுத்த கோடி உறும். (குறள் – 817)

காரியத்தைக் கெடுப்பவர்களின் நட்பு: நாம் செய்ய விரும்பும் நற்செயல்களுக்கு நல்ல துணையாக உள்ளவர்கள்தான் உண்மையான நண்பர்கள். சிலர் நம்மோடு நண்பராக இருந்தாலும், நாம் ஒரு நற்செயலைச் செய்ய நினைக்கும்பொழுது நம்மை ஊக்குவிக்காமால், நம்மை அச்செயலைச் செய்யவிடாமல் தடுப்பவர்களின் நட்பையும் தவிர்க்க வேண்டும் என்பது வள்ளுவரின் கருத்தாகத் தோன்றுகிறது. நம்மால் செய்யக் கூடிய செயலைச் செய்யவிடாமல் நம்மைக் குழப்பி வருத்துபவர்களின் நட்பை , அவரிடம் வெளிப்படையாகச் சொல்லாமல் சிறிதுசிறிதாக விட்டுவிட வேண்டும் (குறள் – 818).

ஒல்லும் கருமம் உடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல். (குறள் – 818)

தனிமையில் நட்பாக இருந்து , பொதுவிடத்தில் பழிப்பவர்களின் நட்பு: தனியாக இருக்கும்பொழுது நம்மிடம் நட்புப் பாராட்டி , பலர் கூடியுள்ள பொதுவிடத்தில் நம்மைப் பழிப்பவர்களின் நட்பைச் சிறிதளவுகூட நெருங்கவிடாமல் தவிர்க்க வேண்டும் என்கிறார் வள்ளுவர் (குறள் – 820).

எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ
மன்றில் பழிப்பார் தொடர்பு. (குறள் – 820)

**கூடா நட்பு**

தீ நட்பு என்பது தீயவர்களின் நட்பு. எவ்வளவு ஆராய்ந்து நட்புக்கொண்டாலும் , சில சமயங்களில், சில நண்பர்களுடைய உண்மையான குணத்தை அறிந்துகொள்ள முடியாது. பழகப்பழகத்தான் , அவர்கள் நல்லவர்களா தீயவர்களா என்பது தெரியவரும். நண்பர்களாக இருப்பவர்கள் தீயவர்கள் என்று தெரிந்தவுடன் , அவர்களுடைய நட்பைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக்கொள்ள வேண்டும். முடியுமானால் அவர்களுடைய நட்பிலிருந்து விலகவேண்டும். நட்பில் மற்றொரு வகையும் உள்ளது. உள்ளத்தில் நட்பில்லாமல் நண்பர்களைப்போல் சிலர் நடிப்பார்கள். இது போன்றவர்களில் சிலர் பகைவர்களாகக்கூட இருக்கலாம். இத்தகைய நட்பு , உள்ளத்தால் பொருந்தாத நட்பாகையால் அதைக் கூடா நட்பு என்கிறார் வள்ளுவர். கூடா நட்பை உரிய நேரத்தில் நயமாக நீக்கிவிட வேண்டும் என்பது வள்ளுவரின் கருத்து.

மனம் பொருந்தாமல் , சமயம் வாய்க்கும்பொழுது , தீமை செய்யாலாம் என்ற எண்ணத்தோடு நண்பர்போல் நடித்துக் கூடிப்பழகுபவரின் நட்பு கூடா நட்பு. அது இரும்பைச் சம்மட்டியால் அடிப்பதற்குத் துணையாக இருக்கும் பட்டடையைப் போன்றது (குறள் – 821). நண்பரைப்போல் நல்லவற்றையே நம்மிடம் பேசினாலும் , நண்பர்களல்லாத பகைவர்கள் சொல்லும் சொற்களின் உண்மைத் தன்மை விரைவில் உணரப்படும் (குறள் – 826). அம்பை எய்து , அதனால் தீமை செய்வதற்காகவே வில் வளைகிறது. அதுபோல் பகைவர்களின் பணிவான சொற்களும் தீமை பயப்பதற்காகவே சொல்லப்பட்டதாக உணர வேண்டும் (குறள் – 827). தொழுவதற்காகப் பகைவர்கள் தங்கள் கைகளைக் கூப்பினால் , அவற்றுக்குள் கொலைக்கருவிகள் மறைந்திருக்கும் ; அவர்கள் அழுது கண்ணீர் விட்டாலும் , அந்தக் கண்ணீரிலும் தீமை மறைந்திருக்கும் (குறள் – 828). நம்முடன் மனத்தால்

பொருந்தாதவர்களை, அவர்கள் சொல்லும் சொற்களை மட்டும் வைத்துக்கொண்டு , தெளிவடையக் கூடாது (குறள் – 825).

சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு. (குறள் – 821)

நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்
ஒல்லை உணரப் படும். (குறள் – 826)

சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான். (குறள் – 827)

தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து. (குறள் – 828)

மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும்
சொல்லினால் தேறற்பாற்று அன்று. (குறள் – 825)

பகைவர்கள் நண்பர்களாக நெருங்கும் காலம் வந்தால் , என்ன செய்வது என்பதற்கும் வள்ளுவர் அறிவுரை கூறுகிறார். வெளியே மிகுந்த நட்புடையவர் போல நடந்துகொண்டு, அகத்தே தம்மை இகழும் வஞ்சகப் பகைவர்களை , தாமும் வெளியே சிரித்துப்பேசி, அவர்களை மகிழச் செய்வதுபோல் செய்து அந்த நட்பை அழித்துவிட வேண்டும் (குறள் – 829). நம்முடைய பகைவர் நமக்கு நண்பராகப் பழகவேண்டிய சூழ்நிலை வருமானால் , அப்பொழுது நாமும் அவர்களிடம் முகத்தளவில் நட்புக்கொண்டு, உள்ளத்தில் நட்புக்கொள்ளாமல் நீக்கிவிட வேண்டும் (குறள் – 830),

மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுள் சாப்புல்லற் பாற்று. (குறள் – 829)

பகைநட்பாம் காலம் வருங்கால் முகநட்டு
அகநட்பு ஒரீஇ விடல். (குறள் – 830)

# குறள்நெறி



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

## பேராசிரியர் மா.நன்னன் நூற்றாண்டுச் சிறப்பிதழ்



பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்
இணையாசிரியர்; தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

**ஊடகவெளியில் உலக உலாவந்த தமிழ்ப்பேராசிரியர் மா.நன்னன்**

புத்தம் புதிய கருவிகளாகிய தொலைக்காட்சி,இணையம் ஆகியவற்றின் வழியே உலகத் தமிழர் கோடிக்கணக்கானவர்களின் கவனத்தையும் கருத்தையும் கவர்ந்து பிழையறத் தமிழை எழுதுதற்கும் பேசுதற்கும் சுவைமிக்க நடையில் உரையாடிப் பயிற்சி வழங்கிய முதல் தமிழ்ப் பேராசிரியர் புலவர் மா.நன்னன் அவர்களே.
அவ் வகையில் இவரை **உலகத் தமிழ்ப்பேராசான்** எனக் கூறுதல் மிகவும் பொருந்தும். பதினேழாண்டுக் காலம் பொதிகைத் தொலைக்காட்சியிலும் பின்னர் பன்னெடுங் காலம் மக்கள் தொலைக்காட்சியிலும் இவர் நடத்திய தமிழ்ப் பாடங்கள் இன்றளவும் புலம்பெயர் தமிழர்களால் பதிவுசெய்யப்பட்டு இளந்தலைமுறையினர்க்குத் தமிழை அறிவுறுத்தும் அரும்பணியை ஆற்றிவருகின்றன.
வாழ்க்கைச் சுருக்கம்:

இளமையும் வாழ்வும்

இவர் விருத்தாசலத்தை அடுத்த காவனூர் எனும் ஊரில் பிறந்தவர். இவரது இயற்பெயர் திருஞானசம்பந்தன். தமிழ் மீது கொண்ட பற்றால், தன் பெயரை 'நன்னன்' என மாற்றிக் கொண்டார்.அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் புலவர் பட்டமும், சென்னைப் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டமும் பெற்றவர். தொடக்கப் பள்ளி ஆசிரியராகப் பணியைத் தொடங்கிய இவர் உயர்நிலைப்பள்ளி, பயிற்சிக் கல்லூரி, கலைக்கல்லூரி, மாநிலக் கல்லூரி ஆகியவைகளில் பணிபுரிந்தார். மாநிலக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி, பின் தமிழ் வளர்ச்சித் துறையின் இயக்குநராக 11.2.1980 முதல் 31.5.1983 வரை பணியாற்றியவர்.வயது வந்தோர் கல்வி வாரியத் துணைத் தலைவராகப் பொறுப்பு வகித்தவர். எழுத்தறிவித்தலில் நன்னன் முறை எனும் புதிய முறையை ஏற்படுத்தியவர்.

சென்னைத் தொலைக்காட்சியில் 17 ஆண்டுகள் எண்ணும் எழுத்தும் என்ற தலைப்பில் கற்பித்தார். பல பாடநூல்களையும் துணைப்பாடநூல்களையும் எழுதிய நன்னன், 1990-2010 காலகட்டத்தில் சுமார் எழுபது நூல்களை எழுதினார். பெரியார் கொள்கைகளின் மீது உறுதிவாய்ந்த பற்றுக் கொண்டவர். கடவுள் மறுப்பு, பகுத்தறிவுக்கொள்கை, சாதியொழிப்புத் திருமணம்,எழுத்துச் சீர்திருத்தம் ஆகியவற்றைத் தம் எழுத்திலும் செயலிலும் போற்றியவர்.. சீர்திருத்தத் திருமணங்களை நேரம் பார்க்காமலும் தாலி கட்டாமலும் விடுமுறை நாள்களிலும்

நடத்தவேண்டும் என்று கூறியதுடன் அத்தகை திருமணங்களை நடத்தியும் வைத்தார்.. பெரியார் கொள்கைகள் குறித்து பல நூல்களை எழுதினார். இவர் எழுதிய “பெரியாரைக் கேளுங்கள்” எனும் நூல் தமிழ் வளர்ச்சித் துறையின் 2009 ஆம் ஆண்டுக்கான சிறந்த நூல்களில் சமூகவியல் வகைப்பாட்டில் பரிசு பெற்றது.இவர் பெரியார் விருது, தமிழ்ச் செம்மல் விருது, திரு. வி. க. விருது போன்ற விருதுகளையும் பெற்றவர்.

குடும்பம்

இவரது பெற்றோர் பெயர் மீனாட்சி, மாணிக்கம். இவரது வாழ்க்கைத் துணைவி ந. பார்வதி. இவருக்கு வேண்மாள், அவ்வை என்ற மகள்கள்; இவர் மகன் அண்ணல், மருத்துவப் படிப்பு முடித்து மேலும் ஆராய்ச்சிகள் செய்து கொண்டே மருத்துவமும் பார்த்து வந்தார். மூட்டு வலிக்கான புதிய மருந்து பற்றிய ஆய்வில் வெற்றி பெற்றிருந்த நிலையில் திடீரென்று இறந்தார். தம் மகன் அண்ணல் பெயரில் அறக்கட்டளை ஏற்படுத்தி ஆண்டுதோறும் பேச்சுப்போட்டி கட்டுரைப்போட்டி நடத்தி மாணவர்களுக்குப் பரிசும் அவர்களது பள்ளிகளுக்குச் சான்றிதழும் வழங்கி வந்தார்.

போராட்டம்

ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் வெள்ளையனே வெளியேறு என்னும் போரிலும், திராவிட இயக்க உணர்வு பெற்றபின் தமிழிசைக்கிளர்ச்சி, இந்தி எதிர்ப்புப் போர் ஆகியவற்றில் கலந்துகொண்டும், தொடர் வண்டி நிலையங்களில் உள்ள பெயர்ப் பலகைகளில் உள்ள இந்தி எழுத்துக்களை அழித்தும் சிறைசென்றார்.[3]

பேச்சு

1942 ஆம் ஆண்டு முதல் கல்வியியல், சமூகவியல், அரசியல், தொழிலாளரியல் ஆகியவை குறித்து பல மேடைகளில் பேசினார். படிப்படியே பெரியாரியம், பகுத்தறிவு, சிக்கன வாழ்வு, நல்லதமிழைப் பயன்படுத்துதல், ஊடகத்துறையில் உள்ள மொழிநடைக் குறைபாடுகள் பற்றிப் பேசலானார்.

தமிழ்ப் பண்ணை

மா.நன்னன் மக்கள் தொலைக்காட்சியில் அறிவோம் அன்னைமொழி என்ற தலைப்பில் தமிழைப் பிழையின்றி எழுதவும், வாக்கியங்களை அமைக்கவும் நாள்தோறும் தகவலை வழங்கிவந்தார். நிகழ்ச்சியின் வாசகர்களை தமிழ்ப் பண்ணையார்கள் என்று அழைத்தார். தமிழ்ப்பண்ணை நிகழ்ச்சியில் தினமும் காலை 7.30 முதல் 8 மணி வரை தற்காலத் தமிழ்ப்

பயன்பாட்டில் உள்ள நிறை குறைகளையும், குறைகளுக்கான சரியான தீர்வுகளையும் ஆராய்ந்தார்.

சீரிய பகுத்தறிவுக் கொள்கையும் நேரிய ஒழுக்கமும் இவர்தம் ஆளுமையின் பிரிக்க இயலாக் கூறுகளாக விளங்கின.

எழுத்துக்கும் வாழ்க்கைக்கும் இம்மியளவும் இடைவெளியின்றி வாழ்ந்துகாட்டினார்.

என்றும் தமிழர் ஏத்திப் போற்றத்தக்க சிறந்த ஆளுமைகளில் ஒருவர் பேராசிரியர் மா.நன்னன் என்பதே இவரைப் பற்றிய சிறந்த அறிமுகம் எனலாம்.




தமிழறிஞர் மா.நன்னன் படத்திறப்பு மற்றும் நினைவேந்தல் நிகழ்ச்சி சென்னை பெரியார் திடலில் நேற்று கால நடந்தது. இதில், திமுக பொதுச்செயலாளர் க.அன்பழகன், செயல் தலைவர் மு.க.ஸ்டாலின், திராவிடர் கழ தலைவர் கி.வீரமணி மற்றும் நன்னன் குடும்பத்தினர் உள்ளிட்ட பலர் கலந்து கொண்டனர்.






# நன்னன் ஒரு மாணிக்கம்!



- முத்துமணி நன்னன்

*தலைவர், கருநாடகத் தமிழ்ப் பத்திரிகையாளர் சங்கம், பெங்களூரு*

[தமிழ்மண்ணில் தன்மானத்தையும், கன்னடமண்ணில் தமிழ்மானத்தையும் பெற்று, பெங்களூரில் வாழ்ந்து வரும் தமிழர் முத்துமணி நன்னன். திருவண்ணாமலை மாவட்டத்தின் செங்கண்மாநகரின் பாவலர் கொ.வீ.நன்னன் அவர்களின் புதல்வர். பெங்களூரு, கோலார் தங்கவயலில் கல்வி பயின்று, சென்னையில் 1999-ஆம் ஆண்டு இதழியல் பணியை தொடங்கியவர். வளர்தொழில், தமிழ் கம்ப்யூட்டர். கட்டுமானத்தொழில், உங்கள் பணம் போன்ற நாளிதழ்களில் துணை ஆசிரியராக பணியாற்றிய பிறகு, 2006-ஆம் ஆண்டு முதல் பெங்களூரில் தினகரன் நாளிதழில் துணை ஆசிரியராக பங்காற்றினார். 2010-ஆம் ஆண்டு முதல் பெங்களூரில் தினமணி நாளிதழில் மூத்த செய்தியாளராக பணியாற்றி வருகிறார்.

புகழ்பெற்ற 'புரட்சிப்பேச்சாளர் பெரியார்' நூலை எழுதிய பேராசிரியர் முனைவர் கு.வணங்காமுடியிடம் தமிழ்க்கற்றவர். கல்லூரி காலத்தில் 'தமிழா'-தமிழுணர்வு திங்களிதழ் என்ற கையெழுத்து இதழை நடத்தி வந்தவர். கல்லூரி காலத்தில் 'தமிழ் நண்பர்கள் குழு' என்ற அமைப்பை தோற்றுவித்து, தமிழ், தமிழர் நலம்சார்ந்த போராட்டங்களில் ஈடுபட்டு வந்துள்ளார். குறிப்பாக, கருநாடகத்தில் தமிழ்மொழி, தமிழர் நலன்சார்ந்து சிந்தித்து செயலாற்றி வந்துள்ளார். தனித்தமிழ், தமிழ்த்தேசியம், திராவிட இயக்கக் கொள்கைகளில் மிகுந்த ஈடுபாடு கொண்டுள்ளார்.

நீண்ட இடைவெளிக்கு பிறகு கருநாடகத்தில் பணியாற்றி வரும் தமிழ் ஆசிரியர்கள் 150 பேருக்கு ஒரு நாள் தமிழ்ப் பயிற்சி முறை பயிலரங்கத்தை நடத்தினார். 2012-ஆம் ஆண்டு கருநாடகத்தில் பணியாற்றும் பத்திரிகையாளர்களின் நலன் காக்கும் அமைப்பாக கருநாடகத் தமிழ்ப் பத்திரிகையாளர் சங்கத்தை நிறுவி, அதன் தலைவராக இருந்து வருகிறார். இச்சங்கத்தின் வாயிலாக பல்வேறு கருத்தரங்குகள், உரையரங்குகளுக்கு ஏற்பாடு செய்திருக்கிறார். கருநாடகத் தமிழ்ப் பள்ளி மற்றும் கல்லூரி ஆசிரியர்கள் சங்கம், கருநாடகத் தமிழ்ப் பத்திரிகையாளர் சங்கத்தின் துணையுடன் கருநாடகத்தில் பத்தாம் வகுப்பு, 2-ஆம் ஆண்டு பியூசி வகுப்பு மாணவர்களுக்கான தமிழ்மொழிப்பாடத்திற்கான தேர்வு கையேட்டை தயாரித்து, அறிவியல் அறிஞர் மயில்சாமி அண்ணாதுரையின் தலைமையில்

வெளியிட்டுள்ளார். செல்வந்தர்களின் துணையுடன் தமிழ்ப்பயிலும் மாணவர்களுக்கு உயர்கல்விப்பயில உதவி வருகிறார்.

கருநாடகத் தமிழ்ப்பள்ளி மற்றும் கல்லூரி ஆசிரியர்கள் சங்கம், கருநாடகத் தமிழ்ப் பத்திரிகையாளர் சங்கம், இலெமுரியா அறக்கட்டளை மும்பை ஆகியவற்றின் ஒத்துழைப்பில் புரட்சிக்கவிஞர், பாவேந்தர் பாரதிதாசனின் இலக்கியப்படைப்புகளை தனித்தனியாக ஆய்வு செய்யும் 'பாவேந்தர் இலக்கியத்தொடர்' இணையவழி நிகழ்ச்சியை 3 ஆண்டுகளாக 100 வாரங்களாக நடத்தினார். மனிதநூலக கருத்தியலின்படி ஒரு நூல் பேசும் கருத்துகளை பகிர்ந்துகொள்ளும் 'நூலோடு உறவாடு' இணையவழி நிகழ்ச்சியை 50 வாரங்கள் தொடர்ந்து நடத்தினார். திரு.சு.குமணராசன் அவர்களின் ஒத்துழைப்பில் 2022-ஆம் ஆண்டு 10 நாட்களுக்கு பாவேந்தர் பாரதிதாசன் பிறந்தநாள்விழாவை இணையவழியில் நடத்தினார்.

கருநாடகத்தில் இயங்கிவரும் தமிழ் அமைப்புகளின் கூட்டங்களில் தொடர்ந்து பேசி வருகிறார். தமிழ்மொழி, தமிழர் நலன்சார்ந்த சிக்கல்கள் குறித்து ஊடகங்களில் தொடர்ந்து எழுதி வருகிறார். கருநாடகம் போன்ற தாய்த்தமிழகத்திற்கு வெளியே வாழும் தமிழர்களிடையே தமிழ்மொழியை கற்றுத்தருவதற்காக திரு.சு.குமணராசன், திரு.வெற்றிச்செல்வன், புலவர் கார்த்தியாயினி ஆகியோருடன் இணைந்து தமிழ் அறக்கட்டளை பெங்களூரு என்ற அமைப்பை நிறுவி தமிழ்ப்பணி ஆற்றி வருகிறார். முத்துமணி பதிப்பகம் அமைத்து, நல்ல பல தமிழ் நூல்களைப் பதிப்பித்து வருகிறார்.]

புலவர் மா.நன்னன். மாணிக்கம் நன்னன், அல்ல அல்ல நன்னன் ஒரு மாணிக்கம். தமிழர் அறிவு வரலாற்றில் மறக்க முடியாத நல்லறிஞரின் நற்பெயர். நன்னன் ஒரு பெயர்ச்சொல் அல்ல, அது ஒரு காரணப்பெயர். ஆம், வாராது வந்த மாமணியாய் தமிழர்களுக்கு வாய்த்த தமிழ்மாணிக்கம் தான் புலவர் மா.நன்னன் அவர்கள். ஓசையில்லாமல் அவர் செய்த சாதனைகளை தமிழ் வரலாறு பக்குவமாய்ப் படம் பிடித்து வைத்திருக்கிறது. தமிழ் இலக்கிய உலகின் தன்னிகரில்லா இலக்கியவாதியாக தன்னை நிலை நிறுத்திக் கொண்ட புலவர் மா.நன்னன் அய்யா அவர்கள், தமிழ்மொழியின் தொடர்ச்சி விட்டுப்போய்விடக்கூடாது என்பதில் கண்ணும் கருத்துமாய் செயல்பட்டவர். தோண்டத் தோண்டக் குறைவில்லாமல் அறிவு மணம் கமழ்ந்துகொண்டே இருக்கும் அறிவு பெட்டகம் அவர். அறிவால், பகுத்தறிவால் அறிவு மன்னனாக, தமிழ் கற்றுக் கொடுப்பதில் ஆகச்சிறந்த ஆசானாக இன்றைக்கும் தமிழர்களின் நெஞ்சில் வீற்றிருக்கும் பெரும்புலவர் மா.நன்னன் அய்யா அவர்கள். அய்யா அவர்களின் அறிவுக்கொடியில் பூத்த அறிவுச்சுடர்கள் ஏராளம் ஏராளம்.

புலவர் மா.நன்னன் அய்யா அவர்களுக்கு நூற்றாண்டுவிழா, தமிழர்களுக்குத் தேன் சொட்டும் கற்கண்டு விழா. தமிழும் பெரியாரும் முனைவர் மா.நன்னன் அய்யா அவர்களுக்கு இரு கண்களைப் போல, விலைமதிப்பில்லா இருவிழிகள். தமிழர்களின் உள்ளமும் சுற்றமும் தமிழால் மணந்திருக்க வேண்டும் என்பதில் அக்கறையோடு இருந்தவர். தான் கற்றத் தமிழை எளிமையாக தமிழர்களுக்கு கற்றுத் தந்தவர். அதற்காக தமிழ்ப்பண்ணையை அமைத்து தமிழ் உழவுப்பணியில் ஈடுபட்டவர். தமிழ்க் கற்பித்தல் முறையில் புதிய போக்கை கட்டமைத்தவர். அவர் தமிழைக் கற்றுக்கொடுக்கும் பாங்கு, பின்னாட்களில் 'நன்னன்முறை' என்று புகழ்பெற்றுப் பரவியது.

தமிழுக்காக முனைவர் மா.நன்னன் அய்யா அவர்கள் ஆற்றிய பங்களிப்பைச் சொல்லி மாளாது, சொல்லில் அடங்காது. நவீன சமூக வலைத்தளங்கள், குவியம் போன்ற ஊடகங்கள் இல்லாத காலத்தில், தொலைக்காட்சி வழியாக தமிழர்களின் இல்லங்களுக்கே தமிழைக் கொண்டு சேர்த்தவர். சென்னைப் பொதிகைத் தொலைக்காட்சியில் நாள்தோறும் தோன்றி 'எண்ணும் எழுத்தும்' என்ற தலைப்பில் தொடர்ச்சியாக 17 ஆண்டுகள் தமிழைக் கற்றுத்தந்தவர். நேரடியாகவும் தொலைக்காட்சி வழியாகவும் இவரிடம் தமிழைக் கற்றவர்கள் ஏராளம் ஏராளம்.

பேராசிரியராகப் பணியில் இருந்த காலத்தைவிட, பணி ஓய்வுக்கு பிறகு தமிழுக்கு இவர் ஆற்றிய தொண்டு, கணக்கில் அடங்காதவை. பொதுவெளியிலும், ஊடகவெளியிலும் பிழையோடு தமிழ் கையாளப்படுவதை அக்கறை இழையோடத் தட்டிக்கேட்டவர். அத்தோடு நிற்காமல், ஊடகத்துறையில் உள்ள மொழிநடை குறைபாடுகளை களைய அவற்றை கனிவோடு சுட்டிக்காட்டியவர். நல்ல தமிழைப் பயன்படுத்துதல் குறித்து தொடர்ச்சியாக எழுதியும் பேசியும் வந்தவர்.

மக்கள் தொலைக்காட்சியில் 'அறிவோம் அன்னைமொழி' என்ற தலைப்பில் தமிழைப் பிழையின்றி எழுதவும், சொற்றொடர்களை அமைக்கவும் நாள்தோறும் பயனுள்ள தகவல்களை அள்ளி வழங்கியவர். 'தமிழ்ப்பண்ணை' நிகழ்ச்சியில் தற்காலத் தமிழ்ப் பயன்பாட்டில் உள்ள நிறைகுறைகளையும், குறைகளுக்கான சரியான தீர்வுகளையும்

மக்கள் முன் படைத்தளித்தவர். இந்நிகழ்ச்சியில் தமிழ்க் கற்கும் நேயர்களை தமிழ்ப்பண்ணையாளர்கள் என்றே பெருமைபொங்க அழைத்தவர்.

'தமிழைத் தமிழாக்குவோம்!'
'தவறின்றித் தமிழ் எழுதுவோம்!'
'கல்விக்கழகு கசடற எழுதுதல்!'
'செந்தமிழைச் செத்த மொழியாக்கிவிடாதீர்!'
'தமிழ் எழுத்தறிவோம்!'
போன்ற ஆழமான முழக்கங்களுடன் தமிழைப் படிக்க தமிழர்களை ஊக்குவித்தவர். பேசும்போதும், எழுதும்போதும் தமிழை யாராவது தவறாக உச்சரித்தாலோ, பிழையோடு எழுதினாலோ பொங்கி எழுவார். ஆனால் அவற்றை உடனடியாக திருத்த முயல்வார். இதற்காக 'உரைநடையா? குறைநடையா?', 'எல்லார்க்குந்தமிழ்', 'கல்விக்கழகு கசடற எழுதுதல்', 'செந்தமிழா? கொடுந்தமிழா?', 'செந்தமிழைச் செத்த மொழியாக்கிவிடாதீர்', 'தடம் புரள்கிறதா தமிழ் உரைநடை', 'தமிழ் உரைநடை போகிற போக்கு', 'தமிழ் எழுத்தறிவோம்', 'தமிழைத் தமிழாக்குவோம்', 'தவறின்றித் தமிழ் எழுதுவோம்', 'நல்ல உரைநடை எழுத வேண்டுமா?', 'பைந்தமிழுரைநடை நைந்திடலாமா? போன்ற எண்ணற்ற நூல்களை எழுதி குவித்தவர்.

தமிழ்மொழியின் உறவு இழை தமிழர்களிடையே அற்றுப்போய்விடக்கூடாது என்பதற்கு மட்டுமல்லாமல், அந்த தமிழரின் அறிவுக்கூர்மையின் உச்சமாக விளங்கும் திருக்குறளை தமிழர்களின் உள்ளங்களிலும் இல்லங்களிலும் படர வைக்க 'குறளின் குரல்' என்ற நிகழ்ச்சியை பொதிகை தொலைக்காட்சியில் தொடர்ந்து வழங்கியவர்.

திருக்குறளின் குரலாக மட்டுமல்லாது, தன்மானத்தை தமிழர் மனத்தில் வைக்க அல்லும் பகலும் அயராது உழைத்த பகுத்தறிவுப்பகலவன் தந்தை பெரியாரின் குரலாக முழங்கியவர். பெரியார் பேருரையாளராக தமிழர் நிலம் அளந்து உளம் மகிழ பெரியாரின் கொள்கைகளை தெளிவுற எடுத்துரைத்தவர். பெரியாரின் தன்மானப் பாசறையில் தலைமகனாக அவரது கொள்கைகளை பரப்பியவர்.

நூற்றாண்டு நாயகர் புலவர் மா.நன்னன் அவர்கள் நம்மிடம் இல்லை. ஆனால், தமிழ்ப் பயிற்றுவிக்க அவர் நமக்களித்த 'நன்னன்முறை', செம்மையான நன்முறை நம்மிடம் இருக்கிறது. அதை பயன்படுத்தி, ஆயிரக்கணக்கான மாணாக்கர்களிடம் தமிழ்மொழியை கொண்டு சேர்த்து வருகிறோம். அதற்காகவே திரு.சு.குமணராசன், திரு.அ.தனஞ்செயன், புலவர் கார்த்தியாயினி, திரு.பொள்ளாச்சி நசன் ஆகியோரின் வழிகாட்டுதலில் தமிழ் அறக்கட்டளை பெங்களூரு என்ற அமைப்பை நிறுவி, இணையவழியில் தமிழைக் கற்றுத் தந்து வருகிறோம். புலவர் நன்னன் அவர்களின் புதுமையான முறையை பின்பற்றி, ஆயிரக்கணக்கான மாணவர்களுக்கு எங்களால் தமிழை கற்றுத்தர முடிந்திருக்கிறது என்பதை அவரது நூற்றாண்டு விழாவின்போது நன்றியோடு நினைத்து பார்க்கிறோம்.

'தமிழைச் செத்த மொழியாக்கிவிடாதீர்' என்ற நன்னன் அய்யா அவர்களின் முழக்கம் எங்கள் செவிகளில் நிறைமுழக்கமாய் ஒலித்துக்கொண்டே இருக்கிறது. அந்த ஒலி ஓயாமல் ஒலித்துக்கொண்டே இருக்கும். அதுவரையில் எங்கள் பணி தொடர்ந்து கொண்டே இருக்கும். எங்கள் தமிழ்ப்பணிக்கு அடித்தளமாக விளங்கும் புலவர் நன்னன் அய்யா அவர்களின் தமிழ்ப்பணியை போற்றி, அவரது புகழ் ஓங்குக! அவர் காட்டிய வழியில் தமிழ் வளர்க! வாழ்க!! தமிழ் மாணிக்கமாய் நன்னன் புகழ் ஓங்குக!

## மா. நன்னன் : தனிமாந்தத் தமிழியக்கம்!



--- மு. சுகுமார்

மாநிலச் செயலாளர், தமிழியக்கம்

[வேலூரில் பிறந்து வளர்ந்த மு. சுகுமார் அவர்கள் பொருளாதரத்தில் முதுகலை (M.A.,) மற்றும் இளம்முனைவர் (M.Phil.,) பட்டங்களைச் சிறப்புத் தகுதியுடன் (Outstanding) பெற்றவர்.
உணவு பொருட்கள் வழங்கீட்டுத் தொழிலில் பொருள் ஈட்டும் சுகுமார் அவர்கள் தொழிலிலும் வணிகத்திலும் சுழற்கழகத்தின் (ரோட்டரியின்) உறுதிமொழியினை ஊக்ககத்தோடு கடைபிடிப்பவர்.
அன்புத் துணைவி திலகவதி, அவர்தம் காதலின் அடையாளமாக மகள் முத்துலட்சுமி என்கிற இலக்கியம், தமிழ் நிறைந்த நண்பர்கள், நூல்களால் நிரப்பப்பெற்ற வீடு, மெல்லிய இசை போல வாழ்க்கையை அழகாகவே வாழ்ந்து வருபவர்.
1990 தொடங்கி சுழற்கழகத்தில் (ரோட்டரியில்) இயங்கும் சுகுமார், சுழற்கழகத்தில் தமிழும் தமிழுக்குள் சுழற்கழகமும் ( ரோட்டரியும்) ஊடுருவி உலாவர உழைப்பவர். சமூக வண்ணங்களால் நிரப்பப் பெற்று அவரை சுற்றி இருக்கும் எண்ணங்களை எதிரொலிக்க, தமிழியக்கம் மாநிலச் செயலாளர், வேலூர் தமிழ்ச் சங்கச் செயலாளர் ,வேலூர் தமிழ்ச் சங்கம் அறக்கட்டளை செயலாளர், வேலூர் சிந்தனையாளர் மன்றத் தலைவர், வேலூர் மாநகரப் பகுத்தறிவாளர் கழகத் தலைவர், என தமிழ் மற்றும் தமிழர் நலம் நாடும் சேவையில் ஈடுபட்டிருப்பவர். மனிதம் நிரம்பிய மனிதத்தை இவ்வுலகில் நிரப்பும் பணியை நித்தமும் செய்துவருபவர் மு. சுகுமார். அது மட்டுமே இவர்தம் அடையாளம்.]

மூத்த தமிழறிஞர், முதிர்ந்த சிந்தனையாளர், அன்பு கனிந்த உள்ளமும் அறச் சீற்றமும் கொண்டவரான மா.நன்னன்.திருமுட்டம் அருகில் காவனூர் எனும் சிற்றூரில் 1924 சூலை 30-ல் பிறந்தவர் நன்னன். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் புலவர் ஆகி, பின் ஆய்வுகள் பல செய்து சென்னைப் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டம் பெற்றவர். தொடக்கப் பள்ளி ஆசிரியராகப் பணி தொடங்கி, ஆசிரியர் பயிற்சிப் பள்ளி ஆசிரியராக, பயிற்சிக் கல்லூரிப் பேராசிரியராக, கலைக் கல்லூரிகளில்

பேராசிரியராக, நிறைவாக மாநிலக் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வுபெற்றவர். எனினும், இறுதிவரை அவரது தமிழ்ப் பணி ஓயவில்லை.

திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார் என்பதை மெய்ப்பிக்கும் வகையில் மாணவர்கள் கண்ணீர் விடும் அளவிற்கு உருகி உருகிப் பத்திச் சுவை சொட்டச்சொட்ட திருவாசகம் நடத்துவார். “நாத்திகரான உங்களால் எப்படி இந்த அளவுக்கு பத்திச்சுவையோடு பாடம் நடத்தமுடிகிறது” என்று நன்னனிடம் மாணவர்கள் கேட்டனர். அதற்கு அவர் “என்னுடைய கொள்கை வேறு. ஆனாலும் ஒரு இலக்கியத்தை அதன் சுவை குன்றாத வகையில் மாணவர்களுக்குச் சொல்லவேண்டியது ஒரு ஆசிரியரின் கடமை. அதைத்தான் செய்கிறேன்” என்றார்.

தமிழ் வளர்ச்சித் துறையின் இயக்குநராகவும் மூன்று ஆண்டுகள் பணியாற்றியிருக்கிறார். வாழ்நாள் முழுவதும் தமிழ்ப் பணியாற்றியிருப்பினும் அரசுத் தொலைக்காட்சியில் (இன்றைய ‘பொதிகை’) ‘எண்ணும் எழுத்தும்’ என்ற கல்வி ஒளிபரப்பு மிக முக்கியமானது.

17 ஆண்டுகள் ஒளிபரப்பான அந்த நிகழ்ச்சி மூலம் நேயர்களுக்குத் தமிழைச் சிறப்பாகக் கற்றுக்கொடுத்தார். வகுப்பில் மாணவரோடு பேசி, பாடம் நடத்துதல்போல் நடித்து எளிமையாக அந்தப் பெரும் பணியைச் செய்தார். அந்த நிகழ்ச்சி வாயிலாகப் பெரும் புகழ் பெற்றார்.

மிகச் சிறந்த ஆசிரியராகவும், ‘நல்ல உரைநடை எழுத வேண்டுமா?’, ‘தவறின்றித் தமிழ் எழுதுவோம்’, திருக்குறள் தொல்காப்பியம் உரை விளக்கங்கள், பெரியாரியல் நூல்கள் என 60-க்கும் மேற்பட்ட நூல்களை எழுதிய எழுத்தாளராகவும், சிறந்த மேடைப் பேச்சாளராகவும் நன்னன் விளங்கினார். பெரியாரின் கருத்துகளைக் கால வரிசையிலும், பொருள் வரிசையிலும் திரட்டி, அவர் எழுதிய ‘பெரியார் கணினி’ நூல் மிகவும் முக்கியமானது. அழுத்தமான கடவுள் மறுப்புக் கொள்கையராக,

தந்தை பெரியார் வழியில் நின்றார். நாட்டு விடுதலைக்கு முன் ‘வெள்ளையனே வெளியேறு’ போராட்டத்திலும், தமிழிசைக்கான கிளர்ச்சிப் போராட்டங்களிலும், இந்தி எதிர்ப்புப் போராட்டங்களிலும் பங்கேற்றுள்ளார். ‘தமிழ்ச் செம்மல்’ விருது, தமிழக அரசின் பெரியார் விருது, தமிழ்த்தென்றல் திரு.வி.க. விருது பெற்றுள்ளார்.

மக்கள் தொலைக்காட்சியில் ‘தமிழ்ப் பண்ணை’, ‘அறிவோம் அன்னை மொழி’ தொடர் நிகழ்ச்சிகள் வாயிலாக நல்ல தமிழை வளர்த்தார். அவையெலாம் தமிழ் வளர்ச்சிக்கு

உறுதுணையாயின. மக்கள் தொலைக்காட்சியில் ‘தமிழ் பேசு தங்கக் காசு’, ‘தமிழ்முற்றம்’ நிகழ்ச்சிகளுக்கு முன்னோடி நன்னன்தான்! அவருடைய ‘எழுதுகோலா? கன்னக்கோலா?’, ‘செந்தமிழா? கொடுந்தமிழா?’ போன்ற நூல்கள் அறச் சீற்றம் கொண்டவை.

பொதிகை, மக்கள் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து, தமிழ் இணையப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பாடம் கற்பித்து தனி முத்திரை பதித்தவர் நன்னன். பேராசிரியர் முனைவர் மா. நன்னன் எழுதிக் குவித்தவர் – பேசியும் நிறைத்தவர். காட்சி ஊடகங்களில் தமிழ்ப் பாடமும் தன்மானப் பாடமும் நடத்தியவர். அவர் மறைந்தும் மறையாமல் நீண்டநெடுங்காலம் எதிர்காலத் தலைமுறைகளுக்குப் பாடம் சொல்லிக்கிடக்கும் வாய்பைத் தகவல்-தொழில்நுட்பப் புரட்சி நமக்குக் கொடுத்துள்ளது. நன்னன் அடிக்கடி சொல்லிக்கேட்டது: ‘எதையும் வீணடிக்கக் கூடாது! நன்னனின் அறிவுக் கொடையை நாம் வீணடித்து விடக் கூடாது.

நாத்திகர்களை நோக்கி அடிக்கடி கேட்கப்படும் ஒரு கேள்வி: கடைசி வரை மாறாமலிருப்பீர்களா?

நன்னனைப் போல் நாங்களும் மாறாமலிருபோம் என்று சொல்லும் வாய்ப்பு – நன்னன் ஐயா செத்தும் தந்த கொடை. நாத்திகர்கள் சார்பில் உங்களுக்கு நன்றி ஐயா!

முனைவர் நன்னன் அவர்களின் 99ஆவது பிறந்த நாள் இன்று !(சூலை-30)

*மானமிகு தோழர்,மாண்புமிகு அறிஞர்,முனைவர் மா. நன்னன் புகழ் ஓங்குக !*

# திருக்குறள் - கலைஞர் உரை

-பேராசிரியர் மா.நன்னன்

கலைஞர் உரையின் பெற்றியினை, 1 தேவை, 2 வழிபாடு, 3 பெண் வழிச்சேறல், 4 ஊழ், 5 பல்வகைச் சிறப்புகள் என்னும் அய்ந்து பகுப்புகளில் சுட்டிக் காட்டுவது இப்பதிப்புரையின் கடமை, எனக் கருதப்படுகிறது. இவற்றுள் வழிபாடு என்பது கடவுள் வாழ்த்து எனும் அதிகாரத்துக்குக் கலைஞர் சூட்டிய சரியான பெயராகும், பின்பற்றுதல் என்னும் பொருள்பட வழிபாடு என்பது அதன் பெயராக அமைந்தது. முதற்கண் கலைஞர் உரையின் தேவை குறித்துச் சிறிது கூறப்படுகிறது.

1. தேவை

``உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே'' என்றும், ஈ.கை அறம் என்றும் கூறப்படுவனவற்றுக்குக் காரணம் யாது? உலகில் இல்லாமை இருப்பதுதானே! அது மட்டுமே ஈ.கைக்குக் காரணமா? அன்று; இருப்பது இல்லாதிருந்தால் அஃதாவது உடைமை இன்மையாயிருப்பின் ஈ.கை ஏற்பட்டிராதன்றோ? ஆகவே, உலகில் வறுமையும் இருக்கிறது; அதற்கு எதிரான உடைமையும் இருக்கிறது. அதனாற்றான் ஈ.கையறம் பிறந்தது. இந்நிலையிலிருந்து நாம் மற்றொன்றையும் தெரிந்து கொள்ள முடிகிறது. அது யாது எனில், தம் தேவைக்கு மேல் சிலரிடம் செல்வம் இருக்கிறது; அதனாற்றான் வேறு சிலரின் தேவைக்கு அது கிடைக்கவில்லை என்பதாகும். மேலும் சற்று விளக்கமாக இதைக் கூறுவதானால் உலகம் வறுமையால் வாடுவதற்குக் காரணம் பொருள் இல்லாமை அன்று; அப்பொருள் அனைவர்க்கும் கிடைக்கும் ஏற்பாடில்லாமையே என்பதாகும்.

அவ்வாறே, உலக வாழ்வு செம்மையாக நடைபெற இன்றியமையாததாகிய ஒழுகலாறு அஃதாவது ஒழுக்கம், அதனையொட்டிய நெறிமுறைகள் ஆகியன தேவை. இன்று உலகின் ஒழுகலாறு அஃதாவது உலக நடைமுறை கடைமுறையாகிக் குடைசாய் முறையாகவும் ஆகிக்கொண்டிருப்பதை நாம் பலரும் அறிந்து, கண் கலங்குவோரும் கைபிசைவோரும் படபடப்போரும் துடிதுடிப் போருமாக உள்ளோம். உலகில் அறம் இல்லாமையாலோ, ஒழுக்கம் பிறக்காமையாலோ, அஃது அழிந்துவிட்டதாலோ இந்நிலை ஏற்படவில்லை. ஒழுக்க நெறிமுறை அல்லது அறநெறி பலருக்கும் அறியக்கூடியதாக ஆக்கப்படாமையும் இதற்குக் காரணமாக உள்ளது.

அறம் உரைக்க முயன்ற பற்பலரும் அவ்வறத்தை நேராக உரைத்தால் மக்கள் பின்பற்ற மாட்டார்கள் என்று கருதியதாலோ, அறத்தின் வாயிலாகத் தாம் விரும்பும் வேறு சில கொள்கைகளைப் பரப்ப வேண்டும் என்னும் வேட்கையாலோ மக்கள் வாழ்வுக்கு அருமருந்தாகிய அறத்தை மதம், கடவுள், புராணக்கதை போன்ற பலவற்றுடன் குழைத்துக் கொடுத்தனர். அது, மருந்தைவிட அதற்குத் துணையாக அதனுடன் கலந்து தரப்பட்ட எண்ணெய் முதலியவற்றின் வலிமிகுதியால் எண்ணெய் முதலியவற்றின் கேடுகளே மீதூர்ந்து அடர்த்து மன்பதையைச் சீர் குலைத்துவிட்டதைக் காண்கிறோம். ஆகவே, பிறர் பலரும் அறம் உரைப்பதற்கு மேற்கொண்ட முறைகள் பயன் விளைக்காமையோடு கேடு பலவும் சூழ்ந்தன என்பதையும் காண்கிறோம்.

பொருளை எல்லார்க்கும் கிட்டும்படிச் செய்வது போன்று அறத்தை அனைவரும் உணரும்படிச் செய்வதே தேவை. மாந்தர் பிறர் பொருளைச் சுரண்டாமல் காப்பது போன்று சிலரோ பலரோ பொது அறத்தைக் குலைக்காது காத்தல் அடுத்த கடமை. முதற் கடமையை வள்ளுவர் போல் முழுமையாகவும், சார்பற்றும், நேரடியாகவும், பொதுவாகவும், எளிமையாகவும் செய்தோர் தேடிக் கண்டுபிடிக்க வேண்டியவர்களாகவே இன்றுவரை உள்ளனர்.

வள்ளுவர் ஈடற்ற முறை ஒன்றைப் பின்பற்றி அறம் உரைத்தாராயினும், மக்கள் அறிவுநிலை வேறுபாட்டால் அதை உணரும் திறம் அற்றவர்கள் ஆயினர் என்பதைவிட ஆக்கப்பட்டனர் என்றுரைப்பதே சரி. அதனாற்றான் குறளுக்கு முதலில் தோன்றிய பத்து உரைகளோடு இன்று வரை எத்தனையோ உரைகள் வந்துள்ளன. அவற்றுள் இக்காலத் தேவையைச் சரியாக ஈ.டு செய்ய வல்லதாய் எழுந்ததே கலைஞர் உரை என்னும் தெரியுரையாகும்.

2. வழிபாடு

கடவுள் பற்றிய எண்ணம் மக்கள் தோன்றிய காலத்திலோ, அதன் அண்மைக் காலத்திலோ ஏற்பட்டிருக்க முடியாது. மக்கள் அறிவு வளர்ச்சி ஏற்பட்டுச் சிந்திக்கத் தொடங்கிய போதுதான் அந்த எண்ணம் அவர்களுக்குத் தோன்றியிருக்க முடியும். தான் கண்ட உலகத்தையும், அதில் காணப்பட்ட பல்வகைப் பொருள்களையும் உண்டாக்கிய ஒருவன் இருக்கவேண்டும் என்றும், அவைகளையெல்லாம் கட்டிக்காத்து ஒழுங்காக நிருவாகம் செய்வதற்கு ஒருவன் இருப்பது நல்லது என்றும் அப்பழங்கால மாந்தன் எண்ணத் தொடங்கியிருப்பான். அதன் விளைவுதான் கடவுளைப் பற்றிய பல்வேறு வகைப்பட்ட கருத்துகளாக உருவெடுத்துப் பல்கிச் செழித்து வளரத் தலைப்பட்டிருக்க வேண்டும். அறிவின் தெளிவால், பகுத்தறிவின் உதவியால் பிறகு கடவுள் பற்றிய எண்ணம் மெலியத் தலைப்பட்டது. மேலும் அதன் இருப்பு மெய்ப்பித்து உறுதிப்படுத்தப்படாமையால் கடவுள் பற்றிய மாறுபாடான கருத்து வலுப்பெற்றுப் பெருகி வருகிறது. கடவுள் வாழ்த்து என்னும் பெயரால் திருக்குறளில் ஓர் அதிகாரம் இடம் பெற்றுள்ளதாயினும் அதில் கடவுள் என்னும் பெயரே இடம் பெறாததோடு இன்று கடவுள்

பற்றிக் கூறப்படும் பல கருத்துகளுக்கு இடமளிப்பதாகவும் அந்த அதிகாரம் அமையவில்லை. இதுபற்றிக் கலைஞர் உரை தன் பங்கினைச் செய்யத் தவறவில்லை என்பதை முதல் பத்துக் குறட்பாக்களுக்கு அவர் நடுவு நிலையிலிருந்து எழுதியுள்ள உரைகளின் வாயிலாக அறியலாம்.

3. பெண்வழிச் சேறல்

கொடி முந்திரிப் பழத்தை (அது தனக்குக் கிட்டாதென்பதால்) மறக்க விரும்பிய நரி அதற்காக அதை வெறுக்க முயன்று, சீச்சீ இந்தப் பழம் புளிக்கும் என்று கூறிய காரணத்தைப் போலவே பெண்ணின்பத்தை மறக்க விரும்பியவர்கள் அதை மறக்க முடியாமையால் வெறுக்கத் தொடங்கி அதற்காகவே பெண்ணை இழித்தும் பழித்தும் கற்பித்துப் பேசத் தொடங்கினர். இச்செயல் நாலடியார் போன்ற இலக்கியங்களில் பரவலாக இடம் பெற்றுள்ளது. அக்கருத்துக்காட்பட்ட பரிமேலழகர் போன்ற உரையாசிரியர்களும் திருவள்ளுவரின் கருத்துக்கு மாசு விளையாமல் உரையெழுத இயலாதோராயினர். அதன் விளைவே பெண்வழிச் சேறல் என்னும் அதிகாரக் குறள் பத்துக்கும் அவர்களால் தரப்பட்ட விளக்கமாக நிலைத்து விட்டது. திருவள்ளுவரின் கோட்பாட்டில் கோணல் ஏற்படுத்தும் இப்போக்கினை மாற்ற விரும்பிய கலைஞரின் பங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

இந்த அதிகாரத்தில் உள்ள பத்துக் குறள்களுக்கும் கலைஞர் வகுக்கும் உரையை முறையே காணலாம்.

கடமையுடன் கூடிய செயல் புரியக் கிளம்பியவர்கள் இல்லற சுகத்தைப் பெரிதெனக் கருதினால் சிறப்பான புகழைப் பெறமாட்டார்கள்.

ஏற்றுக்கொண்ட கொள்கையினைப் பேணிக் காத்திடாமல் பெண்ணை நாடி அவள் பின்னால் திரிபவனுடைய நிலை வேட்கித் தலை குனிய வேண்டியதாக ஆகிவிடும்.

நற்குணமில்லாத மனைவியைத் திருத்த முனையாமல் பணிந்துபோகிற கணவன் நல்லோர் முன்னிலையில் நாணமுற்று நிற்கும் நிலைக்கு ஆளாக நேரிடும்.

மணம் புரிந்து புது வாழ்வின் பயனை அடையாமல் குடும்பம் நடத்த அஞ்சுகின்றவனின் செயலாற்றல் சிறப்பாக அமைவதில்லை.

எப்போதுமே நல்லோர்க்கு நன்மை செய்வதில் தவறு ஏற்பட்டுவிடக் கூடாதே என்று அஞ்சுகிறவன் தவறு நேராமல் கண்காணிக்கும் மனைவிக்கு அஞ்சி நடப்பான்.

அறிவும் பண்பும் இல்லாத மனைவி அழகாக இருக்கிறாள் என்பதற்காக மட்டும் அவளுக்கு அடங்கி நடப்பவர்கள் தங்களைத் தேவாம்சம் படைத்தவர்கள் என்று கற்பனையாகக் காட்டிக் கொண்டாலும் அவர்களுக்கு உண்மையில் எந்தப் பெருமையும் கிடையாது.

ஒரு பெண்ணின் காலைச் சுற்றிக்கொண்டு கிடக்கும் ஒருவனின் ஆண்மையைக் காட்டிலும் மான உணர்வுள்ள ஒருத்தியின் பெண்மையே பெருமைக்குரியதாகும்.

ஒரு பெண்ணின் அழகுக்காகவே அவளிடம் மயங்கி அறிவிழந்து நடப்பவர்கள் நண்பர்களைப் பற்றியும் கவலைப்பட மாட்டார்கள்; நற்பணிகளையும் ஆற்ற மாட்டார்கள்.

ஆணவங்கொண்ட பெண்கள் இடுகின்ற ஆணைகட்கு அடங்கி இயங்குகின்ற பெண் பித்தர்களிடம் அறநெறிச் செயல்களையோ, சிறந்த அறிவாற்றலையோ எதிர்பார்க்க முடியாது. சிந்திக்கும் ஆற்றலும், நெஞ்சுறுதியும் கொண்டவர்கள் காமந்தகாரர்களாகப் பெண்களையே சுற்றிக் கொண்டு கிடக்கமாட்டார்கள்.

காந்தத்துக்கு ஈர்க்கும் தன்மையும் இரும்புக்கு அதனால் ஈர்க்கப்படுந் தன்மையும் இருப்பது போல் பொதுவாகப் பெண்ணுக்கு ஆணை ஈர்க்கும் கவர்ச்சியும், ஆணுக்குப் பெண்ணின் கவர்ச்சியால் ஈர்க்கப்பட்டுப் பெண் வழிச் செல்லும் காம உணர்வும் உள்ளன.

இந்த அடிப்படையிற்றான் கலைஞர் வள்ளுவரின் பெண் வழிச்சேறல் எனும் அதிகாரத்தைக் காண்கிறார். அவ்வாறு கண்ட கலைஞர் தம் உரையின் வாயிலாகப் பழைய உரையாசிரியர்களால் பெண்மைக்கு ஏற்பட்டிருந்த பழியை நீக்கியுள்ளார்.

4. ஊழ்

கடவுள், ஆன்மா ஆகிய இரண்டும் மக்களை இன்றுவரை தெளிவடைய ஒட்டாது குழப்பிக் கொண்டுள்ளன. இவை இரண்டும் போல் குழப்பந்தரும் கருத்து வேறு எதுவுமிருப்பதாகத் தெரியவில்லை. சற்றுக் கூடுதலாக ஆழ்ந்து எண்ணிப் பார்த்தால் அவைகளுக்கு அடுத்த நிலையில் ஊழ் என்பதைக் குறிப்பிட முடியும். சிலரைப் பொருத்தவரை முன்னவை யிரண்டையும் விட இம் மூன்றாவதற்கே அதிகப் குழப்பம் அடைகின்றனர் என்றும் கூறலாம். ஊழ், விதி, தலை எழுத்து, கர்மா என்றெல்லாம் சொல்லப்படும் ஒரு கற்பனைத் தத்துவம் பற்றிய குறட் பகுதிக்கு உரையாசிரியர்கள் குழப்பந்தரும் உரைகளையே எழுதிச் சென்றனர். பகுத்தறிவாளராகிய கலைஞர் ஊழ் என்னும் அதிகாரத்திற்குத் தெளிவானதொரு விளக்கத்தைத் தந்திருப்பதோடு இக் கருத்து பற்றிய மாந்தரின் குழப்பம், அதனால் ஏற்படும் அச்சம், கவலை, கையறுநிலை ஆகிய அனைத்துக்கும் தீர்வும் காட்டியுள்ளார்.

ஊழ் என்பதற்குக் கலைஞர் இயற்கை நிலை என்று பொருள் தருகிறார். இயற்கை நிலை என்பதற்கு இயற்கையின் அமைதி, அஃதாவது இயற்கை அமைந்திருக்கும் விதம் என்பது விளக்கமாகும்.

இயற்கை வலிமையானது. வலிமையாக இருப்பதனால்தான் இயற்கை நிலைத்தும் உள்ளது. அதனை உணர்ந்து அதற்கேற்ப நடந்து கொள்ள வேண்டுமென்பதே ஊழ் என்னும் அதிகாரத்தில் இடம் பெற்றுள்ள வள்ளுவரின் கருத்து என்பதைக் கலைஞர் தம் உரையில் எடுத்துக் காட்டுகிறார்.

இயற்கையின் ஆற்றல் மிகுதிக்குக் ``கூரிய அறிவு வழங்கக் கூடிய நூல்களை ஒருவர் கற்றிருந்த போதிலும் அவரது இயற்கை அறிவே மேலோங்கி நிற்கும்" என்னும் உரை சான்று

தருகிறது. மேலும் ``இயற்கை நிலையை மாற்றி மற்றொரு செயற்கை நிலையை அமைத்திட முனைந்தாலும், இயற்கை நிலையே முதன்மையாக வந்து நிற்பதால் அதைவிட வலிமையானவையாக வேறு எவை உள்ளன" என்பதும் காணத் தகும்.

ஊக்கம் ஆக்கம் தரும் என்பதும், சோம்பல் அழிவு தரும் என்பதும் இயற்கையின் உண்மையே நல்லவை தீயவாதலும், தீயவை நல்லவாதலும் இயற்கையே.

``ஒருவர் தமக்கு உரிமை யல்லாதவற்றை முயன்று பாதுகாத்தாலும் தங்காமல் போய் விடவும் கூடும்". இவை போன்றன யாவும் இயற்கையின் நிலை என்பதை உணர்ந்து நடந்தால் பலன் உண்டு. சான்றாக அனுபவிக்கக்கூடிய பொருள் கிட்டவில்லை என்றால் அதன் இயற்கை நிலையை உணர்ந்தவர்கள் அதைத் துறந்து விட்டால் அத்துன்ப உணர்வுகளிலிருந்து தப்ப முடியுமன்றோ? நன்மையும் தீமையும் வாழ்க்கையில் மாறி மாறி வரும். நன்மை கண்டு மகிழ்கிறவர்கள் தீமை விளையும் போது மட்டும் மனம் கலங்குவது ஏன்? எனக் கேட்டுக் கலைஞர் ``அடுத்தூர்வது அஃதொப்பதில்" என்று கூறத்தக்க விடுதலை நெறிமுறை ஒன்றையும் எடுத்துக் காட்டுகிறார். இயற்கை நிலை வலிது என்பதை உணர்வதும் உணர்ந்து அந்த அறிவை வாழ்க்கையில் பயன்படுத்திக் கொள்வதும் கலைஞரின் நெறி முறையாக இங்கு அமைந்துள்ளது. நெருப்பு சுடும் என்பதை அறிந்து அதற்கேற்ப நடந்து கொள்வதுதானே அறிவுடைமை?.

5. பல்வகைச் சிறப்புகள்

கலைஞர் உரையில் பற்பல சிறப்புக் கூறுகள் காணப்படுகின்றன. அவற்றுள் சில இங்குச் சுட்டிக் காட்டப்படுகின்றன. கலைஞர் ஒரு பாவலருமாவர் ஆதலின் அவர்தம் உரைநடையிலும் பாநலம் காணப்படுவது இயல்பேயாகும். சான்றுகளாக:

அ. பா நலம்

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்தொடி கண்ணே உள.

வளையல் அணிந்த இந்த வடிவழகியிடம் கண்டு மகிழவும், கேட்டு மகிழவும், தொட்டு மகிழவும், முகர்ந்துண்டு மகிழவுமான ஐம்புல இன்பங்களும் நிறைந்துள்ளன.

அசையியற் குண்டாண்டோர் ஏஎர்யான் நோக்கப்
பசையினள் பைய நகும்.

நான் பார்க்கும்போது என் மீது பரிவு கொண்டவளாக மெல்லச் சிரிப்பாள்; அப்போது, துவளுகின்ற அந்தத் துடியிடையாள் ஒரு புதிய பொலிவுடன் தோன்றுகிறாள்.

ஆகியவற்றைக் காணலாம்.

ஆ. அணி நலம்

பிறிது மொழிதல் என்னும் அணியை வள்ளுவர் கையாண்டு கருத்துரைத்துள்ளார். கலைஞரும் அவ்வணியைப் பின்வரும் குறளுரையில் கையாண்டு புதுமை விளைத்திருப்பதைக் காண்க.

நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி
தான்நல்கா தாகி விடின்.

ஆவியான கடல்நீர் மேகமாகி அந்தக் கடலில் மழையாகப் பெய்தால்தான் கடல்கூட வற்றாமல் இருக்கும். மனித சமுதாயத்திலிருந்து புகழுடன் உயர்ந்தவர்களும் அந்தச் சமுதாயத்திற்கே பயன்பட்டால்தான் அந்தச் சமுதாயம் வாழும்.

இ. அடை நலம்

அடை மொழிகளைச் சேர்ப்பதன் வாயிலாகவே உவமை விளக்கமளிக்கும் சிறப்பியல்பை அடுத்து வரும் பகுதியிற் காணலாம்.

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கமிம் மூன்றும் உடைத்து.

உயிர்பறிக்கும் கூற்றமோ? உறவாடும் விழியோ? மருட்சி கொள்ளும் பெண்மானோ? இளம் பெண்ணின் பார்வை இந்த மூன்று கேள்விகளையும் எழுப்புகிறதே.

ஈ. உரைக் குறள்

பாட்டும் குறள்; அதற்குக் கலைஞர் வகுத்த உரையும் குறளாக அமைந்திருப்பதை அடுத்துக் காண்க.

நலத்தகை நல்லவர்க் கேளர் புலத்தகை
பூவன்ன கண்ணார் அகத்து.

மலர் விழி மகளிர் நெஞ்சில் விளையும் ஊடலே பண்பார்ந்த நல்ல காதலர்க்கு அழகு சேர்க்கும்.

உ. இடைமிடை சொல் நலம்

இடையில் சில சொற்களைச் சேர்ப்பதன் வாயிலாகக் குறளின் பொருளில் நேரும் முட்டறுக்கும் பெற்றியை பின் உள்ள பகுதி காட்டும்.

துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.

இன்சொல் பேசி எல்லாரிடத்திலும் கனிவுடன் பழகுவோர்க்கு நட்பில் வறுமை எனும் துன்பமில்லை.

வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
விருந்தினரை நாள்தோறும் வரவேற்று மகிழ்பவரின் வாழ்க்கை அதன் காரணமாகத் துன்பமுற்றுக் கெட்டொழிவதில்லை.

இன்பம் ஒருவற் கிரத்தல் இரந்தவை

துன்பம் உறாஅ வரின்.
வழங்குபவர், வாங்குபவர் ஆகிய இருவர் மனத்திற்கும் துன்பம் எதுவுமின்றி ஒருபொருள் கிடைக்குமானால், அப்பொருள் இரந்து பெற்றதாக இருப்பினும் அதனால் இன்பமே உண்டாகும்.
ஊ. தெளிவு
உரைத் தெளிவுக்கு,
கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய் செய்தார்க்
ரைத்தலும் நாணுத் தரும்.
காதல் நோயை என்னால் மறைக்கவும் முடியவில்லை; இதற்குக் காரணமான காதலரிடம் நாணத்தால் உரைக்கவும் முடியவில்லை.
எ. சுருக்க விளக்கம்
சுருக்க விளக்கத்துக்கு,
வழுத்தினாள் தும்மினேன் ஆக அழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீர் என்று.
தும்மினேன்; வழக்கப்படி அவள் என்னை வாழ்த்தினாள். உடனே என்ன சந்தேகமோ ``யார் உம்மை நினைத்ததால் தும்மினீர்" என்று கேட்டு, முதலில் அளித்த வாழ்த்துக்கு மாறாக அழத் தொடங்கிவிட்டாள் - என்பதையும் கண்டின்புறலாம்.
ஏ. புதுப்பொருள்
அருஞ்சொற் பொருள் கொள்வதில் கலைஞர் கண்ட நேர்மை பிறழாப் புதுமைக்குப் பின்வரும் பகுதிகள் சான்று கூறுகின்றன.
சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும்.
சிறுமைத்தனமற்ற இனியசொல் ஒருவனுக்கு அவன் வாழும் போதும், வாழ்ந்து மறைந்த பிறகும் புகழைத் தரக்கூடியதாகும்.
புத்தேளிர் என்னும் சொல் புதுமை என்பதனடியாகப் பிறந்தது எனக் கொண்டு பொருள் தந்து மருட்கை தெளிவிக்கும் மாட்சிக்குக் கீழ்க் காணப்படும் பகுதிகள் எடுத்துக்காட்டுகளாகத் திகழ்கின்றன.
பெற்றாற் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்புத்
தேளிர் வாழும் உலகு.
நற்பண்பு பெற்றவனைக் கணவனாகப் பெற்றால், பெண்டிர்க்கு இல்வாழ்க்கையெனும் புதிய உலகம் பெருஞ்சிறப்பாக அமையும்.
புத்தே ளுலகத்தும் ஈ.ண்டும் பெறலரிதே

ஒப்புரவின் நல்ல பிற.
பிறர்க்கு உதவிடும் பண்பாகிய ``ஒப்புரவு" என்பதைவிடச் சிறந்த பண்பினை இன்றைய உலகிலும் இனிவரும் புதிய உலகிலும் காண்பது அரிது.

புலத்தலிற் புத்தேள்நா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னார் அகத்து.

நிலத்தோடு நீர் கலந்தது போல அன்புடன் கூடியிருக்கும் காதலரிடத்தில் ஊடல் கொள்வதைவிடப் புதிய உலகம் வேறொன்று இருக்க முடியுமா?

நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு.

இனிவரும் புதிய உலகம்கூட, இன்றைய உலகில் தன்னலம் துறந்து புகழ் ஈட்டிய பெருமக்களை விடுத்து, அறிவாற்றல் உடையவரை மட்டும் போற்றிக் கொண்டிராது.

இவற்றுள் ஈற்றில் இடம்பெற்றுள்ள பகுதி புத்தம் புதிய விழுமிய கருத்தையளிக்கும் உரையாகவும் இலங்குவதைக் காணமுடியும்.

அய். புத்தம்புது விளக்கம்

புதுமை மணங்கமழும் அத்தகைய வேறு சில பொருளுரைகட்கு,

குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்தல் அரிது.

குணக்குன்றுகளான பெரியவர்கள் கோபம் கொண்டால் அந்தக் கோபம் அவர்கள் உள்ளத்தில் ஒரு கணம்கூட நிலைத்து நிற்காது.

அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தான் இடை.

அறவழியில் நடப்பவர்கள் பல்லக்கில் உட்கார்ந்து செல்பவர்களைப் போல வாழ்க்கையில் வரும் இன்ப துன்பங்கள் இரண்டையும் எளியவாகக் கருதி மகிழ்வுடன் பயணத்தை மேற்கொள்வார்கள். தீய வழிக்குத் தங்களை ஆட்படுத்திக் கொண்டவர்களோ பல்லக்கைத் தூக்கிச் சுமப்பவர்களைப் போல இன்பத்திலும் அமைதி கொள்ளாமல், துன்பத்தையும் தாங்கிக் கொள்ளும் மனப்பக்குவமின்றி வாழ்வையே பெரும் சுமையாகக் கருதுவார்கள்.

தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை.

கணவன் வாக்கினைக் கடவுள் வாக்கினை விட மேலானதாகக் கருதி அவனையே தொழுதிடும் மனைவி பெய் என ஆணையிட்டவுடன் அஞ்சி நடுங்கிப் பெய்கின்ற மழையைப் போலத் தன்னை அடிமையாக எண்ணிக் கொள்பவளாவாள்.

ஆகியவற்றை எடுத்துக்காட்டுகளாகக் கொள்ளலாம். இவற்றுள், சொற்களைச் சிதைக்காமலும், மாற்றாமலும் பொருள் கண்டுள்ள நயம் போற்றத்தக்கதாக உள்ளது.

ஒ. நுண்மாண் நுழைபுலம்

கலைஞரின் நுண்மாண் நுழைபுலத்துக்கு,

வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும்.

வெள்ளம்போல் துன்பம் வந்தாலும் அதனை வெல்லும் வழி யாது என்பதை அறிவுடையவர்கள் நினைத்த மாத்திரத்திலேயே அத்துன்பம் விலகி ஓடிவிடும் என்னும் உரை சான்றாகத் திகழ்கிறது.

இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்.

என்னும் குறள் கருத்தை இதனுடன் இணைத்துப் பார்த்தால் கலைஞரின் புலமைப் செழிப்புப் பளிச்சிடவதைக் காணமுடியும்.

6. நன்றி

திராவிட மறுமலர்ச்சி ஏற்பட்டுத் தந்தை பெரியாரும், பேரறிஞர் அண்ணாவும், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களும், முத்தமிழறிஞர் கலைஞர் அவர்களும் விழிப்புணர்ச்சி ஏற்படுத்துவதற்கு முன்னால், `இதற்கிணையாகக் கூறக்கூடிய பொது அறநூல் பிறிதேதுமில்லை' என்று இன்றும் சிறப்பித்துக் கூறப்படும் திருக்குறள் தான் பெற்றிருக்க வேண்டிய செல்வாக்கைப் பெற முடியாமல் ஒதுக்கப்பட்டே கிடந்தது. இதற்குப் பல காரணங்களுண்டு. அவற்றில் ஒன்று அது பொதுவாக மக்களாலும் சிறப்பாகத் தமிழர்களாலும் பின்பற்றப்படும் நூலாக ஆகாமைதான். அதுபற்றிப் பேசுவதும் எழுதுவதும் தவிர அதை வாழ்க்கை நேறியாகக் கொண்டு வாழ்வோர் இன்றும் எத்தனை பேர்? அவ்வாறு திருக்குறளை வழிக்காட்டியாகக் கொள்ளாமைக்கும் சில காரணங்களுண்டு. அவற்றுள் ஒன்று ஒவ்வொரு குறளும் சுட்டிக்காட்டும் நெறியைத் தெளிவாகச் சுட்டி வரையறுத்து அது இது தான் என இன்றைய தமிழனுக்குப் புரியும் வண்ணமும், புரிந்து உளங்கொள்ளும் வண்ணமும் அமைந்த உரையின்மையே அக்குறையைப் போக்கவும் எழுந்ததே கலைஞர் உரை. கலைஞர், வள்ளுவர் கோட்டமமைத்ததும், குறளோவியம் தீட்டியதும் போல் இக்குறள் உரை வகுத்ததும் குறள் நெறி பரப்பும் பணியில் குறிப்பிடத்தக்க விழுமிய பணியாக அமைந்துள்ளது. பரிமேலழகர் முதலிய பழைய உரைகாரர்களும் திரு.வி.க., புரட்சிக்கவிஞர், மு.வ. போன்ற புத்துரைகாரர்களுமாகிய உரையாசிரியர் பற்பலருள் கலைஞர் தம் பணியால் தனித்துச் சிறக்கிறார்.

தொல்காப்பியரின் `அகர முதல னகர இறுவாய்' என்னும் கூற்றுக் கிணங்கத் திருக்குறள் `அ' கரத்தில் தொடங்கி `ன' கரத்தில் முடிவதைப் போன்றே கலைஞருரையும் `அ' கரத்தில் தொடங்கி `ன' கரத்தில் முடியும் நலம் அறிந்து மகிழத்தக்கது.

இவர் மரபுப் பொருள், சொற்பொருள், தெளிவுப்பொருள், சுருக்கப் பொருள் என்பன போன்ற முறையில் பொருள் கூறிச் செல்லாமல் இக்காலத் தமிழன் ஒரு குறளைப்படித்தால் எதைத் தெரிந்து கொள்ள வேண்டுமோ அதை இற்றெனக் கிளந்து, தெற்றெனக் காட்டுவதையே தம் உத்தியாகக் கொண்டுள்ளார் என்று தெரிகிறது. பரிமேலழகர், திரு.வி.க. போன்ற சான்றோர் உரைகளெல்லாம் அவற்றுக்கேற்ற வகையில் பயன் விளைத்துள்ளன; இனியும் பயன் விளைக்க வல்லன; நம்மால் என்றும் பேணிப் போற்றத்தக்கன என்பதில் சிறு கருத்து வேறுபாடும் இல்லை. அவ்வாறே கலைஞர் உரையின் தேவை குறித்தும் கருத்து வேறுபாடு எழ இடம் இல்லை. தந்தை பெரியாரைப் புரட்சிக் கவிஞர் `மக்கள் நெஞ்சின் மலிவுப்பதிப்பு' என்று சிறப்பித்து சொன்னார். அதையே நான் இங்கும் பொருத்திச் சொல்ல விழைகிறேன். திருக்குறள் கலைஞர் உரையும், மக்கள் நெஞ்சின் மலிவுப்பதிப்பாக வெளிவருகிறது.

இச்சிறப்புப் பதிப்பை வெளியிடும் இத்திருப்பணியில் எனக்கும் ஒரு நுண்கூறு கிட்டியமை குறித்து எண்ணி எண்ணிப் பெருமை யெய்துகிறேன். எனக்கு இவ்வரிய வாய்ப்பை நல்கிய கலைஞர் அவர்களுக்கு என் நன்றியுணர்வைப் புலப்படுத்திக் கொள்கிறேன். மேலும் இந்நன்னூலை வெளியிடும் வாய்ப்பைத் திருமகள் நிலையத்துக்கு அளித்த கலைஞர் அவர்களின் அன்புள்ளத்திற்குப் பதிப்பகத்தாரின் நன்றியுணர்வை அவர்கள் சார்பில் தெரிவித்துக் கொள்வதும் என் கடமையாயிற்று.

இந் நூலை வாங்கிப் படித்து மனத்தில் பதித்துக் கொள்வதோடு இயன்றவரை தேவையான இடத்திலேல்லாம் பின்பற்றுமாறும் நான் தமிழ்மக்களை அன்புடன் வேண்டுகிறேன். இக்கருத்துகளைத் தமிழன், முரசொலி ஆகிய நாளேடுகளில் எழுதியதற்கும், இப்போது அவற்றைத் தொகுத்து இந்நூலாக வெளியிடுவதற்கும் கலைஞர் எதிர்பார்க்கும் பயன் அதுவேயாகும். அந்நன்றியைத் தமிழகம் செய்ய வேண்டும் என்பது எனது வேணவாவாகும்.

# திருவள்ளுவர்தம் ஊடற்கோட்பாடு



முனைவர் வாணி அறிவாளன்

தலைவர்(பொறுப்பு),திருக்குறள் ஆய்வு மையம்,

சென்னைப் பல்கலைக்கழகம்.

அறிஞர் அறவாணர்-அறிஞர் தாயம்மாள் அறவாணன் இணையரின் இல்லத்து மருமகளாய்ப் புகழ்பூத்த தமிழ்க் குடும்பத்தின் வழித்தோன்றலாய் விளங்கும் முனைவர்(திருமதி) வாணி அறிவாளன் தமது மதிநுட்பமும் ஆய்வுத்திறனும் மிளிரப் பல ஆய்வுநூல்கள் இயற்றியுள்ளார்.உலகெங்கும் பல்வேறு கருத்தரங்குகளில் சிறப்புறப் பங்கேற்று 125 ஆய்வுக் கட்டுரைகள் வழங்கியுள்ளார். சென்னைப் பல்கலைக்கழகத்தின் திருக்குறள் ஆய்வு மையத்திற்குப் பொறுப்புத் தலைவராய்ப் பொறுப்பேற்றுள்ள முதல் பெண்பேராசிரியர் என்னும் பெருமைக்குரிய இவர் மேலும் பல அரிய ஆய்வுகளால் தமிழுலகின் போற்றுதலைப் பெறுவார் என்பது திண்ணம்.

'ஆதிகாலப் பொதுவுடைமைச் சமூகம் இற்றுத் தேய்ந்த நிலையில், சொத்துடைமைச் சமூகங்கள் எழுச்சியுற்றிருந்த காலகட்டத்தில் தோன்றியவையே சங்க இலக்கியங்கள்' என்பார் நா.வானமாமலை. சொத்துடைமைச் சமூகமான ஆணாதிக்கச் சமூகம் நிலைபெற்றிருந்த அக்காலகட்டத்தின் (கி.மு.5-கி.பி.2) இடைக்காலத்தில் எழும்பியதே திருவள்ளுவம். இந்நிலையில், அன்பின் ஐந்திணைகளின் உரிப்பொருள்களுள் ஒன்றாக அமைந்திருந்த ஊடற்பொருளைத் திருக்குறளும் சங்க அக இலக்கியங்களும்

பேசியுள்ள மாறுபட்ட முறைமையைச் சுட்டிக்காட்டி, அதற்கான காரணத்தை எடுத்துரைப்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

சங்க இலக்கியங்களில் ஊடலும் ஊடலுக்கான காரணமும்:

இல்லற வாழ்வில், தலைமக்களுக்கிடையேயான அன்பைக் கூட்டுவதில் ஊடலின் பங்கு இன்றியமையாதது. சங்க இலக்கிய அகத்திணைகளில், மருதத்திணைப் பாக்கள், கற்புநிலைப் பாக்கள்; அத்திணைத் தலைமக்களுக்கிடையேயான காதல் உணர்வுகளில், ஊடலே மேலோங்கியிருந்தது. அதனால்தான் ஊடலே மருதத்திணையின் உரிப்பொருளாயிற்று. மருதத் திணைத் தலைவி, தலைவனின் பரத்தமை உறவின் காரணமாக ஊடல் கொள்ளுவதையே அப் பாக்கள் பரக்க எடுத்துக்காட்டியுள்ளன. இவ்வாறு சங்ககால ஐந்திணைகளின் உரிப்பொருள்களுள் ஒன்றான ஊடலுக்குக் காரணமாக அமையும் அளவிற்கு, அக்காலத்தில் பரத்தமை ஒழுக்கம் பரவியிருந்தமைக்குக் காரணம் உண்டு. சங்ககாலச் சமூகம், போர்ச்சமூகம். பெரும்போர்கள் பல நிகழ்த்தேறியமையைச் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்பியுள்ளன. பெரும்போர்களில் வெற்றிபெற்ற அரசன், தோற்கடித்த நாட்டிலிருந்து கொள்ளையடித்து வந்தவை வெறும் பொருட்செல்வங்கள் மட்டுமல்ல; அந்நாட்டு மகளிரையும்தான். இம்மகளிரைப் புலவர்கள், ‘தேர்தர வந்த மகளிர்’ எனக் குறிப்பிட்டுள்ளனர். பாவைக் கொட்டிலார் எனும் புலவர்,

காஞ்சி நீழல் குரவை அயரும்
தீம்பெரும் பொய்கைத் துறைகேழ் ஊரன்
தேர்தர வந்த நேர்இழை மகளிர்

ஏசுப என்ப,என் நலனே! -அகம்.336

என நயப்புப் பரத்தை, இற்பரத்தைக்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லிய கூற்றில் தெரிவித்துள்ளார். இத் தேர் தரவந்த நேர்இழை மகளிராலேயே அக்காலத்தில், பரத்தமை ஒழுக்கம் பெருகியமையை, மருதத்திணைப் பாக்களை நிரம்பப் பாடிய ஓரம்போகியாரும்

... ... ... மூதூர்ப்

போர்செறி மள்ளரின் புகுதரும் ஊரன்

தேர்தர வந்த தெரிஇழை நெகிழ்தோள்

ஊர்கொள் கல்லா, மகளிர் தரத்தர,

பரத்தமை தாங்கலோ இலென்என ... -அகம்.316

எனத் தம் பாடலில் குறித்துள்ளார். இவ்வாறு போர்வெற்றியால் கொள்ளையடித்த பொருள்களுள் ஒன்றாகக் கொண்டு வரப்பெற்ற தேர்தர வந்த மகளிரே, பரத்தையர் என்றும் கணிகையர் என்றும் வழங்கப்பெற்றனர். போர்வெற்றியின் முடிவில் கொள்ளையடிக்கும் பொருள்களுள் ஒன்றாக மட்டுமின்றிப் பெரும்படையெடுப்புகளுக்கு முன்னர் குறுநில மன்னர்கள், வேந்தனுக்குத் தந்த திறைப்பொருளாகவும் மகளிர் தரப்பெற்றனர். இதனைச் சிலப்பதிகாரம், வஞ்சிக்காண்டத்தில் கால்கோட் காதையில் பதிவுசெய்துள்ளது. இமயப் படையெடுப்பிற்குமுன், சேரன் செங்குட்டுவனிடம் அவன் ஆட்சிக்குக் கீழிருந்த குறுநில மன்னர்கள், கொடுத்த திறைப்பொருள்களுள், நாடக மகளிரும் இருந்தமையைக்

கூத்துள் படுவோன் காட்டிய முறைமையின்

ஏத்தின ரறியா விருங்கல னல்கி

வேத்தின நடுக்கும் வேலோ னிருந்துழி,

நாடக மகளிரீ ரைம்பத் திருவரும்

கூடிசைக் குயிலுவ ரிருநூற் றெண்மரும்

... ... ...

- சிலம்பு.கால்கோள்:125-136

என இளங்கோவடிகளும் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு பிறநாட்டு மகளிரைக் கொள்ளையடித்து வந்தமையும், திறைப்பொருளாகப் பெற்றமையும் சங்ககால ஆணாதிக்கச் சமூகத்தின் உச்சகட்ட ஒழுக்கக்கேடு. இவ் ஒழுக்கக் கேட்டினைக் கண்டிக்கும் பெண்டிராக, மருதத்திணை மகளிரைப் சங்கப் புலவர்கள் காட்டியிருப்பினும், அக்கூற்றுகள், அத்திணை மகளிர் ஆற்றாமையுடன் வெளிப்படுத்திய கூற்றுகளாகவே இருந்துள்ளன; மருதநிலத் தலைவியரின் அக்கூற்றுகளை, பரத்தமை எனும் ஒழுக்கக் கேட்டினை ஒழிப்பதற்கு உரிய கடுமையான எதிர்ப்பாகக் கொள்ளமுடியாது. குறுந்தொகைத் தோழி ஒருத்தி, மருதத் தலைவியின் அத்தகைய ஆற்றாத நிலையைக் கண்டு வருந்திக்

காலை எழுந்து கடுந்தேர் பண்ணி

வால்இழை மகளிர்த் தழீஇய சென்ற

மல்லல் ஊரன், 'எல்லினன் பெரிது' என

மறுவரும் சிறுவன் தாயே;

தெறுவது அம்ம,இத் திணைப் பிறத்தல்லே

-குறுந்.45

எனக் கூறிய பதிவு, இக்கருத்தினை உறுதிசெய்கிறது. மருதநில ஆடவரின் இக்கொடுமையை, அவர்தம் தலைவியர், கடுமையாக எதிர்க்காமல், வாயில் மறுத்தல் எனும் குறுகிய கால ஊடலாகவே தம் வேதனையை வெளிப்படுத்தியமைக்குக் காரணம் உண்டு. சங்ககாலச் சொத்துடைமைச் சமூகம், தந்தைவழிச் சமூகம்; ஆணாதிக்கச் சமூகம். ஆணாதிக்கச் சமூகங்கள், பெண்டிரை அடக்குவதற்குக் கையாண்ட முதல் உத்தி, அவர்களைப் பொருளீட்டலில் இருந்து அறவே விலக்குதல்; இதனால் மருதத்திணை மகளிர், தம் வாழ்க்கைத் தேவைக்கான பொருளுக்குத் தம் கணவரையே சார்ந்திருக்கவேண்டிய சூழல் உண்டாகி நிலைபெற்றிருந்தது. எனவே, பரத்தைவயிற் பிரிந்து சென்ற தம் கணவரின் ஒழுக்கக்கேட்டினை எதிர்த்துச் சிறிதுகாலம்கூட அவர்களைப் பிரியாது, அடங்கியே வாழவேண்டி யிருந்தது. மாறாக, வெறுத்துப் பிரிந்துசென்ற சூழலில், வறுமையுடன் வாழ வேண்டி யிருந்தது.

பெண்டிரின் இவ் அவலநிலையை, ஓரம்போகியார்,

பரத்தைமை தாங்கலோ இலென்என வறிதுநீ

புலத்தல் ஒல்லுமோ?-மனைகெழு மடந்தை!-

அதுபுலந்து உறைதல் வல்லியோரே,

செய்யோள் நீங்க, சில்பதம் கொழித்துத்

தாம் அட்டு உண்டு, தமியர் ஆகி,

தேமொழிப் புதல்வர் திரங்குமுலை சுவைப்ப,

வைகுநர் ஆகுதல் அறிந்தும்,

அறியார் அம்ம, அஃ்து உடலுமோரே. -அகம். 316

எனத் தோழி கூற்றாக, அருமையாகப் பதிவிட்டுள்ளார். தாமும் தனியளாகித் தம் புதல்வரும் பசியில் வாடி வறுமையுடன் வாழ்வதை விரும்பாத பெண்டிர், தம் வெறுப்புணர்வை நீட்டிக்காமல், பரத்தைவயிற் பிரிந்து சென்று வந்த தலைவனின் கொடுமையை மறந்தும் மன்னித்தும் வாழவேண்டிய கட்டாயச்சூழல் நிலவியது. அதனால், தலைமக்களிடையே அன்பைக் கூட்டுவிக்க உதவும் அன்புணர்வாகிய ஊடலையே, மருதத்திணைத் தலைவியர், தம் கணவர் மீதான வெறுப்புணர்வை மறப்பதற்குரிய கருவியாகக் கொள்ள வேண்டியதாயிற்று; ஊடலும் ஊடல் நிமித்தமும், மருதத் திணையின் உரிப்பொருளுமாயிற்று. தொல்காப்பியமும் இச்சங்ககாலச் சூழலை, மருதத்திணையின் உரிப்பொருளாகக் கூறியும்,

பரத்தையின் அகற்சியின் பரிந்தோள் குறுகி

இரத்தலும் தெளித்தலும் என இருவகையொடு

உரைத்திற நாட்டம் கிழவோன் மேன. -தொல். 987

எனத் தலைவன் கூற்றாகவும், மேலும் தலைவி கூற்றிலும், தோழி கூற்றிலும் எனக் கற்பியலில்(16, 17) இலக்கணப்படுத்தியுள்ளது. தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள் மட்டுமின்றிப் பதினெண் கீழ்க்கணக்கு அகநூல்களிலும், மருதத்திணைப் பாக்களின் உரிப்பொருளான ஊடலுக்குக் காரணமாகப் பெரும்பாலும் பரத்தமை ஒழுக்கமே கூறப்பெற்றுள்ளது. ஆனால், திருவள்ளுவர் இன்பத்துப்பாலில், தலைமக்களுக்கிடையேயான ஊடல் பற்றிப் புலவி, புலவி நுணுக்கம், ஊடலுவகை

என மூன்று அதிகாரங்களில் பாடியிருப்பினும், ஊடலின் காரணமாகப் பரத்தமை ஒழுக்கத்தைக் கூறவேயில்லை. ஊடல், புலவி, துனி எனத் தலைமக்களின் மூவகை ஊடலைப் பற்றிப் பேசியிருந்தாலும், ஊடலின் காரணம் பரத்தமை ஒழுக்கம் எனுமாறான குறிப்பைத் தரவேயில்லை. (புலவி என்பது அன்பால் எழும் ஊடலுணர்வு; துனி என்பது வெறுப்பால் நீளும் ஊடலுணர்வு. எனவே துனியைக் கருக்காய் என்றும், புலவியைக் கனி என்றும் வள்ளுவர் ஒப்புமைப்படுத்தியுள்ளார்(1306)). மேலும், ஊடல் பற்றிய முதற்குறளே

புல்லாது இராஅப் புலத்தை; அவருறும்
அல்லல் நோய் காண்கம் சிறிது.

-குறள்.1301

எனக் காரணம் எதுவுமின்றித் தலைவி, தலைவனிடம் புலந்து அவனுக்குச் சிறிதுநேரத் துன்பத்தைத் தோற்றுவிக்க எண்ணியதாகப் பாடியுள்ளார். அன்பின் காரணமாக மட்டுமே அமைந்த இப்புலவியே ஊடல் என முப்பது குறள்களிலும் பாடப்பெற்றுள்ளது.

ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து.

கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று.

யாரினுங் காதல மென்றேனா வூடினாள்

யாரினும் யாரினு மென்று.

இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்

கண்ணிறை நீர்கொண்ட னள்.

உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப்

புல்லாள் புலத்தக் கனள்.

வழுத்தினா டும்மினே னாக வழித்தழுதாள்

யாருள்ளித் தும்மினீ ரென்று.

தும்முச் செறுப்ப வழுதா ளுமருள்ள

லெம்மை மறைத்திரோ வென்று.

தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ

ரிந்நீர ராகுதி ரென்று.

நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்

யாருள்ளி நோக்கினீ ரென்று.

என்ற புலவிநுணுக்க அதிகாரத்தின் குறள்கள் படிக்குந்தோறும் நகைப்பூட்டுவன. ‘தும்மினாலும் குற்றம்; தும்மாவிட்டாலும் குற்றம்’ என்பது தமிழில் பரவலாக வழங்கப்பெறும் சொலவடை. இந்நாட்டுப்புற வழக்காற்றை அடிப்படையாகக் கொண்டு, அன்பால் எழும், தலைமக்களுக்கு இடையேயான சிறு ஊடலுக்குக் காரணமாகத் தும்மலைக் கருவியாக்கிப் புலவி நுணுக்கக் குறள்களைத் திருவள்ளுவர் நயம்பட அமைத்துள்ளார். புலவி நுணுக்கத்தில்,

பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு. -குறள். 1311

எனத் தலைவி, தலைவனைப் ‘பரத்த’ எனக் கூறிய இடமுண்டு. ஆனால், அச்சொல்லாட்சி, தலைவனைப் பரத்தமை ஒழுக்கமுடையவன் எனக் கூறும் பொருளில் திருவள்ளுவர் பயன்படுத்தவில்லை. பெண்ணியலார் அனைவரும் விரும்பத்தக்கத் தோற்றமுடையவன் தலைவன் என்ற பொருளிலேயே அக்குறளை அமைத்துள்ளார். இவ்வாறு திருவள்ளுவர், தலைமக்களுக்கிடையேயான மிகுதியான அன்பினையே, ஊடலுக்குக் காரணமாகத் தெரிவித்துள்ளார்.

சமகாலச் சூழலைப் பதிவு செய்பவையே இலக்கியங்கள். அந்த வகையில், அக்கால மருதநிலச் சூழலில் நிலவிய பரத்தமை ஒழுக்கத்தைச் சங்ககாலப் புலவர்களும், பதினெண் கீழ்க்கணக்கு அகநூற்புலவர்களும் பதிவுசெய்துள்ளனர். எள்ளிலிருந்து எண்ணெய் எடுக்கப்பெறுமாறு இலக்கியங்களிலிருந்து முகிழ்ப்பவையே இலக்கணங்கள் என்பதால் தொல்காப்பியரும் அவர்கால இலக்கியங்களை இலக்கணப்படுத்தியுள்ளார். ஆனால் திருக்குறள் அற இலக்கியம். இலக்கிய,

இலக்கணப் படைப்புகளின் நோக்கம்வேறு; அற இலக்கியங்களின் நோக்கம் வேறு. அற இலக்கியங்கள் மக்களை, சமுதாயத்தை நன்னெறிப் படுத்துவதற்காக எழுதப்பெற்றவை. மேலும் ஒரு சமுதாயத்தின் தூண்களாகத் தாங்கி நிற்பவை, குடும்பம் எனும் நிறுவனங்கள். எனவே, திருவள்ளுவர், தம் காலச் சூழலில் நிலவிய தீய ஒழுக்கங்களை, இல்லற இன்பங்களை மொழிந்த இன்பத்துப்பாலில் பதிவுசெய்யாது தவிர்த்தார்; குடும்பத்தில் தலைமக்கள் பின்பற்றப்பெறவேண்டிய விருந்தோம்பல், பிறன் இல் விழையாமை, புலால் மறுத்தல் முதலானவற்றை அறத்துப்பாலிலும், தலைமக்கள் கண்டிப்பாகத் தவிர்க்கவேண்டிய ஒழுக்கங்களான பெரியாரைப் பிழையாமை, கள்ளுண்ணாமை முதலானவற்றைப் பொருட்பாலிலும் எடுத்தியம்பியுள்ளார். அவ்வாறே வரைவின் மகளிர் பற்றிய அதிகாரத்தையும் பொருட்பாலில் வைத்தார்; இன்பத்துப்பாலில் ஊடலுக்குக் காரணமாக விளங்கிய வரைவின் மகளிர் பற்றிய சிறு குறிப்பினையும் தராது தவிர்த்தார். நல்ல இல்லறத்திற்கு வழிப்படுத்துவதே இன்பத்துப்பாலின் நோக்கம்; அதுவே வள்ளுவப் பெருந்தகையின் கோட்பாடும்கூட.

# கள்ளுண்ணாமை

**திருக்குறளார் முனைவர் இர. பிரபாகரன்**

உலகில் பல இடங்களில், மது அருந்துதல் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக வழக்கில் இருந்துவருகிறது. புதிய கற்காலத்திலேயே (புதிய கற்காலம்:10,000 B.C. – 1900 B.C.) மது அருந்தும் வழக்கம் இருந்ததாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர். உதாரணமாக, சீனாவில் ஹினான் மாநிலத்தில் புதிய கற்காலத்திலிருந்து கண்டெடுக்கப்பட்ட மண்பாத்திரங்களை ஆய்வு செய்தவர்கள், அவற்றில் பழங்களைப் புளிக்கவைத்து அவற்றிலிருந்து எடுக்கப்பட்ட மது இருந்ததற்கான அடையாளங்கள் இருந்ததாகக் கண்டுபிடித்துள்ளனர் (https://infogalactic.com/info/History_of_alcoholic_beverages).

தமிழ்நாட்டில், கள்குடிக்கும் வழக்கமும் வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட மதுகுடிக்கும் வழக்கமும் இருந்ததாகச் சங்க இலக்கியத்திலிருந்து தெரிகிறது. உதாரணமாக,

***சிறியகட் பெறினே, எமக்கீயும் மன்னே;***
***பெரியகட் பெறினே***
***யாம்பாடத் தான்மகிழ்ந்து உண்ணும் மன்னே;***

(புறநானூறு, பாடல் – 236, ஔவையார்)

என்று புறநானூற்றில் ஔவையார் பாடுகிறார். அதாவது, “கள் கொஞ்சமாக இருந்தால், அதியமான் எங்களுக்குக் கொடுப்பான்; அதிகமாக இருந்தால், நாங்கள் பாடும் பாடல்களைக் கேட்டு மகிழ்ந்து, அதியமானும் எங்களோடு சேர்ந்து குடிப்பான்.”

என்று ஔவையார் பாடுகிறார். மேலும், புறநானூற்றில் "உண்டாட்டு" என்று ஒரு துறை உள்ளது. அந்தத் துறையைச் சார்ந்த பாடல்கள் அனைத்தும் வீரர்கள் கள்ளுண்டு களிப்பதைப் பற்றிய பாடல்களாகும். மற்றொரு பாடலில், வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட மதுவைப் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது.

***யவனர், நன்கலம் தந்த தண்கமழ் தேறல்***
***பொன்செய் புனை கலத்து ஏந்தி நாளும்***
***ஒண்தொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்து***
***ஆங்கினிது ஒழுகுமதி!***

(புறநானூறு, பாடல் 56, மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார்)

அதாவது, "யவனர் நல்ல கலங்களில் (மரக்கலங்களில்) கொண்டுவந்த, குளிர்ந்த மணமுள்ள மதுவைப் பொன்னால் செய்யப்பட்ட அழகிய கிண்ணங்களில் ஏந்திவந்து, ஒளிபொருந்திய வளையல் அணிந்த மகளிர் உனக்கு நாள்தோறும் கொடுக்க, அதைக் குடித்து, மகிழ்ச்சியோடு சிறப்பாக இனிது வாழ்வாயாக!" என்று பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் வாழ்த்துகிறார்.

ஆகவே, சங்க காலத் தமிழர்களிடையே போதை தரும் கள், மது போன்றவற்றைக் குடிக்கும் வழக்கம் இருந்தது என்பது தெளிவாகத் தெரிகிறது. இந்த வழக்கம் இன்றும் உள்ளது என்பதற்கு, தமிழ்நாட்டில் உள்ள நூற்றுக் கணக்கான டாஸ்மாக் (TASMAC -Tamil Nadu State Marketing Corporation) கடைகள் சான்றாக உள்ளன.

**கள்ளுண்ணாமையைப் பற்றி வள்ளுவர்**

எப்பொழுதும் கள்ளின்மேல் விருப்பம்கொண்டு வாழ்பவர்கள் பகைவர்களால் அஞ்சப்படமாட்டார்கள்; அதுமட்டுமல்லாமல் அவர்கள் தம்முடைய புகழையும் இழப்பார்கள் (குறள் – 921). கள் குடிக்காதீர்கள்! சான்றோரால் மதிக்கப்படுவதை விரும்பாதவர்கள் வேண்டுமானால் கள் குடியுங்கள் (குறள் – 922)! என்ன குற்றம் செய்தாலும் பொறுத்துக்கொள்ளும் தாய் முன்னிலையில் கள்ளுண்டு களித்தல் விரும்பத்தகாத தீய செயலாகும்; அவ்வாறாயின், சான்றோர் முகத்தின் முன்னே

கள்ளுண்டு களித்தல் எத்தகைய தீய செயல் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டாமா (குறள் – 923)? கள்ளுண்ணுதல் என்னும் பழித்தற்குரிய பெருங்குற்றத்தைச் செய்தவர்க்கு, நாணம் என்று சொல்லப்படும் நல்ல பெண்ணானவள் தன் முகத்தைக் காட்டாது புறமுதுகுகாட்டி ஓடிவிடுவாள் (அதாவது, கள்குடித்தல், என்பது வெட்கமில்லாதவர்களின் செயல்) (குறள் – 924). ஒருவன் பொருள் கொடுத்துக் கள்ளை வாங்கிக் குடித்து, மெய்ம்மறதியைக் கைம்மாறாகப் பெற்றுக்கொள்ளுதல் என்பது, அவன் என்ன செய்கிறான் என்பதை அறியாதவன் என்பதைக் குறிக்கிறது (குறள் – 925). உறங்குபவர் செத்தவரைப் போன்றவர்தான். அதுபோல், கள் உண்பவரும் நஞ்சை உண்பவர்தான் (குறள் – 926). கள்ளைப் பிறர் அறியாமல் மறைவாகக் குடித்து அதனால் அறிவு மயங்கிக் கண்சோர்பவர்களைப் பார்த்து உள்ளூர் மக்கள் சிரித்து இகழ்வார்கள் (குறள் – 927). கள் குடிப்பவர்கள் கள்ளைக் குடித்தறியேன் என்று சொல்வதைக் கைவிடுக; ஏனென்றால், கள்ளைக் குடித்தவுடனேயே, மனத்தில் மறைத்து வைத்திருந்ததெல்லாம் வெளிப்பட்டுவிடும் (குறள் -928). கள்ளுண்டு களிப்பவனிடம், “அது நல்லதன்று” என்று சொல்லி அவனைத் திருத்துவது, நீருள் மூழ்கியவனைத் தீப்பந்தம் கொண்டு தேடுவதைப் போன்றது (குறள் – 929). வழக்கமாகக் கள்குடிப்பவன், குடிக்காமல் இருக்கும்பொழுது, கள்ளுண்ட மயக்கத்தில் இருக்கும் ஒருவனைக் கண்டால், தானும் இப்படித்தான் மயங்கிக் கிடந்தோமா என்று எண்ண மாட்டானோ (குறள் – 930)!

***உட்கப் படாஅர் ஒளியிழப்பர் எஞ்ஞான்றும்***
***கட்காதல் கொண்டொழுகு வார்.*** (குறள் – 921)

***உண்ணற்க கள்ளை உணில்உண்க சான்றோரான்***
***எண்ணப் படவேண்டா தார்.*** (குறள் – 922)

***ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்***
***சான்றோர் முகத்துக் களி.*** (குறள் – 923)

*நாண்என்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள்ளென்னும்*
*பேணாப் பெருங்குற்றத் தார்க்கு.* (குறள் – 924)

*கையறி யாமை உடைத்தே பொருள்கொடுத்து*
*மெய்யறி யாமை கொளல்.* (குறள் – 925)

*துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்*
*நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.* (குறள்
– 926)

*உள்ளொற்றி உள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்*
*கள்ளொற்றிக் கண்சாய் பவர்.* (குறள் – 927)

*களித்தறியேன் என்பது கைவிடுக நெஞ்சத்து*
*ஒளித்ததூஉம் ஆங்கே மிகும்.* (குறள் – 928)

*களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்*
*குளித்தானைத் தீத்துரீஇ அற்று.* (குறள் – 929)

*கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கால்*
*உள்ளான்கொல் உண்டதன் சோர்வு.* (குறள் – 930)

கள் குடிப்பதனால் வரும் கேடுகளைப் பற்றியும், கள் குடிப்பவர்களை மற்றவர்கள் மதிக்கமாட்டார்கள் என்பதைப் பற்றியும் இந்தக் குறட்பாக்களில் வள்ளுவர் விரிவாகக் கூறுகிறார். ஆனால், அவர் கள் குடிப்பதைத் தீவிரமாகக் கண்டிப்பதாகத் தெரியவில்லை. கள்குடிப்பவனுக்கு எவ்வளவு அறிவுரைகள் சொன்னாலும் அவனைத் திருத்த முடியாது என்பதை உணர்ந்து, கள்குடிப்பவனைத் திருத்த முயலாமல், கள்குடிக்காமல் இருப்பவர்களைத் தொடர்ந்து கள்குடிக்காமல் இருப்பதற்கு அறிவுரை கூறுகிறார் என்று தோன்றுகிறது.

பல நாடுகளில், மதுவிலக்குச் சட்டங்களைச் செயல்படுத்த முடியாமல், அந்நாட்டு அரசுகள் அச்சட்டங்களைக் கைவிட்டுவிட்டன. உதாரணமாக,

அமெரிக்காவில், 1919 – ஆம் ஆண்டு மதுவிலக்குச் சட்டம் கொண்டுவரப்பட்டது. அச்சட்டத்தின் காரணமாக, பலரும், திருட்டுத்தனமாக மதுவைத் தயாரித்து விற்பனை செய்ய ஆரம்பித்தார்கள். மதுவிலக்குச் சட்டத்தை அமெரிக்க அரசு 1930 – ஆம் ஆண்டு கைவிட்டது. இந்தியாவில், சில மாநிலங்களில் மதுவிலக்குச் சட்டம் பின்பற்றப்படுகிறது. தமிழ்நாட்டில், தமிழ்நாட்டு அரசு மதுவை விற்பனை செய்து இலாபம் சம்பாதிக்கிறது. இஸ்லாம் மதம் மது அருந்துவதைக் கண்டித்தாலும், சில இஸ்லாமிய நாடுகளில் மட்டுமே மதுவிலக்கு தீவிரமாகப் பின்பற்றப்படுகிறது. ஆகவே, மக்கள் மது அருந்துவதைச் சட்டங்களாலோ அல்லது மதங்களாலோ தடுக்க முடியாது. ”மது அருந்துவது உடலுக்குக் கேடு விளைவிக்கும்” என்று தமிழ்த் திரைப்படங்களில் அறிவித்துக்கொண்டே, மது குடிக்கும் காட்சிகள் இடம்பெறுவதைப் பார்த்தால், மதுவிலக்கு என்பது தனிமனிதனின் மனவுறுதியால்தான் நடைபெறுமே தவிர, சட்டங்களாலும், மதங்களாலும், அறிவிப்புக்களாலும் செயல்படுத்த முடியாது என்று தோன்றுகிறது.



குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

மின்னிதழ்:40 ஆடி-31 -தி.பி.2053 ஆகத்து-16- பொ.ஆ.2022



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



முத்தமிழ்வித்தகர் வீ.ப.கா.சுந்தரம்

பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்

இணையாசிரியர்; தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

முத்தமிழ் வித்தகர் வீ.ப.கா.சுந்தரம்

வீரணன் பரமசிவம் காமாட்சி சுந்தரம்'என்ற வீ.ப.கா.சுந்தரம் 5.9.1915-இல் தமிழ்நாட்டின் தென்கோடியில் உள்ள 'கோம்பை'என்னும் சிற்றூரில் பரமசிவம் – காமாட்சி இணையர்க்கு மகனாகப் பிறந்தார். அக்காலத்திலேயே தம் பெயரைத் தந்தை,தாய் இருவரின் பெயர்களுக்கான தலைப்பு எழுத்துகளுடன் குறித்தவர் வீ.ப.கா.சுந்தரம் என்பது குறிப்பிடத்தக்கது. தந்தையார் பரமசிவம் தேவாரப் பாடல்களைப் பாடுவதிலும் பயிற்றுவிப்பதிலும் தேர்ச்சி பெற்று விளங்கியவர். இதன் காரணமாகச் சுந்தரனாரும் கருவிலே திருவுடையராக விளங்கி இசை ஆர்வமும்,இசையறிவும் இயல்பாகவே பெற்றிருந்தார். பசுமலைக் கணக்காயர் நாவலர் சோமசுந்தர பாரதியாரிடம் தொல்காப்பியம் முதலான தமிழ் இலக்கண,இலக்கிய நூல்களைக் கற்றுத் தேர்ந்தார். பின்னர்த் தம் ஆசிரியர் பாரதியாரின் அறிவுரைப்படி இசை கற்கத் தொடங்கினார். அந்நாளில் சிறந்த இசை விற்பன்னர்களில் ஒருவராகவும், இராமநாதபுரம் அரசவைக் கலைஞராகவும் விளங்கிய சங்கரசிவம் என்பாரிடம் சில ஆண்டுகள் இசையையும்,தாள நுணுக்கங்களையும், குழல்,முழவு முதலான இசைக்கருவிகளை இசைப்பதையும் கற்றுத் தேர்ந்தார். இயல்,இசை மட்டுமின்றி நாடகத்திலும் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்;தார். தென் தமிழ் நாட்டில் அக்காலத்தில் பெரும் செல்வாக்குப் பெற்று விளங்கிய சங்கரதாஸ் சுவாமிகளின் இசை நாடகங்களையும்,பிற நாடகங்களையும் காண்பதில் மிகவும் நாட்டம் கொண்டிருந்தார். இதன் பயனாகவே சுந்தரனார் இயல்,இசை,நாடகம் எனும் முத்தமிழிலும் ஆழந்த அறிவாற்றலைப் பெற முடிந்தது.

பசுமலை ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் ஆசிரியராகத் தம் வாழ்க்கைப் பயணத்தைத் தொடங்கினார் பின்னர்,மதுரை அமெரிக்கன் கல்லூரி,இறையியல் கல்லூரி மதுரை காமராசர் பல்கலைக்கழகம் ஆகியவற்றின் தமிழ்த் துறைகளில் பணியாற்றினார். மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் 'பழந்தமிழிலக்கியத்தில் இசையியல்'என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொண்டு முனைவர் பட்டம் பெற்றார். தலைசிறந்த தமிழிசை ஆய்வாளர்களுள் ஒருவரும் மூத்த செவ்விசைக் கலைஞருமான மதுரை எசு.இராமநாதன் அவர்களை நெறியாளராகக் கொண்டு தமது முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொண்டார். ஏறத்தாழ 50 ஆண்டு காலம் தொல்காப்பியம்,சங்க இலக்கியம்,காப்பிய நூல்கள்,தேவாரம்,பெரியபுராணம்,திவ்வியப் பிரபந்தம், பஞ்சமரபு முதலான அனைத்துத் தமிழ் நூல்களையும் நுணுகி ஆய்ந்து ஈடு

இணையற்ற இசைத் தமிழறிஞராக உயர்ந்தார். அதன் பயனாகத் திருச்சி பாரதிதாசன் பல்கலைக் கழகத்தில் பத்து ஆண்டுகளுக்கும் மேலாகத் தனியொருவராக உழைத்துத் 'தமிழிசைக் கலைக் களஞ்சியம்'நான்கு தொகுதிகளையும் எழுதி வெளிக்கொணர்ந்தார். தம் வாழ்நாளில் பெரும்பகுதியை இயற்றமிழ்,இசைத்தமிழ் ஆய்வுப் பணியாற்றுவதிலேயே கழித்தார். தமிழ் நாடகம்,நாட்டியம் குறித்தும் ஆழமான ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ளார். அவருடைய தமிழ்ப்பணியை,மொழியியல்,இயல்,இசை,நாடகம்,சமயம் என ஐந்து துறைகளில் செம்மையாகச் செய்துள்ளார். வீ.ப.கா.சுந்தரம் அக்காலத்தில் வெளிவந்த 'விவிலியம்'(பைபிள்) தமிழ் மொழிபெயர்ப்பைச் செம்மைப்படுத்தியதுடன் கிறித்துவ தேவாலயங்களில் வழிபாட்டுத் தமிழையும் வளப்படுத்தினார். மேலும்,அங்குப் பாடுவதற்கு ஏற்ப அருந்தமிழ்ப் பாடல்கள் பல இயற்றி,இசையமைத்துப் பலருக்கும் பயிற்றுவித்தார். அப்பாடல்கள் இன்றளவும் பல தேவாலங்களில் பாடப்பட்டு வருகின்றன.

கிறித்துவத்தைத்தழுவியவராயினும்,வீ.ப.கா.சுந்தரம்,காரைக்காலம்மையார், ஞானசம்பந்தர்,அப்பர் ஆகியோரிடம் ஆழ்ந்த பக்தி கொண்டிருந்தார். தமது இல்லத்திற்கும் 'ஞானசம்பந்தர் குடில்'என்றே பெயரிட்டிருந்தார். மதுரையை அடுத்த பசுமலையில் இருந்த அவருடைய இல்லத்தின் வாயிலில் ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர்,மாணிக்கவாசகர் ஆகிய நால்வரின் படமும் காணப்படும்.

மிடற்றொலியியல்,குரல்,துத்தம் முதலிய ஏழிசைப் பெயர்க்காரணம், பண்ணுப்பகுப்பு இயல்,முல்லைப்பண்,ஆபிரகாம் பண்டிதர்,பாசுகரதாசு,மதுரை மாரியப்ப சுவாமிகள்,தேவநேயப் பாவாணர் ஆகியோரின் தமிழிசைப் பணி உள்பட 23 தலைப்புகளில் அமைந்த ஆய்வுக் கட்டுரைகளைக் கொண்டது இந்நூல். மதுரை காமராசர் பல்கலைக்கழகப் பதிப்புத் துறையால் வெளியிடப்பட்டுள்ளது.

## வள்ளுவர் ஆண்டும் கிருத்துவின் ஆண்டும்

பேராசிரியர் வீ.ப.கா.சுந்தரம்

என் மகன் திருமண அழைப்பிதழில் கி.பி.1965 ஆண்டோடு, வள்ளுவராண்டு 1996 என்று குறித்திருந்தேன். இதைக்கண்டு. மனத்தில் கோபங்கொண்டு, வள்ளுவராண்டைக் கிருத்தவர்கள் வழங்குதல் அறவே கூடாது என்று கண்டித்துப் பசுமலை முதுபுலவர் ஒருவர் பல தடைகள் கூறி எழுதியுள்ளார். அவர் ஆய்ந்து கூறிய அறிவுரைத் தடைகள் பொருந்துவனவா எனக் காண்போம். அவருடைய கருத்துக்கள் முதற்கண் அறித்து கொள்வோம்.

1) கிருத்துபெருமானுக்கு முன் வள்ளுவரைக் காட்ட வேண்டும் என்ற நோக்கங் கொண்ட சைவ சமய வல்லுநர் சிலர் ஆராய்ச்சி என்ற பெயரில், வள்ளுவராண்டு என ஒன்றை இருபதாம் நூற்றாண்டின் மத்தியப் பகுதியில் புகுத்தியுள்ளனர். ஆகையால் வள்ளுவராண்டைப் பயன்படுத்தவே கூடாது.

2. 19-ஆம் நூற்றாண்டிற்கு முன் வாழ்ந்த அனைவரும் வள்ளுவர் கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என்றே கொண்டனர். ஆகையால் வள்ளுவராண்டைப் புதிதாய் சைவர்கள் கணித்தது பொருந்தாதது.

3. பதினெண் கீழ்க்கணக்கு நூற்களின் வரிசையிலே திருக்குறள் இடம் பெற்றுள்ளது. இந் நூற்கள் கி.பி. 2-ஆம் நூற்றாண்டுக்குப் பின் எழுதப் பெற்றுத் தொகுக்கப் பெற்றவை. எனவே குறள் காலத்தால் பிந்தியது.

4.கி.பி.ஆண்டுமுறை உலகமுழுமையும் ஏற்கப்பட்டுள்ளது.தமிழகத்தில் ஒரு சமயத்தவரிடை எழுந்துள்ள வள்ளுவராண்டு இந்தியநாடு முழுமையுமாவது ஏற்கப்பெறுமா?

5) கிருத்துவ மக்கள் உலக உறவில் நம்பிக்கை கொண்டவர்கள்.மொழியோ நாடோ அவர்களது உலக உறவைக் குலைத்துவிட இடம் கொடுக்கலாகாது.

இவையே பசுமலை முதுபுலவரின் புது அறிவுரைகள்.இனி இவற்றின் பொருத்தத்தைக் காண்போம்.

1. பண்டைய கூற்று, பண்டைத் தமிழ்நாடு, இலக்கிய நூற்களின் திட்டமான காலம் பற்றித் தெளிவான ஆராய்ச்சி முறைகளில் ஈடுபடாத இருண்ட பழங்காலத்தில் வள்ளுவரது காலம் கி.பி. இரண்டாம் நாற்றாண்டு . என்று கூறிவந்தது உண்மையே. ஆனால் பிற்காலத்தில் நுண்மாண் நுழைபுலம் படைத்த நடுநிலைச் சான்றோர் பற்பலர் வள்ளுவர் காலத்தைத் தெள்ளிதின் நிலைநாட்டத் தொடர்ந்து ஆய்ந்தனர், பல கோணங்களினின்றும் ஆராய்ந்த அறிஞர் பலரும். ஒரு எல்லையாக வள்ளுவர்: கி. மு. முதல் நூற்றாண்டின் பிற்பகுதிக்குப் பிற்பட்டவரல்லர் என்ற முடிவை ஆதரித்தனர்.பசுமலைப் புலவர், வள்ளுவர் காலம் பற்றி இது காறும் ஆய்ந்த ஆராய்ச்சிகள் அனைத்தையும் அறிந்து தக்க காரணங் காட்டி மறுத்திருத்தல் வேண்டும்.அவ்வாறு மறுக்காமலே ஆராய்ச்சியற்ற ஆழ்ந்திருண்ட ஆதாம் கால அற்பச் செய்தியை இன்றும் - கூறித்திரிவதை அறிஞர் ஏற்பாரோ? பூமி தட்டையானது என்று பண்டையோர் நெடுங்காலம் கூறி வந்த ஒரு காரணத்தால் அது உண்மையாகி விடுமா?

2. சைவசமயப் பற்றுக் கொண்ட வல்லுநர்கள் கிருத்து பிரானுக்கு முன்னர்த் திரு வள்ளுவரைக் காட்டல் வேண்டும் என்ற நோக்கம் கொண்டவர்கள் என்று புலவர் கூசாது குற்றஞ் சுமத்துகின்றார்.

வள்ளுவர் காலத்தை ஆய்ந்தவர் அனைவரும் சைவசமய நோக்கினரா? வள்ளுவர் காலம் ஆய்ந்தவருள் மு.ராகவையங்காரும் நாராயண ஐயங்காரும் சைவர்களா? நாவலர் ச.சோ.பாரதியாரும், சி.இலக்குவனாரும் சைவத் திருப்பற்றுப் பூண்டு திகழ்ந்துதான் வள்ளுவரை ஆராய்ந்தார்களா?அன்றியும் சைவப் பெரியார் வையாபுரிப் பிள்ளையவர்கள் வள்ளுவர் காலம் கி.பி.ஐந்தாம் நூற்றாண்டென்றது அவரது சைவப்பற்று அற்ற தன்மையினையா காட்டுகிறது? இல்லை.இவர்கள் அனைவரும் உண்மையை அறிய ஆராய்ச்சிநெறிமுறையில் சென்ற நீதியாளர்களே.வையாபுரிப்பிள்ளை சங்க இலக்கியங்களில் காணப்படாது குறளில் மட்டும் காணப்படும் சொற்களையும் சொற்றொடர்களையும் வடசொற்களையும் எடுத்துக்காட்டி குறள் காலத்தால் பிந்தியது என்றார்.வையாபுரிப்பிள்ளையின் காலம் சொற்பிறப்பாராய்ச்சி, தொடக்கநிலையாக அரும்பிய காலம்;பல தமிழ்ச்சொற்களின் வேர்ச்சொல் அறிவு விளக்கமுறாத தொடக்கநிலையில் தூய தமிழ்ச்சொற்களையும் வடசொற்கள் என வாதிட்டார்.வையாபுரியார் காட்டிய சான்றுகள் அனைத்தையும் பசுமலை நாவலர் ச.சோமசுந்தரபாரதியார் தக்க காரணங்கள் காட்டி மறுத்துத் தள்ளினார்.(செந்தமிழ்-45-ஆம் தொகுதி)

'திருவள்ளுவர்' என்ற தம் நூலில் வையாபுரியார் காட்டாத வரலாற்றுச் சான்றுகளை நாவலர் பாரதியார் ஏராளமாய்க் காட்டினார்.நற்றிணை,குறுந்தொகை,அகநானூறு,புறநானூறு,பரிபாடல்,பத்துப்பாட்டுடன் சில நூற்கள் – இவற்றுடன் பரந்து காணப்படும் குறள்வரிகளைக் காட்டி, இச் சங்கநூற்களுக்குத் திருக்குறள் முந்தியது என நிறுவியுள்ளார்.அவர் நிறுவியதை நாவலர் ஊராகிய நற்பசுமலையில் வாழ்ந்தும் கூட நம் முதுபுலவர் அறியாதும்,அறிந்தால் மறுக்காதும் பொருந்தாத பிற்பட்ட செய்தியைச் செப்ப முற்பட்டனர்.சி.இலக்குவனார் கூறியுள்ளார்- பௌத்த மதம் தமிழ்நாட்டில் பரவிய காலம்- அசோகன் வாழ்ந்த காலமாகிய கி.மு.மூன்றாம் நூற்றாண்டு-இக் காலத்தைச் சார்ந்தவர் வள்ளுவர் என்பதற்குப் பல சான்றுகள் காட்டியுள்ளார்.நாவலர் பாரதியாரும், சி.இலக்குவனாரும்,பேராசிரியர்ஏ.சக்கரவர்த்தியாரும், இராசமாணிக்கனாரும் சைவசமயப் பெருமை நாட்டவா சைவரல்லாத திருவள்ளுவரை முற்பட்டவர் என்று கூறினார்கள். அன்று!அன்று!அவர்கள் நடுநிலைச் சான்றோர்கள் என்பதை நற்றமிழுலகம் நன்கறியும்.இவர்களையும் ஐயுறும் நம் புலவரைத் திருத்துதல் அரிதுள் அரிது.

3.மேலும் வள்ளுவராண்டு முறை இருபதாம் நூற்றாண்டில்தான் தோன்றியது என அதன் பெருமையைக் குறைத்துப் பேசுகிறார் பசுமலைப் புலவர், நேருவும் காந்தியும் நம் காலத்துத் தோன்றிய காரணத்தால் அவர்கள் பெருமை குறைந்துவிடுமா?.

4.காலத்தால் பிற்பட்ட பதினெண்கீழ்க்கணக்கு நூல்களின் வரிசையில் குறள் உள்ளது என்று பசுமலைப் புலவர் மறுத்துள்ளார்.ஐந்து வரிகட்குக் குறைந்த செய்யுட்களின் தொகுப்பே கீழ்க்கணக்கு நூல்கள்.இவை தோன்றிய காலத்தை அடிப்படையாக வைத்துத் தொகுக்கப்பட்டவை அல்ல.காலத்தால் தொன்மைவாய்ந்த நூல்களும் மிகப் பிற்பட்ட நூல்களும் அவ் வரிசையில் உள்ளன என்ற உண்மையை மாணவர்கள் கூட இன்றறிவார்கள்.

5.வள்ளுவராண்டு உலக முழுமையும் பரவாதது,இந்தியா முழுவதிலுங் கூடப் பரவாதது எனத் தாழ்த்துகிறார் பசுமலைப் புலவர்.

நான் கேட்கிறேன், சித்திரை, வைகாசி மாதங்கள் உலகமுழுமையும் பரவிய மாதங்களா? இல்லை. ஆயினும் அவற்றைப் பயன்படுத்துகிறோம். சித்திரை, வைகாசி என்ற மாதங்களையும் மரபுவழியே பயன்படுத்துவதால் உலக ஒற்றுமை உணர்வு அற்றுவிடுகின்றதா? வள்ளுவர் உலக ஒற்றுமையைக் குலைக்கும் கொள்கையினரா? வள்ளுவராண்டைப் பயன்படுத்துவோர் உலக உறவில் நம்பிக்கையற்றவராகிவிடுகின்றனர் என்று பசுமலைப் புலவர் அழுத்தமாகக் கூறுவதை நம்மால் புரிந்துகொள்ளமுடியவில்லை. வள்ளுவர் உலக உறவு நாட்டவந்த உத்தமர்களுள் ஒருவர் என்பதைப் புலவர் அறியுங் காலம் வரும்.

மேலும் ஆண்டுவரிசைக் கணக்குமுறையிலா மதத்தின் பெருமை அடங்கிக் கிடக்கிறது?நிறுத்தலளவை,கால அளவை முதலிய அளவைமுறைகட்கும் மதத்தின் ஆன்மீக அறநிலைக் கொள்கைகட்கும் யாதொரு தொடர்பும் இல்லை.ஆண்டுக் காலமுறை வேறு;ஆன்மீகக் கொள்கைமுறை வேறு.சனவரி,பிப்ரவரி என்ற கிருத்துவ ஆண்டின் மாதப்பெயர்கள் கிருத்துவப் பெருமானின் ஆன்மீகக்கொள்கைகளையோ அறநிலைக் கொள்கைகளையோ அடிப்படையாகக் கொண்டு எழுந்தவை அல்லவே அல்ல.அம் மாதப் பெயர்கள் எல்லாம் ரோமைக் கட்டுக்கதைகள்,பொய்ப் புராணப் பெயர்கள்,இதிகாசப் புனைவுகள் முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டுஎழுந்த பெயர்களேயாகும். ஆயினும் ஆதிக் கிருத்துவப் பெருமக்கள் பண்டை மரபினைப் பின்பற்றக் கருதி அவற்றை அப்படியே ஏற்றுக்கொண்டனர்.அவ்வாறு கொண்டதால் கிருத்துவமதம் கெட்டுவிட்டதா?அன்றியும் உரோமைக் கழிபெரும் இழிகாமக் கதைகளிலும் இழிந்ததா வள்ளுவம்?

இதுகாறும் கூறியவற்றால்,வள்ளுவராண்டை ஆராய்ந்தவர்கள் குறுகிய நோக்கம் உடையவரல்லர் என்பதும் நாட்டுப்பற்று,மொழிப்பற்றுக் கொண்டவரைச் சமயப்பற்று அற்றவர் என இகழ்தல் பொருந்தாது என்பதும் வள்ளுவராண்டின் தொடக்கம்,தொன்மை

பற்றிக் கருத்துவேறுபாடு இருப்பினும் பகரும் ஒப்புக்கொண்டு பயின்றுவழங்கப்பெற்ற ஆண்டுமுறை ஆதலால் ஏற்றுக்கொள்வதே உலகொடு ஒட்ட ஒழுகுவதாகும் என்பதும் வள்ளுவராண்டைப் பயன்படுத்துவதால் உலக ஒற்றுமை உணர்வு கெட்டழிந்துவிடும் எனக் கூறித் திரிவது உண்மைக்கு முரணானது என்பதும் வள்ளுவர் உலக உறவு நாட்டவந்த உன்னதப் பெரியோருள் ஒருவர்  என்பதும் அறிவோமாக.

மொழிப்பற்றுக்குச் சீரிய எடுத்துக்காட்டு கிருத்துபெருமான்; ஆதியில் திருவாக்கு திகழ்ந்தது;அவ் வாக்கு கிருத்து வடிவானது என்று வாக்குவடிவமாகக் கிருத்து போற்றப்படுகிறார்.

அவர் தம் திருச்செய்தியை அவர்காலத்து உலகப் பெருமொழிகளாகிய இலத்தீனிலோ கிரேக்கத்திலோ பரப்பாது,தம் தாய்மொழி அரமெயிக்,மிகமிகச் சின்னஞ்சிறு மொழியாயினும், அம் மொழியிலே பேசியது அவரது தாய்மொழிப் பற்றை விளக்குவதாகும்.




அறிஞர் வீ.ப.கா.சுந்தரம்

# வரைவின் மகளிர்

திருக்குறளார் முனைவர் இர. பிரபாகரன்

பொதுமகளிரைத் திருவள்ளுவர் 'வரைவின் மகளிர்' எனக் குறிப்பிடுகிறார். வரைவு என்னும் சொல் ஒருவன் ஒருத்தி என்று வரையறை செய்துகொள்ளும் (வரைந்துகொள்ளும்) திருமணத்தை உணர்த்தும். திருமணம் செய்துகொள்ளாமல் கட்டுப்பாடின்றிக் காசுக்காகத் தன் உடலின்பத்தை விற்கும் மகளிர் வரைவின் மகளிர். இவர்களைப் பரத்தையர் என்றும் கூறுவர்.

இவ்வுலகில் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாகப் பரத்தையர் இருந்துவருகின்றனர். அதுபோல், பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக கள்ளுண்ணுதலும் சூதாடுவதும் வழக்கில் இருந்துவருகின்றன. இந்த மூன்று தீயொழுக்கங்களையும் முதன்முறையாகக் கண்டித்த பெருமைக்குரியவர் வள்ளுவர். அறத்துப்பாலில், பிறன்மனை விழைதல், அழுக்காறு, பிறர் பொருளை விரும்புதல், புறங்கூறுதல், பயனில சொல்லுதல், புலால் உண்ணுதல், திருடுதல், சினமுறுதல், இன்னா செய்தல், கொலை செய்தல் ஆகிய தீயொழுக்கங்களை முற்றிலும் விலக்க வேண்டும் என்று விளக்காமகவும், தெளிவாகவும் வள்ளுவர் கூறியுள்ளார். ஆனால், பரத்தையர் தொடர்பு, கள்ளுண்ணுதல் மற்றும் சூதாடுதல் ஆகிய மூன்று தீயொழுக்கங்களைப் பற்றி அறத்துப்பாலில் எதுவும் கூறாமல், அவற்றைப் பற்றிப் பொருட்பாலில் வள்ளுவர் கூறியுள்ளார். இதற்கு என்ன காரணம்? அறத்துப்பாலில்

கூறப்பட்டுள்ள தீயொழுக்கங்களில் ஈடுபடுபவர்கள் தமக்கோ அல்லது பிறர்க்கோ கேடுவிளைவிக்கிறார்கள். பரத்தையர் தொடர்பு, கள்ளுண்ணுதல் மற்றும் சூதாடுதல் ஆகிய தீயொழுக்கங்களில் ஈடுபடுபவர்கள் தமக்கும், தங்கள் குடும்பத்தினர்க்கும் கேடு விளைவிப்பது மட்டுமல்லாமல், தங்கள் பொருளுக்கும் கேடு விளைவித்துக் கொள்வதால், பொருட்பாலில் இவற்றைப் பற்றி வள்ளுவர் கூறியிருப்பதாகத் தோன்றுகிறது. இந்தத் தீயொழுக்கங்களால் பொருளுக்குக் கேடு வருகிறது என்பதைக் குறிப்பதற்காக, விலைமகளிரும் கள்ளும் சூதும் ஆகிய மூன்றும் திருமகளால் விலக்கப்பட்டவர்களின் தொடர்புகளாகும் (குறள் – 920) என்று வள்ளுவர் கூறுகிறார்.

இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. (குறள் – 920)

**பரத்தையர் தொழில்**

இவ்வுலகில் பரத்தையர் தொழில் நெடுங்காலமாக நடந்துவருவதால், அது "உலகத்திலேயே பழமையான தொழில்" என்று அழைக்கப்படுகிறது. ஏறத்தாழ 4,400 ஆண்டுகளுக்கு முன்னதாகவே சுமேரியா நாட்டில் பரத்தையர்கள் இருந்ததாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் எழுதப்பட்ட தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியப் பாடல்களிலும் பரத்தையரைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்
நீத்து அகன்று உறையார் என்மனார் புலவர்

பரத்தையிற் பிரிந்த காலை யான.

(தொல்காப்பியம், பொருளதிகாரம் 185)

பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே

நிலத்திரிபு இன்றி அஃது என்மனார் புலவர்.

(தொல்காப்பியம், பொருளதிகாரம் 220)

இந்த நூற்பாக்களிலிருந்து தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே தமிழ்நாட்டில் பரத்தையர் இருந்தனர் என்பது தெளிவாகத் தெரிகிறது.

சங்க இலக்கியத்தில் உள்ள 2436 பாடல்களில் 1857 பாடல்கள் (76 விழுக்காடு) அகத்திணையைச் சார்ந்தவை. அகத்திணைப் பாடல்களில் 263 பாடல்கள் (14 விழுக்காடு) மருதத்திணையைச் சார்ந்தவை. மருதத்திணைப் பாடல்களின் உரிப்பொருள் (மையக்கருத்து) ஊடல். ஊடல் என்பது தலைவன் தலைவி இடையே ஏற்படும் பிணக்குகள். பெரும்பாலான பிணக்குகளுக்குக் காரணம் தலைவனின் பரத்தையர் தொடர்பு. ஆகவே, தமிழ்நாட்டில் நீண்ட காலமாகவே பரத்தையர்கள் இருந்தார்கள் என்பதும், ஆணின் ஒழுக்கமின்மையைத் தமிழ்ச் சமுதாயம் கண்டிக்கவில்லை என்பதும் தெளிவு.

**பரத்தையரின் இழிவைப் பற்றி வள்ளுவர்**

*அன்பின் காரணமாக ஒருவனை விரும்பாமல் அவனுடைய பொருளை மட்டுமே விரும்பும் ஆய்ந்தெடுத்த வளையல்களை அணிந்த விலைமகளிரின் இனிய சொற்கள் அவனுக்கு எப்பொழுதும் துன்பத்தையே கொடுக்கும் (குறள் – 911). தமக்குக் கிடைக்கக்கூடிய பயனை மட்டுமே அளந்து பார்த்து, அதற்கேற்ப இனிய பண்பான*

*சொற்களைச் சொல்லும் பண்பற்ற, விலைமளிரால் பெறும் இன்பத்தை ஆராய்ந்து, அவர்களோடு பழகாமல் அவர்களைவிட்டு விலக வேண்டும் (குறள் – 912). பொருளையே விரும்பும் பொதுமகளிரின் பொய்யான தழுவுதல், இருட்டறையில், தொடர்பு இல்லாத ஒரு பிணத்தைத் தழுவினாற் போன்றது (குறள் – 913). இது போன்ற வழக்கம் பழங்காலத்தில் கேரளாவில் (சேர நாட்டில்) இருந்ததாகத் தெரிகிறது.*

அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்
இன்சொல் இழுக்குத் தரும். (குறள் - 911)

பயன்தூக்கிப் பண்புரைக்கும் பண்பில் மகளிர்
நயன்தூக்கி நள்ளா விடல். (குறள் – 912)

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ அற்று. (குறள் – 913)

**பரத்தையரோடு தொடர்புகொள்பவர்களைப் பற்றி வள்ளுவர்**

பரத்தையரோடு தொடர்பு கொள்பவர்களைப் பற்றி வள்ளுவர் மூன்று குறட்பாக்களில் குறிப்பிடுகிறார். தம்மை விரும்புபவர்களைக் கருத்திற்கொள்ளாமல், அவரால் கிடைக்கும் பிற நன்மைகளைக் கருத்திற்கொண்டு தழுவும் விலைமகளிரின் தோள்களை மனவுறுதி இல்லாதவர்கள் மட்டுமே விருபுவார்கள் (குறள் – 917). ஆராய்ந்து அறியும் அறிவில்லாதவர்கள், வஞ்சனை நிறைந்த விலைமகளிரைத் தழுவிக் கூடுதல் என்பது, தன் உடலழகால் ஆடவரை வருத்தும் அணங்கைத் (அணங்கு – வருத்திக் கொல்லும் தெய்வமகள்) தழுவுவதைப் போன்றது என்று சான்றோர் கூறுவர்

(குறள் – 918). இன்னார், இனியார் என்று வேறுபாடு கருதாமல், பொருள்கொடுத்தோர் அனைவரையும் தழுவும் விலைமகளிரின் மெல்லிய தோள்கள் கீழ்மக்கள் புகுந்து அழுந்தும் நரகமாகும் (குறள் - 919).

நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வார் பிறநெஞ்சிற்

பேணிப் புணர்பவர் தோள். (குறள் – 917)

ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கென்ப

மாய மகளிர் முயக்கு. (குறள் – 918)

வரைவிலா மாணிழையார் மென்தோள் புரையிலாப்

பூரியர்கள் ஆழும் அளறு. (குறள் – 919)

**பரத்தையரோடு தொடர்புகொள்ளாதவர்களைப் பற்றி வள்ளுவர்**

அருளாகிய அரும்பொருளை ஆராயும் அறிவுடையவர்கள், செல்வப் பொருள் ஒன்றை மட்டுமே பொருளாகக் கருதும் விலைமகளிரின் இழிவான இன்பத்தை ஒருக்காலும் விரும்பமாட்டார்கள் (குறள் – 914). இயல்பாகப் பொருந்திய மதிநலத்துடன் சிறந்த கல்வியறிவும் உடையவர்கள், பொருள்கொடுக்கும் அனைவருக்கும் தம் அழகைத் தரும் விலைமகளிரின் இழிவான இன்பத்தை ஒருபோதும் விரும்பமாட்டார்கள் (குறள் – 915). ஆடல், பாடல், அழகு போன்றவற்றால், தம்மைப் பெருமைப்படுத்திக்காட்டி, தமது இழிவான இன்பத்தை, விலைகொடுப்பார் அனைவருக்கும் தருகின்ற விலைமகளிரது தோள்களைப் புகழ்மிக்க உயர்ந்தோர் ஒருபோதும் விரும்பமாட்டார்கள் (குறள் – 916).

பொருட்பொருளார் புன்னலந் தோயார் அருட்பொருள்

ஆயும் அறிவி னவர். (குறள் – 914)

பொதுநலத்தார் புன்னலம் தோயார் மதிநலத்தின்

மாண்ட அறிவி னவர். (குறள் – 915)

தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்

புன்னலம் பாரிப்பார் தோள். (குறள் - 916)

**பரத்தையர் தொழிலைப் பற்றி வள்ளுவர்**

பரத்தையரோடு தொடர்பு கொள்பவர்களை மனவுறுதி இல்லாதவர்கள், ஆராய்ந்து அறியும் அறிவில்லாதவர்கள், கீழ்மக்கள் என்று வள்ளுவர் கூறுகிறார். பரத்தையரிடம் இருந்து ஒருவன் பெறும் இன்பம் இழிவானது (புன்னலம்) என்றும் வள்ளுவர் கூறுகிறார்.

முதலில் புலால் உண்ணக்கூடாது என்ற கருத்து புத்த மதத்தில் நிலவியது. பிற்காலத்தில் புலால் உண்ணுவதற்காக தாம் விலங்குகளைக் கொல்லாமல், பிறரால் கொல்லப்பட்ட விலங்குகளின் தசைகளைத் தின்பதனால் தவறில்லை என்று புத்த மதத்தினர் தங்கள் கொள்கையை மாற்றிக்கொண்டார்கள். அதைக் கண்ட வள்ளுவர், "தின்பதற்காகப் புலாலை வாங்குவாரில்லையென்றால், விற்பதற்காக உயிர்களைக் கொன்று அவற்றின் தசைகளை விலைக்குக் கொடுப்பவர்கள் யாரும் இருக்கமாட்டார்கள் (குறள் -256).", என்று "புலால் மறுத்தல்" என்ற அகிகாரத்தில் கூறுகிறார். அதுபோல், ஆண்கள் ஒழுக்கமுடையவர்களாக இருந்தால் – பரத்தையரை

நாடிச் செல்லாவிட்டால் – பரத்தையராக எவரும் இருக்கமாட்டார்கள். ஆகவே, பெண்கள் பரத்தையராக இருப்பதற்குக் காரணம் ஆண்கள்தான். பரத்தையரோடு தொடர்பு கொள்பவர்கள் இழிந்தவர்கள் என்று கூறும் வள்ளுவர் ஆண்களின் ஒழுக்கமின்மைதான் பரத்தையர் தொழிலுக்குக் காரணம் என்று கூறிப் பரத்தையரோடு தொடர்புகொள்ளும் ஆண்களை வன்மையாகக் கண்டிக்காதது வியப்பாக உள்ளது. ஆனால், பரத்தையரோடு தொடர்புகொள்வதை முதன்முதலாகக் கண்டித்தவர் வள்ளுவர்தான் என்பது பாராட்டுதற்குரியது.

# குறள் நெறி

குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

மின்னிதழ்:41 ஆவணி-16 -தி.பி.2053 செபுத்தம்பர்-1- பொ.ஆ.2022



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்




செந்தமிழரிமா
பேராசிரியர் சி.இலக்குவனார்
நினைவுச் சிறப்பிதழ்
17/11/1909—3/9/1973
நாற்பத்தொன்பதாம்
நினைவுநாள்



மதுரை நகரில்
பேராசிரியர் சி.இலக்குவனார்
தலைமையில்
போராட்டம் (1960)

பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்
இணையாசிரியர்; தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

**பயிற்சி மொழிப் போராளி, பேராசிரியர் சி.இலக்குவனார் நினைவு நாள் (செப்.3)**

அனைத்து நாட்டுக் கல்வியாளர்களும் தாய்மொழிக் கல்வியையே வலியுறுத்துகின்றனர். அதற்கேற்பவே அனைத்து நாடுகளிலும் தாய்மொழிக் கல்வியே நிலவுகிறது. தமிழ்நாட்டுக் கல்வியாளர்களும் அறிஞர்களும் தமிழ்வழிக் கல்வியையே வற்புறுத்துகின்றனர். ஆனால், கல்வியாளர் என்ற போர்வையில் கல்வி வணிகம் செய்வோரும் தமிழ்நாட்டில் செல்வாக்குப் பெற்றுள்ள பிற மொழியாளரும் ஆங்கில மொழிவழிக் கல்வியையும் இந்தி, சமற்கிருதம் முதலான மொழிக் கல்வியையுமே நடைமுறைப்படுத்தி விற்று வருகின்றனர். தாம் வாழ்ந்த காலத்தில் தமிழ்வழிக் கல்விக்காக ஒல்லும் வகையெலாம் அல்லும் பகலும் போராடித் 'தமிழ்ப் பயிற்சி மொழிக் காவலர்' எனப்  போற்றப் பெற்றவர் பேராசிரியர் முனைவர் சி.இலக்குவனார். அவரது 49ஆவது நினைவு நாளான செபுத்தம்பர் 3இல் அவரது தமிழ்ப் பயிற்சி மொழி பற்றிய சிந்தனைகளை நினைவுகூர்வோம்!----நன்றி: https://tamil.webdunia.com/article/

இயற்பெயர் : சி. இலட்சுமணன்

அரசர் இராசா மடத்தில் நடுநிலைப்பள்ளியில் பயின்ற பொழுது அங்குத் தமிழாசிரியராகத் திகழ்ந்த அறிஞர் சாமி சிதம்பரனார் இலக்குவன் என மாற்றினார்.

தோற்றம் :

திருவள்ளுவராண்டு 1940, கார்த்திகை 1 (17.11.1909)

(பதிவேடுகளில் 1910 )

திருமிகு. மு. சிங்காரவேலர்---திருவாட்டி அ. இரத்தினம் அம்மையார்

பிறப்பிடம் :

வாய்மேடு (வாய்மைமேடு)வேதாரண்யம் வட்டம், நாகப்பட்டினம் மாவட்டம்.(அப்போதைய தஞ்சாவூர் மாவட்டம் )

கல்விப்பட்டங்கள் :

வித்துவான் (1936)--கீழ்த்திசை மொழியியல் இளங்கலை (B.O.L.) (1942)

கீழ்த்திசை மொழியியல் முதுகலை (M.O.L.) (1946)--தமிழ் முதுகலை (M.A.) (1951) மெய்யியல் முனைவர் (Ph.D.)

பெற்ற பட்டங்கள் :

செந்தமிழ் மாமணி, பயிற்சி மொழிக் காவலர், தமிழர் தளபதி, தமிழ்காத்த தானைத் தலைவர், இலக்கணச் செம்மல், தமிழ்க் காப்புத் தலைவர்.

பேராசிரியரைப் பற்றிய அடைமொழிகள் :

தமிழ் அரிமா, தமிழ்ப் போராளி, இருபதாம் நூற்றாண்டுத் தொல்காப்பியர், இருபதாம் நூற்றாண்டுத் செந்நாப் போதார், இருபதாம் நூற்றாண்டு நக்கீரர், இரண்டாம் நக்கீரர், இருபதாம் நூற்றாண்டு இளங்கோ அடிகள், பெரும் பேராசிரியர், தன்மானத் தமிழ் மறவர், இந்தி எதிர்ப்புப் படைத் தளபதி, செந்தமிழ்ப் படையின் மானச் செம்மல், குறள் நெறிக் காவலர், சங்கத்தமிழ் காத்த சான்றோர், மொழிப்போர் மூலவர், முதுபெரும் புலவர், முத்தமிழ்ப் போர்வாள்.

மறைவு :  திருவள்ளுவர் ஆண்டு 2004 ஆவணி 18 (03.09.1973)

**வேர்கள் பூப்பதில்லை**

**--பொன்.செல்வகணபதி**

இயற்பெயரிலேயே
இலக்கு உடைய
எஃகுத் தமிழர்
இலக்குவனார் !
அன்னைத் தமிழ்மீது ஆசை வைத்தவர்
அதைக் காப்பதற்கென்றே
மீசைவைத்தார் !
பாவின் திறத்தாலே
பைந்தமிழ் காத்தவர்
பாவேந்தர் !
இவரோ
நாவின் திறத்தாலே
நற்றமிழ் காத்த
நாவேந்தர் !
பிழைக்கத் தமிழ் படித்தோர் உண்டு
தமிழ் படித்துப் பிழைப்பவரும் உண்டு !
இவரோ
தமிழ் தழைக்கத்
தமிழ் படித்த தமிழர் !
தமிழ் தழைக்கவே
தலை நிமிர்ந்த தலைவர் !
வேலை செய்யாமலிருக்க
வேலை தேடுவோர் உண்டு !
இவரோ
வேலை செய்வதற்காகத்
தம் வேலை விட்டவர் !
தமிழ் வேலை செய்யத்
தம்வேலை விட்டவர் !
தமிழைச் சிறை மீட்கத்
தாம் சிறை புகுந்தவர்
காதலித்தால் கூட
தமிழ் உணர்வை நிபந்தனையாக்கும்
தமிழ்க் காதலர் அவர் !
நலம் உசாவினால் கூட
தமிழ் உணர்வோடு
இருக்கிறீரா? என்றே
நலம் கேட்பவர் அவர் !
ஆதரித்தால் கூட
தமிழ் உணர்வை மட்டுமே
ஆதரிக்க அடம் பிடிப்பவர் அவர்
தாகம் தீர்வதற்குள்
தண்ணீர் தீர்ந்துவிடுகிறது !
மோகம் தீர்வதற்குள்
மூச்சு தீர்ந்துவிடுகிறது !
சோகம் தீர்வதற்குள்
சொந்தம் தீர்ந்துவிடுகிறது !
ஆக மொத்தம் இங்கே
அனைத்தும் தீர்ந்துவிடுகிற
ஒன்றுமில்லை என்பதைத்
தெரிந்து கொள்ளவே
ஒரு வாழ்க்கை
தேவைப்படுகிறது !
அந்த
ஒன்றுமில்லையில் தான்
ஒரு வாழ்க்கை இருக்கிறது என்பதைத்
தெரிந்துகொள்ள
இன்னொரு வாழ்க்கைக்கு எங்கே போவது?
ஒன்றுமில்லை என்பதைத்
தெரிந்து கொள்ளவே
ஒரு வாழ்க்கை
தேவைப்படுகிறது !
அந்த
ஒன்றுமில்லையில் தான்

ஒரு வாழ்க்கை இருக்கிறது என்பதைத்
தெரிந்துகொள்ள
இன்னொரு வாழ்க்கைக்கு எங்கே போவது?
இங்கு
தியாகங்கள் செய்து
தியாகி ஆனவர் உண்டு
நாமோ
தியாகிகளைத்
தியாகம் செய்தே
தியாகி ஆனவர்கள் !
விதவிதமாய் வழுக்கும்
விலாங்குகளுக்கு
மீன்களிடமும்
மேடை !
பாம்புகளிடமும்
பலன் !
கடவுள்கள் கடத்தப்படுவதும்
பூசாரிகள் பூசிக்கப்படுவதும்
ஒன்றும் புதுவதல்ல !
உலகத்தியற்கை !
விசிறியும் இல்லாத
வாழையும் இல்லாத
விநோதப் பிறவிக்கு
விசிறிவாழை என்று பெயர் !
அந்த விசிறி வாழையோ
வீட்டு முகப்பில் !
குலை தள்ளும் வாழையோ
கொல்லைப்புறத்தில் !
கல்யாணக் காலங்களில்
காட்சிக்கு வரும் !
கல்யாணம் முடிந்தபின்னே
தோலுரிக்கப்படும் !
ஆனால் விசிறிவாழை எப்போதும்
வீட்டுமுகப்பில் !
இது
ஒன்றும் புதுவதல்ல !
உலகத்தியற்கை !
வேர்கள் பூப்பதில்லை
ஆனால்
வேர்களின்றிப் பூவில்லை !
வேர்கள் முரடுதான்
கொஞ்சம் விகாரம் கூட !
ஆனால்
மரங்களுக்குப் பூச்சூட்டி
மகிழ்வது வேர்கள்தான் !
அடித்தளங்களுக்கு ஏது
அடையாள வாரம்?
ஆனால் அனைத்துக்கும் ஓர் அடையாளம்
வழங்குவது அடித்தளங்கள்தானே?
மறுக்கப்பட்டு விட்டாலும்
காதல்
மறக்கப்படுவதில்லை;
நினைக்கப்படாவிட்டாலும்
தியாகம் நிராகரிக்கப்படுவதில்லை
மரணம் நம்
மடிமீதே கிடக்கிறது;
மரணத்தின் மடியில்தான்
மனிதன் மயங்கிக்கிடக்கிறான்;
மரணமில்லாத்து மரணம்;
மற்றொன்று
புகழ் !
அந்த மாயாத புகழால்
மரணத்தை வென்று
இன்றும் இருக்கிறார்
இலக்குவனார்
என்றும் இருப்பார்
இலக்குவனார் !

# வரலாறு  தெரிவிக்கும் வைரக் குவியல் –அரிய ஒளிப்படங்கள்



பேராசிரியர் சி.இலக்குவனார் சிறைமீண்டபின்
மாணவர்கள் நடத்திய 55-ஆம் பிறந்தநாள் விழாவில்
அறிஞர் அண்ணா உரையாற்றும் காட்சி



தமிழவேள் கோ.சாரங்கபாணி அவர்கள் அலுவலகத்தில் அவர்
அழைப்பையேற்று மலேசியா சென்ற பேராசிரியர்



மாநிலக்கல்லூரியில் பேராசிரியர் பணியாற்றியபோது
நிகழ்த்திய தமிழ்மன்ற விழாவில்



மலேசியாவில் தமிழன்பர்கள் வரவேற்பு

1948-ஆக இருந்தாலும் 1952-ஆக இருந்தாலும் 1965-ஆக இருந்தாலும் “ கெடல் எங்கே தமிழின் நலம்?அங்கெல்லாம் தலையிட்டுக் கிளர்ச்சி” செய்வதே இலக்குவனாரின் வாழ்க்கைமுறையாக இருந்தது.

இலக்குவனாரின் தமிழ் உரிமைப் போர்மறத்தைப் பாவலர் கருமலைத் தமிழாழன் சிறப்புமிகு சொல்லோவியமாக வடித்தளித்துள்ளார்,

## தமிழரிமா இலக்குவனார்

-----பாவலர் கருமலைத்தமிழாழன்

அரக்கரினை அழிப்பதற்குக் கடவு ளர்கள்
அவதாரம் எடுத்ததாகப் புராணம் கூறும்
விரலசைவில் வதம்செய்த வீரம் தன்னை
விரிவாக எடுத்துரைக்கும் கதைகள் சொல்வர்
வரலாறு போலதனை ஆண்டு தோறும்
வளர்கின்ற சந்ததியர் அறியு மாறு
திரளாக மக்களினைக் கூட வைத்துத்
திருவிழாக்கள் நடத்திடுவர் ஆன்மீ கத்தார்
இந்தியெனும் அரக்கியினை ஓட்டு தற்கே
இலக்குவனார் போன்றதமிழ் அறிஞ ரெல்லாம்
முந்திநின்று போராட்டம் செய்த தெல்லாம்
மூடியிங்கே மறைத்திட்டார் அறியா வண்ணம்
சிந்திட்ட குருதியினை விழுப்புண் தன்னைச்
சிறிதுமிங்கே சொல்லாமல் புதைத்து விட்டார்
சந்ததியர் படிப்பதற்கு வரலா றாகச்
சாற்றாமல் இருட்டடிப்பு செய்து விட்டார் !
கொள்ளையர்கள் திருடர்கள் கொலைக்கா ரர்கள்
கொள்கையில்லா அரசியலார் கூட்டத் தோடே
எள்ளலுடன் ; தமிழுக்காய்ப் போராட் டத்தை
ஏற்றதமிழ் அறிஞரினைச் சிறைய டைத்தார் !
குள்ளமன ஆட்சியர்கள் இந்தி காக்கக்
குன்றன்ன இலக்குவனார் கைபி ணைத்தே
வெள்ளையினை விடவும்கொடுங் கோல ராக
வேலூரில் அடைத்திட்டார் அரிமா தன்னை ! (1)

அச்சத்தால் விளைந்த ஆதிக்க வெறி!

- அறிஞர் அண்ணா

இலக்குவனார் பாராட்டு விழாவில் பேசியது.

டாக்டர் இலக்குவனா
பரோலில் விடுதலை!

திங்களன்று மதுரை வந்து சேருவார்

அன்றாண்ட ஆட்சியர்கள் போராட் டத்தை
அடக்குதற்கே அண்ணாவை அழைத்த போதோ
என்னாலே முடியாது போராட் டத்தை
இயக்குவது இலக்குவனார் ; அவர்சொன் னால்தான்
முன்நிற்கும் மாணவர்கள் கேட்பா ரென்றே
முத்தாகக் கருத்துரைக்க ; ஆட்சி யாளர்
சென்னிதாழ்த்தி பணிவாகக் கேட்டு நின்றார்
செம்மாந்த இலக்குவனார் தம்மி டத்தே !
இருளாகிப் போகுமெங்கள் எதிர்கா லம்தான்
இந்தியெனும் அரக்கியிங்கே நுழைந்தா லென்றே
நெருப்புக்கே சூடேற்றி நெஞ்சி லெல்லாம்
நெருப்பாகக் கனல்கின்ற உணர்வை யேற்றி
அருந்தமிழைக் காப்பதற்கே மாண வர்தாம்
ஆர்த்தெழுந்தார் அவர்களினைத் தடுப்ப தற்கே
ஒருவராலும் இயலாது ; சொல்லேன் என்றார்
ஒப்பரிய இலக்குவனார் உணர்ச்சி பொங்க !
இனத்திற்கே அடையாளம் மொழிதான் அந்த
இனமழிக்க மொழியழித்தால் போது மென்று
வனமழித்து மழைதடுக்கும் செயலைப் போல
வண்டமிழை அழிப்பதற்கே இந்தி கற்கப்
பிணந்தின்னிக் கழுகென்னும் தில்லிக் காரர்
பிறப்பித்த ஆணையேற்க முடியா தென்றே
தினவெடுத்த தோளாக ஆர்த்தெ ழுந்த
திண்தமிழ அரிமாதான் இலக்குவ மேலோன் ! (2)





“மார்பகத்தை அறுத்தெறிவேன் போரில் மாண்ட
மகன்முதுகில் புண்ணிருந்தால்” எனவெ குண்டே
போர்க்களத்துள் புகுந்தவீரத் தாயின் தோன்றல்
பழூர்தந்த தமிழ்க்காளை சின்னச்சாமி
சீற்றமுடன் இந்தியெனும் தீயெ திர்த்துச்
சீறிவந்த நெருப்பிற்குள் உடலைத் தந்தே
ஏற்றமுடன் தாய்த்தமிழை இலங்கச் செய்ய



எழுந்திட்ட உணர்ச்சிக்கே ஊற்றாய் நின்றோன் !
மீசையுடன் திரிகின்ற தமிழா ! தீயின்
மீதமர்ந்த இராசேந்திரன் சிவலிங் கந்தான்
ஓசையுடன் எதிர்ப்புதனை முழக்கித் திருச்சி
ஒப்பரிய வீரப்பன் கீரனூர் முத்து
ஆசையுடன் தமிழணைத்த அரங்க நாதன்
ஆற்றல்சீர் நடராசன் தாள முத்து
பாடையிலே தமைவைத்துத் தமிழைக் காத்த
பாதைக்குக் கைகாட்டி யாக நின்றோன் !
விழிப்போரின் காதலிலே வீழ்வ தற்கு
விரைகின்ற இளைஞர்காள் சற்றே நின்று
மொழிப்போரில் விழுப்புண்கள் மார்பில் ஏந்தி
மோதித்தம் வாழ்வுதனைத் தமிழைக் காக்க
அளித்திட்ட இளஞர்கள் இலக்குவ னார்தம்
ஆர்த்தெழுந்த வரலாற்றை எண்ணிப் பார்ப்பீர்
விழிநெருப்பில் இந்தியினை வீழ்த்து தற்கு
வீறுகொண்ட தொண்டரினைப் போற்று வோமே !




1965-ஆம் ஆண்டு இந்தி எதிர்ப்புப் போரில் பெப்ருவரி இரண்டாம் நாள் இலக்குவனார் கைது செய்யப்பட்ட செய்தி கருமலைத் தமிழாழன் போன்ற எண்ணற்ற பாவலர்களைக் கடுஞ்சீற்றத்துக்கு ஆளாக்கியது.



## தந்தை பெரியாரின் பாராட்டும் பேரன்பும்

பொதுத்தொண்டில் எல்லா வகையிலும் ஈடுபாட்டோடு நான் எண்ணுவதைக் காட்டிலும் இலக்குவனார் வேகமாகப் பணியாற்றிவருகிறார்.அவருடைய எல்லாச் செயல்களிலும் நான் இருக்கிறேன்.சுருக்கமாகச் சொன்னால் யான் வேறு இலக்குவனார் வேறல்ல.

## முதலமைச்சரின் முதல் மரியாதையும்  காவல்நிலையத்தில் கையெழுத்தும்

வேலூர் மத்தியச் சிறையில் இந்தியக் காப்புச் சட்டத்தின் படி (Defence of India Rules) காப்புக் கைதியாகத் (Detenu) தளைப்படுத்தப்பட்ட பேராசிரியர் சி.இலக்குவனார் தம் சிறைவாழ்வைப் பற்றித் தமது தன்வரலாற்று நூலில் எழுதியுள்ளார்.எனவே அதனை நான் எழுதுவது மிகை.ஆனால் அந்தச் சிறையில் காப்பிலிருந்த அரசியல் கைதிகள் இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தனர் என்பதனை இங்குப் பதிவிட விரும்புகிறேன்.அந்தப் பிரிவுகள் யாவை?பொதுவுடைமையர் பிரிவு (Communist cell) தி.மு.க. பிரிவு (D.M.K.Cell) என்பவை தான் அந்தப் பிரிவுகள்.இலக்குவனாரை எந்தப் பிரிவில் சேர்ப்பது?சிறையதிகாரிகள் சற்றும் தயங்கவில்லை. தி.மு.க. பிரிவில் அவரது இசைவைக் கேட்காமலேயே அவரைச் சேர்த்துவிட்டனர். மொழியறிஞர் என்னும் முறையில் அல்ல ஒரு தமிழன் என்னும் முறையிலேயே தமிழ்க்காப்புப் போரில் தாமே விரும்பி ஈடுபட்டவர் பேராசிரியர் என்பதற்கு மேலும் ஒரு நிகழ்ச்சியைச் சான்றாகக் கூறலாம்.

மதுரைத் தியாகராசர் கல்லூரி மாணவர்களுள் காளிமுத்து-காமராசு இரட்டைப் போராளிகளாகத் தமிழ் உரிமைப் போரில் முனைந்தனர். போராட்டத்தின் உச்சமாக இந்திய ஆட்சிமொழிச் சட்டப்பிரிவின் நகலைத் தீயிட்டுக் கொளுத்தும் போராட்டத்தை நடத்த அவர்கள் திட்டமிட்டனர்.இந்தச் செய்தியறிந்த கலைத்தந்தை கருமுத்து தியாகராசர் பேராசிரியரையழைத்து "அருள்கூர்ந்து உங்கள் மாணவர்களை எப்படியாவது சந்தித்து அந்தப் போராட்டத்தைக் கைவிடச் சொல்லுங்கள்.காவல்துறை அவர்களைப் பிடிக்க வலைவீசித் தேடிவருகிறது.அவர்கள் முன்கூட்டியே கைது செய்யப்படலாம். இதனால் அவர்கள் வருங்காலம் பாழாய்ப்போய்விடும்."என்று மிகுந்த கவலையுடன் தெரிவித்தார்.பேராசிரியர் எவ்வளவோ முயன்றும் இரவுவரை அவர்கள் இருக்குமிடத்தை அறிந்துகொள்ள

முடியவில்லை. அலுப்புடன் பேராசிரியர் வீடுவந்து சேர்ந்தார்.இரவு பத்தரை மணியிருக்கும்.காளிமுத்து மட்டும் பேராசிரியரின் இல்லம் தேடித் திருநகருக்கு வந்துவிட்டார்.

“காளிமுத்து! என்ன திட்டம்?-இது பேராசிரியர் வினா.

“ஐயா! பொறுத்தருளுங்கள்.நீங்கள் என்ன சொன்னாலும் நாங்கள் சட்ட எரிப்புப் போராட்டத்தைக் கைவிடப் போவதில்லை.நீங்கள் தவறாகக் கருதவேண்டாம்.” இது காளிமுத்து.

“காளிமுத்து! எனக்குச் சொல்லச் சங்கடமாயிருந்தாலும் நான் சொல்லிவிடுகிறேன்.நாம் தமிழின் வருங்காலத்துக்காக இதனைச் செய்துதானாக வேண்டும்.நீங்கள் முன்னாலே செல்கிறீர்கள். நானும் உங்கள் பின்னால் வந்துவிடுவேன்.நாம் மல்லிகைச்செடியைப் போல ஒரு தலைமுறை அழிந்து அடுத்த தலைமுறை செழிக்க வழிவகுக்கவேண்டும்..தமிழுக்காக நம் கடமை.” இது பேராசிரியர்.

“ஐயா!நன்றி!இந்த இசைவைத் தான் நான் எதிர்பார்த்தேன்” இது காளிமுத்து.

தயக்கத்தோடும் தழுதழுத்த குரலோடும் பேராசிரியர் தொடர்கிறார்.

“உங்களைத் தொடர்ந்து ஒற்றர் வந்தனரா?என் வீட்டு முன்பும் ஒற்றர் இருக்கக்கூடும்.எச்சரிக்கையாகச் சென்று வாரும்..”

ஒரு தாயின் பரிவு பேராசிரியர் குரலில் இழையோடுகிறது.

இருவர் குரல்களும் தழுதழுக்கின்றன.

உணர்வுநிறைந்த சூழலில் இவரும் வழியனுப்புகிறார்.அவரும் விடைபெறுகிறார்.

இதற்கு உவமையாக வேறெதனையும் கூற இயலாது.

முதலில் ஆசான் மாணாக்கராகச் சந்திப்பு தொடங்குகிறது; பின் தந்தை-மகனாக உணர்வு உருமாற்றம் அடைகிறது. அதன்பின் தளபதி போர்மறவனை வழியனுப்பும் உணர்வோவியத்தைக் காண்கிறோம்.

முதலமைச்சர் பக்தவத்சலம் பேராசிரியரைச் சிறைக்கு அனுப்ப நினைப்பதற்கு முன்பே பேராசிரியர் தாம் சிறையில் அடைக்கப்படலாம் என்னும் முன்னுணர்வு பெற்றுள்ளதனை இந்த உரையாடல் புலப்படுத்துகிறது.

இருவர் உள்ளமும் தமிழ்வீறு பெற்றுக் கமழ்ந்தன.கட்சிச்சிமிழுள் அடைபடவில்லை.தமிழ் எந்தத் தனிப்பட்ட கட்சிக்கும் உரிமைப்பொருள் அல்ல. ஆனால் இந்தத் தமிழுரிமைப் போர் தி.மு.க.என்னும் அடையாளத்தையே அன்று பெற்றிருந்தது. நல்ல தமிழில் பெயர்வைப்பவர்களும் நல்ல தமிழில் பேசுபவர்களும் அந்தக் காலத்தில் தி.மு.க.விலேயே இருந்ததனால் ‘தமிழ்’என்றாலே தி.மு.க.என்றே மக்கள் கருதினர். இந்தச் சூழலே அன்று வேலூர்ச் சிறையில் பேராசிரியரைத் தி.மு.க.என்னுமபிரிவில் சேர்க்கக் காரணமாயிருந்தது.

1965 பெப்ருவரி முதல்நாள் இந்தியக்குற்றத் தடுப்புச் சட்டத்தின் கீழ் பேராசிரியர் தளைப்படுத்தப்பட்டது,அவர் மாணவர்களைத் தூண்டிவிட்டார் என்னும் குற்றச்சாற்றின் பேரில் அமைந்திருந்தது. அவருக்கு வழங்கப்பெற்ற முதல் தகவல் அறிக்கையை நாங்கள் காப்பாகப் பேணிவைக்கத் தவறிவிட்டோம். பிள்ளைகள் நிறையப் பேர் இருக்கும்போது தந்தையார் தொடர்பான ஆவணங்களைப் பாதுகாப்பாகப் பேணியிருகவேண்டும்.ஆனால் இதற்காக யாரையும் குறைசொல்லல் பொருந்தாது.

எனக்கு இன்னும் அந்த முதல் தகவல் அறிக்கையின் முதல் பக்கம் நினைவில் உள்ளது.மெனிபோல்டு தாள் என்று ஆங்கிலத்தில் அழைக்கப்பெறும் மென்மையான தாளில் தெளிவுறத் தட்டச்சு செய்யப்பெற்றிருந்தது.ஆங்கிலத்தில் நேர்த்தியான தட்டச்சும் தேவைப்படும் இடங்களில் கையெழுத்தால் தமிழ்த் தொடர்களும் அமைந்திருந்தன. பேராசிரியர் மீது பதினேழு குற்றங்கள் சுமத்தப்பட்டிருந்தன.

1,2,3, என்று வரிசை எண் கொடுத்து ஒன்றன்கீழ் ஒன்றாக அவை குறிக்கப்பெற்றிருந்தன.

1.Dr.S.Ilakkuvanar is a Tamil fanatic.

2.He propagates his fanaticism through his journals titled குறள்நெறி in Tamil and KuralNeri-The way of life in English, both being Bi-Monthlies.

1. டாக்டர் சி.இலக்குவனார் ஒரு தமிழ்வெறியர்.

2. அவர் தமது தமிழ்வெறியை குறள்நெறி என்னும் பெயரில் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளியிடப்படும் தமது மாதமிருமுறை இதழ்களின் மூலம் பரப்பிவருகிறார்.

பேராசிரியர் ஒரு தமிழ்வெறியர் என்பதுதான் அன்றைய காங்கிரசு அரசு அவர்மீது சுமத்திய முதன்மைக் குற்றம்.இந்த இடத்திக் "வெறி என்பதும் பற்று என்பதும் அவரவர் அணுகுமுறையைப் பொறுத்தே பெயரிடப்படுகின்றன."என்னும் மூதறிஞர் இராசாசியின் கருத்து நினைவுகூரத் தக்கது.

தமக்கு முன்னரே சிறைசென்றுவிட்ட தம் மாணவர்களின் குடும்பம் துயருள்ளத்துடன் துவண்டுவிடக்கூடாது எனப் பேராசிரியர் கவலையும் பரிவும் கொண்டு அவர்களது தந்தையரைக் காண விழைந்தார்.தோழர் காளிமுத்து அவர்களின் தந்தையார் பெயரும் காளிமுத்து தானாம். அவர்கள் குடும்பத்தில் பிறக்கும் மூத்த ஆண்பிள்ளைக்கு அந்தப் பெயர் வழிவழியாக இடப்படுமாம்.அவர் பார்ப்பதற்கு ஒரு மன்னர் போலவே தறுகண்மையுடன் விளங்கினார்..அவருக்கு ஓரளவு நிலங்கள் உள்ளன எனவும் பொருளாதாரக் கவலை ஏதும் இல்லை எனவும் கூறிவிட்டார்.

காமராசு அவர்களின் தந்தையார் பெரிய நாமம் தீட்டிய நெற்றியும் குழந்தைமுகமும் கொண்டு விளங்கினார்.அவருக்கும் பொருளாதாரச் சிக்கல் ஏதும் இல்லையெனினும் மதுரையில் மூன்று மாதங்கள் தங்கவேண்டுமெனவும் அதற்கு உதவி தேவையெனவும் கூறினார்.அவரும் ஒரு குறுநிலக்கிழார் என்பதுடன் மண்டிகளில் கணக்குப்பிள்ளை வேலை பார்ப்பது கைச்செலவுக்கு உதவி வருவதாகவும் கூறினார்.அவரைக் குறள்நெறி அலுவலகத்தில் கணக்குப்பிள்ளையாகப் பணியமர்த்தினார் பேராசிரியர்.

”மாதம் ஐந்நூறு தரலாமா”இது வாஞ்சையுடன் பேராசிரியர் எழுப்பிய வினா.

”ஏயப்பா.தாராளம்”—இது காமராசரின் தந்தையார் வழங்கிய விடை.

“எப்படியய்யா?உண்மை தானா?” பேராசிரியர்.

“சற்று எட்டி நடந்தால் அங்கே ஒக்கலிகர் மடம் இருக்கிறதல்லவா?அங்கே தங்கிக்கொள்வேன்.வாரம் ஒருமுறை பையனைப் போய்ச் சிறையில் காண்பதற்குப் போக்குவரத்துச் செலவு,உணவுச் செலவு இதற்கெல்லாம் நீங்கள் கொடுப்பதில் பாதிதான் ஆகும்.எனவே இது தாராளம்.”

“சரியான கணக்குப்பிள்ளை அய்யா நீர்! சம்பளம் போதுமா எனக் கேட்டால் நிதிநிலை அறிக்கையே வழங்கிவிடுகிறீரே.”வியப்புடன் பேராசிரியர் குரல்.

பெப்ரவரி,மார்ச்சு,ஏப்பிரல் என மூன்று மாதங்களே பணியாற்றிவிட்டு நிறைவான உள்ளத்துடனும் மகிழ்வான மனநிலையுடனும் அவர் கிளம்பிப்போய்விட்டார்.

,பேராசிரியர் மாணவர்களைத் தூண்டிவிட்டு ஒதுங்கிப் போகும் மனப்பான்மையர் அல்லர் என்பதையும் ஒரு குடும்ப உறவு பாராட்டித் தாயுள்ளத்துடன் மாணவர் நலனைப் போற்றியவர் என்பதையும் விளக்குதற்கே இதனைக் கூறுகிறேன்.

வேலூர் மத்தியச் சிறையில் இந்தியக் காப்புச் சட்டத்தின் படி (Defence of India Rules) தளைப்படுத்தப்பட்ட வேளையில் தி.மு.க. பிரிவில் அவரது இசைவைக் கேட்காமலேயே அவரைச் சேர்த்துவிட்டனர் எனத் தொடக்கத்தில் கூறினேன் அல்லவா?வேடிக்கையாக ஒரு நிகழ்ச்சி நடந்துவிட்டது.பேராசிரியருடன் சிறையிலிருந்த திண்டிவனம் பக்கிரி அவர்கள் தம்மைக் காணவந்தவர்கள் மூலம் பேராசிரியரைக் கழகத்தில் சேர்த்து ஓர் உறுப்பினர் அட்டை போடுமாறும் கூறிவிட்டாராம்.இதனைச் சற்றும் எதிர்பார்த்திராத பேராசிரியர் “அதனாலென்ன?அதுவும் சரிதான்”என்னும் சொற்களுடன் அமைவு கொண்டார்.

கடுமையான சட்டத்தின்கீழ் பேராசிரியர் தளைப்படுத்தப்பட்டதால் பேராசிரியரின் குடும்பத்தினருடன் பலர் பேசவே அஞ்சினர்.சிறையிலிருக்கும் போதே பணிநீக்கம் செய்துவிட்டதால் ஏனைய பேராசிரியர்களும் மாணவர்களும் பேராசிரியர் குடும்பத்துடனும் குறள்நெறி அச்சகத்துடனும் தொடர்பு கொள்ளத் தயங்கி ஒதுங்கினர்.பேராசிரியரின் தாயார் (எங்கள் பாட்டி) தமது புதல்வன் சிறையில் என்ன பாடுபடுகிறானோ எனக் கவலைப்பட்டு அடிக்கடி அனைவரிடமும் புலம்பிவந்தார்.நாளடைவில் உணவு கொள்ளாமல் உறக்கம் வாராமல் (ஆத்துமா) இருமலால் எங்கள் பாட்டியார்அவதியுற்றார்.

வேலூர்ச் சிறையில் ஒன்றரை மாதம் கழிந்த சூழலில் சிறையதிகாரிகள் பேராசிரியரைத் தொடர்பு கொண்டு 'சிறைவிடுப்பு' கேட்டு விண்ணப்பிக்குமாறு அறிவுரை கூறினர்.தாயாரின் உடல்நலக்குறைவினை எங்கள் மடல் மூலம் அறிந்த பேராசிரியர் அதிகாரிகள் காட்டிய வழியிலே சிறைவிடுப்பு (பரோல்) வேண்டி விண்ணப்பித்தார்.

பேராசிரியருக்குச் சருக்கரை நோய் உண்டு. சிறையில் தோள்பட்டை வலியும் இரத்த அழுத்தமும் கூடுதலாகி இடர்ப்படுத்தின.. அப்போது ஓய்வுபெறும் வயது 55 என்பதும் பேராசியருக்கு அப்போது 55 வயது என்பதும் கவனிக்கப் பெறவேண்டிய கூடுதல் தகவல்கள்.

வேலூர் வெஞ்சிறையில் பேராசிரியரைத் தள்ளிய பக்தவத்சலம் அரசு இப்போது தானாக முன்வந்து அவரைச் சிறைவிடுப்பில் செல்லலாம் எனப் பச்சைக்கொடி காட்டியது ஏன்?

'கல்லூரி நிருவாகத்தை அச்சுறுத்திப் பேராசிரியர் பணியைப் பறித்தாகிவிட்டது.கல்லூரி மாணவர்களை ஒருங்கிணைத்துப் படை திரட்டுவார் என்னும் அச்சம் இனித் தேவையில்லை.அகவை முதிர்ந்த பேராசிரியரை நெடுநாள் சிறையில் வைத்திருப்பது மக்கள் மத்தியில் அரசுக்குக் கெட்ட பெயரை ஏற்படுத்தும்.' என்பவையே அரசு காட்டிய "பரிவு"க்குக் காரணங்கள் ஆகும்.

பேராசிரியர் ‘சிறைவிடுப்பு’க்கு விண்ணப்பித்த மறுநாளே எங்கள் இல்லத்துக்குக் காவலர் வந்தனர்.பாட்டியாரைப் பார்க்கவேண்டும் என்றனர்.நலங்குன்றியிருந்த பாட்டியாரைப் பார்த்த காவலர் ஆறுதலாகச் சற்று நேரம் உரையாடிவிட்டுச் சென்றுவிட்டனர்.

தளைப்படுத்தப்பட்ட நாற்பத்தெட்டு நாள்கள் கழித்து சூன் 19-ஆம் நாள் பேராசிரியர் சிறைவிடுப்பு பெற்றார்.

.வேலூரிலிருந்து மதுரைக்கு நேரடியாகத் தொடர்வண்டி கிடையாது.எனவே சென்னை சென்றுவிட்டு அங்கிருந்து மதுரை செல்வதாகத் திட்டமிட்டார் பேராசிரியர்.சென்னையில் தாம் சிறைசென்றதும் விடுதலை செய்யுமாறு அரசை வலியுறுத்தித் தீர்மானம் நிறைவேற்றிய சிலம்புச்செல்வர்,தலையங்கம் எழுதிய கலைஞர் மு.கருணாநிதி,இருவரையும் பார்க்கும் வாய்ப்பை ஏற்படுத்திக்கொண்டார்.அண்ணா அப்போது சென்னையில் இல்லை.ஆனால் யாரும் எதிர்பார்க்காத ஒரு சந்திப்பைப் பேராசிரியர் விரும்பி ஏற்படுத்திக் கொண்டார்.யாருடன்?யார் அவரைத் தளைப்படுத்தினாரோ அந்த முதலமைச்சர் பக்தவத்சலனாரைத் தான்.

முதலமைச்சருடன் செவ்வி(இண்டர்வியூ) கேட்டுப் பேராசிரியர் விண்ணப்பித்தபோது காவல்துறை அலுவலர் வியப்போடு பார்த்தார்.ஆனால் செவ்வி கிடைத்துவிட்டது.இந்தச் சந்திப்பைப் பேராசிரியர் எழுத்தில் பதிவு செய்யவில்லை;செய்ய விரும்பவும் இல்லை.

யாருடனும் பகிர்ந்துகொள்ளவோ வெளிப்படையாகக் கூறவோ வேண்டாம் என என் தந்தையார் எங்கள் எல்லாரிடமும் கேட்டுக்கொண்டார்.ஆனால் 55 ஆண்டுகள் கழித்து இதனை ஒரு நிகழ்வாக அல்ல,ஒரு வரலாற்றுப்பதிவாக வெளிப்படுத்துகின்றேன்.

உரிய நேரத்தில் முதலமைச்சர் அலுவலகத்திற்கு என் தந்தையார் சென்றார்;மாண்புமிகு முதலமைச்சர் தம் இருக்கையை விட்டு எழுந்து வாயிலுக்கு வந்து பேராசிரியரை வரவேற்றார்.தந்தையாரை இருக்கையில் அமரச்செய்துவிட்டு அதன்பின்பே அவர் அமர்ந்தார்.

“நீங்கள் சிறைவிடுப்பு (பரோல்) பெற்றுள்ளதும் மகிழ்வே.உங்களை ராஜரீக விடயமாகத் தான் கைது செய்யவேண்டிய நிலை ஏற்பட்டது.என்னை நீங்கள் தமிழ்த்துரோகி என்று கூடக் கூறலாம்.ஆனால் அரசு நடத்தவேண்டிய பொறுப்பில் என் நிலை அப்படி.”

“இல்லை ஐயா,நீங்கள் நினைப்பது போல் என்னை ஏன் சிறைப்படுத்தினீர்கள் எனக் கேட்பதற்காக நான் இங்கு வரவில்லை.”

:ஓ!அப்படியா?வேறென்ன வேண்டும்?’

பேராசிரியர் ஏதேனும் ஓர் உதவி கேட்டு வந்திருப்பார் எனவும் அதனைச் செய்யக் காத்திருப்பதைப் போலவும் அவர் மொழியமுத்தமும் உடல்மொழியும் பறைசாற்றின.

“ஐயா!நம் அரசின் கொள்கை தமிழ்வழிக்கல்வி!அதனை வலியுறுத்தத் தான் நான் பெருநடைப் பயணம் மேற்கொள்ளத் திட்டமிட்டேன்.நான் சிறைப்பட்டதற்கு ‘ராஜரீக’விடயம் காரணம் என்கிறீர்கள்.நான் சிறையில் இருக்கும் போது என் வேலை பறிக்கப்பட்டதற்கு என்ன காரணம்?”

“உங்கள் வேலை போனதற்கு நான் காரணம் அல்ல.உங்கள் கல்லூரி நிருவாகம் தான் அந்த நடவடிக்கையை மேற்கொண்டது.”

“இல்லை ஐயா.என் கல்லூரித் தாளாளர் அரசு வற்புறுத்தியதால்தான் பணிநீக்கம் செய்ததாக மடல்வழி விளக்கம் அளித்துள்ளார்.இதோ, மடல் இருக்கிறது.”

“அல்லவே அல்ல.உங்கள் வேலை என்பது முற்றிலும் உங்கள் கல்லூரி விவகாரம்.அரசு தலையிடவும் இல்லை.தலையிடத் தேவையுமில்லை.”

“முதலமைச்சர் வலியுறுத்தியதாலேயே என்னைப் பணிநீக்கம் செய்ததாகக் கல்லூரித் தாளாளர் கூறுகிறார்.”

“இல்லை ஐயா.நாம் இதனை மறுக்கிறேன் என்பதை உங்கள் நிருவாகத்துக்குத் தெரியப்படுத்துங்கள்.ஐயா.வேறு ஏதாவது..?”

“ஐயா! வேறொன்றும் இல்லை ஐயா. நான் விடைபெறுகிறேன்.இந்தச் செய்தியைத் தெளிவுபடுத்திக் கொள்ளவே நான் வந்தேன்.”

“நல்லது ஐயா.நீங்கள் எப்போது வேண்டுமானாலும் வரலாம்.உங்களை நேரில் சந்தித்ததில் எனக்குப் பெரும் மகிழ்ச்சி.”

இவ்வாறு கூறும் முதல்வர் எழுந்துநிற்கிறார்.பேராசிரியருடன் வருகிறார்.தம் அலுவலக வாயில்வரை வந்து பின் கைகூப்பிப் பேராசிரியரை வழியனுப்புகிறார்.

இந்தச் செய்திகளைத் தொகுத்துக் கூறிய எங்கள் தந்தையார் இதை ஒரு பெருமையாக யாரிடமும் கூறவேண்டாம்.இதனை எங்கும் பகிர்ந்திடவேண்டாம் என வலியுறுத்திக் கூறினார்.

முதலமைச்சர் பொறுப்பில் இருப்பவர் எனினும் ஒரு தமிழ்ப்பகைவர்’இந்தி எதிர்ப்புப் போராளிகள் பலரின் இறப்புக்குக் காரணமானவர்.அவர் பெருமதிப்பை வெளிப்படுத்தினார் எனக் கூறவும் நாணினார் பேராசிரியர்.

அப்போது மட்டுமல்ல,வேறெப்போதும் இதனை வெளிப்படுத்தியதில்லை.

ஒரே ஒரு குறள் எங்கள் உள்ளத்தில் பதிந்திருக்கவேண்டும் எனக் கூறினார்.

“ஒட்டார் பின் சென்றொருவன் வாழ்தலின் அந் நிலையே கெட்டான் எனப்படுதல் நன்று”

இந்தக் குறளை எப்போதும் நினைவில் கொள்ளவேண்டும் என்று இந்த நேரத்தில் மட்டுமல்ல, இன்னொரு தருணத்திலும் கூறினார்.

அது எப்போது?ஏன்?

1965 செபுத்தம்பர் அல்லது அக்குதோபர்;ஒன்பான் இரவு (நவராத்திரி) விடுமுறைக் காலம்.

திருநகர் அஞ்சல் நிலையத்திற்குச் சென்று அஞ்சல்கள் வந்திருந்தால் பெற்றுக்கொண்டு அப்படியே பொடிநடையாகத் திருப்பரங்குன்றம் குறள்நெறி அச்சகத்திற்கு நடந்துசெல்லத் திட்டமிட்டிருந்தோம்.

அன்று வந்திருந்ததோ ஒரே ஒரு அஞ்சல்-ஆம் உள்நாட்டஞ்சல்.தந்தையாரின் முகவரி ஆங்கிலத்தில் எழுதப்பெற்றிருந்தது.

“நமக்கு யார் ஆங்கிலத்தில் முகவரியிட்டெழுதுவார்கள்?சரி,நீயே பிரி.பிரித்துப் படி.”தந்தையின் ஆணை.

மடலைப் பிரித்துப் படித்தேன்.

“அன்பு நண்பர் இலக்குவனார்க்கு,

உங்கள் நலமறிய அவா.உங்கள் புலமையும் கல்வியும் ஒப்பற்றன.ஆயின் வறிதே கழிகின்றன.நீங்கள் கல்விநிலையத்தை அணிசெய்யவேண்டும். பாழாய்ப்போன அரசியல் உங்கள் இயல்புக்கு ஒவ்வாது. ஆந்திர உசுமானியாப் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைக்குத் தலைமைப்பதவி வெற்றிடமாக உள்ளது. கல்விமுதிர்ச்சியும் ஆய்வுத்தகைமையும் வாய்த்த பெரும்புலவராகிய நீங்களே இப் பதவிக்கு ஏற்றவர் எனப் பரிந்துரைத்துள்ளேன்.அருள்கூர்ந்து நீங்கள் அப் பதவியை ஏற்று அணிசெய்யவேண்டும்.எனக்குத் தங்கள் இசைவைத் தெரிவித்தால் போதும்.”

இந்தப் பொருள்கொண்ட வாசகங்கள் ஆங்கிலத்தில் எழுதப்பெற்றிருந்தன.நன்கு அகவைமுதிர்ந்த ஒருவரின் சாய்வெழுத்து வடிவில் ஆங்கிலமொழியில் அமைந்த அம் மடலைக் கையில் ஒரு மலரை ஏந்துவதைப் போன்று ஏந்திநிற்கிறேன்.

“என்ன மறைமலை?என்ன நினைக்கிறாய்?”

எனக்கு ஒன்றும் புரியவில்லை. பல்கலைக்கழகப் பேராசிரியர் பதவி.தேடிவந்துள்ளது. அவ்வளவுதான் எனக்குப் புரிந்தது.

“இன்னுமா தெரியவில்லை” அவருக்கே உரிய அந்தப் புன்முறுவல்.

எந்தச் சூழலிலும் மாறாத புன்முறுவல்.

“இன்னுமா தெரியவில்லை?நம்மை விலைபேசுகிறார்களடா!வெளியே விட்டுவைத்தால் இந்தி ஆதிக்கத்தை எதிர்ப்பான். ஆட்சிக்குத் தொல்லை கொடுப்பான் என்று பொறியில் மாட்ட நினைக்கிறார்கள்? “

“மறைமலை!காலத்தாழ்வு வேண்டாம்.மடலைக் கிழித்துப் போடு.”

உடனே கிழித்துப் போட்டேன்.

“வீட்டில் இப்படி ஒரு மடல் வந்தது என்று யாரிடமும் சொல்லவேண்டாம்.சரியா?”

இப்போதுதான் கிழித்தெறியச் சொன்னதன் காரணம் தெரிந்தது.

அப்போதும் இந்தக் குறளோடுதான் உரையாடலை நிறைவுசெய்தார்.

“ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந் நிலையே கெட்டான் எனப்படுதல் நன்று.”

இப்போது மீண்டும் பின்செல்கிறோம்.

1965 சூன்19.

பேராசிரியருக்கு வழங்கப்பெற்ற சிறைவிடுப்பு ஆணை ஒரு கட்டுப்பாட்டுடன் அமைந்தது.அதாவது நாள்தோறும் திருப்பரங்குன்றம் காவல்நிலையம் சென்று கையொப்பமிடவேண்டும்.அங்ஙனம் கையொப்பமிட ஒருநாள் தவறினாலும் உடனே மீண்டும் சிறைக்கு அனுப்பப்பெறுவார் என்பதே அந்தக் கட்டுப்பாடாகும்.

இன்றைய தமிழ்நாட்டில் காவல்நிலையங்கள் பொறுப்பு மிக்க சமூகமையங்களுள் ஒன்றாக விளங்குகின்றன.

காப்புக்கைதிகள் மரணம்,விசாரணைக்கு அழைத்துச் செல்லப்படுவோர் குளியலறையில் வழுக்கிவிழுந்து கைகால் முறிவு என்னும் விரும்பத்தகாத செயல்கள் சில நடப்பது உண்மைதான். ஆனால் காதல்திருமணங்கள் ஆணவக்கொலைகளில் முடிந்து விடாமல் காக்கும் புகலிடங்களாகவும் அவை செயற்படுகின்றன. யாரோ தவறவிட்ட பணத்தை நாணயமாகத் திருப்பிக் கொடுக்கும் ஓட்டுநர்களுக்குப் பரிசு வழங்கிப் பாராட்டும்

புகழிடங்களாகவும் பெற்றோர் தவறவிட்ட குழந்தைகளை மீட்டுக் கொடுக்கும் சேவை மையங்களாகவும் காவல்நிலையங்கள் செயற்படுவதை மறுக்கமுடியுமா?

ஐம்பத்தைந்தாண்டுகளுக்கு முன்னர் காவல்நிலையங்கள் என்றாலே "கௌரவமான குடும்பத்தைச்" சேர்ந்தவர்கள் போகக் கூடாத இடங்களாகக் கருதப்பட்டன. இன்றைக்குப் ' புகார்' அளிக்க காவல்நிலையத்திற்குத் தயக்கமின்றிச் செல்வதைப் போன்று அக் காலத்தில் யாரும் சென்றதாகக் கூற இயலாது.அத்தகைய சூழலில் வழக்கறிஞர்களின் துணை நாடுவார்கள். கொலை செய்தவர்கள், கொள்ளையடித்தவர்கள்,சாராயம் காய்ச்சியவர்கள், கடத்தல் அல்லது வழிப்பறியில் ஈடுபட்டவர்கள்,அல்லது இவை போன்ற குற்றம் சுமத்தப்பட்டவர்கள் கூடும் குற்றமையங்களாகளாகவே காவல்நிலையங்கள் அன்று காட்சியளித்தன. அத்தகைய காவல்நிலையத்தில் ஒரு மூத்த கல்வியாளர் நாள்தோறும் சென்று கையெழுத்துப் போடுவது என்பது கற்பனை செய்தும் பார்க்க இயலா ஒன்று.

பேராசிரியர் நினைத்திருந்தால் அவ்வளவு மதிப்பும் சிறப்பும் அளித்த முதல்வரிடம் இதனை எடுத்துக்கூறி இதனை விடுவித்திருக்கலாம்.

"ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந் நிலையே கெட்டான் எனப்படுதல் நன்று." என்று குறள்நெறி போற்றும் பேராசிரியர் இவ்வாறு பகைவரிடம் சலுகை கேட்பாரா?

காவல்நிலையத்தில் நாள்தோறும் சென்று கையெழுத்துப் போடுவது தமது தமிழ்ப்பணிக்கு வழங்கப்பெற்ற சிறப்பு எனப் பேராசிரியர் கருதினார். அதற்காக நாணமோ கூச்சமோ தேவையில்லை என எண்ணினார்.

இந்த நிலைக்கு நாணவேண்டியது தமிழ்நாடு அல்லவா?'.சான்றோரும் உண்டு கொல்? சான்றோரும் உண்டு கொல்?' எனச் சாம்பிப் புழுங்கி வருந்தவேண்டியது தமிழர்கள்தான்.

தமிழ்நாட்டுச் சட்டப் பேரவையில் எதிர்க்கட்சித் துணைத்தலைவர் கலைஞர், முதல்வரிடம் இந் நிலையை எடுத்துரைத்தார்.

“தமிழ்த்தாயையே காவல்நிலையத்தில் போய் கையெழுத்துப் போடச் சொல்வதைப் போன்றது இச் செயல்.உடனே இதனைத் திரும்பப்பெற வேண்டும்” எனச் சட்டப்பேரவையில் ,முழங்கினார்.

முதல்வர் மசிந்தபாடில்லை.

26/8/1965 பேராசிரியர் மீதான வழக்கு திரும்பப்பெறப்பட்டது

## காவல்நிலையத்தில் கையெழுத்துப் போடும் பணி நிறைவுற்றது



மதுரையில் பேராசிரியர் இலக்குவனர் கைதுசெய்யப்பட்டிருக்கிறர்.
(தலையங்கம் 2-ம்பக்கம்)

முரசொலி வெளியிட்ட கருத்துப்படம்

**இலக்குவனாரை விடுதலை செய்ய தமிழரசுக் கழகக் கோரிக்கை**

**பாகிஸ்தான் ஆக்கிரமிப்புக்கும் கண்டனம்**

சென்னை, செ. 9— கல்லூரிகளில் தமிழைப் பயிற்று மொழியாக்க வேண்டுமென்ற தமிழக அரசின் கொள்கைக்குப் பொது மக்களுடைய அக்கறையையும், ஆதரவையும் திரட்டித் தருவதற்காக பேராசிரியர் இலக்குவனார் மேற்கொள்ளவிருந்த பிரச்சாரப் பயணத்தைத் தடுத்து பாதுகாப்புச் சட்டத்தின்படி அவரை சிறையிலடைத்துள்ள அரசினரின் வன்செயலானது தமிழ் மொழியின் வளர்ச்சியில், அரசினருக்கு இருப்பதாகக் கூறப்படும் நல்லெண்ணத்தைச் சந்தேகிக்கும் படி செய்வதாக இருக்கிறது. ஆகவே அவரை உடனடியாக விடுதலை செய்யுமாறு தமிழக அரசினைக் கேட்டுக் கொள்கிறதென்று இன்று கூடிய தமிழரசுக் கழ...

...வதற்கு மத்திய அரசை வலியுறுத்த தமிழரசுக் கழகத் துணைக்குழு இம்மாத இறுதியில் டில்லி செல்லுமென்றும் [illegible], தமிழரசுக் கழகத் தலைவர் ம. பொ. சி. தலைமை வகிப்பார் என்றும் தீர்மானத்தில் கூறப்பட்டிருக்கிறது.

**இறுதி வரை போராடுக**

இந்தியாவின் ஒரு பகுதியான கட்ச் பிரதேசத்தின் மீது நியாயமற்ற முறையில் உரிமை கொண்டாடி, ஆக்கிரமிப்பு நோக்கத்துடன் பாகிஸ்தான் இந்தியா மீது படையெடுத்திருப்பதை இச் செயற்குழு வன்மையாகக் கண்டிக்கிறது.

இலக்குவனார் சிறைப்படுத்தப்பட்டவுடனேயே இந்தியப் பொதுவுடைமைக் கட்சித்தலைவர் **கே.டி.கே.தங்கமணி அவர்களும் தமிழரசுக்கழகத் தலைவர் ம.பொ.சி.அவர்களும் அரசின் இச் செயலுக்குத் தமது கண்டனத்தைத் தெரிவித்தனர்.**

# தமிழின் பிள்ளைகள்

-பேராசிரியர் சி.இலக்குவனார்

மலையாளம்:

மலையாளம் என்ற சொல் தமிழ்ச் சொல்லேயாகும். மலையிடத்தை ஆட்சியாகக் கொண்டது என்னும் பொருளதாகும். மலையாளம் என்ற சொல் மொழியைக் குறிக்கும். கேரளம் என்ற சொல் நாட்டைக் குறிக்கும். இச்சொல் சேரலன் என்ற தமிழ்ச் சொல்லின் வேறு வடிவமேயாகும். சவுக்குப் போலியாகக் க வருவது இயல்பு. சீர்த்தியே கீர்த்தியாகவும், செம்பே கெம்பாகவும் (கன்னடத்தில்) உருமாறியுள்ளமையைக் காண்க. மலையாள நாடு தமிழிலக்கியங்களில் சேரநாடு என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. அதனையாண்ட அரசர்கள் சேரர் என்றும் சேரலர் என்றும்அழைக்கப்பட்டனர். சேரன் செங்குட்டுவன், களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல், தகடூர் எறிந்த பெருஞ்சேரல், குடக்கோ இளஞ்சேரல் என்னும் பெயர்களை நோக்குக. சேரல் சேரலன் ஆயது, தென்னவன் சேரலன் சோழன் (திருவாசகம்). செருமாவுகைக்கும் சேரலன் காண்க. (திருமுகப்பாசுரம்) என்னும் இலக்கிய வழக்குகளை நோக்குக. சேரலன் கேரலன் ஆகிப் பின்னர் கேரளன் ஆகியது. ஆதலின் கேரளன் என்ற சொல்லின் தோற்றத்திற்கு வேறு மூலம் தேடி உரைப்பது உண்மை நிலைக்கு மாறுபட்ட தாகும்.

மலையாள மொழி வழங்கும் நாடாக இன்று கருதப்படும் பகுதி கி.பி.பத்தாம் நூற்றாண்டு வரைச் செந்தமிழ் நாடாகவே இருந்துள்ளது. செந்தமிழ் இலக்கியங்களாம் ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம், புறப்பொருள் வெண்பாமாலை, ஆதியுலா, பெருமாள் திருமொழி முதலியன இப்பகுதியில் தோன்றியனவே.

கன்னடம்:

மலையாளத்தை அடுத்துத் தமிழோடு நெருங்கிய தொடர்பினைக் கொண்டிருப்பது கன்னடம். கன்னடம் என்ற சொல் கருநாடகம் என்ற சொல்லின் சிதைவாகும். அதிலிருந்து தோன்றிய கன்னடம் மொழியைக் குறிப்பதாகும்.

கி.பி.ஆறாம் நூற்றாண்டில் வாழ்ந்தவரெனக் கருதப்படும் குமாரிலப்பட்டர் தென்னிந்திய மொழிகளைக் குறிக்குங்கால் ஆந்திர திராவிட பாஷா என்று குறிப்பிட்டுள்ளார். ஆந்திரம் தெலுங்கையும், திராவிடம் தமிழையும் குறிப்பதாகும். ஆதலின் கன்னடம் கி.பி.ஆறாம் நூற்றாண்டளவில் தனிமொழியாக உருப்பெறவில்லை.

பம்பாய் மாகாணமும் அய்தராபாத்துச் சீமையும் சென்னை மாகாணமும் கூடுகின்ற இடத்துக் கொடுந்தமிழ் வழக்கு கி. பி.ஆறாம் நூற்றாண்டுக்குப் பின்னால் வடசொற் கலப்பு மிகுதியாலும் ஒலி வேற்றுமைச் சிதைவாலும் கன்னடமென வேறு மொழியாகப் பிரிந்துவிட்டது.

கன்னடம் திரிந்துள்ள முறைகள்:-

1. ப ஹ வாக மாறியுள்ளது.

பள்ளி – ஹள்ளி; பாடு – ஹாடு.

2. உயிரீற்றுப் பேறு.

எதிர் – எதிரு; இருந்தேன்_இருந்தேனெ.

3. தொகுத்தல் திரிபு.

இருவர்-இப்பரு; இருந்தேன்-இத்தேன.

4. வல்லொற்று மிகாமை.

ஓலைக்காரன்_ஓலகார; நினக்கு – நினகெ.

5. சொற்றிரிபு.

மற்றொன்று_ மத்தொந்து;

முதலாயின_ மொதலானய.

6. போலி.

வேடர்_பேடரு: செலவு_கெலவு.

7. எதிர்மறை இடைநிலைக் குறுக்கம்.

இராதே-இரதெ.

8. பெயரீற்றுப் பால் விகுதிக் கேடு.

குருடன் – குருட; மகன்-மக;

அப்பன் -அப்ப.

9. வேற்றுமை உருபின் திரிபு.

நின்னால்_நின்னிந்த; நின்கண்_ நிந்நொள்_நிந்நல்லி.

10. விகுதி மாற்றம்.

அன் அம் ஆதல்;

செய்கின்றேன்-செய்தபெம்.

கன்னடச் சொற்கள் கிரேக்க மொழியார் நூல்களில் காணப்படுகின்றவென்றும், அந்நூல்களின் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு என்றும் கூறிக் கன்னடத்தின் பழமையை நிலைநாட்டுவாருமுளர். கன்னட மொழியின் பழமையான நூல் கவிராச மார்க்கம் என்ற இலக்கண நூல்தான். அதன் காலம் கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டு என்பர். அஃது ஓர் அணியிலக்கண நூலாக இருத்தலினால் அதற்கு முன்பு பல இலக்கண இலக்கியங்கள்

இருந்திருக் கக் கூடும் என்பாரும் உளர். கி.பி.ஆறாம் நூற்றாண்டுக்கு முன்னர் கன்னட, தெலுங்கு, மலையாள மொழிகளில் இலக்கியம்  தோன்றவில்லை என்று ஆராய்ச்சியாளர் வரையறுத்துள்ளனர்.

தெலுங்கு:

இதனைத் தமிழின் முதல் மகள் என்று கூடக் கூறலாம். தென்னகத் திராவிட மொழி களுள் முதன் முதலாகத் தமிழ்த் தாயினின்றும் தொடர்பு நீங்கி வாழத் தொடங் கியது தெலுங்கு தான். தொல்காப் பியர் காலமாம் கி.மு.ஏழாம் நூற்றாண்டு அளவிலேயே தமிழ் என்று அழைக்கப் படுதலை இம்மொழி இழந்துவிட்டது. வடவேங்கடத்துக்கு அப்பால் வழங்கிய இதனைத் தமிழர் வடுகு என்று அழைத்தனர். ஆரியர் ஆந்திரம் என்று அழைத்தனர். தெலுங்கு என்பது தெலுங்கு மொழிக்குரியோரே சூட்டிக்கொண்டது என்பர். தெலுங்கு என்னும் சொல் திரிகலிங்கம் என்பதனின்றும் பிறந்தது என்பர். திரிகலிங்கம், திரிலிங்கம், தெலுங்கம், தெலுங்கு என வந்தது என்பர். நாட்டின் பெயரால் வழங்கிய இப்பெயர் பின்னர் மொழியின் பெயராயிற்று. தெலுங்கு என்னும் பெயர் தெலிங்க – தைலிங்க – தெலுகு, தெனுங்கு – தெனுகு என்னும் சொற்களாகவும் வழங்கி வருகின்றது. தேன் போன்று இனிமைதரும் மொழியாதலின் தெனுகு எனப்பட்டது என்பர்.

ஆரிய மொழிக் கலப்பு அற்றிருந்த தமிழ், கொடுந்தமிழாகிப் பின்னர் ஆரிய மொழிக் கலப்பால் வேற்று மொழியாகிவிட்டது. தெலுங்கு நாட்டின் ஊர்ப் பெயர்களில் பல இன்றும் தமிழ்ப் பெயர்களாகவே உள்ளன. தமிழ்ச் சொற்களெல்லாம் தெலுங்கில் உருமாறி வழங்குகின்றன. தமிழுக்கும் தெலுங்குக்கும் தொடர்பு கிடையாது என்று எண்ணும் அளவிற்கு உருமாறியுள்ளன. நுணுகி ஆராயும் மொழிநூற் புலவர்க்கே சொற்களின் உண்மை வடிவங்கள் தமிழுக்குரியன என்று புலப்படும்.

தமிழ்ச் சொற்கள் தெலுங்கில் திரிந்துள்ள முறைமையைப் பின்வரும் காட்டுக்களால் அறியலாம்.

1. இ எ யாகும்.

கோணி>கோனெ விலை>வெல;

திரை>தெர.

2. உ, அ வாகும்.

ஊற்று>ஊட்ட; பாட்டு>பாட்ட;

தட்டு>தட்ட; போக்கு>போக்க.

3. உ ஒ வாகும்.

புகை>பொக; உடல்>ஒடலு;

முனை>மொன; உரை>ஒர.

4. ஐ, அ வாகும்.

பொம்மை>பொம்ம; உவமை>உவம;

குப்பை>குப்ப

5. ஐ, எ யாகும்.

கட்டை>கட்டெ; திண்ணை>தின்னெ.

6. ண, ன வாகும்

அண்ணன்>அன்ன; வெண்ணெய்> வென்ன; எண்ணிக்க>என்னுக்க.

7. ந, ம வாகும்.

நீர்>மீரு; நாம்>மேமு.

8. ய,ச வாகும்.

உயிர் > உசுரு; பயறு>பெசறு.

9. ழ, டவாகும்.

நிழல்>நீட; பாழ்>பாடு; கோழி>கோடி;

மேழி>மேடி.

10. ற, ர வாகும்.

மீறு>மீரு; வேறு>வேரு.

11. ற்ற, ட்ட வாகும்.

ஊற்று>ஊட்ட; புற்று>புட்ட;

மாற்றம்>மாட்ட; சுற்று>சுட்ட;

பற்று>பட்டு.

இவ்வாறு உருமாற்றம் அடைந்த சொற்கள் இருப்பினும், உருமாற்றம் அடையாதனவும் இன்னும் வழக்கில் உள்ளன; ஒலித்துணை காரணமாக உகரம் சேர்ந்தன எளிதில் தமிழ் என்று அறியக்கூடியன.

உருமாற்றம் இல்லாதன: செப்பு, ஈ, கொட்டு, உண்டு, குக்கல், மஞ்சு, கணக்கு, அச்சு, தொட்டி, பொட்டு, வெறி, கூலி, கொண்டி, முடி முதலியன.

உகரம் சேர்ந்தன: தெய்வமு, கோணமு, ஏலமு, பக்கமு, பாகமு, சுங்கமு, மேளமு, மாதமு, சமமு, களங்கமு, கலகமு, கடினமு, குடும்பமு, நாடகமு முதலியன.

தமிழ்ச் சொற்களின் இறுதி மெய்யுடன் உகரம் சேர்த்து ஒலித்தால் தெலுங்காய்விடும். தெலுங்கு மொழியில் அனைத்துச் சொற்களும் உயிரிறுதியே கொண்டுள்ளன என்பது அறியத்தக்கது.

(எடுத்துக்காட்டுகள் திராவிடத்தாய் என்னும் நூலின் துணைகொண்டு எழுதப்பட்டன.)

துளு:
திருந்திய தமிழ்க் குடும்ப மொழிகளுள் துளுவும் ஒன்று. பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் தமிழ்த்தாய் வாழ்த்தில், கவின் மலையாளமும் துளுவும் என இடம் பெறும் சிறப்பினைப் பெற்றுள்ளது. குடகு என்னும் மொழியை ஒத்து கன்னடத்தினின்றும் சிறிதும், மலையாளத்தினின்றும் பெரிதும் வேறுபட்டுள்ளது. தமிழ்ச் சொற்கள் பலவற்றை அப்படியே கொண்டிருப்பினும் பல சொற்களை உருமாற்றியே வழங்குகின்றது.
இதற்குத் தனி எழுத்தோ பழைய இலக்கியச் சிறப்போ இல்லை. கிருத்துவத் தொண்டர் குழாம் கன்னட எழுத்திலும் துளுவப் பார்ப்பனர் மலையாள எழுத்திலும் இம்மொழியை எழுதி வருகின்றனர்.
கொடுந்தமிழாக இருந்து தமிழிலிருந்து பிரிந்து போன காலம் பதினாறாம் நூற்றாண்டு என்பர். துளுவ வேளாளர் எனத் தமிழ்நாட்டில் வாழும் மக்கள் துளுவ நாட்டிலிருந்து வந்து இங்கு குடியேறியவர் என்பர். அவர்கள் மொழி என்றுமே தமிழாயிருந்ததினால் துளுவ மொழி யென்பதும் தமிழே என்று அறியற்பாலது.
குடகு:
இதனைக் கூர்க் என்றும் அழைப்பர். திருந்திய திராவிட மொழிகளின் வரிசையில் ஈற்றில் நிற்பது. குடகு என்னும் தமிழ்ச் சொல்லுக்கு மேற்கு என்று பொருள். தமிழ் வழங்கும் பகுதியோர் தமக்கு மேற்கில் உள்ள இடத்தைக் குடகு என்று அழைத்தனர். பின்னர் அப்பகுதியில் வழங்கும் மொழிக்கும் பெயராய்விட்டது. மலைப் பகுதியிடத்தில் உள்ள பழந்தமிழ் மக்கள், முதன்மைத் தமிழ்நாட்டோடு  கூட்டுறவு கொண்டு அடிக்கடிப் பழகும் வாய்ப்பினைப் பெறாத காரணத்தால், இப்பகுதியில் வழங்கிய மொழி நாளடைவில் தமிழுடன் வேறுபடும் நிலையை அடைந்துவிட்டது.
இம்மொழியில் அஃறிணைப் பெயர்கட்குப் பன்மை இல்லை. பேச்சு வழக்குத் தமிழில் வரும் அஃறிணைப் பெயர்களைப் பன்மைப்படுத்துவதில்லை. பேச்சு வழக்குத் தமிழே குடகு மொழி என்பது பொருந்தும்.
அஃறிணை ஒருமை உருபேற்கும் முறை.

| வேற்றுமை | தமிழ் | குடகு |
|---|---|---|
| எழுவாய் | மரம் | மர |
| செயப்படுபொருள் | மரத்தை | மரத்தன |
| கருவி | மரத்தால் | மரதிஞ்சி |
| கொடை | மரத்திற்கு | மரக்க் |
| உடைமை | மரத்தினது | மரத்ர |
| இடம் | மரத்தில் | மரத்_ல் |

இனிக் கருத இருப்பன திருத்தம் பெறாதன என அழைக்கப்படுவன. தமக்கென எழுத்துருவம் பெறாதன. எழுத்துருவம் பெறாத மொழிகள் அடிக்கடி மாறும் இயல்பின. ஆதலின் தாய்த் தமிழோடு பெரிதும் வேறுபடுவன. இம்மொழிக்குரியோர் முதன்மை நிலத்தில் வாழும் தமிழர் கூட்டுறவை இழந்து, மலைகளிலும் காடுகளிலும் ஒதுங்கி வாழ்ந்துவிட்டனர். கல்வியறிவைப் பெற்றிலர். ஆகவே எழுதும் நெறியை அறிந்திலர். இவர்களுடைய பேச்சு வழக்கு மொழி நாளடைவில் பல பெயர்களைப் பெற்றுவிட்டன.

துதம்:

தொத அல்லது துத என்றும் அழைக்கப்படும். நீலமலையில் வாழும் தோதவப் பழங்குடி மக்களால் பேசப்படும் மொழியாகும். நாகரிக வளர்ச்சி பெறாமல் வாழ்வதால் அவர்களைத் தமிழினத்தார் அல்லர் எனத் தள்ளிவிடுதல் சாலாது. தொதம் என்ற பெயர் தொகுதி என்னும் தமிழ்ச் சொல்லினின்றும் தோன்றியது எனப் போப் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். அவர்கள் தொகை எப்பொழுதும் ஆயிரத்துக்குமேல் போகவில்லை என்று அறிஞர் கால்டுவல் குறிப்பிட்டுள்ளார்.

கோதம்:

இம்மொழியும் நீலமலையில் வாழும் பழங்குடி மக்களால் பேசப்படும் மொழியே யாகும். ஆயிரத்திருநூறு மக்களைக் கொண்ட அடிமைத் தொழிலாளர் எனப்படும் இனத்தவர் வழங்கும் மொழி என்பர் அறிஞர் கால்டுவல். இதுவும் தமிழின் சிதைவு மொழி என்பதில் அய்யமன்று.

கோண்டு:

முன்பு கோண்டுவனம் என்று அழைக்கப்பெற்ற மலையும் காடும் மண்டிக்கிடக்கும் நடு இந்தியாவில் வாழும் பழங்குடி மக்கள் மொழியே கோண்டு. இம்மொழியைப் பேசுவோர் தொகை பலவாண்டுகளுக்கு முன்னர் பதினைந்து நூறாயிரம் என்பர். குன்று என்னும் சொல்லே கோண்டு என உருமாறி இருக்கிறது என்பர்.

கூ அல்லது கோந்த்: கோந்தர் என அழைக்கப்படும் மக்கள் மொழியே கூ. ஒரிசாவின் மலைநாட்டில் வாழும் மக்கள் மொழி. குன்று என்ற சொல்லிலிருந்தே கோந்த் என்ற சொல்லும் தோன்றியுள்ளது. அயலவரால் கந்தர் என அழைக்கப்படுகின்றனர். தம் மொழியைக் கூ என்று அழைத்துக் கொள்கின்றனர்.

– (பழந்தமிழ் என்னும் நூலிலிருந்து)

# நிகழ்காலத் தமிழர் மறந்து போயினும்



இன்னலிலே வறுமையிலே துன்புற்றாலும்
கொண்ட கொள்கை மாறாது வாழ்ந்துவந்தீர்;
ஆளுநரோ அமைச்சரோ யாரெனினும்
அன்னைத் தமிழ்க்கொரு தீங்கென்றாலே
அஞ்சாது முன்வந்து எதிர்த்து நின்றீர்;
தமிழ்நலனே இலக்காய்த் தனியொரு மறவராய்ப்
புதிய புறநானூறு படைத்தீர்! ஐயா!
பொதுவாழ்வில் வணிகநோக்கு மிகுந்ததால்
வாழ்வெலாம் துன்பமே பரிசாய்ப் பெற்றீர்:
பதவியைப் பறித்தார்;சிறையிலே அடைத்தார்;
உமக்கு உறுதுணை செய்தவரை மிரட்டினார்;
காவல் நிலையம் வந்தே நாள்தொறும்
கையொப்பமிடச் சொன்னார்; யாரும்
ஆதரிக்கவில்லை என்றெண்ணாது நீங்கள்
வீர வரலாறு சமைத்தீர்! ஆனால்
நன்றியற்ற தமிழர் உம்மை மறந்தார்:
போராளி என்பதன் பொருள்விளக்கமாக
தியாகம் என்பதன் வடிவமாக வாழ்ந்தீர்!
நிகழ்காலத் தமிழர் மறந்து போயினும்
ஒவ்வொரு நொடியும் தமிழ்க்கென வாழ்ந்த
ஒரே தமிழறிஞர் நீரே என்று
வருங்காலத் தமிழினம் போற்றும் ஐயா!
வணங்கா முடியே! உம்மை வணங்குகிறேன்!



குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

மின்னிதழ்:42 ஆவணி-31 -தி.பி.2053 செபுத்தம்பர்-16- பொ.ஆ.2022



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்






மறைமலையடிகள்
(1876–1950)

## தமிழ் மறுமலர்ச்சியாளர் மலர்

பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்
இணையாசிரியர்; தமிழியலன்
இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

# தனித்தமிழ் இயக்கத் தலைவா போற்றி

*16/9/1965 அன்று வெளியிட்ட தமது குறள்நெறி திங்களிருமுறை இதழை மறைமலையடிகள் நினைவுமலராக வெளியிட்டு பேராசிரியர் சி.இலக்குவனார் அச்சிட்டிருந்த முகப்புக்கவிதை*

தனித்தமிழ் இயக்கம் கண்ட தனிப்பெரும் தலைவா போற்றி
கனித்தமிழ் காக்கும் வீரர் கருத்தெலாம் நிறைவாய் போற்றி
பனித்திரை இந்திவென்ற படரொளிச் சுடரே போற்றி
இனித்திட இதயப்பூவில் ஏகினாய் போற்றி போற்றி

துள்ளிடும் பகையைத் தூற்றித் தூள் செய்யும் புயலே போற்றி
எள்ளிடும் அடிமைவாழ்வை எரித்திடும் நெருப்பே போற்றி
வெள்ளநீர்ப் பேச்சால் வெற்றி விளைத்திடும் முகிலே போற்றி
வள்ளுவர் ஆண்டு தந்த வள்ளியோய் போற்றி போற்றி

## பெரியாரும் தமிழும்

ஈபுரூ இலக்கியத்திலும் கிரேக்க இலக்கியத்திலும் காணப்படும் தமிழ்ச் சொல்லாட்சியை அடிப்படையாகக் கொண்டு பழந்தமிழ்ச் செல்வாக்கு மூவாயிரம் ஆண்டுகள் தொன்மை வாய்ந்ததென அறுதியிட்டனர். இப்போது கீழடி மண்பாண்டச் சில்லுகளில் தொல்தமிழ் வரிவடிவங்கள் காணப்பெறும் சூழலில் இன்னும் முற்பட்ட காலத்திற்குத் தமிழின் தொன்மையை அறுதியிடச் சான்றுகள் காட்ட வியலும் எனும் உறுதியைப் பெற்றுள்ளோம். இவ்வளவு தொன்மை வாய்ந்ததென நாம் மகிழ்வு கொண்டபோதிலும் தமிழின் வளர்ச்சி ஒரு தொடர்ச்சியுடன் அமைந்துள்ளதெனக் கூற இயலவில்லை.

சங்க இலக்கியத்திற்குப் பின் அமைந்துள்ள இலக்கியங்களில் வடமொழியின் செல்வாக்கு படிப்படியாக மிகுந்து ஏறுமுகமாகக் காணப்படுவதனையும் வடமொழி மட்டுமன்றி ஆரியரின் நால்வருணப் பாகுபாட்டுமுறையும் இலக்கியத்திலும் இலக்கணத்திலும் ஆழ்ந்த தாக்கத்தைச் செலுத்தி வந்தமையையும், தமிழ் வரலாறு காட்டுகிறது. வேற்றவர் படையெடுப்பும் வந்தேறிகளின் வல்லாண்மையும் தமிழில் பிறமொழிச் சொல்லாட்சிக்கு வித்திட்டன. எனினும் இத்தகைய கடன் சொல்லாட்சிகள் எளிதில் களைந்து விடக்கூடிய களைகளாக இருந்தன. ஆனால் ஆரியரின் ஊடுருவல் இலக்கியப் படைப்பிலும் அமைப்பிலும் இலக்கணப் போக்கிலும் கருத்துருவாக்கத்திலும் ஆழப் பதிந்து தலைமுறைதலைமுறையாகத் தமிழினத்தை அடிமைத்தளையிட்டு வைத்திருக்கும் ஆற்றல் பெற்று விளங்கியது. தமிழனின் தன்னாண்மையையும் தறுகண்மையையும் எடுத்துரைக்கும் சான்றாக விளங்கும் சங்க இலக்கியங்களைவிடப் புளுகுப் புராணங்களும், வழுநிறைந்த இதிகாசங்களும் பெருமை வாய்ந்தவையெனத் தமிழ்ப்புலவர்களே தலையில் வைத்துக் கொண்டாடும் மனப்போக்கு வேரூன்றிவிட்டது. இப் பொருந்தாப் போக்கு ஏட்டுப் படிப்பில் மட்டுமில்லாமல் நாட்டுப்புற நம்பிக்கைகளிலும் நஞ்சு கலந்தது.

பெண்பிள்ளை சிரிச்சால் போச்சு புகையிலை விரிச்சால் போச்சு என்றும்,

கார்த்திகைக்குப் பிந்திய மழையுமில்லை, கர்ணனுக்கு மிஞ்சிய கொடையுமில்லலை என்றும் கற்றறியா மக்கள் வழக்கிலும் இதிகாசப் பொய்ம்மைகள் நிலை நிறுத்தப்பட்டன.

சாப்பாடு என்பது இழிந்தோர் வழக்கு எனவும் போஜனம் என்பதே உயர்ந்தோர் பயன்படுத்தத்தக்கதெனவும் மகாமகோபாத்தியாயர்கள் விளக்கிக் கொண்டிருந்த சூழல் தமிழக வரலாற்றில் தமிழன் விளிம்புநிலைக்குத் தள்ளப்பட்டிருந்தமைக்குச் சான்றாகும்.

தமிழ் மறுமலர்ச்சிக்கு வித்திட்டவர்கள் என வள்ளலார், மாயூரம் மேதை வேதநாயகர், மனோன்மணீயம் சுந்தரனார் ஆகிய மூவரையும் குறிப்பிட வேண்டும்.

புராணப் பொய்ம்மைகளைப் புறந்தள்ளி வைதிகத்தின் நச்சுப் பிடியிலிருந்து தமிழர் சமயத்தை விடுவிக்க முனைந்த வள்ளலார், பயிற்சி மொழியாகவும் வழக்குமன்ற மொழியாகவும் தமிழ் விளங்க வேண்டுமெனவும், சாதிப் பாகுபாடுகளையும் ஆண்-பெண் பாகுபாடுகளையும் வேரறுத்து, கல்வி வாய்ப்பு அனைவர்க்கும் வழங்கப்பட வேண்டுமென வாதாடிய வேதநாயகர், தமிழ்த் தேசியத்தை முன்னிறுத்தியும் அறிவியற் கலைச் சொல்லாக்கம் தமிழில் வளர்ந்தோங்கவும் பாடுபட்ட சுந்தரனார் ஆகியோர் காட்டிய வழிமுறைகளே பாரதியார், மறைமலையடிகள் ஆகியோர்க்கு முன்னோடியாக அமைந்தன. எனினும் இவர்கள் காட்டிய வழிமுறைகள் தமிழனின் அடிமைத்தளையைக் கட்டறுக்கப் போதுமானவையாக விளங்கவில்லை. முறையான தமிழ்க் கல்வி பெறும் வாய்ப்பற்ற, ஏட்டுப்படிப்பை என்றும் போற்றாத, பெரியார் அவர்களே தமிழின் விடுதலைக்கும் தமிழின விடுதலைக்கும் தக்க வழிமுறையைக் கண்டார்.

தமிழ்ச் சங்கங்களைப் பற்றிய கட்டுக்கதைகளையும், புலவர்களைப் பற்றிய பொருந்தாப் புளுகுகளையும் பற்றி நின்ற தமிழறிஞர்களுக்கு, அவர்களின் தவறான நிலைப்பாட்டை யுணர்த்தித் தமிழ் ஆராய்ச்சியைச் சரியான தளத்திற்குக் கொணர்ந்தவர் தந்தை பெரியார் அவர்களே.

தொல்காப்பியரின் இயற்பெயர் திரணதூமாக்கினி எனவும், அவர் அகத்தியரின் மாணவர் எனவும், அகத்தியரின் மனைவி உலோபாமுத்திரையை ஆற்றில் மூழ்கிவிடாமல் காப்பாற்றும் பொருட்டுத் தொட்டுத் தூக்கிவிட்ட காரணத்தால் அகத்தியரால் சாபமிடப்பட்டவர் எனவும் நிலவிய கதைகளைப் பெரியாருக்கு முன்னர் எந்தப் புலவரும் மறுக்க முற்படவில்லை.

மறைமலையடிகளும், சோமசுந்தரபாரதியாரும் பா.வே.மாணிக்க நாயகரும் நேரிய பாதையில் சீரிய ஆய்வு நிகழ்த்திடப் பெரியாரின் சுயமரியாதை இயக்கமே தக்க பின்புலம் அமைத்தது என்பதே தமிழாராய்ச்சி வரலாறு காட்டும் உண்மையாகும்.

*தந்தை பெரியார் பற்றி தமிழர்களில் புரியாதவர்களும், பார்ப்பனர்கள் திட்டமிட்டும் ஒரு பிரச்சாரத்தைச் செய்வதுண்டு. தமிழைக் காட்டுமிராண்டி மொழி என்று சொன்னவர் பெரியார் என்பதுதான் அந்தப் பிரச்சாரம். வெறும் சொற்களின் மீதான பார்வையால் மட்டும் சொல்லப்படும் குற்றச்சாற்று இது. ஆனால், தமிழ் வளர்ச்சிக்காகவும், மேன்மைக்காகவும் தந்தை பெரியார் பாடுபட்டது போலவும், கருத்துகளைச் சொன்னது போலவும் ஆக்க ரீதியாக இன்னொருவர் செய்தார்; சொன்னார் என்று கூறிட முடியாது.*

என்னும் தமிழர் தலைவர் கி.வீரமணி அவர்களின் கருத்து தந்தை பெரியார் தமிழுக்கு ஆற்றிய பணிகளுக்கு ஒரு சுருக்கமான அறிமுகம் என்று கூறத்தக்கது.

*ஆராய்ச்சிக்குரிய படிப்பும், சுயமான கண்ணோட்டமும் ஈ.வெ.ராவுக்கு இல்லை. அவர் சங்க இலக்கியம் பற்றி, காப்பியங்கள் பற்றி ஏன் தமிழ் மொழி பற்றிச் சொல்லி இன்று அச்சில் கிடைக்கும் விஷயங்களையே பாருங்கள். அவற்றை இன்று ஈ.வெ.ராவை ஆதரிப்பவர்கள் எவராவது ஏற்றுக் கொள்வார்களா? தமிழரின் தொன்மை, நாகரிக வெற்றி எதுவுமே அவர் கண்ணுக்குப் படவில்லை. பெரும்பாலும் அய்ரோப்பியப் பகுத்தறிவு நோக்கில் அவற்றையெல்லாம் தூக்கி வீசுபவராகவே அவர் இருந்திருக்கிறார்.-*

என்னும் எழுத்தாளர் செயமோகனின் கூற்று நகைப்பிற்கிடமானது. வடமொழி வல்லாண்மையையும் இந்தியின் கொடுங்கோலாதிக்கத்தையும் அஞ்சாது நின்று எதிர்த்த போராளியாகிய பெரியாரின் மேலுள்ள காழ்ப்பும் பகைமையுமே இக்கூற்றுக்கு அடித்தளமெனல் மிகையன்று.

*இந்திய நாட்டுப் பிற எம் மொழியையும்விட தமிழ், நாகரிகம் பெற்று விளங்குகிறது. தூய தமிழ் பேசுதல் மற்ற வேறுமொழிச் சொற்களை நீக்கிப் பேசுவதால் நம்மிடையேயுள்ள இழிவுகள் நீங்குவதோடு மேலும் மேலும் நன்மையடைவோம் என்பதோடு நம் பழக்க வழக்கங்களுக்கு ஏற்ப நம் மொழி அமைந்திருக்கிறது.*

*வேறு மொழியைப் புகுத்திக் கொள்வதன் மூலம் நம் அமைப்புக் கெடுவதோடு, அம்மொழியமைப்பிலுள்ள நம் நலனுக்குப் புறம்பான கருத்துகள், கேடு பயக்கும் கருத்துகள், நம்மிடைப் புகுந்து, நம்மை இழிவடையச் செய்கின்றன என்பதால்தான், வடமொழியில் நம்மை மேலும் மேலும் அடிமையாக்கும் தன்மை அமைந்திருப்பதால்தான், அதையும் கூடாதென்கிறேன். நமது மேன்மைக்கு, நமது தகுதிக்கு, நமது முற்போக்குக்கு ஏற்ற மொழி, தமிழைவிட மேலான ஒரு மொழி இந்நாட்டிலில்லை என்பதற்காகவே தமிழை விரும்புகிறேனே தவிர, அது அற்புத அதிசயங்களை விளைவிக்கக் கூடியது என்பதற்காக அல்ல*

என்னும் தந்தை பெரியாரின் அழுத்தம் திருத்தமான விளக்கம் மொழிக்கலப்புக்கும் வேற்றுமொழி மேலாண்மைக்கும் எதிரான போர்முரசமாக விளங்குகிறது.

தந்தை பெரியாரின் நிலைப்பாடு முற்றிலும் தனித்தன்மை வாய்ந்த ஒன்று. இதனைத் தெரிந்து கொண்டவர்களே அவரது பல கருத்துகளையும் உரியமுறையில் புரிந்து கொள்ளமுடியும். தமிழை வழிபட்டு நின்றவர்களிடமிருந்து அவர் விலகி நிற்கிறார். தமிழில் வழிபாடு வேண்டுமென்று அவர் குரல் கொடுத்தாரெனினும் தமிழை வழிபாடு செய்வதனை முற்றிலும் எதிர்த்தார். தமிழைப் போற்றிக் கொண்டாடுவதன் மூலம் அதனைத் தக்க கருத்து வெளிப்பாட்டுக் கருவியாக்கி விட முடியாது என்பது அவர் கருத்து.

தமிழ் மொழி, ஆங்கில மொழி இரண்டைப் பற்றிய என்னுடைய கருத்தைப் பலமுறை சொல்லியிருக்கின்றேன். ஆங்கிலம் வளர்ந்த மொழி என்பதும், தமிழ் வளர்ச்சி அடையாத பழங்கால மொழி என்பதும் என்னுடைய மதிப்பீடாகும். இதை நான் சொன்னதற்கான முக்கிய நோக்கம் தமிழ்மொழி - ஆங்கிலமொழி அளவுக்கு விஞ்ஞான மொழியாகவும், பகுத்தறிவு மொழியாகவும் ஆகவில்லை என்பதுதானே தவிர, தமிழ்மீது எனக்குத் தனி வெறுப்பில்லை (விடுதலை, 1.12.1970)

என்று தெளிவாகத் தம் கருத்தினை வெளிப்படுத்தியவர் தந்தை பெரியார்.

"தமிழ் முன்னேற்றமடைந்து உலக பாஷை வரிசையில் அதுவும் ஒரு பாஷையாக இருக்க வேண்டுமானால், தமிழையும் மதத்தையும் பிரித்துவிட வேண்டும். தமிழுக்கும் கடவுளுக்கும் உள்ள சம்பந்தத்தைக் கொஞ்சமாவது தள்ளி வைக்க வேண்டும்.".

என்னும் பெரியாரின் கருத்து செயமோகன் போன்ற போலி முற்போக்காளர்களை எரிச்சலடையச் செய்திருக்கும்.

தமிழ் இலக்கியங்களைப் பற்றிய பெரியாரின் ஆய்வு, பெரியாரியத் திறனாய்வுமுறை என்னும் புதிய ஆய்வுமுறைக்கு வித்திட்டுள்ளது. இனிமேலாவது பல்கலைக்கழக ஆய்வாளர்கள் இத் திறனாய்வுமுறையின் நலன்களை மனத்துட்கொண்டு ஆய்வு மாணவர்களை இத் திசையில் வழி நடத்தினால் தமிழ் விரிவும் வளர்ச்சியும் பெறுதற்குரிய வழிமுறைகள் மலரும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

*(24.12.2010* அன்று சென்னை-பெரியார் திடலில் நடைபெற்ற தந்தை பெரியார் நினைவு நாள் கருத்தரங்கில் மறைமலை இலக்குவனார் வழங்கிய எழுத்துரை)



# மறைமலையடிகள்

(சென்னையில் 24.08.1958-ல் நடைபெற்ற மறைமலையடிகள் நூல் நிலையம் திறப்பு விழாவில் பேரறிஞர் அண்ணா ஆற்றிய உரை - செந்தமிழ்ச் செல்வி திங்கள் இதழ் - செப்டம்பர், 1958)

மறைமலையடிகளாரின் மாண்பினை - எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் வியக்கத் தக்க அவரது மாண்பினை - அவரோடு நெருங்கிப் பழகிய பலரும் எடுத்துரைத்து இருக்கிறார்கள்.
நான் அவரோடு நெருங்கிப் பழகியவன் அல்லன்! அவரோடு எங்களுக்கு ஏற்பட்ட தொடர்பு எல்லாம், இந்த நாட்டில் முதலில் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின் போதுதான்.
மறைமலையடிகளாரது புலமை, இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்த எங்களக்கெல்லாம் பெரும் அரணாக அமைந்திருந்தது. இந்தி தமிழகத்திற்குத் தேவைதானா? அது தமிழகத்திற்குப் பொது மொழி ஆகத்தான் வேண்டுமா? அப்படிப் பொதுமொழி ஆனால் தமிழுக்கு ஏற்படக்கூடிய தீமைகள் என்னென்ன என்பனவற்றையெல்லாம் மறைமலையடிகளார் ஏடுத்துக்காட்டி வந்தார்கள்.
இதைபோல, அவர் மேற்கொண்டிருந்த பல்வேறு முயற்சிகள் இன்று காலத்தால் கனிந்து வருகின்றன.

**தனித்தமிழ் இயக்கத் தந்தை**

மறைமலையடிகளாரது திருப்பெயர் - பெற்றோர் இட்ட இயற்பெயர் - வேதாசலம் என்பதாகும். அதனை அவர் மறைமலையடிகள்என்று மாற்றிக் கொண்டபோது, பலருக்கு ஐயப்பாடு! சிலர், இது என்ன புதியதோர் ஆபத்து? என்று கேட்டனர்.
ஆனால் மறைமலையடிகளாரோ - தமிழனுக்கு எனத் தனிப்பண்பு உண்டு; மொழி உண்டு என்பதை நிலை நாட்டுவதில் மிக்க அக்கறை காட்டினார்.
இந்தப் பண்பும் இந்தத் தமிழ் மொழியும் காப்பாற்றப்படாவிடின், நாளாவட்டத்தில் தமிழர்கள் இந்த மொழியையும் பண்பையும் மறந்து, தங்களுக்கு என உள்ள சீரிய தன்மையை இழந்து விடுவர். உலகில் இன்றுள்ள வாழ்விழந்த இனத்தாரோடு தமிழரும்

சேர்க்கப்பட்டு விடுவர். எனவே, தமிழர்கள் தங்கள் மொழியையும், பண்பையும் மறந்துவிடக் கூடாது என்பதாக மறைமலையடிகளார், தனித் தமிழ் இயக்கம் என்னும் பெயரால் சீரியதோர் முயற்சியை மேற்கொண்டார்கள்.

இந்த இயக்கத்தை அவர் தோற்றுவித்தபோது, இது வெற்றி பெறுமா? என்று சிலரும் - இது தேவைதானா? என்று வேறு சிலரும் - இதனால் தமிழகத்திற்கும், தமிழர்களுக்கும் என்ன இலாபம்? என்று மற்றும் சிலரும் வினவத் தொடங்கினார்கள்.

ஆனாலும், இன்று யார் நடத்துகின்ற ஏடானாலும் - தனித் தமிழ் இயக்கத்தை எதிர்த்தவர்கள் ஏடானாலும் - அதில் தனித் தமிழ் நடை கையாளப்படுவதை நாம் கண்கிறோம்.

மறைமலையடிகள், தமது புலமையும் திறமையும் சாதாரணமாக வெளிப்பட்டால் மட்டும் போதாது; அந்தப் புலமையும் திறனும் தமிழர்களுக்கு வாழ்வு அளிக்கும் நோக்கம் உடையனவாக இருக்க வேண்டும் என்று கருதினார்.

அத்தகைய பெருந்தகை - பெரும் புலவர் - தம் வாழ்நாளில் தொட்டுத் தொட்டுப் பார்த்து, எடுத்து எடுத்து படித்த ஏடுகளைக் கொண்ட நூலகத்தை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் இன்று திறந்து வைத்துள்ளனர். தமிழரகளுக்கு நல்ல ஆராய்ச்சித் திறனைத் தரவல்லது ஆகும் மறைமலையடிகளாரின் இந் நூலகம்.

ஆயிரம் சேக்சுபியர்கள் வந்தாலும் . . . ?

இன்று நாட்டில் படிப்பது தேவைதானா? என்ற ஒரு வேடிக்கையான கேள்வியும் எழுப்பப்படுவதைக் கேட்கிறோம்.

கல்லின் ஓசையிலிருந்தும் கருத்துப் பெறலாம்.

ஓடும் ஆற்றிலிருந்தும் கருத்துப் பெறலாம்

என்று சேக்சுபியர் கூறினார். பெரியவர்கள் சொல்வதைக் கட்பதாலும், காட்டும தெளிவைக் காண்பதாலும், அறிவு பெற முடியாதா? என்று சிலர் கேட்கிறார்கள். இத்தகையோருக்கு, ஆயிரம் சேக்சுபியர்களின் அறிவுக் கதிர்களும் பயன்படமாட்டா!

இந்தக் கேள்வியையும் தாண்டி, படிக்கவேண்டும் என்ற ஆர்வம் மெல்ல அரும்பியயிருப்பதைக் காண்கிறோம்.

ஆனால் இதே நேரத்தில் - தமிழர்கள் செய்ய வேண்டிய காரியங்கள் இரண்டு உள.

ஒன்று - படித்த சிலவற்றை மறக்க வேண்டும்; படிக்க மறந்துவிட்ட பலவற்றைப் படிக்கவேண்டும்.

இவைதாம் தமிழர்கள் ஒரே நேரத்தில் செய்ய வேண்டிய இரண்டு காரியங்கள்.

எதையோ ஒன்றைப் புகுத்த வேண்டும் என்ற நோக்கம் உடைய நூல்கள் இருக்கின்றன. எதையோ சிந்தித்துப் பார்க்கத் தூண்டும் நீல்கள் இருக்கின்றன.

இதை உணர்ந்த மறைமலையடிகள் - தமிழர்களுக்கு, அவர்களது தனி நாகரிகம் ஏது? அவர்கள் வணங்கத் தக்கன எவை? அவர்கள் மொழியின் மாண்புகள் என்னென்ன? என்பனவற்றையெல்லாம் அராய்ந்து, மக்கள் மன்றத்திற்கு எடுத்துச் சொன்னார்கள்.

அவர்தம் கருத்துக்களை அறிகிறவர்கள், படிக்கத் தக்க நூல்கள் எவை என்பனவற்றை அறிந்து கொள்ள முடியும்; சிந்திக்கத் தூண்டும் நூல்கள் எவை என்பதைப் புரிந்துகொள்ள முடியும்.

இப்படிச் சொல்லும்போது, அண்ணாதுரை! மறைமலையடிகள் சமயத் துறையில் - சைவத்தில் - நம்பிக்கை வைத்திருந்தாரே, உங்களுக்கு அது சம்மதமா? என்று சிலர் கேட்கக்கூடும்.

**அன்பும் அருளுமே சைவம் என்று மறைமலையடிகள் கூறியதுதான் சைவம் என்றார் - நான் மிகச் சிறந்த சைவன்; ஆண்டவன் ஒருவனே! என்பதுதான் சைவம் என்றால் நான் மிகச் சிறந்த சைவன்.**

தேங்காய் - மாங்காய் தின்பதைப்போல் . . . ?

இன்று உலகில் மார்க்கத்தை (அறவழியை) மட்டுமல் - எல்லாவற்றையுமே, இது எனக்கு என்ன பயன் தரும் என்ற நோக்கில்தான் உலகம் காண முற்பட்டிருக்கிறது.

இதை ஆங்கிலத்தில் (ஞாடைடிளடியீல டிக றுயீசவா) - பயன் நாடும் தத்துவம் என்று கூறுவார்கள்.

மனிதனுக்கு இருக்கிற காலம் மிகக் குறைவானது; இந்தக் குறைந்த காலத்திற்குள் இதைத்தான் செய்யவேண்டும் - அதை இப்படிச் செய்யவேண்டும் என்பதை எளியவர்களுக்கும் விளங்கக்கூடிய வகையிலும், பயன்படக்கூடிய வகையிலும் எடுத்துரைக்கவேண்டும்.

தத்துவ நூல்களிலிருந்து கறக்கவேண்டிய முறைப்படி கருத்துக்களைக் கறந்து, கழனிகளில் பணி புரியும் உழவர்களுக்கும், அலைகளில் அவதியுறும்

தொழிலாளருக்கும், ஆசைக்கும் அச்சத்திற்கும் இடையில் ஊசலாடிக் கொண்டிருக்கும் நடுத்தர மக்களுக்கும் பயன்படத் தக்க - புரியத்தக்க வகையில் - தரவேண்டியுள்ளது. பசுவினிடத்தில் பால் இருக்கிறது என்றால் - பசுவின் உடல் முழுதும் நாம் பாலைத் தேடிச் செல்வது இல்லை. கறக்கவேண்டிய இடத்தில் முறைப்படி கறந்தால்தான் பால் கிடைக்கு.ம அதனால் பயன் கிடைக்கும்.

அதைப் போல, தமிழ் இலக்கியங்கள், தத்துவ நூல்களில் இருந்தெல்லாம் கருத்துக்களை முறைப்படி கறந்து தரவேண்டியது, தமிழ்ப் புவர்களின் வேலையாகும். இப்படிப் பயன்படத் தக்க வகையில் எல்லாவற்றையுமே நோக்கிப் பயன்படைத்தவர்கள் மேலை நாட்டவர்.

பதினெட்டு - பத்தொன்பதாம் நூற்றாண்டு இறுதியிலேயே அவர்கள் பயன்படுத்தும் நோக்கத்தோடு செயலாற்றத் தொடங்கிவிட்டனர். நாம் இன்னும் அந்தப் பயன்படுத்தும் நோக்கத்தைப் பெறவில்லை.

தேங்காயை நாம் பய்னபடுத்துவதற்கும் மாங்காயைப் பயன்படுத்துவதற்கும் வேறுபாடு இல்லையா?

தேங்காயில் மேலே உள்ள நாரையும், ஒட்டையும் நீக்கிவிட்டு, உள்ளே உள்ள பண்டத்தைத் தின்கிறோம். மாங்காயில் மேலே பழம் - உங்ளே கொட்டை; பழத்தைத் தின்றுவிட்டுக் கொட்டையை வீசி எறிந்துவிடுகிறோம்.

அதைப்போல, தமிழ் இலக்கியங்களிலும், எதை எதை, எந்த எந்தக் காரியங்களக்குப் பயன்படுத்துவது - எப்படிப் பயன் படுத்துவது - என்ற முறைமைப்படுத்தி, வரிசைப்படுத்தி, வகைப்படுதத்த் தரவேண்டாமா?

அப்படித் தந்தால் அன்றி, மக்களிடையே பொது அறிவு வளருவது எப்படி?

எவை எளிதாக நல்ல பயன் தரத்தக்கன என்று மக்கள் கருதுகிறார்களோ, அவற்றை மக்கள் ஏற்றுக் கொள்கிறார்கள்.

**தமிழனின் தனிப்பண்பு**

பயன் தரத்தக்க நோக்கு வேண்டும் என்பதால்தான் நாங்கள் சில இலக்கியங்களை - கம்பராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாச, புராணங்களைத் தாக்க வேண்டியவர்கள் ஆனோம்; சிலர் அவற்றைத் தாங்கித் தீர வேண்டும் என்று கருதினார்கள். இப்படி எங்கள் தாக்குதலுக்கும் - சிலர் தாங்கித் தீரவேண்டிய

நிலைக்கும் - இடைப்பட்ட நூல்கள் இருக்கின்றனவே, அவைதான் தமிழருக்குப் பயன்தரும் நூல்கள் எனக் கூறலாம்.

எக்காலத்திலும் பயன்படக்கூடிய நூல்கள் தமிழில் ஏராளமாக இருக்கின்றன. அவற்றில் எல்லாம் நல்ல புலமை பெற்றிருந்த மறைமலையடிகள், பல்வேறு கருத்துககளை - தமிழன் தனியானநோர் மாண்புமிகு பண்புக்குச் சொந்தக்காரன் என்பதை வலியுருத்தும் கருத்துக்களை - மிக்க துணிவோடு எடுத்துச் சொன்னார். தமிழனின் பண்பு தனிச் சிறப்புப் பெற்றது என்பதை மறைமலையடிகள், காரண காரியங்களோடு விளக்கியிருக்கிறார் கருத்துக்களைப் பதப்படுத்தி, பக்குவப்படுத்தி - ஏடுகள் வாயிலாகத் தந்திருக்கிறார்.
சைவ சித்தாந்தக் கழகத்தில் உள்ள என் நண்பர் திரு.சுப்பையா அவர்கள், மறைமலையடிகள் பெயரால் ஏற்வாடு செய்துள்ள இந்தப் படிப்பகம் மறைமலையடிகளின் கருத்துக்களை அறிந்து, தமிழர்கள் நல்ல பயன் பெறுவதற்குப் பயன்படும் என்பதில் ஐயப்பாடு இல்லை.
வண்ண ஏடுகள் வரவேண்டும்
ஒரு காலத்தில் தமிழில் எத்தனை புத்தகங்கள் இருக்கின்றன? என்று சிலர் கேட்டது உண்டு. ஆனால் இன்னைக்கு ஓர் ஐயாயிரம் ரூபாய் எடுத்துக்கொண்டு சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்துக்குப் போனால், அத்தனைக்கும் தமிழ்ப் புத்தகங்கள் வாங்கிக் கொண்டு திரும்ப முடியும். அந்த அளவு தமிழில் இன்று புத்தகங்கள் வெளிவருகின்றன. சீரிய கருத்துக்களைத் தரும் வண்ண ஏடுகள் ஆங்கிலத்தில் மட்டுமே இருந்தன. ஆனால் இன்று தமிழிலும் இருக்கின்றன. அத்தகைய ஏடுகள் இன்னும் பல வெளிவரவேண்டும்.
நம்முடைய இலக்கியக் கருத்துக்கள் எல்லாம் நல்ல வண்ணங்களோடு ஏராளமாக வெளிவரவேண்டும். வண்ணம் பற்றி நான் வலியுறுத்திச் சொல்வதற்குக் காரணம், இங்கே வண்ணத்தை விரும்பும் வாலிபர்கள் ஏராளமாக இருப்பதனால்தான்! என்னதான் நல்ல கருத்துக கருவூலம் ஆனாலும், அதில் வண்ணம் கூட்டடப்பட்டால், நம்மையும் அறியாமல் அதனை எடுத்துப் புரட்டிப் பார்க்கத் தூண்டும். புரட்டியதும் சுவை தட்டிவிட்டால் பின், அந்தக் கருத்துக் கருவூலம் வெளிவந்த பயனை எய்திவிடும்.

தமிழ்ப் பெருங்குடி மக்கள், கிடைத்த கருத்துக்களை பெற்ற கருவூலங்களையெல்லம் ஒரே பாண்டத்தில் போட்டு வைத்துவிட்டனர். இன்றைக்குள்ள தமிழ்ப் புலவர்கள் அவற்றையெல்லாம் வெளியில் எடுத்து, நல்ல கருத்துக்களையும், ஆராய்ச்சிக்கு நிற்கக் கூடியவற்றையும், வெறும் கற்பனை மட்டுமே கொண்டவற்றையும் ஒரே பாண்டத்த்தில் இருப்பதைப் பிரித்தெடுத்து, முறைப்படுத்தி வரிசைப்படுத்தித் தரவேண்டும். இதைச் செய்வதற்கு இதுதான் தக்க காலம் என்று நான் கருதுகிறேன். திருக்குறன் இருக்கிறது. என்னைப் பொறுத்தவரையில் இன்னதைச் செய்யவேண்டும்; இன்னதைச் செய்தால் நல்லது; இன்னதை இன்னார் செய்தார்கள் என்று அந்த நல்லற நூலில் கருத்துக்கள் பிரிக்கப்பட்டு இருப்பதைக் காண்கிறேன்.

இன்னதைச் செய்யுங்கள் என்னும் கட்டளையும், இன்னதைச் செய்தால் நலம் என்னும் பரிந்துரையும் குறளில் இருக்கின்றன.

இதுபோல, தமிழ் இலக்கியங்களை எல்லாம் முறைப்படுத்தலாம்.

எனவே தமிழ் இலக்கியங்களை முறைப்படுத்தி - வகைப்படுத்தித் தரவேண்டிய பொறுப்பு தமிழ்ப் புலவர்களுக்கு இருக்கிறது. அதற்கு இதுவே தக்க காலம்.

ஏனென்றால், இப்போது அதற்கான விழிப்புணர்ச்சியும் ஆற்றலும் நிரம்ப இருக்கின்றன.

அந்தக் காரியம் நடைபெற்றால் தான் தமிழின் தொன்மையும் தமிழின் இனிமையும், பெருமையும், தமிழர்களால் சரிவர உணரப்பட முடியும்; தமிழ் இனம், தமிழ்ப் பண்பு, தழைக்க முடியும்.

இந்த வகைக்கு இப்போது நிறுவப்பட்டுள்ள மறைமலையடிகள் நூலகம் பயன்படவேண்டும் என விரும்பிக் கேட்டுக்கொள்கிறேன்.

# பெரியாரும் திருக்குறள் மாநாடும்

பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியார் அவர்கள் தமிழ்நாட்டில் திருக்குறளை மக்கள் மன்றத்தில் பரப்பப் பெருந்துணை புரிந்தார்.

“தமிழ் இலக்கியங்களில் பெரிதும் பரப்பப்படவேண்டிய ஒரே நீதிநூல்,அறநூல்,அறிவுநூல் திருக்குறள் தான் எனத் தந்தை பெரியார் கருதியே அதனை 1949-இல் (15,16/01/1949--இருநாள்கள்) தனி மாநாடு நடத்தி,மிகப் பெரும் தமிழறிஞர்களான நாவலர் ச.சோமசுந்தர பாரதியார், தமிழ்த்தென்றல்திரு.வி.க.,பன்மொழிப்புலவர் தெ.பொ.மீனாட்சிசுந்தரனார், கா.அப்பாதுரையார்,ஏ.சக்கரவர்த்தி நயினார், கந்தசாமிப் புலவர்,திருக்குறள் வி.முனுசாமி போன்ற அறிஞர் பெருமக்களை அழைத்து இருநாட்கள் சென்னையில் குறள்மழை பொழியச்செய்த பின்பே திருக்குறள் புலவர்கள் வீட்டுப் புத்தக அலமாரிக்குள்ளே இருந்து பொதுமக்கள் மன்றத்தை அடைந்து,குறள் கருத்துப் பரவி ஒளிவீசத் தொடங்கியது.” (பெரியார் களஞ்சியம்-தொகுதி-37 பக்.iv)என்னும் கருத்து இங்குக் குறிப்பிடத்தக்கது.

இந்த மாநாட்டில் பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்களும் பங்கேற்றார்.

“விருதுநகர் செந்தில்குமாரநாடார் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்கள் குறள் மொழிப்படி திருக்குறளை அனைத்துலகுக்கும் எடுத்தோதி அதற்குச் சிறப்பை உண்டாக்கித் தர இப் பெரியார் ஒருவராலேயே முடியும் என்பதை உணர்ந்தே இயற்கையானது திருக்குறளைப் பெரியார் அவர்களிடம் ஒப்படைத்திருக்கின்றதென்றும், இயற்கை கூட வள்ளுவர் கட்டளைப்படியே நடக்கிறதென்பது வள்ளுவர்க்குப் பெருமை தருவதாகும்" என்று கூறியதாகவும் "அரசியல் நெறியை எடுத்துக் கூறும்போது கூட, வள்ளுவர் அறம் வழுவாது உயர் நெறிகளை எடுத்தோதி இருக்கிறார் என்றும், இன்றைய சர்க்கார் உண்மையிலேயே மதச்சார்பற்ற சர்க்காராக வேண்டுமானால், திருக்குறள் அதற்கேற்ற வழிகாட்டி என்றும் கூறி பழந்தமிழனான வள்ளுவன், புரட்சித் தமிழ் மகனான வள்ளுவன்,

சீர்திருத்தக்காரனான வள்ளுவன் எழுதிய குறளை யாவரும் படித்து அதன்படி நடந்து இன்ப வாழ்வு வாழ்தல் வேண்டும்" (பெரியார் களஞ்சியம்-பக்.334) என்று பேசியதாகவும் தெரிகிறது.

இம் மாநாட்டில் கலந்துகொண்டதுடன் நில்லாது தாம் பணியாற்றிவந்த விருதுநகரில் பேராசிரியர் சி.இலக்குவனார் மிகப் பெரிய திருக்குறள் மாநாடு நடத்தியுள்ளார்.அவர் விருதுநகரில் திருவள்ளுவர் மன்றம் நிறுவி அதன் செயலராகப் பொறுப்பேற்றிருந்தார் கல்லூரித் தாளாளர் வே.வ.இராமசாமி அவர்கள் அதன் தலைவராகத் திகழ்ந்தார்.

இம் மாநாட்டில் நிறைவேற்றிய தீர்மானங்கள் “விருதுநகர் குறள் மாநாட்டுத் தீர்மானங்கள்”என்னும் தலைப்பில் பதினாறாம் இயலாக வெளிவந்துள்ளன.(பெரியார் களஞ்சியம்-தொகுதி-37பக்.102-103)இவை இங்குக் குறிப்பிடத்தக்கவை.

விருதுநகர் குறள் மாநாட்டுத் தீர்மானங்கள்

1) இப்பொழுதுள்ள கல்வித்திட்டத்தில் முதல் உயர்நிலைவகுப்பு (பாரம்) தொடங்கி இளங்கலைஞர்(பி.ஏ.)வகுப்பு முடிய திருக்குறள் முழுதும் படித்து முடிக்கும் வகையில் படிப்படியாகப் பாடம் வகுக்குமாறும் அதற்கெனத் தனி வினாத்தாள் (சேக்சுபியர் போல)ஏற்படுத்துமாறும் கல்வித்துறை அதிகாரிகளையும் பல்கலைக்கழகங்களையும் இம் மாநாடு வேண்டுகின்றது.

2) ஆட்சிமன்றங்களில் உறுப்பினராக வருவோர்க்கும் கல்விக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் தலைவராக வருவோர்க்குரிய தகுதிகளில் திருக்குறள் புலமையும் ஒன்றாக வற்புறுத்துமாறு ஆட்சியாளரை வேண்டுகிறது.

3) திருவள்ளுவர் விழாவுக்கென ஒரு நாளைக் குறிப்பிட்டு அரசு விடுமுறை நாளாக்கி அந் நாளை நாடெங்கும் கொண்டாடுவதற்குரிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டுமென்று அரசாங்கத்தாரை வேண்டுகிறது.

4)திருக்குறள் பற்றிய விழாக்கள் மாநாடுகள் முதலியவற்றின் நிகழ்ச்சிகளை அறிவிக்குமாறும் ஒலிபரப்புமாறும் திருச்சி வானொலி நிலையத்தாரைக் கேட்டுக்கொள்கிறது.

இந்த நான்கு தீர்மானங்களும் விருதுநகர்த் திருவள்ளுவர் மன்றத்தாரால் நடத்தப்பட்ட திருக்குறள் மாநாட்டில் ஒருமனதாக நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள்

மட்டுமன்று.மாநாட்டை முன்னின்று நடத்திய பேராசிரியர் சி.இலக்குவனாரின் கனவுகள் என்றே கூறலாம்.

(உலகத்தமிழ்ச்சங்கம் நடத்தும் சீனக் கவிஞர் யூசி அறக்கட்டளையின் நான்காம் கருத்தரங்கத்தில் மறைமலை இலக்குவனார் வழங்கிய எழுத்துரையின் ஒரு பகுதி)

விருதை குறள் மாநாடு: பெரியார், பேரறிஞர் தம் கருத்துரைகள்

வாழ்க்கை — அரசியல் இரண்டையும் பிணைத்து நல்லறம் வகுத்த வள்ளுவர் போற்றுவோம்!

விரிந்த நோக்குடன் குறளைப் படித்து வேண்டிய ஏற்று வளம் பெற்றுயர்வோம்

அரசியல் பொருளியல் ஆன்ற குடியியல் அனைத்துக்கும் முதவும் அறநூல் திருக்குறள்

வள்ளுவர்தான் வகுத்து, விதிமுறையாக்கி விழாக் கொண்டாடுக!

Regd. No. 4739
Phone : 86977

திராவிடநாடு திராவிடருக்கே!

விடுதலை

(திராவிடர் தமிழ்த் தினசரி)

அட்லாண்டிக் ஒப்பந்தம் இரவு கையெழுத்தாயிற்று

12 மேற்கு நாடுகளின் கூட்டுப் பாதுகாப்பு ஏற்பாடு

பொருளாதாரத்துறையிலும் போட்டித் தவிர்ப்பு

விருதை குறள் மாநாடு: தலைவர்கள் வருகை

பெரியார் ஈ. வெ. ரா. வேண்டுகோள்

★

12—4—49 — குறள் நாள்

## திருக்குறள்

[பேராசிரியர் சி.இலக்குவனாரும் திரு வே.வ.இராமசாமியும் இணைந்து நடத்திய(3/4/49) விருதுநகர்த் திருக்குறள் மாநாட்டில் அறிஞர் அண்ணா ஆற்றிய உரை]

இது ஒரு பெருமை வாய்ந்த மாநாடு. இலக்கிய வளர்ச்சி மாநாட்டில் மறுமலர்ச்சியின் ஒரு சிறந்த அறிகுறி; சிறந்த கட்டம்; தமிழிற் பேரறிவு படைத்தவர்களும், பிறரும் நம்மை இலக்கியத்தைப் பழிப்போம்-கலையைப் பழிப்போம் என்று கூறும் குறையைப் போக்கும்படி அமைந்த ஒரு சிறந்த மாநாடு. எல்லாவற்றிற்கும் சிறந்த வழிகாட்டுவதாயிற்று குறள். இராமாயணம், பாரதம், கீதை முதலியவற்றைக் குறை கூறும் சுயமரியாதைக்காரர் குறளை ஆதரிக்கின்றனரென்றால் அதற்குக் காரணம் யாது?

குறள் ஒன்றுதான் மக்கள் நலனை நிலைநாட்ட ஒழுங்காக வகுக்கப்பட்ட நேர்மையான நூல்; அதனாலே தான் பாராட்டுகிறோம். ஆனால் இந்த மாநாடு விருதுநகரில் கூடுவது சிறப்பு என்கின்றேன். இந்நகரில் அறிஞர் வே.வ.இராமசாமி அவர்கள் தமிழுலக வானத்தில் அழகிய தென்றலை வீசுகிறார்கள். தோழர் காமராசர் அரசியற் புயலை வீசுகிறார்கள்-புயலின் வெம்மையை கடுமையைத் தணிக்கத் தென்றல் வீசுகின்ற இந்நகரில் குறள் மாநாடு கூடுவது மிகவும் சிறப்புடையது. தென்றலை நடத்தும் தலைவரும் அரசியல் புயலை வீசும் தலைவரும் ஒருங்கே வீற்றிருந்து நடத்த வேண்டிய மாநாடு. அத்தகைய நாளை திருக்குறள் கூட்டிவைக்கும் ஒரே கொட்டகையிற் கூடும்படியான வாய்ப்பும் ஏற்படும். இந்த நாட்டுக்கு உடையவனும், ஆக்கிப் படைப்போனும் பிற நாட்டான் என்கின்ற இழிதகைமை போய் உரிமை கிடைத்திருக்கும் இந்த காலத்தில் நீதி எது? வாழ்க்கை நூல் எது? என்று ஆராயும் பொறுப்பான கட்டம் இது. வழிகாட்டியான நூல் தேவை; வாய்ப்புத்தேவை; திருக்குறள் வாய்ப்பான நூலாகக் கிடைத்தது. அதனைப் போற்றி ஒழுகும் வாய்ப்புங் கிடைத்தது. குறளைப் பற்றிப் பேச திட்டம் வகுக்க இம்மாநாடு அமைக்கப்பட்டது. எனக்குத் தெரிந்த அளவிலே ஏன் இவ்வளவு அருமையான திருக்குறள் கையிலே இருந்தும் அது தமிழகத்து மக்களுக்கு இதுநாள் வரை பயன்படவில்லை. இதற்கொரு உதாரணம் என்னால் காட்டக் கூடுமானால் சொல்வேன். நான் காட்டுகிற உதாரணம்

முற்றிலும் பொருத்தமானதென்று அர்த்தமுமல்ல. நான் சொல்வதுதான் முழு உண்மை என்றும் அர்த்தமல்ல; என்னுடைய அறிவுக்குப் பட்டதிலே திருக்குறளைப் போற்றுகின்ற நாம், அந்தக்குறள் நெறியின்படி நடக்க வேண்டுமென்று விரும்புகின்ற நாம், குறள் நெறியின்படி நடப்பதற்கு முடியாத அளவிலே நம்மைத் தடுத்து நிறுத்துகின்ற வேறு பல சூழ்நிலைகளை, வேறு பல சிற்றறிவுகளை, வேறு பல சூழ்ச்சி நிலைகளைத் தகர்த்தெறியாத காரணத்தினாலே தான் திருக்குறள் கையிலேயிருந்தும், உண்மையிலே நம்மாலே நல்ல நிலையிலே வாழ முடியாமல் போய் விட்டது. உங்களுக்கெல்லாம் நன்றாகத் தெரியும். கையிலே கத்தி வைத்துக்கொண்டால், வருகிற எதிரியை வெட்டி வீழ்த்தலாம் என்பது; என்னைப் போன்ற ஒரு பலவீனன் கையிலே கத்தியைக் கொடுத்தால், நான் அவனைக் கத்தியால் குத்திக் கொல்ல இயலாது என்பது மட்டுமல்லாமல், என்னுடைய கரத்திலேயுள்ள வாளை அவனே பறித்துக்கொண்டு வாளில்லாதிருந்தால் கையாலாவது தாக்கியிருப்பான்; என்னுடைய கரத்திலேயிருக்கிற வாளை அவனே பறித்துக்கொண்டு என்னையே திருப்பித் தாக்கியிருக்கக்கூடும். ஆகையினாலே வாளை மாத்திரம் வைத்துக் கொண்டிருப்பதால் பயனில்லை; உள்ளத்திலே வலிவு இருக்க வேண்டும். நல்ல உறுதியிருக்க வேண்டும். அதைப் பயன்படுத்துகிற தன்மையும் தெரியவேண்டும் என்பதற்கேற்ப நான் சொல்லுகிற எந்தக் கருத்துக்கும், நிகழ்கால அரசியலுக்கும் எந்தவித சம்பந்தமுமில்லையென்று மாற்றார்களுக்கும், உற்றார்களுக்கும் ஒரு சேரத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

திருக்குறள் வாழ்வியல் தத்துவம்:

வாள் ஒன்று மட்டுமல்ல வலிவுக்கு காரணம் உள்ளத் திண்மையும் மிகமிகத் தேவை என்பது போல வள்ளுவருடைய குறள் ஒன்று மட்டும் போதாது, வள்ளுவருடைய குறளை எந்தவிதத்தில் பயன்படுத்த வேண்டுமோ, வள்ளுவர் எந்த இன்பக் கனவுகளைக் கண்டாரோ, எத்தகைய வாழ்க்கை நெறி தேவையென விரும்பினாரோ, அவைகளை நாம் பெற வேண்டுமென்ற ஆர்வமிருக்க வேண்டும். வள்ளுவரின் குறளை வைத்துக்கொண்டு அதனால் பெறப்படும் பயனைப் பெறுவதற்கு முன்னாலே தடுக்கின்ற சூழ்நிலைகளை தகர்த்தெறிவதற்கு நம்முடைய உள்ளத்திலே திண்மையிருக்க வேண்டும். அதை விட்டு விட்டு பத்தோடு பதினொன்று அத்தோடு இது ஒன்று என்பதைப்போல், தேவாரம் உண்டு, திருவாசகம் உண்டு, திருப்புகழ்

உண்டு, காவடிச்சிந்து உண்டு, நாலடியார் உண்டு மற்றும் பல உண்டு அதைப்போல திருவள்ளுவரின் திருக்குறளும் உண்டு என்று சொன்னால், இப்படித்தான் ஆண்டுக்கொரு முறை நாம் கூட வேண்டும், அழகான தமிழிலே அருமையான கருத்துக்களை எடுத்துச் சொல்ல வேண்டும். கேட்போர்கள் வாய்பிளக்கக் கேட்டுக் கொண்டிருந்து விட்டு திருக்குறளும் நல்ல நூல்தானாம் என்று சொல்ல வேண்டும், மறுநாள் அவர்கள் கேட்கின்ற திருவாசகம், பிறகு நான்கு நாட்களில் கேட்கின்ற தேவாரம் இவைகளோடு திருக்குறளை ஒப்பிட்டுப் பார்த்த அவர் சொன்னதும் நன்றாகத்தான் இருந்தது. இவர் சொன்னதும் அருமையாகத்தான் இருக்கிறது. எல்லார் சொல்வதும் நன்றாகத்தானிருக்கிறது. ஏதும் அறியாமலிருப்பது மிக நன்றாகத்தானிருக்கிறது என்று மக்கள் அமைதியடைந்து விடுகிறார்கள்.

திருக்குறளை சுயமரியாதைக்காரன் பரப்புவது ஏன்?

திருக்குறளைப்பரப்பும் பணியில் நாம் பங்கெடுப்பதில் லாபம் ஒன்றும் உண்டு. நட்டம் ஒன்றும் உண்டு. திருக்குறளை புராணமாக்க நினைத்தது நட்டம், நமக்கு ஒரு நூல் கிடைத்தது லாபம்; நம் நாட்டில் அரிய உண்மைகள் இல்லையா? அரிய பெரியார்கள் தோன்ற வில்லையா? இவற்றிற்கெல்லாம் விடையளிப்பது திருக்குறள். வள்ளுவர் அத்தகைய நூலை நமக்கு அருளியிருக்கிறார். அறிவுக்குப் புறம்பான நூல்களை எதிர்க்கக் அஞ்சாத சுயமரியாதைக்காரர் குறளை எடுத்து பாராட்டுகின்றனர். நெஞ்சார வாழ்த்தி விளங்குகின்றனர்; பிறரும் குறளைப் போற்றத்தான் செய்கின்றனவ்; மடாதிபதிகள் மற்றும் பிறர் குறளை வெளியிடுகின்றனர். ஏன்-அவர்களும் குறளைப் போற்றுவோம் என்பர்; அவர்களைப் பற்றி என்ன சொல்வது? குறளை அவர்கள் படித்தால் அதன்படி நடந்தால்-நாட்டுக்கு மடாதிபதிகள் தேவையில்லையே; சிலப்பதிகாரத்தைத் தருவதற்கு துறவு பூண்டார் ஒருவர். அவரைப் பாராட்டுகின்றோம்; திருக்குறளைப் போன்ற நூல் தரத் துறவு பூண்டாரெனின் ஒப்புக்கொள்கிறோம். மடாதிபதிகளுக்கு பாதக குறடுகள் ஏன்? இவர்கள் குறளின்படி ஒழுகுவார்களா? புறக்கோலம் எதற்கு? மடாதிபதிகளே! காலம் மாறிவிட்டது. சமரசம் உண்டாக்குங்கள். மக்கள் மனத்தில் சாந்தம், ஒழுக்கம் நிலைபெற நன்னெறி காட்டுங்கள். வள்ளுவன் புகழைப் பரப்புங்கள். இராமாயணம், பாரதம், பாதவதம், கீதை இவற்றை வெறுத்தவன் திருக்குறளைப் பாராட்டுகிறான்; நீங்கள் எல்லாவற்றையும் சேர்த்துப் பாராட்டுவது பொருளற்ற செயல். மற்ற நூல்கள் வாழ்க்கைக்கு வழிகாட்டியல்ல.

ஒன்றிலொன்று பார்த்தால் பயனில்லை; இரயில்வே கைடில் பார்க்க வேண்டுவனவற்றைப் பஞ்சாங்கத்தில் காண முடியாது. அட்லாசில் பார்க்க வேண்டியவற்றிற் பஞ்சாங்கத்தைப் பார்ப்பது பொருந்துமா? மற்ற நூல்களில் சிலருக்கு ரசிகத் தன்மை இருக்கலாம்; ஆனால் அவை வாழ்க்கைக்கு பயன்தராது; மடமையை நீக்காது; வாழ்க்கைக்கு அவை உதவா; மறு உலகத்தைப் பற்றிக் கேட்கலாம்; இங்கே உழைப்பு வாழ்வு. அங்கே தேவர் வாழ“வு. உழைப்புக்கும் ஓய்வுக்கும் வேற்றுமை தெரியாத அவ்வுலகப் புரளியால் யாது பயன்? அங்கே நாட்டியம் ஊடல் நாரதர் தூது-கோபம்-பதவியிழப்பு இவை நடைபெறுமாம். அவற்றால் யாருக்கு பயன்? இவற்றைச் சுயமரியாதை உள்ளவன் கண்டிக்கிறான். என்ன காரணம்?

புராணக் கதைகளில் நீதி உண்டா?

பக்தி மறுமையுலகம்-இவை நேர்மை என்று காட்ட முடியுமா? எந்த மதவாதியும் சொல்ல முடியுமா? புராணக் கதை, நீதி போதிக்க எனின் ஒன்றோடொன்று முரணுகிறதே! பக்தியை ஒப்பி ஆத்திகன் எந்தக் கதையை எப்படி நம்புவது? ஒரு ஊருக்கு நாலு பாதையா? வியாசன்-சுக்கிரன்-இரமண முனிவர்-பட்டினத்தார். ஒவ்வொருவர் கூறுவதும் ஒவ்வொரு வழி-ஒன்றுக்கொன்று முரண். இப்படியாக்கினால் என்ன செய்வது? இந்த வழியில் ஆத்திகனும் போக முடியாது; நாக்கிகனும் போக முடியாது, புலிக்குப் பயந்து மரத்திலேறித் தூங்காமல் இலை கிள்ளிப் போட்டவனுக்கு அம்மை சிவகாமியின் கட்டளையால் அப்பன் சிவபிரான் திருவாய் மலர்ந்தருளி வீடு வேறு கொடுத்தானாம். கால் தேய, உடல் தேயப்பின்பு தலை கீழாகவும் நடந்தலைந்த பின் காரைக்காலம்மையாருக்கு என் அப்பன் சிவகாமிநாதன் அருள் செய்தானாம். எதைப் பின்பற்றி எந்த நெறியிற் செல்வீர்கள். பாண்டவர்கள் வரலாற்றை நோக்குங்கள். துரோணர் மற்றவன் கற்றதற்குக் கட்டை விரலைக் கேட்டுத் துண்டிக்கச் செய்தார். குருபத்தினியைக் கற்பழித்த சந்திரன் கதையையறிவீர்கள். இவற்றைப் படித்து மக்கள் வாழ முடியுமா? இராமாயணத்தில் நீதியுண்டென்கிறார்களே! வாலியைக் கொல்ல இராமன் கையாண்ட முறையால் நாம் அறியும் நீதி என்ன? இவற்றையெல்லாம் ஆராய்ந்தால் நாம் என்ன கருத முடியும்? திருக்குறளைத் தவிர நமக்கு வேறு வழியில்லை; நம் தலைவர் நாவலர் பாரதியாரவர்களை நான் வேண்டிக்கொள்கிறேன்-திருக்குறளைப் பண்படுத்தித் தரவேண்டுமென்று. நீங்கள் பண்படுத்தி நல்லுரை வகுத்து நல்ல வித்தாகக் கடைந்தெடுத்துக் கொடுங்கள். நாங்கள்

எல்லா மக்களின் உள்ளத்திலும் விதைத்து விடுவோம்; இன்னும் பத்தாண்டுகளுக்குள் எல்லோர் மனதிலும் எல்லோர் வீட்டிலும் திருக்குறள் நிலைபெற்று இருக்கக் காணலாம். இதனை நான் வேண்டிக் கொள்கிறேன்.

திருக்குறள் மாநாடு
விருதுநகர்.3/4/1949

## புரட்சியாளர் அறிஞர் அண்ணா

---செம்மொழிக் காவலர் சி.இலக்குவனார்

செபுத்தம்பர்த் திங்கள் 11-பாரதியார் நினைவுநாள்;15 அறிஞர் அண்ணாவின் பிறந்தநாள்;17 தந்தை பெரியசர் அவர்களின் பிறந்தநாள்;எனவே பேராசிரியர் சி.இலக்குவனார் தாம் நடத்திவந்த குறள்நெறி (திங்களிருமுறை) இதழின் செபுத்தம்பர் 15-ஆம் நாள் இதழை "புரட்சியாளர் மலர்" என்னும் தலைப்பில் வெளியிட்டு புகழாளர் மூவர் குறித்தும் கட்டுரைகள் வெளியிட்டார்.அவ்விதழில் அறிஞர் அண்ணா பற்றிப் பேராசிரியர் எழுதிய கட்டுரையை இங்கு மறுபதிப்புச் செய்கிறோம்.தி.மு.க.எதிர்க்கட்சியாக இருந்தபொழுது அதனைச் சார்ந்தோ ஈடுபாடு காட்டியோ எழுதினால் ஆட்சியாளரின் சினத்திற்கு ஆளாகநேரிடும் என்றிருந்த சூழலில் "அறிஞர் அண்ணாவின் புரட்சி வெற்றி பெற்றால்தான் தமிழும் பிற மொழிகளும் வாழும்; வளம் பெறும்." என்று பேராசிரியர் சி.இலக்குவனார் அறுதியிட்டுரைப்பது குறிப்பிடத்தக்கது.

பெரியாரின் புரட்சிப் படையில் முதியரும் இளையரும் இருந்தனர் மன்பதைத் தொண்டு செய்த பெரியார் வண்டமிழ் காக்க இந்தி எதிர்ப்புப் போரின் இணையற்ற தலைவரானார். அப்பொழுது அவருக்குத் துணையாகக் கிடைத்த தளபதிதான் அறிஞர் அண்ணா அவர்கள். பெரியாரின் வேம்பனைய புரட்சிக் கருத்துகளை கரும்பனைய சொற்களால் இளைஞர் உள்ளங்களில் இடம்பெறச் செய்தார் அறிஞர் அண்ணா. தேன் கூட்டை மொய்க்கும் தேனீக்கள் போன்று அறிஞர் அண்ணாவைச் சுற்றி மக்கள் மொய்க்கத் தொடங்கினர். விரைந்து தொழில் கேட்கும் ஞாலம் நிரந்தினிது சொல்லுதல் வல்லார்ப் பெறின் என்பது அண்ணாவால் மெய்ப்பிக்கப்பட்டது.

தலைவர் பெரியார் அவர்களை எதிர்த்து எவருமே வெற்றி பெற்றது கிடையாது. அண்ணா ஒருவர்தாம் தம் அருமைத் தலைவரை எதிர்த்து வெற்றி பெற்றார். அறிஞர்

அண்ணா அவர்களிடம் பல்வகை ஆற்றல்களும் பொருந்தியுள்ளன. அவற்றை நாட்டின் நலத்துக்கே பயன்படுத்துவதனாலேயே அவர் மக்கள் உள்ளங்களைக் கொள்ளை கொண்ட மாபெரும் புரட்சித் தலைவராக விளங்குகின்றார். செந்தமிழையும் ஏனைய மாநில மொழிகளையும் அழிக்க வருகின்றது இந்தி என்னும் செந்தீ. பெரியார் அவர்கள்கூட இன்று ஆளும் கட்சிக்குத் துணையாக நிற்பதனால், இந்தி முதன்மையை எதிர்க்க முன் வந்திலர். ஒரு காலத்தில் இந்தி எதிர்ப்புப் போரை நடாத்திய அவர்களே இன்று எல்லாரும் இந்தி கற்கவேண்டியதுதான் என்று கூறியதாகச் செய்தித்தாட்களில் கண்டு வருந்தினோம். சிந்தை நொந்தோம். செந்தமிழை அழிக்க வரும் இந்தி முதன்மைக்கு நம் பெரியாரும் துணை நிற்பதா என்று ஏங்கினோம். மறைமுகமாக நம் மீது சுமததப்பட்டு வரும் இந்தியைச் செல்வாக்குப் பெற விடுவோமேயானால் இன்னும் கால் நூற்றாண்டுக்குள் செந்தமிழ் மறையப் போவது உறுதி. செந்தமிழ் அழிந்த பின் சீர்சால் தமிழரும் உரிமையிழந்து தலைமை நீங்கி அடிமைகளாகப் போவதும் திண்ணம். இதனை நன்கு நுனித்தறிந்த அறிஞர் அண்ணா அவர்கள் எதிர்ப்புக் குரல் முழக்கி ஆட்சியாளர்க்கு அறிவுறுத்தும் வகையில் பெரும் புரட்சி செய்து வருகின்றனர். காந்தியடிகளைப் பின்பற்றித் தென்னாட்டுக் காந்தியெனப் போற்றுமாறு அமைதியான முறையில் கட்டுப்பாட்டுடன் தமிழக மக்கள் சார்பில் தம் எதிர்ப்பை அறிவித்து வருகின்றனர். இந்தியக்கூட்டரசு இதனைப் பொருட்படுத்தி எல்லா மொழிகளுக்கும் உரிய தனி நிலைமையை அளிக்க முன் வரவேண்டும். அறிஞர் அண்ணாவின் புரட்சி வெற்றி பெற்றால்தான் தமிழும் பிற மொழிகளும் வாழும்; வளம் பெறும். உண்மைக் கூட்டரசு நிலை பெற்று ஒருமைப்பாடு தழைக்க இயலும். ஆதலின் அறிஞர் அண்ணா அவர் தொடங்கியுள்ள அமைதிப் புரட்சியில் வெற்றி பெறுவாராக. அண்ணாவின் வெற்றி தமிழின் வெற்றியாகும். ஒருமைப் பாட்டின் உயர் வெற்றியாகும்.

தண்டமிழைப் போற்றிய பாரதி இன்றில்லை; ஆயினும் அவர் கனவு நனவாகி வருகின்றது. பெரியார் தோற்றுவித்த மன்பதைப் புரட்சி மக்களாட்சி வெற்றி பெறத் துணைபுரிந்து வருகின்றது. அறிஞர் அண்ணா தொடங்கியுள்ள மொழியுரிமைப் புரட்சி நடந்து கொண்டிருக்கின்றது. இந்திய அரசியல் தலைவர்களை எண்ணிப் பார்த்துச் செயலாற்றத் தூண்டிக் கொண்டிருக்கின்றது. புரட்சியாளர்கள் பெருந் தொண்டுகள்

நம்மைப் புத்துலகுக்கு அழைத்துச் செல்வதாக. நம் நாடு புதுமை நலம் பெற்றுப் பழமையைப் போற்றிப் பாரில் ஈடு இணையற்று வாழ்வதாக. ஓங்குக புரட்சி. உயர்க தமிழ் நலம். மக்களினம் ஒன்றுபட்டுமாண்புடன் வாழ்வதாக.

செந்தமிழ்ப் பாரதியும் சீர்சால் பெரியாரும்

நந்தமிழ் காக்கின்ற நல்லறிஞர் அண்ணாவும்

செய்த புரட்சிகளைச் சீர்தூக்கிப் போற்றுமின்

எய்துமின் இன்பமெலாம் இங்கு.

**குறள்நெறி(மலர்1 இதழ்17): 15.09.1964**





குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

மின்னிதழ்:43 புரட்டாசி-14 -தி.பி.2053 அக்குதோபர்-16- பொ.ஆ.2022

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்









பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்
இணையாசிரியர்:தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

## சூதாட்டத்தைப் பற்றி வள்ளுவர்



-திருக்குறளார் முனைவர் இர. பிரபாகரன்

### சூதாட்டம்

சூதாட்டம் என்பது பணம் அல்லது பொருட்களை வெல்வதற்கான நோக்கத்துடன் பணம் அல்லது பொருட்களைப் பணையமாக வைத்து விளையாடும் ஒரு விளையாட்டு. இந்த விளையாட்டில் வெற்றி பெற முடியும் என்று உறுதியாகக் கூற முடியாது. சூதாட்டத்தில் ஈடுபடுபவர்களில் பெரும்பாலானவர்கள் தங்கள் பணையத்தை இழந்து தோல்வியைத் தழுவுவது உறுதி. குடிப்பழக்கதைப்போல் சூதாட்டத்தில் ஈடுபடுபவர்களும் அந்தப் பழக்கத்திற்கு அடிமையாகி, அதிலிருந்து மீளமுடியாமல், தங்கள் செல்வத்தை இழக்கிறார்கள். ஆனால், பல நூற்றாண்டுகளாகவே, சூதாட்டமும், குடிப்பழக்கம், விபச்சாரம் ஆகிய தீய ஒழுக்கங்களைப்போல் நடைமுறையில் இருந்துவருகின்றன. சூதாட்டத்தில் ஈடுபட்டு, தர்மர் தன் நாட்டையும் மனைவியையும் இழந்தார் என்பதை மகாபாரதத்தில் காண்கிறோம். நளபுராணத்தில், நளனும் சூதாட்டத்தில் தன் நாட்டை இழந்ததாகக் கூறப்படுகிறது. ஆனால், தமிழ்நாட்டில், சூதாட்டம் அதிகமாக இருந்ததற்குச் சான்றுகள் இல்லை.

சூதாட்டத்தைப் பற்றி வள்ளுவர்

ஒருவன் சூதில் வெற்றியே பெற்றாலும் சூதாடுதலை விரும்பக் கூடாது. ஏனெனில், அந்த வெற்றி, இரையினால் மறைக்கப்பட்டிருக்கும் தூண்டிலின் இரும்பைப் போன்றது. தூண்டிலில் உள்ள இரையை விழுங்கப்போய் மீன் தூண்டிலில் அகப்பட்டுக்கொள்வதுபோல், சூதாட்டத்தில் ஓரிருமுறை கிடைத்த வெற்றியைப்போல் மேன்மேலும் வெற்றி கிடைக்கும் என்று எண்ணி, தொடர்ந்து சூதாடினால், உள்ளதனைத்தையும் இழக்க நேரிடும் (குறள் – 931). முதலில் ஒரு பொருளை வென்று, தொடர்ந்து சூதாடியதால் நூறுபொருள்களை இழப்பவர்களுக்கு, நன்மை பயக்கும் நல்வாழ்வு உண்டோ (குறள் – 932)! உருள்கின்ற பகடைக்காயை ஓயாது விரும்பி ஒருவன் சூதாடினால், அவனுடைய செல்வம் அவனை விட்டு அகன்று போய்விடும் (குறள் – 933). துன்பங்கள் பலவற்றையும் உண்டாக்கி, முன்பிருந்த சிறப்புக்களையும் அழிக்கும் சூதினைப்போல், ஒருவருக்கு வறுமையைத் தரவல்லது வேறொன்றில்லை (குறள் – 934). சூதாடும் கருவி, ஆடும் களம், சூதாடுவதற்குரிய திறமை ஆகியவற்றைப் பற்றி பெருமை பாராட்டிச் சூதாடியவர்கள் தம்முடைய செல்வம் அனைத்தையும் இழந்துவிடுவார்கள் (குறள் – 935). சூதென்னும் மூதேவியால் சூழப்பட்டவர்கள், வயிறார உணவு உண்ணமாட்டார்கள்; துன்பத்தில் பெரிதும் உழல்வர் (குறள் – 936). ஒருவன் எல்லாப் பொழுதையும் சூதாடும் களத்தில் செலவழித்தால், தொன்றுதொட்டு வந்த அவனுடைய செல்வத்தையும், அவனுடைய

நற்பண்புகளையும் இழந்துவிடுவான் (குறள் – 937). சூதாடுவது, ஒருவனுடைய பொருளை அழிக்கும்; அவனைப் பொய்யையும் மேற்கொள்ளச் செய்யும்; அவனது மனத்தில் உள்ள அருளையும் கெடுக்கும்; அவனைத் துன்பத்தில் உழலச் செய்யும் (குறள் – 938). ஒருவன் சூதாடுவதை விரும்பி, அதில் பெரிதும் ஈடுபட்டால், உடை, பொருள், உணவு, புகழ், கல்வி, ஆகிய ஐந்தும் அவனிடம் வந்துசேராமல் போய்விடும் (குறள் – 939). ஒருவன் சூதாடிப் பொருளை இழக்கும்போதெல்லாம், அந்தப் பொருளின்மீது மேலும் விருப்பம்கொண்டு தொடர்ந்து சூதாடுவது, உயிர் துன்பத்தை உடம்பின் வழியாக அனுபவிக்கும்போதெல்லாம், அவ்வுடம்பின்மீது, மேலும் மேலும் விருப்பம் கொள்வது போல்வதாகும் (குறள் – 940).

வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி அற்று. (குறள் – 931)

ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கும் உண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோர் ஆறு. (குறள் – 932)

உருளாயம் ஓவாது கூறின் பொருளாயம்

போஒய்ப் புறமே படும். (குறள் – 933)

சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்

வறுமை தருவதொன்று இல். (குறள் – 934)

கவறும் கழகமும் கையும் தருக்கி

இவறியார் இல்லாகி யார். (குறள் – 935)

அகடாரார் அல்லல் உழப்பர்சூ தென்னும்

முகடியான் மூடப்பட் டார். (குறள் – 936)

பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்

கழகத்துக் காலை புகின். (குறள் – 937)

பொருள் கெடுத்துப் பொய்மேற் கொளீஇ அருள்கெடுத்து

அல்லல் உழப்பிக்கும் சூது. (குறள் – 938)

உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன்று ஐந்தும்

அடையாவாம் ஆயங் கொளின். (குறள் – 939)

இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்

உழத்தொறூஉம் காதற்று உயிர். (குறள் – 940)

அமெரிக்காவிலும் கனடாவிலும் பணக்காரர்களைவிட ஏழைகள்தான் சூதாட்டத்தில் அதிகமாக ஈடுபடுபவதாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர். இந்தியாவில் சூதாட்டத்திற்கு எதிராகக் கடுமையான சட்டங்கள் உள்ளன. இந்தியாவில், கோவா (Goa), சிக்கிம் (Sikkim), டாமன் (Daman) ஆகிய மூன்று மாநிலங்களில் மட்டுமே சட்டத்திற்கு உட்பட்ட சூதாட்டங்கள் (Casino Gambling) நடைபெறுகின்றன. மற்ற இடங்களில், மறைமுகமாகச் சூதாட்டங்கள் நடைபெறலாம். அவற்றைப் பற்றி நம்பகமான செய்திகள் கிடைப்பது அரிது. வறுமையில் இருப்பவர்கள் தங்கள் வறுமையில் இருந்து தங்களைக் காப்பாற்றிக்கொள்வதற்குச் சூதாட்டத்தை ஒரு குறுக்குவழியாகக் கருதுவது இயற்கை. அவர்கள் சூதாடுவதைத் தவிர்த்து, கடின உழைப்பால் முன்னேற வேண்டும் என்பதுதான் வள்ளுவரின் அறிவுரை.

**வள்ளுவரும் வள்ளலாரும்-புதிய வேண்டுகோள்**

ஏபிசெ.அருள்

கருணை சபை சாலை அறக்கட்டளை, உத்தங்குடி, மதுரை-107.

எவர் ஒருவர் ‘‘உண்மைக் கடவுளை” உண்மை அன்பால் கருத்தில் கருதி இடைவிடாது வழிபாட்டைக் கருணை அடிப்படையில் நன்முயற்சியில் பயிலுகிறார்களோ அவர்களுக்கு மட்டுமே இறையருள் கிடைத்து பேரின்ப பெருவாழ்வாகிய மரணமில்லாப்  பெருவாழ்வு கிட்டும்.

இதுவே வள்ளலார் கண்ட உண்மை அந்த உண்மையைப் பெறும்வழியே ‘‘சுத்த சன்மார்க்கம்”. நிற்க !

இங்கு இரு முதன்மைச் செய்திகளை நாம் தெரிந்துக்கொள்ள வேண்டும்.

1. ஒழுக்கம் பயிலுதல்.

2. ஒழுக்கம் பெற்று இருத்தல்.

இரண்டாவதாக உள்ளவர்கள் மட்டுமே சுத்த சன்மார்க்கத்திற்கு உரியவர்கள். முதலாவதாக உள்ளவர்கள் சுத்த சன்மார்க்க நெறியை அறிந்து அனுபவிக்க முடியாது. நல்ல விசாரணை செய்யும் நன்முயற்சியில் பயிலுமிடமாகிய சங்கம் சபையில் நுழையும் தகுதி அனுமதி இவர்களுக்கு கிடையாது. (ஆதாரம் : உரைநடைப்பகுதி குறிப்பு பக்கம் 547)

ஆனால் 22.10.1873-ல் வள்ளலார் தெரிவித்தது; ‘‘இப்போது நீங்கள் இதுவரைக்கும் ஒழுக்கத்துக்கு வராமல் எவ்வளவு தாழ்ந்த மனுஷ்யர்களாயிருந்தாலும் சாலைக்குப் போக கொஞ்ச தின மிருக்கின்றது. அதற்குள்ளாக நீங்கள் / நீங்களும் நல்லொழுக்கத்திற்கு வருவதோடு கூட, மற்றவர்களையும் நமது ஒழுக்கத்திற்கு வரும்படி எவ்வித தந்திரமாவது செய்து நம்மவர்களாக்கி கொள்ள வேண்டியது. ஆக தாழ்ந்த மனுஷ்யர்களாயிருந்தாலும் மொத்தத்தில் எல்லாரும் ஒழுக்கமாகிய

நற்குணங்களைப் பெறும் வகையில் அதற்கு ஏதுவாக உதவும் வகையில் அமைந்துள்ள தெய்வப்புலவர் திருவள்ளுவரின் திருக்குறள் வகுப்பு அவசியமாகுகிறது. ஆன்மீகப் பணியில் ஈடுபட்ட சமய, மத மார்க்க சான்றோர்களின் வரிசையில் நம் வள்ளலார் ஒருவர் மட்டுமே திருக்குறள் வகுப்பு எடுத்துள்ளார்கள் என்பதை இங்கு நாம் தெரிவித்துக்கொள்ள வேண்டும். மிகவும் முக்கியமான ஒன்றையும் நம் வள்ளலார் தெரிவித்தது யாதெனில்; (பக்கம் 411)

தேவர் குறளில் முதல் அதிகாரத்தில் சாகாத கல்வியைக் குறித்துச் சொல்லியிருக்கின்றது. அதைத் தக்க ஆசிரியர் மூலமாக தெரிந்துகொள்ளலாம் என வள்ளலார் அறிவித்துள்ளார்.

இந்நிலையில் சுத்த சன்மார்க்கத்திற்கு நம்மையும் மற்றவர்களையும் உரியவர்களாக ஆக்கிக்கொள்ள ஒழுக்கம் பயிலுதல் அவசியமாகுகிறது. அதாவது நற்குணங்களையும் நற்செய்கை உடையவர்களாகவும் நம்மை ஆக்கிக்கொள்ள வேண்டியுள்ளது. கொல்லாமை, புலால் உண்ணாமை, குரோதம், காமம் தடுத்தல் உட்பட அனைத்தும் திருக்குறளின் மூலமாக பயிலுதல் எளிதாக இருப்பதாலும் அனைத்து தரப்பினருக்கும் பொதுமறையாக திருக்குறள் விளங்குவதாலும் வள்ளுவர் மன்றம் ஆரம்பிப்பது தேவையாகிறது. இங்கு நாம் கருத்தில் கொள்ள வேண்டியது யாதெனில் திருவருட்பிரகாச வள்ளலாரின் சுத்த சன்மார்க்கத்திற்கு சமயங்கள், மதங்கள். மார்க்கங்கள் என்பவற்றின் ஆசார சங்கல்ப விகற்பங்களும் மற்றும் வருணம், ஆசிரமம் முதலிய உலகாசார சங்கற்ப விகற்பங்களும் எக்காலத்தும் முக்கியத் தடைகளாக வள்ளலாரால் அறிவிக்கப்பட்டுள்ளன. ஆக உலகில் காணும் சமய மத மார்க்கங்களில் முற்றும் பற்றறக் கைவிட்டவர்களே சுத்த சன்மார்க்கத்திற்கு உரியவர்கள் என வள்ளலாரால் அறிவிக்கப்பட்டுள்ளது. இந்நிலையில் நாம் ஒழுக்கம் பயில வேண்டிய நிலையில் உள்ள நாம் மற்றும் சுத்தசன்மார்க்கத்திற்கு தகுதியில்லாத நமக்கும் மற்றவர்களுக்கும் ஏதுவாக வள்ளுவர்-வள்ளலார் மன்றம் ஆரம்பிப்பதில் தவறு ஏதும் இல்லை. ஒழுக்கம் / நற்குணங்களை வள்ளுவர் நெறி மூலமாகவும் அதனடிப்படையில் கடவுள் உண்மையை வள்ளலார் உண்மைப் பொதுநெறி மூலமாகவும் அறிவோம்.

ஊர்தோறும் வள்ளுவர்-வள்ளலார் மன்றங்களை தொடங்குவோம். தொடங்கியவர்கள் தங்களுக்குள் அறிமுகம் செய்து கொள்ளுங்கள்.

ஒழுக்கத்திற்கு வள்ளுவரின் திருக்குறள்

கடவுள் உண்மைக்கு வள்ளலாரின் சுத்த சன்மார்க்கம்.

(மின்னஞ்சல் : apjarul1@gmail.com)

வள்ளலார் நெறி பரப்ப உதவுங்கள்.

# காந்தியடிகளின் தமிழாசான் தில்லையாடி வேதியன்பிள்ளை

கட்டுரையாக்கம்-மறைமலை இலக்குவனார்(பதிப்புரிமை)

[இந்தக் கட்டுரை **வேதியன் பிள்ளையின் இரண்டாம் புதல்வர் தட்சிணாமூர்த்தி** அவர்களின் எண்பத்தெட்டாம் அகவையில் அவர் கூறிய தரவுகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பெற்றது.அவருடைய செவ்வி ( interview) காணொளிப்பதிவு செய்யப்பெற்றுள்ளது.]

**தில்லையாடி என்னும் ஊரின் பெயரைக் கேட்டதுமே தியாகி வள்ளியம்மையின் பெயர் நம் அனைவர் கவனத்திற்கும் வருவது இயல்பு . தனது பதின்பருவத்திலேயே தென்னாப்பிரிக்காவில் காந்தியடிகளி ன் வேண்டுகோளுக்கிணங்க தென்னாப்பிரிக்க வெள்ளைத்துரைத்தனத்தை எதிர்த்துச் சிறைநிரப்பும் போராட்டத்தில் கலந்துகொண்ட அந்தச் சிறுமியின் அஞ்சாமையும் நெஞ்சுரமும் தியாக உணர்வும் காவியம் பாடிப் போற்றிடத் தக்கன.**

**தில்லையாடி வள்ளியம்மையின் பெற்றோரையும் ,அதுபோன்றே நூறு அ ல்லது நூற்றைம்பது குடும்பத்தினரையும் தென்னாப்பிரிக்காவுக்குப் பஞ்சம் பிழைக்க அழைத்துவந்த தில்லையாடி வேதியன்பிள்ளை இன்னும் வரலாற்றின் பேரேடுகளில் பதிவுறவில்லை.**

**அப்படி அவர் என்ன செய்துவிட்டார்?மூன்றாண்டுக் காலம் , காந்தியடிகளுக்குத் தமிழ் கற்றுக்கொடுத்த ,காந்தியடிகளின் தமிழாசிரியர் தில்லையாடி வேதியன்பிள்ளை என்பது பலரும் அறியாத உண்மையாகும்.இதன் விளைவாகத்தான் காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவில் தமது ஆசிரமத்தில் தங்கியிருந்த தொழிலாளர் பிள்ளைகளுக்குத் தமிழ் சொல்லிக் கொடுப்பதைத் தமது பகுதிநேரப் பணியாகக் கொண்டிருந்தார்.அவர் நடத்தியது அறியாப் பிள்ளைகளுக்குத் தமிழ் அரிச்சுவடி கற்றுக்கொடுக்கும் பணி என்றாலும் அங்ஙனம் கற்றுக்கொடுக்கும் துணிவையும் தமிழறிவையும் அவருக்கு வழங்கிய தமிழாசான் தில்லையாடி வேதியன்பிள்ளை என்பது குறிப்பிடத்தக்கது.**

**வேதியன்பிள்ளை தமிழ்ப்புலவரா ? அல்லவே அ ல்ல. அவர் தென்னாப்பிரிக்காவுக்கு வந்து தொழில் நடத்திப் பொருளீட்ட வந்தவர்.அவரது குலமரபு குறிப்பிடத்தக்க சிறப்புடையதெனலாம் ..ஆமாம்.அவர் தாயுமானவ அடிகளின் வழிமுறையில் ஐந்தாவது தலைமுறையைச் சேர்ந்தவர் ஆவார்.தாயுமானவ அடிகளார் தமது மனைவி காலமானபின் தமது ஒரே மகன் கனகசபாபதியைத் தம் அண்ணன் பொறுப்பில் விடுத்துத் துறவு பூண்டுவிட்டார்.கனகசபாபதி>>சண்முகவடிவு>>கமலப்பண்டாரம்>>>கதிர்வே ற் பிள்ளை _>தட்சிணாமூர்த்தி என வழிவழி வந்த மரபில் தட்சிணாமூர்த்தி**

அவர்களுக்கு இரு ஆண்மக்கள் ;.மூத்தவர் வேதியன் பிள்ளை .இளையவர் முத்துக்குமாரசாமி.

தட்சிணாமூர்த்தி அவர்கள் தம் மக்கள் சிறுபிள்ளைகளாக இருக்கும்போதே துறவு பூண்டு சென்றுவிட்டார்.அவர் வள்ளலாருடன் சென்றுவிட்டதாகச் செய்தி நிலவுகிறது.அதுவரை திருவாரூரில் இருந்த அக்குடும்பம் பின்னர் தில்லையாடிக்குக் குடிபெயர்ந்துவிட்டது .வேதியன் பிள்ளையின் தந்தைவ ழிப் பாட்டி (தட்சிணாமூர்த்தியின் தாயார்) தமது சகோதரன் பெருநிலக்கிழாராகத் தில்லையாடியில் வளமிக்க வாழ்வுடன் விளங்குவதால் அங்கு அழைத்துச் சென்றுவிட்டார். வேதியன் பிள்ளை தமிழ் கற்றுக்கொண்டது தமிழிசை மூவரில் ஒருவராகிய முத்துத்தாண்டவரிடம் என்னும் செய்தி அவருடைய பு லமையின் ஆழம் எத்தகையதாயிருந்திருக்கும் என்னும் உண்மையை நமக்குப் புலப்படுத்துகிறது.

வேதியன் பிள்ளை இளமைப்பருவம் எய்தியவுடன் தமது சொந்த உழைப்பில் பொருளீட்டிக் குடும்பத்தைப் பார்த்துக்கொள்ளும் கடமையை உணர்ந்தார்.அந்த ஊரைச் சேர்ந்த விருத்தாசலம் பிள்ளை அப்போது தென்னாப்பிரிக்காவில் வணிகத்தில் ஈடுபட்டிருந்தார். அவர் போலவே தாமும் தென்னாப்பிரிக்காவுக்குப் பிழைக்கச் செல்லலாம் எனத் திட்டமிட்டுப் பெரியவர்களிடம் இசைவு பெற்றுத் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றார் . பல்வேறு சிறுவணிகங்களில் ஈடுபட்டுப் பொருளீட்டினார் ;அதே வேளையி ல் கேம்பிரிட்சு பல்கலைக்கழகத்தில் பட்டப்படிப்புக்கும் சேர்ந்து பட்டமும் பெற்றார்.பெரிய செங்கற் காளவாய் அமைத்து வணிகம் செய்து பொருளீட்டினார்.

காந்தி அடிகள் தென்னாப்பிரிக்காவுக்கு வருவதற்குப் பல ஆண்டுகள் முன்னரே அங்கு வந்து வணிகச் சுற்றம் சூழ வளமுடன் வாழ்ந்து வந்த வேதியன்பிள்ளை இந்தியாவிலிருந்து வந்த அந்தக் குசராத்தி வழக்கறிஞரோடு முதலில் தொழில்முறைத் தொடர்பு கொண்டிருந்தார் . வணிகர்—வழ்க்கறிஞர் என்னும் முறையிலே அத் தொடர்பு இருந்தது .சில ஆண்டுகளுக்குப் பின் தற்செயலாக ஒருமுறை திருக்குறள் ஒன்றினை ஆங்கிலத்தில் விளக்கி அதன் நயத்தை வேதியன்பிள்ளை கூறியபொழுது காந்தியடிகள் திருக்குறளையும் ஏனைய தமிழ் இலக்கியங்களையும் தமக்குக் கற்பிக்குமாறு வேண்டியவுடன் வணிகர் தமிழாசானாகிவிட்டர்.வழக்கறிஞர் தமிழ் மாணவர் ஆகிவிட்டார்.

இதற்கு முதன்மையான காரணம்,உருசிய எழுத்தாளர் தால்சுதாய் மூலமாகத் திருக்குறளைப் பற்றிக் கேள்விப்பட்ட காந்தியடிகள் கொல்லாமை, இன்னாசெய்யாமை என்னும் இரு அதிகாரங்களின் பொருளை அவர் மூலம் அறிந்திருந்தார்.

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன் பின் சாரப்
பொய்யாமை நன்று.

என்னும் குறள் காந்தியடிகளின் குறிக்கோள் பயணத்திற்குத் தடம் அமைத்தது.

கொல்லாமை அகிம்சைநெறிக்கும் பொய்யாமை சத்தியாக்கிரகத்திற்கும் அடிகோலின.

வள்ளுவரின் வழித்தோன்றலாகக் காந்தியடிகள் வாழ்ந்தார்.அவர் வாழ்க்கைமுறை குறளுக்குப் பொழிப்புரையாய் அமைந்ததே உலகம் கற்கும் வரலாறாகியது.

காந்தியின் வழித்தோன்றலாக நெல்சன் மண்டேலா,மார்ட்டின் உலூதர் கிங் அரசியலில் அறநெறி போற்றினர்.வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்ததாகப் பாரதியார் கூறியமை உண்மை.வெறும்புகழுரை அன்று.

**வேதியன்பிள்ளை இருந்தது கிம்பர்லி நகரில்,காந்தியடிகள் இருந்தது கேப்டவுன் எனும் நகரில் .பெரும்பாலும் காந்தியடிகள் கிம்பர்கலிக்குச் சென்று தமிழ் கற்றுவந்தார்.**

**ஒருமுறை மாலையில் தமிழ்ப்படிப்பு முடிந்ததும் மழையின் காரணமாக காந்தியடிகள் தாம் வழக்கமாகச் செல்லும் தொடர்வண்டியைத் தவறவிட்டுவிட்டார்.எனவே வேதியன்பிள்ளை இல்லத்திலேயே அன்று இரவு தங்க நேர்ந்தது.இதனை ஒரு மகிழ்வான வாய்ப்பாகக் கருதிய வேதியன்பிள்ளை கட்டிலில் பட்டுமெத்தையில் குளிருக்கு இதமான வெந்நீர் ஒத்தடம் கொடுத்துக் காந்தியடிகளைத் தூங்குமாறு வேண்டியுள்ளார் அக்கட்டிலையும் ஆடம்பரமான ஏற்பாடுகளையும் கண்ட காந்தியடிகள்"வேதியன் பிள்ளை ! தென்னாப்பிரிக்காவில் நாம் (இந்தியர்கள்)எவ்வளவு பேர் வாழ்கிறோம் ?"என வினவினாராம்.**

**தயக்கத்துடன் அங்கு வாழும் புலம்பெயர் இந்தியர் எண்ணிக்கையைப் பிள்ளை கூறினாராம்.**

**"இத்துணை இந்தியர்களும் இப்படிச் சொகுசான கட்டிலில் தான் தூங்குகிறார்களா?"என்பது காந்தியடிகளின் வினா.**

**கூலிகளாகவும் கட்டுமானத்தொழிலாளர்களாகவுமே பெரும்பான்மையோர் இருந்த சூழலில் பிள்ளை 'ஆமாம்'என்று கூறமுடியுமா?**

**"எனக்கு ஒரு கோணிப்பை இருந்தால் கொடுங்கள் .தரையில் விரித்துப் படுத்துக்கொள்கிறேன்."இது காந்தியடிகளின் வேண்டுகோள்.**

**வேறுவழியின்றிப் பொதிமானப் (பார்சல்) பணிக்காக அங்கே இருந்த ஓர் ஓலைப்பாயைப் பிள்ளை கொடுத்தார் .தரையில் அதனை விரித்துக் காந்தியடிகள் படுப்பதைக் கண்ணீர்மல்கப் பார்த்துக்கொண்டிருந்தார் பிள்ளை**

இங்கே கவனிக்கவேண்டியது ,அங்கே அப்போது காந்தியடிகளாக இல்லாமல் வழக்கறிஞர் மோகன்சந்து கரம்சந்து காந்தியாகத் தான் அண்ணல் இருந்தார் . எனினும் அந்தச் சூழலில் அவருக்கு வாய்த்திருந்த அத் துறவுள்ளம் தாயுமானவ அடிகள் வழிவந்த வேதியன்பிள்ளையை மெய்சிலிர்க்கச் செய்துவிட்டது "கல்லணையில் கண்துயிலக் கற்றனையோ காகுத்தா கரிய கோவே "என்னும் ஆழ்வாரின் ஏக்கத்தைப் போன்றே பிள்ளை அவர்களும் ஏங்கினார் பரணில் படுத்துறங்கிய இராமனைக் கண்ணீ ர் மல்கக் காத்துநின்ற இலக்குவனைப் போலவே இரவெல்லாம் கண்ணீர்மல்கக் காந்தியடிகள் துயின்ற கோலத்தைப் பார்த்தவாறு துயருற்றிருந்தார்.
காந்தியடிகளின் போராட்டவாழ்வுக்கு உதவியாகவும் பிள்ளை செயற்பட்டார்.அப்போது வ .உ.சி.பெற்ற சிறைவாழ்வைக் கேள்விப்பட்டு உடனடியாக அவரது வழக்குச் செலவுக்குத் தம்மால் இயன்ற பொருளுதவியைச் செய்தார்.மாதந்தோறும் வ .உ.சி.யின் குடுமபத்திற்குப் பணம் அனுப்பி உதவினார்.வ.உ.சி.சிறையிலிருந்து வெளிவந்தபின்னர்,தமது நன்றியுணர்வைக் காட்டும் விதமாகத் தமக்குப் பிறந்த பெண்குழந்தைக்கு வேதவல்லி எனப் பெயரிட்டார்.(ஆண்பிள்ளை பிறக்கும் என்றும் வேதியன் எனப் பெயரிடவேண்டும் எனவும் அவர் நினைத்திருந்தார் .)அந்தப் பெண்குழந்தை பருவமெய்திய வேளையில் புனிதநீராட்டுநடத்தும் செலவு ஐம்பது ரூபாய் ஆகும் எனவும் அ தற்கு என்ன செய்வது என வழியறியாது கலங்குவதையும் வ.உ.சி.தமது நண்பராகிய பிள்ளைக்கு எழுதிய கடிதத்தையும் இணைத்துள்ளேன்.
காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவை விட்டு இந்தியாவுக்கு வந்தபோது வ.உ.சி.யின் வறுமைத்துயரையும் மண்ணெண்ணெய் விற்கும் அவலநிலையையும் கேள்வியுற்று அவருக்குக் கொடுக்குமாறு ஐயாயிரம் ரூபாய் கொடுத்தனுப்பினார்.ஆனால் இந்தியா வந்ததும் பல அலுவல்களில் மூழ்கிப்போன காந்தியடிகள் அதனை மறந்துவிட்டார் .பின்னர் வ .உ.சி.யே காந்தியடிகளுக்குப் பல மடல் விடுத்தும் பயனில்லை .வேதியன்பிள்ளை தென்னாப்பிரிக்காவிலிருந்து தமிழகம் வந் தபின்னர் தமது மைத்துனரையும் வ.உ.சி.யையும் காந்தியடிகளிடம் நேரில் அழைத்துச் சென்று செய்தியை நினைவூட்டி வாங்கித் தந்துள்ளார்.
உழவுத்தொழிலாளர்களாகப் பணியின்றிப் பஞ்சம் பிழைக்க வழிதேடிய பலரைத் தில்லையாடியிலிருந்து தென்னாப்பிரிக்காவுக்கு அழைத்துச் சென்றவர் பிள்ளையவர்களே.தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்துவந்த தொழிலாளர்களுள் ஒரே சிற்றூரிலிருந்து மிகுதியானவர்கள் வந்தனர் எனில் அந்த ஊர் தில்லையாடியே;அங்ஙனம் அழைத்துச் சென்றவர் பிள்ளையவர்களே.
எனவே தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்கு வந்தபின் முதலில் தமது ஊருக்குத் தான் காந்தியடிகள் வரவேண்டுமென்னும் பிள்ளையின் வேண்டுகோளை ஏற்றும் வள்ளியம்மையின் தியாகத்தைப் போற்றும்

வகையிலும் 1915-இல் காந்தியடிகள் வந்தார் . தில்லையாடியில் அவர் வந்துசென்றதன் நினைவாக மண்டபம் கட்டப்பட்டுள்ளது

1915-இல் பெண்குழந்தைகளுக்கென்று ஒரு பள்ளிக்கூடம் நி றுவினார்.அப் பள்ளியின் பெயர் சுதர்ம பாலிகா பாடசாலை .அப் பள்ளியில் மதிய உணவும் வழங்க ஏற்பாடு செய்தார் .பின்னர் அப் பள்ளி இருபாலார்க்கும் உரிய பள்ளியாகி இன்றளவும் நடந்துவருகிறது .(அண்மையில் நூற்றாண்டுவிழா நடத்திய அப் பள்ளியின் ஒளிப்படத்தையும் இணைத்துள்ளேன்)

.

வேதியன் பிள்ளைக்கு நான்கு மகன்கள்;மூன்று புதல்விகள்.அவரது இரண்டாம் புதல்வர் தட்சிணாமூர்த்திக்கு இப்போது எண்பத்தெட்டு வயது .ஓய்வுபெற்ற தலைமையாசிரியராகிய தட்சிணாமூர்த்தி அவர்கள் தென்னன் என்னும் புனைபெயரில் பல கவிதைத்தொகுப்புகள் எழுதி வெளியிட்டுள்ளார் .அகவை முதிர்ந்ததால் மறதி தலைதூக்கினாலும் , காந்தியடிகளுக்குத் தமிழ் கற்றுக்கொடுத்தவர் தம் தந்தையார் என்னும் பெருமித உள்ளத்துடன் வாழ்ந்துவருகிறார்.அவர் கூறிய செய்திகளே இக் கட்டுரை ஆக்கத்திற்குத் துணை புரிந்தன.(இப்போது அவர் புகழுடல் எய்தியுள்ளார்.)

--இணைப்பு;



1.:பிள்ளையவர்கள் காந்தியடிகளுடன்

**இடது கோடியில் வேதியன் பிள்ளை**

**கோல் ஊன்றிய காந்தியடிகளுக்கு வலது பக்கம் திருநாராயணசாமி படையாச்சி.**

**வலது பக்கம் தில்லையாடிக்கு வேதியன் பிள்ளையை அழைத்துவந்த விருத்தாசலம் பிள்ளை**





2. வ.உ.சி. வேதியன் பிள்ளைக்கு எழுதிய கடிதம்




3.தில்லையாடியில் வேதியன் பிள்ளை1915-ஆம் ஆண்டு நிறுவிய பள்ளி

2015-இல் நூற்றாண்டு விழா நடந்தது இப் பள்ளி இன்னும் சிறப்பாக நடந்துவருகிறது

---மறைமலை இலக்குவனார்



குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

மின்னிதழ்:44 புரட்டாசி-29 -தி.பி.2053 அக்குதோபர்-15- பொ.ஆ.2022

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்



## குன்றக்குடி அடிகளார்



பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்
இணையாசிரியர்:தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

சிறப்புக் கட்டுரை

## குன்றக்குடி அடிகளாரின்

# “ திருக்குறள் சமய சமுதாய மறை”

முன்னுரை

திருவள்ளுவர் அருளிச்செய்த திருக்குறள் ஒரு சிறந்த அறநூல்; முழுதுறழ் அறநூல் மறைநூல்; பொதுமறை நூல்: மனிதராகப் பிறந்தோர் பேசும் எம் மொழியிலும் இது போன்றதொரு இலக்கியம்-அறநூல் தோன்றியதில்லை. புறநானூறு ‘அறம்பாடிற்றே’[1] என்று திருக்குறளைச் சிறப்பித்துக் கூறுகிறது. உமாபதி சிவம் ‘மெய் வைத்த சொல்’[2] என்று பாராட்டுவார். இருபதாம் நூற்றாண்டில் மனித இதயம் படைத்த மாமனிதர் ஆல்பர்ட் சுவைட்சர், “திருக்குறளுக்கு ஒப்பான நீதி நூல் எதுவுமில்லை” என்று புகழ்ந்துள்ளார். திருக்குறள் கற்பனையில் தோன்றியதன்று. திருக்குறளில் அதிசயம் கிடையாது; அற்புதம் கிடையாது; புனைந்துரையில்லை. மனித உலகத்தை வாழ்வாங்கு வாழ வழிகாட்டும் நூல். “இது” என்றும் “அது” என்றும் இரண்டாட்டுகின்ற சமயக் கணக்கர் வழியினின்றும் விலகிய பொது நூல். ஓருலகம் படைக்க வேண்டுமானால் அதற்குரிய நூல் திருக்குறளேயாம். திருக்குறள் நெறி, வையகத்தில் வாழ்க்கையாக மலருமானால், வீட்டுக்கு வீடு இடையில் இருக்கும் சுவர்கள் இடிபடும். நாட்டுக்கு நாடு இடையில் உள்ள எல்லைக் கோடுகள் மறையும். உலகம் ஒன்றாகும். மானிடச் சாதி ஒரு சாதியாக உருவெடுக்கும். எங்கும் பொதுமை நிலவும்! எல்லோரும் வாழ்வர்; இத்தகு பெரு நூலை- அரிய நூலைத் தந்த திருவள்ளுவர் திருவடிகளைப் போற்றுவோமாக அவர் காட்டிய வழி வாழ்வோமாக.

மறை நூல்

ஒரு சமுதாயத்தை வழிநடத்தி வாழ்விக்கும் சமய நெறிக்கு மறைநூல் வேண்டும். மறை என்பது தமிழ்ச் சொல். அதனையே வேதம் என்றும் கூறுவர். நமது சமயத்திற்கு எது மறை? இந்து சமயத்திற்கு எது மறை? மற்ற சமய நெறிகளுக்கு இருப்பதுபோல நமக்கென்று ஒரு மறை இல்லை; பலர் பலவிதமாகக் கூறுகின்றனர் என்ற குறை தொடர்ந்து இருக்கிறது. இந்த நிலைநோக்கி அறிஞர்களும் கவல்கின்றனர். மறை நூல் இல்லாது போனால் எங்ஙனம் சமுதாயத்தை ஒருமைப்பாடுடைய தாக்க முடியும்? என்பது அவர்கள் கவலை. ஆனால் உண்மையில் நமக்கொரு மறை இல்லாமலா போய்விட்டது? நமக்கென்று ஒரு மறை உண்டு. ஆனால், அதைத் துணிந்து மறை நூலாக ஏற்றுக் கொள்ளத் தயங்குகின்றோம். தொல்காப்பியத்திலேயே மறை நூல் என்ற வழக்கு பேசப் பெறுகிறது. “அறங்கரை நாவின் நான்மறை முற்றிய”[3] என்பது தொல்காப்பியப் பாயிரம். இந்நூற்பாவுக்கு உரை கண்ட உச்சிமேல் புலவர்கொள் நச்சினார்க்கினியர், “இருக்கும் யசுரும் சமமும் அதர்வணமும் என்பாருமுளர், இது - பொருந்தாது. இவர் இந்நூல் செய்த பின்னர், வேத வியாதர் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோர் உணர்தற்கு நான்கு கூறாகச் செய்தார் ஆகலின்”[4] என்று எழுதும் உரை எண்ணுதலுக்குரியது. புறநானூற்றில் மிகத் தொன்மைக் காலத்துப் பாடல்களும் உள்ளன. வேத வியாதர் காலத்துக்கு முற்பட்ட பாடல்களும் உள்ளன. “நான்மறை முனிவர்”, “நால்வேத நெறி” எனவும் வரும் சொற்றொடர்கள், பழங்காலத்திய தமிழில் தமிழ் மறைகளிருந்தன என்பதை அறிவிப்பன. நமது திருமுறைகளில் மறையென்று கூறப்படுவன தமிழ் மறைகளேயாம்.

இது “பண்பொலி நான்மறை” என்றும் “முத்தமிழ் நான்மறை” என்றும் வரும் தமிழ் வழக்கினை ஒட்டிக் குறிப்பிடும் வகையால் அறியக் கிடக்கிறது. மாதவச் சிவஞான முனிவரும் “கொழிதமிழ் மறைப்பாடல்” என்று தமிழ் மறை உண்மையை எடுத்துக் காட்டுகின்றார். இந்தத் தமிழ் மறைகள் ஆலமர் செல்வனால் அருளிச்செய்யப் பெற்றவை என்றுதான் திருமுறைகள் பேசுகின்றன. இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் முதலிய வேதங்கள் இறைவனால் அருளிச்செய்யப் பெற்றன அல்ல. பல்வேறு முனிவர்களால் பல்வேறு காலங்களில் அருளிச் செய்யப் பெற்றவை. நமது சமய வரலாற்று அடிப்படையில் நமது சிவபெருமானும் உமையம்மையும் பேசுவது தமிழே தான்; அதனால்தான் வேதநெறி தழைத்தோங்கப் பிறந்த திருஞானசம்பந்தர், நமையாளும் உமையம்மையின் ஞானப் பாலுண்டவுடன் ‘தோடுடைய செவியன்’ என்று தூய தமிழிற் கவிதை பொழிந்தார். ஆதலால் நமது சமயத்திற்குப் பண்டு, தமிழ் மறைகளிருந்தன என்பது தெளிவு மறுக்க முடியாத உண்மை. ஆயினும், அந்த மறைகள் இன்று நமக்குக் கிடைக்கவில்லை. அவை கடற்கோள் பட்டிருக்கவேண்டும். அம்மறைகளை நாம் இழந்துவிட்டோம் என்று துயருறா வண்ணம் நமக்கொரு புதுமறை கிடைத்திருக்கிறது.

திருவள்ளுவ நாயனார் அருளிச்செய்த திருக்குறள், மறைகளை ஒத்தது இல்லை, மறைகளை விஞ்சிய சிறப்புடையது; மறை நூலின் விழுமிய நோக்கமாகிய அறநெறி உணர்த்துகிறது; பொருள் நெறி காட்டுகிறது; இன்ப நிலை எய்த வழி நடத்துகிறது; திருவடிப்பேற்றினை வழங்குவிக்கிறது; கடவுளை வாழ்த்துகிறது; உயிரின் நிலையை உய்த்துணரச் செய்கிறது; அறியாமையை அடையாளம் காட்டுகிறது; ஆன்ற அறிவை வழங்குகிறது; ஆதலால், திருக்குறள் ஒரு மறை நூலே, மறந்தும் வேறுபாடுகளைக் குறிக்காத மறை நூல் அது! அதனாலன்றோ ஔவையார்,

தேவர் குறளும் திருநான் மறைமுடியும்
மூவர் தமிழும் முனிமொழியும்-கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகம்என் றுணர்[5]

என்று பாடினார்.

திருக்குறள் நமது சமுதாயத்தின் தனிமறை, பொது மறை. இம்மறை வழி நின்று விதித்தன செய்து, விலக்கியன ஒழித்து வாழ்தல் நமது சமய வாழ்க்கை.

உயிர்களின் வளர்ச்சி

மனிதன் ஓர் அற்புதமான தோற்றம். உலகத்தில் கோடானுகோடி உயிரினங்கள் வாழ்கின்றன. அவற்றில் சிலவற்றுக்கே பெயர்கள் காணப்பெற்றுள்ளன. இன்னும் சில, பெயர்கள் பெறவில்லை. உயிர்க்குலத்தின் ஆராய்ச்சி தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இன்னும் பல நூற்றாண்டுகள் அது நடைபெறும் என்றே தெரிகிறது. உயிர்க்குலத் தொகுதியினை,

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்[6]

என்று முறைப்படுத்திக் கூறுவார் மாணிக்கவாசகர். இத்தகைய ஒரு கொள்கையினையேதான் உயிரியல் விஞ்ஞானி டார்வினும் கண்டு உலகத்திற்குத் தந்தார். ஆனால், நமது சமயநெறி படிப்படியாகப் பல பிறப்புகளில் உயிர் வளர்ந்து வளர்ந்து மனிதப் பிறப்பையடைகிறது என்று வகுத்துரைக்கும். இதனைத் தொல்காப்பியர் வாயிலாக நாம் எளிதில் உணரமுடிகிறது. அவர் உயிரினத்தை அறுவகையாகப் பிரிக்கிறார்.

புல்லும் மரனும் ஓரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.

நந்தும் முரளும் ஈரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.

சிதலும் எறும்பும் மூவறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.

நண்டும் தும்பியும் நான்கறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.

மாவும் புள்ளும் ஐயறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.

மக்கள் தாமே ஆறறி வுயிரே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.

என்பது தொல்காப்பியம்[7] ஓரறிவுடைய உயிர்கள் அந்த ஓரறிவில் முழுமையாக வளர்ந்து, உருமாறி (இறப்பு, பிறப்பின் மூலம்) ஈரறிவுயிர் உருவத்தை அடைந்து, அதில் முழுமையாகி மரணமடைந்து, வேற்றுருப் பெற்று, மூவறிவுயிராகி, அதில் முழுமையாகி மரணம் அடைந்து வேறுருப்பெற்று நாலறிவுயிராகி, அதில் முழுமையுற்று இறந்து-பிறிதோருருப் பெற்று ஐயறிவுயிராகி அதில் முழுமையடைந்து இறந்து ஆறறிவுயிராகிய மானிடப் பிறப்பை வந்தடைகின்றன.

மானிடப் பிறப்பின் உயர்வு

உயிர் பிறப்பு முறையில் வளர்ச்சியடைந்த-சிறப்புடைய பிறப்பு, மானிடப் பிறப்பே. அதனை அடுத்தது தேவர்நிலை. “அரிதரிது மானிடராய்ப் பிறத்தலரிது”[8] என நூல்கள் பாராட்டும். “வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்”[9] என்று அப்பரடிகளின் அருள் நூல் கூறும்.

பகுத்தறிவின் பயன்

மனிதன் ஆறாவது அறிவையுடையவன். அதாவது பகுத்தறிவுடையவன். பகுத்தறிவு என்பது ஒரு சிறந்த கருவி. பகுத்தறிவாவது “நல்லதன் நலனும் தீயதன் தீமையும்”[10] அறிந்து, ஏற்றும் விலக்கியும் ஒழுகுதல். உலகியல், குப்பை கூளங்கள் நிறைந்ததே. ஆயினும், முத்துக்கள் இல்லையென்று கூற முடியாது. குப்பை கூளங்களை விலக்கி

முத்துக்களை ஏற்பதே பகுத்தறிவின் பயன். பகுத்தறிவு முறையாகத் தொழிற்பட வேண்டுமாயின் சிந்தனைக்குத் தளைகள் பூட்டக்கூடாது. அதாவது, "இது முன்னோர் வழக்கம்; இது அந்த ஞானி கூறியது; இது இந்த ஞானி கூறியது; இதை ஏற்றுக் கொள்ளாவிட்டால் பாவம், நரகம் கிடைக்கும்; இதை ஏற்றுக் கொண்டால் மோட்சம் கிடைக்கும்; இதனை ஏற்றுக் கொள்ளத் தவறினால் பலர் ஏசுவர்" என்பன போன்ற இன்னோரன்ன ஆசைகளுக்கும் அவலங்களுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் அடிமைப்படுதல் கூடாது.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு[11]

என்ற குறளுக்கேற்ப யார்க்கும் அடிமைப்படாது மெய்ப்பொருள் காணத் தலைப்படல் வேண்டும். அங்ஙனம் அடிமைப்பட்டால், சிந்தனை செக்குமாடு போலத்தான் சுற்றும். அதற்குப் பகுத்தறிவு முறையாகத் தொழிற்படின் பழமையினின்றும் விலகாது. ஆனால், அங்கேயே கழித்துக் கொண்டு வட்டமிட்டுத் தேங்காது; விரிவடையும், வளரும்; பழமை மறையும்; புதுமை தோன்றும் விதை மறைந்து செடி தோன்றுவதில்லையா? அதுபோல! ஆதலால் பகுத்தறிவினால் பழமை அழியும் என்று அச்சம் கொள்ளுதல் தவறு. பகுத்தறிவினால் மனித உலகம் முதுமையடையாமல் உயிர்ப்புள்ள இளமையோடு வளரும்; வாழும், பகுத்தறிவு வளர வளர நியாயங்கள் தோன்றும்; அவ்வழி நெறிகள் தோன்றும்; மனம் தொழிற்படும். மனமுடையவன்தானே மனிதன். மனமுடைய மனிதன் மானிட உலகத்திற்கு வான்மழையை ஒத்தவன். அந்த மானிடச் சாதியை வளர்க்கும் உத்தம மனிதன் வளர்க! வாழ்க!

சிந்தனையாளர்கள் இயக்கம்

இந்த மனித குலம் தோன்றிக் கோடானுகோடி ஆண்டுகளாகிவிட்டன. வரலாற்றில் சென்று போன கோடிக் கணக்கான ஆண்டுகளில் மனித உலகத்தின் வரலாறு சிந்தனைக்குரியது. பல நூறு ஆயிரம் பக்கங்களில் விரிந்துள்ள இந்த வரலாற்றில் பல பக்கங்கள் கொடியோர்களின் செய்திகளைக் கூறும்; ஓரிரண்டு பக்கங்கள் உலகத்தை வாழ்விக்கத் தோன்றிய உத்தமர்களின் வரலாற்றினைக் கூறும். ஆனாலும் அந்த உத்தமர்கள் தொடங்கிவைத்த இயக்கமே பின்னால் மனிதரை வாழ்விக்கத் தவறுவதையும் காண்கின்றோம். மனித குலத்தின் வரலாறு நெடிய நேர்க்கோடாக வளரவில்லை. ஏராளமான வளைவுகள் அதில் உள்ளன. வளைவுகளின் காரணமாக நிகழ்ந்த விபத்துக்களும் அதிகம். ஒட்டுமொத்தமாக வரலாற்றுப் புத்தகத்தைப் படித்து முடித்த பிறகு நாம் பெறும் ஒரே உணர்வு, இன்னமும் மனிதன் மனித வடிவத்தில் உலாவருகிறானே தவிர, அவன் இன்னமும் மனிதனாகவில்லை என்பதே! இந்தச் சிந்தனை திருவள்ளுவருக்கு இருந்திருக்கிறது. அதனால்,

மனத்தது மாசாக மாண்டார் நீராடி
மறைந்தொழுகும் மாந்தர் பலர்"[12]
என்றும்
மக்களே போல்வர் கயவர்"[13]
என்றும்
வேதனையுடன் கூறிய குறள்கள் சிந்தனைக்குரியன.

இங்ஙனம், பகுத்தறிவைப் பெற்றிருந்தும் அவற்றை உபயோகப்படுத்தாமல் நெறிமுறை தவறிச் சென்று இன்னல் பட்ட மனிதகுலத்திற்கு வழிகாட்ட அவ்வப்பொழுது தக்க ஞானிகள்-பேரறிஞர்கள் பலர் தோன்றியுள்ளனர். அவர்களின் பட்டியலை இங்குத் தருவது இயலாத ஒன்று. ஆனாலும், குறிப்பிடத்தக்கவர்கள் சிலரையாவது நினைவிற் கொண்டுவருவது நம் கடன். திருவள்ளுவரை ஒட்டி வருகின்ற சிந்தனையாளர்கள் சிலரை நினைந்து பார்ப்போம்.

கன்பூசியஸ்

திருவள்ளுவர் காலத்துக்கு முந்தியவர்களில் சீன நாட்டில் தோன்றிய கன்பூசியஸும், கிரேக்க நாட்டில் தோன்றிய சாக்ரட்டிஸும், குறிப்பிடத் தகுந்தவர்கள். கன்பூசியஸ் ஒரு சிறந்த மாமேதை. மனித சமுதாயத்தை அறவே பழமையிலிருந்து விலக்கிச் செல்ல முடியாதென்ற எண்ணத்தின் காரணமாகச் சீன நாட்டில் வழங்கிய பழைய கருத்துகளுக்குப் புதுப்பொருள் கண்டவர். அவர் கண்ட புதுப்பொருள் அவருடைய சிந்தனையில் தோன்றியது. அவர், ஒழுக்கத்தையே முதல்நிலைப்படுத்தினார். அது மட்டுமன்று ஒழுக்கத்தை ஒழுக்கத்திற்காகவே கடைப்பிடிக்க வேண்டுமென்று வழி நடத்தினார். கன்பூசியஸ் கடவுளைப் போற்றுதல் மூலமே உயர்ந்துவிட முடியும் என்பதுபோல மறைநூல் செய்தாரில்லை. அவர், மனித இயற்கையைப் பெரிதாகப் பாராட்டினார். அந்த மனித இயற்கையை முழுமையுறச் செய்து கொள்ள வேண்டும்; அங்ஙனம் முழுமையுறத் துணை செய்வதே அறநெறிச் சட்டமென்றார். அறநெறிச் சட்டத்தின் வழியில் நின்று வாழ்ந்து பண்புடையோராக வாழ்வோரை உலகு பாராட்டுமென்றார். இதனையே திருவள்ளுவர்

நயனொடு நன்றி பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு[14]

என்றார். “ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்”[15] என்றார் திருவள்ளுவர். சிந்தனை ஒப்பு நோக்கத்தக்கது. “மனித உள்ளம் என்பது பிறரை நேசித்தல்” என்பது கன்பூசியஸின் தத்துவம். இதனைத் திருவள்ளுவர் “அன்பின் வழியது உயிர்நிலை”[16] என்றார். கன்பூசியஸின் சிந்தனைகள் சீனநாட்டு மக்களுக்கு இருபது நூற்றாண்டுகளுக்கு மேலாக மழைகளைப் போல விளங்கி வந்துள்ளன.

சாக்ரட்டிஸ்

திருவள்ளுவருக்குச் சற்றேறக்குறைய நான்கு நூற்றாண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவன் கிரேக்க நாட்டுச் சிந்தனையாளன் சாக்ரட்டீஸ், அவன் மனித குலத்திற்கு அறிவை முதனிலைப்படுத்தி அறிவுறுத்தினான். அறிவாராய்ச்சி செய்யும்படி ஆற்றுப்படுத்தினான்.

“அறிவுடையார் எல்லாம் உடையார்”
என்பது ஒப்புநோக்கத்தக்கது. சாக்ரட்டீஸ் எழுதுகோல் ஆனாலும், அவனது சிந்தனையில் தோன்றிய சிந்தனை முத்துக்களை அவனுடன் இருந்த பிளேட்டோ அழகுறத் தொகுத்துத் தந்திருக்கிறான். சாக்ரட்டிஸ் உரையாடல்கள் மூலமே உயர்நெறியை யுணர்த்தியவன். வினாக்கள் மூலமே விடைகளைத் தந்தவன். சாக்ரட்டிஸும் கன்பூசியஸைப் போல உயிரினும் உயர்வாக ஒழுக்கத்தை மதிக்கக் கற்றுக்கொடுத்தான். சாக்ரட்டிஸ் மனித உலகத்தின் மனச்சாட்சிக்காகப் போராடினான். மனிதனின் சிந்தனை ஒருமைக்காகப் போராடினான். ஆயினும், அவனை அந்தக் காலச் சமுதாயம் ஏற்றுக்கொள்ளவில்லை. கன்பூசியஸ் தன் தலைமுறையிலேயே வெற்றி பெற்றார். சாக்ரட்டீஸ் அவன் தலைமுறையில் வெற்றி பெறவில்லை. உயிரைப் பணயமாகக் கொடுத்தான். ஆனால், மனித குலத்தின் அறிவு இயக்கம் உள்ளவரை சாக்ரட்டீஸின் பெயர் நினைவிலிருக்கும்.

திருவள்ளுவர்

திருவள்ளுவர், தமிழகம் முற்றாக நிலை தளர்ந்திருந்த பொழுது மறைநூல் செய்தாரென்று கூறமுடியாது. ஆயினும், திருவள்ளுவர் தோன்றிய காலம் தமிழகத்திற்கு ஒரு சோதனைக் காலமே. காதல் காமமாக உருமாறிப் பரத்தையர் ஒழுக்கம் பரவியிருந்தது. வீரம், சிறுகலகங்களாக உருமாறி ஒரு குலத்துள்ளோரே தமக்குள் ஒருவரையொருவர் அடுதலும் தொலைதலுமாக இருந்தனர். தமிழ் வழக்குக் கொவ்வாத அயல் வழக்குகள் ஊடுருவி அலைக்கழித்துக் கொண்டிருந்தன. இந்த நெருக்கடியான காலக் கட்டத்தில் திருவள்ளுவர் தோன்றினார். திருவள்ளுவர் திருக்குறளை இயற்றி, முறையே தனி மனிதன், குடும்பம், நாடு, அரசு ஆகியவைகளுக்கு அறநெறி காட்டி வழி நடத்தினார். திருவள்ளுவர் தந்த அறநெறி அவர் காலத்தில் ஓரளவு வெற்றி பெற்றது. ஆனாலும் முழுமையான வெற்றியை அது அடையவில்லை. திருவள்ளுவருக்குப் பிறகும் திருவள்ளுவர் நெறி இன்றுவரை முழுமையாக வெற்றி பெறவில்லை.

மார்க்ஸ் - லெனின்

சோவியத்து நாட்டில் லெனின், மாமுனிவர் மார்க்ஸ் தந்த மூலதனத் தத்துவக் கொள்கைகளுக்குச் செயல்முறைக் கோட்பாடுகளை வகுத்தான்; புரட்சிக்காகச் சிந்தித்தான்; சமுதாய மாற்றத்தைக் குறித்துப் பலரைச் சிந்திக்க வைத்தான். லெனின் அணியில் “கூட்டத்தில் கோவிந்தா” போட்டவர்கள் இல்லை. தன் அணியைச் சார்ந்தவர்களுக்குப் புரட்சித் தத்துவங்களைக் கற்றுக் கொடுத்தே அணிவகுத்து நடத்தினான். ஆதலால் புரட்சி எளிதாயிற்று; புதுயுகம் பிறந்தது.

பிரெஞ்சுப் புரட்சி - வால்டேர், ரூசோ

பிரெஞ்சு நாட்டின் புரட்சிக்குக் காரணமாக இருந்த வால்டேரும் ரூசோவும் சிறந்த சிந்தனையாளர்கள். அவர்களுடைய சிந்தனை புரட்சி நெருப்பைப் பற்ற வைத்தது. ஆனால் அந்த நெருப்பு தொடர்ந்து எரிவதற்குக் கோட்பாடுகள் இல்லாமல் போயின. மக்கள் புரட்சியில் ஈடுபட்டார்கள்; உணர்ச்சி வசப்பட்டே ஈடுபட்டார்கள். புரட்சி தோன்றியது. அது அன்றிருந்த ஆட்சியை மாற்றியது. ஆனால் புரட்சிக்குப் பின் தோன்றிய ஆட்சியின் முறை மாறவில்லை. அதாவது சர்வாதிகாரிகள் மாறினார்கள் சர்வாதிகாரம் மாறவில்லை என்பதுதான் வரலாறு உணர்த்தும் உண்மை. மார்க்ஸின் சிந்தனைக்குப் புரட்சிகரமான செயலுருவம் கொடுக்க லெனின் இருந்தான். அதனால் நிலையான மாற்றம் கிடைத்தது. வால்டேர், ரூசோ சிந்தனைகள் புரட்சி உருவம் பெற்றன. ஆனால் செயலுருவம் கொடுக்கப்பெறவில்லை. அதனால் புரட்சி வெடித்தது; ஆனால் புதுமைச் சமுதாயம் பிறக்கவில்லை.

புரட்சி விளக்கை அணைத்தனர்

கன்பூசியஸுக்குக் கிடைத்த வெற்றி திருவள்ளுவருக்குச் சமுதாயத்தில் கிடைக்கவில்லை; அரசியலில் கிடைக்கவில்லை. ஆனால், இலக்கிய உலகத்தில் திருவள்ளுவர் மிகவுயர்ந்த புகழைப் பெற்றார். சாக்ரட்டீஸுக்குக் கிடைத்த தோல்வி திருவள்ளுவருக்குக் கிடைக்கவில்லை. வால்டேர் ரூசோ போன்றவர்களின் சிந்தனைக் கொத்த புரட்சத் தன்மையுள்ள சிந்தனைகளைத் திருவள்ளுவர் தந்திருந்தாலும் இங்கும் புரட்சி வெடிக்கவில்லை, காரணம் திருவள்ளுவரின் புரட்சிச் சிந்தனையின் குறையன்று. பிரஞ்சு தேசத்திலிருந்தவர்கள் போன்ற கொடுங்கோலர்கள் தமிழ் நாட்டில் இருந்ததில்லை. குறைகளுடைய அரசர்கள் இருந்தனர். ஆனாலும் கொடுங்கோலர்கள் இருந்ததில்லை. மார்க்ஸின் மூலதனம், 'திருக்குறளுக்கு நெடுங் காலத்திற்குப் பின் தோன்றியது. மார்க்ஸ் ஒரு சிந்தனையாளன். கார்ல்மார்க்ஸின் சிந்தனைகளில் திருக்குறளின் கருத்து மூலங்கள் பதிந்துள்ளான. மார்க்ஸின் மூலதனம் எப்படிப் புதுமையும் போதுமையும் நிறைந்த சமுதாயத்தைப் படைக்க உதவியதோ அதுபோல் திருக்குறளும் பயன்பட்டிருக்கவேண்டும் அங்கனம் இயலாமற் போனதற்குப் பல காரணங்கள் உண்டு. அதில் முதற்காரணம் முன்னர்க் குறிப்பிட்டது போல் தமிழக மன்னர்கள் ஜார் மன்னர் அளவுக்குக் கொடுங்கோலர்களாக

இல்லாமல் இருந்தமையே. எல்லாவற்றையும் பெறும் முழுமையான சமுதாயத்தை உருவாக்கத் தவறினாலும் அவர்கள் கொடுங்கோலர்களாக இருந்ததில்லை. அது மட்டுமன்று நீதிமான்களாகவும் இருந்திருக்கிறார்கள். அதனால்தான் அவர்களை எதிர்த்துப்புரட்சி தோன்றக்கூடிய சூழல் இல்லாமற் போய்விட்டது. நலஞ்செய்யாத அரசுகளை நோக்கிப் புரட்சிகள் தோன்றாது. நலஞ்செயாதோடின்றித் தீங்கிழைக்கும் கொடுங்கோல் அரசுகளை நோக்கியே உலகில் புரட்சிகள் வெடித்துள்ளன. ஆதலால் திருக்குறள், புரட்சியைத் தோற்றுவிக்க இயலாமற் போயிற்று. மேலும், கார்ல்மார்க்ஸுக்குக் கிடைத்த மாணாக்கன் லெனின் "மூலதனம்" என்ற தத்துவ நூலில் அடங்கிய கொள்கைகளுக்குக் கோட்பாடுகளைக் கண்டான்; செயலுருவம் தர முயன்றான்.காலமும் துணையாயிருந்தது; இடமும் அமைந்தது;புரட்சியும் தோன்றிற்று. முன்னர்க் குறிப்பிட்டதைப்போலத் திருவள்ளுவரின் சிந்தனைக்குக் காலமும் இடமும் துணையாக இல்லை: அது மட்டுமன்றித் திருவுள்ளுவர்க்குக் கிடைத்த மாணாக்கர்கள் அரசியல் சிந்தனையாளர்கள் அல்லர்; சமுதாயச் சிந்தனையாளர்களுமல்லர்; அவர்கள் இலக்கியச் சிந்தனையாளர்கள் சமயச் சிந்தனையாளர்கள் என்றே அமைந்துவிட்டார்கள். ஆதலால், அவர்கள் பதவுரையும் பொழிப்புரையும் எழுதினார்கள்; இலக்கணக் குறிப்புக்கள் எழுதினார்கள்; தெளிவாகச் சொன்னால் இலக்கியச் சிந்தனை என்ற பெயரால் திருவள்ளுவர் ஏற்றிவைத்த புரட்சி விளக்கை அணைத்தே விட்டார்கள். இன்னும் திருக்குறள் தந்த திருவள்ளுவர் வழிபாட்டுக்குத்தான், பயன்படுகின்றார். கவியரங்கம், பட்டிமன்றங்களுக்குத்தான் பயன்படுகிறார். இன்றுவரை திருவள்ளுவர் கண்ட அரசியல் சமுதாயக் கொள்கைகளுக்குச் செயலுருவம் தரத்தத்த கோட்பாடுகளை நினைந்து எழுத யாரும் முன்வாவில்லை. அது தமிழகத்தின் நல்லூழின்மையேயாம். இனிமேலாது வாழ்வியல் நூலாக விளங்கும் திருக்குறளுக்குச் செயலுருவம் தரமுயற்சிசெய்ய வேண்டும். அது காலந்தாழ்த்தாது உனடியாகக் கெய்ய வேண்டிய முதற்பணி. இந்த முயற்சி தொடங்கப்பெற்று முழுமையான வெற்றி பெற்றால் நமது சமயம் விளங்கும்; நமது சமுதாயம் உலகின் மற்றச் சமுதாயங்களோடு ஒத்து நிற்கும்-இல்லை, மற்றச் சமுதாயங்களை வென்று விளங்கும்.

பிறப்பும் - இறப்பும்

இனி, திருவுள்ளுவர் எப்படி முறையாக மனிதனை வளர்க்கிறார் என்பதைக் காணவேண்டும். நமது சமயத்தில் உயிர் உண்மை நிலையானது. உயிர் உடல்தாங்கி புலர்வரு தலையே பிறப்பு என்று குறிப்பிடுகின்றோம். மீண்டும் அந்த உலாவில் எய்த்துக் களைத்துழி உடலினைக் களைந்து புத்துடலைப் பெறுவதை இறப்பு-பிறப்பு என்று குறிப்பிடுகிறது நமது சமயம். உயிர்க்குப் பிறப்பு இறப்பு இல்லை; அது நிலையானது என்பதனைத் திருவள்ளுவர் 'மன்னுயிர்' என்பதன் மூலம் விளக்குகிறார். களைத்த உடலை விட்டுப் புது உடலைப் பெறுவதுதான் இறப்பு-பிறப்பு! புறநானூறு,

"சாதலும் புதுவன்றோ"[17] அதனையே திருவள்ளுவர்,
என்று கூறிவிளக்கும்

உறங்குவது போலுஞ் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு[18]

என்று கூறி விளக்குகிறார். அன்றாட உடற்களைப்பு நீங்க உறங்குதல் வழி. ஆனாலும் அவ்வப்பொழுது உறங்கும் உறக்கத்தில் முழுமையாகக் களைப்பு நீங்கிவிடுவதில்லை. காலத்திற்குக் காலம் களைப்பு முதிர்ந்து உடலுக்கு முதுமையைத் தந்து, களைப்பு மிக்குழி அறவே உடலை உயிர் உதிர்த்து விடுதலே இறப்பு: அது புதிய உடலைப் பெறுதல் பிறப்பு. இதுவே நமது சமயக் கொள்கை. இங்ஙனம் சாதலும் பிறத்தலும் எல்லையின்றிச் சுற்றி வருமா?

வராது. உயிர் நிறைநலம் பெற்றுழி அதற்குப் பிறப்பில்லை; இன்ப அன்பில் அமைதியாகத் தங்குகிறது. அதுவே இறைநிலை; உயிரின் இலட்சியம்.

அறியாமை

மனிதன், இயல்பில் குறையுடைய வனாயிருக்கின்றான். மனிதனுடைய குறைகளில் தலையாயது அறியாமை. அறியாமைதான் எல்லாக் குற்றங்களுக்கும் முதலாக இருப்பது. அறியாமை, மயக்கும்; பொருளல்லவற்றைப் பொருளென்று போற்றச் செய்யும்; துன்பத்தை இன்பமாகக் கருதச் செய்யும்; பெரியோரைப் பகைவராகக் கொள்ளச் செய்யும்; சிற்றினத்தாரை நட்பாகக் கொள்ளத்துரண்டும். அம்மம்ம! அறியாமை செய்யும் தீமையைப் பகைவனாற் கூடச் செய்ய இயலாது ஆதலால், திருவள்ளுவர் முதலில் மனிதனை அறியாமையிலிருந்து விலகுக என்று அறிவுறுத்துகிறார்.

பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு[19]

இது வள்ளுவர் வாய்மொழி.

புல்லறிவாண்மை

அறியாமையைக் கூட ஒரோவழி மன்னிக்கலாம். ஆனால் அறியாமையை அறிவு என்று நம்பி இறுமாத்தலாகிய புல்லறிவாண்மை மிகமிகக் கொடியது. அறியாமையுடையோர் திருந்த வாய்ப்புண்டு. காரணம் தாம் அறியாமை யுடையோம் என்று அவர்கள் அறிவதால். புல்லறிவாண்மை யுடையோன் திருந்துதல் அரிது. ஏன், திருந்தவே முடியாது. அவன் ‘அறிவுடையோம்’ என்ற இறுமாப்பால் ஏவவும் செய்யான்; அவனும் தேறான். அப்பரடிகள் கூறியதைப் போல் உலைப்பானையிலுள்ள இளஞ்சூட்டு நீரில் மகிழ்ந்து ஆடும் ஆமையைப் போல, அவன் மகிழ்ந்து ஆடுகின்றான்.[20] புல்லறிவாண்மை, அறியாமை நீக்கத்திற்கே தடையாகப் போய்விடும். புல்லறிவாண்மை அறிவின் வாயிலை அடைத்துவிடும். உலகமே திரண்டு கூறினாலும் அவன் ஒத்துக்கொள்ளமாட்டான். அவனை உலகத்துப் பேய் என்பார் திருவள்ளுவர். அறியாமை அதனை உடையவனுக்கு மட்டுமே தீமை செய்யும். புல்லறிவாண்மை பேயைப் போலச் சமுதாயத்திற்கே தீங்கு செய்யும். ஆதலால் புல்லறிவாண்மை முற்றாகக் கடியப்பெறுதல் வேண்டுமென்பது திருவள்ளுவர் கருதது.

கல்வி

அறியாமை அகன்று - புல்லறிவாண்மை போய் மனிதன் விளக்கமுற உதவி செய்யும் வாயில் கல்வியே. மனிதன், மனிதனாக விளங்கத் துணைசெய்யும் முதல் வாயில் கல்வி. அதனாலன்றோ அப்பரடிகள்,

கல்லாதார் மனத்தணுகாக் கடவுள் தன்னை[21]
-என்றும் திருமூலர்.

கல்லாதார் நெஞ்சத்துக் காணவொண் ணாதே[22]
என்றும் கூறிப்போந்தனர். ஞான நூல்களைக் கற்றலே “வேள்வி” என்று அறநூல்கள் கூறுகின்றன. திருவள்ளுவர் கல்வியை ஓர் இயக்கமாகவே வற்புறுத்துகிறார். “கற்க!” என்பது அவராணை. ஆம்;. உடல்நலத்துக்குரிய உணவு

உண்பது மனித குலத்திற்கு வழக்கமாகிவிட்டது. ஆனால், உயிர் நலத்திற்குரிய நூல்களைக் கற்பது இன்னும் பலருக்கு வழக்கமாகவில்லை. உலக மானிடச் சமுதாயத்தில் கற்றவர் விழுக்காடு சற்றேறக்குறைய ஐம்பதேயாம். இந்த ஐம்பது விழுக்காடும்கூட, கற்கும் முறையைக் கற்றவர்களேயாம். கல்வியைக் கற்றவர்கள்-கற்றுக் கொண்டிருப்பவர்களின் எண்ணிக்கை இரண்டு விழுக்காடு இருந்தாலே அரிது. மனிதன் ஓயாது கற்கவேண்டும்; ஒவ்வொருநாளும் கற்க வேண்டுமென்பதை,

என்னொருவன் சாந்துணையும் கல்லாதவாறு[23]
என்று வினவுகின்றார் திருவள்ளுவர்.

கசடறக் கற்க

கற்கும் ஆர்வம் தலைப்பட்டு முயற்சி தோன்றியவுடன், கற்பதற்குரிய நூல்களைத் தேர்ந்தெடுப்பது ஒரு நுட்பமான கலை, ஒரு மனிதனின் முன்னேற்றம் அவன் கற்பதற்குத் தேர்ந்தெடுக்கும் புத்தகத்திலேயே அடங்கியிருக்கிறது. இன்று வாழும் மானிடர் பலருக்கு இந்தக் கலை கைவந்ததில்லை. தாம் கற்பதற்குரிய நூலைத் தேர்ந்தெடுப்பதற்கு ஒருவர் தம்முடைய வாழ்க்கையில் அமைந்துள்ள மனக் குற்றங்களை அறிந்து கொள்ள வேண்டும். உடல் நோய்க்கு மூலிகைகள் மருந்து; மனக்குற்றத்திற்குக் கருத்துக்களே மருந்து. மனிதன் தன் மனக்குற்றங்களை அறிந்துகொண்டு அக்குற்றங்களை நீக்குதற்குரிய நூல்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். மனக்குற்றம் நீங்குகிறவரை கற்கவேண்டும். அக் குற்றங்கள் நீங்கிய நிறை நிலையில் ஒரோவழியன்றி என்றும் நின்று ஒழுக வேண்டும். இது வள்ளுவர் காட்டும் வழி.

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக[24]

என்பது எண்ணத்தக்கது.

செவிச் செல்வம்

கற்பதற்குரிய நூல்கள் பல்கிப் பெருகி வளர்ந்து கிடக்கின்றன. அவை முழுவதையும் தேர்ந்தெடுத்துக் கற்றுத் தெளிவதற்கு ஒரு மனிதனுக்குரிய வாழ்நாள் போதாது. ஆதலால், நல்ல நூல்களைக் கற்றலோடு கற்றோர் வாயிலாகக் கேட்பது, மேலும் துணை செய்யும் என்பது திருவள்ளுவர் கருத்து. அதுமட்டுமன்று, தம்மில் மூத்த சான்றோர், நல்ல நூல்களைக் கற்று, கற்ற கல்வியை வாழ்க்கையில் சோதனைப் படுத்தி ஒழுக்கமாக்கிக் கூறுவர். அங்ஙனம் கூறும் சான்றோரின் சொற்களைக் கேட்பதன் மூலம் எளிதில் வாழ்க்கையில் முன்னேறலாம். கற்கும் இடர்ப்பாடுகளைத் தவிர்க்கலாம்.

இழுக்க லுடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல்[25]

என்பது வள்ளுவர் வாய்மொழி. ஆதலால் ஒரு மனிதன் முழுமையுறக் கற்கும் முயற்சி மட்டும் போதாது; நல்லவை கேட்கும் முயற்சியும் தேவை. நல்லவை கேட்க முனையாத செவிகளைத் திருவள்ளுவர், ‘தோட்கப் படாத செவி’[26] என்பார். “செவிகாள் கேண்மின்களோ”[27] என்று அப்பரடிகள் செவிகளை இரந்து வேண்டுவார். திருஞானசம்பந்தர் “கற்றல் கேட்டலுடையார் பெரியார்”[28] என்பார்.

எண்ணம்

கற்றலும் கேட்டலும் மனிதனின் வளர்ச்சிக்குத் துணை செய்யும் சிறப்புடைய பழக்கங்கள். ஆயினும் கற்ற - கேட்ட செய்திகளை எண்ணத்தில் தேக்கி உணர்வுகளாக மாற்ற வேண்டும். "எண்ணம் போல் வாழ்வு" என்பது பழமொழி. எண்ணம் ஆழமானதாக இருக்கவேண்டும். ஒப்புக்காக எண்ணுவது பயன்தராது. செயல்களின் வெற்றிக்கு எண்ணமே அடிப்படை எண்ணாமல் செய்யும் செயல் வெற்றியையும் தராது; பயனையும் தராது.

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்[29]

என்பது திருக்குறள்.

அறிவு

கற்றாலும், கேட்டாலும், எண்ணினாலும் கூட ஒரு மனிதன் முழுமையான அறிவைப் பெற்று விடுவதில்லை. ஏன்? மேற்கூறிய அகநிலை முயற்சிகளால் அவன் அறிவின் தாழ்வாரத்திற்கே வந்து சேர்கிறான்; அவன் அறிவுடையவனாகி விடுவதில்லை. கற்ற கருத்து, செவி வழிக் கொண்ட சிந்தனை, எண்ணிய எண்ணம் இவையனைத்தும் அறிவாக உருப்பெற வாழ்க்கையிற் செயற்பாடு தேவை. உணவு செரிக்கப்பெற்றுச் செங்குருதியாக மாறி, வலுமையாகித் துணை செய்வதைப் போலக் கல்வி வாழ்க்கைப் பட்டறையில் செரிக்கப்பெற்று அறிவாகமாறி உணர்வாக உருப்பெற்று ஒழுக்கமாக வளர்ந்து துணை செய்ய வேண்டும். நீச்சல் பற்றிப் படிப்பது நீந்துகிற அறிவாகாது. மருத்துவ நூல்களைக் கற்பதால் பிணிகள் நீங்கா. கடவுளைப் பற்றிய நூல்களைக் கற்பது கடவுட்டன்மையைத் தந்து விடாது. அன்பினைப் பற்றிய படித்தல், ஒப்பித்தல் அன்பினைத் தந்து விடா. அவையனைத்தும் வாழ்க்கையில் சோதனைப்படுத்தப்பட வேண்டும்; நடைமுறைப்படுத்தப்பட வேண்டும். அப்போதே அறிவு தோன்றும். உலகில் தோன்றிய உயர்ந்த சிந்தனை நூல்கள், அறநெறி நூல்கள் இலட்சக் கணக்கில் விற்பனையாகின்றன. அவற்றைப் படிப்பவர்களும் ஆயிரம் ஆயிரம் பேர். அவற்றிற்கு உரை கூறுவோர்-விளக்கம் கூறுவோர் பல நூறு பேர். ஆயினும் உலகத்தில் முழுமையான அறிவுடையோரைக் காண்டது அரிதாகிவிட்டது. நூல்களைக் கற்பவர்கள் அறிவுடையராக மாட்டார்கள். இன்னும் பச்சையாகச் சொன்னால் கற்காதவர்களைவிட - நூல்களைப் படிக்காதவர்களைவிடக் கற்றவர்களில் பலர் முட்டாள்களாக இருப்பார்கள். "பலகற்றும் கல்லார் அறிவிலாதார்?[30] என்பது வள்ளுவர் வாக்கு. 'கற்ற நிர்மூடர்' என்பார் தாயுமானார். நூல்கள் பலவற்றைக் கற்றாலும் அறிவு, அனுபவத்தின் வழியிலேயாம்.

நுண்ணிய நூற்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும்[31]

என்று கூறி வள்ளுவர் விளக்குகின்றார். நூல்கள் பலவற்றைக் கற்றாலும் அவர்தம் அனுபவத்திற்கு வந்து உண்மையில் அவருக்கு உரிமையுடையதாக மாறிய அறிவே வாழ்க்கையில் மிகுந்து நிற்கும்.

அறிவுடைமைக்கும் அறிவின்மைக்கும் என்ன அடையாளம்? அறிவுடைமைக்கும் அறியாமைக்குமுள்ள வேறுபாடு மிகப்பெரியது. ஆனால் உலகம் அதனை முற்றாக உணரவில்லை. சில செய்திகளைத் தெரிந்து கொள்வது அறிவுடைமையாகாது; பேசுதலும் எழுதுதலும் கூட அறிவுடைமை யாகாது. இவையெல்லாம் அறிவின் வாயில்கள். உண்மையான அறிவுடைமை துன்பத்தை மாற்றுங்கருவி. நேற்று அழுத மனிதன் இன்று அழாமல் வாழக் கற்றுக் கொள்ள வேண்டும். நேற்றைய தோல்வி இன்று வெற்றியாக வேண்டும். நேற்றைய துன்பத்தை இன்று இன்பமாக மாற்றிக்கொள்ள வேண்டும். அங்ஙனம் செய்யப் பயன்படும் கருவியே 'அறிவு'.

அறிவு அற்றம் காக்கும் கருவி[32]
அறிவுடையார் ஆவது அறிவார்[33]
என்பன திருவள்ளுவர் வாக்கு.

மனிதன், தன் அன்றாட வாழ்க்கையின் அனுபவங்களைப் படிப்பினையாக்கிக் கொள்ளவேண்டும். அவ்வழி அறிவினைப் பெறவேண்டும். மனிதனின் வாழ்நாள் ஓடிக் கொண்டேயிருப்பது. அதில் சென்ற காலம் நிகழ் காலத்திற்கு வித்திடுகிறது. நிகழ்காலம் நாளைய எதிர்காலத்திற்குத் தளம் அமைக்கிறது. இதுதான் உண்மையான வாழ்வியலுணர்வு. ஆனாலும் நேற்றைய வாழ்க்கையை இன்று நினைந்து மகிழ்தல் அல்லது கவலைப்படுதல் ஓரளவு மருந்தென வரவேற்கப்படலாம். அங்ஙனம் மகிழ்தலும் அழுதலுமே இன்றைய வாழ்க்கையாக மாறிவிடக் கூடாது. நாளைய வாழ்க்கையை எண்ணி எதிர்பார்த்து இன்றையச் செயல்களை வகுக்க வேண்டும். ஆனால், இப்படிச் செய்ய சில மத போதகர்கள் இடம் தருவதில்லை. 'நாளை பற்றிக் கவலைப்படாதே! அது கடவுள் கையிலிருக்கிறது' என்று சொல்லுகிறார்கள். ஆனால் நம்முடைய சமயம், அங்கனம் கூறுவதில்லை. திருவள்ளுவர்,

எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்[34]

என்று கூறி விளக்குகிறார்.

சேக்கிழார்,

சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும் இனியெதிர்
காலத்தின் சிறப்பும்[35]

என்று அருளியுள்ளார். ஆதலால், அறிவுடைய மனிதன் நாளைய வாழ்க்கைக்கு ஏற்றவாறு அறிந்து ஒழுகுதல் வேண்டும்.

அறிதோறறியாமை

அறிவு வளர்ந்து கொண்டேயிருப்பது. அதற்கோர் எல்லைக் கோடில்லை. அறிவு நிறைவாக வளர்ந்துழி பேரறிவாக மலரும். அதனை மாணிக்கவாசகர் "நின்னை அறியும் அறிவு" என்று பாராட்டுவார். அந்த உயர்ந்த அனுபவத்திற்குச் செல்லும் வரை அறிவு வளர்தற்குரியது. அதுவரையில் மனிதனிடத்தில் அறிவும் அறியாமையும் போட்டிபோடும். அறியாமை என்பது ஒன்றுமே அறியாததன்று. அறிவினிடத்தில் இருப்பதே அறியாமை. பலவற்றை அறிந்த மனிதன் இன்னும் அறியவேண்டியவை உள்ளனவே என்று உணர்வதே அறியாமை. அங்ஙனம் உணர்ந்தாலே அன்றாட வாழ்விற்குரிய அறிவைப் பெற முடியும்.

எவ்வ துறைவது உலகம் உலகத்தோ
டவ்வது உறைவது அறிவு[36]

என்பார், ஆதலின், “அறிதோறு அறியாமை”[37] உணர்ந்து, அறிவைப் பெறுதல் உயிர்ப்புள்ள மனிதனின் வாழ்க்கை முறை.

காலத்தின் அருமை

மனிதன், அவன் வாழ்க்கைக்குத் தேவையான இன்றியமையாத அறிவுடைமையைப் பெற்று விட்டான். அவன் அறிவினைப் பெறவும் இவ்வையகத்தில் வாழவும் கால எல்லை உண்டு. இக்கால எல்லையை யாரும் வெற்றிகண்டதில்லை. கடவுள் நம்பிக்கையில்லாதவர்களும் கூட இந்தக் கால எல்லையை “The Determination of Law” என்று ஒத்துக் கொள்ளுகிறார்கள். ‘சாநாளும் வாழ்நாளும் யாரறிவார்’[38] என்பார் திருஞானசம்பந்தர். “நெருநல் உளன் ஒருவன் இன்றில்லை யென்னும் பெருமை யுடைத்திவ் வுலகு”[39] என்பார் திருவள்ளுவர். ஆதலால் ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய வரையறுக்கப்பட்ட வாழ்நாள் எல்லைக்குள்ளாகவே முழுமையுறல் வேண்டும்; நிறைநலம் பெறுதல் வேண்டும். ஆதலால் அவன் காலத்தின் அருமை அறிந்து போற்றுதல் வேண்டும். இயற்கையளித்த கொடைகளில் தலையாயது காலம். மனிதன் விரும்பினாலும் விரும்பாது போனாலும் காலத்தின் முத்திரை அவனிடம் பதிந்தே தீருகிறது. மனிதனின் வாழ்நாள், வினாடி வினாடியாகக் கரைந்து ஒடுகிறது. வினாடிகளைக் காப்பாற்றிப் பயன் கொண்டால் தான், வாழ்நாளை முழுமையாகப் பயன்படுத்த முடியும். நமது சமயம் இறைவனைக் காலம் கடந்தவன் என்று கூறும். அதற்குப் பொருள், அவன் காலங்களைக் கடத்துகிறவன் என்பதன்று. “ஞாலமே விசும்பே இவை வந்துபோம் காலமே” என்று திருவாசகம் பேசும். அவனே காலமாக நிற்கின்றான். சேரமான் பெருமாள் நாயனார் பூசனையில், குறித்த காலத்தில் சிலம்பொலி காட்டியதும், காஞ்சியில் பல்லவ மன்னன் கட்டிய பெருங்கோயிலில் எழுந்தருள்வதற்குரிய நாளை மாற்றியதும், இறைவன் காலத்தைப் போற்றுகிறான்; குறித்த காலத்தில் நிகழ்வுகளைச் செய்கிறான் என்பதை உணர்த்துகின்றன. அதனால்தானே இறைவனின் நிகழ்வுகளாக இருக்கின்ற இயற்கை, ஓர் ஒழுங்கு, முறை பிறழாத நிகழ்ச்சி “Order and Constancy உளவாக அமைந்துள்ளது. அவன் காலங்கடந்தவன் என்பதன் பொருள், காலத்தினாலாய முதுமைத் தழும்புகள் - மூப்பின் அடையாளங்கள் அவனுக்கு இல்லை என்பதேயாம். ஆதலால், மனிதன் காலத்தைப் போற்றிப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். அதனாலேயே “நாளைப் பார்” என்று பழமொழி வழி ஆணை பிறந்தது; அதற்குப் பொருள் “நாளின் அருமைப் பாட்டினை அறிந்து பாதுகாத்துப் பயன் கொள்க” என்பதேயாம். அதற்கு மாறாகப் பலர் பஞ்சாங்கத்தைப் புரட்டுகின்றனர். நல்லநாள் பார்க்கின்றனர். எது நல்லநாள்? வாழ்க்கையின் நாள்கள் அனைத்தும் முத்து முத்தான நல்ல நாள்கள். முழுமையாகப் பயன்படுத்த வேண்டிய நாள்கள். இதனை மனிதன் மறந்துவிட்டுச் சில நாள்களைக் கழிக்கின்றான். இது வாழும் முறையன்று.

ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழம் வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே[40]

என்றார். நாளென் செயும் வினைதான் என் செய்யும்’[41] என்பது கந்தரலங்காரம். ஆதலால் மனிதனின் வெற்றிக்கு முதற்படி காலத்தின் அருமையறிந்து பயன்படுத்துதலே!

உயிரறுக்கும் வாள்!

திருவள்ளுவர் காலமறிதல் என்றே ஓர் அதிகாரம் வகுத்து ஓதுகிறார். நகைச்சுவையாகக் காலம் கழிந்தோடும் செய்தியை நிலையாமை அதிகாரத்தில் குறிப்பிடுகின்றார்,

நாளென ஒன்றுபோற் காட்டி உயிரீரும் வாளது உணர்வார்ப் பெறின்[42]

என்றார். வாள் மரத்தினை ஒட்டு மொத்தமாக ஒரு நொடியில் அறுத்துவிடுவதில்லை. ஓர் இழுவைக்கு ஒரு நூல் அளவுதான் அறுபடும். அதுபோல 'இன்று' என்றும் 'நாளை' என்றும் 'நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம்'என்றும் நாள்களைக் கடத்துகின்றவர்கள் வாழ்வு, பயனற்றுப் பாழ்படும் என்பது வள்ளுவர் செய்யும் எச்சரிக்கையாகும். இங்ஙனம் எதிர்மறையாக எச்சரித்த திருவள்ளுவர் 'பருவத்தோடு ஒட்ட ஒழுகல்'[43] என்றும் 'கருவியால் காலம் அறிந்து செயல்[44] என்றும் கூறி வழி நடத்துகிறார். இறுதியாக, 'ஞாலம் கருதினும் கைகூடும் காலம் கருதி இடத்தாற் செயின்',[45] என்று வழி நடத்துகின்றார்.

இடமறிக

மனிதன் அறிவினைப் பெற்றாலும் காலமறிந்து கடமைகளை மேற்கொண்டாலும் தாம் மேற்கொள்ளும் முயற்சிகள் பயன்தருதற்குரிய இடமறிந்து முயற்சியினை மேற்கொள்ள வேண்டும். முயற்சியும் இடமும் வாய்ப்பாக அமையின் வலிமை இன்மையும் வலிமையாக மாறும், வெற்றிகளைத் தரும். ஆதலால் காலம் அறிதலோடு களங்கள் அறிந்து பணிகளை மேற்கொள்ள வேண்டும்.

ஏவலர்

மனிதன் மேற்கொண்டுள்ள வாழ்க்கைப் பயணம் ஒரு நெடிய பயணம். இந்நெடிய பயணத்தைத் தனியே நடத்துதல் அரிது. எண்ணிய பணிகளை இனிதே முடித்தற்குரிய துணைவர்களை-ஏவலர்களைக் கருவியாகப் பெற்றிடுதல் வேண்டும். ஏவலர்கள் எளிதில் அமைவதில்லை.

யான்கண் டனையர்என் இளையரும்[46]

என்று புறநானூறு பேசும். அதாவது, கண்கள்வழிக் கருத்தறிந்து, கருதியதை முடிக்க வல்லவர்கள் ஏவலர்கள். இன்று அத்தகு ஏவலர்கள் எங்குக் கிடைக்கின்றனர். அப்பூதியடிகளுக்கு வாய்த்த ஏவலர் மிகச்சிறந்த ஏவலர். அப்பரடிகள் எழுப்பிய ஒரு வினாவுக்குத் திரும்ப அவர் வினாக் கேட்கவேண்டிய அவசியம். இல்லாத வகையில் முழுமையான விடை சொன்ன அந்த ஏவலரின் அருமை நினைந்து நினைந்து மகிழத்தக்கது. அத்தகு ஏவலர்கள் இன்று கிடைப்பதில்லை. ஏவலர்களைத் தேர்ந்தெடுத்தல் வாழ்க்கையில் மிகச்சிறந்த சாதனைகளுள் ஒன்று. அறத்தின் காரணமாகவோ பொருளின் காரணமாகவோ இன்பத்தின் காரணமாகவோ உயிர்க்கு வரும் துன்பத்தின் காரணமாகவோ தமையுடைய தலைவனுக்கு மாறாக- எதிராகச் செயற்பட விழையாதோரையே ஏவலராகத் தேர்ந்து கொள்ளவேண்டும். ஏவலர்க்கு அறம் தம் தலைவன் வழி நிற்றலேயாம். தம் தலைவன்மாட்டு அறமல்லாதன இருக்குமாயின் அவனிடத்திலேயே போராடி அறம் காணவேண்டும். நல்லுழின்மையால் அவனிடமே திருத்தம் காண இயலாவிடின் அவனோடு மடிதலே ஏவலர் மேற்கொள்ள வேண்டிய அறம். ஏவலரைத் தேர்ந்தெடுப்பது ஒரு நுண்ணிய கலை, இக்கலையில் தேர்ச்சி பெறாதவரிடம் ஏவலர் கூட்டம் கூட்டமாக இருப்பர். ஆனால், பணிகள்

நிகழா. ஏவல் கொள்வோர் எப்போதும் இது நடைபெறவில்லையே; அது நடைபெறவில்லையே; என்று அங்கலாய்த்துக் கொள்வார். அடிக்கடி ஏவலரோடு முரண்படுவார். ஏவலர் முணுமுணுப்பர்; ஏவலர்களும் மனிதர்கள் தாமே! அவரிடம் குணங்களும் உண்டு; குற்றங்களும் உண்டு. ஏவல் கொள்வோர் ஏவலரிடம் உள்ள குற்றங்களை மறக்கவேண்டும். அவரிடமுள்ள குணங்களைக் கண்டு கொள்ளவேண்டும். அவ்வழி ஏவல் கொள்ள வேண்டும். இஃதொரு செப்பமான வாழ்க்கை முறை,

குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்[47]

என்பார் திருவள்ளுவர். ஏவலரைத் தேர்ந்து தெளிந்து ஏற்றுக் கொள்ளவேண்டும். தெளிந்தபின் ஐயப்படுதல் அன்பினைக் கெடுக்கும்; உறவினை உருக்குலைக்கும். பணிகளைக் கெடுக்கும்; பகையை மூட்டும். ஆதலால் ஏவலரைத் தெளிந்தபின் ஐயம் கொள்ளுதல் கூடவே கூடாது.

தேரான் தெளிவும் தெளிந்தன்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும்[48]

என்பார் திருவள்ளுவர்.
வலிமை பெருக்குக! அறிக!

மனிதன் தனது வாழ்க்கைப் பயணத்தை இனிதே நிறைவேற்றி முடிக்க வேண்டுமானால் பிறர் வலிமையை ஆய்ந்தறிவதுடன் தன் வலிமையையும் பெருக்கி வளர்த்துக் கொள்ள வேண்டும். வலிமையில்லா வழி, வளம் குன்றும்; புகழ் பெறுதலரிது: இறை நிலையையும் எய்துதலரிது; ஆதலால் நாள்தோறும் தம் வலிமையறிந்து மேலும் மேலும் காலத்தின் தேவைக்குரிய அளவுக்கு வலிமையைப் பெருக்கி வளர்த்துக் கொள்ளவேண்டும். வலிமையில்லா வாழ்க்கை 'நடலை வாழ்க்கை'. வலிமையில்லாதவருக்கு ஏமம் இல்லை; இன்பம் இல்லை. ஆதலின் பெறவேண்டிய வலியறிக. அவ்வலிமையைப் பெற்று உயர்க என்று மனிதனை வழி நடத்துகின்றார் வலியறிதல் என்ற அதிகாரத்தின் மூலம் திருவள்ளுவர்.

உள்ளம் உடைமை உடைமை

மனிதன் அறிவைப் பெற்றான்; காலத்தினை அறிந்து ஆராயும் இயல்பினைப் பெற்றான்; வலிமையையும் பெற்றிருக்கின்றான். ஆயினும் அவனை உந்திச் செலுத்தி வளர்க்கும் ஊக்கமில்லா வழி, உரிய பயன்வராது. ஊக்கமென்பது உள்ளத்தின் எழுச்சி; பள்ளம் நோக்கிப் பாய்ந்துவரும் புனல்போலப் பணிகளையே நோக்கி விரையும் உள்ளத்து எழுச்சி, இயல்பான வாய்ப்புக்களின்மை குறையல்ல. வாய்ப்புக்கள் வந்தமைவனல்ல. மனிதன் படைத்துக் கொள்பவை. வாய்ப்புக்களைப் படைத்து வழங்கும் அறிவறிந்த ஆள்வினை வேண்டுமென்றார் திருவள்ளுவர்.

பொறியின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்(து)
ஆள்வினை யின்மை பழி[49]

உலகத்தில் எதையிழந்தாலும் திரும்பப் பெறலாம்; ஆனால் ஊக்கத்தை இழந்த மனிதன் எதையும் பெற இயலாது. கடவுளாலே கூட அவனைக் காப்பாற்றமுடியாது. "உள்ளம் உடைமை உடைமை" என்பது வள்ளுவர் வாக்கு.

அடுக்கிய உடைமைகளை உடைமையெனக் கொள்ளற்க! உடைமைகளைப் படைத்திடும் ஆற்றலுடைய உள்ளமே உடைமை. உள்ளத்தை இழந்த மனிதன் உயிரை இழந்த உடம்பு போல்வான். ஊக்கமிருப்பின் தெய்வத்தால் ஆகாதவைகளையும் கூடச் சாதிக்க முடியும். ஆதலால் வையகத்தின் வாழ்க்கையை வெற்றிகரமாக முடிக்கக் கருதும் மனிதன் ஊக்கத்தை உடைமையாகக் கொள்ள வேண்டும். அவனே ஊழை வெற்றி கொள்வான். ஊழிற்கு அடிமையாகும் கொள்கை நமது சமயத்தில் இல்லை. ஊழை மாற்றத்தானே இந்த வாழ்க்கை வழங்கப்பட்டிருக்கிறது. அதனால் ஊழைக் கண்டு அஞ்சற்க! ஊழின் வலிமை, முயற்சியின் முன் தூள் தூள் ஆகும், ஊழை, ஆள்வினையுடைமை வெற்றி பெறும். ஆதலால் நம்பிக்கையுடன், ஊக்கக் கிளர்ச்சியுடன் வாழ்க்கையை நடத்துக. இதுவே வள்ளுவர் ஆணை !

ஊழையும் உப்பக்கம் காண்பர்; உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்[50]

என்று தேற்றி வழி நடத்துகிறார்; ஊக்கம் தந்திடும் உரைகளைத் தந்துள்ளார். தொடர்ந்து செயற்படுக; துவளாதே; என்கிறார்.

மனிதன் பணிகளைத் தொடங்க வேண்டும். அங்ஙனம் பணிகளைத் தொடங்கிச் செய்வதன் மூலம் அவன் வாழும் உலகத்தை-சூழ்நிலையை இனியதாக அமைத்துக் கொள்கிறான்; அறிவை வளர்த்துக் கொள்கிறான். பணிகளின் வழி அவன் வாழ்தலே அவன் முழுமையெய்துதற்குரிய வழி. அதனாலன்றோ,

என் கடன் பணிசெய்து கிடப்பதே[51]

என்றார் அப்பரடிகள்.
இருவினையொப்பு

“பணி செய்து கிடப்பதே” என்ற அருள்வாக்கு எண்ணத்தக்கது. வாழ்வியல் ஒரு விந்தையான அமைப்பு. செயல் செய்வது, அதாவது வினைகளை இயற்றுவது தவிர்க்க முடியாத கடமை. ஆயினும், வினைவழி, இன்பமும், துன்பமும் நஞ்சு வட்டமாகச் சுழன்று வாராமல் தற்காப்பது அவசியம். அதற்கென்ன வழி? செயல்களைச் செய்ய வேண்டும். ஆனால் அதனுடைய விளைவுகளை - பலாபலன்களைத் தன் வயப்படுத்திக் கொள்ளக்கூடாது. தன்னயந்த சார்புணர்வுடன் நல்லதே செய்தாலும் வினை நீக்கத்திற்கு வழியில்லை. இன்பம் வந்துழி மகிழ்தலும் துன்பம் கண்டுழித் துயருறுதலும் நடுநிலை வழுவிய வாழ்வியல், அதனால் திருவள்ளுவர் “நன்றாங்காலும் மகிழற்க; அல்லாக் காலும் அமைந்து அழாதிருக்க; வேண்டுதல் வேண்டாமை என்ற கறங்கு வட்டாரத்தினின்று விலகி வாழ்க்கை விளையாட்டை நிகழ்த்துக. அவ்வழி, வினை நீங்கும்; துன்பம் நீங்கும்” என்றறிவுறுத்தியுள்ளார்,

நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவது எவன்?[52]

என்பார்.

எடுத்த பணிகளில் இடையறவு படாமை

பணிகளைத் தொடர்ந்து செய்தல் வேண்டும். தொடங்கிய பணிகளை இடையில் நிறுத்துதல் நன்றன்று. அப்பழக்கம், பணிகளின் பயனைக் குறைக்கும்; அது மட்டுமன்று, துன்பத்தையும் தரும் பற்றி எரியும் வீட்டை ஒரு புறம் அனைத்துவிட்டு இன்னொரு புறம் அணைக்காமல் இருப்பதால் யாது பயன்? தீயினால் வீடு அழிந்துவிடும். ஒரு புறம் அணைத்ததன் முயற்சியும் பயனற்றுப் போகிறது. ஆதலால் பணிகளை இடையில் நிறுத்துதல் நம் வாழ்க்கைக்குரிய வழியன்று. பணிகள் துன்பத்தோடு தொடர்புடையனதாம். இனிய மக்கட் பேற்றுக்குக் கூட, தாய் செங்குருதி சிந்தத்தானே வேண்டியிருக்கிறது. ஆதலால், பணிகளை மேற் கொண்டு வாழ்தல் என்பது மலர்கள் பரப்பப்பட்ட பாதையன்று. ஆயினும் துன்பம் கண்டு துவளாது, சோர்வடையாது - இடுக்கண்களின் காரணமாக இடையில் நில்லாது பணிகளைத் தொடர்ந்து செய்தலே வாழ்வாங்கு வாழும்நெறி. திருஞானசம்பந்தர், “இடரினும் தளரினும் எனதுறுநோய் தொடரினும்”[53] என்பார். அப்பரடிகளின் வாழ்க்கைப் பயணத்தில் விளைந்த இடுக்கண்கள் ஒன்றா? இரண்டா? இடுக்கண்கள் நிறைந்த அவருடைய பயணத்தை நாடு உள்ளவாறு அறியவில்லை. ஏன், இடுக்கண்களுக்கும் துன்பங்களுக்கும் அஞ்சுகின்ற மதத் தலைவர்கள் அவரைக் கடவுளாக்கி விட்டனர்; அது மட்டுமா? கற்சிலையாகவும் செய்து விட்டனர். அப்பரடிகளின் புரட்சியினால் சமுதாயம் மாற்ற மடையவில்லை. ஆனால் சமயப் புரோகிதர்களுக்கு அப்பரடிகள் பெயரால் - குருபூசையின் பெயரால் விலாப்புடைக்க உண்ணச் சோறு கிடைக்கிறது. உண்ட களைப்பு நீங்கப் பேச, பேச்சுமேடை கிடைக்கிறது; கதாகாலட்சேபம் நடக்கிறது. வயிறு குலுங்கச் சிரிப்பதால் உடலசையாது போனாலும் உணவு செரித்து விடுகிறது. இன்றையச் சமய உலகம் அப்பரடிகளின் கொள்கைகளைக் கல்லறையில் புதைத்து விட்டு அவருக்குச் சிலை எடுத்து, விழா எடுத்துச் செகத்தினை ஏமாற்றிக் கொண்டிருக்கிறது. கொடிகட்டி ஆண்ட பல்லவப் பேரரசை எதிர்த்து,

நாமர்க்கும் குடியல்லோம்[54]

என்று விடுதலை முழக்கம் செய்தவர் அப்பரடிகள். அந்த விடுதலை முழக்கத்திற்கு அவர் கொடுத்த விலை அம்மம்ம! நீற்றறையைக் கடந்து வென்றார். பண்ணொடு பாட்டுக் கலந்த வாழ்க்கையை, இயற்கையோடிசைந்த வாழ்க்கையை - காதலின்பம் நிறைந்த வாழ்க்கையைத் துன்பமாக்க முனைந்த சமணர்களை அவர் எதிர்த்துப் பெற்ற வெற்றி அம்மம்ம...! இன்றைய திருக்கோயில்கள் அந்த வெற்றியை வழங்காமலிருக்கலாம்; மடாலயங்கள் மறந்திடலாம்; ஆனால் மெள்ளத் தென்றலிலே மிதந்துவரும் இசை, அப்பரடிகளின் புகழை இசைக்கிறது. வசந்தத்திலே மலர்ந்து மணம் வீசும் மலர்களிலே மகிழ்ச்சி வெள்ளம், அந்த இயற்கை வெள்ளம் “சொல்லுக்கு வேந்தனாக” நிற்கும் அவர் புகழை வாழ்த்துகிறது. உலகெலாம் உடல் வேறாக - உயிர் ஒன்றிக் காதலித்து உயரின்ப நிலையில் வாழ்ந்திடும் காதலர்களின் இன்ப வெள்ளம் திருநாவுக்கரசரின் புகழைப் பாடிப் பரவுகிறது. இந்தச் சாதனைகளுக்கு அப்பரடிகள் பெற்ற இடுக்கண்கள் ஒன்றல்ல, இரண்டல்ல, பலப்பல. ஆனாலும் அவர் இடுக்கண்களைக் கண்டுழி நிற்காமல் பணிகளைத் தொடர்ந்தார்; வெற்றியும் பெற்றார். வையகத்தார்க்கு இன்பம் தந்தார். அதுவே வாழும் வழியென்பது வள்ளுவர் தந்த பாடம்.

செய்க பொருளை

உயிர், நமது சமய நெறிப்படி துய்த்தலுக்குரியது. அதற்குத் துய்க்கும் வலிமை இயல்பானது. இறைநிலையிலும் கூட அது திருவருளைத் துய்க்கும் உரிமையுடையது. உலகில் வாழப் பிறந்த மனிதன், துய்த்தல் வேண்டும்; துய்ப்பதற்குரிய பொருள்களைப் பெறவேண்டும். துய்ப்பில்லாதவர் வாழ்க்கை, தூரில்லாத மரம் போலக் கெடும். அதனா லன்றோ “துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ”[55] என்றார் அப்பரடிகள். இம்மையே தரும் சோறும் கூறையும்"[56] என்பது சுந்தரர் வாக்கு “பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை”[57] என்பது வள்ளுவர் வாய்மொழி. இங்குப் பொருள் என்பது அணிந்து அல்லது எண்ணிச் சேமித்து மகிழும் - முழுமையாகத் துய்த்தற்குப்

பயன் தராத - தங்கம், வைரம், முத்து முதலியனவல்ல; இக்கால நாணயங்களுமல்ல. பொருள் என்பது உயிர்கள் முழுமையாகத் துய்த்து மகிழ்தற்குரிய பொருள்களேயாம்; உண்டு, தின்று மகிழ்தற்குரிய பொருள்கள் இல்லையானால் உயிர் உடலோடு கூடி வாழ்தலரிது. அதனாற்றானே "உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்"[58] என்ற வழக்கு தோன்றிற்று. ஆதலால் உடற் பிணியும், அவ்வழி உயிர்க்குச் சோர்வும் வராது வாழ்ந்திட விரும்பும் மனிதன், பொருள்களைச் செய்து குவிக்க வேண்டும். உண்டு, தின்று துய்த்திடும் பொருள்கள் உடலுயிர்க் கூட்டு வாழ்க்கைக்கு இன்றியமையாதன. ஆனால், உணவுகளால் மட்டும் மனிதன் உயிர் வாழ்ந்து விடுவதில்லை. ஒரோ வழி வாழ்வது போலத் தோன்றினாலும் உடலில் சதைகள் வாழுமே தவிர உயிரியல்புகள் வாழ்வதில்லை.

அன்பு

உயிர் துய்த்துத் தளிர்த்து மகிழ்ந்து வாழ அன்பு தேவை. அன்பின் வழியல்லது உயிரில்லை; இருந்தாலும் இல்லை என்பதே திருவள்ளுவர் கருத்து.

அன்பின் வழியது உயிர்நிலை! அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு[59]

என்பார் திருவள்ளுவர்.

அன்பு, உள்ளத்தில் ஊற்றெடுக்க வேண்டும். புலன்களில்-பொறிகளில் பொதுள வேண்டும். ஊற்றெழும் அன்பு, தடையின்றி மற்றவர்கள்பாற் பாயவேண்டும்; புயல் சுமந்த வான், மழையைப் பொழிந்தாலே அதற்கு விடுதலை; இன்பம்; வாழ்த்து கருவுற்ற தாய் ஈன்று புறந்தரலே அவளுக்கு விடுதலை, இன்பம்; தாய் என்ற பெயர்; பாராட்டு, பாதுகாப்பு: வாழ்த்துக்கள். அதுபோல் மனிதன் அன்புள்ளத்தைப் பெற்று மற்றவர்க்கும் காட்டுதல் மூலமே வாழ்வான். தன்னைப் பற்றிய கவலையினின்றும் விடுதலை பெறுவான். வாழ்வித்து வாழ்தலே மனிதனின் வெற்றிக்குரிய சுருக்கவழி. வையகம் உண்ணுதலே அவன் உயர்வதற்குரிய ஒரே வழி. வையகம் உண்ணாமல் உண்டால் அவன் சதை வளரலாம்; ஆனால் அவன் வளரமாட்டான். அவனைச் சுற்றிக் காக்கை கழுகுதான் வட்டமிடும். மனிதர்கள் வட்டமிடமாட்டார்கள். அவனுக்காக அவனழுதால் எவ்வளவு நாளைக்கு அழுவது? அவன் துன்பத்துக்கு அழுது முடிக்க அவன் கண்களுக்கு ஆற்றல் உண்டா? ஒரு போதும் இல்லை. அவனுடைய துன்பத்தைக் கண்டு அழ ஆயிரமாயிரம் கண்களை அவன் பெறவேண்டும். அவனுடைய துன்பத்தைத் துணித்து மாற்ற எண்ணில் கரங்கள் முன் வரவேண்டும். அது எப்பொழுது நிகழும்? இவன் மற்றவர் துன்பத்தை-மற்றவற்றின் துன்பத்தைத் தன் நோய் போல் எண்ணி அழும் பொழுது தான்; மாற்றத் துடிக்கும் பொழுதுதான். மனிதனே போதும், உனக்கு நீயே அழுது கொண்டது. அது வெறும் புலம்பல்; அதில் தன்னல வாடை வீசுகிறது; அன்பின் ஈரம் இல்லை; ஒரே வறட்சி மயம்! அழு; ஆனால் உனக்காக அழாதே; மற்றவர்களுக்காக அழக்கற்றுக்கொள். அதுவே அன்பின் தவம், வாடிய பயிரின் வாட்டமெலாம் கண்டு வாடி அழுதாரே, அந்த வள்ளலாரை நினைத்துக்கொள். அந்த உயர்ந்த அன்பை நீ எண்ணு; நெஞ்சத்தில் தேக்கு. அந்த அன்பே தவம். அந்த அன்பே சிவம்; அன்பும் சிவமும் இரண்டல்ல! ஒன்றேயாம். மனிதனைச் சிவமாக்குவது அன்பு என்ற ஒன்றேயாம்.

அன்பலால் பொருளும் இல்லை
ஐயன் ஐயாற னார்க்கே[60]

என்றார் அப்பரடிகள். இந்த அன்பு வையகத்தை ஆட்சி செலுத்த வேண்டும், வழி நடத்த வேண்டும் என்ற தணியாக் காதலினால் இன்று திருக்கோயில்கள் தோறும் எழுந்தருளியுள்ள இறைவன் - எல்லாமாக இருந்தருளும் இறைவன் திருவுருவங்களுக்குள் - கருவறைக்குள் அடைப்பித்துக் கொண்டான். ஏன்? உயிர்களிடத்து அன்பினை ஆரத்துய்க்க! உயிர்களுக்குத் தம் அருளை வழங்கித் துய்த்து வாழ்வித்திட! நம்பியாண்டார் நம்பியின் நிவேதனத்தைச் சுவைத்தவன் - கண்ணப்பர் மெள்ள வாயில் அதுக்கிச் சுவையுண்டாக்கிப் படைத்த புலால் உணவையும் விரும்பி வேட்டவன் - அரி வாட்டாயர் தந்த மாவடுவைக் கழனிகளின் வெடிப்பில் தங்கிச் சுவைத்த தயாபரன் இன்று ஏன் திருக்கோயிலில் உண்ணவில்லை? அன்று அவர்கள் படைத்தவைகளைவிட விலை மிகுதியுடைய பண்டங்களாய் இருந்தாலும் ஏன் உண்ணவில்லை? மறைவாகச் சுவைத்து உண்ணத் திரை இருந்தும் ஏன் சுவைக்கவில்லை? இறைவன் சுவைக்காதது ஏன்? என்று நினைந்து அழுவார் இல்லாது போயினர். அது ஒரு தவக்குறை. இறைவன் “தாயினும் நல்லான்'; தாயிற் சிறந்த தயாவுடையான். உலகத்தில் நடமாடும் குறைகளும் நிறைகளும் உடைய தாய் கூட, தான் ஈன்ற குழந்தை பசித்திருக்க உண்ணமாட்டாள். அங்ஙனம் இருக்க அண்ட மெலாம் பூத்தவளாக - பூத்தவண்ணம் காப்பவளாக விளங்கும் கடவுளாகிய தாய் “உலகத்தில் கோடானுகோடி உயிர்கள் உண்ணாமலிருக்கிறார்கள்; அவர்கள் அனைவரும் உண்ணும்வரை உண்ணமாட்டேன்” என்று தவம் கிடக்கிறாள். அவள் தனக்குவமையில்லாத் தாய். ஆனாலும் கடவுளைப் பற்றிக் கவலை படாதவர்கள், கடவுளைப் பிழைப்புப் பொருளாக்கிக் கொண்டவர்கள் வழக்கம் போல வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். ஆதலால் மனித வாழ்க்கைக்கு உயிர் நிலை அன்பேயாம். அன்பே துன்பத்திற்கு மாற்று. அன்பே இன்பத்திற்கு வித்து. அன்பே ஆக்கத்துக்கு வழி. அன்பில் இழப்பதும் ஆக்கமேயாம் இத்தகைய உயர்ந்த அன்பு நெறியில் மனிதனை வழி நடத்தி வளர்க்கிறார் வள்ளுவர். அன்பு நெறியே நமது சமயத்தின் உயரிய தவம்.

நட்பு

அன்பு பெற்றுத்தருவது நட்பு. காதலியின்றி வாழ்தல் இயலும், நட்பின்றி வாழ்தல் இயலாது. நமது கடவுளாகிய அம்மை அப்பனுக்கும் ஒரு தோழன் தேவைப்பட்டான். இருவரை மணந்து வாழ்ந்த ஆரூரருக்கும் நட்பு தேவைப்பட்டது. வள்ளுவர் காலத்து நட்பு என்ற சொல், ஆரூரர் காலத்தில் தோழன் என்ற புது உருப்பெற்றது. தன் தோள், தனக்கு உதவி செய்தலைப் போல உதவியாக இருப்பவன் தோழன். நட்பு, வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒன்று. நல்ல நட்பைப் பெற்றுவிட்டால் செயற்கரியது என்று ஒன்று இல்லை என்பதனை,

செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு[61]

என்பார் வள்ளுவர். நட்பு, நாம் செய்யும் பணிகளுக்குப் பாதுகாப்பாக இருக்கிறது. நல்லோர் நட்பில் பிரிவே இல்லை. “காதலிற் பிரிவு” பாடிய கவிஞர்கள் உண்டு; ஆனால் நட்பிற் பிரிவு பாடிய கவிஞர்கள் இல்லை. ஒரோவழி பிரிந்தது போலத் தோன்றினாலும் அது, பழக்கங்களின் இடையிடே தவிர, நட்புணர்வின் இடையீடு இல்லை. ஆரூரர்சிவபெருமான் நட்பில் இந்த உண்மை புலப்படுகிறது. நட்பு என்பது குற்றங்களைக் காணாதது; குணங்களையே நாடுவது. அது பிறைநிலாப் போல வளரும். பயிலுழிப் பயிலுழி இன்பம் தரும். இதுவே நட்பு. இன்று, நட்பு என்ற சொல், தரம் தாழ்ந்து கிடக்கிறது. ஏன், கௌரவமான இரவலர்கள் நட்பு என்ற பெயரைப் பூண்டொழுகுகிறார்கள். மனிதன் வாழ்க்கையில் முழுமையான வெற்றியைப் பெற நல்ல நட்பினைப் பெறவேண்டும். நல்ல நண்பன் குற்றங்களைக் காணாதவன்; அவனுக்குக் குற்றங்கள் தெரியும் ஆனால் குற்றங்களின் வழியே அவன் மனம் திரிபடையாது. அதே போழ்து குற்றங் களுக்கு இசைந்து முகமன் கூறி உடனின்று அழிக்கவுமாட்டான். ஏற்புழி வடுப்படா வண்ணம் குற்றங்களைத் திருத்துவான். மாணிக்கவாசகரின் “பையத் தாழுருவி” என்ற சொற்றொடர் நினைந்து நினைந்து இன்புறற்பாலது. இறை வழி பாட்டுநெறியில்

தோழமை நெறியும் ஒன்று. நமது சமயம் அச்சத்தில் பிறந்ததன்று அன்பில் பிறந்தது; அறிவில் தோன்றியது; நன்றிப் பெருக்கில் பிறந்தது. ஆதலால் கடவுளிடத்து அச்சத்தை வளர்ப்பதில்லை-கடவுளிடத்துத் தோழமையைக் கொள்ளத் துாண்டி வழிநடத்துவது. கடவுளும் விரும்பும் நல்ல நட்பைத் தேடிப்பெறுக என்று வழி நடத்துகிறார் வள்ளுவர்.

இல்லறம்

மனிதன் என்னதான் அறிவைப் பெற்றாலும், அரிய நட்பினைப் பெற்றாலும் சில காலம் கடந்தபிறகு அவன், வாழ்க்கையில் ஒரு வெறுமையை உணர்கிறான். அவன் அன்புடையவனாகிப் பலர்க்கு அன்பினை வழங்குகிறான். அதேபொழுது தன்னிடம் அன்பு காட்டுகிறவர்களை எதிர் நோக்கியே இருக்கிறான். அங்கேதான் மனிதன் இல்லறத்தை நாடுகிறான் இல்லறம் உயர்ந்ததா? தாழ்ந்ததா? என்ற விவாதம் நம்முடைய சமயத்தில் இல்லை. நம்முடைய சமயம் இல்லற நெறியை ஏற்றுப் போற்றுகிறது. ஏன் இறைவனையே சிறந்த இல்லறத் தலைவனாகக் காட்டுகிறது நம்முடைய சமயம். நம்முடைய தொன்மைக்கால வழிபாட்டுத் திருமேனி, அம்மையப்பன் திருமேனியேயாம், அம்மையப்பன் திரு மேனியைத் “தொன்மைக் கோலம்” என்று திருவாசகம் போற்றுகிறது.

தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்கவளை யும்உடைய தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பி[62]

என்பது காண்க. திருமுறை ஆசிரியர்கள் அம்மையப்பனாகவே கடவுளைக் கண்டு வாழ்த்துகிறார்கள். திருவள்ளு வரும் “ஆதிபகவன்”[63] என்கிறார். ஆதலால் இல்லறம் தவமன்று என்று கருதுவது பிழை. இல்லறத்தில் துறவின் உட்கூறுகள் இல்லை என்று கூறுவதும் பிழை சிறுத்தொண்ட நாயனார் குடும்பத்தினரின் வாழ்க்கையில், இளையான் குடிமாற நாயனார் குடும்பத்தினரின் வாழ்க்கையில் துறவின் தோற்றங்கள் இல்லையா? விளைவுகள் இல்லையா? இளையான்குடிமாற நாயனார் குடும்பத்தில் விளைந்த அளவுக்குத் துறவு உணர்ச்சி, துறவிகளால் ஆட்சி செய்யப்பெறும் சமய நிறுவனங்களில் கூட இன்று இல்லையே. ஆதலால் இல்லறம் நல்லறமே. நன்றுடையானாக விளங்கும் நமது வழிபடும் தெய்வமாகிய சிவபெருமான் பெண்ணின் நல்லாளோடு பெருந்தகையாக இருந்தே உயிர்களைக் காப்பாற்றுகின்றான். இல்லறம் ஏற்க என்று மனிதனை வழி நடத்துகிறான்.
வாழ்க்கைத் துணை நலம்

“அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை”[64] - என்பது வள்ளுவர் வாக்கு அறனெனப்பட்டதே என்ற தேற்றே காரத்தினால் இல்லறம் அறமே என்று ஐயத்துக்கு இடமின்றித் தெளிவாக்குகிறார். ஆயினும் இல்லறம் இருவர் சேர்ந்து செய்யும் அறம். அதில் ஒருமித்த அன்பில் பழி தோன்ற அனுமதிக்கக்கூடாது. ஒரோவழி அவர்தம் அன்பின் குற்றங்கள் தோன்றினாலும் அக்குற்றங்கள் அயலறியாவகையில் வாழ்தல்வேண்டும். மாறாத அன்பில் குற்றங்கள் குணமாக்கப்படுதல் வேண்டும். இதற்குத் திருநீலகண்ட நாயனார் வரலாறு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு, கண்ணகியின் வரலாறு உயிரோட்டமான ஓர் ஒப்புமை. இல்லறத்தில் மனிதன் பெறும் துணை “சம்சாரம்” அன்று. அத்துணையை “வாழ்க்கைத் துணை நலம்” என்பார் வள்ளுவர். ஆம் அவள் அவனுடைய வாழ்க்கைக்கு ஒரு துணை. அதுமட்டுமல்லள்; அவள் மூலம் அவன் பெறும் நலனே அவளாக இருக்கிறான். வாழ்க்கைத் துணை நலம் என்ற பெயர் ஆழ்ந்த பொருள் உடையது.

தமிழகத்துக் கற்புக் கொள்கை உடலைக் கடந்தது. உயிரில் காண்டது. மறந்தும் பிறர் நெஞ்சு புகாத கற்பே கற்பு. பெண்ணின் கற்பு கணவனால் காப்பாற்ற இயலாத ஒன்று. ஆதலால் வாழ்க்கைத் துணை, தன் கற்பைத் தானே

காத்துக் கொள்ள வேண்டும் என்று கூறுவார். ஆனால் அவள் அவன் கற்பைக் காப்பாற்ற முடியும். அவள், தன்னுடைய தலைவ னுக்குப் பெட்புற ஒழுகின் அவன் நிச்சயமாகக் கற்புடையவனாக இருப்பான். அவளுக்கே தற்கொண்டானைப் பேணும் பொறுப்பைக் கொடுத்தார். தன் தலைவனுக்குக் கொடுத்த சொல்லையும் காத்துத், தன் தலைவன் கொடைப் பண்பின் காரணமாக மற்றவர்கட்கு வழங்கிய சொற்களையும் காத்து, முடிவாகக் குடும்பத்தின் நற்புகழையும் காப்பவள் வாழ்க்கைத் துணை நலம் ஆவாள். வினைமேற் செல்லும் தலைவன், வினையின்கண் பட்ட இடுக்கண்களால் ஒரோ வழிச் சோர்வடையலாம். ஆனால் வாழ்க்கைத் துணைநலம் சோர்வடையக் கூடாது. அவனுடைய தோல்விகளை வெற்றிகளின் படிகளாக்கவேண்டும். அவன் உள்ளத்துச் சோர்வுகளை அகற்றிச் சுறுசுறுப்பாக்கி விட வேண்டும். தலைமகனின் வருவாய்க்குத் தகுந்த வாழ்க்கையை மேற் கொள்ள வேண்டும். அவன் தரும் செல்வத்தைக் கொண்டு பல பேரறங்கள் செய்ய வேண்டும். அன்னை காமாட்சி நாழி அரிசி கொண்டு அறங்கள் பலவற்றைக் காஞ்சியில் செய்த தாகக் கூறும் வரலாற்றின் நுண்பொருள், வாழ்க்கைத்துணை நலமாக அமைந்திருப்பவர்கள் உணரத்தக்கது. இத்தகு வாழ்க்கைத் துணை நலத்தைப் பெற்றவன் சொர்க்கத்தின் வாயிலை அடைந்து விட்டான். இல்லை, அவனுடைய வாழ்க்கையில் சொர்க்கம் வந்து அமைந்துவிட்டது என்பது தான் சேக்கிழார் - வள்ளுவர் ஆகியோர் காட்டும் உண்மை.

காதல்

மனையறத்தில் வாழ்வோர் இயற்கையின் காரணமாக ஈருடலில் வாழ்கிறார்கள். ஆனால் திருவள்ளுவர் அவர்களுடைய வாழ்க்கை அமையவேண்டிய முறையை,

உடம்பொடு உயிரிடை என்னமற் றன்ன
மடந்தையோடு எம்மிடை நட்பு[65]

என்று அழகுறக் கூறுகின்றார்.

குடும்பத் தலைவனாகிய தலைமகன், அவளைக் கண்ணின் பாவையாகக் கருதுகின்றான். அவள் அவனைத் தன் நெஞ்சத்தவராகக் கருதுகின்றாள். இந்தக் காதற் சிறப்பு குடும்பத் தலைவிக்கு அமையாவிடில், வழிபடும் அம்மையாகிய உமையே தக்கன் வேள்வியில் பெற்ற இழிநிலைமை எய்துவாள். அது வரலாறன்று! ஆயினும், வாழ்வோருக்கு உண்மையை உணர்த்த எழுந்த அறவுரை; ‘இயல்பினால் இல்வாழ்க்கை வாழ்க’ என்று மனிதனை வாழ்க்கைத் துணை நலத்துடன் சேர்ந்து இல்வாழ்க்கையில் அமர்த்துகிறார் வள்ளுவர்.

அறிவறிந்த மக்கட் பேறு

மனிதனை இல்வாழ்க்கையில் அமர்த்திய திருவள்ளுவர் விரைந்தோடிச் சென்று, தொட்டிலை வாங்கி வருகிறார்; ஆம்; வள்ளுவர் எதிர்பார்ப்பது மனித சமுதாயத்தைத் தொடர்ந்து வாழ்வித்தருளும் மக்கட்பேற்றை, அஃது இயற்கைதானே! அதற்கென்ன வள்ளுவரின் எதிர்பார்ப்பு? வள்ளுவர் மக்கட்பேற்றை மட்டுமா எதிர் பார்க்கிறார். தொட்டிலை வாங்கி நடு வீட்டில் வைத்த திருவள்ளுவர், மனையறம் மேற்கொண்டோரின் காதில் ஏதோ ஓதுகின்றார்; அங்ஙனம் காதில் ‘கிசுகிசு’வென ஓதியதும் எப்படியோ திருக்குறளில் இடம்பெற்றுவிட்டது. அவர்கள் செவிகளில் அவர் ஓதியது என்ன? கூடி வாழ்க, அதுவே நன்மக்கட் பேற்றுக்குரிய வழி என்றுதான் ஓதியிருக்கவேண்டும்.

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த மக்கட்பே றல்ல பிற[66]

அடேயப்பா! வள்ளுவர் பல இடங்களில் இப்படிச் சொல்லியிருக்கிறார். அதுதான் அவரியல்பு போலும் என்று கருதுதல் கூடாது. உண்மையிலேயே இதுவரையில் மனிதன் கடந்து வந்துள்ள வாழ்க்கையின் சாதனைகளையும் அவன் அடைந்துள்ள குணங்களையும் அவனுள்ளத்து இயல்பினையும் ஒளிக்காமல் மறைக்காமல் உருக்காட்டுவது அவனுடைய மக்கட்பேறேயாம். தகுதி வாய்ந்த மக்களாக இல்லாது போனால் அவனுடைய அறிவில் குற்றம் காண்பிக்கப்பெறும். அவனுடைய குணங்கள் பழிக்கப்பெறும். அதுமட்டுமன்று. அவன் குற்றமுடையவனாக இருந்து தந்தையாகாமல் இருந்திருப்பானால், ஒரு தலைமுறையோடு அக்குற்றத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கப்பெறுகிறது. தகுதியில்லாத மக்களை ஈன்று புறந்தருதல் மூலம் அடுத்த தலைமுறைக்குத் துன்பச் சுமையினைத் தருபவனை வையகம் எப்படிப் போற்றும்? உலகத்தில் நல்லவன் என்ற பெயரைக்கூட எளிதில் பெற்று விடலாம். ஆனால் நல்ல தாய், நல்ல தந்தை என்ற பெயரை அவ்வளவு எளிதிற் பெற இயலாது. அவனுடைய இயல்புகளாலேயே அவன் நல்ல தந்தை என்று பாராட்டப் பெறுவதில்லை. அவனுடை மக்கட் பேற்றின் குணங்களைப் பொறுத்தே அவன் நல்ல தந்தையென்று பாராட்ட பெறுகிறான்.

மகன்தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்எனும் சொல்[67]

என்று திருக்குறள் பேசும். சேக்கிழார், அப்பூதியடிகள் வரலாற்றில் மூத்த திருநாவுக்கரசு வாயிலாக, “நல்ல தாய் தந்தை ஏவ நானிது செய்யப் பெற்றேன்”[68] என்று பாராட்டுவார். பெற்றோர், மகனை அறிவார்ந்த உணர்வில் பெற்றால் மட்டும் போதாது. மீண்டும் காலத்தின் சூழலால் கெட்டுவிடாமல், வள்ளுவர் அவனை வளர்த்தது போலத் தன் மகனை இவன் வளர்க்க வேண்டும். மகனும் தந்தையின் தகுதியறிந்து ஒழுகித் தந்தைக்குப் புகழைச் சேர்க்க வேண்டும்.

மனிதன் ஆற்ற வேண்டிய அறங்களும் பயனும்

இங்ஙனம் மனிதன் தனியே பிறந்து, வள்ளுவப் பேராசான் துணைகொண்டு குடும்பத் தலைவனாகி விட்டான். தனி மனிதனின் வாழ்க்கைப் பயணம் இந்த அளவோடு நிற்கவில்லை. அவன் சமுதாயத் தலைமையும் ஏற்கவேண்டும். அவனோடு வாழும் சமுதாயத்திற்கு அவன் தொண்டு செய்ய வேண்டும். ஒரு தலை சிறந்த மனிதன் வாழும் சமுதாயத்தில் கொலை நிகழக்கூடாது. கொல்லாமை ஒரு சிறந்த பேரறம். திருவள்ளுவரின் நெஞ்சம் கொல்லாமை அறத்தில் தோய்ந்திருந்தது.

ஒன்றாக நல்லது கொல்லாமை[69]
என்பார். பிறநெறியினர் வேள்வியின் பொருட்டுக் கொல் வதைக்கூட திருவள்ளுவர் மறுக்கின்றார்.

அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று[70]

என்பார். கொல்லாமை என்பதற்குத் திருவள்ளுவர் கண்ட கருத்தே புதிது. உலகில் யாதொரு மறையும் கூறாதது. அஃதென்ன? திருவள்ளுவர் கொல்லாமை அதிகாரத்தில்,

பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை[71]

என்பார். பொருளமைதியை நோக்கினால் இத்திருக்குறள் கொல்லாமை அதிகாரத்திற்கு இயைபுடையதன்று. ஈதல் ஒப்புரவறிதல் ஆகிய அதிகாரங்களில் கூறப்படும் பொருட் குறிப்பே இக்குறளிலும் கூறப்படுகிறது. அந்த அதிகாரங்களில் இந்தக் குறளை ஓதாமல் கொல்லாமை அதிகாரத்தில் வைத்தது ஏன்? வாழப் பிறந்த ஓருயிரை உணவளித்து வாழ்விக்காமல் சாகவிடுதலும் ஒருவகையில் கொலையே என்ற கருத்தில் இந்தத் திருக்குறள் கொல்லாமை அதிகாரத்தில் வைக்கப் பெற்றுள்ளது. பகுத்துண்ணும் பண்பு தழீய பழக்கம் பாரினில்-வையத்து மாந்தரிடத்தில் வராததினாலேயே திருக்கோயிலுள் எழுந்தருளியிருக்கும் இறைவன் உண்ண மறுத்திருக்கிறான். அவன் சந்நிதியில் இடப் பெற்றிருக்கும் திரை வஞ்சிக்கப்பட்ட மக்களைப் பாராதிருப்பதற்காக என்பதை அவன் திருவுள்ளம் அறியாதா என்ன? பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும் நெறியே பரமன் நெறி. அந்நெறி நின்று ஒழுகுவோரே ஒழுக்கத்தின் நெறி நின்றவராவர்.

மனிதன் தான் பிறந்த குடியை வளர்க்க வேண்டும். அப்பொழுதுதான் அவனும் நிலையாக வாழ முடியும். அவனுடைய குடும்பமும் வாழும். எனவே மனிதனைச் சமூக மனிதனாக வள்ளுவர் மாற்றி வளர்க்கிறார். தனி மனிதனைச் சமூக மனிதனாக மாற்றும் பொழுது ஈதற் பண்பாட்டை எடுத்துக்காட்டுகின்றார்; ஒப்புரவறிதலை ஓதிக் காட்டுகின்றார். இவ்விரண்டு அறங்களும் சமுதாயத்திற்குத் தனி மனிதனால் செய்யப்பெறுபவை. மாறாக அவன் சமூகத்திலிருந்து புகழைப் பெறுகிறான். மனைவி, கணவனைப் பாராட்டுவது புகழாகாது. கணவன் மனைவியைப் பாராட்டுவது புகழாகாது. நண்பர்கள் பாராட்டுவது புகழாகாது. உண்மையான புகழ், பகைவர்களாலும் பாராட்டப் பெறுவதுதான். சூரபதுமன் செருக்களத்தில் அண்ணல் அறுமுகச் செவ்வேளைப் பாராட்டுகிறான்; போற்றித் துதிக்கிறான். இதுவே புகழ் தலையாய புகழ், பொதுவான அயலவரும் புகழலாம். சமுதாயம் தலைமகனைப் பாராட்டுவதுதான் புகழ். எனவே தனிமனிதனைச் சமுதாயத்தில் ஈடுபடுத்திச் சான்றாண்மை யுடையவனாக்கிப் பண்புடையவனாக்கிப் புகழுக்குரியவனாக்குகின்றார்.

அரசு

இவ்வளவும் தனி மனிதன் உடன்பாட்டு முறையில், தானே வளர்ந்த பயணம். கழனியில் வேளாண்மை செய்யத் தொடங்கும் பொழுது காவல் தேவையில்லை, பயிர் வளர்ந்த பிறகு காவல் தேவை. எனவே தனி மனிதனும் சமுதாயமும் இணைந்து வளரும் வழி, புலித்தோல் போர்த்த பெற்றங்களும் இடையில் தோன்றி விடுவதுண்டு. அத்தகைய வல்லுருவங்களிலிருந்து சமுதாயத்தைக் காப்பாற்ற வலிமையான காவல் தேவைப்படுகிறது. கண்ணோட்டமில்லாத காவல் தேவைப்படுகிறது. அந்தக் காலத்தில்தான் வள்ளுவர் மனிதனுக்கு அரசைப் படைத்துக் காவலாக்குகிறார். அக்காவல் காவலுக்காக ஏற்பட்டதன்று. காவற்காரர்களுக்காகவும் ஏற்பட்ட தன்று. இன்றைய நிலையில், ஏன் இடைக்காலத்திலும் கூட வரலாற்றிலும் கூட மக்களுக்காக ஏற்படுத்தப்பெற்ற காவல் தன்மையுடைய அரசுகள் காவல் தன்மையை இழந்து, மக்களுக்கே துன்பம் செய்பவைகளாக உருமாறி விட்டன. அதனால்தான் போலும் ஆள்வோர் ஆளப்படுவோருக்குக் காவல் செய்யத் தவறியதால் ஆள்வோர் தமக்குக் காவல் அமைத்துக் கொள்ளவேண்டிய அவசியம் ஏற்பட்டது, வள்ளுவர் வகுத்தத் தந்த அரசு குடிதழுவிய அரசு முறை செய்து காப்பாற்றும் நல்லரசு, ‘பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும்[72] என்ற பொது நெறியில் மக்களைக் காப்பாற்றுவதே அரசு.

துறவு

இங்ஙனம் நல்ல அரசு அமைந்துவிட்ட போதிலும் மனிதன் அவனிடம், ஏதோ ஒரு இல்லாமையை உணர்கிறான். தவம் செய்தவன்தான். ஆனால் மேலும் மெய்யுணர்வு ஆர்வம் அலை மோதுகிறது. ஆதலால் அவனுடைய தகைமை சான்ற மகனிடத்தில் உடைமைகளை ஒப்படைக்கின்றான். அப்பரடிகள் கூறியது போலத் துணையாய் நின்று

துறப்பிக்கும் திருவருளை நினைந்து அவனும் அவளும் தனித்து வாழ்கின்றனர். உடல்களால் மட்டும் தனித்து அல்ல. உயிர்களால் தனித்து அல்ல. காதலின்பத்தை அருளின்பமாக மாற்றிப் பரபரப்பான உலகத்திலிருந்து விலகித் தனித்து வாழ்கின்றனர். இப்போது விழைவு இல்லை; விருப்பமில்லை. தாம் கடந்து வந்த காலத்தின் வாழ்க்கைப் பயணங்களைத் திறனாய்வு செய்கின்றனர். புலன்களைத் துய்மையாக்குகின்றனர்; அவ்வழிப் பொறிகளில் தூய்மை காக்கின்றனர்; தவம் செய்கின்றனர். இறைநெறி நிற்கின்றனர். தமிழின் நாகரிகத்தில் இங்கேயே துறவு மலர்கிறது.

காமம் சான்ற கடைக்கோட் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே[73]

என்பது தமிழர் வாழ்வியல் நெறி.

வீடு

திருவள்ளுவர் கடவுளை வாழ்த்தி வாழும்படி வழி நடத்துகின்றார். திருவள்ளுவர் முதிர்ந்த ஞானி; சீவன் முத்தர்; திருவடி ஞானம் பெற்றவர். அதனால், திருவடிகளையே தொழத் தூண்டுகிறார். வழிபாட்டால் பொறிகள் தூய்மை பெற்று, மற்றவர் சுவைத்தற்குரிய சுவையினைப் பெற்று விளங்க வேண்டுமென்பது வள்ளுவர் நெறி.

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.[74]

பொறிகளை "அவித்தல்" திருவள்ளுவர் கண்டுணர்த்திய செந்நெறி. திருவள்ளுவர் பொறிகளை அடக்கவோ அழிக்கவோ சொல்லாமல் அவித்தல் என்று கூறுவது நினைந்து நினைந்து இன்புறத்தக்கது. சுவைத்தற்குரியனவாகவும் ஆனால் இயல்பில் சுவையில்லாதனவாகவும் இருப்பனவற்றைச் சுவைத்தற்குரியவாறு பக்குவப்படுத்தும் செயல்முறை "அவித்தல்" நெல் அவித்தல்; கிழங்கு அவித்தல் ஆகிய சொல் வழக்குகள் ஒப்புநோக்கி எண்ணத்தக்கன. இயல்பாகத் தற்சார்புடைய வேண்டுதல் வேண்டாமை, அலைவழிப்பட்டுக் காமம், வெகுளி மயக்கங்களில் சிக்கி, 'யான்', 'எனது' என்ற செருக்கால் சுவை இழந்து, அசுரநிலையை அடையாமல் இறைவனுடைய திருவடிகளை நினைந்து நினைந்து பணிவுடைமையைப் பண்பாகக் கொண்டு, மகவெனப் பல்லுயிரையும் ஒக்கநோக்கிப், பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பி வாழ்வோர் இறைவன் திருவடியை எளிதில் எய்துவர். இல்லை, அங்ஙனம் வாழ்வோர் மனத்தில் இறைவன் எளிதில் வந்து தங்குவான். அந்த நிலையே வீடு பேறு உடற் களைப்பு நீங்க, உறங்கி மகிழ, உலகியல் வீடு துணை செய்கிறது. அதுபோல் எல்லாப் பிறப்பும் பிறந்து எய்த்து இளைத்த உயிர்க்குத் தங்கி இன்புறும் வீடு இறைவன் திருவடியே. உலகியல் வாழ்க்கையில் சொந்த வீடில்லாதார் படும் அல்லல் எவ்வளவு? அதுபோலப் பல்வேறு பிறப்புக்களை அடைந்து துயருறும் இந்த உயிர், இன்ப அன்பினில் நிலையாகத் தங்கியிருக்கும் வீடு திருவடியே. இந்த வீடு பெறாதாரை இரக்கமுடன் நோக்குகிறார். "சின்னஞ்சிறு வீட்டில் ஐவரோடு கூட்டுக் குடித்தனம் செய்யும் உயிரை நோக்கி உயிருக்கு இன்னமும் புகுந்து நிலையாகத் தங்கியிருக்கும் வீடு கிடைக்கவில்லையோ" என்று கேட்கிறார்.

புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு[75]

என்பது குறள். இங்ஙனம் உயிர்கள் நிலையான இன்ப அன்பினில் திளைத்து மகிழும் திருவடிப் பேற்றினை உணர்த்திய திருக்குறள் மறை வாழ்க! வையம் வாழ்க!

கடவுள் வாழ்த்து

பிறவி, இன்பமே ஆனாலும் கடலேயாம். கடலில் குளித்தல் சிலபொழுது மகிழ்ச்சி. ஆனால் தொடர்ந்து கடலில் கிடத்தல் மகிழ்வைத் தராது. கடலிடைக் கிடப்பவர் கரையேறவே நினைப்பர். பிறவிக் கடலில் கிடந்திடும் நம்மை எடுத்து ஆளும் திருவடிகள், இறைவன் திருவடிகள். நம்மைக் கடலிலிருந்து எடுத்திடும் திருவடி, அறத்தின் திருவுருவம். அறத்தின் வடிவமாய் அமைந்துள்ள கடல் அவன். உவர்ப்புக் கடலில் உருக்குலைந்து கிடக்கும் நம்மை, உவப்புக் கடலுக்கு எடுத்தாளும் திருவடிகள். உவர்ப்புக் கடல் அலைமோதுகிறது, அவலத்தைத் தருகிறது; கவலையைத் தருகிறது. மனக் கவலையை மாற்றத் ‘தனக்குவமை யில்லாதான் தாளினை’ வாழ்த்திடுவோம்; அத்திருவடிகளை அணைந்து இன்புறுவோம். அத்திருவடிகளை நாம் சார்ந்திட இருவினையும் கடந்திட வேண்டும். நல்வினையும் துன்பமே, தீவினையும் துன்பமே. இவ்விரண்டுக்கும் வித்து புகழ் விரும்பல். இறைவனின் பொருள் சேர் புகழை விரும்பிப் போற்றினால் இருவினையும் அகலும். புகழையே துறந்தமையால் வேண்டுதலும் இல்லை வேண்டாமையும் இல்லை. இறைவன் வேண்டுதல் வேண்டாமை இல்லாதவன். அவனைச் சார்ந்த நமக்கு யாண்டும் இடும்பை யில வேண்டுதலும் இன்மையால் புகழ் நாட்டமில்லை. அதனால் பொறிகள் தூய்மையாயின. அதனால் அத் தூயோன் திருவடிகள் மனத்தகத்தே வந்து மன்னி நின்றன. அவன் கருணையினால் உலகம் ஒரு முதலாகி நிற்கிறது. உலகம் வாழ்க! எல்லா உலகமுமாய் நிற்கும் இறைவன் வாழ்க! இன்பமே சூழ்க! எல்லோரும் வாழ்க!

தொகுப்புரை

நமது சமயத்திற்கு-இந்து சமயத்திற்கு உரிய உண்மையான மறைநூல், திருக்குறளேயாம். திருக்குறள் நமது சமயத்தின் தனித் தன்மையையும் விளக்குகிறது, அதே போழ்து எல்லைகளற்ற பொதுமைக்கும் துணையாக நிற்கிறது. இதுபோன்ற ஒருமறை நூல் உலகத்தில் வேறு எந்தச் சமயத்திற்கும் கிடைத்ததில்லை. இனிமேலும் கிடைத்தற்கியலாது. இந்திய தத்துவ-நீதி நூல்களுள் மிகவும் விழுமியது திருக்குறள் என்று ஆல்பர்ட் சுவைட்சர் கூறியுள்ளார். உமாபதி சிவமும் ‘மெய்வைத்த சொல்’ என்று பாராட்டுகிறார். ஆதலால் நமது மறை திருக்குறளே!

மறை நூலுக்குரிய இயல்புகள் அனைத்தும் திருக்குறளுக்குப் பொருந்தியிருக்கின்றன. கடவுள், உயிர், உயிரைப் பற்றிய அறியாமை, உயிர்பெற வேண்டிய அறிவு வாழ்க்கைப் பயணம், இன்ப துன்பம், வீடுபேறு ஆகிய அனைத்தும் திருக்குறளில் பேசப்பட்டுள்ளன. அது மட்டுமின்றி சமய வாழ்வுக்குரிய உண்மைகளோடு மட்டுமன்றி உலகியல் நெறியும்-அரசியல் நெறி, பொருளியல் நெறி, படை நெறி ஆகியனவும் விரிவாகக் கூறப்பெற்றுள்ளன. மனித குலத்திற்குத் தேவையான உணவு, மருந்து ஆகியனவும் எடுத்தோதப் பெற்றுள்ளன. எல்லாவற்றுக்கும் மேலாக ஒரு தனி மனிதன் எவ்வண்ணம் வளர வேண்டுமென்பதை ஒரு சிறந்த நல்லாசிரியன் எடுத்துக் கூறுவதைப் போலப் படிமுறையில் நூல் அமைந்திருக்கிறது.

தனிமனிதன், கல்வி கேள்வி வழி அறிவு பெற்று, அவ்வழி அன்பு பெற்று, ஆள்வினை - ஆற்றல்பெற்று, செயற்கரும் செயல்கள் செய்து, நட்பினை நாடிப் பெற்று, வாழ்க்கைத் துணையடைந்து நன்மக்கட் பேற்றினைப் பெற்று அவனை முறையாக நன் மகனாக வளர்த்து நாட்டிற்கு அளிக்கச் செய்து தவம் - நோன்பு ஏற்கும் வரையில் திருக்குறள் அவனை அழைத்து வருகிறது. தனி மனிதனை அவன் நிலையில் வளர்த்துக் குடும்பத் தலைமகனாக வளர்த்து ஒப்புரவு நெறி கொண்ட சமுதாயத் தலைமகனாக வளர்த்து, அவன்மூலம் நல்லாட்சியமைத்து நாட்டுக்குப் பெருந்தொண்டு செய்கிறார் திருவள்ளுவர். திருக்குறள் ஒரு வாழ்வியல் நூல். வாழ்க்கையில் மலர்ந்த மறை. அது

வாழ்க்கையை வழி நடத்திச் செல்வது. திருக்குறள் மறைவழி வாழ்வோம்! வள்ளுவத்தின் வழி வையகத்தை வாழ்விப்போம்!

மீண்டும் அறக்கட்டளை கண்ட சொல்லின் செல்வர் பிள்ளை அவர்களை நன்றியுணர்வுடன் நினைவு கூர்கின்றோம். சொற்பொழிவுகளுக்குத் தலைமையேற்று நல்லுரை வழங்கி ஆர்வநெறியில் ஆற்றுப்படுத்திய பல்கலைக் கழகப் பேராசிரியர் “நமது நூலறி புலவர்” பாராட்டு தலுக்குரிய அன்பர் ந. சஞ்சீவி அவர்களுக்கு நன்றி; பாராட்டு; வாழ்த்துக்கள்.

வாய்ப்பினை வழங்கிய பல்கலைக் கழகத்தினருக்கு நன்றி.

மேற்கோள் விளக்கம்

புறம்-34.
நெஞ்சு விடு தூது, அடி-26,
தொல்காப்பியம்-பாயிரம்
தொல்காப்பியம்-பாயிரம் உரை
நல்வழி.
திருவாசகம்-சிவபுராணம் 26-31.
தொல்காப்பியம், மரபியல், 28, 29, 30, 31, 32, 33,
ஔவையார் தனிப்பாடல்.
திருநாவுக்கரசர், நாலாந்திருமுறை, 784,
புறம், 29.
திருக்குறள், 423.
திருக்குறள், 278.
திருக்குறள், 1071.
திருக்குறள், 994.
திருக்குறள், 131, 80.
திருக்குறள், 430.
புறம்-192.
திருக்குறள்-339.
திருக்குறள், 358.
திருநாவுக்கரசர், நான்காந்திருமுறை, 769.
திருநாவுக்கரசர், ஆறாந்திருமுறை, 839.
திருமந்திரம், 299
திருக்குறள், 397.
திருக்குறள், 391.
திருக்குறள், 415,
திருக்குறள், 418.
திருநாவுக்கரசர், நான்காந்திருமுறை, 84.
திருஞானசம்பந்தர், முதல் திருமுறை 2
திருக்குறள், 666,
திருக்குறள்-140.

திருக்குறள், 373.

திருக்குறள், 421.

திருக்குறள், 427.

திருக்குறள், 429,

திருத்தொண்டர்புராணம், 2562.

திருக்குறள், 426.

திருக்குறள், 1110,

திருஞானசம்பந்தர், மூன்றாந்திருமுறை, திருச்சாய்க்காட்டுப் பதிகம், சீகாமரப்பண் 3-ஆவது பாடல்.

திருக்குறள், 336.

திருஞானசம்பந்தர், கோளறு திருப்பதிகம், 1.

கந்தரலங்காரம், 38.

திருக்குறள், 334.

திருக்குறள், 482.

திருக்குறள், 483.

திருக்குறள், 484.

புறம் 191.

திருக்குறள் 504

திருக்குறள் 510

திருக்குறள், 618

திருக்குறள், 620.

திருநாவுக்கரசர், ஐந்தாந்திருமுறை, 192.

திருக்குறள், 379.

திருஞான சம்பந்தர், மூன்றாந்திருமுறை, 4-ஆவது பதிகம், திருவாவடுதுறை, 1.

திருநாவுக்கரசர், ஆறாந்திருமுறை, 961.

திருநாவுக்கரசர் - ஆறாந்திருமுறை-929,

சுந்தரர் - ஏழாந்திருமுறை-340.

திருக்குறள் - 247.

புறம்-18,

திருக்குறள்-80

திருநாவுக்கரசர், நான்காந்திருமுறை, 399

திருக்குறள், 781.

திருவாசகம், திருக்கோத்தும்பி, 18,

திருக்குறள், 1.

திருக்குறள், 49.

திருக்குறள், 1122.

திருக்குறள், 81.

திருக்குறள், 70.

திருத்தொண்டர்புராணம், அப்பூதியடிகள், 24

திருக்குறள், 323.

திருக்குறள், 259.

திருக்குறள், 322.




குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

மின்னிதழ்:46 ஐப்பசி-30 -தி.பி.2053 நவம்பர்-16- பொ.ஆ.2022



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

நிறுவுநர் செந்தமிழ்மாமணி சி.இலக்குவனாரின் 114-ஆம் பிறந்தநாள் சிறப்பிதழ்



பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்
இணையாசிரியர்:தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

## இலக்குவனாரின் தமிழ்த்தொண்டு

பேரா. கண.சிற்சபேசன் - சிறப்புரை

இலக்குவனாரைப் பற்றி இன்றளவும் நாம் பேசிப் போற்றுகிறோம் என்றால் அதற்கு அவர் கற்ற கல்வி, அவர் பெற்ற பட்டறிவு, அவரின் உணர்வுகள், அவருடைய மானுடப்பண்பே காரணம். இலக்குவனாரிடம் நான் நெருங்கிப் பழகியுள்ளேன்.. ஏனைய கல்லூரிகளில் ஓராண்டு அல்லது இரண்டு ஆண்டுகளே பணியாற்றி,,அதன்பின் பணிநீக்கம் செய்யப்பட்ட இலக்குவனார், தியாகராசர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக தொடர்ந்து ஏழு வருடம் பணியாற்றினார். இவரின் அருமை, பெருமை தெரிந்ததால் தான் தியாகராச(செட்டியா)ர் இவரை 7 வருடமாகத் தம் கல்லூரியில் வைத்திருந்தார்.இந்தி எதிர்ப்புப் போராட்டக் காலத்தில் அரசு கட்டாயத்தில்தான் அவர் பணிநீக்கம் செய்யப்படும் சூழல் ஏற்பட்டது.

நான் தியாகராசர் கல்லூரிக்குப் பேராசிரியர் பணிக்காக நேர்காணல் தேர்வுக்குச் சென்றபோது அக் கல்லூரி நிறுவுநர் தியாகராச(ச் செட்டியா)ர் வினாக்கள் பல கேட்டார்.என்னை ஒரு பா கூறச் சொன்னார். நான் குறுந்தொகையிலிருந்து “அன்னாய் வாழி வேண்டன்னை” - என்ற பாவைச் சொன்னதும் தியாகராச(ச் செட்டியா)ர், “அன்னாய், அன்னை இன்று ஏன் இரண்டு முறை வருகிறது” என்று என்னை விளக்கம் கேட்டபோது நான் விழித்தேன். அப்போது இலக்குவனார் எனக்குத் துணிவூட்டினார். ”அச்சப்படாதே நாளை மாணவர்கள் வகுப்பில் உன்னை கேள்வி கேட்டால் விடையளிக்கத் தெரியாமல் இருக்கக்கூடாது என்பதை உணர்த்தவே செட்டியார் உன்னிடம் இப்படிக் கேள்வி கேட்கிறார்” என்றார். இது ’ஒழிக்கும் செயல் அல்ல உருவாக்கும் செயல்’ என்பதை உணர்ந்தேன்.

என்னிடம் ஐந்து மாணவர்கள் வந்து இன்று வகுப்பு இருக்கிறதா என்றால் ஆமாம் என்பேன்.ஐம்பது பேர் வந்தால் இருக்காது என்று நினைக்கிறேன் எனச் சொல்வேன். ஐந்நூறு பேர் வந்து கேட்டால் இன்று வகுப்பு இருக்கிறதென்று யார் சொன்னது என மாற்றிப் பேசுவேன். ஆனால் பேரா. இலக்குவனார் அப்படி இல்லை. ஐந்து பேர் வந்தாலும் ஐந்நூறு பேர் வந்தாலும் ஒரே விடையைக் கூறித் தன் கொள்கையிலேயே நிலையாக நின்று சாதிக்கக் கூடியவர். இந்தக் கொள்கையோடு அறம், மானம், நிலைதாழாமையும் இலக்குவனாரிடம் இருக்கும். இலக்குவனார், எவ்வளவு பெரிய சாம்பவான்கள் வந்தாலும் அவர்களை எளிதில் சமாளிப்பார்.

அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்ற ஐந்து தூண்களையும் திருக்குறள் வலியுறுத்துகின்றது. இதில் வாய்மை மற்ற நான்கோடு இணைந்திருக்கும். இந்த ஐந்து பண்புகளையும் பெற்றவர் இலக்குவனார்.

ஒருமுறை மதுரையில் இருக்கும் சோழவந்தான் என்ற ஊருக்குத் திருக்குறளின் பெருமை பற்றிப் பேச நானும் இலக்குவனாரோடு சென்றிருந்தேன். நான் நினைத்தேன் எப்படித் திருக்குறளை எளிய மக்களுக்கு எடுத்துரைக்கப் போகிறார் என்று. அவரோ அவர்களின் பாமரத் தமிழ் மூலம் எளிமையாக எடுத்துரைத்தார். அதிலும் ஆழமாகக் கூறினார். நான் வியந்தேன்.

இலக்குவனாரிடம் கொள்கைப் பிடிப்பும், மான உணர்வுமே அவரை இந்நிலைக்கு உயர்த்தியது. ஆனால் பதவி பற்றி இவர் கவலைப்படுவதே இல்லை. இலக்குவனார் எப்படி ஆசிரியரோடும், மாணவர்களோடும் பழகுகிறார் என்பதைப் பார்த்து நானும் அப்பழக்கங்களை கற்றுக் கொண்டேன்.

ஒருமுறை இலக்குவனாருக்குத் திருச்சியிலிருந்து ஒரு கடிதம் வந்தது. அது கோனார் சங்கத்திலிருந்து அனுப்பிய கடிதம், என்னைப் படிக்கச் சொன்ன பிறகு இப்படிப் பதில் எழுதச் சொன்னார்.

“தங்கள் கடிதம் பார்த்தேன். தாங்கள் நினைப்பது போல் நானில்லை.எனினும் பிற்பட்டோர் அனைவரின் நலனிலும் ஈடுபாடு உள்ளவன்.” என என்னை எழுதச் சொன்னார். பிறகுதான் எனக்குப் புரிந்தது இலக்குவனார் என்பதற்கு பதிலாக இலக்குவக் “கோனார்” என்று நினைத்து இவர் நம் சாதியைச் சேர்ந்தவர் என அவர்கள் அனுப்பிய கடிதமென்று.

அதே போல் எங்கள் கல்லூரியில் ஒரு ஆங்கிலப் பேராசிரியர், தினமும் தன் மனைவியைத் துன்புறுத்துகிறார் எனக் கேள்விப்பட்டு அந்த ஆங்கில ஆசிரியர் குடும்பம் எப்படியும் போகட்டும் என்று நினைக்காமல், இலக்குவனார் அவர்கள் ஆங்கில ஆசிரியருக்கு அறிவுரை வழங்கினார். பிறர் குடும்பம் நன்றாக இருக்க வேண்டும் என்ற நல்ல எண்ணம் கொண்டவர் இலக்குவனார். நான் தேவகோட்டையைச் சேர்ந்தவன். என் தந்தை புலால் மிவும் விரும்பி உண்ணுவார். ஒரு முறை இலக்குவனார் என் வீட்டிற்கு வந்தபோது என் தந்தை இவரிடம் கேட்டார் “தமிழனுக்கு இயற்கையான உணவு சைவமா?அசைவமா?“ என்று. அதற்கு இலக்குவனார் கூறினார் “நியாயமாகப் புலால் மனிதனுக்கு ஏற்ற உணவில்லை. சிங்கம், புலி தனது பல், நகம் கொண்டு பச்சையான இறைச்சியைச் சாப்பிட்டுச்

செரித்துக் கொள்கிறது. அதன் உடல்நிலை அப்படி. ஆனால் நாம் அசைவம் சாப்பிடுவது இயற்கைக்கு முரணானது. ஆகவே இயற்கைக்குச் சைவமே சிறந்த உணவு "என்றார். என் தந்தை அன்றிலிருந்து சைவ உணவே உண்டார். இலக்குவனார் ஆங்கிலப் புலமை மிக்கவர். தொல்காப்பியத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து எழுதியது ஏன் எனக் கேட்டதற்கு, உலகம் முழுதும் பரவிய மொழி ஆங்கிலம். இம்மொழியில் தொல்காப்பியத்தை எழுதினால்தான் உலகக் கவனம் இதன் மீது திரும்பும். தமிழனின் பெருமை உலகறியும்" என்றார். அன்புக்கு கட்டுப்பட்டவர். தளராடை (சிப்பா) அணிந்தும், குப்பாயம் (கோட்டு) அணிந்தும் வருவார். எந்தப் பணியையும் யார் கொடுத்தாலும் மறுக்க மாட்டார். தேர்தல் பணிகளைச் சிறப்பாகச் செய்பவர். இவரோடு பணியாற்றியதே எனக்குப் பெருமையாக உள்ளது. தமிழ்த்தாயைப்பார்க்கவேண்டும் என்பவர்களுக்கு இலக்குவனார் படத்தைக் காட்டலாம். இலக்குவனாரை மனத்தில் நினைத்து வரைநதால்தான் தமிழ்த்தாய்ப் படம் வரையமுடியும். இலக்குவனாரே தமிழ்! தமிழே இலக்குவனார்! வாழ்க இலக்குவனாரின் தமிழ்த்தொண்டு.(14/12/2010-ஆம் நாளில் சென்னை ஒய்.எம்.சி.ஏ.பட்டிமன்றம் நடத்திய இலக்குவனார் நூற்றாண்டு விழாவில் ஆற்றிய உரை)

நன்றி : நட்பு இணைய இதழ்;



## வேர்கள் பூப்பதில்லை

-------பொன்.செல்வகணபதி



இயற்பெயரிலேயே
இலக்கு உடைய
எஃகுத் தமிழர்
இலக்குவனார் !
அன்னைத் தமிழ்மீது
ஆசை வைத்தவர்
அதைக் காப்பதற்கென்றே
மீசைவைத்தார் !
பாவின் திறத்தாலே
பைந்தமிழ் காத்தவர்
பாவேந்தர் !
இவரோ
நாவின் திறத்தாலே
நற்றமிழ் காத்த
நாவேந்தர் !
பிழைக்கத் தமிழ்
படித்தோர் உண்டு
தமிழ் படித்துப்
பிழைப்பவரும் உண்டு !
இவரோ
தமிழ் தழைக்கத்
தமிழ் படித்த தமிழர் !
தமிழ் தழைக்கவே
தலை நிமிர்ந்த தலைவர் !
வேலை செய்யாமலிருக்க
வேலை தேடுவோர் உண்டு !
இவரோ
வேலை செய்வதற்காகத்
தம் வேலை விட்டவர் !
தமிழ் வேலை செய்யத்
தம்வேலை விட்டவர் !
தமிழைச் சிறை மீட்கத்
தாம் சிறை புகுந்தவர்
காதலித்தால் கூட
தமிழ் உணர்வை
நிபந்தனையாக்கும்
காதலர் அவர் !
நலம் உசாவினால் கூட
தமிழ் உணர்வோடு
இருக்கிறீரா? என்றே
நலம் கேட்பவர் அவர் !
ஆதரித்தால் கூட
தமிழ் உணர்வை மட்டுமே
ஆதரிக்க அடம் பிடிப்பவர் அவர் !
தாகம் தீர்வதற்குள்
தண்ணீர் தீர்ந்துவிடுகிறது
மோகம் தீர்வதற்குள்

மூச்சு தீர்ந்துவிடுகிறது !
சோகம் தீர்வதற்குள்
சொந்தம் தீர்ந்துவிடுகிறது !
ஆக மொத்தம் இங்கே
அனைத்தும் தீர்ந்துவிடுகிறது !
ஒன்றுமில்லை என்பதைத்
தெரிந்து கொள்ளவே
ஒரு வாழ்க்கை
தேவைப்படுகிறது !
அந்த
ஒன்றுமில்லையில் தான்
ஒரு வாழ்க்கை இருக்கிறது
என்பதைத் தெரிந்துகொள்ள
இன்னொரு வாழ்க்கைக்கு எங்கே
போவது?
இங்கு
தியாகங்கள் செய்து
தியாகி ஆனவர் உண்டு
நாமோ
தியாகிகளைத்
தியாகம் செய்தே
தியாகி ஆனவர்கள் !
விதவிதமாய் வழுக்கும்
விலாங்குகளுக்கு
மீன்களிடமும்
மேடை !
பாம்புகளிடமும்
பலன் !
கடவுள்கள் கடத்தப்படுவதும்
பூசாரிகள் பூசிக்கப்படுவதும்
ஒன்றும் புதுவதல்ல !
உலகத்தியற்கை !
விசிறியும் இல்லாத
வாழையும் இல்லாத
விநோதப் பிறவிக்கு
விசிறிவாழை என்று பெயர் !
அந்த விசிறி வாழையோ
வீட்டு முகப்பில் !
குலை தள்ளும் வாழையோ
கொல்லைப்புறத்தில் !
கல்யாணக் காலங்களில்
காட்சிக்கு வரும் !
கல்யாணம் முடிந்தபின்னே
தோலுரிக்கப்படும் !
ஆனால் விசிறிவாழை எப்போதும்
வீட்டுமுகப்பில் !
இது
ஒன்றும் புதுவதல்ல !
உலகத்தியற்கை !
வேர்கள் பூப்பதில்லை
ஆனால்
வேர்களின்றிப் பூவில்லை !
வேர்கள் முரடுதான்
கொஞ்சம் விகாரம் கூட !
ஆனால்
மரங்களுக்குப் பூச்சூட்டி
மகிழ்வது வேர்கள்தான் !
அடித்தளங்களுக்கு ஏது
அடையாள வாரம்?
ஆனால் அனைத்துக்கும்

ஓர் அடையாளம் வழங்குவது
அடித்தளங்கள்தானே?
மறுக்கப்பட்டு விட்டாலும்
காதல்
மறக்கப்படுவதில்லை;
நினைக்கப்படாவிட்டாலும்
தியாகம் நிராகரிக்கப்படுவதில்லை
மரணம் நம்
மடிமீதே கிடக்கிறது;
மரணத்தின் மடியில்தான்
மனிதன் மயங்கிக்கிடக்கிறான்;
மரணமில்லாத்து மரணம்;
மற்றொன்று
புகழ் !
அந்த மாயாத புகழால்
மரணத்தை வென்று
இன்றும் இருக்கிறார்
இலக்குவனார்
என்றும் இருப்பார்
இலக்குவனார் !


இலக்குவனார் நூற்றாண்டு விழா

அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்கம் சார்பில் சென்னையில் வெள்ளிக்கிழமை நடைபெற்ற பேராசிரியர் இலக்குவனார் நூற்றாண்டு விழாவில், அவரது படத்தைத் திறந்து வைக்கிறார் சங்கத்தின் தலைவர் விக்கிரமன். உடன் (இடமிருந்து) சங்கத்தின் பொதுச் செயலாளர் சுடர்.முருகையா, புலவர் இளங்குமாரனார், 'புதியபார்வை' இதழ் ஆசிரியர் ம.நடராஜன், மறைமலை இலக்குவனார், எழுத்தாளர் பா.செயப்பிரகாசம்.

இலக்குவனாரும் திருக்குறளும்

-------------*மறைமலை இலக்குவனார்*

செந்தமிழ் அரிமா எனப் போற்றப்பெற்ற சி.இலக்குவனார் 1936-ஆம் ஆண்டு தஞ்சை மாவட்ட நாட்டாண்மைக் கழக உயர்நிலைப்பள்ளிகளில் தமிழாசிரியப் பணி ஏற்றதிலிருந்து 1970-ஆம் ஆண்டு நாகர்கோவில் தென்திருவிதாங்கூர் இந்துக்கல்லூரி முதல்வராக அவர் ஓய்வு பெற்றதுவரை எந்த நிறுவனத்திலும் ஓராண்டு அல்லது இரண்டாண்டுகளுக்கு மேல் பணியாற்றியதில்லை."கெடல் எங்கே தமிழின் நலம் அங்கெல்லாம் தலையிட்டுக் கிளர்ச்சி செய்க"என்னும் குறிக்கோளுடன் போராட்டமே தம் வாழ்க்கைமுறையாக அவர் கொண்டிருந்தமையால் இவ்வாறு அவரது பணி அலைக்கழிப்புக்கு ஆளாகியது.அவர் மிகுதியான காலம் அஃதாவது ஆறாண்டுக் காலம் பணியாற்றிய ஒரே நிறுவனம் மதுரைத் தியாகராாசர் கல்லூரிதான்.

அவர் பணியாற்றிய காலத்தில் மதுரைத் தியாகராசர் கல்லூரி மதுரையின் ஐந்தாம் தமிழ்ச்சங்கம் என்று போற்றப்பட்டது.பின்னாளில் புகழ்நிறுவிய பேராசிரியர்கள் சுப.அண்ணாமலை,தமிழண்ணல்,கதிர்.மகாதேவன்,ஔவை நடராசன் முதலியோர் அவர் காலத்தில் இளம் விரிவுரையாளர்களாகப் பணியாற்றி அவரால் உருவாக்கப்பட்டவர்களே. இன்றைய நாடறிந்த கவிஞர்கள் மீரா,நா.காமராசு,அபிபுல்லா,இன்குலாபு,மு.மேத்தா முதலியோர் அன்று அவர் மாணவர்களாகத் திகழ்ந்தவர்கள்.மதுரை மகால் நகராட்சி உயர்நிலைப் பள்ளியில் வாரம் தோறும் திருக்குறள் வகுப்பு நடத்தினார்.பிறரும் அவ்வாறு வகுப்பு நடத்தத் தூண்டுதலாக விளங்கினார்மீனாட்சி கோவில் வடக்காடி வீதியிலும் அவர் திருக்குறள் வகுப்பு நடத்தியுள்ளார்,.

திருக்குறளைப் பரப்புதற்காக வார விடுமுறை நாள்களில் பட்டிதொட்டியெங்கும் சென்று குறள் பொழிவுகள் நிகழ்த்தினார்.இன்னம் விரிந்து பரந்த அளவில் குறள் சென்று சேர்தற்காக "குறள்நெறி" என்னும் திங்களிருமுறை இதழை 1963-ஆம் ஆண்டு முதல் நடத்தினார்.அதற்கு முன்னதாக அவரும் புதுக்கோட்டை அண்ணலா பு.அ.சுப்பிரமணியனாரும் "குறள்நெறியை'த் தனிச்சுற்று இதழாகப் பல ஆண்டுகள் நடத்திவந்தமையே இந்த இதழ் தோன்ற ஊக்கஊற்றாகத் திகழ்ந்தது என்பதையும் குறிப்பிடுதல் இவ் வரலாற்றை முழுமையாக்கும்.

"Kuralneri—The way of life" என்னும் தலைப்பைத் தாங்கிய ஆங்கில இதழையும் திங்களிருமுறையாக நடத்திவந்தார்.இந்தி எதிர்ப்புப் போராட்டத்தால் தமது பணியை இழந்தசூழலில் தமது குறள்நெறி இதழை நாளிதழாகவே நடத்தவும் துணிந்தார்.இவ்வளையும்

இங்குக் கூறுவதற்குக் காரணம் அவர் மதுரையில் வாழ்ந்த காலம் தமிழியக்க வரலாற்றில் அவர் புதிய வரலாறு படைத்தற்கு மட்டுமின்றி திருக்குறள்பணியிலும் னுத்திரை பதித்த காலமாகத் திகழ்ந்தது என்பதனைச் சுட்டிக்காட்டவே எனலாம்.

இலக்குவனாரின் திருக்குறள்பணி அவர் திருவையாறு அரசர் கல்லூரியில் புலவர் வகுப்பு மாணவராகத் திகழ்ந்த பொழுதிலேயே தொடங்கிவிட்டது.அவர் வித்துவான் இடைநிலை வகுப்பு மாணவராக விளங்கிய காலத்தில் கல்லூரி விடுமுறை நாள்களில் தமது சொந்த ஊருக்குச் செல்வதை விடுத்து பல்வேரு சிற்றூர்களுக்குச் சென்உ குறள்வகுப்பு நடத்தினார்.அவருடன் துணையாகச் சென்று அத் தொண்டில் தங்களையும் ஈடுபடுத்திக் கொண்டவர்கள் (பின்னாளில் கல்லூரி முதல்வராகப் பணிபுரிந்த) அ.கிருட்டிணமூர்த்தி,முருகு இலக்குவன் என்னும் அவரது கல்லூரித்தோழர்கள் ஆவர்.

படிப்பு முடித்துப் பள்ளியில் ஆசிரியப்பணியில் ஈடுபட்டபிம் ஆண்டு தோறும் தாம் பணியாற்றிய பள்ளியில், பின்னர் கல்லூரியில் என்று இப் பழக்கம் இறுதிவரை தொடர்ந்தது நாகர்கோவிலில் தெ.தி.இந்துக்கல்லூரியில் முதல்வராகப் பொறுப்பு ஏற்றிருந்தபோது. 1957-ஆம் ஆண்டு திருவள்ளுவர் திருநாளைத் தமிழுலகு பாராட்டும்வண்ணம் சிறப்பாக நடத்தினார்.யானையின் மேல் திருக்குறள் நூலை இருத்தி முன்னே தேசிய மாணவர்படை அணிவகுத்துவரவும் யானையின் பின்னே நகர்ச் சான்றோர்கள், பேராசிரியர்கள், மாணவர்கள் தொடர்ந்துசெல்லவும் சென்ற அந்த ஊர்வலம் தமிழ்நாட்டு வரலாற்றில் இன்றுவரை காண இயலாவண்ணம் தனித்தன்மை கொண்டதாகும்.இவ்வாறு சிறப்பாகத் திருவள்ளுவர் திருநாள் கொண்டாடுவதன் மூலம் மாணவர்கள் மட்டுமின்றிப் பெற்றோரும் மற்றோரும் திருக்குறளின் பெருமையை உணர வழிவகுக்கும் என்பது இலக்குவனாரின் கருத்தாகும்.

பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியார் அவர்கள் தமிழ்நாட்டில் திருக்குறளை மக்கள் மன்றத்தில் பரப்பப் பெருந்துணை புரிந்தார்.

“தமிழ் இலக்கியங்களில் பெரிதும் பரப்பப்படவேண்டிய ஒரே நீதிநூல்,அறநூல்,அறிவுநூல் திருக்குறள் தான் எனத் தந்தை பெரியார் கருதியே அதனை 1949-இல் (15,16/01/1949--இருநாள்கள்) தனி மாநாடு நடத்தி,மிகப் பெரும் தமிழறிஞர்களான நாவலர் ச.சோமசுந்தர பாரதியார், தமிழ்த்தென்றல் திரு.வி.க.,பன்மொழிப்புலவர் தெ.பொ.மீனாட்சிசுந்தரனார், கா.அப்பாதுரையார்,ஏ.சக்கரவர்த்தி நயினார், கந்தசாமிப் புலவர்,திருக்குறள் வி.முனுசாமி போன்ற அறிஞர் பெருமக்களை அழைத்து இருநாட்கள் சென்னையில் குறள்மழை பொழியச்செய்த பின்பே திருக்குறள் புலவர்கள் வீட்டுப் புத்தக அலமாரிக்குள்ளே இருந்து

பொதுமக்கள் மன்றத்தை அடைந்து,குறள் கருத்துப் பரவி ஒளிவீசத் தொடங்கியது.” (பெரியார் களஞ்சியம்-தொகுதி-37 பக்.iv)என்னும் கருத்து இங்குக் குறிப்பிடத்தக்கது.

இந்த மாநாட்டில் பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்களும் பங்கேற்றார்.

“விருதுநகர் செந்தில்குமாரநாடார் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்கள் குறள் மொழிப்படி திருக்குறளை அனைத்துலகுக்கும் எடுத்தோதி அதற்குச் சிறப்பை உண்டாக்கித் தர இப் பெரியார் ஒருவராலேயே முடியும் என்பதை உணர்ந்தே இயற்கையானது திருக்குறளை பெரியார் அவர்களிடம் ஒப்படைத்திருக்கின்றதென்றும், இயற்கை கூட வள்ளுவர் கட்டளைப்படியே நடக்கிறதென்பது வள்ளுவர்க்குப் பெருமை தருவதாகும்" என்று கூறியதாகவும் "அரசியல் நெறியை எடுத்துக் கூறும்போது கூட, வள்ளுவர் அறம் வழுவாது உயர் நெறிகளை எடுத்தோதி இருக்கிறார் என்றும், இன்றைய சர்க்கார் உண்மையிலேயே மதச்சார்பற்ற சர்க்காராக வேண்டுமானால், திருக்குறள் அதற்கேற்ற வழிகாட்டி என்றும் கூறி பழந்தமிழனான வள்ளுவன், புரட்சித் தமிழ் மகனான வள்ளுவன், சீர்திருத்தக்காரனான வள்ளுவன் எழுதிய குறளை யாவரும் படித்து அதன்படி நடந்து இன்ப வாழ்வு வாழ்தல் வேண்டும்" (பெரியார் களஞ்சியம்-பக்.334) என்று பேசியதாகவும் தெரிகிறது.

இம் மாநாட்டில் கலந்துகொண்டதுடன் நில்லாது தாம் பணியாற்றிவந்த விருதுநகரில் பேராசிரியர் சி.இலக்குவனார் மிகப் பெரிய திருக்குறள் மாநாடு நடத்தியுள்ளார்.அவர் விருதுநகரில் திருவள்ளுவர் மன்றம் நிறுவி அதன் செயலராகப் பொறுப்பேற்றிருந்தார் கல்லூரித் தாளாளர் வே.வ.இராமசாமி அவர்கள் அதன் தலைவராகத் திகழ்ந்தார்.

இம் மாநாட்டில் நிறைவேற்றிய தீர்மானங்கள் “விருதுநகர் குறள் மாநாட்டுத் தீர்மானங்கள்”என்னும் தலைப்பில் பதினாறாம் இயலாக வெளிவந்துள்ளன.(பெரியார் களஞ்சியம்-தொகுதி-37பக்.102-103)இவை இங்குக் குறிப்பிடத்தக்கவை.

விருதுநகர் குறள் மாநாட்டுத் தீர்மானங்கள்

1) இப்பொழுதுள்ள கல்வித்திட்டத்தில் முதல் உயர்நிலைவகுப்பு (பாரம்) தொடங்கி இளங்கலைஞர்(பி.ஏ.)வகுப்பு முடிய திருக்குறள் முழுதும் படித்து முடிக்கும் வகையில் படிப்படியாகப் பாடம் வகுக்குமாறும் அதற்கெனத் தனி வினாத்தாள் (சேக்சுபியர் போல)ஏர்படுத்துமாறும் கல்வித்துறை அதிகாரிகளையும் பல்கலைக்கழகங்களையும் இம் மாநாடு வேண்டுகின்றது.

2) ஆட்சிமன்றங்களில் உறுப்பினராக வருவோர்க்கும் கல்விக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் தலைவராக வருவோர்க்குரிய தகுதிகளில் திருக்குறள் புலமையும் ஒன்றாக வற்புறுத்துமாறு ஆட்சியாளரை வேண்டுகிறது.

3) திருவள்ளுவர் விழாவுக்கென ஒரு நாளைக் குறிப்பிட்டு அரசு விடுமுறை நாளாக்கி அந் நாளை நாடெங்கும் கொண்டாடுவதற்குரிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டுமென்று அரசாங்கத்தாரை வேண்டுகிறது.

4)திருக்குறள் பற்றிய விழாக்கள் மாநாடுகள் முதலியவற்றின் நிகழ்ச்சிகளை அறிவிக்குமாறும் ஒலிபரப்புமாறும் திருச்சி வானொலி நிலையத்தாரைக் கேட்டுக்கொள்கிறது.

இந்த் நான்கு தீர்மானங்களும் விருதுநகர்த் திருவள்ளுவர் மன்றத்தாரால் நடத்தப்பட்ட திருக்குறள் மாநாட்டில் ஒருமனதாக நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் மட்டுமன்று.மாநாட்டை முன்னின்று நடத்திய பேராசிரியர் சி.இலக்குவனாரின் கனவுகள் என்றே கூறலாம்.

காலம் அவற்றை நிறைவேற்றிவைத்துள்ளது,

காங்கிரசு ஆட்சிக்காலத்தில் தமிழ்நாட்டு அரசு வைகாசி அனுசம் நாளைத் திருவள்ளுவர் நாளாக அறிவித்தது.

அறிஞர் அண்ணாவின் ஆட்சி அமைந்ததும் தை இரண்டாம் நாள் திருவள்ளுவர் திருநாள் எனத் தமிழறிஞர் வேண்டுகோளுக்கு இணங்க அறிவிக்கப்பட்டதுடன் தை 1 முதல் திருவள்ளுவர் தொடர் ஆண்டு கணக்கிடப்பட்டு நடைமுறையாயிற்று. தை இரண்டாம் நாள் திருவள்ளுவர் திருநாள்" அரசு விடுமுறையாயிற்று.

"திருவள்ளுவர் திருநாள்" என்னும் பண்டிகையை தமிழர் யாவரும் கொண்டாடவேண்டும் என்ற தீர்மானத்தை முன்மொழிந்து 1935 சனவரி 17ஆம் தேதி, இதற்கான கால்கோள் இட்டவர்கள், காழி சிவகண்ணுசாமிப்பிள்ளையும், திரு.வ.சுப்பையாவும்.அவர்களின் முயற்சியில் "திருவள்ளுவர் திருநாட் கழகம்" எனும் கழகமொன்று அமைக்கப்பட்டு, தமிழகம், அயல் மாநிலங்கள், அயல் நாடுகளில் அதைக் கொண்டாடுவதென்றும் முடிவெடுக்கப்பட்டது.

இந்த நெடிய வரலாறும் திருவள்ளுவர் ஆண்டு,தமிழ்ப்புத்தாண்டு தொடர்பான கருத்துமுரண்களும் இங்கு விரிக்கிற்பெருகும்.

"திருவள்ளுவர் திருநாள் தொடர்பான முன்மொழிவுகளிலும் முயற்சிகளிலும் முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம்,ஈழத்தமிழறிஞர் கா.பொ.இரத்தினம் ஆகியோரின் முயற்சிகள் பதிவாயின.ஆனால் பேராசிரியர் சி.இலக்குவனாரின் முயற்சி ஆவணப்படுத்தப்படவில்லை.தமது போர்ப்பண்பால் பல்வேறு நிறுவனங்களுக்கு ஊரூராக அவர் அலைக்கழிக்கப்பட்டமையும் விருதுநகர்த் திருவள்ளுவர் மன்றத்தின் மூலம் அவர் மேற்கொண்ட முயற்சிகள் வரலாற்றில் பதிவுபெறாமல் போயினமையுமே காரணங்கள் எனலாம்.

ஆறாம் வகுப்பு முதல் பட்டப்படிப்பு வரை திருக்குறள் முழுமையும் மாணவப்படுவத்தில் அனைவரும் கற்கும் நிலை வரவேண்டும் என்னும் அவர் கனவு அக் காலத்திலேயே அவினாசிலிங்கம் அவர்கள் கல்வியமைச்சராகப் பொறுப்பேற்றபொழுது தொடக்கம் பெற்றது.

தமிழ்நாட்டு உயர்நீதிமன்றத்தில் மாண்பமை நடுவர் ஆர்.மகாதேவன் மாணவர்களை நல்வழிப்படுத்த வரும் கல்வியாண்டு முதல் திருக்குறளை முழுமையாகக் கொண்ட பாடத்திட்டத்தை நடைமுறைபடுத்த வேண்டுமெனப் பிறப்பித்த (27/4/2016) ஆணை இலக்குவனாரின் கனவை நனவாக்கியது.

மாணவர்களை நல்வழிப்படுத்தும் விதமாக வரும் கல்வியாண்டு முதல் 6 முதல் 12ம் வகுப்பு வரை திருக்குறளின் இன்பத்துபால் நீங்கலாக அறத்துப்பால் மற்றும் பொருட்பாலில் 108 அதிகாரங்களில் உள்ள அனைத்து குறள்களையும் பாடத்திட்டத்தில் சேர்த்து கற்பிக்க வேண்டும். இதற்கென தனியாக பாடத்திட்டத்தை உருவாக்க வேண்டும் என நடுவர் பரிந்துரைத்திருந்தார்.

அதன்விளைவாகப் பள்ளிகளில் குறள்பரப்பும் உயரிய தொண்டினை ஆசிரியர்கள் ஆற்றிவருகின்றனர்.

மலேசியாவின் பள்ளிகளில் திருக்குறளைப் பாடத்திட்டமாக சேர்க்க அந்நாட்டு கல்வித்துறையால் முடிவு செய்யப்பட்டுள்ளமை மற்றொரு திருப்புமையமாகும்.

'வரும் கல்வியாண்டு முதல், 254 அரசு பள்ளிகளில் திருக்குறளை பாடத்திட்டமாக அமைக்க உள்ளோம். ஆரம்பப் பள்ளிகள் மட்டுமின்றி உயர்நிலைப் பள்ளிகள் மற்றும் இரண்டு பல்கலைக்கழகங்களில் திருக்குறளை பாடத்திட்டமாகச் சேர்க்க உள்ளோம்.' என மலேசிய நாட்டின் கல்வித்துறை இணை அமைச்சர் கமலநாதன் (15/3/2015) தெரிவித்துள்ளமை இனித் தமிழ்கூறு நல்லுலகெங்கும் குறள் பரவவேண்டுமென்னும் இலக்குவனாரின் கனவு நனவாகிய மகிழ்ச்சியை நல்குகிறது.

எல்லாரும் இந்நாட்டு அரசர், அமைச்சர் யார்?, திருக்குறள் எளிய பொழிப்புரை, வள்ளுவர் கண்ட இல்லறம் அல்லது காதல் வாழ்க்கை, வள்ளுவர் வகுத்த அரசியல் என்னும் தலைப்பில் குறளைப் பற்றிய பல நூல்களைப் பரைத்த இலக்குவனாரின் முதல்நூல் "அமைச்சர் யார்"என்னும் தலைப்பிலான நூலாகும்.திருக்குறளின் அமைச்சியலை இக் காலச்சூழலுக்கேற்ப எழுதப்பட்ட இந் நூல் வெளிவந்ததும்(1949) இதனைப் படிக்காமலேயே சிலர் இதனைப் பற்றிய தவறான முடிவுக்கு வந்துள்ளனர்.அப்போது நடந்துவரும் ஆட்சியைச் சார்ந்த அமைச்சர்களை இலக்குவனார் இந் நூலில் குறைகூறியுள்ளார் என்னும் தவறான

முடிவுகொண்டு அப்போதிருந்த சென்னை மாகாண முதலமைச்சருக்குக் கம்பிச்செய்தி அனுப்பியுள்ளனர்.

இலக்குவனார் கல்லூரிப்பணியிலிருந்துகொண்டே அரசியலில் ஈடுபட்டுவருகிறார். அமைச்சர்களைத் திறனாய்வு செய்து ஒரு நூல் வெளியிடும் அளவு துணிந்து பிழைசெய்கிறார்.அவரை உடனே பதவியிலிருந்து நீக்கவேண்டும்.” என்பதே அவர்கள் விடுத்த கம்பிச்செய்தி.

அப்போது முதலமைச்சராயிருந்த குமாரசாமி ராசா அவர்கள் உடனே இலக்குவனாருக்கு இரண்டு ரூபாயை விரைவுப்பணவிடை (T.M.O.) மூலம் அனுப்பி அவரது நூலை உடனே தமக்கு (முதலமைச்சருக்கு) அனுப்புமாறு கேட்டிருந்தார்.இலக்குவனாரும் அனுப்பிவிட்டார்.

இரண்டு நாள்கள் கழித்து முதலமைச்சரிடமிருந்து இலக்குவனாருக்கு மடல் வந்தது.”உங்கள் நூலை முழுமையாகப் படித்தேன்.மிகச் சுவையாகவும் எளிமையாகவும் திருக்குறள் அமைச்சியலை அறிமுகப்படுத்தியுள்ளீர்கள் .பாராட்டுகள்.”என்று முதலமைச்சர் எழுதியிருந்தார்.

தமிழ்நாட்டு வரலாற்றிலே ஒரு நூல் வெளிவந்தவுடனேயே ஒரு முதலமைச்சர் விரைவுப்பணவிடை அனுப்பிப்படித்த நூல்”அமைச்சர் யார்?” எம்பது இலக்குவனாரின் குறள்பரப்பும் முயற்சிக்குக் கிடைத்த வெற்றி எனக் கூறவேண்டும்.

இந் நூலுக்குத் தமிழ்ப்பெரியார் திரு.வி.க.முகவுரை வழங்கியுள்ளார்.திருக்குறளுக்கு இக் காலத்தில் புதுப்புது உரைகள் தோன்றிவருகின்றன.அவற்றுல் பொருந்திவருவன சிலவே.அச் சிலவற்றுள் ஒன்று இலக்குவனார் உரை என அவர் பாராட்டியுள்ளார்.இந் நூலுக்குக் கருத்துரை வழங்கிய குத்தூசி குருசாமி திருக்குறள் இங்ஙனம் புதுமையான முறையில் தொகுத்து அறிமுகப்படுத்தப்படுவது பாராட்டத்தக்கது எனக் கூறியுள்ளார்.

அமைச்சியலின் அதிகாரங்கள் வைப்புமுறை மாற்றப்பட்டு .1.அமைச்சு2.சொல்வன்மை3.அவையறிதல்4.அவையஞ்சாமை5.குறிப்பறிதல்

6.வினைத்தூய்மை7.வினைத்திட்பம்8.வினைசெயல்வகை9.தூது

10.மன்னரைச்சேர்ந்தொழுகுதல்

என்றிருந்தால் பொருத்தமாக் இருக்கும் என இலக்குவனார் ஆய்ந்துரைத்துள்ளார்.

இலக்குவனாரின் உரையையும் திருக்குறள்விளக்கநூல்களையும் ஆய்வுசெய்து புதுவைத் தமிழமல்லன் பினவருமாறு குறிப்பிட்டுள்ளார்.

“இவ்வாறாக இலக்குவனாரின் திருக்குறள் உரை பலவகைகளிலும் சிறந்து விளங்குகிறது.திருக்குறள் உரையை இலக்குவனார் பல்துறைப் புலமையோடு எழுதியிருக்கிறார்.பரிமேலழகர்உரையைச் சில இடங்களில் மறுத்திருக்கிறார். இலக்கணத்தின்துணையோடு பல குறட்பாக்களுக்கு விளக்கம் சொல்லியிருக்கிறார். திருக்குறளைஇழிவுபடுத்தும் முயற்சியை அவர் தடுத்திருக்கிறார். தனித்தமிழ்ச்சொற்களைப்பயன்படுத்துவதும்சொல்லாய்வால் அதை உறுதிப்படுத்துவதும் இப்பணியில் நிகழ்ந்திருக்கின்றன. முறைவைப்பைச் சில இடங்களில் இலக்குவனார் மாற்றியிருக்கிறார்.”

““திருக்குறளுக்கு உரை எழுதிய அவர் வெறும் உரையாசிரியராக மட்டும் தோன்றவில்லை. மன்பதைநலத்தில் சிறந்த அக்கறை கொண்டவராகவும்காணப்படுகிறார். அதற்காக அவர் துணிச்சலாகத் தம் கருத்துக்களை ஆங்காங்கு வெளிப்படுத்தத் தவறவில்லை.”என்னும் தமிழமல்லனின் கருத்து இலக்குவனாரின் குறளாய்வுக்குப் பொருத்தமான மதிப்பீடாக விளங்குகிறது.

இலக்குவனாரின் திருக்குறள் ஆய்வு அணுகுமுறைகளாக இ.திருவள்ளுவன் கூறும் முடிபுகளைக் கூறி அவற்றின் வழி அவரது நூல்களைக் கற்றல் நமக்குக் குறளில் மேலும் ஆய்தற்குரிய வழிமுறைகளை விளக்கும்

1. எளிமை

2. நுண்மை

3. பகுத்தறிவுப் பார்வை

4. தமிழ் நெறிப் பின்புலம்

5. பெண்ணுரிமை பேணல்

6. உரையாளர் தவறுகளை நயம்பட மறுத்தல்

7. ஒப்புமைக் கருத்துகளைச் சுட்டுதல்

8. எக்காலத்திற்கும் ஏற்ற உரை

9. தனியர் தாக்குதல் இன்மை

10.கருத்தில் வன்மை

11.நடையில் மென்மை

12.வகுத்தும் தொகுத்தும் விவரித்தல்

13.சொல்விளக்கமும் இலக்கணக் குறிப்பும்

14. அறிவியல்பார்வை

15. புரட்சி எண்ணம்

இவையனைத்தையும் விளக்கிப் பின்னர் விரிவான நூல் எழுதுவேன்.அதற்குரிய தோற்றுவாயாக இந்த உரைவழங்கும் வாய்ப்பளித்தமைக்கு நன்றி.

குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்








குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

மின்னிதழ்:47 கார்த்திகை-6 -தி.பி.2053 நவம்பர்-22- பொ.ஆ.2022




நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

# அறிஞர் ஔவை நடராசனார் நினைவிதழ்








வையம் முழுதும் வண்டமிழ் நலமெலாம்
பரப்பிய பெருமகன் எங்கே! எங்கே!





பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்

இணையாசிரியர்:தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

## நானிலம் புகழும்  நாவரசர் ஔவை நடராசன்

-- இலக்குவனார் திருவள்ளுவன்

தமிழ், ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலும் பேச்சாற்றலும் எழுத்தாற்றலும் மிக்க சிலருள் ஒருவர் அறிஞர் முதுமுனைவர் ஔவை து.நடராசன்; எந்தத் தலைப்பாக இருந்தாலும் கையில் எந்தக் குறிப்புமின்றிச் சிறப்பாகப் பேசும் சீரிய சிந்தனையாளர்; பட்டிமன்றங்கள், பொது நிகழ்ச்சிகள் வாயிலாக நாடறிந்த நல்லறிஞராகத் திகழ்பவர். நகைச்சுவையாகப் பேசும் பலரும் அந்தந்த நேரத்திற்கான ஆரவாரத் துணுக்குகளை உதிர்ப்பவர்களாக உள்ளனர். அவ்வாறில்லாமல், நகைச்சுவையாக, அதே நேரம் அறிவார்ந்த கருத்துகளைப் பேசும் நாவரசர். இவரது உரை வளமும் குரல் வளமும் கேட்டவர்களை இவர் பக்கம் பிணைத்துப் புகழ் ஏணியில் இவரை ஏற்றுகின்றன. உரைவேந்தர் ஔவை சு.துரைசாமி அவர்களின் உரை வளம் இவரின் சொல்வளமாக மாறித் தமிழ் உலகை மகிழ்வித்தது.

குடும்பம்:

தமிழறிஞர் உரைவேந்தர் ஔவை துரைசாமி – உலோகாம்பாள் இணையரின் திருமகனாக சித்திரை 32. 1967 / 24.04.1936 இல் இன்றைய  திருவண்ணாமலை (அன்றைய வடஆர்க்காடு) மாவட்டத்திலுள்ள செய்யாறு என்னும் ஊரில் பிறந்தார். தமக்கை, மூன்று தங்கையர், நான்கு தம்பியர் உடையவர். மனைவி குழந்தை நல மருத்துவர் தாரா நடராசன் அரசின் மருத்துவக் கல்லூரித் தலைமையாளராக( Dean)ப் பணி நிறைவு பெற்றவர். மரு. கண்ணன் நடராசன், முனைவர் அருள் நடராசன், மருத்துவர் பரதன் நடராசன்  என்னும் நன்மக்கள் மூவர் இவ்விணையருக்கு உள்ளனர்.

கல்வி

தமிழில் முதுகலைப் பட்டம்[B.A.Hons]பச்சையப்பன் கல்லூரி1955), இடைநிலைக் கல்வி [ Intermediate] (மதுரைத் தியாகராசர்  கல்லூரி) கற்றவர். ." திருக்கோவையார் ” என்னும் தலைப்பில் ஆய்வு செய்து,  ' ஆய்வியல் நிறைஞர் ' பட்டம் ( 1965 ) பெற்றார். அதன் பின்னர் “ சங்கக் காலப் பெண்பாற் புலவர்கள்  ” என்னும் பொருளில் ஆய்வு செய்து முனைவர் பட்டம் ( 1974 ) பெற்றார்.

இவர் அளித்துள்ள ‘சங்க இலக்கியத்தில் பெயரிடு மரபு’ என்னும் தலைப்பில் இள முனைவர் பட்டத்திற்கான ஆய்வேடும்(1958) ‘சங்க காலப் புலமைச் செவ்வியர்’ என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்கான ஆய்வேடும் இவரின் சங்க இலக்கிய ஈடுபாட்டையும் ஆய்வுப் புலமையையும் உணர்த்துவன.

நாநலம்

நாநலம் என்னும் நலனுடைமை இவருக்கு மாணவப்பருவத்திலேயே வாய்த்தது. அதனால் பேச்சுப் போட்டிகளில் பங்கேற்கும் வகையில்  பல்வேறு கல்லூரிகளுக்கும் செல்லும்

வாய்ப்பைப் பெற்றார். இளைஞர் கூட்டம் இவரால் ஈர்க்கப்பட்டு இவரை மொய்த்தன. படித்தபின்பு பணியாற்றும் பொழுதும் இவரைச் சுற்றி இளைஞர் கூட்டம் இருந்தது. அல்லது இளைஞர்கள் இருந்த இடத்தில் இவர் இருந்தார். அந்தப் பேச்சுத்திறமைதான் இவரைக் கலைஞர் கருணாநிதி, புரட்சித்தலைவர் எம்.சி.ராமச்சந்திரன் முதலானவர்களின் அன்பிற்கு ஆட்படுத்த வைத்தது. இதுவே உரிய காலத்தில் மும்முதல்வர்களால் சிறப்பு மிக்கப் பணிப்பொறுப்பு ஏற்கும் வாய்ப்புகளை நல்கியது.

பணி

மதுரையில் உள்ள தியாகராசர் கல்லூரியில் தமிழ்ப்பயிற்றுநராக இவரது பணி வாழ்க்கை தொடங்கியது. பின் தஞ்சாவூரிலுள்ள மன்னர் சரபோசி கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றினார். ஆசிரியர்கள் வகுப்பு எடுக்கும் பொழுது மாணாக்கர்கள்பலர் வெளியே செல்வது வழக்கமாக உள்ளது. ஆனால், இவர் வகுப்பு எடுக்கும் பொழுது பிற வகுப்புகளில் பயிலும் மாணாக்கர்களும் இவர் பாட உரையைக் கேட்க வந்து நெருக்கியடித்து உட்கார்ந்து கொள்வார்களாம். அவ்வாறு பாடங்களையும் நகைச்சுவையாகவும் பிறரை ஈர்க்கும் வகையிலும் விளக்கியுள்ளார்.

அடுத்துப் புதுதில்லியில் அனைத்து இந்திய வானொலியில் செய்தி வாசிப்பாளர், அறிவிப்பாளர் எனப் பணியாற்றி வானலை வழியும் புகழ் பெற்றார். அங்கிருந்து விலகிய பின்னர், காந்தி-இராமலிங்கர் பணி மன்றச் செயலாளராகப் பணியாற்றி அருட்பணிகளையும் தமிழ்ச்சிறப்புகளையும் பரப்புவதில் ஈடுபட்டார். இப்பணி அவருக்கு எண்ணற்ற ஆன்றோர்கள் அறிஞர்களின் தொடர்பை ஏற்படுத்தித் தந்தது.

மக்களைக் கவரும் பேச்சாற்றல் மிக்க இவர் தமிழகஅரசில் பணியாற்ற வேண்டும் என விரும்பினார். அதே எண்ணங் கொண்டிருந்த அப்போதைய முதல்வர் கலைஞர் மு.கருணாநிதி இவரைச் செய்தி மக்கள் தொடர்புத் துறையில் துணை இயக்குநராகப் பணியமர்த்தினார். பின்னர் மொழிபெயர்ப்புத் துறை இயக்குநரானார்(1975-84). இந்திய ஆட்சிப்பணித் துறையைச் சேர்ந்தவர்கள் மட்டும் பணியாற்றும் அரசு செயலர் பணியிடத்தில் அப்போதைய முதல்வர்  புரட்சித்தலைவர் எம்.சி.இராமச்சந்திரன் இவரை அமர்த்தி,  தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத்துறைச் செயலாளராகப் பணியாற்றச் செய்தார்(1984-92). இவருக்கு முன்னரும் பின்னரும் இ.ஆ.ப. அல்லாத எவரும் அரசு செயலராகப் பணியாற்றியதில்லை என்னும் சிறப்பு இவருக்குரியது. அதிகாரப் பகட்டு இல்லாமல் எளிமையாய் யாவருடனும் பழகும் நேர்த்தியும் அடுத்தவர் கருத்துகளுக்குச் செவிமடுத்து அவர்களை மதிக்கும் பண்பும் எந்நாளும் எப்பொழுதும் இவர் அறையில் பலரும் வந்து செல்லும் நிலையை ஏற்படுத்தியது.

பின்னர் அப்போதைய முதல்வர் புரட்சித்தலைவி செ.செயலலிதாவினால் தஞ்சாவூர், தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் பொறுப்பினை (1992 திசம்பர் 16ஆம் நாள் முதல் 1995

திசம்பர் 15ஆம் நாள் வரை) வகித்தார். 2014 ஆம் ஆண்டில் செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தில் துணைத்தலைவராக  இருந்தார். 2015 ஆம் ஆண்டு முதல் சென்னையிலுள்ள பாரத்து பல்கலைக்கழகத்தின் வேந்தராக இருந்தார்.

வழிகாட்டி

பல்கலைக்கழக மாணவர்களுக்கு ஆய்வு வழிகாட்டியாகச் செயல்பட்டிருக்கிறார். உலகின் பல்கலைக்கழகங்கள் பலவற்றில் நடைபெற்ற மாநாடுகளில் பங்கேற்றுச் சிறப்பித்திருக்கிறார். 1982-இல் சான்பிரான்சிசுகோவில் நடைபெற்ற அனைத்து நாடுகளின் கவிஞர்கள் மாநாட்டில் தமிழகச் சார்பாளராகப் பங்கேற்றுச் சிறப்பித்திருக்கிறார். மதுரையில் நடைபெற்ற ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டின் செயலாளராகச் சிறப்பாகப் பணியாற்றியுள்ளார். தென்கிழக்கு ஆசிய மாநாட்டில் மருத்துவத் தொழில்நுட்ப சொல்லாக்கக் குழுத் துணைத்தலைவராகப் பங்கேற்று சிறப்பித்திருக்கிறார். இவ்வாறு பல்வேறு பொறுப்புகள் மூலம் திறம்படப் பணியாற்றித் தமிழ்த்தொண்டாற்றி உள்ளார். இவர் பொறுப்பிலிருந்தும் வாளாவிருக்க வேண்டிய சூழல் செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின் துணைத்தலைவராக  இருந்த பொழுது ஏற்பட்டது. ஆனால், பிற எல்லா நிலைகளிலும் இவரது சுறுசுறுப்பும் விரிந்து பரந்த அறிவும் தமிழுலகு தழைக்கவும் தமிழன்பர்கள் உயரவும் உதவின என்பதில் ஐயமில்லை.

விருதுகள்

அரசுகளாலும் அமைப்புகளாலும் இவருக்குப் பல்வேறு விருதுகள் வழங்கப்பெற்றுள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை வருமாறு

தமிழக அரசின் ‘கலைமாமணி’ விருது

இந்திய ஒன்றிய அரசின் ‘தாமரைத்திரு’(பத்மசிறீ) விருது(2011)

இலங்கை, கம்பர் கழகத்தின் ‘‘தன்னேரில்லாத தமிழ் மகன்’ விருது

தமிழக அரசின் 2009ஆம் ஆண்டிற்கான ‘அறிஞர் அண்ணா ‘விருது

கொழும்புக் கம்பன் கழகத்தின் ‘கம்பன் புகழ்’ விருது (2012)

தினத்தந்தி நாளிதழின் ‘சி. பா. ஆதித்தனார் மூத்த தமிழறிஞர்’ விருது. (2014)

நூல்கள்

நூற்றுக்கணக்கான மாநாடுகளிலும் கருத்தரங்கங்களிலும் இவர் ஆற்றியுள்ள தொடக்கவுரைகள், மையக் கருத்துரைகள், சிறப்புரைகள் முதலியன இலக்கியச் சிறப்பு மிக்கன. ஆங்கிலத்திலும், தமிழிலும்  ஆய்வுக் கட்டுரைகளை  எழுதியுள்ளார். ஒளவை நடராசனார்க்கு இருக்கும் அறிவு வளத்திற்கு எண்ணற்ற நூல்களை எழுதியிருக்கலாம். இருந்தாலும் இவரது  பணிச்சூழலும் இலக்கியச் சூழலும் அதற்கான வாய்ப்புகளை

வழங்கவில்லை. எனினும் இவரது சொற்பொழிவுகள் சில நூல்வடிவம் பெற்றுள்ளன. அவை வருமாறு:

வாழ்விக்க வந்த வள்ளலார்
பேரறிஞர் அண்ணா
கம்பர் காட்சி
கம்பர் விருந்து
திருப்பாவை விளக்கம்
திருவெம்பாவை விளக்கம்
சங்க இலக்கியப் பெண்பாற் புலவர்கள்
அருளுக்கு ஔவை சொன்னது
Self Confidence
Saying of Stalwart
Art Panaroma of Tamils
Thirukkovaiyar

மொழிபெயர்ப்புத் திறன் .

மொழிபெயர்ப்பிலும் சொல்லாக்கங்களிலும் இவரது பணி சிறப்பானதாகும். அரசின் ஆணைய அறிக்கைகள் முதலானவற்றில் மொழிபெயர்ப்பு என்ற பெயரில் நீண்ட தொடர்களைப் பயன்படுத்திப் படிப்போரை மிரளச் செய்து கொண்டிருந்தனர். அப்போக்கை முற்றிலும் மாற்றியமைத்து, எளிய சிறிய சொற்கள் மூலம் மொழிபெயர்ப்புகளை வழங்கித் தமிழின் சிறப்பைப் புரியச் செய்தார்.

பணிப்பாங்கும் பழகும் பண்பும்

இவரது செயல் திறனும் சொற்றிறனும் புரட்சித்தலைவர் எம்ஞ்சிஇராமச்சந்திரன், முத்தமிழறிஞர் கலைஞர் மு.கருணாநிதி, புரட்சித் தலைவி செ.செயலலிதா ஆகிய மூன்று முதல்வர்களின் அன்பிற்கு இவரை ஆட்படச் செய்தன.

இவர் உயர்பணிகளில் இருந்த பொழுதிலும் இவரை நாடி இருபால் இளைஞர்களும் குழுமி இவரின் வழிகாட்டுதல்களைப் பெற்றனர். அதனால் இளம் பேச்சாளர்கள் பலரை உருவாக்கினார். அத்தகையோர்தான் பிற்காலத்தில் – அஃதாவது இக்காலத்தில் – மேடைப் பேச்சாளர்களாகவும் பட்டிமன்றப் பேச்சாளர்களாகவும் விளங்குகின்றனர். இன்றைக்கு மேடையில் முழங்கும் பலரும் இவரது வழிகாட்டுதலால் உருவானவர்களே!

எந்தப் பணியில் இருந்தாலும் கூட்டங்களுக்கான அழைப்பை ஏற்றுச் சொற்பொழிவாற்றச் செல்லத் தவறுவதில்லை. நகைச்சுவையுடனும் புதிய புதிய தகவல்களுடனும்  இலக்கியச் சுவையுடனும் ஆற்றும் இவரது உரைகள் சிறியோர் முதல் பெரியோர் வரை அனைத்துத் தரப்பாரையும் மகிழ்விக்கின்றன. பட்டிமன்றங்களில் இவர் பாங்குடன் ஆற்றும் உரைகள் துணுக்குத் தோரணங்களாக அமையாமல் இலக்கியத்தரம் வாய்ந்தனவாய் அமைந்தன.

கடந்த முப்பத்தைந்து ஆண்டுகளாக ஒய் எம் சி ஏ பட்டிமன்ற தலைவராகவும் ,ஶ்ரீராம் இலக்கிய கழகத்தின் செயலாளராகவும் ,எழுத்து அமைப்பின் அறங்காவலர் குழுத்தலைவராகவும் பணியாற்றும் சிறப்பினைப் பெற்றவர் ஆவார்.
பெருந்தொற்றுக் காலத்தில் அம்மையார் மருத்துவர் தாரா மறைந்தார்.நம்மோடு இவராவது இருக்கிறார் என்னும் நிறைவைக் காலம் நீடிக்கவிடவில்லை.
பிரிந்தோம் பேராசானை.வருத்தம் தீர்க்க வழியில்லை.காலத்தின் கொடுமை.
என்றும் அவர் புகழ் பரவுவோம்.இன்றமிழ் இலக்கியங்களைப் பயில்வோம்.பரப்புவோம்.
அஃதே அவருக்குச் செலுத்தும் நன்றிக்கடன்.ஓங்குக ஔவை புகழ்!

**அறைத்தோழர்**

அவ்வை நடராசன் 1956இல் பச்சையப்பனில் ஓர் அறைத்தோழராய் இருந்தவர்.
இன்று வரை இனிய நண்பர்
என்னிடம் பெருமதிப்பும் பேரன்பும் கொண்டவர்.அவர் இறப்பு பேரிழப்பு.அவர் குடும்ப த் தார் க்கு  ஆழ்ந்த இரங்கல்.அவர் ஆன்மா ஆண்டவன் அடி நீழல் உறைவதாக.

**சுப.திண்ணப்பன், சிங்கப்பூர்**

தமிழ் உலகின் பெருமிதமாய்த் திக்கெட்டும் தித்திக்கச் சொல் நடம் புரிந்த  வேந்தர் பெருந்தகை பேராசிரியர் ஔவை து. நடராசனார்  மறைவிற்கு எங்களின் ஆழ்ந்த  இரங்கல்...!
நெகிழ்ந்த நெஞ்சுடன்,

**பேரா ப மகாலிங்கம்**

**'கா அ ச ரகுநாயகன் அறக்கட்டளை'**

## ஔவை எங்கே?

-மறைமலை இலக்குவனார்





திறந்த வாயினராய் மயங்கிக் கேட்டுக்
கல்லார் பயனுறக் கற்றார் தெளிவுறச்
சந்தமும் நயமும் முந்திடும் கருத்தும்
செறிவு நிறைந்த சங்கச் சால்பும்
விரிவுறு காப்பிய வளமும் ஆய்ந்து
கவிஞரும் கற்பனை செய்திடா நயத்தைக்
கவியில் பொதிந்ததாய் விளக்கிக் கூறியே
செந்தமிழ்த் தேனை அள்ளித் தந்திடும்
வள்ளல் நெஞ்சினர்;சொல்வலை வீசியே
மக்களை ஈர்த்திடும் மந்திரச் சொல்லர்;
உள்ளங் கையில் உவர்க்கடல் ஏந்திய
குறுமுனி தோற்கவே தமிழ்க்கடல் முழுதும்
தம்நுனி நாக்கில் தாங்கிய பெருமகன்;
மலர்ந்த தாமரை முகத்தில் மிளிரும்
கருவிழி இரண்டின் குறுகுறுப் பார்வை
இதழ்களில் அகலா இனிய முறுவல்
அன்பில் நனைந்த பண்பார் மொழிகள்
என்றும் எமக்கே ஊக்க ஊற்றாய்
குன்றில் ஏற்றிய நற்றுணை அல்லவா?
கவிதைத் துறையின் சிகரம் தொட்டவர்
கல்விக் கடலின் ஆழம் கண்டவர்
நத்தை எழுத்திலும் நயம்பல காட்டிடும்



ஒய்.எம்.சி.ஏ.பட்டிமன்றத்தலைவர் ஔவை



வித்தகப் புலவர்; இத் தமிழ் நிலத்தில்
எத்தனை எத்தனை அறிஞர் இவரால்
ஊக்கமும் உயர்வும் தாக்கமும் பெற்றனர்
என்றே எண்ணிட எம்மால் இயலுமோ?
பொழிவுக் கலையால் பெருநிதி திரட்டும்
திறமிகு விரிவுரை விறல்மிகு பொழிஞர்;
அரசியல் துறையில் சிறப்புறும் வல்லார்;
கணக்குப் பார்த்தால் கடலும் தோற்குமே!
"ஔவை அய்யா எங்கள் ஆசான்
செவ்வைத் தமிழ்நலம் சீர்மிகு ஆளுமை
பெற்றிடும் பெருநெறி செப்பிய பெரியோர்;"
என்று சொல்லவே இன்றமிழ் நிலத்தில்
எண்ணற்றோரை உருவாக்கினரே!
வையம் முழுதும் வண்டமிழ் நலமெலாம்
பரப்பிய பெருமகன் எங்கே! எங்கே!
எப்படி எம்மைப் பிரிந்திடத் துணிந்தார்?
அதியன் கடனைத் தீர்க்கும் வண்ணம்
அமுதக் கனியாய்த் தமிழைச் சுவைத்திட
அள்ளித் தந்த ஔவை எங்கே?



தமிழகப் புலவர் குழுத் தலைவர் ஔவை &செயலாளர் கி.ஆ.பெ.வி.மணிமேகலை





இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

பெரியப்பா டாக்டர்.அவ்வை நடராசன் அவர்கள் திருவருணை கலைக் கல்லூரியில் முத்தமிழ் விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்த நிகழ்ச்சியின் புகைப்படம் . திருவருணை வரும்பொழுது எல்லாம் எங்கள் இல்லத்திற்கு கட்டாயம் வருகை தருவார்..அவரின் இழப்பு தமிழ் உலகிற்கு பேரிழப்பு..அவரை இழந்து வாடும் குடும்பத்தாருக்கு என் ஆறுதல்கள்.அன்னாரது ஆத்மா சாந்தி அடைய இறைவனை வேண்டுகிறேன்.




படமும் செய்தியும்:திருமதி.தீபா பட்டாபிராமன் (நினைவில் வாழும் பேராசிரியர்.கா.பட்டாபிராமன் அவர்களின் புதல்வி)

தமிழையும் ஆங்கிலத்தையும் மேடைகளில் தவழவிட்ட செம்மல் ஔவை. து. நடராசனார் அவர்களின் மறைவுச் செய்தி கேட்டு, பெருந்துயருற்றேன். 2009 இல் அவருடன் அமைந்த அந்தமான் செலவு என் வாழ்வில் மறக்க இயலாத நினைவுத் தடயமாகும். எங்களின் அன்புத் தாயார் மருத்துவர் தாரா அம்மா அவர்களும் ஔவையாரும் காட்டிய அன்பினை எப்பிறப்பில் இனி உணர்வேன். ஔவை நடராசனார் கையால் சிறப்பிக்கப்பட்டமையும், பண்ணாராய்ச்சி வித்தகர் ஆவணப்படத்துக்குச் செவ்வி தந்த உயர்பண்பும் என்றும் என் மனக்கண்ணில் நிற்கும்.குடும்பத்தினர்க்கும் அன்பர்களுக்கும் என் ஆழ்ந்த இரங்கல்! ஔவை து. நடராசனார்க்கு என் புகழ் வணக்கம்!





படமும் செய்தியும்:பேராசிரியர் மு.இளங்கோவன்,புதுச்சேரி.

ஔவைக்கு முத்துவிழா

24/4/2016 அன்று முனைவர் ஔவைநடராசன் அவர்களின் 81-ஆம் பிறந்தநாள்.ஆம்.அன்று அவர் முத்துவிழாக் காண்கிறார்.எளிமையை விரும்பும் அவருக்கும் அவர்தம் துணைவியார் மருத்துவமாமணி தாராபாய் அவர்களுக்கும் பெரிய விழாக்களில் விருப்பமில்லை.எனவே அவருக்குப் புலவர்குழுவின் சார்பில் எங்கள் வாழ்த்துகளை அவருடைய இல்லத்துக்குச் சென்று தெரிவிக்கலாம் என முடிவு செய்தோம்.எங்கள் புலவர்குழுத்தலைவர் சிலம்பொலியார் ஆவார்.இந்தச் சுட்டெரிக்கும் வெயிலில் அவர் திருவான்மியூரிலிருந்து பயணம் மேற்கொள்ளவேண்டாம் என வலியுறுத்திக் கூறினோம். நேரில் வருவேன் என அவர் கூறினாலும் இந்த வெயிலில் அவர் தொலைபேசி மூலம் வாழ்த்துத் தெரிவிப்பதே நலம் என நாங்கள் வேண்டிக்கொண்டதனை அவர் ஏற்றுக் கொண்டார்.

புலவர்குழுப் பொறுப்பாண்மைக்குழுத் தலைவர் மருத்துவர் மணிமேகலை கண்ணன், புலவர்குழுத் துணைத்தலைவர் பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன் அவர்கள் செயற்குழு உறுப்பினர் முனைவர் வாசுகி கண்ணப்பன் அவர்கள்,செயலாளர் மறைமலை ஆகியோர் ஔவை அவர்களின் இல்லத்துக்குக் காலை பத்தரை மணிக்குச் சென்றோம்.எழுத்தாளர் கழகச் சார்பிலும் கவிதை உறவு சார்பிலும் கவிஞர் ஏர்வாடியார், மேலும் மேனாள் மேயர் சா.கணேசன், த.கு.திவாகரன் ஆகியோரும் ஔவைபால் கொண்ட அன்பால் வந்திருந்தனர். பெருங்கவிக்கோ ஔவை வாழ்விணையரை வாழ்த்தி ஒரு வாழ்த்துப்பா இயற்றி வழங்கினார். முனைவர் வாசுகி கண்ணப்பன் அவர்கள் ஒரு வாழ்த்துப்பாடலைப் பாடினார்

அதன்பின்னர் அனைவரும் தங்கள் வாழ்த்துக்களையும் அன்பையும் தெரிவித்து விடைபெற்றனர்.வந்திருந்த அனைவரையும் வரவேற்று ஔவை அவர்களின் புதல்வர் முனைவர் அருள்,அவரது துணைவியார் சாலைவாணி ஆகிய இருவரும் சிற்றுண்டி வழங்கினர்.நல்லறிஞரையும் அவரது துணைவியார் அவர்களையும் வாழ்த்திய மகிழ்வில் அனைவரும் விடைபெற்றனர்.



செய்தியும் படமும்:
மருத்துவர்.மணிமேகலை கண்ணன்

**அறிவுக் களஞ்சியம் ஔவை நடராசன் அவர்கள் மரணம்.**

அறிவுக் களஞ்சியம் நடமாடும் பல்கலைக் கழகம் இலக்கியப் பிதாமகன் என்றெல்லாம் புகழ்ந்துரைக்கப் பெற்ற டாக்டர் ஔவை நடராசன் அவர்களின் மரணச்செய்தி பேரதிர்ச்சியைத் தருகிறது.

அறிவு முதிர்ச்சியை அகவை முதிர்ச்சி
வென்றுவிட்டது
என்ன செய்ய!

இவரின் இழப்பு ஈடுசெய்ய முடியாதது .தாங்க முடியாதது.

"மரணம் என்பது இயற்கை தருவது மறுக்க முடியாக் கட்டளை யாவது

தருணம் வந்தால் மரணம் நேரும்
தடுத்த நிறுத்த யாரால் முடியும்?"

என்று தத்துவக் கவிதை எழுதிய என்னால் கூட இவரின் மரணத்தைச் செரிக்க முடிய வில்லை.

இவர் ஏற்காத பதவி இல்லை .பெறாத பட்டம் இல்லை.தமிழறிஞர் மரபில் வந்த தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் முதல் துணைவேந்தர் இவர்தான். அது தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் பெற்ற பேறு.

இவரின் நினைவாற்றல் வியப்பிற்குரியது.
மேடையானாலும் சரி நேரில் ஆனாலும் சரி
கையிலோ பையிலோ எந்தவிதக் குறிப்பும் இருக்காது .வாய்திறந்தால் குற்றால அருவி போல் செய்தி கொட்டும்.அந்த அருவி நின்றுவிட்டது
இலக்கிய இதயங்களுக்கு வறட்சியைத் தந்துவிட்டது.

அளப்பரிய தமிழறிஞர் செப்பரிய சிந்தனை யாளர் ஒப்பரிய இலக்கியப் பெருமகனார் .இத்தகைய மனிதர்குல மாணிக்கத்தோடு பழகுதற்கும் அவரிடம் என் மூன்று நூல்களுக்கு

அணிந்துரை பெறுவதற்கும் கண்ணதாசன் கவிதை வாசம் என்னும் என் நூலை திறானாய்வு செய்து பேசுவதற்குமான வாய்ப்பைப் பெற்றேன் என்பது நான் பெற்ற பேறு.

நான் எழுதிய மங்கலப் பூக்கள் என்னும்  நூலுக்கு அவர் தந்த அணிந்துரையில் இருந்து சில வரிகள்.

மரபு பாடுவது வரையறைகள் கொண்ட பயில்களத்தில் பந்தெறிந்து ஆடுவது போன்றது.புலமையோடு பொருந்திய ஒரு தனித்திறமை வேண்டும் .கவியரசர் வெற்றிவேலர்க்கு இத்திறமை கைவந்த கலையாகக் கவின் பெற்று ஒளிர்கிறது.

கற்பனையும் கட்டமைப்பும் ஒரு சிறகாகவும் கருத்துவளம் சிந்தனை நலம் மறுசிறகாகவும் கொண்ட கவியரசுப் புதுகை வெற்றி  வெற்றி வேலனுக்கு  இம்மங்கலப் பூக்கள் அணிகலனாக அமைந்துள்ளன" என்று என் புலமையைப் புகழ்ந்துரைத்த அந்த மாமேதை மறைந்த செய்தி என் கண்ணில் நீர்மல்கச் செய்துவிட்டது.

இந்தப் பெருந்தகையின் இன்னுயிர் அமைதியில் இளைப்பாறவும் அவரது குடும்பத்தார் ஆறுதல் பெறவும் உலகத் திருக்குறள் பேரவை செங்கல்பட்டு மாவட்டம் சார்பாக ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.



செய்தியும் படமும்:புதுகை வெற்றிவேலன் தலைவர் உலகத் திருக்குறள் பேரவை செங்கல்பட்டு மாவட்டம் தமிழ்நாடு.

## தமிழுலகிற்கு ஒரு பெரிய இழப்பு.

**---பேராசிரியர் ந.தெய்வசுந்தரம்**

தமிழ் அறிஞர் முனைவர் ஔவை நடராசன் அவர்கள் இன்று மாலை மறைந்த செய்தியை அவரது மகனார் முனைவர் அருள் நடராசன் அவர்கள் தெரிவித்துள்ளார். தமிழுலகிற்கு ஒரு பெரிய இழப்பு.

அறிஞர் அவர்களுடன் 40 ஆண்டுகாலத் தொடர்பு எனக்கு உண்டு. உண்மையில் என்மீது தனி அன்பு அவருக்கு உண்டு. மொழியியல் தொடர்பாகப் பலதடவை அவருடன் உரையாடும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. தமிழ், ஆங்கிலம் இரண்டிலும் அவரது சொற்பொழிவுகள் என்னை வியப்பில் ஆழ்த்தியிருக்கின்றன. அவரது தந்தையார் தமிழுலகில் மிகப் பெரிய அறிஞராகத் திகழ்ந்த பேரா. அவ்வை துரைசாமி அவர்கள்.

தமிழ்நாடு அரசின் மொழிபெயர்ப்புத்துறை இயக்குநராகவும் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகவும் பணியாற்றியவர். மேலும் தமிழ்வளர்ச்சிக்கென்றே ஒரு தனித்துறை தமிழ்நாடு அரசில் நிறுவப்பட்டவுடன் அதன் முதல் செயலாளராகப் பணியாற்றியவர்.

எனது மகன் திருமணத்திற்கு நேரில் வந்திருந்து வாழ்த்திய அவரது அன்புச் செயல் மறக்கவியலாது.

சில நாள்களுக்குமுன்புதான் அவரை நேரில் சந்திக்கவேண்டும் என்று முனைவர் அருள் அவர்களிடம் கேட்டிருந்தேன். விரைவில் ஏற்பாடு செய்கிறேன் என்று கூறினார். ஆனால் பார்க்க இயலவில்லை.

அவரை இழந்து தவிக்கும் முனைவர் அருள் உட்பட அவரது குடும்பத்தினருக்கு எனது ஆழ்ந்த இரங்கல்.

## பழகுவதற்கு இனிய பண்பாளர்

**--ஒளிவண்ணன் கோபாலகிருட்டிணன்**

எங்கள் குடும்ப நண்பர். அன்பிற்கும் பாசத்திற்கும் உரியவர்.

எங்களது பல்வேறு நிகழ்வுகளில் கலந்து கொண்டவர். பழகுவதற்கு இனிய பண்பாளர்.

மேனார் துணை வேந்தர்,தமிழ்க் கடல் அய்யா அவ்வை அவர்களுக்கு ஆழ்ந்த இரங்கலும் வீரவணக்கமும்....

அருமை சகோதரர் அருள் அவர்களுக்கு ஆழ்ந்த இரங்கலை தெரிவித்துக் கொள்கிறேன்.

அவரது துயரத்திலும் பங்கு கொள்கிறோம்.

**ஈடுசெய்ய முடியாத இழப்பு.**

--பேரா.மு.முத்துவேலு

தமிழ் வேந்தர் ஔவை ஐயா அவர்களுக்கு என் புகழ் வணக்கம்.
என் பள்ளி நாளில் இருந்து ஔவை ஐயா அவர்களின் சொற்பொழிவுகள் பல கேட்டுத் தமிழ்ப் பேச்சாற்றலை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்று முயன்றவன். என் முதல் நூலுக்கு அணிந்துரை வழங்கி என்னை வாழ்த்திய பெருமகனார். நாவேந்தர் ஐயா அவர்கள் தலைமையில் உரை.அவர் நடுவராக வீற்றிருந்த பட்டி மன்றங்களில் உரை பல நிகழ்த்தும் வாய்ப்பு என அவரது தமிழன்பில் நனைந்த பலரில் நானும் ஒருவன்.ஆங்கிலமும் அருந்தமிழும் அவர்களுக்கு வேறல்ல ஒன்றே.
கல்வித் துறையில் உயர் பதவி துணைவேந்தர்
ஆட்சித் துறையில் உயர் பதவி தலைமைச் செயலகத்தில் செயலர்.
இந்த இரண்டு பதவிகளையும் வகித்து
அன்னைத் தமிழுக்கு அணிசெய்தவர் ஐயா ஔவை அவர்கள்.
அவர்கள் மறைவு ஈடுசெய்ய முடியாத இழப்பு.

உலகத் திருக்குறள் பேரவை சென்னைக் கிளை

**ஔவை நடராசனார்க்கு இரங்கல் குறிப்பு**

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக மேனாள் துணைவேந்தர் முனைவர் ஔவை நடராசன் அவர்களின் மறைவு தமிழ்கூறு நல்லுலகில் ஈடு செய்ய இயலாத வெற்றிடத்தை ஏற்படுத்தியுள்ளது. தமிழ் அறிஞர்கள், தம்மை நாள்தோறும் இற்றைப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதற்கு வாழ்வியல் சான்றாகத் திகழ்ந்த பெருமகன் அவர். வானுறையும் தெய்வமாகப் பற்பல இளவல்களுக்குக் காட்சியளித்த மாட்சியாளர். தனக்கு முன்னிருந்த தலைமுறையின் மாண்பைப் பேணியதோடு அதனை வளர்த்தெடுத்து அடுத்த தலைமுறைக்கும் தவறாமல் சேர்த்த தகையாளர். அன்னார் உழைப்பும் தொண்டும் உள்ளப்பட்டுக்கொண்டே இருக்கும். ஒன்றா உலகத்து உயர்ந்த புகழாளர். உலகத் திருக்குறள் பேரவை சென்னைக் கிளை அவர் இழப்பை ஏற்க இயலாமல் தவிக்கிறது.
கவனகர் கலை. செழியன்
செயலாளர், உ.தி.பே.சென்னைக் கிளை
பேரா முனைவர் கச்தூரி ராசா
தலைவர், உலகத் திருக்குறள் பேரவை சென்னைக் கிளை.

**இறுதி அஞ்சலி அய்யா**

---எழுத்தாளர் இரா.தெ.முத்து

அடர்பனி சூழ்ந்திருந்த காலையில் அவ்வை து நடராசன் அவர்களுக்கு இறுதி அஞ்சலி செலுத்தப் போயிருந்தோம்.

அண்ணாநகர் கிழக்கு ஜெ பிளாக் வீட்டின் முன்பு தூய வெண்மை நிறத்தில் பந்தல் அமைக்கப்பட்டு வெண்ணிற ஒளி படர்ந்திருந்தது.

கைக்கு அளவான பெயர்களே இறுதி அஞ்சலி செலுத்திச் சென்று கொண்டிருந்தனர்.இயற்கை அடைந்த அவ்வை உடலருகே அவரது மகனும் தமிழ்வளர்ச்சித்துறை இயக்குனருமான அவ்வை ந.அருள் சோகம் படர்ந்து நின்றிருந்தார்.

அவ்வையுடன் இரு முறை மேடையைப் பகிர்ந்திருந்தேன்.முதல்முறை மென்பொறியாளர் இளங்கோவனின் சிலப்பதிகார உரைநூல் வெளியீட்டின் பொழுது பகிர்ந்திருந்தேன்.

இன்னொருமுறை சென்னை YMCA பட்டிமன்றக் கூட்டரங்கில் பகிர்ந்திருந்தேன்.

ஒன்றுபட்ட வடாற்காடு மாவட்டம் இப்பொழுது திருவண்ணாமலை மாவட்டம் செய்யாறு அருகேயான அவ்வையார்குப்பத்தில் சிவபாதசேகரனாகப் பிறந்தார்.பின் நடராசனாகப் பெயர் மாற்றம் கண்டார்.

வள்ளலார் பிறந்த கருணீகர் சமூகத்தில் எளிய பின்னணி கொண்ட குடும்பத்தில் பிறந்து தந்தை துரைசாமியும் அவ்வை நடராசனும் தமிழ்க் கல்வியை வலுவாகப் பிடித்துக் கொண்டு கல்வி கற்று , இறுதி மூச்சு வரை தமிழ் தமிழ் என்றே பேசியும் வாழ்ந்தும் வந்தவர் அவ்வை நடராசன் அவர்கள்.

மிடுக்கான நடை, மேல்பொத்தான் திறந்து விடப்பட்டிருக்கும் சட்டை,எளிய தோற்றம், தடுமாறாத தமிழ் ஞானம், வசீகரிக்கும் தமிழ்ப்புலமை கொண்டவர் அவ்வை நடராசன்.

அவ்வையின் முகத்தைப் பார்த்தேன்.வள்ளலார் சமூக வழக்கத்தின்படி திருநீறு வலுவாக நெற்றியில் தீட்டப்பட்டிருக்கிறது. வாய்க்கரிசி வைக்கப்பட்ட வாய்.கண்மூடி தூங்குவது போன்ற சாயல்.

அவ்வையின் நெஞ்சில் திருக்குறள், சங்கத்தமிழ்,புறநானூறு நூல்கள் வைக்கப்பட்டு சைவமும் தமிழுமான அடையாளத்தோடு இறுதியாகக் காண வந்தோருக்கு காட்சி தந்து கொண்டிருந்தார்.

சற்றுமுன் தமிழ்நாடுஅரசு முதல்வர் முத்துவேல் கருணாநிதி ஸ்டாலின் அவர்கள் அளித்த காவல் துறை மரியாதையோடு மயிலாப்பூர் சுடுகாடு நோக்கிய இறுதிப்பயணம் தொடங்கி விட்டிருந்தது.

அவரது எளிமையும் தமிழ் ஞானமும் மேடைத்தமிழும் என்றும் தமிழர்களால் நினைக்கப்பட்டுக் கொண்டே இருக்கும்.

இறுதி அஞ்சலி அய்யா.



குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்

மின்னிதழ்:48 கார்த்திகை-15 -தி.பி.2053 திசம்பர்-1- பொ.ஆ.2022



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்





ஓயா உழைப்பும் உலகெலாம் பயணமும்
தாயாய்த் தொண்டரைத் தாங்கிடும் அன்பும்
தமக்கென வாய்ந்த தனிப்பெரும் பண்பினர்;
தமிழினம் எதிர்கொளும் தாளாத் துயர்களை
உமியென ஊதிடும் உலையாத் திண்மை
ஓருருக் கொண்ட உயர்பெரும் சிறப்பினர்;
பராவிடும் புகழ்மிகு பெரியார் நெறியைப்
பரப்புதல் ஒன்றே வாழ்வெனக் கொண்டவர்;
திராவிடர் கழகத் திறமிகு தலைவர்
அகவை தொண்ணுறு எய்திடும் மாண்பினர்
என்பதை எண்ணி அடைந்தோம் மகிழ்வே!

மதப்பேய் ஓட்டி சாதித்தீ அணைத்து
அனைவரும் சமமெனும் உணர்வினை ஊட்டி
புதிய தலைமுறை பொலிவுடன்
வளர்ந்திடக் கல்விச் செல்வத்தைக்
கருத்துடன் வழங்கிப் பெண்ணினம்
பெருமை பெற்றிடும் வகையில்
எண்ணமும் திட்டமும் வாய்ப்பும் அளித்து
அடுக்கிய துன்பம் அல்லல் செய்தாலும்
ஒடுக்கப் பட்டோர் உயர்வு மேம்பட
மிடுக்குடன் செயல்படும் தமிழர் தலைவரே!
இன்னும் நூறாண்டு எம்முடன் இருந்து
இன்னல் தீர்ந்து தமிழினம் இன்புற
வழிகாட்டிடுவீர்! வாழ்க வாழ்கவே!

பொறுப்பாசிரியர்:மறைமலை இலக்குவனார்
இணையாசிரியர்:தமிழியலன்

இலவச இணைய இதழ் -விற்பனைக்கு அல்ல

ஒவ்வோராண்டும் திசம்பரில் தொடங்கிச் சனவரியில் நிறைவுறும் மார்கழி இசைத் திருவிழா!
வெள்ளை,சிவப்பு,மஞ்சள் நிறத்தவர்களின் கூட்டம்!
வளமிக்க வாழ்வும் உலகளாவிய தொடர்பும் கொண்ட மேல்தட்டு மக்களின் பொழுதுபோக்குப் பெருவிழா!
தெலுங்கு,கன்னட,சமற்கிருதக் கீர்த்தனங்கள் மறு உயிர்ப்பு கொள்ளும் விழா!
தமிழ்ப்பாடல்கள் ஒண்டுக்குடித்தனம் செய்யவும் பிறமொழிப்பாடல்கள் அரியணையில் அமரவும் தமிழிசை காணாமல் போய்விடும் விழா!
இந்த வேளையில் அறிஞர் அண்ணாவின் இந்தக் கட்டுரையை உங்கள் கவனத்திற்குக் கொணர்கிறோம்.

## தமிழர் மறுமலர்ச்சி

**--அறிஞர் அண்ணா**

இசையை, மக்கள் கேட்டு இன்புறவேண்டுமானால், அவர்களுக்குத் தெரிந்த மொழியில் சாகித்தியம் இருந்தால் முடியுமே தவிர, சாகித்தியம் வேறு மொழியிலே இருந்தால் முடியாது. நாதம் காதை கவரும்; கருத்துக்கு என்ன அளிப்பது? தமிழனுக்குத் தமிழ்; தெலுங்கனுக்குத் தெலுங்கு; வடவருக்கு வடநாட்டு மொழியில், சாகித்தியம் அமைத்தால்தான், அந்த இசையைக் கேட்டதும் அவர்கள் இன்புற முடியும்.

**தெவிட்டாத விருந்து**

இப்போது தமிழ் நாட்டிலே நடைபெறும் கச்சேரிகளில் தமிழ் இசை எவ்வளவு விரும்பப்பட்டு வருகிறது என்பதையும் நாம் விவரிக்கத் தேவையில்லை.
தோழர் தியாகராச பாகவதரின் பாடல்கள், இன்று தமிழருக்குத் தெவிட்டாத விருந்தாக இருக்கின்றன. அவருடைய குரல் அமைப்பு மட்டுமல்ல அதற்கு காரணம். அவர் தமிழ்ப் பாட்டுக்களைத் தெளிவாகக் கேட்கும்போதே, பொருட் சுவையை மக்கள் ரசிக்கும் விதத்திலே பாடுவதுதான் முக்கியமான காரணம். சங்கீத வித்துவான்கள் என்ற சன்னத்துக்கள் பெற்று விளங்குவதாகக் கூறப்படும் பேர்வழி களிடம் உள்ள வித்தை, பாகவதரிடம் இருக்கிறதா இல்லையா என்பது பற்றியோ; 'சுரம்' போடுவதில் அவர் இன்னாரைவிடக் குறைந்த திறமை உள்ளவரா என்பது பற்றியோ, மக்கள் யோசிக்க வில்லை. அவசியமுமில்லை. பாகவதர் "மாயப் பிரபஞ்சத்தில் ஆனந்தம் வேறில்லை" என்று பாடினால், அது வீட்டிலே, வெளியிலே, இரவிலே, பகலிலே கிழவர் குழந்தை உள்பட, பாடும் பாட்டாகிவிடுகிறது. அழகும், அழுத்தந்திருத்தமும், பொருட்சுவையும் ததும்ப, "உனைக் கண்டு மயங்காத பேர்களுண்டோ" என்று பாகவதர் பாடினார். நாட்டினர் அதனைப் பாடுகின்றனர். காரணம் அவர் பாடுவது புரிகிறது. கேட்பவர் களிக்கின்றனர். அந்த இசை, கேட்போர் உள்ளத்திலே சென்று தங்குகிறது.

பூரிக்கின்றனர் தோழியர் கே.பி. சுந்தரம்பாளின் இசைக்குத் தமிழர், தமது செவியையும், சிந்தனையையும் பரிசாக அளித்தன் காரணமும் இதுவே. “செந்தூர் வேலாண்டி” - என்று பொருள் விளங்கப் பாடும் போது, இன்ன விஷயமாகப் பாடப்படுகிறது என்று புரிந்து கொண்டு பூரிக்கின்றனர்.

இசை விருந்தை இன்று அளித்துக் கொண்டு வரும் தோழியர் எம்.எஸ். சுப்புலட்சுமி தியாகராயர் கீர்த்தனங்களைப் பல வருடப் பாடமாக பழக்கத்துடன், பாடிக்கொண்டிருந்த போது வித்துவான்களுக்கும் அறிமுகமாகி இருந்தாரேயொழிய, நாட்டு மக்களுக்கு அறிமுகமாகவில்லை. ஏன்? நாட்டினர் எம்.எஸ்.எஸ். பாடுவது பிரமாதமான வித்தை அடங்கிய பாட்டு என்று கேள்விப்பட்டார்களேயொழிய. அதன் சுவையை அனுபவிக்க முடியவில்லை. ஆனால், அதே எம்.எஸ்.எஸ். “மனங்குளிர” என்ற செந்தமிழ் இசையைப் பாடியதும், தமிழரின் மனமெல்லாம் குளிர்ந்தது. இசை நம்மை இழுத்து சகுந்தலை கண்ட சோலை, சாலை, பசு, மான், கன்று, குயில், மயில் ஆகியவற்றை நமது மனக்கண் முன் நிற்கும்படிச் செய்தது. இசை இன்பத்தை மக்கள் முழுவதும் அடைய முடிந்தது.

தமிழ் இசைக்கு ஆதரவு இருக்குமா என்று கேட்கும் பேர்வழிகள். இசையரசு தண்டபாணி தேசிகரின் தமிழ் இசை, மக்களை எவ்வளவு உருக்குகிறது. பொருள் விளங்க உணர்ச்சி ததும்ப. அவர் நமது தமிழில் நம்மிடம் பாடுவதால், மக்கள் உருகுவது இருக்கட்டும். தேசிகரே உருகுவதைக் காணலாம். தமிழ் இசை பாடும்போது!

மதுரை மாரியப்ப சுவாமிகள், சிதம்பரம் ஜெயராமன், திருவாரூர் நமச்சிவாயம் ஆகிய இசைமணிகளின் ஒலி. நமது தமிழாக இருப்பதால் நமது நெஞ்சை அள்ளுவதைக் கூறவேண்டுமா?

**இயற்ற முடியாதா?**

நம்மவரின் நெஞ்சில் நேராகச் சென்று இன்பத்தைத் தர, தமிழபு இசையினால் மட்டுமே முடியும். அத்தகைய தமிழ் இசையை வளர்க்க, பாடகர்களும், கழகங்களும் முற்படுகின்றனர். வெளிமொழிக் கீதங்கள் என்ற முறையில் இரண்டோர் கிருதிகள் பாடலாம், குற்றமில்லை; ஆனால் இசை என்றாலே அது தெலுக்கோ, இந்துஸ்தானியோதான் என்ற பொருள்படும் படி கச்சேரிகள் இருப்பதை இனித் தமிழர் வரவேற்க மாட்டார்கள்.

“ராகப் பிரதானமுள் கீர்த்தனங்கள்” தமிழிலே இல்லை. இனி ஏற்பட வேண்டும் என்று ‘மித்திரன்’ கூறுகிறது. ஆனால் இன்றுள்ள இசை வல்லுநர்களால், இத்தகைய ராகப்பிரதான முள்ள கீர்த்தனங்கள் இயற்ற முடியாது என்று மித்திரன் கூறத் துணிகிறதா என்று கேட்கிறோம். கர்நாடக சங்கீத வர்ண ெட்டுக்கள் அனுசரித்துச் சில தமிழ்ப்பாட்டுக்கள் உள்ளன என்பதை ‘மித்திரன்’ ஒப்புக் கொள்கிறது. அவை போன்ற பாடல்கள் வளரவே அண்ணாமலை நகர் மாநாட்டினர் வழிவகை தேடினர்.

**வாய்ப்பாட்டு ஏன்?**

சங்கீரம் எந்தப் பாஷையாக இருந்தாலென்ன? என்று கூறுபவர்கள், ராக இலட்சணமே முக்கியம்! சாஹித்ய இலட்சணம் முக்கியமாகாது என்று கூறுபவர்கள், திருவாவடுதுறை ராஜரத்தினம் அவர்களின் நாதஸ்வரம், கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளையின் பிடிலும் இருக்க, வாய்ப்பாட்டு வேறு ஏன் தேடுகிறார்கள்? அந்த நாதஸ்வரத்தில், ராக இலட்சணங்கள், போதும் என்ற அளவுக்குக் கேட்கலாம்! ஜிலுஜிலுப்பு வேண்டுமா? கமகம் தேவையா? ஆலாபனத்தில் அலங்காரம் வேண்டுமா? எது நாதஸ்வரக்காரரால் முடியாது. தாள வரிசகைளிலே திறமைகள் கேட்க வேண்டுமா? பக்கத்திலே நிற்கும் தவுல்காரரைப் பார்த்தால் போதுமே! கோடை இடி கேட்கும்! சங்கீதம், வெறும் ராக இலட்சணம் நாதம் என்று பேசுவோர், நாதத்தை, நாதஸ்வரத்தில், பிடிலில், வீணையில், புல்லாங்குழலில் கேட்கின்றனர் என்றாலும் வாய்ப்பாட்டும் தேடுகின்றனர்! காரணம் என்ன? வாய்ப்பாட்டில் நாதமும், நெஞ்சை அள்ளும் சாகித்தியம் இருக்கின்றது என்பதற்காகத்தான். நெஞ்சை அள்ளும் சாகித்தியம் தமிழருக்குத் தமிழில் இருத்தலே முறை.

**முன்னாளில் இசை**

“பொழிறரு நறுமலரே புதுமணம் விரிமணலே
பழுதறு திருமொழியே பணையிள வனமுலையே
முழுமதி புரைமுகமே முரிபுரு வில்லிணையேயெ
முதரு மின்னிடையே யெனையிடர் செய்தவையே”

பக்கத்தில் காதலி! எதிரே கடல்! யாழை வாசித்துக் கொண்டு, மேலே குறிப்பிட்டுள்ள இசையை இனிமையாகப் பாடுகிறான் இளமையும் செல்வமும் பொருந்திய கோவலன். மாதவியின் மனம் மகிழப் பாடினான்! மாதவியோ, ஆடலிலும் பாடலிலும் தேர்ந்த அணங்கு. கோவலன் வணிகன் ஆயினும். அவன் பாடியத, மாதவியை மகிழ்விக்கும் விதமாக இருந்தது.

நறுமலரே! விரிமணலே! மதிமுகமே! மின்னிடையே! என விளித்துக், கோவலன் யாழை இசைத்தக் கானல்வரி பாடுகிறான். அந்நாட்டினருக்குத்தான் இன்று, “கச்சேரிகளில், களை கட்டும் பாடபுடுக்கள்” இல்லை. தெலுங்கு கிருதிகள் போய்விட்டால், சங்கீதக் கலையே க்ஷீணமாகிவிடும் என்று ‘மித்திரன்’ கூறும் நிலை வந்தது!

“மரகத மணித்தாள் செறிந்த
மணிக்காந்தண் மெல்விரல்கள்
பயிர் வண்டின் கிளைபோல
பன்னரம்பின் மிசைப் படர

வார்தல் வடிந்தலுந் தலுறழ்தல்
சீருடனுருட்ட றெருட்டலுள்ள
லேருடைய பட்டையென
விசையோர் வகுத்த
வெட்டுவகையினிசை காரணத்துப்
பட்டவகை தனிசெவியினோர்த்
தேவலன் பின் பாணியாதெனக்
கோவலன் கையாழ் நீட்ட
கோவலன், யாழை மீட்டி இசை பாடி இன்புற்றான்!"

வார்தல் : சுட்டு விரல் செய் தொழில்.

வடித்தல் : சுட்டு விரலும் பெருவிரலுங் கூட்டி நரம்பை அகமும் புறமும் ஆராய்தல்.

உந்தல் : நரம்புகளை உந்தி, வலிவிற் பட்டதும், மெலிவிற் பட்டதும், நிரல் பட்டதும், நிரவிழிப்பட்டதும் என்றறிதல்.
உறழ்தல் : ஒன்றிடை யிட்டும், இரண்டிடையிட்டும் ஆராய்தல்.
என்று, மேற்படி செய்யுளில் வரும் பதங்கட்கு, அடியார்க்கு நல்லார்தரும் பொருளைப் படித்துவிட்ட பிறகு, தமிழின் இசை உள்ளமும், இசை வளமும் எங்ஙனம் இருந்தது என்பதை ஆரியத் தோழர்கள் அறியட்டும்.

இசைக் குழல்கள் எண்ணற்ற இருந்த இடம் இது! ஆங்கு இசை பயின்று, இசை நுணுக்க முணர்ந்து, ஏழிசையைப் பாடி வாழ்ந்தவரே தமிழர்.

சிறுவயது முதலே. இசையே தமிழரின் தோழன்.

ஊசல்வரி, கந்துகவரி, ஆற்றுவரி, கானல்வரி முதலியன இன்று தமிழருக்கு வெறும் சொற்றொடர்கள். முன்னாளில், அவை இனிய இசைகள்!

இசை எனும் சொல்லுக்கே, வயப்படுத்துவது. இசைவிப்பது என்பது பொருள். இதனைத் தமிழர் நன்குணர்ந்து, பயன்படுத்தி வந்தனர். மகிழ்ந்தனர். மகிழ்வித்தனர்.

தினைப் புனத்திலிருந்து ஓர் தீஞ்சுவை மொழியாள் தத்தை எனப்படுவாள்! இசை மொழிவாள். அந்த இசை கேட்ட பறவைகள் இசைக்கு வயமாகி மயங்குமாம்!

மலையோரத்தில், குறிஞ்சி படக் கேட்ட மழ களிறு உறங்குமாம்! இனிய இசையில் மயங்கி "அசுணமா" எனும் இசையறி பறவை, எதிரில் தன்னை மறந்து நின்று, பிடிபடுமாம். ஆனினங்கள் அடங்குமாம். மதங்கொண்ட யானையும் இசைக்கு அடங்கம் என்று கலித்தொகை கூறுகிறது. அது மட்டுமா?

"ஆறலைக் கள்வர் படைவிட அருளின்
மாறுதலை பெயர்க்கும் மருவின் பாலை"

அதாவது, கள்வரும், இசைகேட்டு, கொடுந்தொழில் மறந்து நின்றனராம்.
தோல் கருவி, துளைக் கருவி, நரம்புக் கருவிகள் என இசைக்கருவிகள் எண்ணற்றன இருந்தன. தோற்கருவிகளில் மட்டும் பேரிகை, படகம், இளக்கை, உடுக்கை, மத்தளம், சல்லிகை, காடிகை முதலிய முப்பதுக்கும் மேற்பட்டு இருந்தன.
இசைக் கருவிகளும் இயம் என்றோர் பெயருண்டு. பலவகை இசைக் கருவிகளையும், வாசிக்கத் தெரிந்த காரணம் பற்றி, ஒரு புலவருக்கு நெடும் பல்லியத்தனார் என்ற பெயரும் இருந்தது.

பாடுவோர் பாணர் என்ற தனிக் கூட்டமாகவும் இருந்து, தமது முதுகுகளில், வகைவகையான இசைக் கருவிகளை ஏற்றிக் கொண்டும், பலநாடு சென்று பாடி மகிழ்வித்துப், பரிசு பெற்று வாழ்ந்தனர்.

**மங்கின; அழிந்தன**

இன்னின்ன காலத்துக்கு இன்னின்ன இசை பாடுதல் பொருத்த மென்றிருந்து பாடி வந்தனர். காலையில் மருதப் பண்ணும் மாலையில் செவ்வழிப் பண்ணும் பாடுவாராம்.
இசைத் தமிழின் இலட்சண விளக்கமாகச் சிகண்டியார் என்பவர் இசை நுணுக்கம் என்ற நூலையும், நாடகத் தமிழுக்குச் செயிற்றியன் என்ற நூலைச் செய்யிற்றியனார் என்பவரும் இயற்றினார்.

ஷட்ஜமம், ரிஷபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமமம், தைவதம், நிஷாதம் என்ற வடமொழிப் பெயர்களுடன் உள்ள சுரம் ஏழும், ஏழிசை என்ற பொதுப் பெயருடன் முறையே குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்ற தமிழ்ப்பெயருடன் விளங்கின.

தமிழர் ஒரு சுரத்தைப் பதினாறு ஆகப் பகுத்துணரும் பக்குவம் பெற்றிருந்தனர்.
இராகம் என்று கூறப்படுவது, தமிழரால் பண் என்று குறிக்கப்பட்டு வந்தது.
இராக லட்சணங்கள் பொருந்திய தமிழ்ப் பாடல் இல்லை என்று கூறுவோருக்குக் கூறுகிறோம்.
தமிழரின் பண்கள் எண்ணற்று இருந்தன. வடமொழியில் கரகரப்பிரியா எனக் குறிப்பிடப்படுவதே படுமலைப்பாலைப்பண் என்றும், கல்யாணி எனும் இராகம் அரும்பாலைப்பண் என்றும் முன்னாளில் குறிப்பிடப்பட்டது. அரிகாம்போதிக்குத் தமிழர் அளித்த பெயர், கோடிப்பாலைப்பண், பைரவிக்கு விளரிப் பாலைப்பண், தோடிக்குச் செவ்வழிப் பாலைப்பண் என இங்ஙனம் இராக இலட்சணங்கள் எவ்வளவோ தமிழில் இருந்தன. மறைந்தன! ஆரியத்தால் மங்கின; அழிந்தனவும் உண்டு.

ஆலாபணம் எனும் இசை நுணுக்கத்தைத் தமிழர் ஆலத்தி என்று அழைத்து வந்தனர்.
ஆரோகணம், அவரோகணம், கமகம் என்பன முறையே ஏற்றம் இறக்கம் அலுக்கு என்ற பெயருடன் விளங்கின. தமிழர் அவற்றில் தேர்ச்சி பெற்று, தேன் தமிழை உண்டு வாழ்ந்து வந்தனர்! இன்று இரவல் இசை பெறும் நிலையில், உள்ளனர்.
எந்தப் பார்ப்பனர், மனு, 4ஆம் அத்தியாயம், 15ஆம் விதிப்படி இசை பயின்று, பொருள் ஈட்டக் கூடாது என்று தடுக்கப்பட்டு இருந்தனரோ, அதே ஆரியர்களின் சொத்தாக இசை இன்று கருதப்பட்டு வரும் நிலைமை ஏற்பட்டது.
அரியக்குடியார் அலறுகிறார்; பாபநாசம் சிவன் பதறுகிறார்; மருங்காபுரியார் மனவேதனைப் படுகிறார். ‘இந்துவும், மித்திரனும்’ முகாரி பாடியபடி உள்ளன. தமிழரின் அடாணா வெளிப்படும்வரை இசை பற்றி இவர்கள் இரைச்சலிட்டபடிதான் இருப்பர்.
பாவ, ராக, தாளம் எனும் மூன்றும் இழைந்திருக்க வேண்டும் இசையிலே என்பர். இசைநூல் வல்லோர். பாவம் விளக்கமாக இருக்க, அவரவருக்குப் புரியும் மொழியில் பாடல்கள் இருந்தாக வேண்டும். தமிழருக்குத் தமிழ் மொழியில் பாடல் இருந்தால்தான் புரியும்; சுவைக்க முடியும்; எனவே, தமிழ்நாட்டிலே தமிழ் இசைதான் முக்கியமான தேவை.

**சுவைக்க முடியும்**

தமிழரின் இசைப்பற்று, தியாகய்யர் காலத்துக்குப் பலப்ஞ்பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே இருந்தது. தெலுங்குக் கீர்த்தனங்கள் தோன்றா முன்னம், இராம கதையையோ, கிருஷ்ண கோலாகலத்தையோ கீர்த்தனங்களாக அமைக்கா முன்னும் தமிழரின் இசை – இறைவன், இயற்கை, இன்பம் எனும் மூன்று துறைகளை உள்ளடக்கியதாக, உணர்ச்சியும் உற்சாகமும் தரத்தக்கதாக இருந்தது. இசைக்கருவிகள் எண்ணற்று இருந்தன. இசை நூற்களும் உண்டு. இசைக்கடலில் நீந்தி விளையாடி மகிழ்ந்தனர் மக்கள். ஆணும் பெண்ணும் பாடுவர், ஆடுவர். அரசனும் மக்களும் இசை பயின்றனர். இன்புற்றிருந்தனர்.

கடலைக் கண்டால் ஓர் பாடல், கரியைக் கண்டால் ஓர் பாடல், தளிரைக் கண்டு ஓர் பாடல், தனது காதலியைக் கண்டு ஓர் பாடல் எனத் தமிழர் அமுத இன்ப உணர்ச்சியை இசை வடிவில் எத்துணையோ சிறப்புடன் வெளிப்படுத்தி வாழ்ந்தனர். இன்று தியாகராயர் கிருதிகளைவிட வேறு இல்லை என்று அவர்கள் முன்னால் கூறப்படுகிறது.

இசைச் செல்வத்தை இவ்வளவு பெற்று முன்னம் வாழ்ந்த தமிழர், இன்று கேட்பது, தமிழ்நாட்டிலே தமிழ்ப்பாடல்கள் அதிகமாக இருக்கவேண்டும் என்பதாகும். இந்த முயற்சியில் தமிழர் வெற்றிபெற்றால், இழந்த தமிழ் இசையை மீண்டும் பெற முடியும். ஆரியம் தமிழரின் எல்லா வகையான செல்வங்களையும் கொள்ளை கொண்டது போலவே, இசைச் செல்வத்தையும் கொள்ளை கொண்டது. இதனை அறிய, தமிழர் தொன்மைபற்றி ஆசிரியர் சுந்தரம்பிள்ளை எழுதிய அரிய நூலையும், மற்றையோரின் ஆராய்ச்சி நூற்களையும், தமிழர் படிக்க வேண்டுகிறோம். தமிழரின் மொழிவளம், ஆட்சி வளம் முதலிய துறைக்ள்ள பற்றிய அரிய ஆராய்ச்சிகளிலே உண்மைகள் மிளிரும். தோழர் தேவநேயப் பாவாணர் எழுதிய ஒப்பியல் மொழி நூலில் உள்ளவற்றைத் தமிழர் கற்றுணர வேண்டும்.

**அவர்களுக்குப் பிடிக்காது**

தமிழ் இசை மறைந்து, வேற்று மொழியில் பாடல் பரவியதனால், நாம் இன்பத்தை மட்டுமே இழக்கவில்லை. இயற்கையின் அழகை உணரும் அறிவையும் பகுத்தறிவுத் திறனையும் இழந்தோம். புதுப்பாடல்கள், புதுக் கருத்துகள் கொண்டதாக இருக்கவேண்டும். வெறும் பக்திரசம் மட்டுமே ஊட்டக்வடியதாக இருத்தல் போதாது. பக்தி ரசம் தமிழ் இசையில் இன்றும் உண்டு. ஆனால் ஆரியருக்கு அது பிடிக்காது. திருத்தாண்டகம், பிள்ளைத் தமிழ் போன்றவற்றைத் தோழர் சுந்தரமூர்த்தி ஓதுவார் எத்துணை இன்பரசத்துடன் பாடினார். தியாகய்யரின் ராமரசத்தை, அருணாசலக் கவியராயரின் தமிழ்க் கீர்த்தனங்களில் காண ஆரியர் மறுப்பர். கோபாலகிருஷ்ண பாரதியின் நந்தன் பாடல்களு, சித்தர்களின் பாடல்களும் சுப்பராமரின் தமிழ்ப் பதங்களும் ஆரியருக்குப் பிடிக்கவில்லை. ஆகவேதான் தமிழிலே பாடல்கள் ஏது என்று கேட்கின்றனர். தோழர் மாரியப்பசாமி எனும் இசைச் செல்வர். தியாகய்யர் கீர்த்தனை மெட்டுகளிலேயே செந்தமிழில் கிருதிகள் அமைத்து, இனிய முறையில் பாடுகிறார்! ஆரியருக்கு அது பிடிக்காது. அவர்கள் அசல் ஆரிசய ரசமே தேடுவர். பக்தி என்ற ரசத்தையும் ஆரியத்தோடு கலந்து பருகுவரேயன்றித் தமிழோடு கலந்து பருகச் சம்மதியார். காரணம் தமிழர்கள் என்றால் அவர்களுக்கே வேம்பு! அதற்குக் காரணம் அந்த ஒரே மொழிதான் பரந்த இந்தியாவில் ஆரியப் படையெடுப்பைத் தாக்குதலைப் பொருட்படுத்தாமல் பணியாமல் சீரிளமைத் திறனோடு விளங்குகிறது. அத்தகைய தமிழ் இசையில் மீண்டும் ஆதிக்கம் பெறுமானால், தமது கதி என்னாகுமோ என்று ஆரியர் பயப்படுகின்றனர்! தமிழில் இசை வளரக் கூடாதெனத் தடுக்கின்றனர். தமிழனுக்குத் தமிழ் இசையைப் பெற உரிமை

உண்டு! அதைத் தடுக்க ஆரியருக்கு உரிமை இல்லை! ஆயினும் ஆரியர் தடுக்கின்றனர்! தமிழரே உமது கருத்து என்ன? என்ன செய்யப்போகிறீர் என்று தமிழரைக் கேட்கிறோம். "நாம் பெருங்கூட்டம்! அஃதோர் சிறு கும்பல்" என்றார் இனிமை ததும்பும் கருத்தை, இளமையின் முறுக்குடன் கலந்து கவியாக உலகினோர்க்குக் கூறினார் ஷெல்லி என்பார். கவியின் கருத்தை வெறும் எழுத்துக் கோவையாகக் கொண்டு நோக்குதல் கூடாது; பலன் தராது.

ஆயிரம் காக்கைக்கு ஒரு கல் போதும்! மான் மந்தையைச் சிறுஓநாய்க் கூட்டம் விரட்டியடிக்கும். பாம்பு படையைக் கலக்கும். ஷெல்லி கூறிய கருத்து இங்குப் பயன்தராது. கட்டுப்பாடும், உறுதியும், உணர்ச்சியும் கொண்டதாக ஒரு பெருங்கூட்டம் இருப்பின், அதனை ஒரு சிறு கூட்டம் எதிர்த்துப் பயன் இல்லை என்பதே கவியின் கருத்து.

எண்ணிக்கையைவிட இங்கு இயல்பே முக்கியமாகக் கவனிக்கப்படுதல் வேண்டும்.

**ஒருமைப்பாடு**

தமிழ் இசை இயக்கத்தைப் பெருங்கூட்டம் ஆதரிக்கிறது. சிறிய கும்பலொன்று எதிர்க்கிறது. எதிர்க்கிறது என்றுரைப்பதை விட எதிர்த்தது என்றுரைத்தால் பொருந்தம் என எண்ணுகிறோம். பல்வேறு கட்சிப் பற்றுடையவர்களும், தமிழினால் ஒன்றாக்கப்பட்டு ஒருமனமாகி, ஒத்த கருத்தை வெளியிட்டதைக் கேட்ட பிறகும், தமிழ் இசை இயக்கத்துக்கு இவ்வளவு ஆதரவு இருப்பினும், நாங்கள் எதிர்த்தே தீருவோம் என்று கூறும் அளவுக்கு அந்தச் சிறு கும்பல் அறிவை இழந்துவிட்டிருக்கும் என்று நாம் நம்ப மறுக்கிறோம். அவர்கள் நிச்சயமாக உணர்ந்திருப்பார்கள். தமிழ் இசையைத் தமிழர் ஆதரிக்கின்றனர் என்பதை. எனவே, எதிர்த்துப் பயனில்லை என்று தீர்மானித்துவிட்டிருப்பர்.

"தமிழ்ப் பாடல்களைச் சில்லறை உருப்படிகள் என்று கூறுகிறார்களே அந்தக் கெட்ட வழக்கத்தைவிட்டுவிட வேண்டும் என்று தோழர் தியாகராஜ பாகவதர் கூறினபோதும், திருவாவடுதுறை ராஜரத்தினம் அவர்கள் தமிழ்ப் பாடல்கள் பாடப்படாத கச்சேரிகளுக்குப் போகாதீர்கள்; தமிழ்ப் பாடல்களைப் பாடாத வித்வான்களை அழையாதீர்கள் என்று கூறியபோதும், என் கீர்த்திக்குக் காரணமே தமிழ்தான் என்று தோழர் தண்டபாணி தேசிகர் அகங்குளிரக் கூறியபோதும், எந்தக் கூட்டத்தார் எந்த வகுப்பார், எந்தப் பத்திரிகையாளர் எதிர்த்தபோதிலும், தமிழர் அஞ்சத் தேவையில்லை என்று குமாரராசா சர். முத்தையச் செட்டியார் அவர்கள் கூறியபோதும், மண்டபத்தின் உள்ளேயும், வெளியேயும் கூடியிருந்த மக்கள் தமது மகிழ்ச்சியைத் தெரிவித்ததைக் கண்டோர் அறிவர். தமிழரிடை பிறந்துள்ள புத்துணர்ச்சியை! தமிழிலே சாகித்தியம் உண்டா? உண்டு என்றனர் சொற்பொழிவாளர்கள். பாடிப்பாடிக் காட்டினர் இசைச் செல்வர்கள். கேட்டுக் களித்தனர் மக்கள். கேட்டது போதாதென மேலும் மேலும் தமிழ்ப் பாடல்கள் பாடம்படிக் கேட்டனர. இது போதும்; தமிழ் இசையை எதிர்க்கும் பேர்வழிகளின் கண்களைத் திறக்க! கருத்தைத் துவக்க!

## அண்ணாவின் தமிழ் உணர்வு

--முனைவர் ஔவை நடராசன்

நாற்பத்து நான்கு , நாற்பத்தைந்துகளில் எங்களுக்குப் பயிற்றுவித்த தமிழாசிரியர்கள் அனைவரும் அண்ணாவின் ஆர்வலர்கள் தான் . எங்கள் ஆசிரியர் வகுப்புக்கு வந்தவுடனே இமயத்தின் எல்லைக் கண்ட எந்தமிழ் என்றும் வாழ்க என்று எழுதிவிட்டுத்தான் பாடமே தொடங்குவார் . ஏறத்தாழ தமிழ் ஆசிரியர்கள் என்றாலே அவர்கள் அனைவரும் அண்ணாவின் வலையில் அகப்பட்டவர்கள் , அண்ணாவின் பேச்சில் மயங்குபவர்கள் , பகுத்தறிவுச் சிந்தனைக்கு ஆட்படுபவர்களின் அணி வகுப்பு தமிழாசிரியர்களிடமிருந்து தொடங்குகிறது என்கிற கருத்து நாற்பத்தைந்தில் மிகப் புகழ் வாய்ந்த கருத்தாக விளங்குகிறது. எண்ணிப் பாருங்கள் . இன்று நாம் நின்று பேசுகிற உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் என்ற அமைப்பு அண்ணா கண்ட கனவு . அண்ணா உருவாக்கியதுதான் இந்த நிறுவனம் .
அறுபத்தைந்து என்று நினைக்கிறேன் உலகத் தமிழ் மாநாடு கோலாலம்பூரில் நடந்தபொழுது அடுத்த மாநாட்டைத் தமிழகத்தில் நடத்த வேண்டுமென்று அவர்கள் கேட்பதற்கு முன் நான் நடத்துகிறேன் என்று சொன்னவர் முதல்வர் பக்தவத்சலம் அவர்கள் . ஒரு வேளை காங்கிரஸ் அரசு நிலைத்திருக்கும் என்ற நிலையில் , முதலமைச்சர் என்ற நிலையில் அவர் அழைத்துச் சென்ற பெருமக்களை எல்லாம் , கேட்டு, அவர் அழைத்துச் சென்ற பெருமக்களுள் நாவலர் நெடுஞ்செழியன் ஒருவர்தான் இயக்கத்தைச் சார்ந்தவர் . மகிழ்ச்சியோடு மாநாட்டை நடத்துகிறேன் என்று சொல்லி வந்து விட்டார் . அறுபத்தேழில் முன்னேற்றக் கழக அரசு அமைந்து , தமிழக முதலமைச்சராக அண்ணா வடிவெடுத்தார் . எவ்வளவு எவ்வளவு பெருமிதத்தோடு பக்தவத்சலம் எதை நினைத்தாரோ அதை அவர் மனம் மகிழவும் , தமிழ் மக்கள் உள்ளம் நெகிழவும் இந்த உலகத் தமிழ் மாநாட்டை நான் சென்னையில் நடத்துவேன் ; கலை வளரும் தலைநகராகிய சென்னை மாநகரத்தில் நம் அன்னைத் தமிழுக்கு நிகழும் மாநாடு அவனி கண்டு வியக்கும் மாநாடாகத் திகழும் என்று அறிவித்தார் அண்ணாவினுடைய தமிழ் உணர்வு அப்படித் தான் தொடங்குகிறது. ஒன்றிரண்டு மட்டும் நினைவுகூற விரும்புகிறேன் .

1960-62களில் அமெரிக்க நாட்டின் இர்வின் வேலஸ் என்பவர் ஒரு நாவல் எழுதினார். எத்தனைப் பேர் அந்த வேலஸ் எழுதிய நாவலை வாங்கிப் படித்திருப்பார்கள் தமிழ்நாட்டில் . ஆனால் , ஆங்கிலம் படித்தவர்கள் அதைப் படித்திருக்கிறார்கள் . அந்த நாவலின் கதை என்னவென்றால் The Man என்பதாகும் அந்த நெடுங்கதையின் பெயர் . அமெரிக்க நாட்டுக் குடியரசுத் தலைவர் விமானத்தில் செல்லும்போது , அவர் சுடப்பட்டு இறந்துவிடுகிறார் . குடியரசுத் தலைவர் இறந்ததும் அடுத்த இடம் துணைக் குடியரசுத் தலைவருக்கு வரவேண்டும் . துணைக் குடியரசுத் தலைவரோ மாரடைப்பால் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டுவிட்டார் .

அமெரிக்கா ஆங்கிலேயர்களின் மரபை தொடர்ந்து வருவதால் , ஒரு கணம் கூட குடியரசுத் தலைவர் இடம் காலியாக இருக்கக்கூடாது என்ற கலக்கம் வருகிறது . அந்த நிலையில் முதல்வர் இல்லை , இரண்டாமவரும் இல்லை , மூன்றாமவரும் இல்லை . இந்த நிலையில் நிதித்துறையில் பொறுப்புச் செயலாளர் அமைப்பில் இருந்த ஒரு கறுப்பர் தான் கிடைத்தார் . அவரை அழைத்துத் தானாகவே குடியரசுத் தலைவர் பதவி அவரிடம் வந்துவிழுகிறது . அவர் போய் கேட்கவில்லை . அவர் இருந்த இருப்பினால் , அவருக்கு அமைந்த அமைப்பினால் அவருக்குக் குடியரசுத் தலைவர் பொறுப்பு அமைகிறது . வெள்ளை மாளிகையில் இந்த கறுப்பு குடியரசுத் தலைவர் பொறுப்பேற்கிறார் . வெள்ளை மாளிகையில் வேலை ஆட்கள் அவ்வளவு பேரும் , வெள்ளையர்கள் . அந்த வெள்ளையர்களுக்கு நடுவில் குடியரசுத் தலைவர் எப்படிப் பொறுப்பேற்று , நாள்தோறும் தன்னுடைய நடைமுறை அரசை நடத்தினார் என்று சொல்வது அந்தக் கதை.

அந்தக் கதை முடிந்து வந்த பிறகு அது பெரிய வெற்றிக் கதையாக மக்கள் பாராட்டிய பொழுது வேலசின் துணைவியாரைக் கேட்டார்கள் . உங்கள் கணவர் இந்தக் கதையை எதன் அடிப்படையில் எழுதினார் . அவர் இப்படி ஒரு கனவு கண்டார் . உடன் இருப்பவர் எளிமையானவர்கள் . விலக்கப்பட்டவர்கள் , வாய்ப்புகளை பல காலத்துக்கு முன்பு பறிக்கப்பட்டவர்கள் என்றிருக்கிற இனத்திலிருந்து எவரேனும் ஒருவர் ஒருநாள் குடியரசுத் தலைவராக வரமாட்டாரா ? என்ற எண்ணம்தான் அந்தக் கதையில் இருக்கிறது என்றார் . இந்தக் கதையை அண்ணா எடுத்து எழுதினால் திராவிட நாட்டில் அறிஞர் என்பதற்கும் பொருள் இப்பொழுது உங்களுக்கு விளங்கும் என்று நினைக்கின்றேன் .

பேரறிஞர் என்ற நிலையில் வெள்ளை மாளிகையில் என்று அக்கதையை அப்படியே எழுதிக்காட்டினார் . பிறகு சொன்னார் . ஏன் இந்த அமெரிக்கக் கதையை எழுதுகிறேன் என்றால் சாமான்யர்கள் ஒரு நாள் அரசைப் பிடிப்பார்கள் என்பதை நினைத்துத்தான் என்று கூறினார் . எப்படிப்பட்ட எண்ணம் அவருக்கு தோன்றியிருக்கிறது பாருங்கள் .

கவிதைகள் பிறந்த காலத்தில் பாரதியாரின் பாடல்களை தெருதோறும் உணர்ச்சிப் பொங்க அனைவரும் பேசிக் கொண்டிருக்கிறார்கள் . அண்ணாவினுடைய இயக்கத்திற்கு என்ன பெயரென்றால் , சாமியில்லாத கட்சி , சாதியில்லாத கட்சி சு.நா.மானா இப்படித் தான் சொல்வார்கள் . என் பெற்றோரே சொல்வார்கள் . சாதியில்லாதக் கட்சியில் சேர்ந்திருக்கிறான் . சாமியில்லாத கட்சியில் திரிகிறான். சுயமரியாதைக்காரன் என்று,

அந்த நிலையில் சுயமரியாதைக் கொள் தோழா! என்ற ஒரு பாட்டு வரி பிறந்தது இருட்டறையில் உள்ளதடா உலகம் என்ற பாட்டு வரி , சமாதானத்திற்குக் கொடுக்கும் சாட்டை வரியாக கவிதைப் பிறந்தது . பாரதியார் பாடல்களையே சொல்லிக் கொண்டிருக்கும் இவர்களுக்கு இதோ பாருங்கள் , வால்ட் விட்மன் , ஒரு புரட்சிக் கவிஞர் என்று அழைத்தார் . அவர்தான் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவருக்குப் பாரதிதாசனின் பாட்டு வரிகளைச்

சொன்னால் போதும் , அந்த வரிகளைப் பரப்பினால் போதும் என்று எண்ணுவதோடு மட்டுமில்லாமல் , பாரதிதாசனுக்கு நிதித் திரட்டித் தருகிறேன் என்று முதன் முதலில் ஒரு கவியரசனுக்கு நிதித் திரட்டித் தந்தவர் அறிஞர் அண்ணா அவர்கள் தான் . எனவே அவருக்குப் பாட்டிலுள்ள தமிழுணர்வு என்னவென்று தெரியும்

அண்ணா அவர்கள் தமிழ்நாடு என்று பெயர் வைத்தார் . தமிழ்நாடு என்பது புதிதில்லை . செந்தமிழ் நாடென்னும் போதினிலே - தமிழ் நாடு என்று சொல்கிற வழக்கு பலகாலம் உண்டு. ஆனாலும் கூட, தமிழ்நாடு என்ற பெயர் வைக்கலாமா ? என்று கேட்ட பொழுது அதென்ன தமிழ்நாடு , இதனால் விளையப்போகிறது கேடு , இது வேண்டுமென்றே கழகக்காரர்கள் கிளப்பும் கலகம் என்றெல்லாம் பெரிய தலைவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள் . இந்த நிலையில் அண்ணா தமிழ்நாடு என்று பெயர்வைத்தது மட்டுமில்லை , அப்பொழுது இராஜாஜி ஒரு விளக்கம் கேட்டார் . தமிழ்நாடு என்று பெயர் வைப்பதில் ஒன்றுமில்லை. ஆனால் , எழுதுகிறபொழுது ஆங்கிலத்தில் நாடு , என்று போடவேண்டாம் என்று கூறினார் . அதற்கு அண்ணா சொல்வார் , நான் அன்றாடம் கண்டுவருவது புன்னகைப் புலிகளையும் , நயவஞ்சக நரிகளையுந்தான் . எப்படி யெல்லாம் எழுத்துகளை மாற்றி ஏமாற்றலாம் என்று நினைக்கிறவர்கள் ஏராளம் , இந்த தமிழகத்தில் தாராளமாக முளைத்து பதவியில் இருக்கிறார்கள் என்று பேசுவார் . அந்த U வை எடுத்துவிடலாம். ஏனென்றால் அந்த U என்பது இருந்தால் It may denote that it became separate nation and a country. So that it could create any date a kind of sensation, mentality among the people which is not good for the India's Integration என்று சொன்னார் . " இதை நாடு என்று சொன்னால் , தனிநாடு என்ற உணர்வு மனத்தில் வரலாம் தமிழில் எழுதினால் வராதா? ஆங்கிலத்தில் U என்பதை எடுத்துவிடலாம் . எனவே நாடு என்பதற்கு இதுதான் பொருள் என்றார் . அண்ணா விடை சொன்னார் . " எனக்குத் தெரிந்த தமிழ் கொஞ்சம்தான் . நாடு என்று நீங்கள் நினைப்பதுபோல் தனியாக இருக்கிற பெருநாடு என்கிற பொருள் இப்பொழுது வந்திருக்கலாம் . ஆனால் நாடு என்பது விருப்புகளின் இடம் என்றுதான் பொருள் . இராஜாஜி அவர்களே நான் தமிழ்நாடு என்று சொல்வது ஏன் தெரியுமா ? மக்களே தமிழை விரும்புங்கள் . தமிழை நாடுங்கள் என்று நான் சொல்லுகிறேன் . அதற்கும் மேல் சொல்வதென்றால் தஞ்சைப் பக்கம் போயிருந்தால் ஒரத்த நாடு என்ற சிற்றூர் இருப்பதை நீங்கள் பார்க்கலாம் . ஏன் ? நம்முடைய முத்தையா செட்டியார் வாழ்கிற இடத்துக்குப் பெயர் செட்டிநாடுதான் . எனவே நாடு என்பது மக்கள் சூழ இருக்கிற இடம் என்பதுதான் பொருளே தவிர , எனக்கு வராத வஞ்சகப் பிரிவினை எண்ணம் இராஜாஜியின் நெஞ்சத்தில் தான் இருக்கிறது என்று தெரிகிறது என்றார் .

பாருங்கள் நண்பர்களே தமிழ் பேசுவதென்றால் சான்றுக்குச் சொல்கிறேன் . நாகர்கோயில் தொடங்கி , சென்னை வரை பேசுகின்ற தமிழ் என்பது மாவட்டந் தோறும் சிறிது வேறுபடும் .

கொச்சைச் சொற்கள் வரும். வழக்காற்றுச் சொற்கள் கொஞ்சம் மிகுந்திருக்கும் . அண்ணா பேசியது ஒரே நடை அந்த நடைதான் நாகர்கோவிலில் சட்டமன்ற உறுப்பினரை தேர்ந்தெடுக்க வைத்தது . அந்த நடைதான் சேலத்தில் ஒருவரை வெற்றிப் பெறவைத்தது . அவர் பேசுகிற நடை எளிய மக்களுக்கு எப்படி விளங்குகிறது என்றால் புதுமையான உவமைகள் மூலம் மரம் இவமைகள் மூலம் நயம்பட எடுத்துரைப்பார் . " கனி குலுங்கா சொல்லிவிடுகிறார் . மனத் தெளிவில்லாமல் மான் கூட்டம் என்று மக்களை நினைத்துக் கொண்டு வஞ்சக வலைகளோடு வேடுவர்கள் வருகிறார்கள் என்பார் .
மாற்றுக்கட்சியினரைப் பற்றி பேசுவதாக இருந்தாலும் அந்த நீர் இல்லா ஆறு , பட்டுப்போன பயிர் , கெட்டுப்போன குடும்பம் , அணைந்த விளக்கு , சிதைந்த சித்திரம் , நரம்பறுந்த யாழ் , தொண்டை கம்மிய வித்துவான் , பொருளில்லாப் பாட்டு இவை பரிதாபத்திற்குரியனவாவது எப்படியோ அது போன்றுதான் , செயலாற்றாத காங்கிரசுக் கட்சியும் என்று அவர் எடுத்துக் காட்டும் உவமைகள் புதுமையாகத் தோன்றும் . திராவிட இதழில் அண்ணா தீட்டிய தம்பிக்குக் கடிதங்கள் தமிழ்கூறு நல்லுலகமே விரும்பிச் சுவைத்த கருத்துக் கனிகள் என்றால் அது மிகையன்று . அண்ணா தம் நெஞ்சத்தை அந்தக் கடிதங்களில் ஊற்றி எழுதினார் .
தம் கடிதங்கள் வாயிலாகத் தம்பிகளுக்குப் பொருளியல் , லக்கியம் , அரசியல் வரலாறு முதலான பல துறைகளையும் தொட்டு வாராவாரம் விளக்கம் தந்தார். தமிழின் சிறப்பையும் , தமிழகத்தின் பெருமையையும் , தமிழரின் அருமையையும் தம்பிக்கு எடுத்துச் சொல்லி , இப்போதைய நிலை என்ன ? என்பதை அழகுத் தமிழில் எழுதிக் காட்டியிருப்பார் அந்தக் கடிதங்களில் , ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே காந்தாரமும் கனோசும் , காமரூபமும் மாளவமும் , கூர்ஜரமும் பிறவும் உருவாகாத நாட்களிலேயே , அயோத்தியும் அஸ்தினாபுரமும் , காசியும் ஹரித்துவாரமும் திவ்யஷேத்திரங்கள் ஆகாததற்கு முன்பே , பூம்புகாரும் , கொற்கை , தொண்டி , முசிறி எனும் பல்வேறு துறை முகங்கள் கொண்டதாய் விளங்கியது எந்த நாடோ , எந்த நாட்டிலே முரசு மூன்று . தமிழ் மூன்று வகை என்றும் , தானை நால்வகை , போர் முறை பல்வேறு வகை , கருவிகள் பலப்பல என்றும் வகுத்து வைக்கப்பட்டிருந்தனவோ , எந்த நாட்டிலே நிலமே ஜவகையாக இயல்பும் எழிலும் பயனும் கருத்தில் கொண்டு வகுக்கப்பட்டு இருந்ததோ, எந்த நாட்டு முத்தும் பவழமும் பிறநாட்டுப் பேரரசர்கள் தமது காதலைப் பெற்ற கட்டழகியர்க்குக் காணிக்கையாக்கிக் களித்தனரோ, எந்த நாட்டுப் புலவர்கள் புவியாளுவோரையும் துச்சமென்றெண்ணி அறநெறிக்கு மக்களை அழைத்துச் சென்றனரோ, எந்த நாட்டிலே முகிலின் முழக்கமும் முழவின் ஒலியும் , மின்னல் ஒளியும் கன்னல் சுவையும் , ஆடலழகியரின் கடையிடையும் ஆற்றலரசர்களின் கட்டாரியும் கொல்லவும் வெல்லவும் பயன்பட்டனவோ , எங்கு , நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறு நூறு , ஒத்த பதிற்றுப் பத்து ஓங்கு பரிபாடல் கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம் புறம் என்று இத்திறத்த எட்டுத் தொகை

என்றபடி , பேரிலக்கியங்கள் , கற்றோர் ஈட்டிய கருவூலமாக உளதோ, அந்த நாடு, அதன் எல்லைகள் வெட்டடப்பட்டு , வேற்றோரால் கவரப்பட்டு , அதன் பண்பு பாழ்படும் வகையினதான மொழிக்கும் கலைக்கும் இடமளித்துவிட்டு , இடர்ப்பட்டு , இழிநிலை பெற்று , இயல்பு கெட்டு , எழில் குலைந்து , கொற்றம் அழிந்து, கோலம் கலைந்து , மற்றையோர் கண்டு எள்ளி நகையாடத்தக்க விதத்தில் மானமழிந்த, ஈனர்க்குக் குற்றேவல் புரிந்து கிடக்கும் எடுபிடியாக்கப்படுகிறது ! எட்டுத் திக்கும் ஒரு காலத்தில் புகழ்க் கொடி பட்டொளி வீசிப் பறந்திட்டதாம் ! இன்றோ , திக்குத் தெரியாத காட்டிலே சிறகொடிந்த நிலையில் , தத்தித் தத்திச் செல்லும் தத்தை போலாகிக் கிடக்கிறது ! முத்துப் பந்தலளித்து முழங்காற்படியிட்டுப் பணிந்தான் ஓர் மன்னன் ! தந்தக் குவியல்களைக் காலடியில் கொட்டி , அரசர்க்கரசே ! என்று அஞ்சலி செய்தான் மற்றோர் வேந்தன் . படைகொண்டு வருவேன் என்று கூறினதும் , திறை கொண்டு வந்தேன் என்று பதிலிறுத்தனர் மன்னர் பலர் . காவிரிக் கரையிலே காதல் கீதம் பாடிய கட்டிளம் காளை , கட்கம் ஏந்திக் கங்கைக் கரையினரைப் போரிலே வென்று , அவர்தம் தேர்ச்சிலைச் சிலையினை , தமக்கு அதரத்தேனளித்து ஆட்கொண்ட ஆரணங்குகள்விளையாட வைத்திருந்த பொம்மைகளுக்கு அளித்தானாம் .

தம்பி ! தம்பி ! ஏன் பிறந்தோம் இந்நாட்டில் ! பிறந்திடினும் , தொதவர் , தொம்பரவர் போல் இருந்து தொலைத்திடக் கூடாதா ! ஏனோ , நம்மை எல்லாம் தமிழர் என்ற இன உணர்வும் , அதனாலாய பெருமையினையும் பெறுமாறு நாவலரும் பாவலரும் செய்துவிட்டனர் . அதனாலன்றோ நமக்கு நமது நாட்டின் அந்நாள் ஏற்றம் தெரிகிறது; தெரிவதனாலன்றோ , இன்றுள்ள இழிநிலையும் , இனி எதிர்காலம் எப்படியோ என்ற அச்சமும் பிடித்தாட்டுகிறது - அல்லற்படுகிறோம் - அழுது நிற்கிறோம்  என்று தம்பிக்கு கடிதங்கள் பகுதியில் எழுதியுள்ளதை எவருடைய மனதையும் ஈர்க்க வல்லதாகும்.  அண்ணாவின் செய்தித் தலைப்புகள் தீர்க்கமானவை .

இந்தி மொழிப் பிரச்சினையில் அன்றைய மைய அரசின் உறுதி காட்டாமையைக் கண்டித்தும் , பழமை சான்ற தமிழும் வங்க மொழியும் ஆட்சி மொழிகளாக வேண்டுமென்று வங்காளத்தில் சுட்டிக் காட்டியும் கொங்குநாடு கேட்காததை வங்க நாடு கேட்கிறது எனத் தலைப்பிட்டுச் செய்தி வெளியிட்டார் .

தமிழ் மக்கள் நல்வாழ்வும் , அறிவும் ஆற்றலும் மிக்க சுயமரியாதை மிக்க வாழ்வு பெற அவர் சுமார் 32 ஆண்டுகளில் அவர் எழுதியவையும் , பேசியவையும் ஏறத்தாழ நூறாயிரம் பக்கங்கள் கொண்ட கருத்துக் குவியல்களாக அமையும் . அவற்றையெல்லாம் தொகுத்துக் கலைக்களஞ்சியம் போல் வெளியிடுவதனால் ஏறத்தாழ 60 தொகுதிகளை உருவாக்க முடியும் . அத்தகைய பேரறிஞரைப் பற்றி நினைக்கவும் , பேசவும் , எழுதவும் இந்த அரங்குப் பயன்படும் எனக் கருதுகிறேன் . நன்றி

# முனைவர் ஔவை நடராசன் – சில நினைவுகள்

**---முனைவர் இர பிரபாகரன்**

நான் சென்னையில் இலயோலா கல்லூரியில் இளங்கலைப் பட்டப் படிப்பு படித்துக்கொண்டிருந்தபொழுது, எங்கள் கல்லூரி சார்பாக, அனைத்துக் கல்லூரிப் பேச்சுப் போட்டிகளில் கலந்துகொள்வது வழக்கம். அப்பொழுது, பச்சையப்பன் கல்லூரி சார்பாக திரு. ஔவை நடராசன் அவர்கள் கலந்துகொள்வார். அவர் கலந்துகொள்ளும் போட்டிகளில் அவர்தான் எப்பொழுதும் முதற்பரிசு பெறுவது வழக்கம். அவர் போட்டியில் கலந்துகொள்ளாவிட்டால்தான் மற்றவர்களுக்கு முதற்பரிசு கிடைக்கும். கல்லூரியில் படிக்கும் பொழுதே அவர் மிகச் சிறந்த பேச்சாளர். ”கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய் கேளாரும் வேட்ப மொழிவதாம் சொல்” என்ற வள்ளுவப் பெருந்தகையின் குறளுக்கேற்ப, சொல்லின் செல்வராக அவர் விளங்கினார். என்னைப் போன்றவர்கள் பேச்சுப்போட்டியில் கலந்துகொள்வதைவிட, அவருடைய பேச்சைக் கேட்பதில் மிகுந்த ஆர்வம் உடையவர்களாக இருந்தோம்.

கல்லூரிப் படிப்பு முடிந்த பிறகு, பல ஆண்டுகளாக எனக்கும் அவருக்கும் தொடர்பு இல்லை. ஏறத்தாழ, ஐம்பது ஆண்டுகளுக்குப் பிறகு ஒருநாள், சென்னையில், பேராசிரியர் மறைமலை இலக்குவனார் அவர்கள் ஏற்பாடு செய்த கூட்டம் ஒன்றில் நான் ”புறநானூறு காட்டும் தமிழர் வாழ்வியல்” என்ற தலைப்பில், முனைவர் ஔவை நடராசன் தலைமையில் உரையாற்றினேன். ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக அமெரிக்காவில் வாழ்ந்து, கணினித்துறையில் பணிபுரிந்தாலும், புறநானூற்றில் எனக்கு இருக்கும் ஆர்வத்தையும் புலமையையும் ஔவை நடராசன் மிகவும் புகழ்ந்தார்.

முனைவர் ஔவை நடராசன் அவர்களுடைய வீடு என் தமையனார் மருத்துவர் பாஸ்கரன் அவர்களின் வீட்டில் இருந்து இரண்டு வீடுகளுக்கு அப்பால் உள்ளது. என் தமையனாருக்கும் ஔவை நடராசன் அவர்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்துவந்தது. என் தமையனாரைக் காண்பதற்கு ஔவை நடராசன் என் தமையனார் வீட்டிற்கு வருவார். அப்பொழுது, ஔவை நடராசன் எங்கள் தந்தை, சிவயோகி மா. இரத்தினசபாபதி பிள்ளை அவர்களோடும் உரையாடுவார். என் தந்தை சைவ சித்தாந்தத்தில் சிறந்த புலமை உடையவர், அவர் திருவாசகம், திருமந்திரம் முதலிய நூல்களை ஐயந்திரிபறக் கற்று, அவற்றிற்கு உரையும் எழுதியுள்ளார். ஔவை நடராசன் என் தந்தையோடு, சைவ சித்தத்தாந்தப் பற்றி ஆர்வத்தோடு உரையாடுவார். பல மேடைகளில், அவர் பேசும்பொழுது, என் தந்தையைப் பற்றிக் குறிப்பிட்டு, “அவர் ஒரு திருமந்திரக் கடல்” என்று கூறுவது வழக்கம்.

அவர் தமிழ்நாட்டு அரசின் தமிழ் வளர்ச்சி – பண்பாட்டுத் துறைச் செயலராகப் பணியாற்றும்பொழுது, என்னுடைய மூத்த தமையனார் திரு பசுபதி, இ,ஆ.ப. அவர்களோடு தொடர்பில் இருந்தார். என்னுடைய மூத்த தமையானர் மிகுந்த திறமையும் நேர்மையும் உடையவர் என்று அவர் அடிக்கடி புகழ்வது உண்டு.

முனைவர் ஔவை நடராசன் அவர்களின் ஆழ்ந்த தமிழ்ப் புலமையும் பேச்சாற்றலும் அனைவரும் அறிந்ததுதான். அவர் சிறந்த சிந்தனையாளர் என்பது குறித்து ஒரு செய்தி கேள்விப்பட்டேன். புரட்சித் தலைவர் எம். சி. ஆர் முதலமைசராக இருந்தபொழுது, வெளிநாட்டில் இருந்து சில விண்வெளி வீரர்கள் சென்னைக்கு வந்தார்கள். அவர்களுக்குப் பாராட்டுவிழா நடத்தவேண்டும் என்று முதலமைச்சர் முடிவு செய்தார். அந்தப் பாராட்டுவிழாவில், விண்வெளி வீரர்களுக்கு ஒரு பட்டயம் வழ்ங்க வேண்டும் என்று முதலமைச்சர் செயலரிடம் கூறினார். அந்தப் பட்டயத்தில் அவர்களின் சாதனைக்குப் பொருத்தமான திருக்குறள் ஒன்று பொறிக்கப்பட வேண்டும் என்று முதலமைச்சர் ஆணையிட்டார். அவருடைய செயலர் விண்வெளி வீரர்களின் சாதனைக்குப் பொருத்தமான திருக்குறள் எது என்று பல தமிழறிஞர்களைக் கேட்டார். எவரும் சரியான விடை அளிக்கவில்லை. “விண்வெளி வீரர்களுக்குப் பட்டயம் தயாரிப்பது எளிது. ஆனால், அவர்களின் சாதனைகளுக்கேற்ற திருக்குறளைக் கண்டுபிடிக்க முடியவில்லை” என்று செயலர் முதலமைச்சரிடம் கூறினார்.” அதைக் கேட்ட முதலமைச்சர், “ஔவை நடராசனைக் கேட்டீர்களா?” என்று கேட்டார். ‘ஔவை நடராசனைக் கேட்கவில்லை’ என்று செயலர் சொன்னவுடன், முதலமைச்சர் தொலைபேசியில் ஔவை நடராசனை அழைத்து, ”விண்வெளி வீரர்களின் சாதனைக்கேற்ற ஒரு திருக்குறளைக் கூறுங்கள். அதை நாங்கள் அவர்களுக்கு கொடுக்கப்போகும் பட்டயத்தில் பொறிக்க வேண்டும் அப்படி ஒரு குறள் இருந்தால் இன்னும் இரண்டு மணி நேரத்திற்குள் அதை என் செயலருக்குத் தெரியப்படுத்துங்கள்.” என்று கூறினார். உடனே ஔவை நடராசன், “ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின் வானம் நணிய துடைத்து.” என்ற குறளை முதலமைச்சரின் செயலரிடம் கூறினார். இந்தச் செய்தியை ஒருவருடைய சொற்பொழிவின் வழியாக நான் கேட்டறிந்தேன்.

ஔவை நடராசன் அவர்களின் தந்தை ஔவை துரைசாமிப் பிள்ளை எட்டுத்தொகையில் உள்ள புறநானுறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, நற்றிணை ஆகிய நூல்களுக்கும் வேறு பல நூல்களுக்கும் மிகச் சிறந்த உரை எழுதி, உரைவேந்தர் என்ற பட்டம் பெற்றவர். வள்ளுவர் கூறியதைப்போல், ஔவை நடராசன் அவர்களின் தந்தை ஔவை நடராசனை அவையில் முந்தியிருப்பச் செய்தார். ஔவை நடராசன் “இவன் தந்தை என்நோற்றான் கொல்” என்பதற்கிணங்க அறிவிலும் ஆற்றலிலும் சிறந்து விளங்கி அழியாப் புகழ்பெற்ற தமிழ்ச்செம்மலாக விளங்கினார். வளர்க அவர் புகழ்!




மின்னிதழ்:49 மார்கழி-1--தி.பி.2053 திசம்பர்-16- பொ.ஆ.2022



நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்

# நூற்றாண்டு கொண்டாடிப் போற்றுவோம்




(சூலை 13, 1922 - அக்குதோபர் 30, 1997)

பொ றுப்பா சிரியர் -மறைமலை இலக்குவனார் -
இணையாசிரியர் -முனைவர் தமிழியலன்
இலவ

மார்கழி-1 -தி.பி.2053 -உலகத் திருக்குறள் இணையக்கல்விக்கழகம்

# நூற்றாண்டு கடந்தாலும் போற்றாது விடுவோமா ?
## ------தமிழறிஞர் சுந்தர சண்முகனார்

தமிழகத்தின் தென்னார்க்காடு மாவட்டம் கடலூர் அருகேயுள்ளபுதுவண்டிப்பாளையம் என்னும் ஊரில் சுந்தர சண்முகனார் 13.7.1922 ஆம் நாளன்று தோன்றினார் . இவருடைய தந்தையார் பெயர் சுந்தரம் . தாயார் பெயர் அன்னபூரணி அம்மாள் . பெற்றோர் இவருக்கு இட்ட இயற்பெயர் சண்முகம் ஆகும் . தம் தந்தையாரின் பெயராகிய சுந்தரத்தையும் தம் பெயருடன் சேர்த்துக்கொண்டு சுந்தர சண்முகனார் ஆனார் . முதுபெரும்புலவ ர் அமரர் நடேச முதலியார் , பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் முதலானோர் இவருடைய ஊரினர் மற்றும் உறவினர்கள் ஆவர் .
சில ஆண்டுகள் திருப்பாதிரிப்புலியூர் தூய வளனார் பள்ளியில் பயின்ற இவருடைய மாணவப் பருவத்தில் ஒரு திருப்புமுனை ஏற்பட்டது . அந்தத் திருப்புமுனை இவருடைய ஆழ்ந்த தமிழ்ப்புலமைக்கு அடித்தளம் இட்டது . அந்தத் திருப்புமுனை இவர் திருப்பாதிரிப்புலியூர் சிவத்திரு ஞானியார் மடாலயத்தில் மாணக்கராகச் சேர்ந்தது . அதுவும் ஞானியார் அடிகளார்களிலேயே மிகவும் புகழ் பெற்றவரும் புலமை பெற்றவருமான ஐந்தாம் பட்டத்து அடிகளின் மாணாக்கராக . ஞானியா ர் அடிகளாரின் அறிவுரையின் பேரில் திருவையாறு அரசர் கல்லூரியில் தன்னுடைய பதினான்காவது அகவையிலேயே வித்துவான் படிப்பில் சேர்ந்தார் . வித்துவான் படிப்பை வெற்றிகரமாக முடித்த பிறகு ஞானியார் அடிகளாரின் பரிந்துரையின் பேரில் மயிலம் சிவஞானபாலைய அடிகள் தமிழ்க் கல்லூரி யில் 1940 ஆம் ஆண்டு அதாவது தன்னுடைய பதினெட்டாவது அகவையில் விரிவுரையாளராகச் சேர்ந்தார் . தன்னுடைய இருபத்திரண்டாவது அகவையில் 26.5.1944 அன்று விருத்தாம்பிகை அம்மையாரைப் புதுச்சேரியில் திருமணம் செய்துகொண்டார் . 1946- ஆம் ஆண்டு மயிலம் கல்லூரிப் பணியை விடுத்துப் புதுச்சேரி வந்தார் . 1947 ஆம் ஆண்டு அவருடைய வாழ்க்கையில் மற்றுமொரு திருப்பம் ஏற்பட்டது . தன்னுடைய சட்டகர் புரவலர் சிங்கார குமரேசனார் உதவியுடன் பைந்தமிழ்ப் பதிப்பகம் என்னும் நூல் வெளியீட்டு நிறுவனத்தைத் தொடங்கித் தன்னுடைய முதல் நூலான வீடும் விளக்கும்

என்னும் நூலை எழுதி வெளியிட்டார் . இந்த நூலுக்கு மதிப்புரை வழங்கியவர் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர் முனைவர் அ. சிதம்பரநாதச் செட்டியார் ஆவார்கள் . 1947- ஆம் ஆண்டு ஏற்றப்பட்ட அந்த எழுத்து விளக்கு 1997- ஆம் ஆண்டுவரை ஐம்பது ஆண்டுகளாகத் தொடர்ந்து ஒளிர் ந்துகொ ண்டு இருந்தது . 1947-48 ஆம் ஆண்டுகளில் திருக்குறள் தெளிவு , தெவிட்டாத திருக்குறள் என்னும் மாதமிருமுறை இதழ்களை நடத்தித் தமிழகம் முழுவதும் அறிமுகம் ஆனார் . 1948ஆம் ஆண்டு பாவேந்தரால் மதிப்புரை வழங்கப்பட்ட தனித்தமிழ்க்கிளர்ச்சி என்னும் அம்மானை நூலை எழுதி வெளியிட் டார் . 1949 - ஆம் ஆண்டுமுதல் 1958 - ஆம் ஆண்டுவரை புதுச்சேரி பெத்திசெமினார் பள்ளியில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றினார் . இடையில் 1952-ஆம் ஆண்டுவாக்கில் சென்னை , சைதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் ஆசிரியர் பயிற்சிப் படிப்பில் தேர்ந்தார் . 1958 - ஆம் ஆண்டு முதல் 1980 ஆம் ஆண்டு வரை புதுச்சேரி அரசினர் ஆசிரியர் பயிற்சி மையத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி நூற்றுக்கணக்கான ஆசிரியர்களை உருவாக்குவதில் பெரும் பங்காற்றினார் . இவர் உருவாக்கிய ஆசிரிய மாணாக்கர்கள் மூலம் இன்றும் வாழ்ந்துகொண்டிருக்கிறார் . ஆசி ரியர் பயிற்சிப் பள்ளியில் பேராசிரியராகப் பணியாற்றிய போது "திருவள்ளுவர் தமிழ்ப் பல்கலைக்கழகம் " எனும் அமைப்பைத் தொடங்கி யாப்பதிகார வகுப்பும் திருக்குறள் வகுப்பும் நடத்தினார் . நூற்றுக்கும் மேற்பட்ட மாணவர்கள் பயின்றனர் . பலருக்குப் பாவலர் பட்டம் வழங்கினார் .

மயி லத்திலிருந்து புதுச்சேரிக்கு வந்த இவரைப் பல புதுச்சேரி பெருமக்கள் ஆதரித்து அரவணைத்தனர் . இவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் , அமரர்கள் உயர்திருவாளர்கள் தேசிகம் பிள்ளை (கல்விக் கழகம் ), மக்கள் தலைவர் வ. சுப்பையா , கு. கா. இராசமாணிக்கம் பிள்ளை மற்றும் மேட்டுப்பாளைய ம் இராமலிங்கம் ஆவர் . இவர்களை இறுதிவரை நன்றியுடன் நினைவு கூர்ந்து கொண்டிருந்தார் . புதுவையில் கவிஞரேறு வாணிதாசனார் , மு. த வேலாயுதனார் , திருமுடி சேதுராமன் , புதுவைச் சிவம் , கம்பவாணர் அருணகிரி , செந்தமிழ்த் தொண்டர் சிவ . கண்ணப்பர் ஆகியோருடன் நெருங்கிய தொடர்புகொண் டிருந்தார் . தமிழகத்தில் பண்டிதமணி கதிரேசஞ் செட்டியார் , தமிழ்த்தென்றல் திரு . வி. கலியாணசுந்தரம் , முனைவர் மு. வரதராசனார் , முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ . விசுவநாதன் , ஔவை துரைசாமி பண்டிதர் , லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் , முத்து .ராசா கண்ணனார் ,

முதுபெரும்புலவர் ஆறுமுக முதலியார் , முத்து சண்முகம் பிள்ளை , முனைவர் வ.சுப.மாணிக்கம் முதலிய பெருமக்களுடன் தொடர்பும் நட்பும் கொண்டிருந்தார் . 1980 ஆம் ஆண்டு விருப்ப ஓய்வு பெற்று நூல்கள் எழுதும் தன்னுடைய பணியைத் தொடர்ந்து கொண்டிருந்தார் . 1975 - ஆம் ஆண்டுக்குள் தன்னுடைய உன்னத நூல்களான தமிழ் அகராதிக்கலை , தமிழ் இலத்தீன் பாலம் , கெடிலக்கரை நாகரிகம் , தமிழ் நூல்தொகுப்புக் கலை முதலியவற்றை எழுதி வெளியிட்டுத் தமிழ்கூறும் நல்லுலகம் முழுவதும் பேசப்படுவராக உயர்ந்தார் . மேற்கூறிய நூல்கள் அனைத்தும் தமிழுக்கு முன்னோடி நூல்களாகும் .

திறமையைத் தேடி வாய்ப்புகள் ஓடிவரும் என்பதற்கேற்ப இவருடைய புலமைக்குப் பரிசாகத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக முதல் துணைவேந்தர் முனைவர் வி.ஐ.சுப்பிரமணியம் அவர்கள் இவருக்குப் பல்கலைக்கழகத் தொகுப்பியல் துறைத்தலைவர் மற்றும் பேராசிரியர் பதவியை வழங்கினார் . 1982- ஆம் ஆண்டு இப்பணி யில் சேர்ந்தவர் உடல்நலக் குறைவு காரணமாக 1983 - ஆம் ஆண்டு இப்பணியிலிருந்து விலகிவந்துவிட்டார் . உடன் பிறந்தே கொல்லும் நோய் என்பது இவர் வாழ்க்கைக்கு மிகவும் பொருந்தும் . மயிலம் தமிழ்க் கல்லூரிப் பணியை விட்டு விலகியதற்குக் காரணமே இவருடைய உடல்நலக் குறைவு தான் .

1946 - ஆம் ஆண்டிலிருந்து நோயுடன் போராடிப் போராடி வெற்றிகண்டு வந்த இவரை 1997 - ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 30 - ஆம் நாளன்று நோய் இறுதியாக வென்றது .

இவர் எழுதிய நூல்கள் அறுபத்து ஒன்பது ஆகும் . இவற்றுள் கவிதை நூல்கள் 9, காப்பியங்கள் 2, உரைநடை நூல்கள் 19, திருக்கு றள் ஆய்வுகள் 5, கம்பராமாயண திறனாய்வுகள் 6, அறிவியல் ஆய்வுகள் 6, இலக்கணம் 2, மொழியியல் 3, தொகுப்பியல் 2, முழுஉரைநூல்கள் 7, புதினம் 2, சிலப்பதிகாரத் திறனாய்வு 1, வரலாற்று நூல்கள் 4, மற்றும் சிறுகதைத் தொகுப்பு 1 ஆகும் . பல துறைகளிலும் நூல்கள் எழுதிய இவரின் சான் றாண்மையைப் பாராட்டி மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம் இவருக்குத் தமிழ்ப் பேரவைச் செம்மல் என்னும் பட்டத்தை 17.10.1991 அன்று வழங்கும் போது இவரைப் பற்றி அச்சடித்து வழங்கியக் குறிப்பில் குறிப்பிடப்பட்டுள்ளதாவது , "ஐம்பது ஆண்டுகளாகப் பாவேந்தர் பாரதிதாசன் பாடியது போ ல அன்னைத் தமிழ்மொழிக்குத் துறைதொறும் துறைதொறும்துடித்தெழுந்து அருந்தொண்டாற்றிய பேராசிரியர் சுந்தர சண்முகனார் அவர்களுக்குத் தமிழ்ப் பேரவைச் செம்மல் என்ற பட்டத்தினை வழங்கி மதுரைக்

காமராசர் பல்கலைக்கழகம் பெருமை கொள்ளுகிறது ." காமராசர் பல்கலைக்கழகம் தங்கள் கல்விக் குழுவின் வாழ்நாள் உறுப்பினர் ஆகவும் இவரை நியமனம் செய்தது. பாவேந்தர் பாரதிதாச னாரொடு பல ஆண்டுகள் நெருங்கிப் பழகிய இவர், 'பாரதிதாசரொடு பல ஆண்டுகள்' என்று ஒரு நூல் எழுதியுள்ளார். இவர் தன் வாழ்நாளில் பல விருதுகளையும் பட்டங்களையும் பெற்றுள்ளார். இவர் பெற்ற விருதுகளில் தலையாயது தமிழக அரசு 15.01.1991 - இல் வழங்கிய திருவள்ளுவர் விருதாகும். அடுத்த பெரிய விருது சென்னை எம்.ஏ.சி அறக்கட்டளை விருதாகும். இவர் பெற்ற பல பட்டங்களில் இவர் மிகவும் விரும்பிய பட்டங்கள் மூன்றாகும். ஒன்று இவருடைய குருபீடமான ஞானியார் மடாலயம் வழங்கிய "ஆராய்ச்சி அறிஞர்" என்ற பட்டம், இரண்டாவது இவருடைய செந்தமிழாற்றுப்படை என்ற நூலுக்காக நாவலர் சோமசுந்தர பாரதியாரால் வழங்கப்பட்ட "இயற்கவி" என்ற பட்டம், மூன்றாவது இவருடைய உற்ற நண்பர் புதுச்சேரி உயர்திரு அமரர் கு.கா. இராசமாணிக்கம் பிள்ளை அவர்கள் வழங்கிய "புதுப்படைப்புக் கலைஞர்" என்ற பட்டமாகும். இந்த வரலாற்றை எழுதும் அவருடைய மகனான நான் அவருக்குக் கிடைத்த பட்டங்களிலே மிகச் சிறந்ததாகக் கருதுவது, அவருடைய மாணாக்கர்கள் அவரை அன்புடன் "எங்கள் பேராசான்" என்று அழைப்பதையே ஆகும். இவர் எழுதிய நூல்கள் பெரும்பாலும் ஆய்வு நூல்களாக இருந்தாலும் இவருடைய சிறப்பு எல்லா நூல்களையும் அனைவரும் புரிந்துகொள்ளக்கூடிய எளிய தமிழ்நடையில் எழுதியதாகும். இவருடைய ஆறு நூல்களுக்குத் தமிழக மற்றும் நடுவண் அரசுகள் பரிசுகள் வழங்கியுள்ளன. இவருடைய பல நூல்கள் பல பல்கலைக்கழகங்களில் பாடமாக அமைக்கப் பெற்றன. எடுத்துக்காட்டாக இவருடைய மிகச் சிறந்த நூல்களில் ஒன்றாகக் கருதப்படும் தமிழ் அகராதிக் கலை என்னும் நூல் சென்னை, மதுரை, அண்ணாமலைப் பல்கலைக் கழகங்களின் வித்துவான் மற்றும் முதுகலை வகுப்புகளுக்கும் புலவர் வகுப்புக்கும் பாடமாக அமைந்தது.

இவருடைய பண்பு நலன்களாக நேர்மை, வாய்மை மற்றும் தனி மற்றும் பொது வாழ்வில் தூய்மை என்பவற்றைக் குறிப்பிடலாம். நாமார்க்கும் குடியல்லோம் என்று பெயரெடுத்த இவர் தன் மனத்தில் பட்டதைத் தயங்காமல் வெளிப் படுத்தியவர். எந்த நிலையிலும் தன் கொள்கையிலிருந்து பிறழாதவர். தனக்கு மரணமே இல்லை என்று சொல்லிக் கொண்டிருப்பார். உண்மை தான் இவருக்கு மரண மென்பதில்லை. இறவாப் புகழ் பெற்ற தன்னுடைய நூல்கள் மூலம் தமிழ் உள்ளளவும் இவர் வாழ்ந்து கொண்டிருப்பார்.

இவருக்கு இரண்டு மக்கட் செல்வங்கள் . ஆண் ஒன்று (சு.ச. அறவணன் ) பெண் ஒன்று (அங்கயற்கண்ணி ). இவர் , தன்னுடைய செல் வமாகச் சேர்த்து வைத்துச் சென்றுள்ளது தன்னுடைய நூல்களை மட்டுமன்று , தன்மீது தீராப்பற்றுள்ள நூற்றுக்கணக்கான மாணாக்கர்களையும் தாம் .

## திருக்குறளின் அமைப்பு முறை ஆராய்ச்சி—சுந்தர சண்முகனார்

**அறத்துப்பால் , பொருட்பால் , காமத்துப்பால் என்ற வரிசையில் இப்பொழுது காணப்படும் திருக்குறளின் அமைப்பு முறையில் மாறுதல் செய்ய இடமிருக்கிறது . இம்மூன்று பால்களையும் தன்னகத்துக் கொண்டிருப்பது காரணமாகத் திருக்குறள் பெற்றிருப்பதாக நாம் எண்ணிக்கொண்டிருக்கும் முப்பால் என்னும் பெயரையே ஆட்டங் காணும்படிச் செய்யத் தெம்பு இருக்கிறது .**

**காதில் விழுகிறது ; சிறு சலசலப்பு அன்று ; பெருங் கூக்குரல்கள் - அறைகூவல்கள் காதைத் துளைக்கின்றன . “பழைய சங்கப் புலவர்களே ‘முப்பால் ’ என்று திருவள்ளுவமாலையில் குறிப்பிட்டிருக்கின்றனரே . அறம் பொருள் இன்பம் வீடு என்னும் வரிசையில் உறுதிப்பொருள்களை உரைப்பதுதானே தொன்று தொட்ட முறை ” என்றெல்லாம் பலர் போர் முழக்கம் இடுவது புரிகிறது .**

**பழைய சங்கப் புலவர்கள் சிலர் திருக்குறளுக்கு மதிப்புரை (விமர்சனம் ) வழங்கியுள்ளனர் . அவர்கள் எழுதிய பாக்களின் தொகுப்பாக , ‘திருவள்ளுவ மாலை ’ என்னும் பெயரில் ஒரு நூல் உலவுவது பலர்க்கும் தெரிந்திருக்கலா ம். அந்த நூலை நன்கு துருவிப்பார்க்க வேண்டும் . ‘அறம் பொருளின்பம் முப்பால் ’, ‘அறம் பொருளின்பம் முப்பால் ’ என இளமையிலிருந்து பார்த்துப் பார்த்துப் படித்துப் படித்துப் பழகிப்போன பழங்கண்களால் திருக்குறளையும் திருவள்ளுவ மாலையையும்**

பார்க்கக்கூடாது . ஆராய்ச்சி அறிவுக்கண் கொண்டு பார்க்கவேண்டும் . படிக்க வேண்டும் . அப்பொழுது புரியும் திருக்குறளின் அமைப்பு முறை .

திருக்குறளுக்குச் சிறப்புப் பாயிரம் எழுதியுள்ள பழைய புலவர்களே ‘சனியீசுவரன் கோயில் சாமி’களைப் போலக் காட்சியளிக்கின்றனர் . அக்கோயிலில் , ஒன்று கிழக்கே பார்க்கும் ; இன்னொன்று மேற்கே பார்க்கும் ; மற்றொன்று தெற்கே பார்க்கும் ; வேறொன்று வடக்கே பார்க்கும் . இவ்வாறே அப்புலவர்களும் பல்வேறு வகையான கருத்துக்களை வெளியிட்டுள்ளனர் .

அவை வருமாறு :

(1) திருக்குறள் அறம் , பொருள் , இன்பம் என்னும் முப்பிரிவினது . (திருவள்ளுவமாலை - 9 - கல்லாடர் , 10- சீத்தலைச்சாத்தனார் , 11 - மருத்துவன் தாமோதரனார் , 12 - நாகன்தேவனார் , 15 - கோதமனார் , 17-முகையலூர்ச் சிறுகருந்தும்பியார் , 18 - ஆசிரியர் நல்லந்துவனார் , 19 கீரந்தையார் , 30 -பாரதம் பாடிய பெருந்தேவனார் , 31 - உருத்திரசன் மகண்ணர் , 39 உறையூர் முதுகூற்றனார் , 46 - அக்காரக்கனி நச்சுமனார் , 49 - தேனீக்குடிக்கீரனார் , 53 - ஆலங்குடி வங்கனார் .)

(2) திருக்குறள் அறம் , பொருள் , இன்பம் , வீடு என்னும் நான்கு பிரிவினது . (7- நக்கீரனார் , 8. மாமூலனார் , 20.சிறு மேதாவியார் , 33 - நரிவெரூஉத்தலையார் , 40 இழிகட் பெருங்கண்ணனார் )

(3) திருவள்ளுவர் மூன்றிலேயே நான்கையும் அடக்கியிருக்கிறார் . (22 - தொடித்தலை விழுத்தண்டினார் , 44 - களத்தூர்க்கிழார் )

(4) திருவள்ளுவர் வேதக்கருத்தைத் தமிழில் எழுதினார் . (4-உக்கிரப் பெருவழுதியார் , 28-காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் , 37-மதுரைப் பெரு மருதனார் , 42- செயலூர்க் கொடுஞ் செங்கண்ணனார் .)

(5) திருவள்ளுவர் திருக்குறளைத் தாமாகவே சொந்த அறிவு அநுபவங்களின் துணைகொண்டே செய்தார் . (7- நக்கீரனார் )

(6) திருக்குறளின் முதலிலுள்ள பாயிரம் என்னும் பகுதிதான் வீட்டுப்பால் (20 - சிறு மேதாவியார் )

(7) நான்கையும் இன்பம் (காமம்), பொருள், அறம் , வீடு என்னும் முறையில் வரிசைப்படுத்தி அமைத்தல் . (33-நரிவெரூஉத்தலையார் )

(8) பொருட்பால் ஏழு பிரிவுகளையுடையது . (22- தொடித்தலை விழுத்தண்டினார் , 26, போக்கியார் ) ஆனால் உரையாசிரியர்களுன் மணக்குடவர் ஆறு பிரிவாகவும் ,

பரிமேலழகர் மூன்று பிரிவாகவும் பிரித் துக் கொண்டுள்ளனர் . பிரிவு இயல்களின் பெயர்களும் ஒருவர்க்கொருவர் வேறுபடுகின்றன .
(9) காமத்துப்பால் மூன்று பிரிவுகளையுடையது . (22 - தொடித்தலை விழுத்தண்டினார் , 27 - மோசிகீரனார் ). ஆனால் , உரையாசிரியர்கள் இருவரும் இரண்டாகப் பிரித்துள்ளனர் . பிரிவுகளின் பெயர்களும் வெ வ்வேறானவை .

இவ்வாறு இன்னும் மாறுபட்ட பல்வேறுவகைக் கருத்துக்களைப் பழைய புலவர்கள் வெளியிட்டுள்ளனர் . இதனால் தெரிவது என்ன ? திருவள்ளுவரால் எழுதிப் போட்டுவிடப்பட்டுப்போன திருக்குறள் ஒரு நேரம் எடுப்பார் கைப்பிள்ளையாக இருந்திருக்கிறது . அதன் அமைப்பு முறையில் பலரும் தத்தம் கைவண்ணங் காட்டியிருக்கின்றனர் - என்பது வரையும் நன்கு புரிகின்றதன்றோ ? பால்களின் அமைப்பில் மட்டுந்தானா வேறுபாடு ? பாலின் உட்பிரிவாகிய இயல்களின் அமைப்பில் மட்டுந்தானா வேறுபாடு ? இயலின் உட்பிரிவாகிய அதிகாரத்திலும் வேறுபாடு காணக்கிடக்கின்றது . (அதிகாரம் என் பது , பத்துக் குறள்கள் கொண்ட ஒரு தலைப்பு ) ‘புதல்வரைப் பெறுதல் ’ என்று சிலரும் அதனையே ‘மக்கட்பேறு ’ என்று சிலரும் கூறுகின்றனர் . அதிகாரத்தின் வேறுபாட்டோடு , குறள்களின் வரிசை அமைப்பிலும் பெரிய வேறுபாடு காணக்கிடக்கின்றது . மணக்குடவர் , பருதி , காளிங்கர் , பரிமேலழகர் முதலியோர் உரைகளை எடுத்துப் பாருங்கள் . ஒவ்வோர் அதிகாரத்திலும் குறள்களை எப்படி முன் பின்னாக ஒவ்வொருவரும் மாற்றி அமைத்திருக்கின்றனர் என்பதைப் புரிந்துகொள்ளலாம் . அப்படியென்றால் , திருவள்ளுவர் அமைத்த முறைதான் எது ? ஏன் இத்தகைய மாறுதல்கள் ஏற்பட்டன ? எப்படி ஏற்பட்டன ? எவரால் ஏற்பட்டன ? எப்போது ஏற்பட்டன ? இதற்கு முடிவுகட்டித் தக்க விடையிறுப்பவர் எவர் ? இஃது ஆராய்ச்சிக்குரியது .[ பக்கங்கள் 48-52-வாழும் வழி -ஆசிரியர் பேரா. சுந்தரசண்முகனார்-:டிசம்பர் 2003- பிரபாத் பதிப்பகம், 7. பிருந்தாவனம் தெரு,மேற்கு மாம்பலம்,சென்னை - 600 033.]

**அறிஞர் கைலாசபதி நம்மைப் பிரிந்து நாற்பதாண்டுகள் கடந்தன**



05.04.1933-----06-12-1982

பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்', 'தமிழ் நாவல் இலக்கியம்', 'ஒப்பியல் இலக்கியம்', 'அடியும் முடியும்', 'இலக்கியமும் திறனாய்வும்', 'கவிதை நயம்', 'சமூகவியலும் இலக்கியமும்', 'நவீன இலக்கியத்தின் அடிப்படைகள்', 'திறனாய்வுப் பிரச்சினைகள்', 'பாரதி நூல்களும் பாடபேத ஆராய்ச்சியும்', 'இலக்கியச் சிந்தனைகள்', 'பாரதி ஆய்வுகள்', 'ஈழத்து இலக்கிய முன்னோடிகள்', 'இரு மகாகவிகள்', 'சர்வதேச அரசியல் நிகழ்வுகள்' முதலிய நூல்களை, திறனாய்வுத் துறைக்கு அளித்துள்ளார்.

"இலக்கியம் காலத்துக்குக் காலம் சமூக அரசியல் பொருளாதரச் சூழலுக்கேற்ப மாறக்கூடியது. இதை மனதில் கொண்டே ஆய்வு மேற்கொள்ளப்பட வேண்டும். அந்த ஆய்வும் பல்துறைசார் ஆய்வாக இருத்தல் வேண்டும்" என்பதை கைலாசபதி வலியுறுத்தினார்.

"கலை, இலக்கியம் முதலியவற்றை அவற்றுக்குரிய வரலாற்றுப் பின்னணியிலும், சமுதாயச் சூழலிலும் வைத்தே ஆய்வு மேற்கொள்ள வேண்டும். சமூகவியலை பற்றுச் கோடாகக் கொள்ள வேண்டும். ஒப்பியல் ஆய்வு அறிவியல் அடைப்படையில் இருக்க வேண்டும்". என்பதை, இலக்கிய ஆய்வுக்கான அடிப்படைக் கொள்கையாகக் கொண்டிருந்தார்."உண்மை நிலைக்குப் புறம் போகாமல் வாழ்க்கை நிகழ்ச்சிகளைத் தனது கதையில் அமைப்பவனே சிறந்த எழுத்தாளன்" என எழுத்தாளனுக்குரிய இலக்கணத்தை வரையறை செய்துள்ளார்.

"மரபு வழிக் கலை வடிவங்களையும் அவற்றின் கூறுகளையும் நாடகம் என்னும் வரம்புக்குள் கொண்டு வந்து அதன் உருவத்தையும் உள்ளடக்கத்தையும் பிற நாட்டு நாடக உத்திகளையும் தக்க வண்ணம் ஏற்று, காலத்துக்கேற்ப மாற்றம் செய்தால் தமிழ் நாடகம் புத்துயிர் பெறும்" என்பது அவரின் நாடகக் கொள்கையாகும்.

"குழந்தைகளின் வயது, மூளைவளர்ச்சி, மொழித்திறன், ஆற்றல், ஏற்புடைமை இவற்றையெல்லாம் கவனத்திற் கொண்டு குழந்தைகளுக்கான இலக்கியத்தைப் படைக்க வேண்டும் என்பார்.

“தேசிய இலக்கியம் என்பது பிரதேச எதிர்ப்பு, சுதேசிய விருப்பு, சமுதாய நோக்கு, சனநாயக நாட்டம், மனிதாபிமானம் என்ற ஐந்து தன்மைகளைக் கொண்டது. அது சமூகத்தை மாற்றிப் புதியதாய் அமைக்க வேண்டும் என்னும் இலட்சியத்தைக் கொண்டதாயும் உள்ளது. சமுதாய மாற்றத்துக்குப் பாடுபடும் பாணியிலேயே சகலவிதமான சனநாயக இயக்கங்களுடனும், போராட்டங்களுடனும் அது தன்னை அய்க்கியப்படுத்திக் கொள்கிறது. சாதியொழிப்புப் போராட்டத்திலிருந்து, கிராமியக் கலைகளின் புத்துயிர்ப்பு வரையிலான எண்ணற்ற செயல்களுடன் தேசிய இலக்கியம் நெருங்கிய உறவு கொண்டிருக்கிறது.” எனத் தேசிய இலக்கியம் பற்றித் தெளிவுறுத்துவார்.

இலங்கையில் முற்போக்கு இலக்கியம், தேசிய இலக்கியம், மண் வாசனை இலக்கியம் ஆகியன அதனதன் இயல்போடு வளர பாடுபட்டவர்.

சீன நாட்டின் அழைப்பினை ஏற்று தமது குடும்பத்தினருடன் அங்கு சென்றார். சீணப் பயனம் பற்றி, ‘மக்கள் சீனம் – காட்சியும் கருத்தும்’ என்ற நூலைத் தமது துணைவியாருடன் இணைந்து எழுதியுள்ளார். அய்ந்து ஆங்கில நூல்களையும் படைத்து அளித்துள்ளார்.

இலங்கையிலிருந்து வெளிவந்த, ‘தொழிலாளி’, ‘தேசாபிமானி’, ‘செம்பதாகை’, ‘ரெட்பானர்’, முதலிய பொதுவுடைமை இயக்க இதழ்களில், சமூக இயல் முன்னேற்றத்திற்கான கட்டுரைகளை வடித்தார். பல்கலைக் கழகத் தமிழ்ச் சங்க’த்தின் ‘இளங்கதிர் ’இதழிலும், இலக்கிய இதழான ‘மல்லிகை’யிலும் இவரது அரிய படைப்புகள் தொடர்ந்து இடம் பெற்று வந்தன. இதழிலும், தமிழ்நாட்டு இதழ்களான ‘தாமரை’ ‘சாந்தி’, ‘சரஸ்வதி’, ‘செம்மலர்’, ‘தீக்கதிர்’, ‘ஜனசக்தி’, ‘ஆராய்ச்சி’, முதலியவற்றிலும் சிறப்பான ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதினார்.

இலக்கியத்துக்கும் சமுதாயத்துக்கும் இடையே உள்ள உறவு பற்றிய மிக முக்கியமான தத்துவார்த்த நூல், கைலாசபதியின் ‘தமிழ்நாவல் இலக்கியம்’!. தமிழில் வெளிவந்த இலக்கியம் பற்றிய நூல்களுள் இது சிறப்பிடம் பெறுகின்றது! இந்த ஆய்வு நூல், அறிவியல் அடிப்படையிலான சமூகவியல் அணுகுமுறையைக் கொண்டதாகும்.

மார்ச்சிய அணுகுமுறையில் ஆய்வை மேற்கொண்டு தமிழ்ச் சமூக அரசியல் – பொருளாதார வளர்ச்சியினூடாகத் தமிழ் இலக்கியத்தை ஆராய்ந்து பல உண்மைகளை வெளிப்படுத்தினார், கைலாசபதி. ஆவர் கல்வித்துறை நிபுணர், இதழாளர், எழுத்தாளர், ஆய்வாளர், கட்டுரையாளர், விமர்சகர், பேச்சாளர் – எனப் பன்முகத்தன்மையுடன் விளங்கினார்.

முப்பது ஆண்டுகளுக்கு மேலாகவும் தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சியை உயிர்மூச்சாகக் கொண்டு இயங்கிய கலாநிதி க.கைலாசபதி, இரத்தப் புற்று நோயால் தாக்குண்டு தமது நாற்பத்தொன்பதாவது வயதில் 06.12.1982 ஆம் நாள் இயற்கை எய்தினார்.

தமிழ்கூறு நல்லுலகம் அறியுமாறு ஈழநாட்டிலிருந்து எழுதிய அவர், பல ஈழ எழுத்தாளர்களையும், கவிஞர்களையும், திறனாய்வாளர்களையும் தமிழ் மக்களுக்கு அறிமுகப்படுத்தியவர். தமிழகத்து அறிஞர்கள் பலரைத் தமிழ் இலக்கிய உலகுக்கு எடுத்துக்காட்டிய பெருமையும் அவருக்கு உண்டு. தமிழ் இலக்கியத் திறனாய்வுத்துறையில் கலாநிதி க.கைலாசபதி, மங்காத ஒளிவிளக்காக என்றும் விளங்குவார்.!

பழந்தமிழ் இலக்கியத்தையும் நவீன இலக்கியத்தையும் விஞ்ஞானபூர்வமாக அணுகும் போக்கின் முன்னோடியாகவும் முதல்வராகவும் அவர் விளங்கினார். “விமர்சனம் என்பது உலகை விவரிப்பது மாத்திரமன்று அது உலகத்தை மாற்றி அமைப்பதற்கு ஓயாது பயன்படுத்தும் ஆயுதமாகவும் இருக்க வேண்டும்” என்ற அவரது கலை, இலக்கியம், விமர்சனம் குறித்த உயர்ந்த கோட்பாடு அவரது எழுத்துக்கள் அனைத்திலும் ஊடுருவி நிற்பதைக் காணலாம்.

கலாநிதி கைலாசபதி அவர்களின் 40வது நினைவு ...https://chakkaram.com › 2022/12/06

“இலக்கியத் திறனாய்வுத் துறைக்கு புதிய ஒளிபாய்ச்சியவர் என்ற ரீதியில் பேராசிரியர் க. கைலாசபதி முக்கியத்துவம் பெறுகிறார். அவரது திறனாய்வுப் போக்குகளைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம் (1) தமிழ் இலக்கியப்பரப்பில் ஏறத்தாழ எல்லாக்காலகட்ட இலக்கியங்களையும் - சங்ககாலம் தொடக்கம் இக்காலம்வரை கருத்தில் கொண்டு ஆய்வில் ஈடுபட்டார் (2) மார்க்சிய அறிவியல் தளத்தில் நின்று தமிழ் இலக்கியங்களையும் அவற்றின் சமுதாயச் சூழலையும்

காலகட்டங்களாக வகைப்படுத்தினார் (3) இலக்கியத்தில் சமூகவியல் நோக்கிற்கு அழுத்தம் கொடுத்தார்.(4) ஒப்பியல் இலக்கிய ஆய்வினை மேற்கொண்டார் (5) இலக்கியங்களை வரலாற்றுச் சூழலில் பொருத்தி நோக்கினார் (6) ஈழத்தில் தேசிய இலக்கியம் என்னும் கருதுகோளை முன்வைத்து எழுத்தாளர்களை ஊக்குவித்தார். இவ்வாறு இலக்கியம், இலக்கியத் திறனாய்வுத் துறைகளில் அவரின் பங்களிப்பு மகத்தானது என்பதை மறக்கமுடியாது. தமிழில் மார்க்சிய அடிப்படையிலான பார்வையை ஒரு திட்டப்பாங்கான முறையில் தமிழ் நூல்பரப்பு முழுவதையும் கருத்தில் கொண்டு கட்டமைத்து வெளியிட முற்பட்டவர்களுள் முதல்வர் என்று கைலாசபதியைக் கூறலாம்" எனக் குறிப்பிட்டுள்ளார் கலாநிதி முல்லைமணி வே. சுப்பிரமணியம். (ஞானம் ஒக்ரோபர் 2003பக்:21)—

தினகரன் - வார மஞ்சரி -11/12/22--மூத்த எழுத்தாளர் ஞானசேகரன் – ஈழத்து நவீன இலக்கிய முன்னோடிகள்)

அறிஞர் கைலாசபதி அவர்களின் பரந்து விரிந்த கல்வியறிவும் ஆழ்ந்து நோக்கும் கூர்த்த ஆய்வுநெறியும் என்றும் போற்றத்தக்கன.மேலைக் கோட்பாடுகளுக்குச் சற்று மிகுதியான முதன்மை வழங்கிவிட்டாரோ என்னும் எண்ணம் மேலிடுகிறது.

மொழிவழித் தேசியம்,திராவிட இயக்க விழுமியங்கள் ஆகியவற்றைக் குறைத்து மதிப்பிடுகிறாரே என்னும் மனக்குறையும் அவ்வப்போது எழுந்ததுண்டு.சென்னைக்கு வரும்போதெல்லாம் இன்முகம் கட்டி உரையாடும் அந்தப் பெருந்தகையாளரோடு விவாதித்து தமிழ்த்தேசியத்தை ஏற்குமாறு செய்திருக்கலாம்,அவர் காலக்கொடுமையால்-நோயின் கடுமையால் நம்மைப் பிரியாமல் நீடு வாழ்ந்திருப்பாரேயானால்!அவரது நூல்கள் நாம் பெற்ற பேறுகள்.படிப்போம்.விவாதிப்போம்.

# குறட் பொருளின் வகையும் வைப்பு முறையும்

-நாவலர் சோமசுந்தரபாரதியார்


சோமசுந்தர பாரதியார்
(1879 – 1959)

ச. சோமசுந்தர பாரதியார் ( 27 சூலை 1879 – 14 திசம்பர் 1959 ; எட்டயபுரம், தமிழ்நாடு) என்னும் நாவலர் சோமசுந்தர பாரதியார் சிறந்த தமிழறிஞர் ஆவார். இவர் பல பாடல்களையும் நூல்களையும் எழுதியதோடு இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் முன்னின்று செயலாற்றியவர். மதுரை மாவட்டத்தின் தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தின் தலைவராகவும் செயற்பட்டவர்.தமிழ்த்தேசிய முன்னோடி;மறுமலர்ச்சி கண்ட சான்றோர்.பாவலர்'பெரும்புலமை மிக்கார்.

வள்ளுவர் குறளின் சொற்றொடர் பல தற்காலம் சங்க நூல் என வழங்கும் பாக்களில் வருதலால், குறள் அவற்றிற்கு முற்பட்டிருக்க வேண்டும் என எண்ணினேன். என் "வள்ளுவர் வரலாற்றில்"அக்கருத்தை வெளியிட்டுமுள்ளேன். ஆனால் பரிமேலழகர் கொண்ட குறளதிகாரங்களின் வைப்பு முறையையும் பொருட்பாகுபாடுகளையும்

சிந்திக்கும்போது, என் முன் கருத்தின் பொருத்தம்பற்றி ஐயம் எழலாயிற்று;சிந்தித்தேன். அவர் வகுப்பே பொருத்தமற்றதெனக் கண்டு தெளிந்தேன்.

சங்கச் சான்றோர் பழந்தமிழ் நூல்களில் பொருள் அனைத்தையும் அகமும் புறமும் என்றிருவகையாகவே பகுக்கக் காணுகிறோம்.அதுவே பழைய தமிழ் மரபாகவும் தோன்றுகிறது. ஆனால் வள்ளுவர் குறளோ பரிமேலழகர் உரையிற் கண்டபடி அறம் பொருள் இன்பம் ( காமம்) என முப்பாற்படுத்தி வகுக்கப்பட்டிருப்பதாய்க் காணுகிறோம். இது வடநூலார் கையாளும் வழக்காம்.அன்றிப் பழைய தமிழ் மரபாகாது. ஆனால் வடநூலார் கூறும் பொருள் வகை மூன்றுமே தமிழில் அகத்தும் புறத்தும் அமைந்து வழங்குவதாய்க் காணுகிறோம். வடநூலார் கூறும் பொருள் வகைகள் எல்லாம், தமிழ் இருவகைப் பொருள் வகையில் அடங்காதெனக் குறை கூறுவார் உளர். ஆனால் அவை அனைத்தும் அவ்விருவகையில் அடங்கும் என்பதையும், இரண்டிறந்த பலவகையிற் பொருளைப் பிரிப்பது அவசியமில்லை என்பதையும் வற்புறுத்திவிளக்கும் தமிழ் நூல்கள் அவ்வடநூல் வகைகளையும் ஏற்புழிவிதந்து கூறுவது வரன்முறையாகும். ஆகவே குறளின் பொருட்பாகுபாடு தமிழ் மரபு தழுவாமல் முரணுவதுடன் வடநூல் முறையைப்பின்பற்றுவதாகத் தோன்றுகிறது. ஆகவே இவ்வேறுபாடு பற்றிஆராய்ந்து ஐயமகற்றி அமைதி காண முயலுவது நம் கடமையும் அவசியமுமாகும்.

ஒன்று, தமிழ் வழக்கு மறந்து, வடநூலார் தொடர்பு மிகுந்து, தமிழில் ஆரியச் சொற்களும் கருத்துக்களும் மட்டுமன்றி அவர் கொள்கைகளும் மரபுகளும் ஆட்சி பெறத் தொடங்கிய பிறகே வள்ளுவர் குறளை இயற்றினார் எனக் கொள்ள வேண்டும். அவ்வாறு கொண்டால் குறளின் காலம் மிகப் பிந்தியதாகக் கொள்ள நேரும். அந்நிலையிற் குறட் சொற்றொடர் பல பழைய சங்கச் செய்யுட்களில் எடுத்தாளப்படுவதைக் காணுகிறோம். அதனால் குறளை எடுத்தாளும் சங்கநூல் எல்லாம் பிற்காலத்தியற்றப் பெற்றவை எனக் கொள்ள நேரும்.

அன்றேல், வள்ளுவர் தமிழ் நூலுக்கு, உரைகாரர் தமிழ்மரபுகளை மறைத்தோ மறந்தோ, வடநூல் முடிபுகளைத் தமிழில்புகுத்தி அவற்றிற்கு ஆட்சிதரத் தொடங்கிய பிறகு, குறளின்பொருள்வகையும் வைப்பு முறையும் ஏற்படுத்தியதாய்க் கொள்ள வேண்டும். அவ்வாறு கொள்ளின் குறட் பொருள் வகையை ஆராய்ந்து தமிழ் மரபு திரியாமல் முறைப்படுத்தி அமைதி காண முயல வேண்டும். தமிழில் வடநூல் வழக்கு மலிந்து தமிழ் மரபு நலிந்த பிற்காலத்தில் உரைகாரரால் வகுக்கப்பட்டதே தற்காலம் வழங்கும் குறட்பொருட் பாகுபாடாம் எனக் கொள்ளின், குறட்பொருள் வகையைத் தமிழ் மரபு திரியாமல் முறைப்படுத்தி அமைதி காண முயல வேண்டும். குறட் பொருளின் வகையும் வைப்பு முறையும் ஊன்றி ஆராயின், பழைய தமிழ் மரபு தழுவியே அமைந்துள்ளதை நாம் காணலாகும்.

நூல்களை அகமும் புறமும் என இருவகையாய்ப் பகுப்பதுவே பழைய தமிழ் வழக்காகும். அம்முறையில் குறளின் இன்பப்பகுதி (காமத்துப் பால்) அகவகையாய் அமைந்திருக்கக் காணுகிறோம்.களவு, கற்பு என்ற இருவகையில் இன்பப் பகுதி அமைந்துவிடும்.அறக் காதல் துறைகளே குறளின் களவுப் பகுதி முழுவதிலும் குறிக்கப்படுகின்றன. வடநூல்கள் கூறும் மறக் காதல், புறக் காதல் வகை எதுவும் குறளில் குறிக்கப் பெறாமையும் ஈண்டுச் சிந்திக்கத் தக்கதாம். வடநூல்களில் வரும் மறக்காதல் அறமிறந்த காம வகையாகவே வழங்கக் காண்போம். அறமற்ற இருபாலார் கூட்டுறவு பின் பிகழும் சடங்குகளால் கற்பு மணமாகக் கருதப்படாது.

அன்றியும் பொருள் அனைத்தையும் அகமும் புறமுமாய்ப் பகுத்து, அகக் காதலாம் அகத்தைக் களவும் கற்பும் எனப் பிரிப்பதே தமிழ் மரபு என்றும், பொருளை அறம் பொருள் இன்பம் (காமம்) என வகுப்பது வடநூலார் வழக்கு என்றும், பரிமேலழகரே தம் குறளுரையில் காமத்துப்பால் துவக்கத்தில் வெளிப்படையாய் விளக்கியுள்ளார்.குறளில் வள்ளுவர் இன்பப் பகுதியைத் தமிழ்மரபுதழுவியே, களவு கற்பு என்றிருவகையில் அடக்கி யிருப்பதும்,அவர் தமிழ் மரபு தழுவியே நூல்

இயற்றியுள்ளதும் இனிது விளங்கும்.அது தமிழ் அக வகையில் அடங்குவதும் தேற்றமாகும்.

இனி, இதுவே போல், குறள் நூலும் இன்பமல்லா எல்லாப்பொருளுமே புறப்பகுதி ஒன்றிலே அடங்கும். அதை அறத்துப்பால் பொருட்பால் என்றிரு வகையாக்க யாதோர் அவசியமும், நியாயமும் இல்லை. அது தமிழ் மரபும் ஆகாது. அறமற்ற பொருளும், பொருள் தொடர்பற்ற அறமும், கருதொணாதன. அதுபோலவேஅறத் தொடர்பற்ற இன்பமும், இன்பமாகக் கொள்ளாதஅறமும்தமிழறிஞர்க்குடன்பாடில்லை. அறமே "சிறப்பீனும், செல்வமும்ஈனும்" எனவும், "அறத்தான் வருவதே இன்பம்" எனவும் பேசும் பொய்யில் புலவர் பொருளுரைகள் போற்றற் பாலனவாம். எனவே,அறம், பொருள் என்ற இரண்டும் ஒன்றோடொன்று இன்றியமையாத் தொடர்புடைய வாகலும், அதனால் அவை வெவ்வேறு பொருள் வகைகளாகாமையும் இனிது விளங்கும். ஆனால் அவை அனைத்தும் அகத்தின் வேறாய புறப்பொருள் வகைகளாய் அடங்கும் என்பது மறுக்கொணாது.உண்மை இதுவாகவும், குறட் பொருளைத் தமிழ் மரபுக்கேற்ப அகம் புறம் என்றிரு வகையாக்காமல், அறத்தை வேறு பிரித்து, அறம் பொருள் இன்பமென முப்பாற் படுத்தியதோடு, இன்பத்தைக் காமத்துப் பால் எனப் பெயரிட்டதும் உரைகாரர் குறளை வடநூல்வரன்முறையாக்கும் நோக்கத்தாலன்றி அதற்கு வேறு தக்க ஏது எதுவுமில்லை. மேலும் அப்பாகுபாடு குறளுக்குப் பொருள் பிறைவும் மாட்சியும் தருமாறில்லை எனக் காணுகிறோம். அது உரைகாரர் குறள் துவக்கத்தில் பாயிரமென்று வேறு ஒரு பகுதி வகுப்பதால் தெளிவாகும். அவர் கொண்ட மூவகுப்பிலும் அடங்காத ஊழ் -உழவு - கள்ளாமை - கயமை - வரைவின் மகளிர் - மருந்து - மானம் போன்ற பலவற்றை வலிந்து பொருத்தமின்றிப் பொருள்வகையில் புகுத்தி இடர்ப்படுவதாலும் அவர் வீண்முயற்சி விருதாவாவது தெளிவும் தேற்றமுமாகும். அவை அனைத்தும் தமிழ்ப் புறப்பொருள் வகையில் அடங்கி அமைவதும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கதாம்